

## بسم الله الرحمن الرحيم وبه نستعين

الحمد لله الذي احب ان يعرف فخلق نور نبيه، وصب عليه من كمال الانعام المرتب على غيره من صفيه، وجعله نبيا قبل ظهوره نبياه وآدم بين الماء والطين خبيه، حتى مدحه من الرسل جيل فجيل، كخليل وكليم وصاحب انجيل، وكل فصيح اللسان ككعب وابن رواحة وحسان، احمده على ما اسبل الغطاء، واسبغ علينا العطاء، واشهد ان لا اله الا الله وحده لا شريك له، واشهد ان سيدنا محمدا عبده ورسوله الذي لا عديل له صلى الله وسلم على من بقي ذووا الاسلام في غيث عطاه، ولقمته اولوا الانصاب والازلام بسطاه، سيدنا محمد المعروف بالكرامة، والموصوف بالشامة، وعلى آله حماة الدين القويم، واصحابه هداة الامة الى الصراط المستقيم، ما تغنت مع الوجد والهيام، حور مقصورات في الخيام، اما بعد،

مَوْلَايَ صَلِّ وَسَلِّمْ دَائِمًا أَبَدًا
عَلَى حَبِيبِكَ خَيْرِ الْخَلْقِ كُلِّهِمِ

மௌலாயஸல்லிவஸல் லிம்தாயி மன்அபதா
அலாஹபீபிக்க கை ரில்கல்க்கி குல்லிஹிமீ

எம் எஜமானனே! நீ, படைப்பினிற் சிறந்த பைகம்பர் முத்துமுஹம்மது நபி (ஸல்- அம்) அவர்கள்பால் நின் நிறை யாசியையும். நிறை சாந்தியையும் நீடூழி, நீடூழிபொழிந் தருள்வயாக,

---

இதனை,

இறைவா நின் நேசர்படைப் பெல்லோர்க்கும் மேலவர் மேல்
நிறையாசிசாந்திமழை நீடூழி பெய்தருள்வாய்

என்று, இனிமைக்கு இனிமை சேர்க்கும் இன்பத்தேன் தமிழில் பாடிக் களிக்கின்றார்; பைந்தமிழ் புலவரெருறுவர்.

(வி-ரை) நிச்சயமாக அல்லாஹ்வும் அவனுடைய அமரர் களான மலக்குகளும் (முஹம்மது) நபியின்மீது ஸலவாத்துச் சொல்கின்றார்கள் (ஆகையினால்) விசுவாசிகளே! நீங்களும் அவர்மீது ஸலவாத்துச் சொல்லி சலாமும் கூறிக் கொண்டி ருங்கள் (குர் : 33; 36)
என்று, கோன்மறையாம் குர்ஆன் தனில் கோனவனாம் வல்ல அல்லாஹ் கட்டளை பிறப்பிக்கின்றான்.

இறைவனது கட்டளைகளில் இஃதோர் தனித்தன்மை வாய்ந்த தளிர் கட்டளையாகும்.
ஏனெனில்; தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ்ஜு என்பன போன்ற எந்தக்கட்டளையைப் பற்றிக் கூறிடும் போதும் ''அல்லாஹ்வாகிய நான் செய்கின்றேன் எனது

மலக்குகளும் செய்கின்றனர். ஆகையினால் இது, இதனை நீங்களும் செய்யுங்கள்'' என்று கூறிடாமல், இந்த 'ஸலவாத்' விசயத்தில் மாத்திரம் வல்ல அல்லாஹ் தன்னையும் தனது மலக்குகளையும் சம்பந்தப்படுத்திக் காட்டி, அத்துடன், அடியவர்களானநம்மையும் அங்கனம் செய்யும்படி ஏவியிருப் பதன் மூலம், ஒரு உன்னதமான ஒருமைப்பாட்டை ஏற்படுத் திக் காட்டியுள்ளான் அந்தக் குயவன்.

எனவே, ஸலவாத் எனும் அந்தப்புகழாரம், ஆண்ட வனுக்கும் அடியவர்களுக்குமிடையே அற்புதமானதோர் இணைப்புப் பாலமாக அமைகின்றது. இன்னமும் சொல்ல வேண்டுமானால், 'இறைமை' மனிதனில் குடி கொள்வதற்கு மனித இதயம் இறைவனது சிம்மாசனமாகத் திகழ்வதற் கெல்லாம் 'ஸலவாத்' ஒன்றுதான் இன்றியமையாத் தேவை யாக அமைந்து போயுள்ளது எனத் துணிந்து கூறிடலாம்.

இத்தகு வல்லாண்மை ஸலவாத்திற்கு இருந்து கொண் டிருப்பதினால்தான் ஒவ்வொரு இஸ்லாமியனும் வாழ்நாளில் ஒரு தடவை ஸலவாத் ஓதுவது 'ஃபர்ளாக' (கட்டாயக் கடமையாக) இருக்கின்றது. ஒரு சபையில் முதல்முறையாக முத்துமுஹம்மது (ஸல்-அம்) அவர்களின் தங்கத் திருப்பெய ரைச் செவிமடுக்கும்போது ஸலவாத் ஓதுவது வாஜிபாகவும், திரும்பத் திரும்பச்செவிமடுக்கும் போது- செவிமடுக்கும் தோ ரெல்லாம் 'ஸலவாத், ஓதுவது சுன்னத்தாகவும் இருக்கின்றது என்று இமாம்கள் சட்டம் சமைத்துத் தந்துபோயுள்ளனர்.

இஃதன்றி; நபிகள் நாதரின் நவரத்தினத்திருப் பெயரை செவியேற்ற மாத்திரத்தில் கைகளின் இரு பெரு விரல்களை யும் கண்களில் வைத்து ஒத்தி 'கர்ரத் அய்னீபி(க்)க யாரசூலல்லாஹ்' என்று ஓதி அந்தப்பெருவிரல்களை முத்தி, முகர்ந்து அதன்பின்னர் ஸலவாத் ஓதுவது முஸ்தஹப்பாக ஆக்கப்பட்டுள்ளது.

ஜும்ஆவுடைய குத்பா ஓதப்படும் போது தொழுவது குர்ஆன் ஓதுவதும்கூட தடை செய்யப்பட்டுள்ளதை நாமறி

வோம். ஆனால்; இரண்டாவது குத்பாவில் இந்தவுரையின் ஆரம்பமாகக் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ள 'இன்னல் லாஹ வ மலாயிகததஹு யுசலுள்லூன...' என்ற இறைத் திருவசனம் ஓதப்படும்போது அனைவரும் இறைந்துஸலவாத் ஓதவேண்டும் என்று 'ஷாஃபிஈ' மத்ஹபில் சட்டம்செய்யப் பட்டுள்ளது.(நூல் : ஷரஹுல் மஹ்தப்-ரவ்ழா)

இப்படி, இப்படியெல்லாம் சட்டவடிவம் கண்டுள்ள ஸலவாத்தின் மகிமைகளை 'இவ்வளவு அவ்வளவு' என மட்டிட்டுக் கூறிட எவராலுமே முடியவே முடியாதுதான். இருப்பினும் இந்தப் பேரிலக்கியம் சிறக்க அதில் கொஞ்சத் தையாவது இங்கே எண்பித்துக் காட்டுவது அவசியத்திலும் அவசியமென்பதால் ஸலவாத் மஞ்சம் விரிக்கின்றேன்.

நமது நந்நபிகளார் திருவாய் மலர்ந்தருளியதாக 'அறிவின் தலைவாசல்' ஹஜ்ரத் அலி (ரலி-அன்ஹு) அவர்கள் பின்வருமாறு அறிவிப்புச் செய்துள்ளார்கள்.

''ஒருவர் ஜும்ஆ நாளன்று ஒரு தடவை ஸலவாத் ஓதினால் அவர் மறுமை நாளன்று பேரொளி படைத்தவரா எழுப்பப்படுவார். அவரது அந்தப் பேரொளியை படைப்பினங்கள் அனைத்திற்கும் பகிர்ந்து கொடுத்தாலும் அது மங்கவே மங்காது.''

''ஒருவர் (நபியாகிய) என்மீது தனது வாழ்நாளில் அதிகமாக ஸலவாத் ஓதி வருவாராகில் அந்த நல்லவர் மரணப்படும்போது அவருக்கு பிழை பொறுக்கத் தேடும்படியாக அனைத்துப் படைப்பினங்களுக்குமே வல்ல அல்லாஹ் கட்டளை பிறப்பிக்கின்றான்''

நற்றவத் திருத்தூதர் நபிகள் நாயகர் நவின்றதாக நல்லறத் தோழர் ஹஜ்ரத் அனஸ் (ரலி-அன்ஹு) அறிவிப்புச் செய்கிறார்கள்.

(அன்பர்காள்!) நீங்கள் உங்களின் ஒரு வயதிற்குட்பட்ட பச்சிளங் குழந்தை அழுதால் அதற்காகச் சங்கடப்படாதீர் ஏனெனில் பச்சிளம் குழந்தைகளின் அழுகை முதல் நான்கு

மாதங்கள் வரையிலும் திக்ராகவும், இரண்டாவது நான்கு மாதத்தில் ஸலவாத்தாகவும், மூன்றாவது நான்கு மாத காலங்களில் அக்குழவியின் பெற்றோருக்கு அதன் அழுகை துஆ வாகவும் ஒளிர்கின்றது.

''ஒருவர் (நபியாகிய) என்மீது ஒரு தடவை ஸலவாத் ஓதினால் வல்ல அல்லாஹ் அவர்மீது பத்துத்தடவை ஸலவாத் ஓதுகின்றான். என்மீது அவர் பத்துத்தடவை ஸலவாத் ஓதினால் வல்ல அல்லாஹ் அவர்மீது நூறுதடவை ஸலவாத் ஓதுகின்றான். அவர் என்மீது நூறுதடவை ஸலவாத் ஓதினால் வல்ல அல்லாஹ் அவர் மீது ஓராயிரம் தடவை ஸலவாத் ஓதுகின்றான். அஃதன்றி அவரது இரு கண்புருவங்களுக்கும் மத்தியில் ''இவர் நிஃபாக் எனும் கபட விசுவாசத்தை விட்டு விடுதலை பெற்றவர்'' என்றும் ''நரகத்தை விட்டும் நிரந்தரமாக விடுதலை பெற்றவர்'' என்றும் 'ரிகார்டு' செய்து விடுகின்றான். (நூல் : தப்ரானி)

''ஒருவர் உத்தமத் திரு நபிகளார்மீது ஸலவாத் ஓதினால், அதை கண்மூடி முளிப்பதற்குள்ளாக ஒரு வானவரின் மூலம் நபிகளாரின் தர்பாருக்கு அஞ்சல் செய்யப்படுகின்றது. (எப்படியெனில், அந்த வானவர் அண்ணலாரின் அருட் திருச் சன்னதியில் அண்ணலே, ஆருயிரே; இன்ன நாட்டில், இன்ன மாவட்டத்தில், இன்ன ஊரில் வாழும், இன்னாருடைய மகன் -அல்லது மகள்- தங்களின் மீது ஸலவாத் சொல்கின்றார். என்பதாக) அதனைக் கேட்கும் அண்ணலார் அந்த ஸலவாத் பத்தாகப் பெருகி என்னை வந்தடைந்து விட்டது. அதில் ஒன்றே ஒன்று மாத்திரமே அவர் சொர்க்கத்தில் என்னுடன் (ஆள்காட்டி விரலையும் நடுவிரலையும் உயர்த்திக்காட்டி) இப்படி நெருங்கியிருக்கப் போதுமானது என்று சோபனம் கூறுகின்றார்கள். அந்த வானவர் அத்துடன் நில்லாது அந்த ஸலவாத்தை அல்லாஹ்வின் சன்னதியில் அஞ்சல் செய்கிறார். அதற்கு வல்ல அல்லாஹ் 'அந்த ஸலவாத் பத்தாகப் பெருகி என்னை வந்தடைந்து விட்டது. அதில் ஒன்றேயொன்று மாத்திரமே அம்மனிதனை நரகத்தை விட்டும் நிரந்தரமாகப் பாதுகாக்கப் போதுமான

தாகும்' என்று சோபனம் கூறுவதுடன்; 'அவரின் அந்த ஸலவாத்தை கண்ணியப்படுத்துங்கள் 'இல்லிய்யீன்' என்ற சொர்க்கத்தில் அதனைப் பத்திரப்படுத்துங்கள்' என்று வானவர்களுக்குக் கட்டளை பிறப்பிப்பதுடன்; அந்த ஸலவாத்தின் ஒவ்வொரு எழுத்திற்கும் ஒரு மலக்கு வீதம் சிருஷ்டிப்பான்; அங்கனம் சிருஷ்டிக்கப்படும் ஒவ்வொரு மலக்கிற்கும் முன்னூற்றுஅறுபது தலைகள் காணப்படும் ஒவ்வொரு தலையிலும் முன்னூற்றுஅறுபது முகங்கள் காணப்படும் ஒவ்வொரு முகத்திலும் முன்னூற்றுஅறுபது வாய்கள் காணப்படும். ஒவ்வொரு வாயிலும் முன்னூற்றுஅறுபது நாக்குகள் காணப்படும் அந்த ஒவ்வொரு நாக்கும் அல்லாஹ்வை தஸ்பீஹ் செய்து கொண்டேயிருக்கும். அந்த எண்ணிலடங்கா தஸ்பீஹுகளின் நற்கூலிகளனைத்தையும் ஸலவாத் ஓதிய அந்த மனிதனுக்குச் சன்மானமாக வழங்கப்படும்.

(நூல் : ஷரஹுல் மஹ்தப்)

அன்புடையீர்! ஸலவாத்தின் மகிமைகளை எழுதும் என் கை மணக்க, மணக்க- படிக்கும் உங்களின் சிந்தை விந்தையில் மிதக்க, மிதக்க அடுக்கிக் கொண்டே போகலாம். ஆனாலும், பக்திச் சுடர்களான உங்களின் கவனத்தை ஈர்க்க இம்மட்டு போதுமானது என்பதால் ஸலவாத் சம்பந்தமான ஹதீதுத் திரட்டுகளை நிறுத்திவிட்டு என்னையும், உங்களையும் மெய்சிலிர்க்க வைக்கும் நிகழ்ச்சிகள் இரண்டை இயம்புகின்றேன் கேளுங்கள்.

## வலிமார்களில் ஒருவர் சொல்கிறார்!

எனது அயலில் ஒரு எழுத்தாளர் வாழ்ந்து வந்தார். அவரின் மரணத்திற்குப் பின்னர் அவரை நான் கனவில் கண்டு அவரிடம் 'அல்லாஹ் உன் கதியை எப்படியாக்கி வைத்துள்ளான்' என்று வினவியபோது 'வல்ல அல்லாஹ் எனக்கு வழங்கியுள்ள சன்மானங்களையும், இன்பமயங்களையும் வாயால் சொல்லிடவோ, செவியால் கிரகித்திடவோ, சிந்தையால் சூழ்ந்தறியவோ முடியவே முடியாது' என்று மகிழ்

வுடன் கூறினார். அதற்கு நான் 'எதனால் உனக்கு இத்தகு இன்பமயம் வழங்கப்பட்டுள்ளது?' என்று வினவினேன். அதற்கு அவர் 'நான் புத்தகங்கள் எழுதும் போது நமது நபி களாரின் திருப்பெயரை எழுதிட நேரும்போதெல்லாம் ஸலவாத் ஓதுவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். அதன் பொருட்டால்தான்' என்று மறுமொழி பகர்ந்தார்.

## தலையில் கைத்தடம் பதிந்த காரணீயம்

நமது தமிழகத்தின் தவத்திருவாளராகத் திகழும் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்) அவர்கள் தங்களது 'மஹானீ' என்ற இலக்கியக் கோவையில் பின்வரும் பரபரப்பான நிகழ்ச்சியைக் கூறிக் காண்பித்து உள்ளார்கள்.

எனது ஆசிரியப்பெருந்தகை- 'பஹறுதூருல் ஹிந்து' என்று சிறப்பிக்கப்பட்ட சீர்மையாளர்-சென்னையின் காழியுல் குலாத் (மார்க்க நீதிபதி) ஹஜ்ரத் முஸ்தபா அலிகான் (ரஹ்) அவர்களும், காயல்பட்டிணத்தின் ஞானக் கயல்விழியாக மதிக்கப்படும் அல்லாமா அப்துல் காதிர் (ரஹ்) அவர்களும் நெருங்கிய ஞானச் சிநேகிதர்கள். இருவரும் அடிக்கடி சந்தித்து ஞான ரகசியங்களைப் பரிமாறிக் கொள்வர்.

அதுமாதிரிச் சந்தர்ப்பங்களில் ஒருபோது ஹஜ்ரத் அப்துல்காதிர் அவர்களிடம் ஹஜ்ரத் முஸ்தஃபா அலிகான் அவர்கள் தங்களது தலைப்பாகையை கழற்றி தனது மொட்டைத்தலையைக் காட்டினபோது அதில் 'ஐந்துவிரல்கள் கொண்ட கைத்தடம்' பதிந்திருந்த அதிசயத்தைப் பார்த்து ஆச்சரியம் மிகக் கொண்ட ஹஜ்ரத் அப்துல் காதிர் அவர்கள் அதுபற்றிய காரணீயம் கேட்ட போது "தோழரே! இஃதோர் ரகசியமான ரகசியமாகும். என்னவெனில்; நான் அனுதினமும் படுக்கும் முன்பதாக ஆயிரம் தடவைகள் ஸலவாத் ஓதுவதை கட்டாய வழக்கமாகக் கொண்டிருக்கின்றேன். அங்கனம் பழக்கத்தை வழக்கமாக்கிய பின்னர் ஒரு நாளிரவு நமது நந்நபிகளார் ஹஜ்ரத் முஹம்மது (ஸல்அம்) அவர்கள் எனது கனவில் தோன்றினார்கள். அது கண்ட

நான், அச்ச அடக்கத்துடன் எழுந்து பவ்வியமாக கைகட்டி வாய் பொத்தி நின்றேன். என்னை நெருங்கி, என்னைப் பார்த்துக் குறுஞ் சிரிப்புச் சிரித்த கோமான் நபிகளார் தங்களது தங்கத்திருக்கையை எனது தலையில் வைத்து, ஆதாரமாகத் தடவி என்னை அரவணைத்தார்கள். அந்த முபாரக்கான கையின் தடயத்தைத்தான் இப்போது நீங்கள் காணுகின்றீர்கள்'' என்றார்களாம்.

ஈதென்ன? இன்னும் எத்தனை வேண்டும். எழுத்திலடங்குமா? எண்ணில்தான் அடங்குமா ஆனால், அந்த அற்புதமான அற்புதங்களையெல்லாம் புரிந்து, ஜீரணிக்க வல்ல பக்குவம், பக்தி, நம்மில் சிலருக்கு இல்லை என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும் ஆதலால் இப்போதைக்கு இந்த அளவோடு சுருக்கிக் கொள்

ஆனாலும், இங்கே ஓர் உண்மையினை விண்டு காண்பிப்பது அவசியமெனக் கருதுகின்றேன்·

அதாவது;

'ஈமான்' எனும் ஓரிறை நம்பிக்கை 'உடல்' என்றால் தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ்ஜு போன்ற கடமைகள் அந்த ஈமானின் 'உறுப்புகளாக' இருக்கின்றன 'ஸலவாத்' என்பது அந்த ஈமானின் 'உயிராக' இருந்து கொண்டுள்ளது.

ஆகவே, 'ஸலவாத்' இல்லாவிட்டால் ஈமான் வெறும் செத்த ஜடலமாகப் போய் விடும்.

எடுத்துக்காட்டு இதோ.

நபியாகிய நான் அல்லாஹ்வின் பேரொளியிலிருந்து நேரடியாகப் படைக்கப்பட்டேன். எனது பேரொளியிலிருந்து அண்ட கோளங்கள் அனைத்தும் படைக்கப்பட்டன.

என்று, நம்மின் நந்நபிகளார் படைப்பினங்களின்

ரகசியங் குறித்து விபரம் நவின்றார்கள்.

அப்படியானால், நபிகளாரின் பேரொளியைப் பிச்சை யாகப் பெற்றுத்தான் படைப்பினங்களின் மங்கள கலசமான மனித இனம் பிரகாசித்துக் கொண்டுள்ளது என்பதனை இனம் பிரித்துச் சொல்லிடத் தேவையில்லை. இதன் மூலம் மனிதன் ஒளிர்வது அவனில் உள்ள அந்த நாயகப் பேரொளி யின் மூலம்தான் என்பது உறுதிப்படுகின்றது. அல்லவா?

மனித இனம் ஜொலிப்பதற்கு மூலகாரணியமான அந்த 'நூரே முஹம்மதிய்யாவுடன்' மனிதன் எப்போதும் நேரடி யான தொடர்பு வைத்துக் கொண்டிருந்தால் தான் அவனது ஆன்மீகம் ஒளிமயமாக இயங்கிக் கொண்டிருக்க முடியும் இல்லா விட்டால் ஆன்மீகம் இருண்டு ஈனத்தனங்களின் உறைவிடமாகப் போய்விடும்.

உதாரணமாக;' மெயின் சுட் சுடனான ' தொடர்பு அறுந்து விட்டால் அதன் பிணைப்பிலுள்ள அனைத்து 'எலக்டிரிக்' பல்புகளும்—இந்த பல்புகள் நல்ல நிலையில் இருந்தால்கூட—எறிந்து ஒளி உமிழவா செய்யும்?

அதுபோல் தான் 'நூரே முஹம்மதிய்யா' என்ற மெயின் சுட்சுடன் 'மனித இதயம்' என்ற பல்பிற்கு நேரடியான தொடர்பு இருந்து கொண்டிருந்தால்தான் அந்த உள்ளம் 'ஞானம்' எனும் ஒளிகளை உமிழமுடியும். அதனுடனான தொடர்பு அறுந்து விட்டால் மனித இதயம் நிச்சயமாக ஞான சூனியமாகப் போய்விடும் என்பது திண்ணத்திலும் திண்ணமாகும். இத்தகு 'நூரே முஹம்மதிய்யா' என்ற மூலத்துடன் மனித இதயத்திற்கு தொடர்பு ஏற்படுத்திக் கொடுக்கும் 'வொயர்' எது தெரியுமா?

இங்கு வலியுறுத்தப்பட்டு வரும் 'ஸலவாத்து' தான் அந்த வொயராகும்,

ஆகையினால்தான் 'ஸலவாத்' ஈமானின் உயிராகும் என்று நான் குறிப்பிட்டேன். அதை உங்களால் புறக் கணிக்க முடியவா போகின்றது?

இத்தகு வல்லாண்மை ஸலவாத்திற்கு இருந்து கொண்டு இருக்கும் பேருண்மையைப் புரிந்தமையால்தான் ஆரிஃபீன்கள், அவ்லியாக்கள் என்ற இறைநேச சிகாமணிகள் அனைவரும் ஸலவாத்திற்கு முக்கியமான முதல் தரமான அந்தஸ்து கொடுத்து கோன் நிலையை அடைந்து வருகின்றார்கள்.

மற்ற இறைவணக்கங்களுக்கில்லாத விசேசமான சலுகை இந்த ஸலவாத்திற்கு மாத்திரம் வழங்கப்பட்டுள்ள உண்மையை உணரும்போது தான் ஞானத்தின் தலைவாசல் நம் இதயத்தில் திறக்கத் தொடங்குகிறது அதாவது;

'உலமாயே ரப்பானீ' எனும் உண்மை உலமாக்கள் சொன்னதாக ஹஜ்ரத் மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்) அவர்கள் தங்களது 'மஹானீ' என்ற கிரந்தத்தில் குறிப்பிடுகின்றார்கள்.

அனைத்து வணக்க வழிபாடுகளுக்கும் 'இக்லாஸ்' எனும் மனத்தூய்மை உயிராக இருக்கின்றது. ஆதலால் இக்லாஸ் இல்லாமல் செய்யப்படும் எந்த வணக்கமும் இம்மியும் எடுபடவே செய்யாது. ஆனால் ஸலவாத்திற்கு மாத்திரம் 'இக்லாஸ்' நிபந்தனையாக ஆக்கப்படவில்லை. ஆகையினால்; இக்லாஸ் இல்லாமல் ஸலவாத் ஓதப்பட்டாலும் அதற்கு உரிய நற்கூலி நிச்சயமாக மறுக்கப்படமாட்டாது.

சுப்ஹானல்லாஹ்! ஸலவாத்தின் தனித்தன்மை எத்தகு உன்னதம் நிறைந்தது என்பதைப் பார்த்தீர்களா?

இதனைத்தான் இந்த 'மௌலாய' எனும் கண்ணிதனில்.

எம் எஜமானனே! நீ, படைப்பினிற் சிறந்த பைகம்பர் முத்து முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்கள்பால் நின் நிறையாசியையும், நிறை சாந்தியையும் நீடுழி, நீடுழி பொழிந்தருள்வாய் என்று ஸலவாத் வேண்டப்படும் இந்த

சாந்திப் படிவத்தை புதுமைகள் விளைவித்துக் கொண் டிருக்கும் புர்தாஷரீபின் கிரீடமாக ஆக்கப்பட்டுள்ளது.

புர்தாஷரீபிற்கு மாத்திரமல்லாது ஆஷிகே ரசூல்களான நாயகப் பைத்தியங்கள் பாடிய பற்பல அகவல்களுக்கு 'மௌலாய' என்ற இந்த ஈரடிப் பாவையே மோகன ராகமாகக் கொள்ளப்பட்டும் உள்ளது.

கற்கண்டுச் சொற்களாலும், பக்திப் போதை ஏற்றிட வல்ல வாக்கியங்களாலும் வார்க்கப்பட்டுள்ளதால் தனித் தன்மை பெற்று, தாகம் தணிக்கும் மோகனப் பாவாக தெவிட்டாத்தேன் மதுரக் கனியாக பேரின்பக் காதல் கனிரசமாக ஏற்றம்பெற்று, பாடுவோர் தம் வாயினிக்க, இனிக்க செவிமடுப்போர்தம் உயிரினிக்க, உள்ளமினிக்க செங்கரும்புப் பாகாக அமைந்து போயுள்ள இந்த ஈரடிகளைப் பாடியது வானவர் கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்களாகும் என நம்புவோர் நம்மில் மிகுத முண்டு. ஆனாலும் தத்துவச் சோலையின் தவத்திரு மா மல ரான ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் கஜ்ஜாலி (ரஹ்) அவர்கள் இதனை யாத்ததாக நம்புவதற்கு தக்க தடயங்கள் நிரம்ப உண்டு. ஆனால்; புர்தாஷரீபைப் புனைந்த பாவேந்தரான ஹஜ்ரத் இமாம் ஷர்ஃபுத்தீன் முஹம்மதுனில் பூஸீரி (ரஹ்) அவர்கள் இந்த 'மௌலாய' பைத்திற்குச் சொந்தக்காரர் அல்ல என்பது மாத்திரம் உறுதியிலும் உறுதியாகும்.

எந்த ஒரு காரியத்தையும் ஆரம்பம் செய்திடும்போது 'பிஸ்மில்லாஹ்—அல்ஹம்து—ஸலவாத்து, ஆகிய அருள் வேட்டலை முன் வைத்துத் தொடங்க வேண்டுமென்ற இஸ்லாமிய மரபையும்;

முதன் முதலில் 'இறைத்துதி' கொண்டு தொடங்கி கடைசி, கடைசியாக 'மங்கள கீதத்துடன்' முடிக்கப் படுவதற்கே 'காவியம்' என்ற பெயர் பொருந்தும் என்ற இலக்கண இலக்கிய வரம்பை இஸ்லாமிய நெறியில்

ஊறித் திளைத்ததுடன், காவியம் புனைவதில் தனி வரலாறு படைத்திடுமளவிற்கு கவிநயமும் வரப்பெற்றிருந்த கவிக்குரிசில் பூஸீரி (ரஹ்) அவர்கள் தெரியாமல் இருந்திருக்க முடியுமா?

ஆனாலும், அவர் இந்த 'மௌலாய' பைத்தை கையில் எடுத்து வைத்துக் கொண்டு எல்லா வகையிலும் இதற்கொப்பான இறைத்துதியை உருவாக்கிட சுழன்று முயன்றும் அதில் அவர் தோற்றிருக்கக் கூடும். ஆதலால் அருள் வளமும், பொருள் வளமும் ஒருங்கே அமையப் பெற்ற இந்த 'மௌலாய' பைத்தையே துணிந்து தனது புர்தா பனுவலுக்கு இறைத் துதியாக ஆக்கிக் கொண்டார். என்று நம்ப வழியுண்டு.

புர்தாஷரீபில் வரும் ஒவ்வொரு கண்ணியும் இந்த மௌலாய என்ற மோகன ராகத்தோடு அடிக்கு அடி வார்த்தைக்கு வார்த்தை—கொஞ்சமும் பிசிறு தட்டாமல் இணைந்தோடும் அந்த ஒற்றுமை எனது இந்தக் கனிப் பிற்குஒரு தடயமாக இருந்து கொண்டுள்ளது.

இப்படி இரவல் இறைத் துதியோடு தொடங்கும் புர்தாஷரீப் எந்த அளவு காவிய உலகில் தனக்கென தனியானதொரு இடத்தைப் பிடித்துக் கொண்டு, சென்றடைந்த எழுநூறு ஆண்டுகளாக இனிக்கும் எழிற் காவியமாக வெற்றிஉலா வந்து கொண்டுள்ளது என்ற புதுமையை இந்த ''புரவலர் போர்த்திய பொன்னாடை'' பேரிலக்கியத்தை படிக்க படிக்க அதன் ஒவ்வொரு வரியிலும் உணர்ந்து நீங்கள் ஒவ்வொருவரும் புளகாங்கிதத்தின் உச்சாணிக் கொப்பை அடைந்திடப் போகிறீர்கள் என்பது இன்ஷா அல்லாஹ் சர்வ நிச்சயமாகும்.

ஆனால் அதற்கு முன்னர் காவியத்திலுள்ள காண்டங்கள் பற்றிய விபரங்களைப் புரிந்து கொள்வது அவசியமெனக் கருதுவதினால் அது பற்றிய விபரங்களை விளம்புகின்றேன்-

பூரணம் பெற்றுள்ள காரணக் காவியமான கஸீதத்துல் புர்தா ஷரீபை கவிக்குரிசில் பூஸீரி (ரஹ்) அவர்கள் பத்துக் காண்டங்களாக வார்த்து ஞானப்பாகாக வடித்துக் கொடுத்துள்ளார்கள்.

ஆனால் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள புர்தா ஷரீப் விரிவுரைகள் எதனிலும் அந்தப் பத்துக் காண்டங்கள் பற்றிய விபரமோ, விளக்கமோ இம்மியளவுகூட விண்டு காண்பிக்கப்படவில்லை. அதனால்தான் அவ்விரிவுரைகளால் புர்தா ஷரீபின் முழுமையான இலக்கியச் சுவையை படைக்க முடியாது போயிற்று. ஆகையினால் அத்தகு பெருங்குறை இந்த 'புரவலர் போர்த்திய பொன்னாடைக்கும்' சம்பவித்து விடக்கூடாது என்ற பெருங்கவலையின் காரணமாக

ஆசை அலைகள்
அலைபாயும் மனம்
புகழாரம்
பிறப்பின் சிறப்பு
புதுமைப் பூக்கள்
மோனை மறை மகிமை
விண்ணேற்றப் பயண மகிமை
திணிக்கப்பட்ட யுத்தங்களால் பெற்ற வீரமுத்திரை
மன்னர் நபியுல்லா அவர்களின் மன்றாட்டமகிமை
துஆ அதன் அவசியம், அணுகுமுறை, மகத்துவம்

என்று, தனித் தனியாக பத்துத் தத்துவத் தலைபபுக்களாகப் பிரித்து, ஒவ்வொரு தலைப்பிற்கும் குர்அன், ஹதீது வரலாற்று நிகழ்ச்சிகளின் ஆதாரங்களுடன் பழகு தமிழில் அழகு முறையில் பத்து முன்னுரைகளை வார்த்து அது அதற்குரிய இலக்குகளில் பொருத்தமாக இணைத்துள்ளேன்.

அவைகளில் முதன்முதலாக 'ஆசை அலைகளில்' நீந்திக் களிப்போம் வாரீர்.

# 1

‘ஆசைக்கு அளவே இல்லை’ என்பார்கள்

ராணுவ வீரனுக்கு, தளபதியாக உயர்ந்திட ஆசை.

தளபதியாக உயர்ந்த பின் மன்னனாக உயர்ந்திட ஆசை.

மன்னனாக உயர்ந்த பின் மா மன்னனாக உயர்ந்திட ஆசை.

மா மன்னனாக உயர்ந்த பின்னும் அவனுக்கு ஆசை இருக்க லாகுமா?

மரத்தின் உச்சாணிக்குச் சென்ற பின்னும் இன்னும் உயரஉயரப் போக ஆசைப்பட்டால் அது சாலுமா?

ஆனாலும் மனிதனை ஆசை விட்டபாடில்லை. கடவுளாக பதவி உயாந்திட ஆசை கொள்கின்றான். முடியக்கூடிய காரியமா அது? ஆனாலும் முடியாத-எப்படியெல்லாம் எகிரி எகிரிக் குதித்தாலும் எட்டிட முடியாத அந்த பதவிக்கு உயர்ந்திட முயன்றுள்ள வரலாறுகளை எட்டாத பழத்திற்குக் கொட்டாவி விட்ட காதைகளைக் கண்டும் கேட்டும் வருகின்றோம் நாம்.

## எட்டாத பழத்திற்கு கொட்டாவி விட்ட கோமாளிகள்

‘வலீது பின் மஸ்ஹபு’

அமைதியான அகிலத்தின் வரலாற்றில் அலங்கோலத்தைக் கற்பித்தவனின் பெயர் அது.

எழுபது வயது வரை ‘மலடன்...மலடன்’ எனத் தூற்றப்பட்ட இடையன் மஸ்ஹபிற்கு கடைசி காலத்தில் கேவலமான ஆசை அலைகளால் கருவுற்றவன் அவன்.

அவனது தாய் 'ஜகூனா' இவன் கருவுற்றதால் நான் பொட்டிழந்தேன். பூவிழந்தேன். என நாளும் ஏசி ஏசி இவனைப் பெற்றெடுத்தாள். ஏனெனில் அவன் கருவுற்ற சில மாதங்களில் தகப்பன் மஸ்ஹபு மரணத்தைத் தழுவிக் கொண்டான்.

இப்படி, பிறப்பிலேயே குடும்பத்திற்குச் சரிவை ஏற்படுத்துபவனாகக் கருதப்பட்ட வலீது பின் மஸ்ஹபு சிறுவயதிலேயே சின்னதனங்களின் உறைவிடமானான்.

பொய், களவு, மோசடிகளுக்கு அன்றைய தினம் அவனே ஏகபோகச் சொந்தக்காரன்.

யார் குடியைக் கெடுத்தாவது, எவர் முதலை ஏப்பமிட்டாவது பணம் குவிக்க வேண்டும். அதன் நிழலில் பதவி பவிசு, பஞ்சணை, பங்களாக்களை அடைந்திட வேண்டுமென்பது அவனது லட்சியமாக இருந்தது.

கேடு கெட்டவர்களின் கெட்ட முயற்சிகளுக்குச் சில சமயம் காலமும் கனிந்து கொடுக்கும் போலும்.

ஏனெனில் பொருள் போனாலும் பரவாயில்லை பொல்லாங்கு வந்து சேராமல் இருந்தால் சரி. என ஊரார் அனைவரும் அவனைக் கண்டு ஒதுங்கி ஒதுங்கி அவனது அட்டூழியத்தை வளர்த்து விட்டனர். ஆதலால் ஊரில் உள்ள ஆடு மாடுகள் அனைத்தும் அவனுக்குச் சொந்தமாயின. நினைத்தபோது நினைத்ததை செய்து முடிக்கும் கைவரிசையும் அவனுக்குச் சொந்தமாயிற்று. ஆகவே குறைந்த காலத்திலேயே கொடிகட்டிப் பறக்கலானான் வலீது.

வாதாட்டத்தில் வல்லவனான வலீது சூதாட்டத்திலும் சூரன்தான்.

ஆனால்; யானைக்கும் அடிச்சறுக்குமல்லவா? அதற்கொப்ப வலீதின் வாலாட்டம் சூதாட்டத்தில் ஒடுக்கப்பட்டு உடுத்திக் கொள்ளக் கந்தல் கிடைக்காத கடைகிக் கட்டத்தை அடைந்து விடுகின்றான்.

ஆனாலும் சளைக்கவில்லை அவன்.

தனது ரௌடித்தனம் உள்ளூர் சந்தையில் இனியும் விலைபோகாது என்பதைக் கண்டு கொண்டபின் 'மிஸ்ரு' பட்டணத்தை அடைந்து அங்கும் 'அப்படி-இப்படி' என ஆட்டம் போட்டுப் பார்த்து அயர்ந்து விட்டதால் கடைசியாக ஒரு முயற்சி மேற்கொள்கின்றான்

முயற்சியா அது?

மனிதனாக உள்ள ஒவ்வொருவரும் வெட்கித் தலை குனிபவல்ல இழிவின் முதிர்ச்சி என்றுதான் அதனை சொல்லிட வேண்டும்.

ஆனாலும் எது எப்படி இருந்தாலும் வலீதுக்கு வேண்டியது பணம். பணத்தின் நிழலில் கிடைத்திடும் பதவி, பவிசுகள் தானே

ஆகவே துணிந்து அந்த அசிங்கத்தையும் மேற்கொள்கின்றான் அவன்.

அது என்ன தெரிமா?

மிஸ்ரு பட்டணத்தின் சுடுகாட்டிற்குப் பக்கத்தில் ஒரு கொட்டகை போட்டு அமர்ந்து கொள்கின்றான்.

அப்போது ஒரு பிணம் கொண்டுவரப் படுகின்றது அதனைத் தடுத்து நிறுத்துகின்றான் ''ஏன் இப்படி?'' என்று கேட்டபோது ''இங்கே இனி புதைக்க வேண்டுமானால் வரி செலுத்த வேண்டும்'' என்கின்றான்.

''கொடுக்க மறுத்தால்......'' என்றபோது ''தடுத்து நிறுத்துவேன்'' என்கின்றான்.

''அடுக்குமா இது?'' என்றபோது ''நான் என் செய்வேன் அரசின் ஆணை அங்கனம்'' என்று கூறி போலி அத்தாட்சிகளையும் காட்டுகின்றான்.

இப்படியே வலீதின் இந்த புதிய தொழில் தொடர்கின்றது. அவனது பையும் நிரம்பி வழிகின்றது.

முறைபான நிர்வாக அமைப்பும், ஊழலைக் களைந்தெரிவதற்கென்றே முனைப்பான கண்காணிப்பும் மிகுந்துள்ள

இன்றைய காலகட்டத்திலேயே, எது எதோ, எப்படி எப்படியோ நடந்து முடிந்து விடுகின்றபோது இன்றைக்கு ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய காலகட்டத்தில் வலீதின் இந்த மாய்மாலம் அரங்கேறியது ஆச்சரியமில்லை தானே?

ஆனாலும் எதற்கும் ஒரு முடிவு உண்டல்லவா? அந்த 'முடிவு' மூர்க்கன் வலீதையும் விட்டபாடில்லை.

ஆமாம்......

அன்றொரு நாள் ஆடம்பரங்களோடு ஒரு பிணம் கொண்டுவரப்படுகின்றது. இன்றைக்கு கொழுத்தவேட்டை தான் என்ற இறுமாப்போடு அந்தப் பிணத்தையும் வழிமறிக்கின்றான்

ஆனால்; கொண்டுவரப்பட்டதோ அந்நாட்டு மன்னன் சகாவத்துடைய மகளின் பிணம்.

நடக்குமா அவனது நாடகம்?

கைது செய்யப்பட்டு குற்றவாளிக் கூண்டில் ஏற்றப்படுகின்றான் அவன்.

நீதியின் வலிமை மிகு கரங்கள் அவனை திமிரவிடாமல் மடக்கிப்பிடித்து மரணதண்டனை வழங்குகின்றது.

ஆனால்;

''கெஞ்சினால் மிஞ்சுவது, மிஞ்சினால் கெஞ்சுவது'' எனும் கலையில் கைதேர்ந்தவனான வலீது அந்த மரண தண்டனையிலிருந்து எப்படியோ தப்பித்துவிடுகின்றான். அதிலிருந்து தப்பித்ததோடு மட்டும் நில்லாது மயக்குமொழி பேசி, வலைவிரித்து மன்னன் சகாவத்தை அதனுள் வீழ்த்தி அரசின் பாதுகாப்பு இலாக்காவில் தலைமைப் பதவியையும் பெற்று விடுகின்றான்.

எப்படி வலீதின் திறமை?

அவனது இந்தத் திறமை ''ராஜயோகம்'' என்பார்களே அதுவரை அவனை இட்டுச் செல்லுகின்றது பாருங்களேன்.

ஒரு நாள், நடுநிசி நேரம். தளபதி வலீது முனைப்பாக நகர் பாதுகாப்பில் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றான். அப் போது இருட்டில் பதுங்கிப் பதுங்கி ஓர் உருவம் வேகமாகச் செல்லுவது தளபதி வலீதின் கூரிய கழுகுப் பார்வையில் பட்டு விடுகின்றது.

விடுவானா?

தாவிச் சென்று அந்த மர்ம உருவத்தை பிடித்து விடு கின்றான்,

''யார் நீ.''

தளபதி வலீதின் கம்பீரமான குரல் ஒலிக்கின்றது.

ஆனால்; விபரத்தைச் சொல்லத் தவறினால் என்ன நடக்கும் என்பதை தெரிந்திருந்தும்கூட 'அதைவிட ரகசி யம்' வெளிப்பட்டு விடக்கூடாதே என்பதில் அந்த மர்ம உருவத்திற்கு அதிக அக்கறை ஏற்பட்டது போலும்.

கணீரென ஒலித்த தளபதியின் அந்தக் கேள்விக்கு பதி லேதும் சொல்லாமல் அவனது முரட்டுப் பிடியிலிருந்து திமிறிக் கொண்டு ஓட எத்தனிக்கின்றது அந்த உருகும்

நடக்குமா வலீதிடம?

கடுகிப் பிடிக்கின்றான் ஆனாலும் அவனையே திணற டிக்கின்றது அந்த உருவம்,

இருவரும் கட்டிப் புரளுகின்றனர்.

'இனியும் தாமதித்தால் ஏமாறும்படியாகும்' எனத் தோன்றுகின்றது வலீதுக்கு.

ஆகவே; தனது பளபளக்கும் இடைவாளை எடுத்து ஓங்கிக் குத்திவிடுகின்றான் வலீது.

''ஐயகோ! என்ற அபய சப்தத்தோடு ரத்த வெள்ளத் தில் மிதக்கின்றது அந்த மர்ம உருவம்.

முகங்குப்புறக் கிடக்கும் உருவத்தைப் புறட்டிப் பார்க் கின்றான். ''ஆங்... மன்னர் சகாவத்'!

ஆமாம்... மன்னர் சகாவத்தே தான்.

எதற்குமே கலங்கியறியாத வலீதின் கண்களைக் கண்ணீர் நனைக்கின்றது. எப்போதுமே நடுங்கியறி யாத அவனது கால்கள் கிடு கிடுக்கின்றன.

மன்னர் ஏன் இந்நேரம் இப்படி வரவேண்டும்? அப்ப டியே வந்தாலும் என்னிடம் தன்னைக் காட்டிக் கொள்ள ஏன் தயங்க வேண்டும்...?

வலீதுக்கு ஒன்றுமே புரியவில்லை. ஏனெனில்;

மன்னர் சகாவத் படுபயங்கரமான கனா கண்டதும்

அங்ஙனம் கனா கண்டதிலிருந்து நிம்மதி இல்லாமல் அவர் பரிதவித்து வந்ததும்;

கடைசியாக, ஒரு முனிவரைப்பற்றிய செய்தி மன்னருக் குக் கிடைத்ததும், அந்த முனிவரை கனவுதென்பட்ட அதே நடு நிசியில்-யாருக்கும் தெரியாமல், ஊருக்கும் புரியா மல் —அவரின் இருப்பிடம்போய் ரகசியமாகச் சந்தித்தால் கனவுக்குச் சரியான பொருள் தெரிவதோடு, கனவினால் கெடுதி சம்பவிக்குமென்றிருந்தால் அதற்குப்பரிகாரமும் முனி வரால் சொல்லப்படும் என முனிவரைப்பற்றிய முழுத்தகவல் கிடைத்ததால், மூடநம்பிக்கை எனும் மொட நாற்றத்தில் ஊறித்திழைத்த அந்த மூட மன்னன் அங்கனம் அந்த நடு நிசியில் முகமூடி மாட்டிக்கொண்டு பதுங்கிச் சென்றான் என்பதெல்லாம் தளபதி வலீதிற்குத் தெரிந்திருக்க நியாய மில்லை தான்.

அல்லவா?

ஆனாலும் வெள்ளம் தலைக்குமேல் துள்ளிக்குதித்து விட்டதே இனி என்ன செய்வது?

தளபதி வலீதின் 'மூளை' சுறுசுறுப்பாக இயங்கத் தொடங்கியது.

எப்போதுமே வேதனையைக்கூட சாதனையாக மாற்றிக்கொள்ளும் இயல்பு கொண்ட வலீதின் சிந்தனை இந்த பயங்கரமான கொலை பாதகத்தையும் படிக்கட்டாக ஆக்கிக் கொள்வதில் சுழல்கின்றது.

ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாக மன்னர் சகாவ தின் பிரேதத்தை நன்றியுணர்வோடு அதே இடத்தில் மண் கவ்வச் செய்துவிட்டு அவசர அவசரமாக அரண் மனையை அடைகின்றான்.

ஆராய்ச்சிமணி அகங்காரத்தோடு ஒலிக்கின்றது.

அதிர்ச்சியடைந்த அமைச்சர்கள் அந்த அகால நேரத் திலும் பதறியடித்து ஓடி வருகின்றனர். அமைச்சரவை கூடு கின்றது. அரியணையில் மணிமகுடம் பூண்டு-தளபதி வலீது அல்ல, அல்ல ‘‘மன்னர் மன்னன் வலீது,, அட்டகாசமாக அமர்ந்து காணபபடுகின்றான்.

யார் எகிறிக் குதிக்க முடியும்?

அதுதான் அனைத்து மோட்டுச்சாட்டுகளும் அதிர்ஷ் டக்காரன் வலீதால் முறையாக— முற்கூட்டியே-சரிக்கட்டப் பட்டு விட்டதே.

ஆகவே,

‘‘மன்னவா! மண்டியிட்டோம்’’ என அனைவராலும் வலீது பின் மஸ்ஹபு மிஸ்ரு நாட்டின் மன்னனாக அங்கீகரிக் கப்படுகின்றான்.

பெருந்தகையீர்! பார்த்தீரா வலீதின் ராஜயோகத்தை?

சாதாரண இடையன் வயிற்றில் பிறந்து, அசாதாரண மான முயற்சிகளால் எப்படி எப்படியெல்லாம் அவன் ஏற்றம் பெற்றுள்ளான் என்பதனை?

‘‘கதை தானே இது’’ என்பீர்.

நிச்சயமாக இது கற்பனைக் கதையன்று.

இன்றைக்கு ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வரலாற்றுச் சிறப்புப் பெற்ற மிஸ்ரு நாட்டில் நடந் தேறிய உண்மை நிகழ்ச்சியே அது.

என்ன, இன்னும் நம்பிக்கை வரவில்லையா?

ஓ, நம்பிக்கை வராதுதான்.

ஏன் தெரியுமா? வரலாற்றில் வழங்கும் பெயரில்

சொல்லப்படாமல் 'வலீது' எனும் இயற் பெயரிலே சொல்லப் பட்டதால்.

வலீதின் வழங்கு பெயர் என்ன தெரியுமா?

'பிர்அவ்னு...பிர்அவ்னு' என வழங்கப்படுகின்றதல்லவா? அந்த சாட்சாத் பிர்அவ்னே தான் இந்த 'வலீது பின் மஸ்ஹபு' என்பான்.

(மூஸாவே!) நீவிரும் நின் சகோதரர் ஹாரூனுமாகிய நீங்கள் இருவரும் பிர்அவ்னிடம் செல்லுங்கள். நிச்சயமாக அவன் மிக்க வரம்பு கடந்து விட்டான். (20; 43)

என எந்த வம்பனைக் குறித்து குர்ஆனில் கண்டனம் செய்யப்பட்டுள்ளதோ அதே பிர்அவ்ன்தான் இந்த வலீது பின் மஸ்ஹபு எனபான்.

இப்போது புரிந்திருக்கும். அல்லவா?

இப்படி; ஆசை அலைகளிலே அலைக்கழிந்து, அந்த ஆசைகளை நிறைவேற்றிக் கொள்ள முறைகேடான வழி வகைகளைக் கையாண்டு, ஆசையின் உச்சிக் கிளையை எட்டிப் பிடித்து விட்ட இந்த பிர் அவ்னுக்கு;

அன்றைய வல்லரசாகத் திகழ்ந்த மிஸ்ரு நாட்டின் ஏகபோகச் சக்ரவர்த்தியாக உயர்ந்து விட்ட பிர்அவ்னுக்கு இனியும் ஆசை இருக்கலாகுமா?

ஆனாலும் ஆசை அவனை விட்டபாடில்லை.

"நினைத்ததை முடிப்பவன் நான் ... நான்" என்ற அகங்காரம் அவனை ஆட்டிப்படைத்தது,

அவனைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டு சொகுசு வாழ்க்கை பெற்று இன்புற்று வந்த அவனது சகபாடிகள் 'ஆமாம்... ஆமாம்' என ஆமாம் போட்டுப் போட்டு அவனது அகங்காரத்தை வளர்த்து வந்தனர்.

போதாக்குறைக்கு அவனது ராஜகுருவாக நாடகமாடி வந்த 'இப்லீஸ் லயீன்' அவனது அகங்காரத்திற்கு தூப மிட்டு தூபமிட்டு "நீ அரசனன்று. ஆண்டவனே நீதான்" என்றான்.

''அப்படியா; ஆமாம்... ஆமாம் நானே பெரிய ஆண்டவன்' என பிர்அவ்னு கொக்கரிக்கத் தலைப்பட்டான்

(இன்னும் பிர்அவ்னு இஸ்ரவேலர்களை நோக்கி ''நான்தான் உங்களுடைய மேலான இறைவன்'' என்றும் கூறினான் (79: 24)

பிர்அவ்னு இப்படி ஆசைக்குரல் எழுப்பிய போது மூஸா நபி (அலை) அவர்கள் அவனிடம் உண்மை நிலயினை எடுத்தோதி ''நீயும் நானும் சாதாரண மனிதர்கள்தாம், உன்னையும் என்னையும் மற்றுமுள்ள அண்டங்கள் அனைத்தையும் படைத்துப் பாதுகாத்தாளும் பரம்பொருள் ஒன்று நிச்சயமாக உண்டு. அந்தப் பரம் பொருள்தான் இறைவன். ஆதலால் நீ உனது அறியாமையை உணர்ந்து, உண்மை நிலையினை அறிந்து திருந்திடல் வேண்டும்'' என நல்லுபதேசம் வழங்கிய போதாவது அவன் திருந்தியிருந்தால் நலமாக இருந்திருக்கும்.

ஆனால்,

திருந்துவதற்குப் பதிலாக திருகிக் கொண்டு நின்றான் நல்லுபதேசம் செய்த நபியவர்களை தனது அதிகாரத்தால் அடிபணியச் செய்திட அனைத்து முயற்சிகளும் செய்ததோடு, அப்பாவி மக்களை ஏமாற்றும் முகமாகத் தனது அமைச்சர் ஹாமானை விழித்து;

''என்னைத் தவிர வேறொரு கடவுள்] உங்களுக்கு இருப்பதாக நான் அறியவில்லை. அன்றி ஹாமானே! களிமண்ணுக்கு (அதாவது செங்கல் சூளைக்கு) எனக்காக நெருப்பு வைத்து, (அச் செங்கல்லைக் கொண்டு வானத்தை எட்டக் கூடிய) மாளிகையை எனக்காக நீ கட்டு (அதில் ஏறி) மூஸாவுடைய ஆண்டவனை நான் பார்க்க வேண்டும் (அவர் தனக்கு என்னைத் தவிர வேறு கடவுள் இருப்பதாகக் கூறுகிறாரே, இவ்விசயத்தில் நிச்சயமாக அவர் பொய் சொல்வதாகவே நான் எண்ணுகிறேன் (குர் : 28 30)

என பித்தலாட்டம் பேசிப் பிதற்றித் திரிந்தான்.

இப்படியெல்லாம் ஜீரணிக்க முடியாத ஆசைகளில் மூழ்கித் திழைத்து, எட்டாத பழத்திற்கு கொட்டாவி விட்ட எத்தனை எத்தனையோ கோமாளிகளை இந்த பிர்அவ்ன் உருவில் இன்றும் காண்கின்றோம் நாம்.

## சுய முயற்சிகளால் மாத்திரம் முடியுமா?

இப்படி, இப்படியெல்லாம் ஆசை கொள்ளத் தெரிந்த மனிதனால், கொண்ட ஆசையைத் தனது சுயமுயற்சிகளால் மாத்திரம் நிறைவேற்றிக் கொள்ள முடியுமா?

'முடியும்' என்போர் இன்றைக்கு நிறையப் பேர் உண்டு.

ஆனால் 'முடியும்' என்பதெல்லாம வெறும் வாய்ஜம்பமே தவிர முடித்துக் காட்டியதாக வரலாறு இல்லை.

'முடியும்' என்றிருந்தால்,

அந்த ஆணிக்கார பிர்அவனு தனது படை பட்டாளங்களோடு நீல் நதியில் மூழ்கி மடிந்திருக்க நியாயமில்லை.

''பணத்தில் அன்றைக்கும் சரி இன்றைக்கும் சரி அவனுக்கு நிகர் எவருமே இருந்ததில்லை'' என கணிக்கப்படுகின்ற பணமுதலை 'காரூன்' பூமியால் விழுங்கப்பட நியாயமில்லை.

''சொர்க்கமா? இதோ அதனை இங்கேயே நிர்யாணித்துக் காட்டுகின்றேன் பார்'' எனச் சவால் விட்டு அன்றைக் காலத்திலேயே கோடான கோடி பொற்காசுகளை கொட்டிக் குவித்து - கலை நுணுக்கங்களோடு பார்ப்போர் ''இன்பபுரி இதோ!'' என அதிசயிக்கும் வண்ணமாகப் போட்டிச் சொர்க்கம் கட்டி முடித்த ஷத்தாது என்பான், தன்னால் கட்டி முடிக்கப்பட்ட அந்த போலி சொர்க்கத்தினுள் காலடி எடுத்து வைக்கும் முன்பே மரணிததிருக்க நியாயமே இல்லை:

'லைலா - மஜ்னு' சோகக் கதைகளும்,

போலி நாடகமாடி, தன்னை 'ஞானி' என்றும் 'யோகி' என்றும் 'பாவா' என்றும் 'தெய்வ அவதாரம்' எனறும்

'அவ்லியா' அவதாரம் என்றும் இப்படி இடத்திற்கு தகுந்தாற்போல; வர்ணத்திற்குத் தகுந்தாற்போல வேடமிட்டு பாத்திரம் தாங்கி, நடித்து வந்து கொண்டிருந்த எத்தனை எத்தனையோ போலிச் சாமியார்கள், ஷைகுமார்களின் முகமூடி கிழிக்கப்பட்டு அந்த வேடதாரிகள் முச் சந்தியில் நிறுத்தப்பட்ட சாதனைகளும் நடந்திருக்க வேண்டியது இல்லை. அல்லவா?

ஆனால் இவைகளெல்லாம் நடந்து முடிந்து விட்டனவே, இது எதைக் காட்டுகின்றது......?

ஆகவே

ஆசைக் கொள்ளத் தெரிந்த மனிதனால் தனக்கு ஏற்பட்டுள்ள ஆசையைத் தனது சொந்த முயற்சிகளால் மாத்திரம் நிறைவேற்றிக் கொள்ள முடியவே முடியாது என்பது வெள்ளிடை மலையாகும்.

## இஸ்லாமியனின் இலட்சிய ஆசை

இது விஷயத்தில் சுத்த சத்திய தீனுல் இஸ்லாத்தின் கருத்தும் அதுதான்.

அதற்காக ஆசை அரும்பாமல் இருந்திடுமா?

ஆசை ஏற்படும்தான். அப்படி ஏற்படும் ஆசைக்குக் கடிவாளமிட்டு, கட்டுக்குள் அடக்கி, அழிந்துபோகக் கூடிய, அல்லது; கைகூட முடியாத புல் வெளிகளில் அதை மேய விட்டு விடாமல் மடக்கி, என்றென்றும் நிரந்தரமாக நின்றிலங்கி நீள் பயன்தரவல்ல இலட்சியப்புல் வெளிகளில் மேய்ந்திடும்படி அதைக் கண்காணித்துக் கொள்ள வேண்டும் — என 'ஆசைக்கு' அடிப்படை அமைத்துத் தருகின்றது இஸ்லாம்.

''உங்களில் ஒருவர்; தனது தகப்பனைக் காட்டிலும், தனது பிள்ளைகளைக் காட்டிலும் மற்றுமுள்ள எல்லா மனிதர்களைக் காட்டிலும் (நபியாகிய) என்னை அதிகமதிகமாக நேசிக்கின்றவரை உண்மையான மூமினாக (விசுவாசியாக) மிளிர முடியாது

என்றும்,

''அல்லாஹ்வையும் அவனது திருத்தூதரையும் அவ்விருவரல்லாத அனைத்துச் செல்வங்களைக் காட்டிலும் பெரிதாக நேசிக்காதவரை எவரும் ஈமானின் (விசுவாசத்தின்) முழுச்சுவையை சுவைத்து இன்புற முடியாது'

என்றும், எம்மான் முஹம்மது (ஸல்) அவர்கள் நவின்றுள்ளதின் கருத்தும் அதுதான்.

''நீங்கள் எவரையாவது நேசித்தால் அல்லாஹ் ரசூலிற்காக நேசியுங்கள். எவரையாவது பகைக்க நேர்ந்தால் அல்லாஹ் ரசூலிற்காக பகைத்துக் கொள்ளுங்கள்''

என்ற ஏந்தல் நபியுல்லா அவர்களின் இலக்கணமும் அதனையே வலியுறுத்துகின்றது

ஒருபோது ஹளரத் உமர்பின் கத்தாப் (ரலி) அவர்கள் உத்தமத்திருநபி அவர்களின் திருமுன் ''அல்லாஹ்வின் திருத்தூதே. நான் எனது உயிரைத் தவிர்த்து மற்ற எல்லாவற்றையும் தங்களுக்காக அர்ப்பணித்து விட்டேன்'' என்றார்கள். அதற்கு ''உமரே! நீவிர் இன்னும் சம்பூரணமான ஈமானை அடையவில்லை'' என நம் நபிகளார் அறிவுறுத்தினார்கள். இதனைச் செவியுற்ற உமர் ரலி) அவர்கள் திடுக்குற்றவர்களாக ''யாரசூலல்லாஹ்! எனது உயிரையும் தங்களுக்காக தத்தம் செய்திட தயாராக உள்ளேன்'' என உறுதி கூறினார்கள். அதன் பின்னரே புன்முருவல் பூத்த பூமான் நபிகளார் ''சம்பூரணமான ஈமானை அடைந்து கொண்டீர்'' என நன்மாறாயம் கூறினார்களாம்.

'உண்மை இஸ்லாமியனின் இதய தாபம் எப்படி அமைந்திருக்க வேண்டும் என்பதை உள்ளங்கை நெல்லிக்கனிபோல எடுத்தோதும் இந்த நிகழ்ச்சியும் அதனையே விளம்புகின்றது.

''மார்க்கச் சட்டப்படி ஒழுகி, அதனை உலகிற்கு நல்வழியாகவும் காண்பித்துக் கொடுத்த நபிகளார் முஹம்மது (ஸல்) நடந்த தடத்திலேயே நடப்பவராகவும், நின்ற இலக்கிலேயே நிலைத்துநிற் பவராகவும்

வணக்கம் ஆச்சாரம், பழக்க வழக்கம் ஆகிய அனைத்தி லும் இம்மிகூடத் தவறாமல் அண்ணலாரின் அடிச்சுவட்டி லேயே அடி யெடுத்து நடப்பவராகவும் வாழ்ந்து; நபிகளார் (ஸல்) அவர்களின் பாட்டையிலே முடிந்த அளவு எவர் முயன்று செயலாற்றுகின்றாரோ அவரே முழுமையான முஸ்லிமாகத் திகழ முடியும் எனக்கூறி அல்ஆரிபுல் காமில் அஷைஷ்கு முஹ்யித்தீன் பின் அறபி (ரஹ்) அவர்கள் முஸ்லிமுக்குரிய அடையாளத்தைக் கோடிட்டுக் காட்டுகின்றார்கள்.

அன்பரீர்! மனிதனது, அதிலும் முஸ்லிமாக இருப் பதில் பெருமிதம் கொள்பவனது ஆசை எப்படி இருக்க வேண்டுமென்பதை எந்த அளவு திருத்தமாக கோடிட்டுக் காட்டப் படுகின்றது என்பதனை கொஞ்சம் ஆய்ந்தறிந்து பாருங்கள்.

## விந்தை மனிதர்கள்

முஹ்யித்தீன் பின் அறபி (ரலி) அவர்கள் :

''நபிகளார் (ஸல்) அவர்களிலிருந்து வெளியான வற்றில் ஓரேயொரு சுன்னத்தைத் தவிர மற்ற எல்லா சுன்னத்து (நபிகளாரின் நடை முறை) களையும் நான் கடைப்பிடித்து வாழ்ந்துள்ளேன். நபிகளார் (ஸல்) அவர் கள் தங்களது செல்வப்புதல்வி ஃபாத்திமா (ரலி) அவர் களை ஹஜ்ரத் அலி (ரலி) அவர்களுக்கு மணமுடித்துக் கொடுத்தார்கள். நானும் அங்ஙனம் செய்யலாமென்றால் எனக்கு புதல்வியும் இல்லை. அந்த அலியாரும் இல்லையே...''

என ஏக்கப் பெருமூச்சு விடுகின்றார்கள்.

ஒருமுறை எனது நண்பர்களுடன் குளிப்பதற்குச் சென்றேன். குளிக்குமிடம் அறையாக இருந்தமையால் எனது நண்பர்கள் அனைவரும் நிர்வாணமாகக் குளித் தனர். ஆனால் நபிகளார் (ஸல்) அவர்கள் எப்போதுமே நிர்வாணமாக குளிக்க வில்லையே என்பதை மதித்து நான் துண்டு கட்டியவனாகக் குளித்தேன். அன்றைய

இரவில் ஒரு கனா தென்பட்டது. கனாவில் எனது பெயரைச் சொல்லி இனம் தெரியாத ஒருவர் என்னை விழித்து ''அஹ்மதே! உமக்கு நலம் உண்டாகுக. நீவிர் நபிகளாரின் செய்கையை மதித்து துண்டை அணிந்து குளித்தமைக்காக வல்ல அல்லாஹ் உமது பிழைகளை மன்னித்து விட்டான். அஃதன்றி உம்மை இந்த சமுதாயத்திற்கு இமாமாக (மார்க்கத் தலைவராக) ஏற்படுத்தி உள்ளான்' எனக்கூறினார். உடனே நீவிர் யாரோ?'' என நான் விபரம் கேட்ட போது ''நானா நான்தான் வானவர்கோன் ஜிப்ரயீல்'' என்றுகூறி மறைந்தார் அவர்.

என தனது அனுபவத்தைக் கூறி பெருமிதம் கொள்கின்றார்கள் இமாமுனா அஹ்மது பின் ஹன்பல் (ரஹ்) அவர்கள்.

புலைல் பின் இயாள் (ரஹ்) அவர்கள் ஒரு சமயம் உளு (அங்க சுத்தி) செய்திடும்போது நபிகளார் செய்து காண்பித்த ஒரேயொரு சுன்னத்தை விடுத்து உளு செய்து விடுகின்றனர். அன்றைய கனாவில் நபிகளார் அவரிடம் காட்சிதந்து ''புலைலே! ஈதென்ன புதுமை... இன்றைய உளுவில் எனது இன்ன சுன்னத்தை விட்டு விட்டீரே'' என அறிவுறுத்தியது கண்டு பதறியடித்துக்கண் விழித்த அப்பெருந்தை, உடனடியாக முழுமையான முறையில் உளு செய்து, முன்னர் தொழுத தொழுகையை மீண்டும் தொழுததோடு, விடுபட்டுப்போன அந்த ஒரு சுன்னத்திற்காக அன்றிலிருந்து நாளொன்றிற்கு ஐநூறு ரகாஅத்துகள் வீதம் ஒருவருடம் வரை தொழுது தனக்குத் தானே தண்டனை வழங்கிக் கொண்டார்களாம்.

அன்பரீர்! பார்த்தீர்களா மேற்கண்ட மா மனிதர்களின் நடவடிக்கைகளை.

இவர்களெல்லாம் ஏன் அங்ஙனம் செயல் பட்டனர்?

கண்ட, கண்ட ஆசை அலைகளிலே மூழ்கி தட்டுக்கெட்டுக் கொண்டிருக்காமல் 'இலட்சிய வாழ்க்கை' எனும்

கடிவாளம் கொண்டு ஆசையை அடக்கி அருள் பெற்றிடல் வேண்டும் என்ற பேரவாவைத் தவிர அவர்களின் எண்ணம் வேறெதுவாக இருந்திருக்க முடியும்?

சிந்திந்துப் பாருங்கள்.

இவை மட்டுமா? இன்னும் பாருங்களேன்.

உஹதுப்போரில் நபிகளார் (ஸல்) அவர்களின் பற்கள் எதிரிகளால் உடைக்கப்பட்டுப் போயின' எனக் கேள்விப் பட்ட உவைசுல்கரணீ (ரலி) அவர்கள் 'நபிகளாருக்கே பல் போய் விட்ட பின் அது நமக்கெதற்கு' என எண்ணி முதலில் வலப்பக்கத்தில் உள்ள தனது பற்களை உடைத்து கொண்டார். அதன் பின் ''ஓ...ஒருவேளை நபிகளாரின் இடப்பக்க பற்கள் உடைக்கப் பட்டிருக்குமோ...'' என எண்ணிய அவர் தனது இடப்பக்க பற்களையும் உடைத்துக் கொண்டார். அதன் பின் 'ஓ ... ஒருவேளை முன் பற்கள் உடைக்கப்பட்டிருக்கக் கூடுமோ...!' என்று எண்ணி தனது முன் பற்களையும் உடைத்துக் கொண்டார் அந்த மகாத்மா. என்றால் அப்பெருந்தகை 'நபிநேசர்' ஆவதில் எவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டார் பார்த்தீரா!

'அபூ யஜீதுல் பிஸ்தாமி' எனும் மல்யுத்த வீரர் ஒருவர் இருந்தார். அன்றைக்கு அவரே உலக வீரர். அந்த மல்லரை சாதாரணமான — எவ்வித தண்டியோ தரமோ இல்லாத பலஹீனரான — ஒரு மனிதர் போட்டிக்கு அழைத்தார். சவாலுக்கு மேல் சவால் விடுத்தார். தன் சவாலை ஏற்கவில்லல என்றால் 'உலகவீரர் விருதை' இழந்து விட வேண்டுமென எச்சரித்தார். ஆகவே வேறு வழியில்லாமல் அவரின் சவாலை ஏற்கும்படி நேரிட்டதால் வீரர் பிஸ்தாமி சவாலை ஏற்று, கோதாவில் இறங்கினார்.

மக்கள் வெள்ளம் கரைபுரண்டோடிய அச்சபையில் 'அட சண்டாளா! இவனுக்கென்ன கிறுக்கா பிடித்து விட்டது! பூனை கையில் சிக்கிய புழுவாக நெழியப் போகின்றானே பாவம். என்றெல்லாம், அனுதாபப் பேச்சுக் கள் பறிமாறிக் கொள்ளப்பப்பட்டுக் கொண்டிருக்கும் போதே, இருவரும் கை கலந்து விட்டார்கள். அந்நேரம்

பார்த்து அவரது காதில்'' பிஸ்தாமியே! நான் யார் தெரியுமா? நபிகளார் (ஸல்) அவர்களின் வழித்தோன்றலில் உள்ளவன் என்று கிசுகிசுத்தார் அந்த அப்பாவி பயில்வான். அவ்வளவு தான் தாமதம். பிஸ்தாமி கீழே விழுந்து தோல்வியை வலிந்து ஏற்றுக் கொண்டு விட்டார்.

ஏன் இப்படிச் செய்தீர் என்ற போது பெரு வீரர் பிஸ்தாமி, 'நான் நபிகளாரின் கொடி வழியில் தோன்றிய ஒரு மனிதரைத் தோற்கடித்து அதனால் எனது பெருமையை தக்க வைத்து கொள்ளலாம்தான். ஆனால் நாளைக் கியாமத்தில் நபிகளாரின் திருமுகத்தில் விழிக்க எனக்கு அருகதை ஏது?'' என்றாராம்.

சுப்ஹானல்லாஹ்...... நபிகளாருக்காக தன்மான உணர்வைக் கூட உதறித் தள்ளிய இந்த பிஸ்தாமி (ரஹ்) அவர்களெங்கே, நாமெங்கே?

வல்லூறு எவ்வளவுதான் உயர உயரப் பரந்தாலும் வானத்தை எட்டித் தொட்டுவிட அதனால் முடியவே முடியாது. அல்லவா?

இந்தப் பேருண்மையினை அந்த மனிதப் புனிதர்கள் முற்றாக உணர்ந்திருந்த காரணத்தால்தான் தங்களின் இச்சைகளை அடக்கி, ஒரு கட்டுக்குள் கொண்டு வந்து விண்ணுக்கும் மண்ணுக்கும் நாயகராம் எம்பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் காட்டித் தந்த இலட்சிய எல்லைக்குள் வெற்றி வலம் வந்தனர்.

அதனால் 'இறைநேசர்கள்' எனும் புகழாரத்திற்கும் உரித்தாயினர்.

மற்றும் சிலரோ மன்னர் நபியுல்லா அவர்களின் திருமுக தரிசனத்தைக் காண்பதிலே தங்களின் ஆசைக் குதிரையை முடுக்கிவிட்டு முக்தி பெற்றனர்.

அங்கனம் அண்ணலாரின் கிடைப்பதற்கரிய திரு காட்சியை நினைத்து நினைத்து புலம்பித் தவிக்கும் பித்தர்களாகத் திரிந்த எத்தனையோ உத்தமர்களைச் சரித்திரச் சாலைகளிலே நம்மால் பாரக்க முடிகின்றது.

அத்தகு பித்தர்களில் வித்தகராக ஏற்றம் கண்டவர் தான் சிந்தைக்கினிய சீறாவைப் படைத்த உமறுப் புலவர்.

அவர் புலம்பித் தவிக்குப் பாங்கைப் பாருங்களேன்.

பூவினிற் சிறந்த மக்கமா புரத்தில்
புகழுடன் சிறந்த நாயகரை
காவினிற் சிறந்த பதிமதீனாவிற்
கதியரசி யற்றிடும் வேந்தை
பாவினிற் சிறந்த பாவகம் புனைந்த
பையலுக் கருள் நபி மஹ்மூதை
நல்லுற வென்று காண்குவனே

## பொய்மானைத் தேடியலைந்த பூசிரி

ஆசை அலைகளிலே அலைக்கழிந்து மோசம் போய் விட்ட பிர்அவ்னு, காரூன், ஷத்தாது போன்ற கருகிய மொட்டுகள் ஒரு பக்கமும்;

ஆசைக்கு அணையிட்டு நபி நேசத்திற்கு நீர்பாய்ச்சி 'இறைநேசம்' எனும் பலன்களை அறுவடை செய்த அருளாளர்களான முஹ்யித்தீனிப்னு அறபி, அஹ்மதிப்னு ஹன்பல், புலைலுப்னு இயாள், உவைசுல்கரணீ அபூயஜீதில் பிஸ்தாமி (ரஹ் அலைஹிம்) போன்ற மணம் வீசும் வாடா மலர்களை மறு பக்கமும் கண்டு வியப்பும் வேதனையும் அடைந்து கொண்டிருக்கும் நமக்கு இடைப்பட்ட சில வௌவால் மனிதர்களும் தென்படுகின்றார்கள்.

இத்தகு வௌவால் மனிதர்களின் வரிசையில் இருந்தவர்தான் புர்தா பனுவல் புனைந்த பெரும் புலவர் ஷர்புத்தீன் முஹம்மதுல் பூசிரி (ரஹ்) என்பவரும்.

அவர் புலமையில் பழமை பெற்றிருந்தும் கூட இலக்கியத்தைப் படைக்க, இலக்கை அடைந்திட, இலட்சியத்தை இலங்கச் செய்திட என்றில்லாமல்.

கைவிட்டுக் கைமாறி பைவிட்டுப் பை மாறும் பொய்மானைச் சம்பாதிப்பதிலேயே தனது திறமைகளை வீணடித்துக் கொண்டிருக்கிறார்.

தூண்டிலில் மாட்டிக் கொண்ட பின்புதான் ''ஆகா! அவன் சொன்னானே கேட்டோமா...? என தூண்டில் மீன் எண்ணி எண்ணி வருந்துமாம் அதுபோல 'பச்சை வாதம்' எனும் விதியின் கோரப்பிடி பிடித்த பிறகே உண்மையை உணருகின்றார் புலவர் பூசிரி.

பொய்மானைத் தேடி அலைந்த பேதமையை உணரு கின்றார்.

மெய்யைப் புகழ்ந்து மேன்மையினை அடைந்திட வேண்டிய தான், இதுவரை பொய்யைப் புகழ்ந்து புகழ்ந்து பாவச் சேற்றில் மூழ்கிப் போய் விட்ட பேதமையை உணருகின்றார்.

ஆனாலும் வாய்ப்பு நழுவி விட வில்லையே.

ஆமாம். அதனையும் உணருகின்றார் பூசிரி.

ஆகவே எஞ்சியுள்ள கொஞ்ச காலத்தையாவது நின்று நிலைத்து நீர்ப்பயனைத் தரவல்ல இலட்சிய வாழ்க்கையாக வாழ்ந்திட நாடுகின்றது அவரது ஆசை.

நீர் சுரக்கின்றது அவரது நாவில்!

சலனம் தட்டுகின்றது அவரது இதயத்தில்!

கடைக்கண் சுழலுகின்றது!

ஆகவே; 'வந்தது வரட்டும்' என தைரியத்தை வர வழைத்துக் கொண்டு வரிந்து கட்டுகின்றார்.

ஆனால்;

அவளோ, பெரிய இடத்துப் பெண். ஏற்கனவே குடும்பப் பகைவேறு. ஆனாலும் இதயத்தால் நினைத்து விடுகின்றான் அவன்.

இந்தக் காதலன் தனது காதலை வெளிப்படுத்த எவ்வளவு சிரமப்பட வேண்டி வரும்?

அவனது நிலையில் தான் புலவர் பூசிரி அப்போது காணப்படுகின்றார்.

'என்ன ஆகுமோ எது நேருமோ' என்ற அச்சம் அவரை வாட்டுகிறது. 'ஏற்பாரோ? அல்லது எரிந்து விழுவாரோ? அல்லது ஏறெடுத்தும் பாராதிருப்பாரோ? என்ற வேதனை கலந்த வெட்கம் அவரைத் திக்கு முக்காடச் செய்கின்றது.

ஆகவே; தனது மெய்க்காதலை-மெஞ்ஞானக் காதலை முஹம்மது (ஸல்) அவர்கள் பால் தான் கொண்டுள்ள பேரின்பக் காதலை நேரடியாக வெளிப்படுத்திட இயலாமல் மறைமுகமாக உறுப்புகளின் உணர்வுகளால் இதோ வெளிப்படுத்துகின்றார்.

சுவைமிகுந்த அந்த ஊடலைப் பாருங்களேன்.

أَمِنْ تَذَكُّرِ جِيرَانٍ بِذِي سَلَمِ
مَزَجْتَ دَمْعًا جَرَى مِنْ مُقْلَةٍ بِدَمِ (١)

**அமின்த்ததக்குரிஜீ ரானின்பி - தீசலமி**
**மஜஜ்த தம்அன்ஜரா மிம்முக்லதின்பிதமி**

நண்பா! நீ 'தீசலம்' எனும் அயலகத்தாரை நினைந்தா நின் விழியால் இரத்தம் தோய்ந்த செந்நீரைச் சிந்துகின்றாய்...?

இதனை —

தீசலத்தயல்மனையைச் சேர்ந்தோர் தமைநினைந்தோ?
நீ சலத்தினோடிரத்தம் நின்விழியால் சிந்துகின்றாய்

என பெரும்புலவர் மறைக்காயர் பாடி பரிண மிக்கிறார்.

வி-ரை : இதில், தீசலம் என்பது நபிகளார் முஹம்மது

(ஸல்) அவர்களைக் குறிக்கின்றது.

எப்படி என்பீர்,

'தீ சலம்' என்ற அறபி வாக்கிற்கு
'காணிக்கை செலுத்துபவர்' என்றும்;
'ஈடேற்றமளிப்பவர்' என்றும்;
'சாந்திக்குச் சொந்தக்காரர்' என்றும்;
'விடுதலை விரும்பி' என்றும்,
'அடைக்கலம் கொடுப்பவர்' என்றும்
பல பொருள்கள் விரிகின்றன.

நபிகளார் முஹம்மது (ஸல்) அவர்கள் மிஃராஜ் வைபவத்தில் வல்லவனாம் அல்லாஹ்வை நேருக்கு நேர் என்ற முறையில் கண் கூடாகக் கண்டபோது;

அத்தஹிய்யாத்து: காணிக்கைகள் அனைத்தும் லில்லாஹி: அல்லாஹ்விற்கு மட்டுமே சொந்த மாகும். வஸ் ஸலவாத்து: உடலால் ஏற்படவல்ல வணக்கங்கள் அனைத்துமே

வத் தொய்யிபாத்து: பொருளால் ஏற்படவல்ல வணக்கங்கள் அனைத்துமே அல்லாஹ் ஒருவனுக்கு மட்டுமே சொந்தம்.

என, பொருள் பொதிந்த புகழ்ச்சியினைக் காணிக்கை யாகச் சேலுத்திச் சிறந்தார்கள்.

உருவோ, வேறு எவ்வித மருவோ அற்ற அல்லாஹ் விற்கு படைப்பினங்களின் எவ்வித படையல்களோ, பலியோ இம்மியும் தேவையற்ற தெய்வமான அல்லாஹ் விற்கு நந்நபிகளார் எவ்வளவு பொருத்தமான காணிக்கை தனைச் செலுத்தியுள்ளார்கள் பார்த்தீர்களா?

இப்படி, ஏக தெய்வத்தன்மையை பிரதிபலிக்கும் காணிக்கையை வேறு எவரால் சமர்ப்பித்திருக்க

முடியும்......?

ஆகவே 'தீ சலம்' அதாவது 'காணிக்கை செலுத்துபவர்' எனும் காரணப் பெயர் நமது நபிகளாருக்கு மட்டும் சொந்தமாகி விடுகின்றது.

நாளை மறுமைநாள் நீதி விசாரணையின்போது அகிலத்தில் அவதரித்த அனைத்து தீர்க்கதரிசிகளும் ''யா நஃப்ஸீ...'' என ஒதுங்கிக் கொள்ளும்போது, நமது நபிகளார் முஹம்மது (ஸல்) அவர்கள் மாத்திரம் ''யா உம்மத்தீ... யா உம்மத்தீ'' என, தங்களது சொந்த சமுதாயமான நம்மவரை ஆதரித்து அரவணைத்து வல்லவனாம் அல்லாஹ்விடம் மன்றாடி, மன்றாடி உம்மத்துக்கள் அனைவருமே சொர்க்கபதி ஏகிட மிகுந்த அக்கறை எடுத்துக் கொள்வார்கள்.

ஆகவே 'தீசலம்' அதாவது 'ஈடேற்றமளிப்பவர்' எனும் காரணப்பெயர் நமது நபிகளார் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு மிகப்பொருத்தமானதாக மிளிர்கின்றது.

அகிலத்தில் இஸ்லாமியமொன்றே சாந்திமார்க்கமாகும். அந்த சாந்தி மார்க்கத்தை சம்பூரண சன்மார்க்கமாக ஒளிரச் செய்த பெருமை நமது நபிகளார் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு மாத்திரம்தான் சொந்தம் என்பதனை,, ( ந ந் ந பி யே ! ) அல்லாஹ்வாகிய நான் உங்களுக்கு, உங்களுடைய மார்க்கத்தை இன்றைய தினம் பரிபூரணமாக்கி வைத்து விட்டேன். இஸ்லாம் மார்க்கத்தையும் தேர்ந் தெடுத் து உங்களுக்கு அருட்செய்து அங்கீகரித்துக் கொண்டேன். குர் : 5;3

என்று; அல்லாஹ்வே தனது தத்துவத் திருமறையில் சான்று பர்கந்திருகிருக்கும் போது வேறு எவரால் அதனை மறுக்க முடியும்?

ஆகவே 'தீசலம்' அதாவது 'சாந்திமார்க்கத்தின்

சொந்தக்காரர் எனும் காரணப்பெயர் நமது நபிகளாருக்கு மாத்திரமே உரிமையாகி விடுகின்றது.

மறுமை நாளின் நீதி விசாரணைக்குப்பின் நரகில் வீழ்த்தப்பட்ட பாவிகளான, தங்கள் உம்மத்துகள் சம்பந்தமாக வல்லவனாம் அல்லாஹ்விடம் முறையிட்டு கெஞ்சிக் கெஞ்சி மன்றாடி அவர்களுக்கு விடுதலை பெற்றுத் தரும் வரை ஓய்ந்திருக்க மாட்டார்கள்.

அஃதன்றி;

அகிலத்தில் அடிமை விலங்கை ஒடித்து ஏற்ற தாழ்வற்ற சமுதாயத்தைச் சமைத்துக்கொடுத்த ஆடலேறு நமது நபிகளார்

இழி பிறவிகளாக நடாத்தப்பட்ட பெண்களை சமுதாயத்தின் கண்களாக உயர்த்திய உத்தமர் நமது நபிகளார்.

பணநாயகத்தை மண்கவ்வச் செய்து ஜனநாயக தத்துவத்தை மணம் கமழ செய்த செயல்வீரர் நமது நபிகளார்

அறியாமையினை அடியோடு வீழ்த்தி அறிவுடைமை தனை அரியாசனம் ஏற்றி வைத்த அறிவுலகமேதை நமது நபிகளார்.

மூட நாற்றமடிக்கும் மூடப்பழக்க வழக்கங்களை ஓட ஓட விரட்டி சுயமரியாதைச் சுடரை பரிணமிக்கச் செய்த பகுத்தறிவுப் பகலவன், நமது நபிகளார்.

ஏழைத்தொழிலாளர் வர்க்கத்தைச் சுரண்டிச் சுரண்டிக்கொழுத்து வந்த முதலாளி வர்க்கத்தை முறியடித்து 'உறவுக்குக் கை கொடுப்போம் உரிமைக்குக் குரல் கொடுப்போம்' எனும் தொழிலாளர் தத்துவத்தை அரங்கேறச் செய்திட்ட பைகம்பர், நமது நபிகளார்.

மதங்களின் பெயராலும் கடவுளர்களின் பெயராலும் பரவி விரவிப்போய்கிடந்த துவேசங்களையெல்லாம் இல்

லாமையாக்கி 'உலக மக்கள் யாவரும் ஒருவர் பெற்ற மக்களே' எனும் சமதர்மச் சித்தாந்தத்தை உள்ளமை யாக்கிய செம்மல், நமது நபிகளார்.

ஆகையினால் 'தீசலம்' அதாவது விடுதலை விரும்பி எனும் காரணப்பெயர் நமது நபிகளாருக்கு மாத்திரம் சொந்தமான சிறப்பாகப் பரிணமிக்கின்றது.

உலகியலில் நீதிநேர்மை மனித தர்மம் சட்டவாழ்க்கை ஆகிய நல்லியல்புகளை வாழ்கைத் தத்துவமாக நிலை நாட்டிய பெருமை நமது நபிகளார் (ஸல்) அவர்களுக்கு மாத்திரமே சொந்தமாகும்.

மௌட்டீகம், தடியெடுத்தவனெல்லாம் தண்டல் காரனாகும் கயமை, நினைத்தவன் நினைத்தபோது நினைத்தவளைப் பெண்டாளும் காமவெறி, மதுவருந்தி மதிகெட்டு பஞ்சமா பாதகங்களையெல்லாம் பெருமைக்குரிய சாதனைகளாகக் கருதும் மிருகத்தன்மை போன்ற பேரா பத்துகளிலிருந்து மனித சமுதாயத்தைத் தடுத்து நிறுத்தி 'இஸ்லாம்' எனும் சரணாலயத்தின் பக்கம் அவர்களை ஈர்த்திழுத்த நல்லவழி காட்டி, நமது நபிகளார்.

ஆகவே 'தீசலம்' அதாவது 'ஆபத்துக்களில் அபய மளிப்பவர்' எனும் சிறப்பு அண்ணல் நபியுல்லா அவர் களுக்கு மிக மிகப் பொருத்தமான அணிகலனாக ஒளிர் கின்றது. ஆகவேதான் இலக்கியச் செல்வரான பெரும் புலவர்பூசிரி (ரஹ்) அவர்கள் முஹம்மது (ஸல்) அவர் களை'தீசலம்' என இலக்கியச்சுவையோடு குறிப்பிடு கிறார்.

எவ்வளவு பொருத்தம் பார்த்தீர்களா!

இந்தப் பேருண்மைகளை உய்த்துணர்ந்த கவிக்கோ பூசிரி அவர்கள் பதவிப் பவிசுகளில் பஞ்சனைச் சுகங்களி லெல்லாம் சிதறிப்போய்க் கிடந்த தனது கவனத்தைத்

திசை திருப்புகின்றார்.

ஆஹா... இத்துணை காலங்களாகக் கானல் நீரைக் கண்டல்லவா நாவைச் சுழற்றி, சுழற்றிச் சப்புக் கொட்டிக் கொண்டிருந்துள்ளோம் ஆனால் இதுவன்றோ தாக சாந்தியளிக்கும் உண்மைச் சுனை நீர் என அவரின் மனசாட்சி அவரை இடித்துரைக்கின்றது.

ஆனால், காலம் கடந்து காய்த்துள்ள தனது இந்தக் காதல், கனியுமோ அல்லது கனியாது கண்டிப்போகுமோ என்ற தாபம் மேலிடுகின்றது. அவருக்கு.

''ஒருவேளை இந்தக் காதல் நிறைவேறாது போய் விட்டால்...'' என அவரது பிள்ளை மனம் ஒருகணம் நினைக்கின்றது.

அப்படியொரு ஏமாற்றத்தை நினைத்துப் பார்க்கக்கூட அவருக்கு மனவலிமை இல்லை போலும். ஆகவே அவரது கண்களிலிருந்து செந்நீர் கண்ணீராகக் கொப்பளிக்கின்றது. அவரின் இந்த அவலநிலையினை எப்படியோ கவனித்து விட்ட அவரது நண்பன்—

''நண்பா! முஹம்மது நபி (ஸல்) எனும் அயலகத்தாரை நினைந்தா இப்படி இரத்தக்கண்ணீர் வடிக்கின்றாய்'' என உள்ளக் கிடக்கையில் ஒளிந்து கொண்டிருக்கும் உண்மையைப் பகிரங்கப் படுத்துகிறான்.

ஆமாம்... நண்பன் இப்படி தன்னைக் கேட்பதாகச் சித்தரித்துக்காட்டி அதன் மூலம் தனது இதய ஆசையின் அளவிட முடியாத வேகத்தை நமக்கு எடுத்துக் காட்டுகின்றார். பூசிரிப் பெரு மகனார்.

எப்படி அவரின் பயிலித்தனம்...

'நாடு' என்ற அமைப்பில் இல்லாவிட்டாலும், மொழி அடிப்படையில் நபிகளாரும் தானும் ஒன்றிணைவதால் நபிகளாரை 'அயலகத்தார்' எனக்கூறி தனக்கும் நபிகளா

ருக்குமுள்ள இடைவெளிச் சுருக்கத்தை எண்பித்துக்காட்டி கொஞ்சம் ஆறுதல் அடைகின்றார்.

தனது இதய வேத்தரைப் பெயர் சொல்லிக் குறிப்பிட்டால் அது மரியாதைக் குறைவாகப் போய்விடக்கூடும் என்பதால் 'தீசலம்' என்றும் 'அயலகத்தார்' என்றும் குறிப்பிடும் புலவர்பூசிரி அவர்கள் அடுத்தும் அதே பாணியைக் கையாளுகின்றார் பாருங்களேன்.

---

أَمْ هَبَّتِ الرِّيحُ مِنْ تِلْقَاءِ كَاظِمَةٍ
وَأَوْمَضَ الْبَرْقُ فِي الظَّلْمَاءِ مِنْ إِضَمِ ٢

**அம்ஹப்பத்திர்ரீஹு மின் தில்காயி**
**-காளிமத்தின்**
**வ அவ்மளல்பர்க்குபிள் ளல்மாயி**
**-மின் இளமி**

அல்லவெனில், 'காழிமா' எனும் திசையிலிந்து தென்றல் காற்று வீசியதா அல்லது ‚இழம், எனும் இடத்துள் மண்டிப்போயுள்ள இருளில், மின்வெட்டி ஒளிர்ந்ததா?

---

இதனை—

அல்லவெனில்காழிமத்தின் திசைக்காற் றடித்ததுவா?
அல்லதிழம்நின்றிருளில் அவிருமின்னல் வெட்டியதா

என மறைக்காயர் பாடுகின்றார்.

(வி-ரை) 'காழிம்' என்றால் 'தாகம் கொண்டவர்' என்று பொருள்.

'மனித சமுதாயம் புனித சமுதாயமாக மிளிர்ந்திட வேண்டும்' என்ற, தாகம் வழிகாட்டிகள் எனப்படுவோரில் பலருக்கு இருக்கத்தான் செய்தன.

ஆனால்; மிக வேகத்துடன் கூடியஅத்தகு தாகமும் அந்த தாகத்திற்காக தனது உடல் பொருள் ஆவியனைத்தையும் தத்தம் செய்து அதில் வெற்றிவாகை சூடிய விவேகமும் நமது நபிகளார் (ஸல்) அவர்களுக்கு மாத்திரமே சொந்தமானதாக இருந்தது கண்கூடு.

'சக்ராத்' எனும் மரண அவஸ்தையின் போது அந்த கடைசி மூச்சிலும் கூட-தங்களது சமுதாயமக்களுக்கு பாவமீட்சியைப் பெற்றுத்தருவதற்காக மிகுந்த கவனம் செலுத்தி ''உங்களது உம்மத்துக்களில் உள்ள அனைவருக்காகவும்-அவர், அவரின் உயிர் தொண்டைக் குழியை எத்திடும் கடைசித் தருணம் வரை 'தவ்பா' எனும் பாவ மீட்சி கோரும் தலைவாசலை திறந்து வைக்கப்படும்'' என்ற வாக்குறுதியை வல்லவனாம் அல்லாஹ்விடம் மன்றாடி மன்றாடிப் பெற்றுத்தந்த பின்பே அத்த அஹிம்சாவாதியின் உயிர் சாந்தியடைந்தது—என்றால்

மனித சமுதாயம் புனிதம் பெற்றுய்ய வேண்டுமென்பதில் அந்த மனிதப் புனிதருக்கு எந்த அளவு கரிசனம் இருந்திருக்க வேண்டும் என்பதை நம்மால் சிந்தித்துணர முடிகின்றது. அல்லவா

—ஆகவே;

'காழிமா' அதாவது 'தாகம் கொண்டவர்' என்ற மகத்துவத்திற்கு நமது நபிகளார் அவர்களே பாத்தியதை உள்ளவர்கள் என்பதை எவரால் மறுக்க முடியும்......?

இஃதன்றி 'காழிமா' என்பதற்கு கீழ்வரும் கருத்தும் கொள்ளப்படுகின்றது.

'காழிமா' என்பது மதீனா மாநகருக்கு அருகிலுள்ள

நபி (ஸல்) அவர்களின் வாழ்வுடன் சம்பந்தப்பட்டதொரு நீரோடையாகும். 'இழம்' என்பது அங்குள்ள மரங் காடர்ந்த இருள்சூழ்ந்த ஒரு மலைக் குன்றின் பெயராகும்.

'காழிமா' என்னும் நீரோடைக் காற்று, முஹம்மது (ஸல்) அவர்களின் கஸ்தூரிவாடைக்கு உவமையாகும்.

'இழம், என்னும் புதர்கள் அடர்ந்த இடத்தில் கும்மிருளில் வழிதெரியாது செய்வதறியாது எந்த நேரத்தில் எந்த வன விலங்குகளின் தாக்குதலுக்கு உள்ளாக நேருமோ? என்று உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கின்றான் வழிப்போக்கன் ஒருவர். அந்நேரத்தில் மின்னல் வெட்டி ஒளிக்கீற்றுகள் பளிச்சிட்டால்......!

அது போலவே தீயவழி எனும் இருளில் சிக்கித் தவித்த மனித குலத்திற்கு, வழிகாட்டும் ஒளியாக அண்ணல் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் தோன்றினார்கள்.

இதனைத்தான் இமாம் பூசிரி அவர்கள் தமக்கே உரித்தான இலக்கிய மணத்தோடும், உவமை நயத்தோடும், 'இருள் சூழ் உலகிற்கு' இழமெனும் மலைப்புதரின் இருளையும்; வழிகாட்டும் ஒளிவிளக்கான 'வள்ளல் நபி (ஸல்) அவர்களுக்கு' இடர்பாடான அவ்வேளையில் ஒளிகாட்டி வழிகாட்டும் மின்னொளியையும், ஒப்பிட்டுக் கூறியுள்ளார்

கருத்துரை: அன்றி, கற்பூரவாசம் கமழும் காமில் நபியவர்களின் நறுமணம் வீசிற்றா? அல்லது இருள்சூழ் உலகிற்கு ஒளி விளக்காகத் திகழும் நூர் முஹம்மது (ஸல்) அவர்களின் ஒளிக்கீற்றுகள் பளிச்சிட்டனவா? இதனால் தான் உன் இமைகள் நீரை சிந்துகின்றனவோ

## ஆசை அம்பலமாகிறது!

ஆசை அலைகளில் சிக்கியவன், காதல் வயப்பட்ட காதலர் ஆகியோர், தம் உள்ளத்தில் ஒழிந்து கொண்டிருக்கும் ஆசையை—காதலை உற்ற நண்பர்களிடம் கூட

எளிதில் வெளிக்காட்ட மறுப்பர். எவ்வளவுதான் வேண்டி கேட்டாலும், 'இல்லையென்றே' சாதிப்பர். அவ்விதம் அதனை மறைப்பது மனித இயற்கையும் கூட.

ஆனால் 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பதற்கொப்ப, அவன் தன் உள்ளக்கிடக்கையை எவ்வளவு தான் மறைத்தாலும், உள்ளத்தின் அடிதளத்தில் ஒழிந்து கொண்டுள்ள அந்த ஆசைக்கு—காதலுக்குச் சில அறிகுறிகள், மறுக்க வியலாத சில தடயங்கள்-உள்ளங்கை நெல்லிக்கனி போல் - வெளிப்படையாகத் தெரிந்து விடும் அத்தடயங்களைச் சுட்டிக் காட்டுகையில் வேறு வழியின்றி உண்மையைக் கக்கும்படி நேரிடும்.

இப்படித்தான் காதல் ரகசியங்கள்-ஆசையின் ஒசைகள் அம்பலத்திற்கு வருவது வழக்கம். உலகத்தின் பொதுவான இந்த வழக்கத்திற்கு நம் 'ஆஷிகே ரசூல்' மட்டும் மாறுபட முடியுமா என்ன?

அதனால்தான் உயிருக்கும் உயிரான உற்ற நண்பன் உண்மையினை உரைக்கும்படி கேட்டபோது, தன் ஆசையை - அருமை நபிமீது தான் கொண்டுள்ள காதலை மறைக்கின்றார்; முகக் குறிப்பால் மறுக்கவும் செய்கின்றார்.

ஆனால் நண்பன் நாலும் தெரிந்தவானகையால் இதோ அவரின் உறுப்புக்களில் பிரதிபலிக்கக் கூடிய காதல் தடயங்களை கட்டவிழ்த்து விடுகிறான் பாருங்களேன்.

فَمَا لِعَيْنَيْكَ إِنْ قُلْتَ اكْفُفَا هَمَتَا
وَمَا لِقَلْبِكَ إِنْ قُلْتَ اسْتَفِقْ يَهِمِ ٣

**ஃபாமலிஐனைக்க இன் குல்தக்ஃபு**
**-ஃபாஹமத்தா**
**வமாலிகல்பிக்க இன் குல்த்தஸ்த்த**
**-ஃபிக்யஹிமி**

[உள்ளக்கிடக்கையினை வெளியிட மறுக்கும் நண்ப] அழுகையினை நிறுத்து' என நீ உன் கண்களுக்கு (எத்தனை தடவை) எடுத்தோதினாலும், அவை உன்னையும் மீறி மீறி கண்ணீரை மடை திறந்த வெள்ளம்போல கொட்டுகின்றனவே! (நீ மறுப்பது போல காதல்நோய் உனக்கில்லையெனில்) உன் கண்களுக்கு வேறு என்ன நேர்ந்தது —? (அது மட்டுமா) தெளிவு பெறு' என நீ உனது உள்ளத்தை எவ்வளவுதான் சமாதானப்படுத்தினாலும் அது அலை மோதுகின்றதே? அது ஏன்? சொல், நண்பா சொல்.

இதனை

'அழாதே' என்றால் சொரிநின் அருள்விழிக்கு
நேர்ந்ததென்னே
'வாழாது தெளிவாய்! எனிலோ மனங்கலங்க
- நேர்ந்தென்ன?

என மறைக்காயர் பாடிக்காட்டுகிறார்.

أَيَحْسَبُ الصَّبُّ أَنَّ الْحُبَّ مُنْكَتِمٌ
مَا بَيْنَ مُنْسَجِمٍ مِنْهُ وَمُضْطَرِمِ ④

**அயஹ்ஸபுஸ்ஸப்புஅன் னல்ஹுப்ப**
**- முன்கதிமுன்**
**மாபைனமுன்ஸஜிமின் | மின்ஹு**
**- முள்த்தரிமி**

வாதனையால் வெந்துருகும் மனம்; வரை படம் வரையும் கண்ணீர் ஆகிய தடயங்களிருக்க, துளிரும் காதலை மறைந்திட முடியும் என்று கருதினனோ, காதல் மணவாளா?

இதனை
வாதனைத்தீ நெஞ்சினுள்ளே வடியும்நீர்
- கண்ணினுள்ளே
கருதினனோ காதலனே? காதல் மறையுமென்று
என மறைக்காயர் பாடிக் காட்டுகின்றார்.

لَوْلَا الْهَوَى لَمْ تُرِقْ دَمْعًا عَلَى طَلَلٍ
وَلَا أَرِقْتَ لِذِكْرِ الْبَانِ وَالْعَلَمِ ⑤

**லவ்லல்ஹவாலம்துரிக் தம்அன்**
**அலாதலலின்**
**வலாஅரிக்(த்)தலிதிக் ரில்பானி**
**வல்அலமி**

[உனக்கு] காதல் நோய் இல்லாவிடின் வெறும் குட்டிச் சுவற்றை நினைத்து [இவ்வளவு தூரம்] கண்ணீர் வடித்திருக்க மாட்டாய் ! குளிர் மா மலையினையும்; அதில் அடர்ந்திருக்கும் செடி கொடிகளையும் நினைத்து கண் விழித்திருக்கவும் மாட்டாய்.

இதனை—

காதலின்றேல்பாழ்வீட்டைக் கருதிக்கண்ணீர்
- வடிக்காய் !

சீதமலையோடதைத்சேர் செடி நினைந்து நீ
- விழிக்காய்

என மறைக்காயர் பாடிக் காட்டுகின்றார்கள்.

فَكَيْفَ تُنْكِرُ حُبًّا بَعْدَ مَا شَهِدَتْ
بِهِ عَلَيْكَ عُدُولُ الدَّمْعِ وَالسَّقَمِ ④

ஃபகைஃபதுன் கிருஹுப் பன்பஃத
மாஷஹித்த்
பிஹி அலைக்க உதூ லுத்தம்இ
வஸ்ஸகமி

[செந்நீராய் ஓடும்] கண்ணீரும், தூக்கம் பிடிக்காமல் அல்லல்படும்] நோயும் அந்தக் காதல் பற்றி சாட்சியம் அளித்த பின்னும் உன்னால் காதலை எங்ஙனம் மறுத்திட முடியும்?

கண்ணீரும்நோயும்உன்னைக் காட்டிக் கொடுத்த
- பின்னும்

உண்ணீர்மைக்காதலினை ஒளிக்க முடியாதுனக்கே

எனப் பாடிக் காட்டுகின்றார். மறைக்காயர்.

وَأَثْبَتَ الْوَجْدُ خَطَّيْ عَبْرَةٍ وَضَنًى
مِثْلَ الْبَهَارِ عَلَى خَدَّيْكَ وَالْعَنَمِ ⑦

வஅத்பதல்வஜ்துகத் தைஅப்ர
-தின்வளனா
மித்லல்பஹாரிஅலா கத்தை (க்)க
-வல்அனமி

வசந்தகாலச் சூரிய ஒளிபோன்று உனது கண்ணாடிக்) கன்னங்களில் பிரதிபலிக்கும் மஞ்சள் நிறமும்; வரிசை, வரிசையாக வளர்ந்தோங்கி நிற்கும் செம்பன்னீர் மரக்காட்சி போன்று, உனது கன்னங்களில் பதிந்திருக்கும் கண்ணீர் ரேகையும் உனது (உள்ள) வேட்கையை படம்பிடித்துக் காட்டுகிறதே.

இதனை—
பருவவசந்தம்இடைப் பகலோன்ஒளி நிறம்போல்
மருவுசெம்பன்னீர்மரத் தின்வரிசைதருங் காட்சியைப்போல்
உருகும்மனத்துயரம் உன்கதுப்பில் மஞ்சள்நிறம்
பெருகிரத்ததாரைவிழி மெய்குறியும் நாட்டியதே!
என பாடுகின்றார் மறைக்காயர்

## உற்றுதுரைத்தல்

அமைதியின்மை, உறக்கம் பிடிக்காமை, கண்ணீரை நிறுத்த முடியாமை போன்ற மறுக்க முடியாத தடயங்களை எடுத்துக்காட்டி உள்ளத்துள் ஒழித்துகொண்டுள்ள

காதலை அம்பலப்படுத்திவிட்ட நண்பனின் வாதம், நம் ஆஷிகே ரசூலை அதிரவைத்து விட்டது போலும் ஆகவே, இனியும் தனது நிலையை மூடிமறைத்துப் பயனில்லை என்றெண்ணி உண்மை நிலையை இதோ ஒப்புகின்றார்.

نَعَمْ سَرَى طَيْفُ مَنْ أَهْوَى فَأَرَّقَنِي
وَالْحُبُّ يَعْتَرِضُ اللَّذَّاتِ بِالْأَلَمِ ٨

**நஅம்சராதைஃபுமன் அஹ்வா**
**ஃபஅர்ரகனீ**
**வல்ஹுப்புயஃதரிழுல் லத்தாத்தி**
**-பில்அலமி**

ஆம் (நண்பா! ஆம்) என் காதலரின் நினைவு) இரவு காலங்களில் தோன்றித் தோன்றி என்னை உறங்க விடாமல் செய்து விட்டது (உண்மைதான்) காதல் மற்ற எல்லா இன்பங்களிலும் குறுக்கிட்டு துன்புறத்தவே செய்யும்.

இதனை—

அன்பர் நினைவிரவில் அடுத்துறக்கம் அற்றனன்மெய்
இன்பநிலையிலன்பு இடைமறித்துத் துன்புறுத்தும்

என இதயம் வெதும்பிப் பாடுகின்றார் மறைக்காயர்.

வி-ரை : தனக்கு தாஹா நபி (ஸல்) அவர்களின் மீது ஏற்பட்டுவிட்ட தணியாத ஆசை காரணமாக உண்டி, உறக்கம் வெறுத்துத் தள்ளி, தன்னுடல் மெலிந்து போய் விட்டது என்ற உண்மையை ஒப்பும் ஆஷிகேரசூல் அதையடுத்து ஒரு தத்துவத்தையும் இங்கே எண்பித்துக் காட்டுகின்றார்.

ஆதவது—

காதல் வயப்பட்டவன், இராக்காலங்களில் இலேசான இளம் தூக்கத்தில், தன் காதலியுடன் கொஞ்சிக்குலாவு தல் போன்ற கற்பனையில் திளைத்து நிற்கும்போது 'தன் காதல் கைகூடாது போய்விடுமோ, என்ற ஏக்கம் கவலையாக மாறி திடுக்கிட்டு எழுந்து விட்டால், அதே கவலையால் மீண்டும் தூக்கம் பிடிக்காமல் அல்லற்படுவது எல்லாவகைக் காதலர்களுக்கும் ஏற்பட்டுவரும் பொது வான வழக்கமாகும்.

இதைத்தான்—

காதலாகின்றது தூக்கத்தில் ஏற்படும் இன்பக் கற்பனைகளை தூக்கம்பிடிக்காமை எனும் துன்பம் கொண்டு குறுக்கீடு செய்யும் எனக்கோடிட்டுக் காட்டு கின்றார். (அஜ்ஹரி)

ஃ ஃ ஃ

ஆஷிகேரசூலின் காதல் இரகசியத்தை அவரின் வாயாலேயே கக்க வைத்துவிட்ட அந்த நண்பன் ஒரு 'நாத்திகன்' போலும்.

ஆதலால்தான்—

''நண்பா! பொன்னை நேசித்து; அதற்காக மன முறுகினால் அர்த்தமுண்டு.

மண்ணை நேசித்து அதையடைந்திட உன்னுடலை நீ வருத்தினால் எதிர்காலமுண்டு-

ஒரு பெண்ணை காதலித்து அவளுக்காக ஏக்க முற்றாலும் அந்தக் காதலுக்கு வலிமையுண்டு!

ஆனால் நீ, எங்கோ ஒரு மூலையில் எப்போதோ

வாழ்ந்து, மறைந்த, முஹம்மது நபி மீது பற்றுக் கொண்டு, அதற்காக ஊணைக் குறைத்து, உறக்கத்தை வெறுத்து, உன்னுடலை நீ வருத்திக் கொள்வதில் என்ன பயனை அடையப் போகின்றாய்?'' என்றெல்லாம் ஏசுகின்றான் ஆஷிகேரசூலின் இதயத்தில் அரும்பிவிட்ட புனித நபிக்காதலை எள்ளி நகையாடுகின்றான். நண்பனின் இந்த வசவைப் பொறுக்கமுடியாத நம் ஆஷிகேரசூல் அந்த நயவஞ்சகனான நண்பனுக்கு இப்படி அறிவுறுத்துகின்றார்.

---

يَا لَائِمِي فِي الْهَوَى الْعُذْرِيِّ مَعْذِرَةً
مِنِّي إِلَيْكَ وَلَوْ أَنْصَفْتَ لَمْ تَلُمِ (٩)

**யாலாயிமீ ஃபில்ஹவல் உத்ரிய்யி**
**-மஃதிரதன்**
**மின்னீ இலை(க்) வலவ் அன்ஸஃப்(த்)த**
**-லம் தலுமீ**

(என் புனிதக் காதலை அருத்த மற்றதாகக் கருதி) என்னைப் பழிப்பவனே! 'உத்ரி' கிளையின் காதலை யொத்த என் மெய்காதலை (அனுமதித்து விடு) உன்னிடம் நீதி (எனும் மனிதத்தன்மை) இருந்தால் (என்னை) நீ பழிக்க (முன்வர) மாட்டாய்.

---

இதனை —

என்னைப்பழிப்பவனே! என்னைவிட்டு நீங்கிடுவாய்!
மன்னும்உதுரிக்காதல் மதிப்பளிக்கத் தக்கதுவே!
இன்னும்என்றன்மெய்க்காதல் இயல்பதனை நீயுணர்ந்தால்
நின் இகழ்ச்சி கைவிடுத்து நீதி வழங்கிடுவாய்.

என இன்பத் தமிழில் பாடி இன்புறுகின்றார் நமது மறைக்காயர்.

வி-ரை : 'உத்ரி' என்பது எமன் நாட்டில் வாழ்ந்து மறைந்த சரித்திரப் பிரசித்தி பெற்றதொரு கிளையாரின் பெயராகும்.

இளகிய மனமும், நற்பண்புகளும் நிறையப் பெற்ற அக்கிளையாரில் உள்ள எவரேனும், ஏதாவதொன்றை நேசித்துவிட்டால். அவர் அதை அடையும் வரை கண்ணயர மாட்டார். தன் உள்ளத்து ஆசையைப் பூர்த்தி செய்ய எவ்வித தியாகத்தையும் செய்யத் தயங்கவும் மாட்டார். உயிரையும் அதற்காக தத்தம் செய்வாரே தவிர, எதிர்ப்பு கண்டு பதுங்கி ஓடி விட மாட்டார். காதல் விஷயத்தில் இத்தகு விடாப்பிடியான பிடிவாதம்கொண்ட உத்ரி கிளையாரின் காதலைப்போன்றதே தனது காதலும் என்பதை எடுத்துரைப்பதின் மூலம்;

தனக்கு, தாஹா நபி (ஸல்) அவர்களின்மீது ஏற்பட்டுவிட்ட (இஷ்கு) ஆசை, நண்பனுடைய ஏச்சுப் பேச்சுகளுக்குப் பயந்தோ, அன்றி வேறெந்த சந்தர்ப்ப சூழலினாலோ மாறாது- மறையாது', என தம் காதலை உறுதிப்படுத்துகின்றார்.

عَدَتْكَ حَالِيَ لَا سِرِّي بِمُسْتَتِرٍ
عَنِ الْوُشَاةِ وَلَا دَائِي بِمُنْحَسِمِ (١٠)

**அ.தத்கஹாலியாலா ஸி(ர்)ரீபி**
**-முஸ்ததிரின்**
**அனில்வுஷாத் திவலா தாயீபி**
**-முன்ஹஸிமி**

என் நிலை உனக்கும் ஏற்படட்டும்! என் (காதல்) ரகசியம் (கெட்ட எண்ணம் கொண்டு) சிண்டு முடிந்து விடும், சிநேகிதர்களை விட்டும் மறைந்ததன்று எனது காதல் நோய் (என்னைவிட்டு) அகன்று விடக் கூடியது மன்று.

இதனை -

என்கதியேநீயடைக! எனைத்தூற்று கின்றவரும்
நன்கறிவார்என்மருமம் நலிபிணியும் நீங்காதே!
எனப்பாடுகின்றார் மறைக்காயர்.

## காதல் தூதனின் அங்கலாய்ப்பு

பொதுவாக காதலன் காதலி என்றிருந்தால் நல்லெண் ணத்தோடு செய்திகளை பரிமாற்றம் செய்யும் காதல் தூதர்களும் இருப்பர். அதுபோன்றே காதல் தூதுவன் மாதிரி நடித்துக் கொண்டு அவ்விருவருடையே பிணக்கு களை வளர்த்துவிடும் காதல் துரோகிகளும் இருப்பர். அல்லவா?

அவ்விருவகைத் தூதர்களில் இரண்டாம் ரகத்தைச் சார்ந்தவன் போலும் ஆஷிகேரசூலின் நண்பன்

அதனால்தான், 'என் நிலை உனக்கும் ஏற்படட்டும் என்ற ஆஷிகேரசூலின் வேண்டலைக் கேட்டுக் கிண்ட

லாக 'அப்படி உன் காதலில் என்னதான் இருக்கின்றது?' எனக்கேட்ட அந்த நயவஞ்சக நண்பனுக்கு 'சிண்டு முடிந்துவிடும் சிநேகிதர்களை விட்டும் என் காதல் ரகசியம் மறைந்ததன்று' என இடித்துரைத்து அவனை இரண்டாம் ரகத்தைச் சேர்ந்த காதல் தூதுவனாக சித்தரிக்கின்றார் நம் ஆஷிகே ரசூல்.

அன்றி 'என் காதல் நோய் என்னை விட்டும் அகன்று விடக் கூடியதுமன்று' என்று கூறி அவனுடைய சூழ்ச்சிகளலெல்லாம் தம் உள்ளத்தில் துளிர்த்துள்ள புனித நபிக்காதலை மாற்றி விடாது எனவும் அவனை ஆணித்தரமாக எச்சரிக்கவும் செய்கின்றார்.

ஆஷிகே ரசூல் அவர்களின் உறுதியையும் எச்சரிக்கையையும் கண்டு தனது இரட்டை வேடம் அம்பலமாகி விட்டது என்பதை அறிந்து கொண்ட அந்த நயவஞ்சகன் ''நண்பரே! நீ நினைப்பது போன்று நான் கெட்டெண்ணம் கொண்டவனல்ல! இருப்பினும் நீ உனது பிழைப்புத் தலைப்புக்களையெல்லாம் ஒதுக்கி வைத்து விட்டு, குடும்பம் கோத்திரத்தை மறந்து விட்டு, அந்த மக்கத்து மாந்தரையே நினைத்துக் கொண்டிருந்தால் உன் நிலைமை என்னாவது? உற்ற நண்பனாகிய நீயும் உன் குடும்பமும் வறுமையில் சிக்கித்தவித்தால் அது எனக்கும் நஷ்டம்தான்! இந்த நல்லெண்ணத்துடன் தானப்பா உன் உள்ளத்தில் உதித்துவிட்ட அந்த நபிக் காதலை கொஞ்சம் குறைத்துக்கொள் என உபதேசிக்க முன்வந்தேன்'' என அங்கலாய்த்தான் போலும்.

நண்பனின் சூழ்ச்சிமிக்க அங்கலாய்பிற்கும் ஆஷிகே ரசூல் அடுத்த கண்ணியில் முத்தாய்ப்பு வைக்கின்றார்.

مَحَضْتَنِي النُّصْحَ لَكِنْ لَسْتُ أَسْمَعُهُ

إِنَّ الْمُحِبَّ عَنِ الْعُذَّالِ فِي صَمَمِ (11)

**மஹ்ஹழ்தனி (ன்)னுஸ்ஹுலா**
**கின்லஸ்(து) அஸ்மஉஹூ**
**இ (ன்)னல்முஹிப் (ப)அனில்**
**உ (த்) தாலி ஃபீஸமமி**

உரை : (நண்பனே! உன் வாதப்படி) நீ எனக்கு கலப்பற்ற (நல்லெண்ணத்துடன்) உபதேசம் செய்தாலும், நான் அதை செவியேற்பதற் கில்லை (காரணம்) நிச்சயமாக மெய்க்காதலன் (தன்காதலை) கண்டனம் செய்பவர்களிடம் செவிடனாகவே இருப்(நடிப்)பான்.

இதனை-

நற்போதம்தான்புரிந்தாய் நான்செவியில் வாங்கேனே!
வற்பானகாதலுள்ளான் வதிரன் பழிப்பவர்க்கே!

என தமிழில் வடித்துத் தருகின்றார் மறைக்காயர்.

வி-ரை : தெய்வீகக் காதல்- மெய்க்காதல் என்றெல்லாம் வர்ணிக்கப்பெறும் சிற்றின்பக்காதலை குறை கூறி அதற்காக அவன் கண்டிக்கப்பட்டால் - அவ்விதம் கண்டிப்பவர் அவனைப் பெற்றெடுத்த தந்தையாக இருப்பினும் கூட — அவரின் கண்டனத்தையும் எந்தக் காதலனும் தனது காதில்கூட போட்டுக்கொள்ள மாட்டான். காதல் வயப்பட்டவர்களின் பொதுவான நிலையிது கேவலம், சொற்ப காலத்தில் அழிந்தொழிந்துவிட வல்ல சிற்றின்பக் காதலர்களின் நிலையே இது என்றால் இம்மை மறுமைப் பேறுகளனைத்தும் தன்னகத்தே தேக்கி வைத்துள்ள மெய்ஞ்ஞானக் காதல் (நபிக் காதல்)

கொண்டுள்ள ஆஷிகேரசூல்களின் நிலைமையைச் சொல்லவா வேண்டும்.

இதோ அண்ணலை நினைந்துருகி ஆலிம் கவிஞர் ''ஸிராஜ்' பாக்கவி அவர்கள் பாடுகின்றார் பாருங்களேன்—

ஆண்மைக்கும் அவரே நெஞ்சே
அன்பிற்கும் அவரே நெஞ்சே
கேண்மைக்கும் அவரே நெஞ்சே
கேட்டிடுவாயென் நெஞ்சே

அழகிற்கும் அவரே நெஞ்சே
அறிவுக்கும் அவரே நெஞ்சே
கழறிட முடியாதென்னும்
காட்சியும் அவரே நெஞ்சே

உடலுள்ளம் ஊணி லெல்லாம்
உயிரணுக் குவையி லெல்லாம்
இடங்கொண்ட தன்றோ அண்ணல்
இடங்கொண்ட அன்பும் நெஞ்சே

ஒருகணம் நபிநா மத்தை
உள்ளமும் மறக்கு மாமோ?
சிறப்புறு அந்நா மத்தை
செப்பிடுவாய்! என் நெஞ்சே

நிலத்தினில் தொழுத போதும்
நீரின்மேல் தொழுத போதும்
நலத்துடன் வாழ்த்தும் நாமம்
நாயகத் ததுவே நெஞ்சே

ஆழியுள் வாழும் வாழ்வை
அடைந்திட்ட போதும் கூட
வாழி! நீ! ரென்று வாழ்த்த
வாய்ந்தவர் அவரே நெஞ்சே

ஆகவேதான் தனது நண்பன் தனது நன்மையைப உத்தேசித்து உபதேசிக்கின்றான் என வைத்துக் கொண்டாலும் கூட அந்த நல்லெண்ணத்துடன் கூடிய உபதேசத்தை தாம் ஏற்பதற்கில்லை என அறிவுறுத்தி விட்டு 'மெய்க்காதலனொருவன் தனது காதலைக் கண்டிப்பவர்களிடம் செவிடனாகவே நடிப்பான்' என்று கூறி 'காதல்' இயலின் உண்மை நிலையை தெளிவுபடுத்துகின்றார்.

إِنِّي اتَّهَمْتُ نَصِيحَ الشَّيْبِ فِي عَذَلِي
وَالشَّيْبُ أَبْعَدُ فِي نُصْحٍ عَنِ التُّهَمِ (١٢)

**இன்னி(த்)தஹம்துநஸீ**
**-ஹஷ்ஷைபி ஃபீ அதலீ**
**வஷ்ஷைபுஅப்அது ஃபீ ஹுஸ்ஹின்**
**அனி(த்) துஹமீ**

கண்டனம் செய்வதில் நரை(மயிரி)யின் உபதேசத்தைக் கூட நான் சந்தேகிக்கின்றேன். ஆனால் நரையோ உபதேசம் செய்வதில் சந்தேகத்தை விட்டும் மிகத் தூரமானதாக இருக்கின்றது.

இதனை—

நரைகடிந்துசொன்னபுத்தி நம்பாமல் ஐயமுற்றேன்
தரையில்நரையின்மொழி சந்தேகம் அற்றதுவாம்!

என பாடித் திழைக்கின்றார் மறைக்காயர்.

## நரைபுகட்டும் நல்ல எச்சரிக்கை

(வி-ரை) நரை மனித உயிரெனும் ஊர்திக்குக் காட்டப்படும் பச்சைக்கொடி எனத் துணிந்து கூறலாம். இறை உணர்வில் தளர்வாகவும், ஒழுக்க நியதியில் வழுக்கையாகவும் வாழ்ந்துவரும் மனிதனுடைய தலையில் 'நரைமயிர்' தோன்றிவிட்டால் அவன், அந்த நேரத்திலாவது சுதாரித்து

தனது போக்கை மாற்றிக் கொள்ளல் வேண்டும். அப்படி மாற்றிக் கொள்ளும் சுபாவம் படைத்தவனே மறுவுலகில் மாண்பு பெற்றுய்ய வாய்ப்புக் கிடைக்கப் பெறுவான்.

இன்னும் இதைத் தெளிவுபடக் கூறவேண்டின் நரை மயிர் மரணத்தின் முன்னறிவிப்பு எனக் கூறலாம் ஆகவேதான் இறைவன் தனது அருள் மறையாம் திருமறையில் ''உங்களிடம் எச்சரிக்கை வந்துவிட்டது. அதுதான் நரை மயிர்'' எனக் கோடிட்டுக் காட்டுகின்றான். எனவே, தான்தோன்றியாக பயமற்று வாழும் மனிதனை எச்சரித்து இதோ உனது வாழ்க்கை வரலாறாக மாறிவிடக் காத்திருக்கிறது. உனது உலகப் பயணம் முடிந்து, மறுவுலகின் முதல் ஸ்டேனாகிய மண்ணறையை இன்னும் கொஞ்சநாளில்- வருடத்தில் அடைந்திடப்போகின்றாய்' என்பதை அறிவுறுத்தும் சிகப்பு விளக்காக- உபதேசியாக நரைமயிர் திகழ்கின்றது.

மந்த மாருதம் தவழும் அந்திமாலை, மஃரிப் நேரம் நெருங்கிவிட்டது என்பதை அறிவிக்கும் சிக்னல்.

இருள்சூழ் இரவின் இறுதியில் தோன்றும் விடிவெள்ளி இரவின் ஆதிக்கம் அஸ்தமிக்கப்போகின்றது என்பதை அறிவிக்கும் சிக்னல்.

இதுபோன்றே நரை, மனிதனின் உயிர் விரைவில் கைப்பற்றப்பட விருக்கின்றது என்பதற்குரிய (சிக்னல்) முன்னறிவிப்பாகும்.

இதைத்தான் நமது ஆஷிகேரசூல் அவர்கள் 'நரை ஒரு உபதேசி' என்பதில் எவ்விதச் சந்தேகமும் இல்லை என்ற கருத்தை ''நரை உபதேசம் செய்யும் விஷயத்தில் சந்தேகத்தை விட்டும் மிகத் தூரமாக இருக்கின்றது'' எனக் குறிப்பிடுகின்றார்.

'நரை மரணத்தின் முன்னறிவிப்பு' என்பதை அவ்வளவு உறுதியாக நம்பும் அவர், 'கண்டனம் செய்வதில் நரையின் உபதேசத்தைக்கூட சந்தேகிக்கின்றேன்'' என்று கூறி தனது இதயக் காதலாம் நபிக்காதலைக்

காப்பாற்றிக் கொள்ளும் விஷயத்தில் நரையின் அந்த உறுதிமிக்க உபதேசத்தைக் கூட பொருட் படுத்தப் போவதில்லை என்றுணர்த்தி, தமது புனிதக் காதலை கண்டனமும், கிண்டலும் செய்யும் அந்த வஞ்சக நண்ப னிடம் தனது காதலின் வலிமையை எடுத்துக் காட்டு கின்றார்.

(க-ரை) நண்பா! என் காதலை திசை திருப்பிவிட முயலும் உன் உபதேசம் விழலுக்கிரைத்த நீரேயாம். ஏனெனில் மனிதர்களின் கற்பனைகளையும், மேலெண்ணங் களையும் மண் மூடிடச் செய்யவல்ல மரணமே வந்துற்றா லும் இறுதி நபிமீது நான் கொண்டுள்ள அப் புனிதக் காதலை மாற்ற முடியாது—மறைக்க முடியாது.

## முதல் பகுதிக்கோர் முடிவுரை

எந்த மனிதனும், எச்செயலையும் செய்ய எத்தனிக்குமுன், அச்செயலால் விளையும் நன்மை தீமை களை, இலாப நஷ்டங்களைக் கருத்திற் கொண்டு, அது விசயத்தில் தீர்க்கமானதொரு முடிவிற்கு வந்த பின்பே அதைச்செய்ய வேண்டும்.

அதுபோன்றே நமது ஆஷிகே ரசூல் இமாம் பூசிரி (ரஹ்) அவர்களும், தமக்கேற்பட்ட இஷ்க்கை (நபிக்காதலை) உறுதிபடுத்துமுன், அதனால் விளையும் சாதகங்களை ஆய்ந்தறிவதில் ஈடுபட்டார். அந்தப் பொல்லாத மனம் நபிக்காதலால் நஷ்டம் என்றது. ஆனால் அவரின் பகுத் தறிவோ, இலாபம் விளையும் என்றது. இந்த இரு கருத்துக்களால் ஏற்பட்ட சாதக பாதங்களை 'ஆசை அலைகள்' என்ற தலைப்பில் நண்பர்களிடையே நடை பெறும் உரையாடல் முறையில் தமக்கே உரித்தான இலக் கியச் சுவையோடும், உவமை நயத்தோடும் இதுவரை எடுத்தியம்பினார்.

அந்த ஆய்வின்மூலம், உலகியல் காரியங்களில் நஷ்டம் ஏற்படுவதாகக் காட்சி தந்தாலும் நபிக்காதலே மனிதனைப்

புனிதனாக ஆக்க வல்லது என்பதைப் படம் பிடித்து காட்டினார். மேலும் நபிக்காதலால் நஷ்டமே ஏற்படும் என்றுரைத்து தம்மை மோசம் செய்யப் பார்த்த நஃப்சின் முகமூடியை 'அலைபாயும் மனம்' என்ற இரண்டாம் தலைப்பில் அடுத்து கிழித்தெறிகின்றார். தொடுத்துப் பார்ப்போம்-பக்குவமடைவோம்-பக்தி வழி செல்வோம்.



# புரவலர் போர்த்திய பொன்னாடை

## இரண்டாவது இழை

# அலைபாயும் மனம்



# 2

மனித மனம் எங்கும் எதிலும் நிலையாக நிற்பதில்லை.

அதில் நிம்மதியா... இதில் நிம்மதியா...எதில் நிம்மதி எங்கே நிம்மதி...? என்று நிம்மதியை தேடு தேடு என தேடி அங்குமிங்கும் அலைபாய்ந்து கொண்டேதான் இருக்கின்றது 'நஃப்சு' எனும் அந்த மனம்.

அன்று : நபி மூஸா (அலை) அவர்களுக்கும் அவர்தம் சமுதாயத்தினருக்கும் சுவையும், ஊட்டச்சத்தும் நிறைந்த 'மன்னுஸ் ஸல்வா'வை உணவாக இறக்கிக் கொடுத்து இரட்சிக்கப்பட்ட போது ''இனியும் எங்களுக்கு இது வேண்டவே வேண்டாம்...கீரையும், பூண்டும் தான் வேண்டும்''-என்று அவர்கள் அடம் பிடித்து, கிடைப்பதற்கரிய அந்த நல்ல வாய்ப்பை கை நழுவ விட்டு விட்டார்களென்றால் அதற்கு இந்த அலைபாயும் 'மனம்' தான் காரணம்.

இன்று : எம்மிலே சிலர். சிலரா? அல்ல, அல்ல மிகப் பலர் எந்நாட்டவருக்கும், எக்காலத்தவருக்கும் பொருந்தி வரக்கூடிய எழிலார்ந்த இஸ்லாமிய நாகரீகங்களை விட்டு விட்டு, உடையால் நடையாலெல்லாம் எது எதையோ பின் பற்றி வாழ்வதால் உலகின் கேளிப் பார்வைக்கும் கெக்கலிச் சிரிப்பிற்கும் இலக்காகி இருக்கின்றார்கள் என்றால் அதற்கும் இந்த அலைபாயும் மனம்தானே காரணம்...?

ஆமாம் மனம் நிலையாமையின் காரணமாக மனிதன் தனக்குக் கிடைத்திடும் நல்ல நல்ல வாய்ப்புகளையெல்லாம் தானாகவே இழந்து கொள்ளத்தான் செய்கிறான்.

ஆகவேதான்
''மனித மனமொரு குரங்கு''

என்று மனிதனின் மனதை மெஞ்ஞானியர் குரங்காக வர்ணித்துக் கூறியுள்ளார்கள் போலும்.

## படுபாதாளத்தில் தள்ளி விடும்!

மரத்திற்கு மரம், கிளைக்குக் கிளை அங்குமிங்குமாகத் தாவித்தாவி தனக்கென்றதொரு நிலையான உய்விடத்தைப் பெற்றுக் கொள்ளாமல் பரிதாபத்திற்குரிய வாழ்வைப் பெற்று வாழும் குரங்கினையொத்த மனித மனமும் உண்மையிலேயே பரிதாபத்திற்குரியதுதான். ஆனாலும் அது உத்தமமான தன்று.

ஏனெனில்; 'அயிரை மீனுக்கு விளாங்குச் சேட்டை' என்பார்களே அதுபோல மனித மனம் தகுதிக்கு மீறிய தலைக்கனமும், மித மிஞ்சிய திமிரும் கொண்டதாகத் திகழ்கின்றது 'கரணம் தப்பினால் மரணம்' என்பார்களே அதுபோன்று கொஞ்சம் அயர்ந்தால் போதும் படைப்பினங்களின் மணிமுடியாகத் திகழும் மனிதனை அது படுபாதாளத்தில் தள்ளி விட்டுவிடும்.

''என்ன இது... கதையளக்கின்றீர் என்று கேட்டிடத் தோன்றும் உங்களுக்கு. அல்லவா? அவசரம் வேண்டாம்- இதோ அடுத்து நான் எடுத்துக் கொடுக்கும் நபிகளாரின் நல்வாக்கை கொஞ்சம் ஊன்றி, ஒரு தடவைக்கு இரு தடவை - படித்துப் பாருங்கள். அதன் பின்னர் ''இவ்வளவு கொடியதா, மனித மனம்...?'' என்று நீங்களே அதைப் பழிப்பீர்கள் - சபிக்கவும் தயங்க மாட்டீர்கள்.

## அறிவும் மனமும்

அறிவின் சிகரமாகிய அண்ணலெங்கள் கோமான் முஹம்மது முஸ்தபா (ஸல்) அவர்கள் சிருஷ்டிகளின் ரகசியத்தைப் பற்றி இவ்விதம் கூறினார்கள்.

அதாவது;

படைப்பினங்கள் படைபக்கப்படுவதற்கு முன் 'ஆலமே மீதாக்' என்ற கற்பனையுலகில் மனித அமைப் பின் முதன் முதல் அங்கமாக 'அறிவை'ப் படைத்த இறைவன், 'தான் எஜமான்' என்பதனையும், 'அறிவு தனது அடிமை' என்பதையும் அகிலத்திற்கு உணர்த்த நாடினான் போலும். ஆதலால் அறிவைப் பார்த்து-

''முன்னோக்கிச் செல்'' - என்று ஆணை பிறப்பித் தான்:

ஆணைக்கிணங்க அது முன்னோக்கிச் சென்றது.

''பின்னோக்கிச் செல்'' என்று இரண்டாவதாக ஆணை பிறப்பித்தான்.

உடனடியாக அது பின்னோக்கியும் சென்றது.

அதன் பின்னர் அதனிடம் -

''நான் யார், நீ யார்?'' என்று வினவினான். அதற்கு அது:

''எளியோனாகிய என்னைப் படைத்துப் பக்குவமுடன் என்னைப் பாதுகாத்தாளும் எனது ஏக எஜமானன் நீ உன்னால் படைக்கப்பட்ட பலஹீனமான உன்னின் அடிமை நான்'' என்று அடக்கமாக பதிலிறுத்தது.

எஜமான விசுவாசத்துடன் கூடிய அறிவின் இந்த பதிலைக் கேட்டு மோகனப் புன்னகை புரிந்த ஏகனாகிய வல்ல அல்லாஹ் ''அறிவே! உன்னை விடச் சிறந்ததாக

நான் வேறு எதனையும் படைக்கப் போவதில்லை'' என்று கூறி அதை மிகமிக மெச்சினான்.

அதனையடுத்து மனிதனின் இரண்டாவது அங்கமாக 'நப்ஃசு' எனப்படும் மனதைப் படைத்து அதனிடமும் ''முன்னோக்கிச் செல்'' என்று ஆணை பிறப்பித்தான் ஆனால் அறிவை போன்றில்லாமல், யாருடை ஆணையது என்பதனைக்கூட எண்ணிப் பார்க்காமல், மெத்தனம் காட்டிய அந்த அறிவுகெட்ட 'மனம்' ஆடாமல் அசையாமல் அப்படியே கற்சிலையெனக் கிடந்தது. மனதின் அடாவடித்தனத்தை கொஞ்சமும் பொருட்படுத்தாத இறைவன் 'பின்னோக்கிச் செல்'' என்றான். இதையும் அது மதிக்காமல் அடங்காமையை காட்டியது. அதனைப் பொருட் படுத்தாக இறைவன் ''நான் யார், நீ யார்'' என்று அதட்டி வினவினான்.

இதற்காவது அது இணக்கமாகப் பதில் தந்ததா இல்லை. இல்லவே இல்லை. மாறாக மதமதப்பேறிய அந்த மனம், ஏக எஜமானாகிய அந்த வல்லவனிடமே ''நானா... நான், நான்தான். நீ, நீதான்'' என்று அட்டகாசமாகப் பதில் சொல்லியது.

கொஞ்சமேனும் அச்சமேதுமின்றி, அகங்காரத்தின் உச்சாணியில் நின்று கொண்டு, இறைவனாம் வல்ல அல்லாஹ்வை எஜமானனாக ஏற்று அடிப்பணிய மறுத்த அந்த மனத்திற்குச் சரியான பாடம் புகட்டிட வேண்டும் என்று எண்ணிய இறைவன், கொழுந்து விட்டெறியும் படு பயங்கரமான நெருப்புக் குண்டத்தில் தூக்கிப் போட்டு ஒரு நூறு ஆண்டுகள் வரை அதை பொசுக்கோ பொசுக் கென்று பொசுக்கி, வாட்டியெடுத்த பின்னர் அதனை விடுவித்து மீண்டும் அதே கேள்வியை கேட்டான்.

இத்துணையளவு வேதனைகளை அனுபவித்து வெந்துருகிய பின்னராவது அதற்குப் புத்தி வந்ததா?

ஊஹும். அப்போதும் அதன் ஆணவம் கொஞ்சமும் குறைந்தபாடில்லை.

ஆகவே, இதனாலெல்லாம் இதற்குப் புத்தி வத்திடப் போவதில்லை என்று எண்ணிய அந்த ஏகன் 'பட்டினிக் குண்டலத்தில்' தூக்கி எறிந்து மீண்டுமொரு நூறாண்டு காலம், உரிய ஆகாரம் ஏதுமின்றி, வதையோ வதை என அதை வதைத்தெடுத்த பின்னர் அதே வினாவை அதனிடம் கேட்க; பசியின் கொடுமையால் மதமதப்புக் குறைந்து; தள்ளாடும் நிலையை அடைந்து இயலாமையின் கடைசி விளிம்பில் நின்று கொண்டிருந்த அந்த மனம் புத்தி வரப்பெற்றதாக ''இறைவா, எம்பெரும! நீ எனது ஏக எஜமானன், நான் உன்னின் குற்றேவல் புரியும் கொத்தடிமை'' என்று கூறி உண்மையை ஒப்புக்கொண்டு அடிமைத் தனத்தைப் பிரதிபலித்தது.

(நூல்: மஷ்ரூயிய்யத்துஸ்ஸவ்மு)

அன்புள்ளம் கொண்ட நல்லோரே! இப்போது சொல்லுங்கள். மனித மனம் உத்தம மானதா? சத்திய சிந்தனை கொண்டதா?

ஆகவேதான் இந்நாள்வரை உலகில் உதித்த உத்தமர்கள்- இறைநேசச் செல்வர்கள்- இறைநெறித் தூதர்களெல்லாம் இந்த 'மனம்' விஷயத்தில் வழுக்கல் பாறையில் நடப்பதுபோன்ற உஷார் நிலையில் மிக மிக எச்சரிக்கையாக இருந்து; அதை எப்படி எப்படியெல்லாம் பலஹீனப் படுத்த முடியுமோ அப்படி அப்படியெல்லாம் பலஹீனப் படுத்தி கிடப்பு நிலையிலேயே அதனைப் போட்டுவைத்து காரியமாற்றி வந்துள்ளனர்.

## மனதை அடக்கியொடுக்கிய மாவீரர்

'நஃப்சு' எனும் மனதின் மதமதப்பை குறைத்து, புனிதர் ஒளி பெற்றுச் சிறந்த அந்தப் புனிதர் வரிசையில் மணி முடியெனத் திகழும் மாவீரர் ஒருவர் உண்டென்றால் அவர் அடிமைப்பட்டு, அரியாசனம் ஏறிய அருளொளி நாதர்

ஹஜ்ரத் யூசுப் நபி (அலை) அவர்களாகத் தான் இருந்திட முடியும்.

தனது எஜமாட்டி ஜுலைஹா தனது தங்க நிகர் தளிரழகில் மயங்கி, தனிமைத் தலத்தை உருவாக்கி இனிமைக்கு இனிமை சேர்க்கும் இன்ப புரியாக அதை அழகுபடுத்தி, ஈ, எறும்பு கூடப் புகமுடியாத அந்த இன்பபுரிக்கு தன்னைத் தனியாக அழைத்துச் சென்று காமக் கத கதப்பு தகிக்கும் கன்னல் மொழிகளால் காதல் வலை விரித்து, கற்பிழக்கத் தானாக முன்வந்த அந்தச் சோதனையான நேரத்தில்,

வாலிப முறுக்கும், ஆண்மைச் செறுக்கும் அவர் கொண்டிருந்த பருவமது—காலமும், காலத்தின் தாளமும் கனிந்து போயிருந்த வேளையது- கம கமக்கும் வாசனைத் திரவிங்களின் நறுமணம் இனிமைக்கு எழில் கூட்டிக் காண்பித்துக் கொண்டிருந்த தருணமது.

ஆகவே 'சமயமிது. நல்ல சமயமிது' என்றெண்ணி அவர் கொஞ்சம் கொஞ்சியிருந்தால் போதுமே! அவரை மிஞ்ச ஆங்கே அப்போதைக்கு வேறு எவரும் இருந்திருக்க முடியாதே! காலமெல்லாம் கவர்ச்சிக் கதாநாயகனாகவே கூட கொண்டாடப்பட்டு வந்திருப்பாரே!

ஆனால்; காலமும், களமும், கருதுதலும் இந்த அளவிற்கு வசதி வாய்ப்பாகக் கனிந்திருந்தும் கூட 'மாற்றானின் மனைவியவள்' என்ற உறுத்தலும் 'எவர் பார்த்தாலும் பார்க்கா விட்டாலும் ஏக எஜமானாகிய வல்ல அல்லாஹ் பார்த்தே விடுவான்' என்ற இறையச்சமும் ஜுலைஹாவின் அந்த மானக்கேடான செயலுக்கு அவரை இணங்க விடவில்லை.

மறுத்தார்... மறுத்தார்... மறுத்துக் கொண்டேயிருந்தார்.

மண்டியிட்டுக் கெஞ்சினாள். அப்போதும் மசிந்தாரில்லை.

தனக்குள்ள தாராளமான அதிகாரத்தைச் சுட்டி எச்சரித்து ஏங்கினாள்; அதற்கும் அடிபணிந்தாரில்லை.

''என்னைப் பலவந்தம் செய்தாய்'' என்று பழி சுமத்துவேன்'' என்று அச்சுறுத்தி மன்றாடினாள். அப்போதும் அவளை ஏறெடுத்தும் பார்த்தாரில்லை.

அப்பப்பா- எவ்வளவு நெஞ்சுரம் அவருக்கு!

இத்தகு எஃக்கு நெஞ்சம் படைத்த யூசுப்நபி (அலை) அவர்களை

இதனாலேயே இவரை அசைக்கக்கூட முடியவில்லையே இனி எதனால்தான் இவரை எம்மால் ஜெயிக்க முடியப் போகிறது?

-என்றெண்ணி அத்தோடு அடங்கியொடுங்கிக் கிடந்ததா அவரின் 'நஃப்சு' என்ற மனம்...? இல்லை இல்லவேயில்லை மாறாக வலையில் சிக்காது தப்பித்துக்கொண்டால், தூண்டில் களையிலுமா சிக்காமல் போய்விடப் போகின்றார்...? என்று தப்புக்கணகுப் போட்டுக்கொண்டு தற்பெருமை என்ற தூண்டில்களையால் அவரைத் தன் பக்கம் கவர்ந்திழுக்க பகீரத முயற்சி செய்கின்றது அவரின் பொல்லாக் கள்ளமனம்!

ஆஹா! எவ்வளவுக் கெட்டித்தனமாக தப்பிக்க முடியாத காம இச்சையிலிருந்து தப்பித்து விட்டோம்... உலகில் என்போல எவர் உளார்... எவரால் இப்படிக் கல்லாக இருந்து 'கற்பு நெறி' காத்திட இயலும்

என்ற மத மதப்பை - கிளு கிளுப்பை - கிறு கிறுப்பைக் கிளப்பிவிட்டு தற்பெருமை எனும் சிறுமைச் சாக்கடையில் அப்பெருந்தகையைத் தள்ளக் குழி பறித்ததாம் கேடுகெட்ட அவரின் கள்ள மனம்.

காமப் பிசாசின் கோரத் தாக்குதலை முறியடித்து

சுற்பிற்கோர் களங்கரை விளக்கமாகத் திகழ்ந்து வரும் தங்கத்திரு நபி ஹஜ்ரத் யூசுப் (அலை) அவர்கள் கெடுதி செய்வதையே தொழிலாகக் கொண்டிருக்கும் மனதின் இந்த இரண்டாம் தாக்குதலிலும் தலை கவிழ்ந்துவிடாமல் தாக்குப் பிடித்து சாமார்த்தியமாகத் தன்னைத் தற்காத்துக் கொள் கின்றார்கள்.

வையக வரலாற்றில் சுவையும், சூடும் நிறைந்து போயுள்ள அந்தச் சாமர்த்தியத்தை ஹஜ்ரத் அவர்களின் கன்னிமொழியாகவே ஏகனாம் நம் இறைவன் தனது அருள் மறையாம் திருக் குர்ஆனில் எப்படி எழிலாக எடுத்துக் காட்டுகின்றான் பாருங்கள்...

'அன்றி நான் பரிசுத்தமானவன்' என்று [என்னை நானே போற்றிப் புகழ்ந்து] கூற முன் வரவில்லை ஏனென்றால் என் இறைவன் அருள் புரிந்தாலன்றி (என்னுடைய 'நஃப்சு' எனும்) மனம் தீயதைத் (தற் பெருமையைத்) தூண்டக்கூடியதாகவே இருக்கின்றது' நிச்சயமாக என் இறைவன் மிக்க மன்னிப்போனும் கிருபையுடையோனுமாக இருக்கின்றான் (என்றார் யூசுப் நபி)

(குர் : 12: 53)

அதாவது;

இதற்கு முன்னர் கூறிக் காண்பிக்கப்பட்டது போல தற்பெருமை எனும் தூண்டில் கொண்டு அவரை அவரது மனம் கவர்ந்திழுக்க 'முயன்றிட்டபொழுது

''அடடாவோ! நானா, என் சொந்த முயற்சியினாலா காமப்பிசாசின் அந்தத் தாக்குதலில் இருந்து தப்பித் தேன்......? இல்லையே......! எனது இறைவன் எனக் கீந்த 'நபிப்பதவி' என்ற அருள் கவசம் மாத்திரம் இல்லாது இருந்தால் என்னால் என்ன முடிந்திருக்கும்...? விஷயம் இப்படியிருக்க இதில் தற்பெருமை கொள்வதற்கு எனக்கு என்ன அருகதை இருக்கின்றது?''

—என்று இடித்துரைத்து தீயமனதின் இந்த இரண்டாம் தாக்குதலையும் வெற்றிகரமாக முறியடிக்கிறார்கள்.

அடுத்தடுத்து இரு பெரும் தாக்குதல்களை தொடர்ந்து நடாத்தி அந்த இரண்டிலுமே படுதோல்வி கண்டு விட்டதால் ''ஏது, ஏது. இவரிடம் இனியும் எதிரிக்கொண்டு நின்றால், நம்மின் குறுக்கு எலும்பை முறித்து முடமாக்கி விடுவார் போலிருக்கின்றன்தே''! என்று கண்ட அவரின் அந்தக் கள்ளமனம் அவரிடம் நிபந்தனையற்ற சரணாகதியடைந்து நல்ல மனமாக மாறிவிடுகின்றது.

. அன்பரீர்! பார்த்தீர்களா மனித மனதின் மூறியாட்டங்களை?

வல்லவனாம் அல்லாஹ்வின் முழுமையான அருளுக்கும் அனுக்கிரகத்திற்கும் சொந்தம் பெற்றுத் திகழ்ந்த ஒரு தீர்க்கதரிசியையே நஃப்சு எனும் மனம் இந்த அளவு படாதபாடு படுத்தியிருக்கின்றதென்றால் மனதின் இந்த அட்டகாசம் உலகில் வேறு எவரைத்தான் விட்டு வைக்கப் போகின்றது......?

ஆகவேதான்: மனதின் இந்தக் கர்ணகடூரமான தாக்குதல்களை விட்டும் மனிதனைக் காப்பாற்றிக் கரை சேர்க்க வேண்டும் என்ற நல்லெண்ணத்துடன் இறை மறையாம் திருக்குர்ஆனும், இறுதித் திருத்தூதராம் நம் நபிகள் நாதர் (ஸல்) அவர்களும் நஃப்சு எனும் அந்த மனதின் கேடுபாடுகளை ஆழமாகப் படம் பிடித்துக் காட்டி, அதன் தாக்குதல்களில் இருந்து எப்படி எப்படியெல்லாம் தப்பிக்க முடியும் என்ற வழிமுறைகளை வகுத்தளித்துள்ளார்கள்.

பக்தி வழி சென்று, முக்தி நிலையடைந்து, மோனச் சோலையில் சஞ்சரித்துத் திரியும் நமது ஞானவான்கள் குர்ஆனும் ஹதீதும் வகுத்தளித்துள்ள அந்த வழி முறை

களைச் சித்திரங்களாக, ஆமாம்...... குணச்சித்திரங்களாக சித்தரித்துக் காட்டி பக்தர்களைப் பத்திரப் படுத்திக் காப்பாற்ற ஆவனவெல்லாம் செய்து வைத்துள்ளார்கள்.

இதனை, இதனால், இப்படி இப்படி இயக்கினால் எவரும் எதையும் எளிதில் வெற்றி கொள்ள முடியும் என்பதனைப் பறைசாற்றி நிற்கும் அந்தக் கலாஞானங்களை இங்கே எண்பித்துக் காட்டுதல் அவசியத்திலும் அவசியம் என்று நான் கருதுவதால் அதனை இங்கே விண்டுரைக்கிறேன்.

வண்டினங்களைப்போல் அந்த ஞானத்தேனை உண்டு சுகிக்க என்னவரே! இளையோரே! முதியோரே! விழித்தெழுமின்,

'மனித மனம் ஒரு குரங்கு' என்று இதற்கு முன்னர் நாம் கண்டு வியந்தோம் அல்லவா?

அந்த மனக் குரங்கு-
-அம்மாரா
-லவ்வாமா
-முல்ஹிமா
-முத்மயின்னா
-ராளிய்யா
-மர்ளிய்யா
-காமிலா

என்ற ஏழுவகை மரங்களில் அங்குமிங்கும் தாவித் தாவி அலை பாய்ந்து கொண்டே இருக்கும்.

## 'அம்மாரா' எனும் நச்சு மரம்

இந்த ஏழுவகை மரங்களிலும் 'அம்மாரா' என்ற மரம் இருக்கின்றதே அது மிக மிகக் கொடியதோர் மரமாகும்.

விலங்கினங்களில் சிங்கம் புலி போன்ற கொடிய விலங்குகள் இருப்பதைப் போன்று, ஊர்வனங்களில்

பாம்பு, தேள் போன்ற கொடிய ஜந்துகள் இருப்பதைப் போன்று, பறவைகளில் கூட 'ராஜாளி' போன்ற கொடிய பறவை இருப்பதைப் போன்று, தாவர வர்க்கங்களில் ஒருவகை மரம், செடிகொடிகள் இருக்கின்றதாம் அவை, கொடிய கொடூரம் படைத்ததாம். ஆப்ரிக்காவின் அடர்ந்த காடுகளில் காணப்படும் அந்தக் கொடிய தாவர வர்க்கங்களைப் பற்றி நீண்ட ஆய்வு நடாத்திய தாவரயியல் நிபுணர்கள் அங்ஙனம் அறிக்கை சமர்ப்பித்து இருக்கின்றார்கள்.

மின்சார சக்திபோன்ற ஒருவகை சக்தியைப் பெற்றுள்ள அந்த மரங்களின் அருகே மனிதனோ, மற்ற மற்ற உயிரினங்களோ சென்று விட்டால் அவர்களின் கதி அதோகதி தானாம்—யானை தனது துதிக்கையால் தனது உணவு வகையறாக்களைத் தாவிப் பிடித்திழுத்து அதைச் சுருட்டி மடக்கி தனது வாயினுள் திணித்துக் கொள்வதைப் போன்று அந்த மின்சார மரங்கள் அதனருகே செல்லும் உயிரினங்களைத் தாவிப்பிடித்திழுத்து சுற்றிவளைத்து, நெருக்கி, நசுக்கி அவனின் இரத்தம் முழுதையும் உறிஞ்சி எடுத்துக் கொண்ட பின்னர் வெறும் சக்கையை வீசி எறிந்து விடுமாம்.

நான் இத்தகு மரங்களைப் பார்த்ததில்லை. படித்ததைச் சொல்கிறேன்

நீங்களும் இத்தகு விந்தைச் செய்திகளைப் படித்து விட்டு உங்களில் சிலர் ஏளன நோகச் சிரித்திருப்பீர்கள் —இன்னும் சிலர் வியப்பால் விழிகளை அகல விரித்திருப்பீர்கள்— அல்லாஹ்வின் படைப்பில் இன்னும் எத்தனையெத்தனையோ என்று சிந்தித்தும் இருப்பீர்கள்.

என்ன, அப்படித்தானே?

ஆனால் இந்த மின்சார மரத்தைவிட மிக மிகக் கொடியது அந்த 'அம்மாரா' மரம்.

''அது எப்படி...? என்றுதானே கேட்கிறீர்கள்.

மின்சார மரத்தின் தாக்குதலால் மரணமடைந்திடும் மனிதன் இறை விசுவாசியாக இருந்தால், அவனது 'மறுமை வாழ்வு' ஒளிமயமானதாக அமைந்திட முடியும்...அல்லவா?

ஆனால் 'அம்மாரா' என்ற இந்த மரத்தின் தாக்குதலுக்கு இலக்காகுபவன் இம்மையில் மானம் மரியாதை அனைத்தையும் இழந்து விட்டு, வெறும் மனிதமிருகமாக மாறிக் கேவலப் படுவதோடு, அழிவேயில்லாத அம்மையிலும் அருளுக்கு அருகதையற்றவனாக ஆகி பாழும் நரகில் தள்ளப்பட்டும் விடுவானே!

அப்படியென்றால் இந்த அம்மாராவின் கேடுபாடு எவ்வளவு படுபயங்கரமானது என்பதனை கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்.

- அம்மாரா எனும் இந்த அபாயகரமான மரத்திற்கு—
- உலோபித்தனம்
- மனக்கோட்டை
- பேராசை
- விளம்பர மோகம்
- பொறாமை
- மனமயக்கம்

என்ற ஏழு கிளைகள் இருக்கின்றன.

இந்த ஏழு கிளைகளில் எந்த ஒரு கிளையில் மனித மனம் லயித்து நின்றாலும் அது அம்மாரா மரத்தில் தங்கி இருக்கின்றது என்று பொருள். மரம் எவ்வளவு ஆபத்து நிறைந்ததோ அவ்வளவுக்கவ்வளவு அதன் கிளைகளும் ஆபத்து நிறைந்ததுதான்.

பேரன்பு கொண்ட பெருந்தகையீர்! கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்.

உலோபித்தனம் உத்தமக் குணமா? பேராசை பெருமைப் படத்தக்க மாண்பா? மனக்கோட்டை எனும் கற்பனை உலகில் சஞ்சரிப்பவனின் வாழ்க்கை மண் கோட்டையை ஒத்ததாகத்தானே இருந்திட முடியும்? பெருமை மனிதனைச் சிறுமைச் சேற்றில் தள்ளிச் சீரழித்துவிடும் குணமன்றோ? விளம்பர மோகம் பிடித்தலையும் மனிதனின் எந்த நற்செயலுக்கும் கொஞ்சமேனும் மரியாதை கிடைத்திட முடியாதே? பொழுதுபோக்கு, சோம்பல், சதைகளவானித் தனம் என்ற பொருள்களையெல்லாம் உள்ளடக்கிய மதி மயக்கத்தால் மனித சமுதாயத்தின் நியாயமான முன்னேற்றம் பாதிக்கப்பட்டு போகும் என்பதனைச் சொல்லித்தான் தெரிய வேண்டுமென்பதில்லையே?

ஆகவேதான் நஃப்ஸே அம்மாராவின் இந்த ஏழு கிளைகளில் எந்த ஒன்றும் இம்மியும் நன்மை பயக்கக் கூடியதன்று. மாறாக முழுக்க முழுக்க ஆபத்து நிறைந்தவை எனக்கூறினேன்.

ஆதலால் 'ஷரீ அத்' என்ற அமைப்பிற்குள் கட்டுண்டு வாழ்வதன் மூலம் இம்மையில் 'புனிதன்' என்ற சிறப்பைப் பெற்றுச் சிறந்து; மறுமையில் 'நல்லடியான்' என்ற தகுதிக்கு அருகதை பெற்றுய்ய வேண்டிய முஸ்லிம்கள்— எதற்காக வேண்டியும், எந்த சமயத்திலும் 'அம்மாரா' என்ற கொடிய - ஆமாம்... ஆலகால விஷத்தைக் காண மிக மிகக் கொடிய - அந்த மரத்தின் பக்கம் தங்களின் மனதை மறந்தும் கூட மேய அனுமதிக்கவே மாட்டார்கள் என்பது முக்காலும் சத்தியம் என்பேன்.

அடியவர்க்கருளும் அதிபதியாகிய வல்ல அல்லாஹ் எனக்கும் உங்கள் அனைவருக்கும் அத்தகு நல்லுணர்வை அல்லும் பகலும் உண்டாக்கியருள்வானாகட்டும்.

## 'லவ்வாமா' எனும் லாகைமரம்

மனிதமனம் சஞ்சரிக்கும் ஏழுவகை மரங்களில் லவ்வாமா' என்பது இரண்டாவது மரமாகும்.

இம்மரத்திற்கு -
- தன்னைத்தானே நிந்திக்குதல்
- தன்னைப்பற்றி, இந்தத் தரணியைப்பற்றி சிந்திக்குதல்
- பிறரின் பொருளை, சொத்தை ஆக்ரமிக்குதல்
- தற்பெருமை
- தன்னின் நற்செய்கைகளை பெருமை பெறுவதற்காக எடுத்துக் காட்டுதல்.

என்ற ஐந்து கிளைகள் உண்டு.

இந்த ஐந்தில் தன்னைத்தானே நிந்திக்குதல், தன்னைப்பற்றி இந்தப் பிரபஞ்சத்தை பற்றிச் சிந்திக்குதல் ஆகிய இரண்டைத் தவிர எஞ்சியுள்ள மூன்றும் முழுமையான முடை நாற்றம் கொண்டவை என்பதால் இந்த லவ்வாமாவை முதன் முதல் வகையான அம்மாராவைக் காட்டிலும் கொஞ்சம் பரவாயில்லாதவை எனக் கொள்ளலாமே தவிர நல்லவையாக அதனை ஒருக்காலமும் நம்பிவிடக் கூடாது.

அம்மாரா ஆப்ரிக்காக் காடுகளில் முளைத்துள்ள இரத்தம் உறிஞ்சும் விஷச் செடிகொப்பானது என்றால் இந்த லவ்வாமா ஆலகால விஷங்களைத் தன்னுள் அடக்கிக் கொண்டுள்ள ராஜநாகத்தைப் போன்றது என்பேன். ஆனாலும்; நாகப்பாம்பின் விஷம் துஷ்பிரயோகம் செய்யப்படாமல் பாதுகாக்கப்பட்டால், அது நவரத்தினமாக உருவெடுப்பது போல் இந்த லவ்வாமாவிலுள்ள 'தன்னைத் தானே நிந்திக்குதல், தன்னைப்பற்றி, இந்தப் பிரபஞ் சத்தைப்பற்றி சிந்திக்குதல் ஆகியவற்றை மாத்திரம் எடுத்துக் கொண்டு மற்ற மூன்றையும் ஒதுக்கித் தள்ளி விட்டால் மனிதர்களுக்கு ஈமான் எனும் நவரத்தினம் பரிசாகக் கிடைக்க ஒளிமயமான வாய்ப்புண்டு.

ஆனாலும் நீரும் பாலும் கலக்கப்பட்ட தண்ணீர்ப் பாலை அருந்தும் அன்னப்பறவை பாலில் கலக்கப்பட்டுள்ள நீரைப்பிரித்து ஒதுக்கிவிட்டு வெறும் தனிப்பாலை மாத்திரம் உட்கொள்ளுமாமே அத்தகு ஆற்றல் இருப்பவர்கள் இந்த லவ்வாமாவில் தங்களின் மனதைத் துணிந்து மேய விடலாம்.

மகாக் கிருபையாளனாகிய வல்ல அல்லாஹ் லாகை பாயும் இந்த லவ்வாமாவில் வழுக்கி விழாது என்னையும் உங்களையும் காத்து இரட்சித்தருள்வானாகட்டுமாக.

## முத்துச் சிப்பி

## போன்ற முல்ஹிமா

முத்தின் தத்துவங்களை முறையாகவும் முழுமையாகவும் உணர்ந்த சான்றோர்களுக்கு முத்துச்சிப்பியின் அங்க அடையாளங்களும், அதன் பவிசு மவுசும்ளும் நிச்சயமாகப் புரியவே செய்யும். அதே நேரத்தில் உள்ளே இருக்கும் முத்து, எடுக்கப்பெற்று விட்டால் அந்த வெற்றுச் சிப்பி 'விலையேது மற்ற' பரிதாப நிலைக்குத் தள்ளப்பட்டு விடுவதும் அப்பெருமக்களுக்குப் புரியவே செய்யும்.

நன்கு விளைந்த முத்து உள்ள 'முத்துச் சிப்பி' போன்றதுதான் மூன்றாவது நஃப்ஸாகிய 'முல்ஹிமா என்ற நஃப்ஸும்' என்பதை ஞானவான்கள் சரி காண்பார்கள் என்பதில் ஐயமேதுமில்லை.

இதற்கு

- தர்ம சிந்தை
- உள்ளதைக் கொண்டு மனநிறைவு கொள்ளுதல்.
- கல்விஞானம்
- அடக்க உணர்வு

செய்துவிட்ட குற்றங்களை நினைந்து நினைந் பச்சாதாபப்படுதல்.

பொறுமை

சேவா உணர்வுடன் சிரமங்களை வலிந்து சுமந்து கொள்ளுதல்.

ஆகிய ஏழு குணங்கள் உண்டு.

இந்த ஏழில் எதைத்தான் குறை கூறிட இயலும்?

ஆதலால் இதுவரை நாம் ஆய்ந்தறிந்த மூன்று நஃப்ஸுகளில் மூன்றாவதான இந்த முல்ஹிமாமிக்குயர்ந்தது என்பதில் இம்மியும் ஐயமில்லை. ஆகவே இது மூமினான மனிதர்களின் ஒதுங்கும் தலமாக ஒளிர்கின்றதுதான். ஆத லால் எவர் தனது மனதை இந்த முல்ஹிமா என்ற மர நிழலில் மேய விடுகின்றாரோ அவர் நிச்சயம் தனது ஈமானைத் தக்கவைத்துக் கொள்ள முடியும் தான். ஆகவேதான் இதனை 'நான் முத்துச்சிப்பி' என்று குறிப்பிட்டுக் காட்டினேன்.

ஆனாலும் மனித மனதிற்கு ஒரே காட்டாந்தரை போது மானதாக இல்லையே! 'இக்கரைக்கு அக்கரை பச்சை' என்ற வெள்ளாட்டின் சுபாவம் கொண்டதாயிற்றே! இத்தகு நிலையற்ற மனதை நம்பி ஒரேயொரு மேய்ச்சல் வெளியை மாத்திரம் போதுமாக்கிக் கொள்வது விவேகமாகாதே!

## தத்துவச் சோலையான 'முத்மயின்னா'

- ஈகைக் குணம்,

- அவனல்லால் அணுவும் அசையவே அசையாது எனும் இறை நம்பிக்கை.

- சகிப்புத் தன்மை

- வணக்க வழிபாடு

- நன்றியுணர்வு

- திருப்தி

ஆகிய ஆறு அழகான கிளைகளைக் கொண்ட இந்த 'முத்மயின்னா' என்ற மரம் மனித மனதிற்கு தத்துவச் சோலையாகத் திகழ்கின்றது என்பதனை எவரால் மறுத்திட இயலும்.

முந்திய மூன்றைக் காட்டிலும் இது மனதைப் பக்தி வழியில் இட்டுச் சென்று முக்தி நிலையைக் காட்டிக் கொடுக்குமே தவிர அந்த முக்தி நிலையில் மூழ்கிடச் செய்யும் ஆற்றல் இதற்கில்லை என்பதால் ஐந்தாவதாக ராளிய்யாவைப் பற்றி சிந்திக்க வேண்டிய கட்டாயத்திற்கு தள்ளப்படுகின்றோம்.

## 'அறவழிச் சாலையான ராளிய்யா

- பற்றற்ற வாழ்க்கை

- மனத் தூய்மை

- செய்யப்படும் செயல் மனித உரிமையை மதிக்கக் கூடியதாகவும், இறைவனுடைய வரம்பை மதிக்கக் கூடிய தாகவும் இருந்திடல் வேண்டும் என்பதில் காட்டக் கூடிய பேணுதல்.

- தனது இம்மை, மறுமை நலன்களுக்குக் கொஞ்சமும் தேவைப்படாத காரியாதிகளை முற்றாக விட்டு ஒதுங்கிக் கோளுதல்.

-கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்றுவதில் உறுதி காட்டுலுதல், ஆகிய இந்த ஐந்து குணப்பண்புகளும் ராளிய்யாவின் கிளைகளாக உள்ளன.

இந்த ஐந்தையும் முழுமையாகத் தனதாக்கிக் கொள் ளும் எந்த மனிதரும் புனிதத்தின் உச்சாணியை எட்டிப்

பிடிக்காமல் இருந்திட முடியாது. ஏனெனில் இவை அறத்தின் ஆணி வேர்களாகும். ஆக்கும் ஆற்றல் பெற்றதென்பதை வேதங்கள் என்று சொல்லப்படும் அனைத்துமே ஒட்டு மொத்தமாக ஒப்புகின்றது.

ஆதலால் இந்த ராளிய்யா நிழலில் தனது மனதை மேய்ந்திட அனுமதிக்கும் அனைத்து மாந்தரும் அறவழி சென்று ஆன்மீக நிலையடைந்து மோன நிலையை அனுபவிக்க முடியாது போனாலும் அதை ஆன்மீகக் கண்களால் காணமுடியும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. ஆகவே தான் அதனை அறவழிச் சாலை' என்று குறிப்பிட்டேன்.

ஆன்மீகத்தின் அறநிலையத்தை அடைந்து விட்ட மாந்தருக்கு இத்துடன் நின்று கொள்வோமே' என்ற மன நிறைவு ஏற்படக்கூடாது. ஆகவே மோன நிலையை அடைந்திடுவதற்குரிய பாட்டையைக் காட்டுவது நிலைமையின் கட்டாயமாகி விடுகின்றது என்பதால் மோனத்தின் முத்தாரமான 'மர்ளிய்யா' பற்றி கண்டு களிப்போம்.

## 'மோனத்தின் முத்தாரமான மர்ளிய்யா'

-நற்குணம்

-அல்லாஹ் அல்லாத அனைத்தையும் தன்னிலிருந்து முற்றாக ஒழித்துக் கட்டி விட்டு அல்லாஹ்வை மாத்திரம் தனது ஊணாக, உயிராக, சொத்துச் சுகமாக ஆக்கிக் கொள்ளுதல்

-படைப்பினங்களின்பால் கிருபை காட்டுதல்.

-அல்லாஹ்வின் பக்கம் ஒவ்வொரு நொடியிலும் தன்னை நெருக்கமாக்கி, சமீபம் அடைந்து கொண்டிருப்பது.

—அல்லாஹ்வின் வல்லமைகளைப் பற்றியே அல்லும் பகலும் ஆய்ந்து தோய்தல்

—அல்லாஹ்வினால் தனக்கும், மற்றவர்களுக்கும் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டுள்ள வாழ்க்கை நிலைகளை முழு மையாகப் பொருந்திக் கொள்ளுதல்.

ஆகிய இந்த ஆறு கிளைகளும் 'மர்ளிய்யா' எனு மரத்திற்குச் சொந்தமான விந்தைமிகு கிளைகளாகும்.

அடடா, இந்த மர்ளிய்யா மர நிழலில் நின்று மேய்ந் திடும்படி மனிதமனம் விடப்பட்டால் உலகில் சண்டையேது, சச்சரவுகள் தான் ஏது

மணிமகுடமா, சேச்சே அது எனக்கு வேண்டாம்

மாடமாளிகையா, ஏறிட்டும் பாரேனதை

பஞ்சணையா, பாலும் பழமுமா, வேண்டாம் வேண் டவே வேண்டாம் என்று ஒவ்வொரு வரும் வெறுத்தொதுக் கும் குப்பைப் பண்டங்களாக அவைகளெல்லாம் ஆக்கப்பட்டு விடுமே.

இத்தகு உன்னதம் ஏற்பட்டு விட்டால், கானத்தைக் கடந்து—ஞானமடைந்து—மோகன மோனத்தைப் பெற்று 'இறைதரிசனம்' என்ற அழியாப் பேரானந்தத்தில் எப் போதும் மிதந்து கொண்டிருக்க முடியுமே.

ஆகவேதான் இத்தகு எழில் பூத்துக்குலுங்கும் மர்ளிய் யாவை மோனத்தின் முத்தாரம் என்றேன்.

எண்ணமும், இதயமும் இறைதரிசனத்தில் இன்பம் சுவைப்பதைக் காட்டிலும், பூத உடலுடன்கூடிய மனித உருவமும் ஒன்றிணைந்து அந்த அழியாப் பேரின்பத்தை அடைந்திடும் நிலை கிடைக்கப் பெறுமானால் அதற்கு ஈடிணை இருக்க முடியுமா?

ஆனால் அத்தகு பேறு முழுமையின் மொத்த வடிவமான 'காமிலா' வில்தான் கிடைக்கப் பெற முடியும் ஆகவே கடைசி எல்லையான அந்தக் காமிலாவையும் விண்டு காண்போம்.

## காயத்தின் கடைசி எல்லையான 'காமிலா'

இதுவரை ஆறு மனநிலைகளைக் கண்டோம். கட்டுண்டோம்.

ஆனால்; இந்த ஆறுநிலைகளில் முதல் நிலையான 'அம்மாரா' என்றநிலை அதன் அடியிலிருந்து நுனி வரை அனைத்துமே மிக, மிகக் கொடியது அல்லவா? ஆகவே அதை விடுத்து மற்ற ஐந்து நிலைகளை எடுத்துக் கொண்டால் ஒன்று மனிதனைக் 'கால்மனிதனாக' மாற்றக்கூடியதாகவும் மற்றொன்று அவனை 'அரைமனிதனாக' மாற்றக் கூடியதாகவும் தான் காணப்படுகிறதே தவிர, அவனை முழு மனிதனாக மாற்றக் கூடியதாக அந்த ஐந்தில் எதனையுமே காண முடியவில்லை.

ஆனால்; இந்த 'காமிலா' என்ற மனநிலை ஒன்றுக்கு மாத்திரம்தான் மனிதனை முழுமனிதனாக மாற்றிடவல்ல ஆற்றல் உண்டு. ஆதலால்தான் 'காயத்தின் கடைசி எல்லை' என்று அதனைக் குறுப்பிட்டேன்.

ஆமாம்... லவ்வாமாவில் உள்ள நல்லியல்புகள், முல்ஹிமாவில் உள்ள நல்லியல்புகள், முத்மயின்னா, ராளிய்யா, மர்ளிய்யா ஆகியவற்றில் உள்ள நல்லியல்புகள் அனைத்துமே ஒன்று சேர்ந்த ஒரு உன்னத நிலைதான் இந்த காமிலா.

கடிகாரத்தின் பெண்டுலம்போல அங்கு சில நேரங்களிலும் இங்குசில நேரங்களிலுமாக தங்களது மனதை மேய்ந்திடவிடும் மனிதர்கள் ஒரு வகையினர். இவர்கள் அந்த ஐந்தில் மாறி மாறி லயித்திரு

பவர்களாதலால் இவர்கள் சராசரி மனிதர்களாவர். இவர்களின் இறுதி நிலையை அறுதியிட்டுக் கூறிட மனிதரில் எவருக்கும் முடியவே முடியாது.

என்ன சொன்னாலும், எவர் சொன்னாலும், எப்படி, எப்படி இதமாக பதமாக— எச்சரித்து — ஆசை காட்டிச் சொன்னாலும் 'நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்தான்' என்ற விடாப் பிடியான போக்கில் 'அம்மாரா' விலே தங்கள‌து மனதை ஸ்திரப்படுத்திக் கொண்டிருப்போரும் மனிதரில் நிரம்ப உண்டு. இவர்கள் மனித உருவெடுத்து விட்ட மிருகங்கள். இவர்களின் நிலை சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

இத்தகு இழி பிறவிகளைக் குறித்து ஏகனாம் வல்ல அல்லாஹ் தனது சுத்த, சத்திய வேதமாகிய குர்ஆன் ஷரீபில்

நிச்சயமாக மனிதர்களிலும், ஜின் (பூதங்) களிலும் அநேகரை, நரகத்திற்காகவே நாம் படைத்திருக்கின்றோம். (அவர்கள் எத்தகையோ ரென்றால்,) அவர்களுக்கு இருதயங்களிருக்கின்றன; எனினும் அவற்றைக கொண்டு (நல்லவைகளை) அவர்கள் சிந்தித்துணர மாட்டார்கள். அவர்களுக்கு கண்களுமுண்டு: எனினும் அவற்றைக் கொண்டு அவர்கள் (இவ்வுலகிலுள்ள அத்தாட்சிகளை) பார்க்க மாட்டார்கள். அவர்களுக்குச் செவிகளுமுண்டு; எனினும் அவற்றைக் கொணடு அவர்கள் (நல்லுபதேசங்களுக்குச்) செவிசாய்க்க மாட்டார்கள். இத்தகையோர் மிருகங்களைப் போன்றவர்-அன்று அவற்றைவிட அதிகமாகக் கேடு கெட்டவர்கள். இத்தகையோர்தாம் (நம் வசனங்களை) அலட்சியம் செய்தவர்களாவர்.

குர் : 7 : 179

என்று திட்டவட்டமாகக் கூறிக் காண்பிக்கிறான்.

ஆதலால், அவர்களின் இறுதி முடிவு குறித்து, சந்தேகத்திற்கு இடமின்றி முடிவான முடிவை எடுத்துக் கொள்ள முடியும்.

எவர் இன்னா செய்தாலும் அவரை ஒறுத்து. ஒதுக்கி விட்டு சொல்லால், செயலால், சைக்கினையாலெல்லாம் அனைவருக்கும் நன்னயம் செய்து அந்த நன்னயத்தையே தானும் முழுக்க, முழுக்க எடுத்தொழுகி வாழும் மனிதப் புனிதர்கள் 'காமிலா' என்ற இலக்கிலேயே தங்களை நிரந்தரமாக்கிக் கொண்ட நிறைமனிதர்களாவர்.

இவர்கள் சித்தீகீன்கள், சுஹதாக்கள், முத்தகீன்கள் அவ்லிய்யாக்கள் என்ற பற்பல அந்தஸ்த்துக்களில் பதவி வகிக்கக்கூடிய மாமனிதர்களாவர்.

இத்தகு உத்தமசீலர்களைப் பற்றி;

''ஆதமுடைய சந்ததியாகிய மனிதர்களை நிச்சயமாக நாம் கண்ணியப்படுத்தினோம். கரையில், (வாகனங்கள் மீதும்) கடலில் (கப்பல்கள் மீதும்) நாம் தாம் அவர்களைச் சுமந்து செல்லும்படி செய் கிறோம். நல்ல ஆகாரங் களையும், நாமே அவர்களுக்கு அளிக்கிறோம். நாம் சிருஷ் டித்த (மற்ற ஜீவராசிகளில்) அநேக வற்றின் மீது (பொது வாக) நாம் அவர்களை மிக மிக மேன்மையாக்கி வைத்தி ருக்கிறோம்.

(குர் : 17; 70)

ஆகவே, எவர்கள் மெய்யாகவே அல்லாஹ்விற்கும் அவனுடைய தூதருக்கும் (இவ்வாறெல்லாம்) வழிப்படுகின் றார்களோ அவர்கள், அல்லாஹ்வின் அருளைப்பெற்ற நபி மார்கள், சத்தியவான்கள் பிராணத் தியாகிகள், நல்லொழுக் கமுடையவர்கள் முதலியவர்களுடன் (மறுமையில்) வசிப்பார் கள்; இவர்கள் தாம் மிக்க அழகான தோழர்கள்.

(குர் : 4; 69)

என்றெல்லாம் படிப்போர்தம் செவியும் சிந்தையும் வியக்க, வியக்க வல்ல அல்லாஹ் இந்த காமிலாவில் நிலை கொண்டவர்களைப்பற்றி கூறிக்காண்பிக்கின்றான்.

கருணைக்கடலான அல்லாஹ் அம்மாராவை விட்டும் நிரந்தர விடுதலை பெற்ற போர்வாள்களாகவும், லவ்வாமா, முல்ஹிமா என்று படிப்படியாக முன்னேறி, கடைசி கடைசியாக காமிலாவில் நிலைகொள்ளக் கூடிய நிறைமனிதர்களாகவும் என்னையும் உங்களையும் ஆக்கி அருள் புரிவானாகட்டும்.

அன்பரீர்! இதுவரை மனித மனதின் மாறுபட்ட ஏழு நிலைகள் குறித்து தோராயமான புள்ளிவிபரங்களைக் கண்டோம். சிந்திக்கும் பக்தசிகாமணிகளுக்கு தங்களையும் பிறரையும் இனம் கண்டுகொள்ள இந்த அளவே போதுமானது எனக் கருதுகின்றேன். ஆனாலும், அவை ஒவ்வொன்றையும் துகிலுறித்துக் காட்டிடும் முறையில் 'ஆசை அலைகளின் ஓசை நிலைகள்' என்ற பெயரில் தனிப் புத்தகம் ஒன்றை தயார் செய்து வருகின்றேன். இன்ஷா அல்லாஹ் அப்புத்தகம் முழுமை பெற்று உங்களது கரங்களில் தவழும்போது தவ வாழ்வைப் பற்றி தமிழகம் ஒரு புதிய அத்தியாயத்தைப் பெற்று பெருமிதம் அடையுமென்பதில் எனக்கு மிகுந்த நம்பிக்கையுண்டு. கைர்-விசயத்திற்கு வருவோம்.

இஸ்லாம் கூறும் இலட்சிய வாழ்க்கையினை அடைந்திடுவதற்கு பெரும் தடையாக அமைந்திருப்பது அந்த ஏழு மன நிலைகளில் அம்மாரா மாத்திரம்தான்.

ஆகவே தனது சமுதாயச் சோதர்களை இலட்சியவாதிகளாக ஆக்க வேண்டும் மென்பதில் பேரார்வம்கொண்ட நமது புலவர் பூசிரிப் பெருமகனார் அடுத்துவரும் கண்ணி

களில் அந்த அம்மாராவின் கேடுபாடுகளைச் சாடோ சாடென்று சாடியும், அதன் வஞ்சகச் சூழ்ச்சிகளிலிருந்து நம்மைத் தற்காத்துக் கொள்ளவல்ல வழி வகைகளை விவரித்தும் தனக்கே உரித்தான தளிர் நடையில் 'அலைபாயும் மனம்' என்ற இந்த இரண்டாம் காண்டத்தை களைகட்டச் செய்கின்றார் பாருங்களேன்.

فَإِنَّ أَمَّارَتِي بِالسُّوءِ مَا اتَّعَظَتْ
مِنْ جَهْلِهَا بِنَذِيرِ الشَّيْبِ وَالْهَرَمِ (١٣)

**ஃபஇன்னஅம்மார (த்) தீ பிஸ்ஸூயி**
**மத்தஅழத் மின்ஜஹ்லிஹாபிநதீ**
**ரிஷ்ஷைபி வல்ஹரமி**

மூப்பும், நரையும் (திருந்து, திருந்து என) என்னை எச்சரித்தும் கூட (தீமையில் ஊறிப்போன) எனது கெட்ட மனம்—தனது அஞ்ஞானத்தின் காரணமாக-தூய்மை பெற்றிட வில்லை.

*தீமைசெயத்தூண்டுமனம் சேர்நரையும் மூப்பும்-*
*என்னைத்*
*தூய்மைபெறஎச்சரித்தும் தொலைக்கவில்லை*
*அஞ்ஞானம்*

என கொஞ்சு தமிழில் கூறிக் காண்பிக்கின்றார் மதுரை மரைக்காயர்

وَلاَ اَعَدَّتْ مِنَ الْفِعْلِ الْجَمِيلِ قِرَى
ضَيْفٍ اَلَمَّ بِرَأْسِي غَيْرَ مُحْتَشِمِ (١٢)

**வலா அஅத் தத்மினல் ஃபிஃஉலில் -ஜமீலி கிராழைஃபின் அலம்மபிரஃ ஙீஹைர முஹ்தஷிமி**

நாணமற்ற விருந்தாளியான என் தலை நரையை உபசரிப்பதற்காக நற்செய்கை எதனையும் சேகரிப்பதற்கு அம்மனம் - முயற்சிக்க வில்லை.

*இதனை—*

*நாணம் இல்லா தென்தலைசேர் நரைவிருந்தை ஆதரிக்கும்*

*மாணறங்கள் சேகரிக்க மனம் முயற்சி செய்திலதே!*

என நம்மொழியில் எடுத்தியம்புகின்றார் மறைக்காயர்.

வி-ரை: நடைதளர்ந்து, நாட்களை எண்ணிக் கொண்டிருக்கும் குடுகுடு கிழவன் கூட தனக்கு நரைவருவதை விரும்பி வரவேற்கத்துணிவதில்லை.

ஆனால் விரும்பினும் விரும்பாவிடினும் குறித்த கால கட்டத்தில் மனிதனுக்கு இயற்கையாகவே நரை தோன்றி விடுகின்றது.

இந்த வகையில் அது 'அழையா வீடுதேடி வரும் வேண்டாதவிருந்தாளிதான்' அல்லவா...?

ஆகவேதான் நயது கவிவாணர் அவர்கள் அந்நரையை ‘நாணமற்ற விருந்தாளி’ என வர்ணிக்கின்றார்.

எவ்வளவு பொருத்தம் பார்த்தனையோ!

அன்றி வீடுதேடி வலிந்து வந்து விட்டவரை, வேண்டி யவர்- வேண்டாதவர் எனக் கருதாமல் வந்தவரை வர வேற்று உபசரிப்பதன்றோ மனிதப்பண்பு.

ஆனால் கசப்பான உண்மையை-மரணத்தை முன்னறி விப்புச் செய்யும் நரை மயிரை, அது வந்துற்ற பின்னும், அதை கௌரவிக்கும் வண்ணம் அதற்கு ‘நற்செய்கை’ எனும் அறுசுவை விருந்து படைக்க விடாமல் தம்மை (மனிதனை) த்தடுப்பதாக நஃப்ஷே அம்மாராவின் மீது புலவர் குற்றம் சாட்டுவதின் மூலம் அழையாமல்- விரும்பா மல் வந்துற்ற அந்த நரையைப் பார்க்கிலும், வலிய வந்த அவ்விருந்தாளியை உபசரிக்க மறுக்கும் நஃபஷே அம்மா ராவே பண்பால் மிகவும் கேடு கெட்டது எனச்சாடு கின்றார்.

உண்மைதானே!

لَوْكُنْتُ اَعْلَمُ اَنِّيْ مَا اُوَقِّرُهٗ

كَتَمْتُ سِرًّا بَدَالِيْ مِنْهُ بِالْكَتَمِ (١٥)

**லவ் (க்) குன்த்து அஃலமு அன்னீ மா உ-வக்கிறுஹூ**
**க(த்)தம்து ஸிர்ரன் பதா லீமின்ஹூ பில்கதமி**

(அங்கனம் வலிய) வந்துற்ற விருந்தாளியை (நரையை) மரியாதை செய்ய முடியாமற் போகும் என்பதை (முன்பே) நான் உணாந்திருப்பின் கருப்புக் கலர் பூசி முளையிலேயே அதை மறைத்திருப்பேனே!

இதனை

நரைவிருந்தை சௌரவிக்கேன் என்று முன்னே
-நான் உணாந்தால்

விரைவிற்கருஞ் சாயமிட்டு விருந்தை மறைத்திருப்
பேன்.

எனக் கூறிடுகின்றார் மறைக்காயர்.

வி-ரை: நரை தோன்றிய முதல் மனிதர் நபி இப்றஹீம் (அலை) அவர்களாகும். முன் எவருக்குமே இல்லாமல் தமக்கு நரை தோன்றியதைக்கண்ட நபியவர்கள் ''இறைவா இதென்ன புதுமை?'' எனக் கேட்டார்கள் அதற்கு இறைவன்'' அன்பரே! அது நாம் உமக்கருளிய ''கௌரவமாகும்'' எனக் கூறினான்.

அன்றி ''நரை எனது பேரொளியில் நின்று முள்ளதாகும்'' என இறை நிகழ்த்தியதாக ''ஹதீதே குதுஸியின்'' மூலம் உணர்த்தப் பட்டுள்ளது.

இப்படி. கௌரவம்' என்றும் பேரொளி என்றும் ஏக இறைனால் வர்ணிக்கப்பட்டுள்ள அந்நரை மனித சமுதாயத்திற்கு 'கிடைப்பதற்கரிய கடாச்சம்' என்பதில் சந்தேகமேது...?

ஆனால் அருடகடாச்சமான அவ்வெள்ளிக்கம்பியை நற்செய்கை'' ''எனும் உரைகல் கொண்டு மெருகேற்றத் தவறினால், முடிவற்றசங்கிலித் தொடர்பான கொடுந் துன்பத்தை ஏற்றுத் தீரவேண்டுமென்பது தவிர்க்க முடியாத ஒன்றாகிவிடும். அதன்பின், ஆடினாலும் முடியாது ஓடினாலும் முடியாது. அல்லும் பகலும் அனவிரதமும் தலை

கீழாக நின்று கடுந்தவம் புரிந்தாலும் அக் கொடுந் துன்பத்திலிருந்து தப்பமுடியாது.

இந்தக் கருத்தை வலியுறுத்த முனைந்த இமாம் பூசிரி அவர்கள் 'அங்கலாய்ப்பு' வழியில் தனது சொல்வளத்தைக் கையாண்டுள்ளார்கள்.

'புற்றுநோயால் அவதியுறும் நோயாளியின் மனம், 'அட்டா! இக்கொடு நோய் என்னைத் தொடும் எனத் தெரிந்திருந்தால் பீடி புகைப்பதைத் தவிர்த்திருப்பேனே!'' என ஏங்கித் துடிக்குமாம்.

குற்றம் மெய்ப்பிக்கப்பட்டு, தூக்கு தண்டனை உறுதி செய்யப்பட்டு மரணத்தின் விளிம்பில் நின்று கொண்டிருக்கும் கொலைக் கைதியின் உள்மனம் 'அடடா! இக் கொடுந் தண்டனைக்குட்பட நேரிடும் என முன்பே தெரிந்திருந்தால் அக் கொலை பாதகத்தில் ஈடுபடாமல் இருந்திருப்பேனே!' என ஏங்கித் தவிக்குமாம்.

இப்படி செய்யக் கூடாததை செய்துவிட்டு, அன்றி, செய்து தீர வேண்டியதை செய்யாமல் இருந்து விட்டு, அதனால் விளையும் சாதகபாதங்களை அனுபவித்துத் தீர வேண்டிய துர்பாக்கிய நிலையை - துன்ப நிலையை அனுபவிக்கும் போதுதான் தன் செய்கையை அல்லது செய்யாமையை நினைத்து நெஞ்சம் நெக்குருகி மனம் நொந்து கொள்வானாம் மனிதன். இந் நிலைக்கு தமிழில் 'அங்கலாய்ப்பு' எனக்கூறுவர். இம் முறையில் உள்ளக் கிடக்கையை வெளிப்படுத்துவது உயர்ந்த இலக்கிய மரபாகும்

அன்றி, இக்கண்ணியில் கருப்பு கலர் பூசி மறைத்திருப்பேனே! எனக் கோடிட்டுக் காட்டியதன் மூலம் நரைக்கு ஒப்பனை செய்து கொள்வது கூடுமா, கூடாதா? என்ற மார்க்கச் சட்டப் பிரச்சினையை இங்கே கிளப்பியுள்ளார் இமாம் அவர்கள்.

முடியின் இயற்கை நிறமான கருங்கலரைத் தரக்கூடிய பொருட்களால் ஒப்பனை செய்வது முற்றாகக் கூடாது - ஹறாமாகும்.

ஆனால் கருமையற்ற வேற்றுக்கலர் தரக் கூடிய மருந்தோண்டி போன்ற பொருட்களால் ஒப்பனை செய்து கொள்வதை தடுக்கப்பட வில்லை.

مَنْ لِي بِرَدِّ جِمَاحٍ مِنْ غَوَايَتِهَا
كَمَا يُرَدُّ جِمَاحُ الْخَيْلِ بِاللُّجُمِ ⑭

**ம(ல்)ன்லிபிரத்திஜிமா ஹின்(ம்)மிங்**
**ஙவாய(த்) திஹா**
**கமாயுறத்துஜிமா ஹுல்கைலி**
**பில்லுஜூமி**

இடக்குச் செய்யும் குதிரையின் அடங்காமையை (அதன் கடவாய்தனில் மாட்டப் பெற்றுள்ள) கடிவாளம் அடக்குவதைப்போன்று (தீமையில் திழைத்து நிற்கும்) என் மனத்தை அடக்குபவர் எவரோ!

இதனை -

இடக்குக் குதிரையின் வாயிடு கடிவாளத்தினை மடக்கல் போல் என்மனம் செய் மறம் அடக்குவார் எவரே? என மறைக்காயர் கேவுகின்றார்.

க -ரை : ராவுத்தனுக்கு அடங்காத குதிரையின் திமிரை அடக்கி ஒடுக்கிவிட கடுவாளம் பயன்படுவதே போல் இறைக் கட்டளைக்கும் இரசூல் (ஸல்) அவர்களின் சுன்னத்திற்கும் அடங்காத நஃப்ஸே அம்மாராவின் திமிரை அடக்கி ஒடுக்கிட உதவும் கருவி எது? உரமேறிய உற்ற தோழன் எவர்...?

فَلَا تَرُمْ بِالْمَعَاصِي كَسْرَ شَهْوَتِهَا

إِنَّ الطَّعَامَ يُقَوِّي شَهْوَةَ النَّهِمِ (١٤)

**பலா தரும் பில்மஆ ஸீ கஸ்ர ஷஹ்வ(த்) திஹா**

**இன்னத்திதா ஆமயுகவ்வீ ஷஹ்வ(த்) தன்நஹிமி**

அதற்காக பாவங்கள் செய்து பற்றொழிக்க எண்ணாதே! ஏனெனில்; உண்டி உணவும் பிரியனின் ஆசையைப் பண்மடங்காகத்தான் பெருக்கும்

இதனை-

பாவங்கள் செய்துமனப் பற்றொழிக்க எண்ணாதே!

ஆவல்உண்டி மேல்உடையோன்

ஆசையது கூட்டிடுமே!

என மறைக்காயர் பாடுகின்றார்.

கரை : நஃப்ஷே அம்மாராவின் திமிரை அடக்கி ஒடுக்கிட வழிவகையில்லை என்பதற்காக பாவங்களைத் திரும்பத் திரும்பச் செய்வதால் அதிக அலுப்பும் அறுவறுப்பும் ஏற்பட்டு நஃஷே அம்மாராவின் திமிர் தணிந்துவிடும் என எண்ணாதே! ஏனெனில் சாப்பாட்டு ராமனுக்கு அறுசுவை உண்டியை வேண்டிய மட்டும் படைப்பதால் அவனது சாப்பாட்டு மோகம் முன்னதைவிட அதிகரிக்கத்தான் செய்யும்.

வி-ரை : சாப்பாட்டுப் பிரியனுக்கு அறுசுவையோடு உணவு படைத்து, அவனது கண்கள் பிதுங்குமளவு அதை உண்ண வைத்து வீடுவதால் அந்நேரமுதல் அவனது

சாப்பாட்டு மோகம் தணிந்துவிடுவதில்லை. அடுத்த நேரத்திலும் நாவிற்கினிய அத்தகு உணவு கிடைத்திடாதா? என எண்ணி அவனது நாவில் நீர் சுறக்கும். நாளடைவில் வாய்க்கினிய உணவிற்காக மானம், மரியாதை குடும்ப கௌரவம் அனைத்தையும் காற்றில் பறக்கும்படி விட்டு விட்டு சாப்பாட்டு ராமனாக அவன் ஏமாந்து திரியுமளவிற்கு அவனது சாப்பாட்டு மோகம் அவனில் வளர்ந்துவிடும்; அல்லவா?

அதுபோன்றே

தீமை செய்வதில் மனதைப் பறிகொடுத்தவன்- நஃப்ஷே அம்மாராவிற்கு அடிமைப்பட்டவன் அத்தீமை களிலிருந்து தன்னை மீட்டிட முயன்றும், அதற்காக வருந்தியும் முடியாத நிலையில், வேறு வழியின்றி,

பழக்கப்பட்ட பாவச் செய்கைகளை திரும்பத் திரும்ப செய்தாலாவது 'ஆசை அறுபது நாள் மோகம் முப்பது நாள், என்பதற்கொப்ப இன்றில்லாவிடினும் வாழ்க்கையில் என்றாவதொருநாள் அத்தீப்பழக்க வழக்கங்களில் அலுப்பும் அறுவருப்பும் ஏற்படும். அப்போது அதைச் சிரமமின்றி முற்றாக விட்டொழித்து விடலாம் எனச் சிலர் கருதி செயல் படக்கூடும்.

அந்த சிலருக்கு-

சாப்பாட்டுப் பிரியனின் நிலையினை உணர்த்தி, தீமையில் சுவை கண்டு சொக்கி நின்றவனுக்கு அத்தீமை யில் திரும்பத் திரும்ப ஈடுபடுவதால் அதில் முன்பிருந்ததை விட படிப் படியாக புதுவகை ருசி ஏற்பட்டு மென்மேலும் அதுபோன்ற பல தீமைகளைச் செய்யும்படி ஏற்படுமே தவிர தீப்பழக்கத்தை முற்றாக விட்டொழிக்க வழி பிறக்காது என எச்சரிக்கின்றார் தெய்வீகக் கவிஞர் பூசிரி அவர்கள்.

وَالنَّفْسُ كَالطِّفْلِ إِنْ تُهْمِلْهُ شَبَّ عَلَى
حُبِّ الرَّضَاعِ وَإِنْ تَفْطِمْهُ يَنْفَطِمِ ﴿١٨﴾

**வந்நஃப்ஸு கத்திஃப்லி இன்**
**துஹ்மில்ஹு ஷப்பா அலா**
**ஹுப்பிர்ரிளாஇ வஇன் தஃப்திம்ஹு யன்**
**ஃபதிமி**

உரை : மனிதமனம் குழந்தை போன்றது (குறித்த வயதில் குழந்தைக்கு) பால்குடி மறக்கடித்தால்தான் மறக்கும்.

அங்ஙனம் குறிப்பிட்ட காலகட்டத்தில் பால்குடி மறக்கடிக்கா விட்டால் ஆசை முறியாமலே அது பெரியதாகும்.

இதனை—

மனம் குழந்தை போன்றது பால் மறக்கடித்தால் தான்
மறக்கும்

முனம் செய்யாக் கால்ஆசை முறியாமலே பெரிதாம்

என நம்மொழியில் நயம்பட பாடுகின்றார் மறைக்காயர்.

**வி-ரை :** பாவங்களைத் தொடர்ந்து செய்துகொண்டே பற்றொழிப்பதென்பது நடவாது - முடியாது என்ற தனது வாதத்திற்கு வலுவேற்றும் நோக்கோடு உவமை நயமும் உயர்ந்த தத்துவக் கருத்தழகும் கொண்ட இந்த 19-ம் கண்ணியை கையாண்டுள்ளார்கள் நமது தத்துவக் கவியர்கள்.

ஒரு தாய் தனது குழந்தை பெண்ணாக இருந்தால் ஒன்றரைவயதிற்குள்ளும், பையனாக இருந்தால் இரண்டு

வயதிற்குள்ளும், பால்குடி மறக்கடித்திட வேண்டும் என ஹனஃபி மத்ஹபு கட்டளையிடுகின்றது.

ஆதலால்—

குழந்தை குறிப்பிட்ட அந்த வயதை அடைந்ததும் அந்தத் தாய் தான் பெற்றெடுத்த பிள்ளைகனியமுதிற்கு, தனது தாய்ப்பாசத்தை ஈவிரக்கமற்ற கல்லாக மாற்றிக் கொண்டு, பால் சுரப்பதால் தனது மார்பகங்கள் வீங்கி அதன் விளைவால் ஏற்படும் ரணவேதனைகளை சொல்லொண்ணா நோவினைகளையெல்லாம் சகித்துக் கொண்டு பால்குடி மறக்கடிக்கின்றாள்.

குழந்தை எவ்வளவுதான் அழுதாலும், அடம்பிடித்தாலும், வெந்தணலில் போட்ட புழுவெனத் துடித்தாலும், அவள் கொஞ்சமும் மசிந்து கொடுத்திடாமல் கசிந்துருகி விடாமல் நெஞ்சுறத்தோடு அவைகளைச் சமாளித்து, பல நாள் இரவு விழித்து, பகல் பசித்திருந்து குழந்தையின் பால் குடிப் பழக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைப்பதால் நிலையான வெற்றியைப் பெற்றுக் கொள்கிறாள். இதுதான் இயற்கை! ஒரு தாய் தனது சேய்க்கு செய்திட வேண்டிய செயற்கரிய செயல். ஆனால் இளகிய இதயம் கொண்டதொரு கோழைத்தாய், தனது குழந்தையின் கதறலைப் பொருத்துக் கொள்ள முடியாமல்-பாசப்பெரு வெள்ளத்தினை அணையிட்டுத் தடுத்திடச் சக்தியில்லாமல் மனமிளகிய வளாய்...

'அத்தா...அம்மா...' என்ற மழலைப் பேச்சைத்தவிர்த்து வேறெதுவுமே பேச, சொல்ல கேட்க அறியாத குறிப்பிட்ட அக்கால கட்டத்திலேயே குழந்தைக்கு பால்குடியை மறக்கடிக்காமல் விட்டு விடுகின்றாள் என கொஞ்சம் கற்பனை செய்து பார்ப்போமே!

கிள்ளை மொழி பேசும் அந்தப் பிள்ளை வயதில் பால் குடிப் பழக்கத்திற்கு முற்றுப்புள்ளி வைத்திடத் தயங்கிய அந்த அவத்தைத் தாய்—

குழந்தை, கெஞ்சி—கெஞ்சிக் குழைந்து வளைந்து பேசிடும் வயதினை அடைந்தபின் குழந்தையின் அந்தக் கொஞ்சலையும், கெஞ்சலையும் கண்டு மயங்கி மனமிறங்கிய

நிலையில் அப்பழக்கத்தை மறக்கடிக்கத் துணிவாள் என்பதில் என்ன நிச்சயமிருக்கின்றது?

அதன் பின்; அரட்டி—உருட்டி மிரட்டி பேசிடவல்ல வாலிப வயதினை அவன் அடைந்த பின் அவனுக்கு பால் குடி எனும் அப்பழக்கத்தை மறக்கடிப்பதென்பது எளிதான காரியமா என்ன?

இப்படிப் படிப்படியாகக் கற்பனை செய்து பாருங் களேன்.

அந்தக் கோழைத்தாய் அல்லது அவன், மரணிக்கும் வரை பால்குடி பழக்கத்திற்கு மூடு விழாவின்றி முடிவு நாளின்றி அந்த விரசம் தொடர்ந்தால்

அதுபோன்றே

குழந்தை நிலையில் உள்ள மனித மனதிற்கு பழக்க வழக்கங்கள் தாய்ப்பால் போன்றது.

தான் செயல் மேற்கொண்டு வரும் 'பழக்கம்' தீயவை அறுவறுக்கத் தக்கவை மனிதனின் புனிதத் தன்மைக்கு மாசு கற்பிப்பவை அவை, என எப்போது அவன் உணரு கின்றானோ, அல்லது உணர்த்தப்படுகின்றானோ அந்த நேரத்திலேயே உடனடியாக அதை விட்டொழித்திட வேண்டும்.

ஏனெனில்

மனசாட்சி உணர்ச்சியால் உந்தப்பட்டு உறைக்கின்ற நேரமே மனிதன் தனது மனதிற்கு பாவத்தை மறக்கடித்திட வேண்டிய காலகட்டமாகும்.

ஆனால் ஒருவன் தான் பழகிவிட்ட மதுவை குடியின் கேடுகளை உணர்த்த அல்லது உணர்த்தப்பட்ட பின்னும் 'அந்த ஃபங்சன்' வரை குடித்து விட்டு அன்றோடு நிறுத்தி விடலாம் வரும் பண்டிகையோடு விட்டுவிடலாம் என்று-

குடியை முற்றாக நிறுத்த கெடுவை நீட்டிக் கொண்டே போனால்

'அல்லது எப்போதோ ஒரு முறை பார்ட்டிகளில் மட்டும் தானே குடிக்கின்றோம். அது நம்மை என்ன செய்துவிடப் போகின்றது' என மெத்தனமாக இருந்தால்—

அப்பழக்கத்தின் விளைவு கற்பனையிலுதித்த கோழைத் தாயின் பொருளற்ற பாசத்தால் புனிதமான பால்குடிப் பழக்கம் விரச நிலையையும் கடந்து விகார நிலையினை அடைவதாக நாம் கண்டோமே அது போன்ற கெட்ட பழக்க வழக்கத்திற்கு கெடுவைத்துக் கொண்டே செல்பவனின் வாழ்க்கையும் விரசத்தையும் விகாரத்தையும் சந்தித்து தீர வேண்டியதேற்பட்டு விடும். வல்ல அல்லாஹ் நம்மனைவரையும் காப்பாற்றியருள் வானாக!

இதைத்தான் இறைநேசக் கவிஞர் அவர்கள்—

'குறிப்பிட்ட கால கட்டத்தில் குழந்தைக்கு பால்குடி பழக்கத்தை மறக்கடிக்கா விட்டால் பால்குடி ஆசை முறியா மலே அது பெரியதாகும் எனும் ஈற்றின் மூலம் நமக்குணர்த்து கின்றார்!

فَاصْرِفْ هَوَاهَا وَحَاذِرْ أَنْ تُوَلِّيَهُ
إِنَّ الْهَوَى مَا تَوَلَّى يُصْمِ أَوْ يَصِمِ (١٩)

**ஃபஸ்ரிப் ஹவாஹா வஹாதிர்-அன் துவல்லியஹூ**
**இன்னல் ஹவா மா தவல்லா யுஸிம் அவ்யஸிம்**

உரை: அகத்தாசை தனை மா(ய்த்து)ற்றி விடும் அது (உன்னை ஆட்டிப் படைக்கும்) அதிகாரியாக (உயரு மளவு) இடம் கொடாதே!

(ஏனெனில் அது) மிகைத்தால் உன்னை மாய்த்து விடும் அல்லது மீளாக் கேவலத்திற்குள்ளாகி விடும்.

இதனை-

அகத்தாசை மாற்றி அது அதிகாரியாக விடேல்!

மிகைத்தால் உனைமாய்க்கும்; விடுக்கிலுனைத்
தாழ்த்திடுமே!

என மறைக்காயர் பாடுகின்றார்.

'தான் மேற்கொள்ளும் பழக்கம் கெட்ட பழக்கம் என்பது தெரிந்தவுடன் அதை முற்றும் களைந்தெறிய ஆவன செய்திட வேணடும்' என இதற்கு முந்திய கண்ணியில் எடுத்துரைத்த இயற்கை கவியவர்கள்

'மனதைப் பற்றி நிற்கும் ஹவாவை (அகத்தாசையை-மன இச்சையை) மாற்றிவிட வேண்டும்' என்று இங்கே-கூறுவதின் மூலம் –

அந்த கெட்ட பழக்கங்களை விட்டொழிக்குதல் என்ற கடுஞ் சோதனையில் வெற்றி பெறுவதற்கு வழி வகைதனைக் கோடிட்டுக் காட்டுகின்றார்.

'ஹவா' எனும் அரபுப்பதத்திற்கு 'அகத்தாசை' மன இச்சை எனப்பொருள் கொள்ளலாம்.

'அவளின்றி நானில்லை அவளே எனது உயிர், உடமை எல்லாம். அவளை நான் அடையாவிட்டால் என் வாழ்வே அஸ்தமித்துவிடும்' என்று ஒரு குறிப்பிட்ட பெண்ணின் மீது காதல் கொள்வதற்கு மறுபெயர் அகத்தாசை.

'புகைக்காவிட்டால் என் புத்தி பேதலித்து விடும்-இலைபாக்கு மெல்லாவிட்டால் நான் உட்கொண்ட உணவு ஜீரணிக்காது' என்று தனது பழக்கத்தை இழக்காமலிருப்பதற்கு போலிக் காரணங்களை கற்பிக்கும் நிலைக்கு 'அகத்தாசை' என்று பெயர்.

'தும்பை மலர் போன்ற தொப்பிச் சம்பா அரிசிச் சோறும், அவியல், பொறியல், துவயல் போன்ற

நான்கைந்து துணைக்கறிகளும் நெய்யும், இறுதியில் தெளிமோரும் ஆக இத்தியாதி வகைகளுடன்தான் சாப்பிடுவது என் பழக்கம். அவைகளில் ஒன்று குறைந்தாலும் சாப்பிடப் பிடிக்காது எனக்கு, என்று வறட்டு வாதம் பேசித் திரியும் நிலைக்கு 'அகத்தாசை' என்று பெயர்.

சுருங்கச் சொன்னால்,

பற்றும் பாசமும் கொள்ள வேண்டிய பரம் பொருளாம் அல்லாஹ்விற்கு தன்னை அடிமைப் படுத்திட வேண்டிய நிலைமாறி, தானும் அழிந்து பிறரையும் அழிக்கக் கூடிய மேற்கண்ட மாதிரியிலான பழக்கத்திற்கு அடிமைப்படுதல் என்பது கேவலமான ஒன்றல்லவா

ஆகவேதான் நமது அருட்கவியவர்கள் 'அகத்தாசை (பழக்கத்திற்கு அடிமையாவதை) மாற்றி விடு' எனப் பரிந்துரைக்கின்றார்.

அப்படி அதை மாற்றாமல்-மாய்க்காமல் வளர விட்டால் —பழக்கத்திற்கு நிரந்தரமாக அடிமைப்பட்டு விட்டால்

அதற்கு முன், அதாவது நீ பழக்கத்திற்கு அடிமைப் படுவதற்குமுன் 'வேண்டுமென்றால் வேண்டும், வேண்டாம் என்றால் வேண்டாம்' என்ற நிலையிலிருந்த கெடுதிகளை; உன்னை கெஞ்சி கொஞ்சி சந்தர்ப்பங்களை உருவாக்கி விட்டு, போலி சமாதானங்களை சிருஷ்டித்துக் காட்டி கொஞ்சம் கொஞ்சமாக செய்யத் தூண்டிய நிலைமாறி—

அதன்பின் -அதாவது நீ பழக்கத்திற்கு அடிமைப்பட்ட பின்

'பழக்கப்பட்டுப் போன மதுவைக் குடி. இன்றேல், நரம்புத் தளர்ச்சி ஏற்படும். உடல் வலிப்பு உண்டாகும்' என உன்னை பயமுறுத்தி பணிய வைத்திடும் மேய்ப்பாளனாக- அதிகாரியாக அந்த அகத்தாசை உன்னில் உரு வெடுத்து விடும்.

ஆகவேதான் இந்த 19-ம் கண்ணியில் 'அகத்தாசை உன்னை ஆட்டிப் படைக்கும் அளவு உயர்ந்துவிட இடம் கொடாதே' என இமாமவர்கள் எச்சரித்தார்கள்.

அப்படி அது உன்னிடம் அதிகாரம் செலுத்தி ஆணை யிடுமளவு உயர்ந்துவிட்டால்

மதுவில் உள்ள நஞ்சு உன்னை கொன்று தீர்க்கும் வரை அந்த மதுவை விடமுடியாத நிலைக்கு நீ ஆக்கப் படுவாய், அல்லது குறைந்த பட்சம் பெற்றோரும், உற்றா ரும், மற்றோரும் உன்னைப் பார்த்து காரி உமிழும் அள விற்கு- சந்து முனைகளிலும், சந்தடி நிறைந்த நடை பாதைகளிலும், தள்ளாடி-மல்லாடி நின்று சித்தம் பிடித்தவன் போல உளறித் திரியும் படியும்: சேற்றையும் - சகதியையும் சந்தனமாக நினைத்து அதில் கிடந்து உருண்டு புரளும், பன்றியின் நிலைக்கும் உன்னை அந்த மதுப் பழக்கம் தாழ்த்தி கேவலப்படுத்தும்வரை உன்னை விட்டும் அப் பழக்கம், அகலாது.

இந்தப் பேருண்மையைத்தான்-

'அது மிகைத்தால் உன்னை மாய்த்துவிடும் அல்லது கேவலத்திற்குள்ளாக்கி விடும்' என்ற ஈற்றில் படம்பிடித்துக் காட்டுகின்றார். பகுத்தறிவுக் கவிஞர் பூஸிரி அவர்கள்.

## நஃப்ஸின் மறைமுகத் தாக்குதல்-

''அலைபாயும் மனம்'' எனும் இரண்டாம் தலைப்பில் இதுவரை நஃப்ஸே அம்மாராவின் நேரடித் தாக்குதலைப் பற்றியும் அத்தாக்குதலில் இருந்து தப்பித்துக் கொள்ளக் கூடிய உபாயங்கள் பற்றியும் உவமை நயத்தோடு உள்ளத் தைக் தொடும் கருத்தழகோடும் உபதேசரத்தினங்களை எடுத்துரைத்து நம்மை எச்சரித்த இறைநேசக்கவி பூசிரி அவர்கள்-

அடுத்து வரும் இருபதாம் கண்ணியிலிருந்து அந்த நஃப்ஸே அம்மாராவின் மறைமுகத் தாக்குதலை-கொரில்லா போர் முறையை படம் பிடித்துக் காட்டுகின்றார்.

நஃப்ஸே அம்மாராவின் நேரடித் தாக்குதலுக்கு பலியாபவர்கள் நூற்றுக்கு இருபத்தைந்து நபர்கள் தான் என்றால், அதனுடைய மறைமுகத் தாக்குதலுக்குப் பலியாபவர்கள் நூற்றுக்கு ஐம்பது நபர்கள் எனத் துணிந்து கூறிடலாம்-

ஆகவே நேரடித் தாக்குதலைவிட மறைமுகத்தாக்குதல் பற்றி மிக விழிப்புடன் இருந்திடுவது வேண்டிய ஒன்றாகும்

ஆகவே அதுபற்றி சற்று விழிப்புணர்வுடனும் விவேக சிந்தையுடனும் ஆய்வோம்.

وَرَاعِهَا وَهِيَ فِي الْأَعْمَالِ سَائِمَةٌ

وَإِنْ هِيَ اسْتَحْلَتِ الْمَرْعَى فَلَا تُسِمِ ٢٠

**வராஇஹா வஹிய ஃபில் அஃமாலி**
**-ஸாயிமத்துன்**
**வஇன் ஹியஸ்தஹ்லத (த்) தில் மர்ஆ**
**-பலா துஸிம்**

அ(ந்தநஃப்சு)து நற்கருமங் (களென்னும் புல்வெளி) களில் மேய்ந்து கொண்டிருக்குங்கால் அதை (நன்கு) கண் காணித்துக்கொள்!

ஆனால், அது ஒரே புல்வெளியை இன்பமாகக் கருதுமாயின் (ஒரே புல்வெளியிலும்) அதை மேயவிட்டிடாதே!

தன்மை மனம் செய்பொழுதும் நன்குமேற் பார்த்திருப்
-பாய்!

புன்மைப்பெருமைகொண்டால் புரியும் அறம் மாற்றிடு வாய்!

என மறைக்காயர் பாடுகின்றார்.

வி-ரை: மனித மனம் [நஃப்ஷே அம்மாரா] தீமை செய்யும்படி தூண்டினால் அது, அதன் நேரடித் தாக்கு தல், அதுபற்றி இதற்கு முன் அறிந்தோம். ஆனால் அந்த நஃப்சு நன்மை செய்யும்படி தூண்டினால் அப்போது முழு அளவு விழிப்புடன் அந்த நன்மையை நாம் செயன் மேற் கொள்ள வேண்டும். இல்லையெனில் நாம் செயல் மேற் கொண்ட அந்த நற்செயல் நம்மை அறியாமலே 'தற் பெருமை' எனும் கொடிய நஞ்சு கலக்கப்பட்டு ''குளிக்கப் போய் சேற்றை வாரிப் பூசிக்கொண்டு வந்த'' கதை யாக மாறி விடும்.

தற்பெருமை கொண்டதால் அரிய தவத்தி லீடுபட்டி ருந்த எத்தனையோ தபோதனர்களின் தவங்களெல்லாம் விழலுக்கு இறைத்த நீராக ஆக்கப்பட்டு விட்டன.

கைசிவக்க, பெறுவோர் தம் கண் சிவக்க, தனது செல் வங்களை வாரி வாரிக் கொடுத்த எத்தனையோ வள்ளல் களின் தர்மங்கள் அந்தத் தற்பெருமை காரணமாக நஞ் சுக்கு எரித்த நெருப்பாக மாற்றப்பட்டுப் போய் விட்டன.

நாளைக் கியாமத்து நாளில், தஹஜ்ஜுது போன்ற நடு நிசித் தொழுகைகள் முதற்கொண்டு நஃபிலான நோன்பு, நஃபிலான் ஹஜ்ஜு என இறை வணக்கங்களிலேயே உல வாழ்வைக் கழித்த நல்லடியார்கள்-சன்மார்க்கத்திற்காக தமது உயிரை-உடமையை தத்தம் செய்த ஷுஹதாக்கள் உலமாக்கள் போன்றவர்கள் கூட கொடியநரகிற்குள் தள்ளப் படுவர் என்றால், அவர்களுடைய அந்த நல் அமல்களில் தற்பெருமை எனும் கொடிய நஞ்சு கலக்கப்பட்டுப் போனதே காரணமாகும்.

வாய்மையும் தூய்மையும் மிக்க வானவர்களான மலக்கு

களுக்கு குருவாக இருந்த இப்லீசு இரண்டு ரக்அத்துக்களை ஆயிரம் வருடம் தொழுதானாம். அந்த அளவு நேர் நிகரற்ற பெரும் வணக்கசாலியும் இறைபக்தனுமான அவன் இன்று இறைவனால் சபிக்கப்பட்டவனாக மாறியதற்குக் காரணமும் அவன் உள்ளத்தில்; உதட்டில் ஏற்பட்ட தற்பெருமை தானே!

இதைத்தான் 'அரிய தவமும் அகந்தையினால் அழிந்துவிடும்' என அன்றே அறிஞனொருவன் கூறினான்.

'எவன் தற்பெருமை கொள்கின்றானோ அவனை இறைவன் தாழ்த்திவிடுவான்'' என அண்ணலெம் பெருமான் அவர்கள் எச்சரித்ததும் இதைத்தான்.

பெருமைகொள்ளும் தகுதி ஆதியும் அந்தமுமில்லாப் பெருஞ் ஜோதியான அல்லாஹ் ஒருவனுக்கே உண்டு; ஆயிரம் ஆண்டுஜீவித்திருந்தாலும் என்றாகிலும் ஒருநாள் அழிந்து படக்கூடிய ஜீவராசிகளில் எதற்கும் பெருமை கொள்ளக்கூடிய தகுதியோ-தரமோ கடுகளவும இல்லை. எனவே ஜீரணிக்கமுடியாத தன்மையை— பெருமையை தனதாக்கிக் கொள்ள எண்ணும் எந்த மனிதனும்.

அவன் வானத்தை வில்லாக வளைக்குமளவு, வையத்து மணல்களை கயிறாகத் திரிக்குமளவு ஆற்றல் பெற்றவனாக இருப்பினும் அழிந்து தாழ்ந்து விடுவான் என்பதில் ஐயமில்லை.

அல்லாஹ் கூறியதாக அண்ணலெம் பெருமான் எடுத்துரைக்கின்றார்கள்:

''பெருமை எனது பரிவட்டம்: கௌவரம் எனது இடுப்பு உடை; இவ்விரண்டிலும் எவன் என்னிடம் போட்டியிடுகின்றானோ அவனை முறித்துவிடுவேன்''

[அல்-ஹதீஸுகுத்ஸிய்யி நூல்: முஸ்லிம்]

எனவே- தற்பெருமை, கர்வம், அகந்தை, ஆணவம் போன்ற குணாதிசயங்களும் அவைகளின் விளைவால்

உண்டாகும் தற்புகழ்ச்சி, முகஸ்துதி, பிறர் புகழ்ச்சியை எதிர்பார்த்தல் போன்ற அனைத்தை விட்டும் நீங்கி அடக்கமாக பணிவாக நடந்திட வேண்டும்.

நற்கருமங்களைச் செயல்மேற் கொள்ளும் ஒவ்வொரு நேரத்திலும் மிகக் கவனமாக இருந்து உள்ளத்தில் தற் பெருமை ஊடுருவி விடா வண்ணம் தற்காத்திட ஆவன செய்திட வேண்டும், என்பதைத்தான் அருட்கவி பூசிரி அவர்கள்-

''அந்த நஃப்சு நற்கருமங்களில் ஈடுபடும் போது அதை நன்கு கண்காணித்துக்கொள்''

என அறிவுறுத்துகின்றார். அத்தோடு மட்டும் நின்றி டாமல் தற்பெருமை எனும் தீங்கு நம்மை அணுகாமல் காத்திடுவதற்குரிய உபாயத்தையும்,

''அது ஒரே புல்வெளியை இன்பமாகக் கருதுமாயின் அதில் அதை மேயவிடாதே''

என இரண்டாயிரம் ஈற்றின்மூலம் கூறி நம்மை எச்சரிக் கின்றார்.

அதாவது,

ஒரு மனிதன் ஐங்காலத் தொழுகைகளையும் தவறாமல் பேணித் தொழுது வருகின்றான் அத்தோடு தஹஜ்ஜது எனும் நடுநிசித் தொழுகை' இஷ்ராக் எனும் இளம் காலைத் தொழுகை, லுஹா எனும் முற்பகல் தொழுகை, அவ்வாபீன் எனும் இளம் இரவுத்தொழுகை போன்ற சிறப்புத் தொழுகை களையும் தொழுது வருகின்றான். அப்படித் தொழுது வரும் நேரத்தில் அவனது உள்ளத்தில் தான் செயல் மேற்கொள் ளும் சிறப்பு வணக்கங்களைப் பற்றி மன நிறைவு ஏற்படு கின்றது- அந்தச் சிறப்பு வணக்கத்தைப் பற்றி உள்ளம் குளிர்ந்து கிளு கிளுப்பு உண்டாகின்றது என்றால் அவனது உள்ளத்தில்-

'நாம் சிறப்பான நல்லடியான், நம்மைப் போன்று எவரும் இப்படி இடைவிடாமல் வணங்கிட முடியாது,'

என்ற தற்பெருமை ஊடுருவ ஆரம்பித்து விட்டது. ஆகவே இத்தகு உள்ளக் கிளுகிளுப்பு ஏற்பட்டவுடன், தான் செயல் மேற்கொண்டு வரும் அந்த சிறப்பு வணக்கங்களை கொஞ்ச காலத்திற்கு நிறுத்திவைத்துவிட்டு அவையல்லாத வேறு சிறப்பு வணக்கங்களில் கவனத்தை மாற்றிட வேண்டும்.

அப்படிச் செய்தால் தற்பெருமை எனும் பெருநோய் உள்ளத்தைத் தொட்டுவிடாமல் தன்னைத் தற்காத்துக் கொள்ளமுடியும் என்கின்றார்.

இங்கே மற்றொன்றையும்- நற்செய்கைகளை நிறுத்தி வைக்க வேண்டும் என்றால் நஃபில், முஸ்தஹப்பு போன்றவற்றைத்தானே தவிர ஃபர்லு- வாஜிபு போன்ற கடமைகளையல்ல, ஃபர்லு வாஜிபு போன்ற கடமைகளைச் செய்யும் போது தற்பெருமை ஏற்பட வாய்ப்பே இல்லை.

كَمْ حَسَّنَتْ لَذَّةً لِلْمَرْءِ قَاتِلَةً
مِنْ حَيْثُ لَمْ يَدْرِ اَنَّ السَّمَّ فِي الدَّسَمِ ﴿٢١﴾

கம் ஹஸ்ஸனத் லத்தத(ந்) லில்மர்இ
-காதிலதன் மின் ஹைது லம் யத்ரி
-அன்னஸ்ஸும்ம பித்தஸமி

நெய்யிற் கலந்த நஞ்சினை மனிதனால் அறிய முடியாது. அவ்வாறே மனிதனை மாய்க்கும் இன்பங்களை இந்த நஃபசு நேர்த்தியெனக் காட்டும்.

இதனை-

நஞ்சுகொழுப் பிற்கலந்தால் நரன் அறியான் அவ்வாறே
நெஞ்சுநமை மாய்க்குமின்பம் நேர்த்தியெனக் காட்டிடுமே
என மறைஞானப் பாடுகின்றார்.

வி-ரை நப்சுடைய மறைமுகத் தாக்குதலின் வலி மையை இந்தக் கண்ணியில் துகிலுறித்துக் காட்டுகின்றார்.

பக்குவமாகச் சமைக்கப்பட்ட நெய்யில் நெய்யுணவில் நஞ்சு கலக்கப்பட்டிருப்பின் நஞ்சின் நெடில் மறைக்கப்பட்டு அருசுவை உணவாகவே காட்சிதரும் அந்த நஞ்சுணவு.

உணவின் உண்மை நிலை தெரியாது நாவில் நீர் சுரந்து அதைப் புசித்து விட்டால் அதோகதிதான். இதனால்தான் அமைச்சர்கள்! கவர்னர் போன்றோர் கலந்துகொள்ளும் விருந்துகளில் மருத்துவர்களின் ஆய்வு நடத்தப்படுகின்றது

அந்தக் கபட நாடகத்தில் மனித மனமும் நெய்யின் நிலையினை உடையதாக உள்ளது.

தஹஜ்ஜுத் தொழுகை என்ன சாதாரண வணக்கமா? நபிகளாருக்கு ஃபர்லாக ஆக்கப்பட்டிருந்த தொழுகை யல்லவா அது? அந்தத் தொழுகையை தொழும்படி தூண்டும் நஃசு. மனிதனும் அதை தொழுவான். இப்படியாக வாரம் மாதம் உருண்டோடும். கடைசியில் குறிப்பிடத்தக்க பல மாதங்கள் சென்றபின் ஸுப்ஹானல்லா! இந்த நடு நிசித் தொழுகையில் தான் எத்தனை அமைதி எவ்வளவு நிம்மதி தொழுகையானால் இது வல்லவோ. தொழுகை என அந்தத் தொழுகையைப் பற்றி இன்பத்தை ஏற்படுத்தும் அம்மனம். இது சில மாதங்களுக்கு நீடிக்கும். அதன் பின்-

"எவன் எவனோ ஐங்காலமும் அடித்து விழுந்து செல்கின்றான் அத்தொழுகையெல்லாம் தொழுகையாக ஆகுமா? நாமல்லவோ உண்மைத் தொழுகையாளி! நம்மைப்போல் எவன்...?"

என்ற தற்பெருமையை அவனில் அந்த நஃப்சு தோற்றுவித்து விடும்.

இந்தத் தற்பெருமை எனும் நஞ்சு கலந்து விட்டால் இவன் செய்த வணக்கங்களெல்லாம் பாழ் அல்லவா?

தஹஜ்ஜுத் தொழுகை என்ற நற்செயலில் தற்பெருமை எனும் நஞ்சு கலக்கப்படும் முறை பார்த்தனையோ! இதை அம்மனிதன் எதிர்பார்த்திருக்க முடியுமா?

இதைத்தான்-

'மனிதனை மாய்க்கும் இன்பங்களை அந்த நஃசுப் நேர்த்தியெனக் காட்டும்' எனச் சித்தரிக்கின்றார் நமது நவீனக் கவிஞர்.

## நப்ஸின் மறைமுகத் தாக்குதல்-

நஃப்ஷே அம்மாராவின் மறைமுகத்தாக்குதலிற்கு இரண்டாம் இலக்கு வயிறு ஆகும்.

ஒரு ஜான் வயிறு இல்லாட்டா இந்த உலகத்தில் ஏது கலாட்டா?

என வேதாந்தம் பேசிடுவோர் நம்மிலும் உண்டு; அதில் உண்மை உண்டு; அதில் உண்மை இல்லாமலுமில்லை. இன்றைய உலக அரங்கில் ஆட்சிகள் அனைத்தும் ஆட்டம் காண்பது இந்த வயிற்றுப் பிரச்சினையினை வைத்துத்தான்; அல்லவா? உலக ஆட்சிகளை ஆட்டிப் படைக்கும் இப் பிரச்சினை உள்ளத்தின் நல்லாட்சியினையும் விட்டு வைப்பதில்லை.

குறள்வளை வரை நிரம்பி வழிந்து புளிச்சி ஏப்பத் தினால் உவாதைப் படுமளவு மிதமிஞ்சி உண்டு மலைப் பாம்பு போல் வளைந்து நெளிந்து கொண்டிருக்கும் சாப்பாட்டு ராமன்கள் பலர்.

வகை வகையான உண்ணத் தொகையிருந்தும் ''வயிற்றை வாட்டமுறச் செய்திட வேண்டும்' என்ற வறட்டுச் சித்தாந்தத்தின் அடிப்படையில் ஆண்டில் பல மாதங்கள் நோன்பிருந்து தன்னை வருத்திக் கொள்வோர் சிலர்.

ஆனால் அவ்விரண்டு நிலைகளுமே நம்மில் ஏற்புடைய தன்று. இந்த சீரிய நடுநிலைச் சித்தாந்தத்தை சொல்லோ வியமாகச் சித்தரித்துக் காட்டுகின்றார் புலவர்.

وَاخْشَ الدَّسَائِسَ مِنْ جُوعٍ وَمِنْ شِبَعٍ
فَرُبَّ مَخْمَصَةٍ شَرٌّ مِنَ التُّخَمِ (٢٢)

**வக்ஷைத் தஸாயிஸமின் ஜூஇன்வமின் ஷிபஇன் ஃபருப்பா மக்மஸதின் ஷர்ருன்(ம்)மினத் துகமி**

பசித்திருப்பதிலும் மிதமிஞ்சி உண்ணுவதிலும் உள்ள தீங்கினை அஞ்சிடுக! பசித்திருப்பதால் உருவாகும் தீங்கும் மிதமிஞ்சி உண்ணுவதால் ஏற்படுவதைக் காண பன்மடங்கு என்றுணர்க!

இதனை-

பட்டினியில் பேருணவில் பதுங்குதீங் கஞ்சிடுவாய்!

திட்டமாய்ப் பட்டினியால் சேர்கெடுதி பன்மடங்காய் என மறைக்காயர் பாடுகின்றார்.

வி-ரை : மிதமிஞ்சி உண்ணுவதால் சோம்பல், இரத்த அழுத்த நோய், கொழுப்பு அடைப்பு நோய் ஆகியன உருவாகி கடமையைச் செயன் மேற்கொள்ள முடியாமை, திடீர் சுகவீனம், திடீர் மரணம் போன்ற அசம்பாவிதங்கள் ஏற்பட்டு விடும்.

இறை இறை தூதர் ஏந்தல் நபிகள் (ஸல்) அவர்கள் ''மிதமிஞ்சி உண்ணுவது நோய்க்கு 'உரமாகும்'' (என்றும்)

''மித மிஞ்சிய தூக்கம், அளவு கடந்த ஓய்வு, மிதமிஞ்சிய உணவு ஆக இம் மூன்றும் உள்ளத்தினை (இரும்பென) உரையச் செய்து கரும்புள்ளிகளை ஏற்படுத்தி விடும்'' (என்றும்) கூறியுள்ளார்கள்.

மிதமிஞ்சி பசித்திருப்பதால் உடல்வலிமை குன்றி கடமையைச் செய்யமுடியாமை, உடல் சோர்வு, இரத்த அழுத்தக் குறைவு ஆகியன உருவாகி முன்னதால் விளைந்த தீமைகள் ஏற்படுவதோடு ''வாழ்வாங்கு வாழ வாய்ப்பிருந்தும் வல்லோனின் திருப்தியை பெற்றிடுவான் வேண்டி நம்மை நாமே வருத்திக் கொள்கின்றோம். இந்த எம் இறையச்சந்தினை எவர்தான் மிகைத்திட முடியும்? என்ற தற்பெருமை எனும் தீங்கும் ஏற்பட்டிட வாய்ப்புண்டு. இது மேலேழுந்தாற்போல் பார்த்தால் புரியாத, நஃப்ஷின் மறைமுகத் தாக்குதலாகும்.

ஆகவேதான் மிதமிஞ்சி உண்ணுவதால் விளையும் தீமையினைவிட பசித்திருப்பதால் விளையும் தீங்கினை பெரிதுபடுத்திக் காட்டுகின்றார் நமது தத்துவக் கவி!

அன்றி, அரை வயிறு உணவு, கால் வயிறு தண்ணீர் என்ற நிலையில் உணவுப் பழக்கத்தை அணுகுவதால் எவ்வகைத் தீங்கும் ஏற்படாதிருக்க வாய்ப்புண்டு என்பதைச் சொல்லாமல் சொல்லிக் காண்பிக்கின்றார் அவர்.

وَاسْتَفْرِغِ الدَّمْعَ مِنْ عَيْنٍ قَدِ امْتَلَأَتْ
مِنَ الْمَحَارِمِ وَالْزَمْ حِمْيَةَ النَّدَمِ ٢٣

வஸ்தஃப்ரிஙித்தம் அமின் அய்னின்
- கதிம்தலஅத்
மினல்மஹாரிமிவல் ஜம்ஹிம்யா
-தன்நதமி

அன்றி தீமைகளே நிறைந்த விழிகளில் இருந்து கண்ணீரை வடித்து (விழிகளில் நிறைந்துள்ள அத்தீமைகளைக்) காலி செய்திடுக! மேலும் கழிவிரக்கக் கேடயத்தினை பற்றி நின்றிடுக!

இதனை-

தீமைநிறையும்விழி நீர்சிந்திவெறி தாக்கிடுவாய்!
தூய்மைக் கழிவிரக்கத் துணையைநிதங்
கைப்பிடிப்பாய்

என மறைக்காயர் பாடுகின்றார்.

## கண்ணேறு பற்றிய எச்சரிக்கை

வி-ரை : அடுத்துக் கெடுத்திட எண்ணும் இதயங்
களைப் போல
கெட்ட பேச்சுக்களையே பேசிப் பழக்கப்பட்ட
நாவுகளைப்போல
திருடுவதையே தொழிலாகக் கொண்ட கறைபடிந்த
கரங்களைப் போல

விஷம் கக்கும் விழிகளும் உண்டு.

அந்த விஷ விழிகள் பட்டுவிட்டால் பூத்துக் காய்த்துக் கனி தந்து கொண்டிருக்கும் மரம்கூட பட்டுவிடும். படிபடியாய் கறந்திடும் பசுவின் மடி கூட சுருங்கிவிடும். தின்தோளும் திடகாத்திரமும் மிக்க வீரனும் செயலற்று விடுவான்.

இதற்குக் 'கண்ணேறு' எனக கூறுவர்,

நமது நபிகளார் (ஸல்) அவர்கள் ''கண்ணேறு உண்மை'' என எச்சரித்துள்ளார்கள். அன்றி அந்தக்காமில் நபி (ஸல்) அவர்களையே இந்தக் கண்ணேறு விட்ட பாடாகஇல்லை.

இது கண்களால் ஏற்படும் ஒருவகைத் தீமை.

கேளிக்கைகள் வீண் விளையாட்டுகளைப் பார்ப்பதும் அன்னிய பெண்களை சபல புத்தியோடு பார்ப்பதும் கண்களால் விளையும் பிற தீமைகள்.

நமது சன்மார்க்க சட்டமேதைகளின் கணிப்பில் மார்க்க அனுமதியற்ற கலைகளை காண்பது ஹராமாகக் கருதப்படுகின்றது. ஆனால் ஞானவான்களின் கணிப்பின்

படி அன்னிய உடமைகளை ஆசையுடன் பார்ப்பதே ஹராமாகக் கருதப்படும். இதன்படி பார்த்தால் கண்களால் விளையும் தீமைகள் அனந்தம். ஆகவேதான் நமது ஞானசிகாமணியவர்கள் 'தீமையே நிறைந்த விழிகள்' என வர்ணித்துள்ளார்கள்.

அடுத்து-

'விழிகளிலிருந்து கண்ணீரை வடித்து காலி செய்திடுக' என்ற சொல்லில் விழிகளில் நிறைந்திடும் தீமைகளைக் களைய வழிவகையினையும் கோடிட்டுக் காட்டுகின்றார்.

செய்துவிட்ட தீமைகளை நினைத்து வருந்தி விழிநீர் வடித்தால் படிந்துவிட்ட கறைகள் துடைக்கப்படும் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் மேன் மக்களாக உயர்ந்து விட்ட எவரும் விழிநீர் வடிக்காமல் உயர்ந்து விடவில்லை'

'விளைவித்த தீமைகளை நினைத்து வருந்தி அழும் மனிதனுக்கே நல்வாழ்த்துக்கள்'. என ஈசா நபி (அலை) அவர்கள் வாழ்த்தியுள்ளார்கள்.

வேந்தர் நபி (அலை) அவர்கள் அதிகம் அழுபவர்களாகக் காட்சி தருவார்களாம்.

அவ்விரண்டி (சொர்க்கத்தி)லும் இரு ஊற்றுக்கள் உதித்தோடிக் கொண்டிருக்கும்'' (குர், 30:55) என்ற இத் திருவசனத்திற்கு ''எவரின் கண்கள் உலகில் விழிநீரை வடித்ததோ அம்மனிதனுக்கே அவ்விரண்டு சொர்க்கங்களும் மறுமையில் கிடைக்கும்'' என விரிவுரை சொல்லப்படுகிறது.

சுருங்கக் கூறின்; விழிநீரை வடிப்பது விழிகள் செய்த தவறுகளுக்குமே மட்டுமல்லாமல் அனைத்துத் தவறுகளுக்குமே தகுந்த உபாயம் எனத் துணிந்து கூறலாம்.

அடுத்த சற்றில் ''கழிவிரக்கம்'' பற்றிக் கூறியதன் மூலம் நஃப்ஷுடைய தீமைகள் அனைத்திற்கும் ஒட்டு மொத்தமான பரிகாரம் தௌபா வெனும் பச்சாதாபப் படுதலே' என்பதை உறுதிபடுத்துகின்றார்.

ஏனெனில்—

நமது நபிகள் நாதர் (ஸல்) அவர்கள் அறிவுரை பகன்றுள்ளார்கள்:

''எம் மனிதன், தான் செய்து விட்ட தீங்குகளை நினைத்து மனம் வெதும்புகின்றானோ அந்த கழிவிரக்கமே அவன் செய்த தீமைகளை ஒடித்து வீழ்த்திவிடும்'' [எனவும்]

''அனைத்து நோய்களுக்கும் மருந்துண்டு; பாவமெனும் பெரு நோய்க்கு மருந்து பச்சதாபப் படுதலாம்'' [எனவும்]

''ஒவ்வொரு மனிதனும் தான் செயன்மேற் கொண்டு வாழ்ந்து விட்ட பாவ காரியங்களை நினைத்து மனம் வெதும்பி வேதனையும் வெட்கமும் கொண்டால், அப்படி கழிவிரக்கம் கொள்வதே தௌபா எனும் பாவப் பரிகாரமாக அமைந்திடப் போதும்'' [எனவும்]- கூறி சகல பாவங்களுக்கும் கழிவிரக்கம் கொள்வதேதான்தே நிரந்தப் பரிகாரம் என்பதை உள்ளங்கை நெல்லிக் கனிபோல காட்டியுள்ளார்கள்: நமது காமில் நபி (ஸல்) அவர்கள். ஆகவேதான்'' கழிவிரக்கக் கேடயத்தினைப் பற்றி நின்றிடுக!'' என அவ்வளவு உறுதியாக நம்மைப் பணிக்கின்றார் நமது பாவேந்தர்.

وَخَالِفِ النَّفْسَ وَالشَّيْطَانَ فَاعْصِهِمَا
وَإِنْ هُمَا مَحَضَاكَ النُّصْحَ فَاتَّهِمِ ﴿٢٢﴾

**வகாலிஃபிந் நஃப்ஸ வஷ் ஷைத்தான**
**-ஃவ்ஸிஹிமா**
**வஇன் ஹுமா மஹ்ளாக(ந்) நந்நுஸ்ஹ**
**-ஃபத்தஹிமி**

நப்சு, ஷைத்தான் ஆகிய இருவடைய போதனைகளுக்கும் நீ மாறு செய்திடக் கடவாய்- அவ்விரு சக்திகளும் களங்கமற்ற போதனை செய்திடினும் [கபடர்களான அவ்விருவரையும்] ஐயம் கொண்டிடுவாய்!

—இதனை

*தீய நெஞ்சைஷைத்தானைச் சேர்த்தெதிர்த்து*
*மாறிழைப்பாய்*
*தூயஉபதேசம்அவை சொன்னாலும் ஐயுறுவாய்!*

என மறைக்காயர் பாடுகிறார்

க-ரை: நஃப்ஷுடனும் ஷைத்தானுடனும் மனிதன் பகை கொண்டிட வேண்டும். வெறும் ஊமைப்பகை கொள்வதல்ல. அவை ஒன்றைச் செய்யும்படி தூண்டினால் அவன் அதைச் செய்ய மறுத்தும், ''வேண்டாம் இது'' என அவை எச்செயலைத் தடுத்தனவோ அதைச் செயல் மேற்கொண்டும், எதிர்ப்புக்கணைகளை எய்திட வேண்டும். அன்றி அவை நல்லியல்புகளைக் காட்டிடினும் கூட அங்ஙனமே எதிர்த்து வாழ வேண்டும்.

வி-ரை: உலகில் எவரும் எவருடனும் நிரந்தரப் பகை கொண்டு வாழ்ந்திட முடியாது. இன்று பகை-நாளை நட்பு, இன்று நட்பு- நாளைப் பகை' என்ற நிலையினைத்தான் கண்டும் கேட்டும் வருகின்றோம்.

மூன்று நாளைக்கு மேல் ஒருவர் மற்றொருவருடன் பகைமை பாராட்டுவதை இஸ்லாமியம் விரும்பவில்லை. கடுமையாகக் கண்டிக்கிறது.

ஆனால் ''இருபெரும் சக்திகளோடுமட்டும் மனிதன் எப்போதுமே நிரந்தரமாக பகைமை பாராட்ட வேண்டும் அவைகளை எதிர்த்துச் செயல்படவும் வேண்டும்'' என சமாதான சன்மார்க்கமாம் நம் தீனுல் இஸ்லாம் கண்டிப்பாக கட்டளையிடுகின்றது.

## நஃப்ஸை பகைக்க வேண்டும், ஏன்?

அவ்விரண்டு சக்திகளில் ஒன்று நஃப்ஷு

மனித உறுப்புகளில் முதன்மையாகப் படைக்கப்பட்ட உறுப்பு இந்த நஃப்சு. அல்லாஹ்வின் சன்னிதானத்தில் அது செய்த சண்டித் தனத்தையும், அடங்காமையையும் இதற்குமுன் கண்டோம்.

எவரின் முன் நிறுத்தப்பட்டுள்ளோம்? கட்டளையிடுவது யார்? என்பதனைக்கூட எண்ணி பார்த்திடாமல் எத்தனை எக்காளத்துடன் இருமாந்து கிடந்தது; எவ்வளவு வீராப்புத் தொனிக்க பதில் கூறியது, விளங்கியதா?

அனைத்து ஆற்றல்களின் அதிபதி-பெருமைகளனைத்திற்கும் சொந்தக்காரன்-ஆக்கவும் போக்கவும் உரிமையுடையோன்-அல்லாஹ்விடமே 'நான்... நான்தான், நீ... நீ தான்' என அகங்ககரமாக மறுமொழி பகர்ந்தது அந்த நஃப்ஷு என்றால் அதன் அடங்காமையை விளக்க இதைவிட வேறு என்ன உதாரணம் வேண்டும்.

ஆகவேதான் அடக்கப் பண்போடும் அடிமை உணர்வோடும் வாழ்ந்திடக் கடமைப்பட்டுள்ள மனித சமுதாயம் அடங்காப்பிடாரியான இந்த நஃப்ஷினை பகைத்தும்

அதற்கு மாறு செய்தும் வாழ்ந்திடும்படி பணிக்கப் பட்டுள்ளது. நியாயம்தானே?

துஷ்டனைக் கண்டால் தூர விலகிடத்தானே வேண் டும்.

ஒரு பெரியாரிடம் "எது இஸ்லாம்" என வினவப் பட்டது. அதற்கவர் "மாறு செய்தல்- மீறிச் செயல்படல் எனும் ஆயுதம் கொண்டு நஃப்ஸை அழிப்பதற்குப் பெயர் இஸ்லாம் எனப்படும்" என மறுமொழி பகர்ந்தார்.

"நஃப்ஸிற்கு மாறுபாடு செய்வதைவிடச் சிறந்த இறை வணக்கம் வேறெதுவுமில்லை" என சுஹைல் இப்னு அப்துல்லா என்ற ஞான சிகாமணி கூறுகின்றார்.

'சீதேவித்தனம் எனும் மாளிகையின் முதற்படி- இறை வணக்கங்களின் மணிமகுடம் நஃப்ஸிற்கு விரோதயும் செய்வ தாம்' என இறை நேசர்கள் பலரும் இயம்பி உள்ளனர்.

ஆகவே உடனிருந்தே கொல்லும் கொடு நோயான இந்த நஃப்சைப் பகைத்து அதற்கு மாறு செய்வது மனித சமுதாயத்தின் தலையாய கடமைகளில் முதற்கடமையாகும்.

## ஷைத்தானைப் பகைக்க வேண்டும் ஏன்?

பகைமை பாராட்ட வேண்டிய இருபெரும் சக்திகளில் இரண்டாவது சக்தி 'இப்லீசு' எனப்படும் ஷைத்தானாகும்.

நீருக்கு நெருப்பு பகை.

நிழலுக்கு வெயில் பகை,

மண்ணுக்கு மழை பகை—
என்பதனைச் சொல்லித்தான் தெரிய வேண்டுமென் பதில்லை.

அதுபோல மனித சமுதாயத்திற்கு இந்த ஷைத்தான் பகை. என்பதையும் சொல்லித்தான் தெரிய வேண்டுமென் பதில்லை. ஏனெனில்

அந்த ஷைத்தானின் சொர்க்க வாழ்வு பறிக்கப்பட்டுப் போனதற்கும்;

மலக்குகளுக்கெல்லாம் குருவாகத் திகழ்ந்த அவனது உயர்வு உரியப்பட்டுப் போனதற்கும்;

அவன் அல்லாஹ்வின் நிரந்தரமான சாபத்திற்கும், கோபத்திற்கும் இலக்கானதற்கும்;

ஆக இந்தியாதி இழப்புகளுக்கும்- இழிந்தகைமைகளுக்கும் மனித சமுதாயம்தான் காரணம். அல்லவா?

ஆகவே தனது தாழ்வுக்கு முழுக்க முழுக்க காரணமாகத் திகழும் இந்த மனித சமுதாயத்தினை பழி வாங்கிட வேண்டும் என சங்கல்பம் கொண்டுள்ளான், அவன்.

இதற்காகவே உலகம் உள்ளவரை தனக்கு ஆயுளை நீட்டித் தரும்படியும், அப்படி நீண்ட ஆயுள் கொடுக்கப் பட்டால்: அல்லாஹ்வின் பிரதிநிதிகளான மனித சமுதாயத்தில் ஊடுருவி அவர்களுக்குள்ள புனிதத்தை தன்னால் கெடுத்து விட முடியும் எனவும் அல்லாஹ்விடமே சபதம் எடுத்துள்ளான்.

இதோ அதை அந்த ஷைத்தானின் வாய்மொழியிலேயே கேட்போமே—

‘‘(இறைவா! என்னை நீ அந்த மனித வர்க்கத்திற்கு மரியாதை செய்ய மறுத்ததின் ஒரே காரணத்தால்) ஈனப்பிறவியாக மாற்றி விட்டாய் ஆகவே (எனது இவ் விழி நிலைக்கு காரணப் பிறவிகளான) அவர் (மனிதர்) களுக்காக உன்னுடைய சன்மார்க்கப் பாதைகளில் அமர்ந்திருந்து-

அவர்களின் முன் பக்கமும், பின் பக்கமும் அவர்களின் வலப்பக்கமும், இடப்பக்கமும் ஊடுருவி அவர்களில்

பெரும்பாலானவர்களை உனக்கு வழிப்பட மறுத்த ஈனப் பிறவிகளாக மாற்றுவேன்'' (குர் 7, 16, 17)

இதை; எம்மான் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் தங்களின் தனி மொழியில் இப்படிக் கூறுகின்றார்கள்:-

''ஷைத்தான் மனிதனுடைய இரத்த நரம்புகளில் எல்லாம் ஊடுருவிச் செயல்படுவான்''

மனித சமுதாயத்தின் ஒட்டு மொத்தப் பகைவனும், மிருக பல சக்தி வாய்ந்த, கெடுமதி படைத்தவனுமான ஷைத்தான் இப்படி சபதம் பூண்டு மனித சமுதாயத்தை பழிவாங்கிடப் புறப்பட்டுள்ள நிலையில்

தன்னுடைய பிரதிநிதிகளான மனித சமுதாயத்தை பாதுகாத்திடுவதற்காக, பகுத்தறிவு, பாவ மன்னிப்பு எனும் தவ்பா என்ற மிகப்பெரும் சக்திபடைத்த இரு வகைக் கேடயங்களை மனித சமுதாயத்திற்கு அருளினான் இறைவன்.

அதுமட்டுமின்றி...

''ஷைத்தானுடைய அடிச்சுவற்றைப் பின் பற்றி வாழ்ந்திட வேண்டாம். அவன் உங்களுக்கு பகிரங்கமான பகைவன்'' என தனது வேதத்தின் பல இடங்களில் கூறி மனித சமுதாயத்தினை உஷார்படுத்தியுள்ளான் அடியாருக்கருளும் அன்பனாம் அல்லாஹ்.

ஆகவேதான் நல்லியல் நாவலர் நமது பாவலர் அவர்கள்.

''நஃப்ஷை தனையும் ஷைத்தானையும் பகைத்து வாழ்வது மட்டுமின்றி அவைகளுக்கு மாறு செய்தும் வாழ வேண்டும்'' என அறவுரை பகர்கின்றார்.

நஃப்ஷை ஷைத்தான் ஆகிய இரண்டில் நஃப்ஷ உடனிருந்தே கொல்லும் வியாதி, ஆகவே ஷைத்தானை

விட நஃப்ஷிடம் மிக எச்சரிக்கையாக இருந்திட வேண்டும் என்பதனை உணர்த்துவதற்காக தமது கவியில் ஷைத்தானை விட நஃப்ஷினை முற்படுத்தியுள்ளார் போலும்.

''மனிதன் மிக விழிப்புடன் இருந்தால் அவ்விரு தீய சக்திகளும் அவனைக்கண்டு அஞ்சி புற முதுகு காட்டி ஓடி ஒளிந்து கொள்ளும்'' என கணித்திட வேண்டாம் ஏனெனில் விழிப்புணர்வற்றவர்களிடம் நேரடியாகமோதும் அவ்விரண்டும் விழிப்போடிருப்பவர்களிடம் குறுக்கு வழிகளில் ஊடுறுவிட அனைத்து முயற்சிகளையும் மேற்கொள்ளும்.

மது, மங்கை, கொலை, கொள்ளை, நாசம், மோசம், குஃபிர், ஷிர்க்கு போன்ற நேரடிப் பாதைகளில் வராமல் நல்லியல் ஒழுக்கங்கள், சிறப்பு வணக்கங்கள் போன்றவைகளையே தனக்கு குறுக்கு வழியாக ஆக்கிக் கொள்ளும்.

எப்படி எனக் கேட்கத் தோன்றுகின்றதல்லவா? இதோ அதற்கோர் உருவகம்.

மிஸ்ரு நாட்டின் கிராமப் பகுதியில் வாழ்ந்த சகோதரர் இருவரின் இறுதிமுடிவு நம்மை வியப்பிலும் வேதனையிலும் ஆழ்த்துவதாக உள்ளது.

மூத்தவன், ஜைது.

இல்லறத்தில் நல்லறம் கண்டிட முடியாது என நம்பி துறவரம் பூண்டுவிட்டான் அவன். நாடு விட்டுக் காடேகிய அவன், நீண்டுயர்நத மரம் ஒன்றில் பரண் அமைத்து தவத்தில் திழைத்தான்.

இளையவன் அம்ரு.

ஏழைத் தொழிலாளியாக வாழ்ந்த இவன், கட்டாயக் கடமைகளைத் தவிர்த்து சிறப்பு வணக்கங்கள் எதிலும்

இவனால் ஈடுபாடு கொண்டிட முடியவில்லை. உடலை வறுத்தி உழைத்து, தான் உண்டு, தன்னை அண்டியுள்ளோருக்கு உண்ணக் கொடுத்து காலம் கழித்து வரலானான்.

ஆண்டுகள் பல உருண்டோடின.

அங்கே காட்டில் கடுந்தவம் மேற்கொண்டு வாழ்ந்த ஜைது, தான் பக்தி வழியில் முக்தி நிலைக்கு உயர்ந்து விட்டதாகக் கருதி கர்வம் கொள்ளத் துணிந்தான். ஆனால் தம்பி அம்ரு 'கடமையைத் தவிர்த்து வேறு சிறப்பு வணக்கங்களில் ஈடுபாடு கொண்டிட முடியவில்லையே, என கலக்கம் கொண்டவனாக வாழ்ந்தான்.

இந்நிலையில் ஒரு நாள்...

தம்பி அம்ரு தமையன் ஜைதைப் பார்த்து வரும் நோக்கில் காட்டிற்குச் சென்று மரப்படிகளில் ஏறிடலானான். நீண்ட காலங்களுக்குப் பின் தனது உடன்பிறப்பு வருவதைக் கண்ட ஜைதும் பாச மிகுதியால் மேலிருந்து கீழிறங்க முயன்றான்; அப்போது—

கால்தடுக்கி அங்கிருந்து உருண்டு மேல் நோக்கி ஏறி வரும் அம்ரின் மீது மோதி அவனையும் பிடி நழுவச் செய்து இருவருமே தரைக்குத் தள்ளப்படுகின்றனர்.

கல்லும் முள்ளும் நிறைந்த அந்தத் தரையில் மிக உயரத்திலிருந்து தள்ளப்பட்ட சகோதரர் இருவரும் இரத்தக் காயங்கள் ஏற்பட்டு இருவருமே மயக்கமுற்று மாண்டுவிடுகின்றனர்.

அப்படி மரணிக்கும்போது துறவி ஜைது காஃபிராக இறந்தான்.

ஆனால் அம்ரு தவ்ஹீது கலிமாவினை ஓங்கி மொழிந்தவனாக ஷஹீத் மர்த்தபா அடைந்தான்.

அறநெறி படிக்கும் பக்த சிகாம ணிகாள்! பார்த்தீரா

நல்லறம் கண்டிடுவகுற்காக இல்லறத்தையே மறந்து துறவறம் பூண்டஜைதை?

பசித்திருந்து, விழித்திருந்து, தனித்திருந்து தவத்தில் திழைத்திருந்து விழிப்புணர்வோடிருந்த ஜைதை-விட்டானா ஷைத்தான்?

தீய செயல்கள் எனும் நேர்முக வழிகளில் அவனைக் கெடுத்திட முடியாது என்றறிந்த ஷைத்தான் 'தவநிலை' எனும் குறுக்கு வழியில் ஊடுருவி, வணக்க வழிபாடுகளில் அவனை மெய் மறக்கச் செய்து, தூய பானமான அவனது தவத்தில் 'கர்வம்' எனும் துளி நஞ்சினைக்கலந்து அவனது தவம், வணக்கம், பக்தி எல்லாம் விழலுக் கிறைத்த நீராய் போகும்படி செய்து விட்டான் அல்லவா?

'மழை, பொழிந்தும் கெடுக்கும்; ஒழிந்தும் கெடுக்கும் என்பார்களே' அதுபோல இந்த ஷைத்தான் தீய செய்கை, ஒழுங்கீனம் போன்ற பாவங்களின் மூலமும் மனிதனைக் கெடுப்பான் நற்செய்கை மூலமும் மனிதனைக் கெடுப்பான்.

''ஆகவேதான்- மனிதனை கெடுக்க தொண்ணூற்றி ஒன்பது நன்மைகளைத் திறந்து விடுவான்'' என பெரியார் ஒருவர் கூறுகின்றார்.

இதைத்தான் நமது புலவர் பெருமான்.

''நஃப்ஷும் ஷைத்தானும் நற்செய்கைகளைச் செய் திடும்படி உபதேசிப்பினும் அதில் ஐயம் கொண்டிடுக!'' எனக் கூறி நம்மை உஷார்படுத்துகின்றார்..

وَلَا تُطِعْ مِنْهُمَا خَصْمًا وَّلَا حَكَمًا
وَاَنْتَ تَعْرِفُ كَيْدَ الْخَصْمِ وَالْحَكَمِ ﴿٢٥﴾

**வலா துதிஉ மின்ஹுமா கஸ்மன்**
**-வலா ஹகமா**
**-வ-அன்த தஃரிபு கைதல் கஸ்மி**
**வல் ஹகமி**

அவ்விரண்டில் ஒன்று பகையாகும்போது மற்றொன்றை நடுவன் ஆக்காதிருப்பாய் பகையின் சூதையும் (ஓரம் சாய்க்கும் நடுவனின்) வாதையும் நீ அறிந்துதான் உள்ளாய்,

இதனை—
அகம்பகைவன் ஆங்கால் ஷைத்தான்
நடுவன் ஆக்காதே!
ந்கும்பகைவர் மன்றோரம் நவில்வார் சதியறிவாய்
என்றுணர்த்துகின்றார் மறைக்காயர்.

-விரை : நஃஷு, ஷைத்தான், அக்லு எனும் பகுத்தறிவு ஆக இம்மூன்றும் மனிதனை இயக்கிடவல்ல ஆற்றல் பெற்றவை.

இதில்

பகுத்தறிவால் இயக்கப்படுபவர் சிலர்.

நஃப்ஷினால் மட்டும் இயக்கப்படுபவர் இன்னும் சிலர்.

ஷைத்தானினால் மட்டும் இயக்கப்படுபவர் மற்றும் சிலர்.

நஃஷு ஷைத்தான் ஆகிய இருபெரும் சக்திகளாலும் இயக்கப்படுவோர் வேறு சிலர்.

ஆனால் பகுத்தறிவோ மனிதனை இயக்குவிக்கும் விஷயத்தில் தனித்து செயல்படுமேயன்றி நஃஷுடனோ, அன்றி ஷைத்தானுடனோ கூட்டணி கொள்ளாது.

அக்லு எனும் பகுத்தறிவால் இயக்கப்படும் மனிதர்கள் புனிதர்களாகப் பரிணமிப்பர்; அவர்களின் அறிவு வளர்ச்சிக்கும் முதிர்ச்சிக்கும் ஏற்ப அவர்களை ஸாலிஹீன்கள் என்றும் முத்தகீன்கள் என்றும், அவ்லியாவுல்லாக்கள் என்றும் சிறப்பித்து அழைக்கப்படும்.

ஆனால் நஃப்ஷினால் இயக்தப்படுபவர்கள் மனித மிருகங்களாகக் காட்சியளிப்பர் காஃபிர் என்ற அடைமொழியே அவர்களுக்கும் பொருந்தும்.

ஷைத்தானால் இயக்கப்படுபவர்களை போலிகளாகக் கொள்ளலாம். அவர்களை ஃபாசிகீன்கள், ழாலிமீன்கள், முனாஃபிகீன்கள் என கூறலாம்.

சில சமயம் நஃப்ஷினால் இயக்கப்படுபவர்கள் அல்லது ஷைத்தானினால் இயக்கப்பட்டவர்கள் விழிப் படைந்திடுவதுமுண்டு.

அது போதுள்ள சாதக பாதகங்களைச் சற்று ஆய்வோம்.

## நஃப்ஸுக்கு வழிப்பட்டோர் விழிப்படைந்தால்...?

நஃப்ஷிற்கு வழிப்பட்டு கட்டுப்பாடின்றி கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்ற நிலையில் வாழ்ந்து வந்த காஃபிர்-

தன்னை அறிந்து, தனது கட்டுப்பாடற்ற போக்கினால் விளைந்துள்ள இழி நிலைகளை உணர்ந்து, தொடர்ந்து இதே போக்கில் வாழ்வதால் ஏற்படும் தீய முடிவுகளை ஆய்ந்து மனம் வருந்தி-திருந்திட-மதமாற்றம் கண்டிட விழைக்கின்றான் என்றால்

ஆரம்பமாக அவன் இதுவரை வழிப்பட்டு வந்த நப்ஃஷுதனைப் பகைத்திட வேண்டும். அசாதாரணமான அம்முயற்சியில் அவன் வெற்றி பெற்றுவிட்டால், அத்தோடு பிரச்னை முடிந்தபாடில்லை அதன் பின்புதான் பிரச்னையே துவங்குகின்றது.

ஆமாம்! சொந்தம் 'பந்தம்' அதன் விளைவால் முளைக்கும் பாசம் ஆகியவைகளை முறிக்க வேண்டும்.

இப்படி அவன் முயலும்போது ஷைத்தான் வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பானா?

பந்த பாச வடிவில் திருந்த முயலும் அவனிடம் ஊடுறு விட முயலுவான்.

அதிகார உருவில் அவனை அலைக்கழிக்க ஆவன செய்வான். அவைகளுக்கெல்லாம் அவன் மசியாதபோது அந்த ஷைததான் ஆசாபாசங்கள் என்ற வழிமூலம் அவனைப்பிடித்திட முயலுவான் இம்முயற்சிகளில் ஈடுபடும் போது மிக எச்சரிக்கையுடன் ''இது ஷைத்தானின் ஊசலாட்டமல்லவா!' என அம்மனிதன் புரிந்திடாத முறையில் நண்பன் உருவிலோ அல்லது உற்றார் உறவினர் வடிவிலோ தோன்றி காரியமாற்றிடுவான்,

இந்நேரத்தில் அவன் மிக எச்சரிக்கையாக இருந்தாலன்றி உள்ளத்தில் ஏற்பட்ட புரட்சியை அம்மனிதனால் செயல்படுத்திட முடியாது.

## ஷைத்தானிடமிருந்து விடுபட முயன்றால்...?

இதுபோல இன்னுமொருவனைப் பற்றி ஆய்வோம்.

இவன் ஷைத்தானால் இயக்கப்பட்டு வாழ்ந்தவன்; சூதாடி; இப்படிப்பட்டவன் சூதாட்டத்தின் பணம் உறிஞ்சும் தன்மையினையும், தனது குடும்பத்தில் வீசும் வறுமைப் புயலையும் கண்டு வெட்கி, வேதனை கொண்டு'

திருந்திட, சூதாட்டத்தை விட்டும் தூரமாகிட உறுதியுடன் நாடுகின்றான். அவன்.

அந்நேரத்தில்—

நஃப்ஷுக்கு வழிப்பட்ட காஃபிர் அதைப் பகைத்து அதற்கு மாறு செய்திட முயன்றபோது நப்ஷுக்கும் அவனுக்கும் ஏற்பட்ட பகையை போக்கி -இருவருக்கும் சமரசம் செய்து வைக்க ஷைத்தான் தன்னைத்தானே நடுவனாக்கியது போல-

ஷைத்தானுக்குக்கும் இவனுக்கும் பகை ஏற்பட்டுள்ள இந்நேரத்தில் நப்ஷு நடுவனாகத் தோன்றி "இதுவரை அனைத்தையும் இந்த சூதாட்டத்தில் தோற்றுவிட்டாய்! இன்னும் ஒரே ஒரு தடவை மட்டும், இருக்கும் அந்தக் கொஞ்சக் காசையும் வைத்து ஆடி முடித்து விடு. வந்தால் இழந்ததை மீட்டிக் கொள்வாய்! போனால் விரல் விட்டு எண்ணத்தத்தக்க இந்த பிச்சைக்காசுதான் போகும். அப்புறம் துண்டை உதறி தோளில் போட்டுக் கொண்டு இதற்கு முத்தலாக்ச் சொல்லிவிடு" என இந்தப் பொல்லாத நஃப்சு பொடி வைக்கும்.

ஆகவேதான் அருட்கவி பூஸிரி அவர்கள் :-

நஃப்சினைப் பகைத்தால் ஷைத்தான் குறுக்கிடுவான் ஷைத்தானைப் பகைத்தால் நஃப்சு குறுக்கிடும். ஆகவே இரண்டில் ஒன்றை மட்டும் பகைத்து பயனில்லை. இரண்டையுமே ஒட்டுமொத்தமாகப் பகைத்து வாழப் பழகிக் கொள்' என்ற அளப்பெரும் தத்துவத்தை,

இரண்டில் ஒன்று பகையாகும்போது மற்றொன்றை நடுவன் ஆக்காதே' எனக் கோடிட்டுக் காண்பிக்கிறார்.

أَسْتَغْفِرُ اللّٰهَ مِنْ قَوْلٍ بِلَا عَمَلٍ
لَقَدْ نَسَبْتُ بِهِ نَسْلًا لِذِي عُقُمٍ ٢٦

அஸ்தஃபிருல்லாஹ மின்
-கவ்லின் பிலா அமலின்
லகத்நஸப்துபிஹி நஸ்லன்
-லிதீஉ_துமி

செயலற்ற [வெறும்] உபதேசத்தை விட்டும் நான் அல்லாஹ்விடம் மன்னிப்புத் தேடுகின்றேன்.

[செயலற்ற உபதேசத்தின் தன்மை எத்தகையது எனில்] மலடிக்கு (குழந்தை குட்டிக்காரி என) சந்ததியைச் சேர்ந்தவன் ஆவேன்.

—இதனை

செய்யாமல்ஏவுபிழை தீர்க்கஇறை பால் இரப்பேன்!
மெய்யாய்மலடிமக்கள் மிக்குடையாள்
-என்பவன்யான்

என மறைக்காயர் பாடிக் காட்டுகின்றார்.

க-ரை : மலடியொருவளை 'குழந்தை குட்டிக்காரி என்றுரைப்பது எங்ஙனம் பொருந்தாதோ அதுபோல, செயல் படாமல் பிறரைச் செயல்படத் தூண்டும் எனக்கு 'உபதேசி' எனும் திருப்பெயர் பொருந்தாது.

வி-ரை : உபதேசம் பல வகையுண்டு அதை

நிதர்சன வாழ்க்கைக்கு ஒத்துவராதவை. என்றும்,

'பூத்தும் காய்க்காதவை' என்றும்

'பூத்துக் காய்ந்து கனி தரும் தரு. என்றும், மூன்று வகையாகக் கொள்ளலாம்.

அம்மூன்றில் முதல் ரகம் இஸ்லாமியத்தில் இல்லாத ஒன்றாகும். ஏனெனில் மனிதர்களின் நிதர்சன வாழ்க்கைக்கு ஒத்துவராத எந்த ஒருவாழ்க்கை முறையினையும் இஸ்லாமியம் சொல்லவில்லை.

இரண்டாவது இஸ்லாமியத்தின் கடுங் கண்டனத்திற் குரியது. அவ்விதம் பூத்தும் காய்க்காத நிலையினையொத்த செயலற்ற உபதேசியை இஸ்லாமியம் ஏற்றுக்கொள்வதில்லை. இந்த வன் குணாளர்களை,

''நீங்கள் செயல்படாமல் (ஊருக்கு மட்டும்) உபதேசிப்பது இறையின் சமூகம் கடுங்கோபத்திற்குள்ளானது'' (3 : 61) எனவும்.

''உங்க(ளின் குறைக)ளை மறந்து விட்டு மற்றோரை நன்மை செய்யும்படி உபதேசிக்கின்றீர்களா-?'' [2 : 44] எனவும் கூறி வல்லோனின் வான்மறை எச்சரித்து நிற்கின்றது.

''மர்யமுடைய மகனே! நீவிர் உம்மைத் திருத்தும். அதன் பின் ஊருக்கு உபதேசம் செய்யும்; உன்னைத் திருத்தாமல் ஊருக்கு மட்டும் உபதேசம் புரிவதுபற்றி வெட்கப்படும்.

என ஈஸா நபி (அலை) அவர்களுக்கு அறிவுறுத்தியுள்ளான்.

ஆதலால் 'தான் தேறாமல் பிறரை மட்டும் தேற்ற நினைக்கும் தரங்கெட்ட உபதேசத்தினை இஸ்லாமியம் ஒருபோதும் ஏற்றுக் கொள்வதில்லை.

மலடியொருவள் மக்கள் பல பெற்றவளிடம் 'குழந்தை பாசம்' பற்றி கதையளந்தால் அது எவ்வளவு நகைப்பிற் குரியதோ அதுபோல செயலில்லாமல் சொல்லப்படும் உபதேசமும் நகைப்பிற்குரிய ஒன்று என இஸ்லாமியம் கருதுகின்றது.

இதைத்தான் செயல்படாமல் சொல்லும் உபதேசத்தினை 'பிழை' என நமது பாவலர் இங்கே குறிப்பிடுகின்றார்.

தீமைகள் தமது வாழ்க்கையில் நிகழ்ந்துவிடக் கூடாதே என்ற அச்சத்தின் அடிப்படையில் தீயவைபற்றிநினைவு கூறுகையில் 'அஸ்தஃ் ஃபிருல்லாஹ்' எனக்கூறி இறைகாவல் தேடுவது சமயப் பெரியோர்களின் மரபாகும். இந்த அடிப்படையில்தான்.

'செயல்படாமல் சொல்லும் உபதேசப்பிழை தீர்க்க இறைவனிடம் தன்னிலை விளக்கமாகக் கூறியுள்ளதாக விரிவுரையாளர்களில் பலர் கருத்துக் கூறியுள்ளனர்.

இருப்பினும் பின்வரும் 27, 28 ஆகிய கண்ணிகளின் உட்கருத்துப்படி.

நமது நாவலர் பூசிரி அவர்கள் தமது முற்பகுதி வாழ்க்கையில் குறுநில மன்னர்களை புகழ் பாடுவதில் கழித்த நிகழச்சியினை நஃப்சிற்கும் ஷைத்தானிற்கும் வழிப்பட்ட நிலையாகக் கருதி அதற்காக இறையிடம் இரப்பதாக கருத இட மேற்படுகின்றது.

அன்றி; 'ஒரு கல்லில் இரண்டு கனி' என்பது போல தனது முற்கால நிலைக்கு இறை பால் பச்சாதாபப் படுவதுடன் சொல் சுல்தானாகவும, செயல் ஷைத்தானாகவும் வாழும் வன்குணாளர்களை எச்சரிக்கவும் இந்தக் கண்ணியைப் பயன்படுத்திக் கொண்டுள்ளார்.

மலடியொருவளை 'குழந்தை குட்டிகாரி என அழைப்பது பொருந்தாது. அது வடிகட்டிய பொய்யாகும. அது போல் செயலில்லாமல் சொல்லப்படும் சொல்லை 'உபதேசம்' எனப் புனிதப் பெயரிட்டு அழைப்பதும் பொருந்தாமையாகும்; அல்லவா?

இந்தப் பேருண்மையினை அதாவது செயல் படாமல் மற்ற வரை, செய்யும்படி சொல்லப்படும் சொல்லிற்கு 'உபதேசம்' என்ற பயர் பொருந்தாது என்ற சீரிய தத்துவத்தை:-

''மலடிதனை மக்கள் மிககுடையாள், என்றழைத்தவன் ஆவேன்''

என்று இரண்டாம் கண்ணியில் கோடிட்டுக் காட்டு கின்றார்; நமது உவமை நாயகர்.

இப்படிக் கூறியதால்:-

செயலில்லாமல் 'உபதேசம்' என்ற பெயரில் மேடையேறி முழங்கும் வேடதாரிகளை 'பொய்யன்' எனச் சாடுகின்றார்; அவர்.

நவூது பில்லாஹி மின்ஹா [இறைவன் அவ்விழி நிலை யினை விட்டும் நம்மைப் பாதுகாப்பானாக]

---

آمَرْتُكَ الْخَيْرَ لٰكِنْ مَا ائْتَمَرْتُ بِهٖ
وَمَا اسْتَقَمْتُ فَمَا قَوْلِيْ لَكَ اسْتَقِمِ ٢٧

**அமர்(த்)துகல்கைரலா**
**-கின்(ம்)மஃத மர்த்துபிஹி**
**வமஸ்தகம்துஃபமா கவ்லீ**
**-லகஸ்தகிமி**

நான் உனக்கு நன்மையை ஏவினேன் ஆனால் நான்அதன்படி ஒழுகிடவில்லை.

இன்னம் நான் நேர்மையில் நிலைத்து நிற்கவுமில்லை; ஆதலால், ''நேர்மையாக நடந்திடு'' என நான் உன்னைப் பணிப்பதால் ஆவதென்ன...?

இதனை-

'நலம்புரி!' என் பேன் உனக்கு; நான் புரியேன்!
நேர்மையில்லேன்!
நிலந்தனில்யான்நேர்மைபற்றி நினைக்குரைத்தால்
ஆவதென்னே?

என மறைக்காயரும் புலம்பிக் காட்டுகின்றார்.

க-ரை : செயலில்லாமல் சொல்லப்படும் உபதேசத்தால் எப்பயனும் விளையாது.

وَلَا تَزَوَّدْتُ قَبْلَ الْمَوْتِ نَافِلَةً
وَلَمْ أُصَلِّ سِوَى فَرْضٍ وَلَمْ أَصُمِ (٢٨)

**வலா தஸவ்வத்துகப் லல்மவ்தி**
**-நாஃபிலதன்**
**வலம்உஸல்லிஸிவா ஃபர்ளின்**
**-வலம்அஸும்**

நபில் (உபரி) வணக்கங்கள் எதனையும் மரணம் வரும் முன்பே நான் கட்டமுதாய் கட்டுவிக்கவில்லை.

பர்ளான (கட்டாயக் கடமையான) வணக்கங்களைத்தவிர்த்து உபரியாக தொழவுமில்லை; நோன்பு நோற்கவுமில்லை.

இதனை-

துஞ்சுமுன்னேகட்டமுதாய்த் தொழும்நபில்யான்
-சேர்த்திலனே
மிஞ்சுபறுளாம்தொழுகை விரதமன்றி நோற்றிலனே?

என மறைக்காபர் பாடுகின்றார்.

வி-ரை புலவர் பெருமான் அவர்கள் தனது முதற்பகுதி வாழ்க்கையில் ஃபர்ளு என்றழைக்கப்படும் கட்டாயக்

கடமையான தொழுகைகள் நோன்புகளன்றி சிறப்பு வணக்கங்கள் எதனையும் சேகரிக்கவில்லை என ஒப்புக்கொள்வதன் மூலம்-,

முற்பகுதி வாழ்க்கையிலும் தான் கடமை மறந்து வாழவில்லை எனக் கோடிட்டுக் காட்டி விட்டு, சிறப்பு வணக்கங்களான நஃபிலனா தொழுகைகள் நஃபிலான நோன்புகளை கடைபிடித்து வாழத் தவறியதற்காக இவ்வளவு மனம் வருந்தி அங்கலாய்க்கின்றார்களெனின் அப்பெருமகனின் ஈமான் பளிச்சிடுவதைப் பார்க்க முடிகின்றது.

அன்றி மரணத்திற்குமுன் ஒவ்வொரு இஸ்லாமியனும் ஃபர்ளான கடமைகள் மட்டுமின்றி நஃபிலான சிறப்பு வணக்கங்களிலும் ஈடுபாடு கொள்வதவசியம் என்ற கருத்தையும் இங்கே அவர் வலியுறுத்தி நிற்கின்றார். ஏனெனில் செய்த ஃபர்ளான வணக்கங்களில் ஏற்பட்டு விடும் குற்றங்களை நிவர்த்தி செய்து தூய்மைப்படுத்துவது இந்தச் சிறப்புக வணக்கங்கள் தானே!



புரவலர்

போர்த்திய

பொன்னாடை



இந்த மண்ணும், மண்ணில் வதியும் மலை, கடல், பாதாளம் முதலான அனைத்தும், அதுபோல; இந்த விண்ணும், விண்ணில் வதியும் சூரியன், சந்திரன் போன்ற கோடான கோடி கோளங்களைத்தும் இல்லாமை யில் இருந்து புதிதாக உண்டாக்கப்பட்ட படைப்பினங் களாகும்.

இவைகளைப் படைத்து, பரிவுடன் பாதுகாத்து, அது அதற்குத் தேவையான உணவு வகையறாக்களை நேரா நேரத்திற்கு வழங்கி, அது அதற்குக் குறிக்கப்பட்டுள்ள தவணை வரை அவைகளை இரட்சித்துக் காத்து, அது அதன் தவணை முடிந்த பின்னர் கூட அவைகளின் மூலங் களை கடைசி நாளாம் கியாமத் நாளின் நீதி விசாரணை வரையிலும் பக்குவமாகப் பாது காத்து; நீதி விசாரணை முடிந்த பின்னர் மனிதர்களைத் தவிர மற்ற அனைத்தையும் முழுவதுமாக இல்லாமலாக்கி விட்டு, மனிதர்களில் மனித தர்மத்துடன் வாழ்ந்து மரணித்தவர்களை சொர்க்கபதிக்கும், மனித தர்மத்தை மண் கவ்வச் செய்து விட்டு மனம்போன போக்கில் கட்டுத்திட்டம் கடந்து வாழ்ந்தவர்களை நரகத்திற்குமாக அனுப்பி, தனது விருப்பு வெறுப்பற்ற நடுநிலையை ஒளிரச் செய்யும் அந்த மகா வல்லவன் 'அல்லாஹ்' எனும் ஏக இறைவனாகும்.

இது படைப்பினங்களின் பொதுவான ரகசியமாகும்.

ஆனால், அந்தப் படைப்பாளனான அல்லாஹ்வின் இரகசிய மென்ன? படைப்பினங்களைப் படைப்பதற்கு முன்னர் அவனது நிலை யாது?

இந்தக் கேள்வி, அன்றிருந்து இன்று வரை அனைத்து வகையினராலும் அவ்வப்போது கேட்கப்பட்டு, சிந்திக்கப் பட்டு வரக்கூடிய வினயம் நிறைந்த கேள்வியாகும்.

இந்தக் கேள்விக்கு பலர் பலவிதமான பதில்களை தாங்களாகவே கற்பித்துக் கொண்டு, தங்கள் தங்களது யூகங்களிலுதித்த அந்தந்த பதில்களின் அடிப்படையில் நாத்திகர்களாக- ஆத்திகர்களாக- ஆத்திகர்களிலும் பல தெய்வ வழிப்பாடுடையவர்களாக- ஏகதெய்வ வழிபாடுடைய வர்களாகவெல்லாம் 'கட்சி' அமைத்துக் கொண்டனர்.

ஆனால், அல்லாஹ்வின் அருட்திரு திருத்தூதர்-அண்ணலெங்கள் கோமான் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்கள் சிக்கல் மிகுந்த இந்தக் கேள்விக்கு வல்லவனாம் அந்த அல்லாஹவின் அறிவிப்பையே பதிலாகச் சொல்லி படைப்பினங்கள் படைக்கப்பட்ட பாங்கினையும், படைப் பாளனான அல்லாஹ்வின் முன், பின் நிலைகளையும் உள்ளங்கை நெல்லிக் கனி போல படம் பிடித்துக் காட்டி யுள்ளார்கள்.

நந்தநபிகளார் நாவசைத்துக் கூறிய அந்த ரகசியக் குறிப்புகள் 'மஸாயிலும் அமத்திலி அஸ்யிலத்தில் உலமா' என்ற கருத்தரங்கு இலக்கியத்தில் காரண காரியாதிகளுடன் விவாதிக்கப்பட்டு பத்திரமாகப் பதிந்து வைக்கப்பட்டு உள்ளது. தெளிந்த சிந்தனையாளர்களுக்கு சிந்தனைச் சுரங்கமாகவும், கருத்துக் குருடர்களுக்கு நிந்தனைக் கள மாகவும் அமைந்து போயுள்ள அந்த அற்புதமான அறிவுப் படையலை இதோ உங்களுக்குப் பரிமாறுகின்றேன் வேண்டுமென்போர் வேண்டியமட்டும் உண்டு சுகியுங்கள் வேண்டாதோர் விருப்பம்போல அதை விட்டும் விலகிக்

கொள்ளுங்கள் என்பதனை ஆரம்பத்திலேயே சொல்லி வைக்கிறேன்.

## அல்லாஹ்வின் ஆதியந்த நிலை

முன்னுக்கு முன்னான முதலோனாம் வல்ல அல்லாஹ், அவனது முன்னுக்கோர் முன்னும் முந்தாதவன். பின்னுக்கு பின்னாகவுமுள்ள அவனது பின்னுக்கோர் பின்னும் பிந்தப் போவதில்லை. இத்தகு ஈடிணையற்ற ஏக இறைவனான வல்ல அல்லாஹ், ஹக்கெனும் உள்ளமை என்றும், கல்க்கென்னும் படைப்பினமென்றும் வகைபிரியுமுன்னர் உள்ளமைக்கு உள்ளமையாகிய ,தனக்குள்ளே தான்' என்னும் கற்பனைக்கெட்டாத நிலையில் 'கன்ஜன் மக்ஃபிய்யா' எனும் மறைந்த மாப்பொக்கிஷமாக இருந்து கொண்டிருந்தான்.

## முதன் முதல் படைப்பான முத்தொளி

ஆதியந்தமெனும் எல்லாவகைச் சந்தத்திற்கும் அப்பாற்பட்ட ஆண்டவனாகிய வல்ல அல்லாஹ், தனது 'குத்ரத்' எனும் வல்லமையால், தனது சுய நாட்டம் - முயற்சி கொண்டு முதன் முதல் படைப்பும் - படைப்பினங்கள் அனைத்திலுடைய முதல்வித்துமான படைப்பைப் படைக்க நாடி, தனது களங்கு கறையேதுமற்ற பேரொளியிலிருந்து ஒரு பிடி ஒளியைப் பிரித்தெடுத்து, தனது திருமுன் அதை வைத்தான்.

அந்தப் பிஞ்சொளி அந்தவல்லவனுக்குச் சுஜூது (தலைவணக்கம்) செய்து தனது அடிமைத்தனத்தை உறுதி செய்தது.

பின்னும் தனது பேரொளியிலிருந்து இன்னமொரு பிடியைப் பிரித்தெடுத்து அதனையும் தன் திருமுன் வைத்தான். முன்னது போல இதுவும் சுஜூது செய்தது. இவ்வாறே இன்னும் மூன்று பிடி ஒளிக்கற்றைகளை மூன்று தடவைகளில் தன்னொளியிலிருந்து பிரித்துப் பிரித்து தன் திருமுன் அவைகளை வைத்த போதெல்லாம் அவை ஒவ்வொன்றும் சுஜூது செய்யத் தவறவே இல்லை. [ஆக மொத்தம் ஐந்து ஒளிக்கற்றைகள் பிரித்தெடுத்து] வைக்கப் பட்டுள்ளது என்பதனைக் கவனத்தில் கொள்ளத் தவறிட வேண்டாம்.

ஒளி உமிழும் ஒரு மெழுகுவர்த்தியிலிருந்து எத்தனையாயிரம் வத்திகளைப் புதிது புதிதாக கொளுத்தினாலும் அந்த அசல்வத்தியின் ஒளியில் கடுகில் கால்மாகாணியளவாவது ஒளிக்குறைவு ஏற்படுவதில்லை என்பதனையும் இங்கே நினைவில் கொள்ளக் கடமைப்பட்டுள்ளோம்,

தன்னொளியிலிருந்து பிரித்தெடுக்கப்பட்டு தன்னாலேயே தன் திருமுன் வைக்கப்பட்டுள்ள அந்த ஐந்து ஒளிக் கற்றைகளையும், அந்த மகாவல்லவன் கிருபைக் கண் கொண்டு நோக்கினது தான் தாமதம், உடனடியாக அந்த ஐந்தும் ஒன்றிணைந்து வெள்ளை, சிவப்பு, பச்சை, மஞ்சள், கறுப்பு என்ற ஐந்து வர்ணங்கள் கொண்ட ஒற்றை ஒளிக்கற்றையாக உருண்டு திரண்டது.

## ஊா மயிலுருவெடுத்த முஹம்மதெனும் முத்தொளி

உருண்டு திரண்டு ஒன்றாகி விட்ட அந்த ஐவர்ண ஜால ஒளியை மீண்டும் கவர்ச்சிப் பார்வையால் நோக்குகின்றான் அந்த மாயவன். அவ்வளவுதான். அதி

இரண்டாகப் பிளந்து- பிரிந்து, ஒன்று ஆணாகவும் மற்றொன்று பெண்ணாகவும் பிறவி எடுத்து விடுகின்றது.

இதில் ஆண் பிறவிக்கு 'அஹ்மது' என்றும், பெண் பிறவிக்கு 'முஹம்மது' என்றும் திருப்பெயர் சூட்டுகின்றான்,

அதன் பின்னர் அந்தப் பெண்பிறவியை ஐந்துவகை வர்ணஜாலமுள்ள 'தாவூஸ்' எனும் மா மயிலாக மாற்றுகின்றான்.

அந்த அற்புத மயிலின் சொண்டு குங்குமத்தினாலும், அதன் இரண்டு கால்கள் செம்பவளத்தினாலும் அதன் இரண்டு இறக்கைகள் சுத்த வெள்ளியினாலும், அதன் நெஞ்சக் கமலம் சொக்கத் தங்கத்தினாலும், அதன் தோகை மரகதத்தினாலும், அந்த மரகதத் தோகையின் சிறகுகளெல்லாம் நபித்துவ முத்திராங்கமும் பெற்று, அதன் தலையில், தாஜுல் அன்பியா- நபிமார்களின் கிரீடம்) எனும் மணிமகுடமும் சூட்டப்பட்டதாக ஆக்கப் பட்டதென்றால், அடடா அதன் அழகை எண்ணிப்பார்க்க இதயம் தானேது- எழுதிக்காட்ட வார்த்தைகளுண்டா- எடுத்தியம்ப சொற்களைத் தேடோ தேடென்று தேடித் தேடிப் பார்த்தாலும் சொல்லோவியம் கிடைத்திடவா செய்யும்

அல்லாஹ்வின் அற்புதமே அற்புதம்தான் போங்கள்.

முஹம்மதெனும் பெண்பிறவி இப்படி எழில் பெற்ற தென்றால் அஹ்மதெனும் ஆண் பிறவி எப்படி பூம்பொழில் பெறுகிறது பாருங்களேன்.

'அஹ்மது' என்பது ஆண்பிறவியின் பெயர் என்பதனை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.

இந்த 'அஹ்மது' வில் (1) அ, (2) ஹ் (3)ம (4) து, என்று நான்கு ஒற்றை எழுத்துக்கள் இருப்பதை எண்ணிப்பார்த்துக் கொண்டு விஷயத்திநுள் நுழைவோம் வாருங்கள்.

அஹ்மதுவில் 'அ' என்ற எழுத்தினால் ஷஜரத்துல் யகீன் என்னுமொரு 'மரம்' படைக்கப்பட்டு அம்மரம் சொர்க்கத்து மரங்களைப் போன்று தலை கீழாக ஆகாயப் பந்தலில் தொங்க விடப்படுகின்றது.

அம்மரத்தின் அனைத்து இலைகளிலும் தௌராத் வேதமும்,

அதன் பூக்களில் 'ஜபூர்' வேதமும்

அதன் கனிந்த பழங்களில் 'இன்ஜீல்' வேதமும்,

அந்தக் கனிகளுடைய முதிர்ந்த வித்துக்களில் 'குர்ஆன் ஷரீஃப், என்ற கடைசி வேதமும்

அம்மரத்தின் கிளைகளில் நூற்றிப்பத்து 'சுஹுஃபுகள்' எனும் ஆகமங்களும் பொறித்து வைக்கப்பட்டிருந்தது.

'ஹ்' எனும் இரண்டாவது எழுத்தைக் கொண்டு அந்த அற்புத மரத்தின் கீழால் நாற்சவுக்கம் கொண்டதொரு கிணறு படைக்கப்பட்டது.

அந்தக் கிணற்றின் சுற்றுச்சுவர்கள் இரத்தினக்கற்களாலும், அந்தக் கற்களின் கட்டுமானம் கற்பூரச் சாந்துகளாலும் கட்டப்பட்டிருந்ததோடு, அக்கிணற்றின் ஒரு பாகத்தில் பாலும், மற்றொரு திசையில் தெளிந்த தண்ணீரும், வேறொரு திசையில் நறுமணங்களனைத்தும் ஒன்று திரண்டதொரு தைலமும் பொங்கி பிரவாகமெடுத்துக் கொண்டிருந்தது.

இத்தகு அதிசயக் கிணற்றின் ஒரு திசைக்கும் மறு திசைக்கும் ஆயிரமாண்டுத் தொலை தூரமாக ஆக்கப்பட்டிருந்தமையால் மூன்றாவது எழுத்தாகிய 'ம' என்ற

எழுத்தினால்; எண்ணிலடங்காத வண்ண, வண்ண விளக்குகள் உண்டாக்கப்பட்டு அதைச் சுற்றிலும் தொங்க விடப்பட்டதால், அந்த அளவு ஆழ, அகல, நீளம்கொண்ட அந்தக்கிணறு ஒளி வெள்ளத்தால் சூழப்பட்டிருந்தது.

இதன் பின்னர் 'முஹம்மதெனும்' மயிலைப் பார்த்து அஹ்மதில் மீதமாகவுள்ள அந்த 'து' என்ற எழுத்தை கொத்தி விழுங்கும்படி வல்லவனாம் அல்லாஹ் கட்டளை பிறப்பித்தான்.

கட்டளைக்கிணங்க முஹம்மதெனும் அந்த மா மயில் அந்த 'து' வை உச்சக்கட்ட ஆசையுடன் கொத்தி, ஆனந்தப் பரவசம் பொங்கப் பொங்க அதை விழுங்கியது.

விழுங்கப்பட்ட அந்த 'து' மயிலின் வயிற்றினுள் சென்றடைத்தும் 'லா இலாஹ' என்று முழங்கிட, அதனைச் செவியுற்ற மயில்' இல்லல்லாஹ், என்று ஓங்கரக் குரலெழுப்பி அல்லாஹ்வின் ஸார்ஜிதம் செய்தது.

அதன் பின்னர், 'இல்மு' எனும் ஞானக்கடல் 'சுஹுதெனும்' வெறுப்புக்கடல், தக்வா' எனும் இறையச்சக் கடல், 'வறவு, எனும் பேணுதல் கடல், தவக்குதல் எனும் பரஞ்சாட்டும் கடல் 'ரிழா' எனும் இறைப் பொருத்தக் கடல் 'கணாஅத்' எனும் உள்ளதைக் கொண்டு நல்லது செய்யுங் கடல், ஆகிய ஏழு கடல்களில் ஒவ்வொன்றிலும் எழுபதனாயிரம் ஆண்டுகள் வீதம் அந்த மா மயிலை மூழ்கி 'தஸ்பீஹ்' முத்தை எடுக்கும்படி வல் அங்கனமே அது மூழ்கி முத்தெடுத்த பின்னர்; முன்னர்

குறிப்பிடப்பட்டுள்ள அந்த 'ஷஜறதுல் யக்கீன் என்ற மரத்தின் கிளைகளில் சென்று அமரும்படி கட்டளையிட்டான்.

கட்டளைக்கேற்ப, மிகுந்த மகிழ்ச்சியுடன் பறந்து சென்று அந்த மரத்தில் அமர்ந்து அங்கேயும் எழுபது னாயிரமாண்டுகள் அந்த வல்லவனை தஸ்பீஹ் செய்த கொண்டிருந்தது.

அதன் பின்னர், வல்ல அல்லாஹ் 'ஹயா' எனும் கண்ணாடியை உண்டாக்கி அந்த மாமயிலின் முன்பாக வைத்தான். அந்தக் கண்ணாடியில் தனது உருவத்தை அழகு சௌந்தர்யம் மிகுந்ததாகக் கண்ட மயில் இத்தனை எழிலுடன் தன்னைப்படைத்து பராமரித்தாளும் அந்தப் பரமனுக்கு நன்றியாக ஐந்து முறை கஜ்"து செய்தது.

அதன் பின்னர் ஒளியினால் உண்டாக்கப்பட்ட அம்மா மயிலைக் கூர்ந்து நோக்கினான். அவனது கூரிய பார்வையால் வெட்க்கமும், அச்சமும் போட்டியிட ஒஞ்சி அஞ்சிய அம்மா மயிலின் உடலெல்லாம் ஜில்லென்று வியர்வை துளிர்த்துக் கொட்டியது.

அதன் தலையிலிருந்து கொட்டிய வியர்வைத் துளிகளால் வானவர்களான மலாயிகத்துகளனைவரையும்,

அதன் முகத்திலிருந்து சொட்டிய வியர்வைத் துளிகளால் அர்சு; குர்சு, லவ்ஹுகலம் இன்னும்; வானம், வானத்தில் வாசதியும் கோடானுகோடி கோளங்கள் நட்சத்திரங்களாகிய அனைத்தையும்

அதன் நெஞ்சக் கமலத்திதிலிருந்து சொட்டிய வியர்வைத் துளிகளினால் நபிமார்கள், உலமாக்கள், சுஹதாக்கள், சாலிஹீன்கள் முதலான நல்லோர்களின் உயிர்களையும்,

அதன் இரு கண்களுடைய மேற்புருவங்களிலிருந்து சொட்டிய வியர்வைத் துளிகளினால் மூமினான ஆண், பெண் அனைவருடைய உயிர்களையும் அதன் இரு செவி களிலிருந்து சொட்டிய வியர்வைத் துளிகளினால் யஹூதி நஸாரா, காஃபிர் ஆகிய அனைவருடைய உயிர்களையும்,

அதன் இரு கால்களிலிருந்து சொட்டிய வியர்வைத் துளிகளினால் பூமி, பூமியிலுள்ள கடல், திடல், தாவர வர்க்கம், கால்நடையினம் வனவிலங்கினம், ஊர்வன, பறப்பன, நீந்துவன போன்ற அனைத்தையும் வல்லவனாம் அல்லாஹ் சிருஷ்டித்தான்.

(நூல் : மசாயிலுல் அமத்திலி அஸ்யிலத்துல் உலமாயி)

## 'நூரே முஹம்மதிய்யா' எனும் நாயகப் பேரொளி

அன்பரீர்! இதுவரை படைப்பினங்க்ள் உருவாக்கப் பட்ட ரகசியங்களை விண்டுகாட்டிட அதனை நீங்கள் வியந்து, வியந்து படித்தீர்கள். அல்லவா?

அதனைப் படிக்கும் போதே அனைத்துப் படைப் பினங்களுக்கும் மூலவித்தாகத் திகழ்வது முஹம்மது அஹ்மது எனும் அந்த முத்தொளி தான் என்பதனைப் புரிந்து புதுமையின் எல்லைக்கே சென்றிருப்பீர்கள் என நான் கருதுவது தவறில்லைதானே.

இப்படி அனைத்துப் படைப்பினங்களுடையவும் மூல வித்தாக அந்த முஹம்மதெனும் முத்தொளி திகழும் காரணீயத்தைத்தான் நமது நம்பிக்கைக்கு முழுக்க பாத்திரமான முத்து முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்கள்

''நான் அல்லாஹ்வின் பேரொளியிலிருந்து நேரடியாகப் படைக்கப்பட்டேன் மற்ற அனைத்துப் படைப்பினங்களும் எனது ஒளியிலிருந்து படைக்கப்பட்டன''

என்று வினயமாக்கூறி நம்மையெல்லாம் நினைத்துப் பார்க்கத் தூண்டியுள்ளார்கள்

ஹதீஸ் குதுசியில்;

''நபியே, முஹம்மதே! நீவிர் இல்லையாயின் நான் எதனையும் படைத்திருக்கவே மாட்டேன்''

என்று வல்லோன் அல்லாஹ் கூறிடுவதும் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் அந்த நூரே முஹம்மதுதான் அனைத்துப் படைப்பினங்களுடைய மூலாதாரமாக இருக்கின்றது எனும் இந்தக் கருத்தில்தான்.

சுப்ஹானல்லாஹ்! அப்படியென்றால் நமது ஈருலக நாயகர் முத்து முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் புகழுக்கு எல்லை வகுத்திட எவரால் முடிந்திடப் போகின்றது.

## "அவ்வலுந்நபி" என்பதன் காரணியம்

அண்ணலார் அஹ்மது நபிமணி (ஸல்-அம்) அவர்களை அவ்வலுந் நபி அதாவது, 'ஆதிநபி' என்றும், ஆகிர்நபி அதாவது, கடைசிநபி, என்றும் நம்பிக்கை கொள்வது நம்மவர்மீது கட்டாயக் கடமையாக ஆக்கப்பட்டுள்ளது.

கடைசி நபி என்பதனை நம்மால் புரிந்து கொள்ள முடியும் ஆனால் ஆதிநபி என்பது நமக்குப் புரியாத புதிராகவே இருந்துவருகின்றது.

ஏனெனில் ஆதிபிதா ஆதம் நபி (அலை) அவர்கள்தான் மனிதசமுதாயத்தின் மூலபிதாவாக இருக்கின்றார். அவர் ஆதிபிதா மாத்திரமல்லாது ஆதிநபியாகவும் இருக்கின்றார் விபரம் இப்படி இருக்கும் போது நபிமார்களுக்கெல்லாம் கடைசி, கடைசியாக வந்துதித்த முஹம்மதை (ஸல்-அம்) ஆதிநபியாகவும் ஏற்கவேண்டுமென்றால் அதில் பொருள் இருக்க முடியுமா?

ஆனால் ஆலமே மீதாக் என்றொரு உலகமிருந்தது.

அது எதுவென்றால், முன்னர் கூறப்பட்டபடி முஹம்மதெனும் அந்த மாமயிலின் வியர்வை துளிகளிலிருந்து மனித உயிர்கள் உள்ளிட்ட அனைத்துப் படைப்பினங்களும் படைக்கப்பட்ட பின்னர், படைப்பினங்களின் அந்த மூலாதாரங்களைக் கொண்டதொரு பதவிப் பிரமாணம் எடுக்கும் நிகழ்ச்சியொன்று நடத்தப்பட்டது. அந்த நிகழ்ச்சிக்குத்தான் 'ஆலமே மீதாக்' என்று பெயர்.

அந்த ஆலமே மீதாக்கில் அனைத்து படைப்பினங்களின் மூலாதாரங்களையும் ஒன்று கூடச் செய்த இறைவன், அவைகளிடம், ''பகுத்தறிவை'' எடுத்துக் காட்டி ''இது உங்களில் யாருக்கு வேண்டும்?'' என்று கேட்டதோடு அதன் தன்மை இன்னதென்றும், அதனை ஏற்றுக் கொள்பவர் தனது சட்டங்களுக்குக் கட்டுண்டு வாழ்ந்திடல் வேண்டுமென்றும், அங்ஙனம் தனது சட்ட சம்பிரதாயங்களுக்குக் கட்டுண்டு வாழ்ந்தால் உலகில் மேலானபடைப்பாகத்திகழச் செய்வதுடன், மறுவுலகில் சொர்க்க பதியைப் பரிசாக வழங்கப்படுமென்றும், ஆனால் சட்ட சம்பிரதாயங்களை அலட்சியம் செய்து வாழ்ந்தால் உலகில் இழிபிறவிகளாகக் கேவலப் படுத்துவதுடன் மறுமையில் கொடிய

நரகிற்குக் கொள்ளியாக மாற வேண்டிவரும் என்றெல்லாம் எச்சரித்தான் அந்த மகாவல்லவன்.

இதனைக் கேட்டு எச்சரிக்கையடைந்த அனைத்தும் அந்தப் பகுத்தறிவை ஏற்றுக்கொள்ள மறுத்து ஒதுங்கிக் கொண்டன. ஆனால் மனிதன் அதைத் துணிந்து ஏற்றுக் கொண்டான்.

இந்த நிகழ்ச்சியை இறைவன் தனது சுத்த சத்திய வேதமான குர்ஆன் ஷரீஃபில் தெள்ளத் தெளிவாகக் கூறிக் காட்டுவதைப் பாருங்களேன்.

''நிச்சயமாக (பகுத்தறிவு எனும் நம்முடைய( பொறுப்பைச் சுமந்து கொள்வீர்களா?'' என்று நாம் வானங்கள், பூமி, மலைகள் முதலியவைகளிடத்தில் வினவினோம். அதற்கு அவை அதனைப்பற்றி பயந்து, அதனைச் சுமந்து கொள்ளாது விலகிவிட்டன. அத்தகையதைத்தான் மனிதன் சுமந்து கொண்டான்....... (குர் : 34 : 72)

இப்படி அவன் பகுத்தறிவை தனக்கு தேர்வு செய்து கொண்டபின்னர் அனைத்து நபிமார்கள் உயிர்களு உள்ளிட்ட அனைத்து மனிதர்களின் உயிர்களையும் தனியாகக் கூட்டி வைத்துக் கொண்டு நமது நபிகளார் முத்து முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் உயர்திரு உயிரை எடுத்துக்காட்டி, ''இவ்வுயிருக்குச் சொந்தக் காரரான முஹம்மதுதான் அனைத்துப் படைப்பினங்களுக்கும் மூலாதாரமானவர். இவர் பொருட்டாலேதான் அனைத்தையும் நான் படைத்துள்ளேன். ஆதலால் நீங்கள் அனைவரும் இவ்வுயிருக்குச் சொந்தக்காரரான முஹம்மதை நபியாக

ஒப்புக்கொள்ளவேண்டும். அங்கனம் ஒப்புக்கொண்டால் தான் பகுத்தறிவு எனும் இந்த விலைமதிக்க முடியாத பொக்கிஷத்தை உங்களிடம் ஒப்படைப்பேன்'' என்று நிபந்தனை விதித்தான். ஆதலால் அனைத்து உயிர்களும் அவ்வருளாளரின் அருளுயிரை தங்களுக்கு நபியாக ஒப்பி மன, மொழி, மெய்யன்புடன் ஏற்றுக் கொண்டன. ஆகவே முஹம்மது (ஸல்-அம்) அவ்வலுந் நபியாக ஏகமனதுடன் ஒப்புக் கொள்ப்பட்டார்கள்.

(நூல் : தஃப்ஸிருத் தைஸிர்)

சிந்தனை சிற்பிகளான வாசக நண்பர்களே! எங்கே இப்போது சொல்லுங்கள் நமது நபிகளார் அவ்வலுந்நபி என்பது பொருத்தமுடையதா, அல்லவா, என்பதனை?

## “பாதினுந்நபி” என்பதன் காரணீயம்

அண்ணலாரை அவ்வலுந்நபி, ஆகிருந்நபி என்று ஏற்பது எப்படி கட்டாய கடமையோ அதுபோன்றே பாதினுந்நபி (ஆன்மீக- அந்தரங்க வாழ்க்கைக்கும் நபி) என்றும், ழாகிருந்நபி ( — வெளிப்படையான சட்ட வாழ்க்கைக்கும் நபி) என்று ஏற்பதும் கட்டாய கடமையாக உள்ளது.

அதற்கும் காரணீயமில்லால் இல்லை, அதாவது;

முன்னர் விவரிக்கப்பட்ட 'ஆலமே மீதாக' என்ற உலகில் மற்றொன்றும் நடைபெற்றது. அது என்னவெனில், உலகில் அவ்லிய்யாக்கள், குதுபுகள், கௌதுகள், இமாம் கள், குலஃபாக்கள் அவ்த்தாதுகள், அப்தால்கள் என்று ஞானப் படித்தரங்களில் எத்தனை படித்தரம் உள்ளதோ அத்தனை படித்தரங்களுக்கும் சொந்தமான அனைத்து

உயிர்களையும் பிரத்தியேகமாக ஒன்று கூட்டி முத்து முஹம்மதரின் (ஸல்-அம்) முத்துயிரை அவர்களிடம் எடுத்துக்காட்டி ''நீங்கள் தரீகத், ஹகீகத், மஃரிஃபத் என்ற எந்த ஞான மார்க்கத்தில் இருந்தாலும் நீங்களனை வரும் எனது இந்த முஹம்மதரையே ஞானவழிகாட்டியாகப் பின்பற்றியாக வேண்டும் அங்கனம் பின்பற்றுபவருக்குத்தான் 'விலாயத்' எனும் அவ்லிய்யாத் தன்மையை வழங்குவேன்'' என்று ஏக இறைவனாம் வல்ல அல்லாஹ் நிபந்தனை விதித்தபோது அவர்கள் அனைவருமே அண்ணல் நபிகளாரையே தங்களின் ஞானவழி காட்டியாக ஒப்பி ஏற்றுக் கொண்டனர். ஆதலால் நபிகளார் 'ழாகிர்' நபியாக மாத்திரமல்லாது பாத்தினுந் நபியாகவும் ஒப்புக்கொள்ளப் பட்டுள்ளார்கள். (நூல் : தஃப்ஸீருத் தைஸிர்)

## ''சய்யிதுல் அந்பியா'' என்பதன் காரணியம்

ஆலமே மீதாக்கில் ஆதம் (அலை) அவர்கள் தொடுத்து ஈசாரூஹுல்லா (அலை) அவர்கள் ஈராகவுள்ள அனைத்து நபி ரசூல்மார்களின் அருள் நிறைந்த உயிர் களைப் பிரத்தியேகமாக ஒன்று கூட்டி வைத்துக்கொண்டு ஹஜ்ரத் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின உயிரைச் சுட்டிக்காட்டி ''இவரை நீங்களனைவரும் ஏகபோகத் தலைவராக ஒப்புக் கொள்ள வேண்டும் அங்கனம் ஒப்புவீர் கள் என்பதாலேயே உங்களுக்கு 'நுபுவ்வத்; எனும் நபிப் பதவியைக் கொடுத்து உங்களைச் சிறப்பித்துள்ளேன் என்று இறைவன் நிகழ்த்தியபோது ஒப்புக் கொண்டோம். ஒப்புக் கொண்டோம் உத்தமர் முஹம்மதரை (ஸல்-அம்) எங்களின் ஏகபோகத் தலைவராக ஒப்புக் கொண்டோம்'

என்று அனைத்து நபிமார்களின் அருளுயிர்களும் ஏகமனதாக ஒப்புக் கொண்டமையால்தான் சய்யிதுல் அந்பியா (நபிமார்களின் ஏகபோகத் தலைவர்) என்ற சிறப்பு நமது நபிகளுக்கு ஏற்பட்டது.

உலகில் தோன்றி, தங்களின் நூபுவத்தை அவ்வக்கால மாந்தர்களுக்கு எத்திவைத்த நபிரசூல்மார்களனைவரும் தங்களது மற்றுமொரு வேலையாக கடைசி காலத்தில், கடைசி நபியாகத் தோன்றவிருக்கும் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் மட்டிலடங்கா மாண்புகளையும் அவர்களது உம்மத்துகளின் உயர்வையும் எடுத்துக் கூறி வந்துள்ள அந்தக் காட்சிகளும் நபிகளார் அவர்கள் மற்ற அனைத்து நபிமார்களாலும் தலைவராக ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தார்கள் என்பதற்கு மறுக்கவொன்னா அத்தாட்சியாக திகழ்ந்து கொண்டு உள்ளது.

(நூல் : ஷரபுல் முஸ்தஃபா)

அஃதன்றி : உலகில் இறக்கிக் கொடுக்கப்பட்ட நான்கு வேதங்களிலும், நூற்றிப்பத்து ஆகமங்களிலும் நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் தோற்றம், பிரச்சாரம், தியாகம், வாழ்க்கை, வெற்றி ஆகிய அனைத்து அம்சங்களைப்பற்றியும் மிக, மிகத் தெளிவாக முன்னறிவிப்புச் செய்யப்பட்டுள்ளது.

## கிருத்துவர்களின் வேதமான பைபிளில் திருத்தூதரான முஹம்மது நபிகளாரைப் பற்றிய முன்னறிவிப்பு

இன்னும், இவ்வாறே மோசே அவர்களை நோக்கி ‘‘நாம் உன்னைப் போல் ஒரு தீர்க்க தரிசியை அவர்களுக்கு

அவர்களின் சகோதரர் நடுவிலிருந்து எழும்பப்பண்ணி நம்முடைய வார்த்தைகளை அவருடைய வாயிலேயே அருளுவோம். நாம் அவருக்குக்கற்பித்ததையெல்லாம் அவர்களோடு அவர் சொல்லுவார் அவர் (1) 'நமது நாமத்தினாலே' சொல்லும் நமது வார்த்தைகளைக் கேளாதவர்களை நாம் விசாரிப்போம் — என்று ஆண்டவன் சொன்னதாக மோசே ; 18-ம் அதிகாரம் 18, 19 வசனங்களில் காணப்படுகின்றது.

இதைப்போலவே இயேசு அவர்களும் தமது சீஷர்களை நோக்கி

''2) சத்திய ஆவியான தேற்றவாளன் வரும்போது சகல சத்தியத்திற்குள்ளும் உங்களை நடத்துவார் அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல் தாம் கேள்விப் பட்டவைகள் யாவையும் சொல்லி, இனி வரப்போகிற காரியங்களையும் உங்களுக்கு அறிவிப்பார்'' (ஆதாரம்: யோவன் சுவிசேஷம் 16-ம் அத்தியாயம் 13-ம் வசனம்)

யூதா பாலசிங்கம் நீ இரைகவர்ந்து கொண்டு ஏறிப் போனாய். என்மகனே, சிங்கம் போலும் மடங்கிப்படுத்தான் அவனை எழுப்புகிறவன் யார் (4) சமாதானக்கர்த்தர்'' வருமளவு செங்கோல் யூதாவைவிட்டு நீக்குவதில்லை நியாயப் பிரமாணங்கள் அவன் பாதங்களை விட்டு ஒளிவதுமில்லை. (1 ம் மோசே 49-ம் அதிகாரம் 9, 10 வசனங்கள்)

நீங்கள் என்னிடத்தில் அன்பாயிருந்தால் என் கற்பனைகளைக் கைக்கொள்ளுங்கள், நான் பிதாவை வேண்டிக் கொள்வேன், அப்பொழுது என்றென்றைக்கும் உங்களுடனே கூடயிருக்கும் படி (5) சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றவாளனை, அவர் உங்களுக்குத் தந்தருள்வார்.

(யோவான் : 15 அதி, 26-ம் வசனம்)

பிதாவிடமிருந்து நான் உங்களுக்கு அனுப்பப் போகிறவரும், பிதாவிடமிருந்து புறப்படுகிறவருமாகிய (6) சத்திய ஆவியான தேற்றவாளன் வரும்போது அவர் (ஏசுவாகிய) என்னைக்குறித்து சாட்சி கொடுப்பார்

நான் உங்களுக்கு உண்மையைச் சொல்கிறேன். நான் போகிறது உங்களுக்குப் பிரயோஜனமாயிருக்கும். நான் போகாதிருந்தால் (7) தேற்றவாளன் உங்களிடத்தில் வரார்? நான் போவேனேயாகில் அவரை உங்களிடத்திற்கு அனுப்புவேன். அவர் வந்து பாவத்தைக் குறித்தும், நீதியைக் குறித்தும், நியாயத் தீர்ப்பைக் குறித்தும் உலகத்தைக் கண்டித்து உணர்த்துவார். இந்த உலகத்தில் அதிபதி நியாயந் தீர்க்கப்படாததினாலே நியாயத் தீர்ப்பைக்குறித்தும் தண்டித்து உணர்த்துவார். இன்னும் அநேக காரியங்களை நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதாயிருக்கிறது. அவைகளை நீங்கள் இப்போது தாங்க மாட்டீர்கள். சத்திய ஆவியாகிய அவர் வரும்போது சகல சத்தியங்களுக்குள்ளும் உங்களை நடத்துவார். அவர் தம்முடைய சுயமாய்ப் பேசாமல், தாம் கேள்விப் பட்டதை யாவையுஞ் சொல்லி வரப்போகிற காரியங்களை உங்களுக்கு அறிவிப்பார்.

(யோவான் 16. அதி 7. 8. 11. 12. 13)

நமக்கு ஒரு குமாரன் கொடுக்கப்பட்டார் (8) 'கர்த்தத்துவம்' அவர் தோள் மேல் இருக்கும். அவர் நாமம் அதிசயமானவர் - ஆலோசனை கர்த்தர் - வல்லமையுள்ள தேவன். நித்தியபிதா - சமாதான பிரபு எனப்படும். தாவீதின் சிங்காசனத்தையும், அவருடைய ராஜ்யத்தையும் அவர் திடப்படுத்தி, அதை இது முதற்கொண்டு என்றென்றைக்

கும் நியாயத்தினாலும், நீதியினாலும் நிலைப்படுத்தும் படிக்கு அவருடைய கர்த்தத்துவத்தின் பெருக்கத்துக்கும், அதின் சமாதானத்துக்கும் முடிவில் சேனைகளில் கர்த்தருடைய வைராக்கியம் இதைச் செய்யும் (ஏசாய : 9-ம் அதி 6, 7 வசனங்கள்)

எருசலேமே, எருசலேமே, தீர்க்கதரிசிகளைக் கொலை செய்து, உன்னிடத்தில் அனுப்பப்பட்டவர்களைக் கல்லெறிகிறவளே, கோழி குஞ்சுகளை தன் சிறகுகளின் கீழே கூட்டிச் சேர்த்துக் கொள்ளும் வண்ணமாக, நான் எத்தனை தரமோ உன் பிள்ளைகளைக் கட்டிச் சேர்த்துக் கொள்ள மனதாயிருந்தேன். உங்களுக்கோ மனதில்லாமல் போயிற்று. இதோ உங்கள் வீடு உங்களுக்குப் பாழாக்கி விடப்படும். (9) கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறவர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்' என்று நீங்கள் சொல்லு மளவும் இதுமுதல் என்னைக் காணாதிருப்பீர்கள் என்று உங்களுக்குச் சொல்கிறேன்.

(மத்தேயு : 23-ம் அதி : 87, 38, 39, வசனங்கள்)

ஜெபம் கொண்டு முடிவு பரியந்தம் என்கிரியைகளைக் காத்துக் கொள்ளுகிறவன் எவனோ அவனுக்கு என் பிதாவினிடத்தில் நான் பெற்றது போல் ஜெனக் கூட்டங்களின் மேல் அதிகாரத்தைக் கொடுப்பேன். இருப்புக் கோலால் அவர்களைக் நடத்திக் கொள்வான். அவர்களோ மண் கலயங்களைப்போல் நொறுக்கப்படுவார்கள். அல்லாமலும் (10) விடிவெள்ளி நக்ஷத்திரத்தை அவனுக்கு கொடுப்பேன்.

(யோவான், வெளி : 2 ம் அதி. 26, 27, 28 வசனங்கள்)

பைபிளினுடைய இந்த வசனங்களில் 'நமது நாமத்தினாலே' என்பது பிஸ்மில்லாஹ்வையும்,

2. 'சத்திய ஆவியான தேற்றவாளன்' என்பதும் 3. 'சுயமாய்ப் பேசாமல்' என்பதும்; 4. 'சமாதானக் கர்த்தர்' என்பதும்;

5. 'சத்திய ஆவியாகிய வேறொரு தேற்றவாளனை' என்பதும்;

6. 'சத்திய ஆவியாகிய தேற்றவாளன், என்பதும்;

7. 'தேற்றவாளன் உங்களிடத்தில் வரார்? என்பதுமெல்லாம் நமது நபிகள்நாதர் நானிலத்தின் தூதர் முஹம்மது (ஸல்-அம்) அவர்களையே சுட்டுகின்றது என்றுணர்க.

8. கர்த்தத்துவம் என்பது நமது நபிகளாரின் வலது தோள்புஜத்தில் அமைந்திருந்த நபித்துவ முத்திரையைக் குறிப்பிடுகின்றது.

9. கர்த்தருடைய நாமத்தினாலே வருகிறவர் ஸ்தோத்திரிக்கப்பட்டவர்' என்பதும்;

10. விடிவெள்ளி நக்ஷத்திரம் என்பதும்; நமது நபிகளாரை மாத்திரமே குறிப்பிடுகின்றது என்பது வெள்ளிடைமலை.

இப்படி, பலமுறை, பலரால் மாற்றத்திற்கும், திருத்தத்திற்கும் உள்ளாக்கப்பட்ட பின்னரும் கூட நபிகளாரைப் பற்றிய முன்னறிவிப்பும், அவர்களின் அற்புதமான புகழும் இந்த பைபிள் வசனங்களில் நடுப்பகல்சூரியனைப் போன்று பளிச்சிட்டுக் கொண்டிருக்கிறதென்றால் அந்த நாயகரின் அடங்கா தோங்கும் அற்புதப் புகழைப் பற்றி நம்மால் என்ன சொல்லிட முடியும், எப்படி வர்ணித்திட இயலும்?

## இறைவனின் இறுதித் தூதராம் முஹம்மது (ஸல்-அம்) அவர்களைப் பற்றி இந்துப் புராணங்களின் முன்னறிவிப்பு

ஹிந்திமொழி அறிஞராகிய ஹைதாரபாத்தைச் சேர்ந்த சூபி, மகான் அப்துர் ரஹ்மான் சிஷ்தி (ரஹ்) அவர்கள் தமது 'நவாதிருல் பவாதிர்' என்ற நூலில் மகாபாரதத்தின் கலியுகக் காண்டம் என்பதில் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களைப் பற்றி இவ்வாறு முன்னறிவிப்புச் செய்யப் பட்டுள்ளதாகக் கோடிட்டுக் காட்டுகின்றார்.

அதாவது;

''கலியுகத்தில் மகாமத்' என்பவர் அவதரிப்பார் அவர்மீது மேகம் நிழலிடும். அவர் ஏகதெய்வப் பிரச்சாரம் புரிவார். அவர் மக்களே. அவரை எதிர்ப்பார்கள். அவர் தனது ஜனனபூமியைத் துறப்பார். பல மனைவியர்களை மணமுடித்துக் கொள்வார். அவர்மீது முப்பது உத்தியாப் புராணங்கள் இறங்கும். அவர் படைபலத்தால் ஜனன பூமியைக் கைப்பற்றுவார். தேவாலயத்தைச் சுத்திகரிப்பார் உலகம் அவரால் அமைதியுறும்.

இதில் கூறப்பட்டுள்ள அனைத்து விஷயங்களும் முஹம் மதுநபி (ஸல்-அம்) அவர்களைப் பற்றியவையே என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போன்றதுதானே.

'கல்கி அவதார் அவ்ர் முஹம்மது ஸாஹிப்' என்ற ஹிந்தி மொழி நூலில் பண்டித் பிராசாத் உபாத்யாயா M. A. என்ற மத ஆராய்ச்சித் துறை வல்லுனர், இந்துபுராணத்தில் 'கல்கி அவதார்' என்ற பகுதியிலிருந்து சில முன்னறிவிப்புகளை எடுத்துக்கூறி அந்த கல்கி அவதார் முஹம்மது நபிதான் என்று எடுத்துக் காட்டியுள்ளார்.

புராணத்தின் அந்த முன்னறிவிப்பைக் கவனியுங்கள்

கல்கிஅவ்தார் இறைவனின் இறுதித் தூதராக 'சம்பகா வில்' பிரபல்ய மானதோர் குடும்பத்தில், மாதத்தில் பனி ரெண்டாம்நாள் பிறப்பார். அவர் தந்தையின் பெயர் 'விஷ்ணு பாகத்' என்றும், தாயாரின் பெயர் 'சூமதி' என்றும அமைந்தி ருக்கும், கல்கி, பரசுராமரிடமிருந்து மலையில் அறிவு பெறு வார். அவரே இறுதித் தூதராக உலக முழுமைக்கும் வழி காட்டுவார், அவர் ஒப்புவமையற்ற அழகுடையவராக இருப் பார். அவரின் உடம்பில் நறுமணம் கமழும். அவர் பேரீத்தங் கனிகளை உண்பார். குதிரைச் சவாரி செய்வார். தன்னுடன் வாளை வைத்திருப்பார் அவர் சிவனிடமிருந்து குதிரை யைப் பெறுவார். அவர் எட்டுவித தெய்வீகத் தன்மையுடை யவராக இருப்பார். அவர் தமது நான்கு தோழர்களுடன் சாத்தானை தோற்கடிப்பார். அவர் தமது இனத்தவர்களால் துன்புறுத்தப்பட்டு மலையின் வடபகுதி நகருக்கு குடி பெயர்ந்து விடுவார். சில காலங்களுக்குப் பிறகு வாள் பலத் துடன் வந்து தமது பூர்விக நகரைக் கைப்பற்றுவார். சிவனி டமிருந்து பெற்ற மின்னலைவிட அதிவேகமான குதிரையில் உலகையும் ஏழு வானங்களையும் வலம் வருவார்.

'சம்பஹால்' என்பது பைபிளில் கூறப்பட்டுள்ள புரா தானப் பாலை நிலமான அரபிய நாட்டையும்;

'பிரபல்யமான குடும்பம்' என்பது குரைஷி குடும்பத் தையும்,

மாதத்தின் பனிரெண்டாம் நாள் என்பது ரபீவுல் அவ்வல் மாதத்தின் பனிரெண்டாம் நாள் நபிகளார் பிறந் ததையும்;

'விஷ்ணுபாகத்' என்பதற்கு தமிழில் இறையடிமை என்று பொருள் விரிவதால். இறையடிமை என்ற பொருள் கொண்ட 'அப்துல்லா' என்பது நபிகளாரின் தகப்பனாரையும்;

'சூமதி' என்பதற்கு தமிழில் அமைதியான இடம் என்று பொருள் விரிவதால் அந்தப் பொருளைக்கொண்ட 'ஆமினா' என்பது நபிகளாரின் தாயாரையும். குறிப்பிடுகின்றன.

மக்கமாநகரின் அருகிலுள்ள 'ஹிரா' மலைக்குன்றின் குகையில் தவமிருந்து கொண்டிருக்கும் போதுதான் நபிகளுக்கு நபிப்பதவி அருளப்பட்டது. அதனையே 'பரசுராமரிடமிருந்து மலையில் அறிவு பெறுவார்' என்பது தெள்ளத் தெளிவாகக் குறிப்பிடுகிறது.

'மலையின் வடபகுதிநகர்' என்பது மதீனாவைக் குறிப்பிடுகின்றது.

'சிவன்' என்பது இறைவனைச் சுட்டுகின்றது.

மின்னலைவிட அதிவேகமான குதிரை என்பது 'புராக்' பிராணியைக் குறிப்பிடுகின்றது.

நான்கு தோழர்கள்' என்பது (1) ஹஜ்ரத் அபூபக்ர் (ரலி-அன்ஹு) (2) உமர் (ரலி-அன்ஹு (3) உதுமான் (ரலி-அன்ஹு) (4) அலி-(ரலிஅன்ஹு) ஆகிய நான்கு கலீபாக்களைக் குறிப்பிடுகின்றது.

'ஆதலால், இந்த 'கல்கி அவ்தார்' என்ற அறிவிப்பில் கூறப்பட்டுள்ள அனைத்து அம்சங்களும் ஒருங்கே அமையப் பெற்றுள்ள மனிதப் புனிதர் முஹம்மது நபி ஒருவரே ஆவார். ஆகவே முஹம்மது நபியின் மூலம் கல்கி

அவதாரம் நிகழ்ந்து விட்டது. இனி அதை எதிர் பார்த்துக் கொண்டிருப்பதில் பொருளில்லை'' என்று பண்டித் பிரசாத் உபாத்தியாயா M. A. அவர்கள் ஆணித்தரமாக தனது அந்த நூலில் உறுதிப்படுத்துகின்றார்.

(ஆதாரம் : 20-1-84 மறுமலர்ச்சி வாரரந்திரி)

## திருக்குறளில் திருத்தூதராம் முஹம்மது(ஸல்-அம்) அவர்களைப் பின்பற்றும் படி அறிவுரை

திருக்குறளை உலகப் பொதுமறையென்று சமீபகாலமாக விவாதிக்கப்பட்டு வருகின்றது.

ஆனால், முஸ்லிம்கள் ஏற்கனவே குர்ஆன் ஷரீபை உலகத்தின் உன்னதப் பொதுமறையாக ஏற்றுக்கொண்ட காரணத்தினாலேதான் முஸ்லிமாக இருக்க முடிகின்றது. குர்ஆன் ஷரீபு மாத்திரம் தான் உலகப் பொதுமறையாக இலங்கும் தகுதிபடைத்ததும் கூட.

ஆகவே, முஸ்லிம்களால் திருக்குறளை மாத்திரமல்ல குர்ஆனைத் தவிரவுள்ள எதனையும் பொதுமறையாக ஒருக்காலமும் ஒப்புக் கொள்ள முடியவே முடியாது. அதே நேரத்தில் தமிழிலுள்ள அறிவு நூல்களில் அஃதோர் தத்துவக்களஞ்சியம் என்பதனை மறுக்கத்தயாராகவும் இல்லை.

*இத்தகு தமிழ் தத்துவக் களஞ்சியமான குறளில்:*
*தோன்றின் புகழுடன் தோன்றுக அஃதிலார்*
*தோன்றின் தோன்றாமை நன்று*

என்றொரு குறளும் உள்ளது.

என்ன புரிகின்றதா?

திருவள்ளுவர், திருநபிகளார் பிறப்பெடுப்பதற்கு ஏறக் குறைய ஐநூறு ஆண்டுகளுக்கு முந்தியவர். அப்படியிருக்க அவர் முஹம்மது நபிகளாரைப் பற்றி எங்ஙனம் அறிந்திருக்க முடியும்? என்று ஐயமுறுகின்றீர். தெரியுமே எனக்கு. இதோ அதற்கும் விபரம் தருகின்றேன்: சரி காணுங்கள்.

ஒவ்வொரு வகுப்பினருக்கும் (அல்லாஹ்வாகிய எம்மால் அனுப்பப்பட்ட) ஒரு தூதர் உண்டு. அவர்களுடைய தூதர் (அவர்களிடம் வரும் சமயத்தில்) அவரைப் பின் பற்றியோரைப் பாதுகாத்தும், பொய்யாக்கியோரை அழித்தும்,) அவர்களுக்கிடையில் நிதானமாகவே தீர்ப்பளிக்கப்படும். அவர்கள் (அணுவளவும்) அநியாயம் செய்யப்பட மாட்டார்கள்
(குர் : 10 47)

பூமியின் பல பாகங்களிலும் வசித்திருந்த ஒவ்வொரு வகுப்பினருக்கும் நிச்சயமாக நாம் தூதரை அனுப்பியிருக்கிறோம். (அத்தூதர்கள் அவர்களை நோக்கி) அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். வழிகொடுக்கும் ஷைத்தான்களிலிருந்து நீங்கள் விலகிக் கொள்ளுங்கள்'' என்று கூறிச் சென்றார்கள் அல்லாஹ் நேர் வழியில் செலுத்தியோரும் அவர்களில் உண்டு. வழிகேடே விதிக்கப்பெற்றோரும் அவர்களில் உண்டு. ஆகவே, நீங்கள் பூமியில் சுற்றித் திரிந்து (நபி மார்களைப்) பொய்யாக்கியவர்களின் முடிவு எவ்வாறாயிற்று என்பதைக் கவனித்துப் பாருங்கள்
(குர் : 16; 36)

(நபியே, முஹம்மதே!) நிச்சயமாக நாம் உம்மை உண்மையைக் கொண்டு நன்மாராயங் கூறுபவராகவும், அச்சமூட்டி எச்சரிக்கை செய்பவராகவும், அனுப்பியிருக்கிறோம். அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும் (நம்முடைய) தூதர் வராத எந்த வகுப்பாரும் (பூமியில்) இருக்கவில்லை.
(குர் :35, 42)

அன்புப் பெருந்தகையீர்! மீக்கூறிக் காண்பிக்கப் பட்டுள்ள அல்லாஹ்வின் அருட்திரு வசனங்களைச் சிந்தித்துப் பாருங்கள். அங்கனம் சிந்திக்கும்போது, உலக மனைத்திலும் வாழ்ந்த அனைத்து வகுப்பினருக்கும்-மொழி யினருக்கும்- நாட்டினருக்கும் சீர்திருத்தச் செம்மல்களான நபிமார்கள் வழிகாட்டிகளாக அனுப்பப்பட்டே வந்துள் ளார்கள் என்ற விழுமிய கருத்து உங்களுக்குப் புரியவரும்.

அப்படியென்றால் கல்தோன்றி மண்தோன்றாக் காலத் திற்கு முந்திய மூத்தகுடிகளான நம் தமிழ்குடி மக்களுக்குத் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட நபிமார்கள் அனுப்பப் படாமல் இருந்திருக்க முடியுமா? நிச்சயமாக நம் தமிழகத் திற்கு - தேன் தமிழைந் தாய்மொழியாகக் கொண்ட நபிமார் கள் அல்லாஹ்வினால் அனுப்பப்பட்டுத்தான் இருக்கிறார் கள்.

ஆனால், பிழைப்பு நடத்துவதற்காகவே எங்கோ யிருந்து இங்குவந்து குடியமர்ந்து கொண்டு, வந்தாரை வாரீர் — வாழீ, வாழீ' என்று வரவேற்று உபசரிக்கும் உயர் பண்பு கொண்ட தமிழர்களை மொய்த்து, இந்த அழகு குணம் படைத்த பெருமக்களுக்கு நாளடைவில் மேய்ப் பர்களாக மாறிக்கொண்ட அந்த வந்தேறிகள், தங்களின் மேய்க்கும் தொழிலில் காலூன்றி, காலா காலத்திற்கும் மேய்ப்பர்களாகவே கோலோச்ச வேண்டும், என்ற வஞ்சக நோக்கத்தில், இங்கு இருந்த நபிமார்களின் வரலாறுகளைச் சின்னா பின்னப் படுத்தி இனம்தெரியாத அளவிற்கு நாசப் படுத்தி விட்டார்கள் சண்டாளர்கள்.

ஆகவே தமிழக நபிமார்கள் யார், அவர்களின் பெய ரென்ன? என்பது மறைக்கப்பட்டுப் போய் விட்டதே தவிர நபிமார்கள் இருந்துள்ளார்கள் என்பதனை எவராலும் எப்போதும் மறுத்திட முடியவே முடியாது,

ஆதலால், இன்றைக்கு ஏறக்குறைய இரண்டாயிரம்

ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த திருவள்ளுவர் காலத்தில் யாரோ ஒருவர் நமது தங்கத் தமிழகத்தில் நபியாகஇருந்து ஏக தெய்வப் பிரச்சாரம் செய்து கொண்டு இருந்திருப்பார். அல்லது வள்ளுவருக்கு முன்னர் அங்கனமொரு நபி இருந் திருப்பார். அவரது பிரச்சாரம் தத்துவ மேதையாக இருந்த வள்ளுவப் பெருந்தகைக்கு எட்டாமலிருக்க எவ்வகை நியாயமு மில்லை. ஆகவே அந்த நபிமூலம் இஸ்லாமிய சன்மார்க்கத்தைப்பற்றி அறிந்த வள்ளுவப் பெருந்தகை ஒரு முஸ்லிமாக வாழ்ந்திருப்பார் என்பதும் சர்வ நிச்சயமாகும். ஏனெனில் அவரது குறள் களில் இஸ்லாமிய நறுமணம் ஆங்காங்கே கமழ்ந்து கொண்டிருப்பதை எவராலும் மறுக்க வியலாது.

இப்படிப்பட்டவருக்கு கடைசி, கடைசியாக வரப் போகும் உலகப் பொதுநபி பற்றி தெரியாதிருக்க முடியுமோ? ஏனெனில் உலகில் தோன்றிய நபிமார்களனை வருமே கடைசி, கடைசியாக வரப்போகும் உலகப் பொது நபியாகிய முஹம்மது (ஸல்-அம்) அவர்களைப்பற்றி முன்னறிவிப்புச் செய்வதையும் தங்களது கடமையாகக் கொண்டு வாழ்ந்திருக்கிறார்களே.

ஆகவே தமது காலத்து நபியின் வாய் மூலமாக முஹம்மது (ஸல்-அம்) அவர்களைப் பற்றி தெளிவாக— தீர்க்கமாக அறிந்து சிறந்த வள்ளுவப் பெருந்தகை 'யாம் பெற்ற இன்பம் பெறுக எம் தமிழினம்' என்று நினைத் திருக்க மாட்டாரா?

தனது தமிழினம், அறத்தில் உரமேறியவர்களாகத் திகழ வேண்டுமென்று ஆசைப்பட்டு அறத்துப்பால் பாடி, அனைத்து இன்பங்களையும் காமுற்றுக் களிக்க வேண்டு மென்று ஆசைப்பட்டு இன்பத்துப்துப்பால் பாடி, கற்புநிலை யில் பொற்புடையவர்களாகத் திகழ்ந்திட வேண்டுமென்ற ஆதங்கத்துடன் காமத்துப்பால் பாடி வழிகாட்டிய வள்ளு வனாருக்கு, பிற்காலத்தில் தனது தமிழினம் இந்த நற்

குணங்களிலெல்லாம் ஊன்றி நின்றிட வேண்டுமானால், அவர்கள் யாரைப் பின்பற்றியொழுக வேண்டுமென்பது புரியாமல் இருந்திருக்குமா?

அல்லது, உலகப் பொது நபியாக ஒருவர் வரும்போது தனது தமிழினம் மாத்திரம் அந்தப் பொதுவுடமையில் கலந்து கொள்ளாமல் தனித்து நிற்க வேண்டுமென்று சிந்திக்கும் குறுகிய மனம் படைத்தவரா அவர்? அல்லவே

ஆகவே, தனது காலத்திற்குப் பின்னர் இத்தரையில் பத்தரைமாற்றுத் தங்கமென முத்திரை பெற்ற முத்தொளி நாயகர் ஒருவர் உலகத்தின் பொது வழிகாட்டியாக வரப் போகின்றார். அவர் 'ஒன்றே குலம் - ஒருவனே தேவன்' என்ற தமிழனின் பூர்வீகக் கொள்கையை உலக முழுவதிலும் - அரும்பாடு பட்டு வேரூன்றச் செய்து, உலக மாந்தர் அனைவருக்கும் ஒரே மாதிரியிலான சிவில், கிரிமினல். ரெவின்யூ சட்டங்களை - எக்காலத்திற்கும் பொருந்தும் வண்ணமாக - அமைத்துக் கொடுத்து நீதி, நேர்மை நியாயங்களை நிலைநாட்டுவதோடு, சுயமரியாதைத் தத்துவத்தை உலகின் உயிரோட்டமாக நிலை நிறுத்தப் போகின்றார். அவரின் பெயர் 'புகழேந்தி' என்று பொருள் படும் 'முஹம்மது' என்பதாகும். அவரது சமுதாயத்தின் பெயர் 'புகழுடையவரின்சமுதாயம்' என்ற பொருள் கொண்ட 'உம்மதுன் முஹம்மதிய்யா' என்பதாகும் என்ற விபரங்களை யெல்லாம் அணு அணுவாகச் சொல்லக் கேட்டு அந்த முஹம்மதரின் (ஸல்-அம்) பால் தன்னைப் பறிகொடுத்து விட்ட வள்ளுவனார், தனது வருகாலத் தமிழினம், அந்தப் புகழேந்தியின் புகழுடைய சமுதாயமாக ஒளிர வேண்டும் என்று ஆசைப்பட்டு, அந்த ஆசையை வெளிப்படுத்தும் முகமாக, தனது தமிழினத்தை நோக்கி;

ஏ, தங்கத் தமிழனே! நீ உலகம் உள்ளளவும், உலகில் உயிரினம் உள்ளவும் சிங்கத் தமிழனாகவே தலை

திமிர்ந்து வாழ்ந்து, உலக முடிவிற்குப் பின்னரும், ஆதிபகவான் (அல்லாஹ்வின்) திருமுன் பங்கப்பட்டு விடாமல் சுங்கப்பட்டாக சுடர் பரப்பிட வேண்டும். ஆதலால், தமிழா! நீ பிறப்பெடுக்கும் போதே புகழேந்தியின் சமுதாயத்தவனாக (உம்மத்தே முஹம்மதிய்யாவாகப்) பிறப்பெடு. அங்கனம் உனக்கு உனது பெற்றோர் வாய்ப்புத்தராது போனால் நீ பிறப்பதைப் பார்க்கிலும் பிறக்காமலே இருந்திடுவது தான் உனக்கு நன்று - என்ற கருத்தில்தான் அப்பெருந்தகை;

தோன்றின புகழுடன் தோன்றுக அஃதிலார்
தோன்றின் தோற்றுமை நன்று

என்று பாடியிருக்கின்றார் என்று, நான் நம்புகின்றேன் எனது இந்த நம்பிக்கைதான் அந்த குறளுக்குப் பொறுத்தமான பொருளாக அமைய முடியும் என்று உறுதி யாகக் கூறுகின்றேன். எனது இந்தக கூற்றை மறுத்திட எவரால் முடியும்?

## அன்சாரி சஹாபாக்கள் நபியின வழித் தோன்றல்களாவர்?

முற்காலத்தில் முடிமன்னரொருவர், தனது முன்னோடி. பின்னோடிப் பரிவாரங்களுடனும், பல்துறையைச் சேர்ந்த நானூறு அறிஞர் பெருமக்களுடனும் உலகச் சுற்றுப் பயண மேற்கொண்டு தனது பயணத்தின் கடைசிக் கட்டமாக இயற்கை வளம் கொழிக்கும் 'யத்ரப்' என்ற அந்தச் சிற்றூருக்கு வந்தடைந்து, ஆங்கு சிலமாதங்கள் தங்கி ஓய்வு கொண்ட பின்னர், தமது தாயநம் திரும்ப ஆயத்தம் செய்யும்படி அனைவருக்கும் கட்டளை பிறப்பிக்கின்றார் கட்டளை கிடைக்கப் பெற்றவுடன் அவருடன் வந்திருந்த அந்த நானூறு அறிஞர் பெருமக்களின் சார்பாக சில அறிஞர்கள் மன்னரைச் சந்தித்து, இந்தச் சிற்றூரிலேயே தாங்களனைவரும் நிரந்தரமாகத் தங்கி விட விரும்புவதாக

வும் அதற்கு மன்னர் மனமுவந்து அனுமதி வழங்க வேண்டுமென்றும் வேண்டிக் கொள்கின்றனர்.

இதனைக் கேட்டு அதிர்ச்சி மிகக்கொண்ட மன்னர் ''ஒரு நாட்டின் செல்வங்களிலேயே அறிஞர்கள்தான் உன்னதச் செல்வமாகும். அத்தகு எனது நாட்டின் செல்வங்களை அடியோடு இழக்க நான் அனுமதியேன்'' என்று கண்டிப்பாகவே மன்னர் அவர்களிடம் கூறினார்.

ஆனால், அறிஞர்களின் அந்தத் தூதுக் குழுவினர் மன்னருக்குப் பலவிதச் சமாதானங்களைக் கூறிய பின்னர் ''மன்னர் மன்னா! அந்தக் கடைசி நபியான முஹம்மது தமது பிறந்தகத்தாரால் துறத்தப்பட்டு ஹிஜ்ரத் செய்து நாம் தற்போது தங்கியிருக்கும் இந்தச் சிற்றூரில் தான் அடைக்கலம் புக இருக்கின்றார். அஃதன்றி இந்த ஊருக்கு அவர் வந்தடைந்த பின்னரே அவரின் நபித்துவம் அகிலவுலகிற்கும் எட்டப்படச்செய்து 'இஸ்லாம்' எனும் அந்த சன்மார்க்கம் உலகமுழுவதிலும் பேரொளி வீசப்போகின்றது. இன்னம். அந்த கடைசிநபியவர்கள் இந்த மண்ணிலேயே நல்லடக்கம் பெற இருப்பதால், இந்த மண், உலகம் உள்ளளவும் மணம் கமழும் திருமண்ணாகவும் உலக மக்களனைவரின் கவனங்களையும் ஈர்க்கக் கூடிய பிரபல்யமான மண்ணாகவும் இந்தப் பொன்மண் திகழ இருக்கின்றது. ஆகவேதான் உங்களின் அறிஞர்களாகிய நாங்கள் இங்கே தங்கி. அந்த நபியின் வருகையை எதிர்பார்த்து காத்திருந்து, அவர் வரும்போது அவரை வரவேற்று அவருக்கு அடைக்கலம் கொடுத்து, அவரின் சகல நடவடிக்கைகளுக்கும் துணை நின்றோமானால் அதனால் எங்களுக்கு கிடைக்கும் புகழனைத்தும் மன்னர் மன்னரான உங்களுக்கும், நமது தாய்த்திரு நாட்டிற்கும் சொந்தமாகி, அதன் பொருட்டால் நீங்களும், நமது நாடும் இறைவன் இன்னருள்களுக்குச் சொந்தம் பெற்றிட முடியும் ஆகவே, எங்களை அருள்கூர்ந்து

இங்கேயே தங்கிவிட அனுமதித்து அருள வேண்டும்'' என்று தாங்கள் அந்தச் சிற்றூரில் நிரந்தரமாகத் தங்குவதற்கு விரும்பும் 'காரண, காரியங்களை விரிவாக எடுத்துக் கூறினார்கள்.

அந்த அறிஞர்களின் மூலம் இந்த விபரங்களையெல்லாம் தெரிந்த அந்த மன்னர், ஒரு சில நாள் தனக்கு அவகாசம் கொடுக்கும்படி அவர்களைக் கேட்டுக்கொண்டு அவர்களை வழியனுப்பி வைத்து விட்டு ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கித் திளைத்தார்.

சில நாள் சென்றடைந்த பின்னர், ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவராக அறிஞர்களின் தலைவர்களை அழைத்து கடைசி காலத்தின் அந்தக் கடைசி நபியைக் குறித்து சிலபல விபரங்களைக் கேட்டறிந்து கொண்ட பின்னர், அந்தச் சிற்றூரில் நானூறு வீடுகளைக் கட்டுவதற்கு ஏற்பாடு செய்து வீடுகள் கட்டி முடிக்கப்பட்ட பின்னர் அந்த நானூறு அறிஞர்களையும் அந்த வீடுகளில் குடியமர்த்திவிட்டு, மற்றுமுள்ள தனது முன்னோடி பின்னோடிப் பரிவாரங்களுடன் தனது தாயகம் புறப்படும் போது ஒரு செம்புப் பட்டயச் சுருளை அந்த அறிஞர்களின் தலைவராக உள்ளவனிடம் ஒப்படைத்து ''அறிஞர் பெருமகனாரே! நீங்கள் எதிர்பார்த்துக் காத்திருக்கும் அந்த முஹம்மது இங்கு வந்தடைந்த பின்னர் இந்த மடலை அவரிடம் என் சார்பாக ஒப்படைத்து விடுங்கள்'' என்று வேண்டிக் கொண்டு தனது தாய் நாட்டிற்குத் திரும்பினார் அவர்.

மீகக் கூறிக் காண்பிக்கப்பட்ட நிகழ்ச்சி நுஜ்ஹத்துல் மஜாலிஸ்' என்ற பல்சுவைக் கோவையின், இரண்டாவது பாகம் 76, 77 பக்கங்களில் பதியப்பட்டு பாதுகாப்பாக இன்றும் நமது பார்வைக்கு இருந்து வருகின்றது.

அந்தப் பேரிலக்கியத்தில் அந்த மன்னர் தனது சொந்த நாட்டிற்குத் திரும்புவதைக் குறிப்பிடும்போது வ-ரஜஅ

இலல்ஹிந்தி'' (-அதாவது தனது தாயகமான இந்தியாவிற்கு அந்த மன்னர் மீண்டார்) என்று கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

நமது நபிகளார் மக்காவைத் துறந்து மதீனாவிற்குள் நுழையும் வரை 'யத்ரிப்' என்ற பெயரிலேயே அறியப்பட்டு வந்த அந்தச் சிற்றூர்; நபிகளார் தங்களின் பொற்பாதங்களை அங்கு பதித்த அந்த வினாடியிலிருந்து 'மதீனததுந் நபி (-நபிகளாரின் நந்நகரம்)' என்று பெயர் மாற்றம் கண்டு இன்றளவும் அந்த மாற்றுப் பெயரிலேயே அழைக்கப்பட்டு வருகின்றது என்பதையும்;

நபிகளாரின் தோழர்களில் மக்கா நகரைப் பூர்வீகமாகக் கொண்ட தோழர்களுக்கு 'முஹாஜிரீன்கள்' என்றும், மதீனாவைப் பூர்வீகமாகக் கொண்ட தோழர்களுக்கு 'அன்சாரிகள்' என்றும் வழங்கப்படும் என்பதனையுமெல்லாம் அறிந்து வைப்பது பின்வரும் செய்திகளுக்கு உதவுபடியாக இருக்கும்.

மீக்கூறிக் காண்பிக்கப்பட்டதற்கொப்ப, யத்ரிப் என்னும் மதீனா நகரில் குடியமர்ந்து நபிகளாரின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த அறிஞர் குடும்பங்களின் பூர்வீகம் 'இந்தியா' என்பதாலும், அந்த இந்தியா வம்மிசா வழியினர்தான் நபிகளாரை வரவேற்று உபசரிக்கும் பாக்கியம் கிடைக்கப் பெற்றார்கள் என்பதாலும், அந்த அன்சாரி சஹாபாக்கள் இந்திய வம்மிசா வழியினர் என்பது ஊர்ஜிதப் படுகின்றது.

இதில் அந்த அன்சாரிக் கொடி வழித் தோன்றல்களான இன்றைய மதீனா நகர் வாழ் முஸ்லிம்கள், மற்றய அரபிகளைப் பார்க்கிலும் சாந்த சொரூபிகளாகவும், வந்தாரை வரவேற்று உபசரிக்கும் நற்பழக்கங்களிலும் விருந்தோம்புதலிலுமெல்லாம் மிகைத்து இருப்பதாகச் சொல்லக் கேட்கின்றோம்.

ஆகவே, மதீனாவாழ் இன்றைய முஸ்லிம்களின் அந்தக் குணப் பண்புகள், நமது இந்தியாவில் எந்த பாகத்து மக்களிடம் மிகைத்துக் காணப்படுகின்றது என்பதனை ஆய்ந்திடும் போது இந்தியாவிலேயே சாந்த சொரூபத்திலும், வந்தாரை வரவேற்று உபசரிப்பதிலும், விருந்தோம்பும் நல்லறப் பழக்கத்திலும் எம் தமிழினம் ஒன்றுதான் மிகைத்துக் காணப்படுகின்றது என்பதனை மன்னிக்கத் தக்க பெருமித உணர்வுடன் நெஞ்சு நிமிர்த்திச் சொல்லிட முடியும்.

ஆதலால், மதீனத்து அன்சாரி சஹாபாக்கள் இந்தியா வம்மிசா வழியினர் என்று பொதுப்படையாகச் சொல்வதை விட, இந்தியாவிலுள்ள 'தமிழினத்தின் வம்சா வழியினர்' என்று அன்சாரி சஹாபாப் பெருமக்களைக் குறிப்பிடுவது தான் மிக, மிகப் பொருத்தமாக அமைந்திட முடியும் என உறுதியாக நம்புகின்றேன்.

முறையாக ஆய்வு நடத்தப்பட்டால் எனது இந்தக் கருத்து ஊர்ஜிதப்படுத்தப்பட முடியுமாதலால் தமிழக அரசினர் இது விஷயத்தில் கவனம் செலுத்தி அது விஷயமாக முறையான சரித்திர ஆய்வுகள் நடாத்த வேண்டும் என்ற எனது எண்ணத்தை விண்ணப்பமாகச் சமர்ப்பித்து கொள்கின்றேன்.

முறையான ஆய்வு நடாத்தப்பட்டு அந்த ஆய்வில் மக்காவை ஹிஜ்ரத் செய்து மதீனாபுரி வருகை தந்த உலகப் பெருந்தூதர் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களை வரவேற்று உபசரித்த அந்த அன்சாரி சஹாபாக்கள் தமிழினத்தின் வழித்தோன்றல்கள்தான் என என்று நிரூபணமாகின்றதோ அன்றே தமிழனின் பொன்னாளாகும்.

சரி விஷயத்திற்கு வருவோம்.

நந்நபிகளார் மதீனாபுரி வந்தடைந்தபோது, ஆங்கிருந்த ஒவ்வொருவரும் நபிகளார் தமது விருந்தாளியாக தங்க வேண்டும் என்று போட்டி போட்டபோது, எனது வாகனமான இந்த ஒட்டகத்திற்கு உத்திரவு கொடுக்கப்பட்டுள்ளது. ஆகவே அது எவர் வீட்டு முன்னர் நிற்கிறதோ அவரது விருந்தாளியாகவே நான் தங்குவேன்''
(நூல் : முஹம்மதுர் ரசூல்லாஹ்)

என்று நபிகளார் அறிவித்திட அங்ஙனமே ஒட்டகையினை அதன் போக்கில் விடப்பட்டது. அல்லாஹ்வினால் உத்திரவிடப்பட்ட அந்த ஒட்டகை 'அபூ அய்யூபில் அன்ஸாரி (ரலி- அன்ஹு)' என்பவரின் வீட்டு முன் சென்று அங்கே படுத்துக் கொண்டது. எனவே நபிகளார் அந்த அபூ அய்யூபின் விருந்தாளியாக அவரது வீட்டில் தங்கினார்கள். சில நாட்கள் சென்றடைந்தது.

அதற்குள் ஹஜ்ரத் அலி (ரலி-அன்ஹு) அவர்களும் மக்காவிலிருந்து புறப்பட்டு மதீனாபுரி வந்தடைந்து விட்டார்கள்.

அப்போது ஒரு சமயம் நபிகளார் தங்கியிருக்கும் வீட்டுக்குச் சொந்தக்காரரான அந்த அபூ அய்யூப் (ரலி அன்ஹு) என்பார் நபிகளாரிடம் ''அல்லாஹ்வின் அருட் திருத்தூதே! இதோ இந்த மடல் எங்கள் மூதாதையர்களிட மிருந்து கொடிவழியாகப் பாதுகாக்கப்பட்டு தற்போது என் கைவசம் இருந்து கொண்டுள்ளது. இதன் மேலுறையில் 'கடைசி கால நபிக்கு' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆதலால் இந்த மடல் உங்களுக்குரியதுதான் ஆகவே எங்களது மூதாதையரின் அடைக்கலப் பொருளான இதனை தாங்கள் பெற்றுக்கொள்ளுங்கள்'' என்று கூறி அம்மடலை அண்ணல் நபிகளிடம் ஒப்படைத்தார்.

மடலைப் பெற்ற நபியுல்லா தமதருகே இருந்த ஹஜ்ரத் அலி (ரலி-அன்ஹு) அவர்களிடம் அதைக் கொடுத்து அதனைப் பிரித்து வாசித்துக் காட்டும்படி பணித்தார்கள்.

அதற்கிணங்க பாதுகாக்கப்பட்ட மேலுறையைப் பிரித்து அதனுள்ளேயிருந்த செம்புத் தகட்டில் எழுதப்பட்டிருந்த மடலை படிக்கலானார்கள் ஹஜ்ரத் அலி (ரலி) அவர்கள்

அதில் குறிப்பிடப்பட்டிருந்த விபரமாவது :

*"முஹம்மதரே! நான் உங்களையும், உங்களது இரட்சகனையும் முழுமையாக விசுவாசம் கொண்டு விட்டேன். நான் உங்களது மார்க்கத்தில் என்னை இணைத்துக் கொண்டேன். நான் எனது வாழ் நாளில் உங்களது வெளிப்பாட்டைப் பெற்றுக் கொண்டால், தங்களை நேரில் தரிசித்து இதனை ஊர்ஜிதப்படுத்திக் கொள்வேன். அத்தகு பாக்கியம் எனக்கு கிடைக்காது போய், நான் உங்களுக்கு முன்னரே மரணித்து விடுவேனாகில் கியாமத்து நாளன்று எனக்காக தாங்கள் ஷி:பாஅத் (மன்றாட்டம்) செய்தருள வேண்டும். என்னை தங்களின் முந்திய உம்மத்துகளில் ஒருவனாக தாங்கள் அங்கீகரிக்கும்படி இதன் மூலம் விண்ணப்பித்துக் கொள்கிறேன்.*

என்று எழுதப்பட்டு அதனடியில் அந்த இந்திய தேசத்து மன்னரின் முத்திரையும் ஒப்பமும் பதியப்பட்டிருந்தது.

இதனை அலி (ரலி அன்ஹு) அவர்கள் வாசித்துக் காட்டிட அதனைச் செவிதாழ்த்திக் கேட்டுக் கொண்டிருந்த நபிகளார் ''மர்ஹபன் பில் அகிஸ் ஸாலிஹ் (-நல்ல அந்த சகோதரருக்கு வாழ்த்துக்கள் உரித்தாகட்டும்)'' என்று அம் பின்னரை வாழ்த்தினார்கள்.

அதன் பின்னர் அந்த மடல் எழுதப்பட்ட தேதியையும், நபிகளார் மதீனாவிற்கு வருகை புரிந்த தேதியையும்

கணக்கிட்டுப் பார்த்த போது சரியாக ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னதாக அந்த மடல் எழுதப்பட்டிருப்பது தெரிய வந்தது (நூல் : நுஜ்ஹத்துல் மஜாலிஸ் : 2-ம் பாகம்)

சுப்ஹானல்லா.........

நபிகளாரை எந்த அளவு, எப்போதிருந்து, யார், யாரெல்லாம் எதிர்பார்த்து, எதிர்பார்த்துக் காத்திருக்கின்றார்கள் பார்த்தீர்களா?

அப்படியென்றால் அந்த அற்புதத் திருநபிகளாரின் ஆழிய புகழுக்கு எல்லை வகுத்திட எவரால்தான் முடிந்திடப் போகின்றது?

இப்படியாக; இந்த அண்ட கோளங்களனைத்தும் தோன்றியதே அந்த அண்ணல் திருவாளரின் பொருட்டால்.

ஆதி பிதா ஆதம் நபி (அலை) அவர்கள் தொடுத்து இன்றும் உயிரோடு பாதுகாக்கப்பட்டு வரும் ஈசா நபி (அலை) அவர்கள் ஈராக அனைத்து நபிமார்களுமே அந்த அண்ணலின் வருகையை முன்னறிவிப்புச் செய்வதை-தங்களுக்குக் கிடைத்த பாக்கியங்களிலேயே பெரும் பாக்கியமாகக் கருதி முன்னறிவிப்புச் செய்து வந்துள்ளார்கள்.

இந்துப் புராணங்களும், கிருத்துவ பைபிளும்கூட அந்த இறுதி இறைத் தூதரைப் பற்றி இனிமை ததும்பத் ததும்ப முன்னறிவிப்புச் செய்திட்டது அசாதாரணமான அற்புதம்.

அஃதன்றி அனைத்து நாட்டு அறிஞர்களும், மன்னர்களும், சாதாரண மக்களும்கூட அந்த அதியற்புத மாமனிதரை எதிர்பார்த்து ஏங்கிநின்ற அதிசயத்திலும் அதிசயம்.

அத்துடன் நின்றதா அந்த அண்ணல் நபிகளாரின் தொடர்புகழ். இல்லையே அவர்களின் பூதவுடலின் மறைவிற்குப் பின்னர், இன்றளவும் அந்தப் புகழ் சங்கிலித் தொடராக நீண்டுகொண்டு வருவதையும் பாருங்களேன்.

## பத்துலட்சம் காவியங்களுக்குச் சொந்தக்காரர்

ஸர் வில்லியம் மூர் என்ற வரலாற்று ஆய்வாளர் தமது 'லைஃப் ஆஃப் முஹம்மத்' என்ற நூலில் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

உலகில் நான் பலவிதமான வழிகாட்டிகளைப் பற்றி ஆய்ந்தறிந்து உள்ளேன். ஆனால், அவர்களிலெல்லாம் மிக்குயர்ந்தவராக முஹம்மது நபியை நான் காணுகின்றேன். ஏனெனில் இதுவரை அவரைப்பற்றி-எனக்குத் தெரிந்தவரை - உலகின் பல மொழிகளிலும் பத்துலட்சத்திற்கும் மேற்பட்ட காவியங்கள் புனையப்பட்டுள்ளன. ஆனால், இத்தோடு அது நின்றுவிடும் என்று என்னால் நம்ப முடியவில்லை.

## பொய்யான அற்புதங்களைக் காட்டா புதுமையாளர்

மிஸ்டர் ஜான்டெவன் போர்ட்துரை சொல்லுகின்றார்.

முஹம்மதுநபி அந்தரங்க சுத்தியானவர் என்பதற்கு அவரின் நடவடிக்கைகளை மிக நன்றாக உணர்ந்திருந்த அவரின் பந்துக்களும், நண்பர்களும் எல்லோரையும் விட முந்தி அவரை விசுவாசித்ததே போதுமான திருஷ்டாந்தமாக இருக்கின்றது.

தமது நபிப்பட்டத்தை ஸ்தாபிப்பதற்காக ஒருபோதாவது தந்திர உபாயமெதையும் செய்தாரென்றும், பொய்யான அற்புதங்களைக் காட்டினாரென்றும் காணமுடியவே இல்லை.

(நூல் : முஹம்மதிப்பா மகத்துவம் 3-வது அதிகாரம்)

## ரகசியங்களின் வெளிப்பாட்டிற்குச் சொந்தக்காரர்

கண்கள் கறுத்து ஒளிமயமாக இருந்தவரும், மனதில் விஸ்தாரமுள்ளவரும், நற்குணவானும் வனாந்திர வாசியுமான முஹம்மதுநபி என்னும் அந்த மகா புத்திமானுக்கு துர்ஆசையும், வீணாசையும் ஒரு போதும் இருந்ததில்லை.

அவர் எப்பொழுதும் ஞான சொரூபியாக இருந்தார். எந்தப் பெரிய ரகசியங்களும் அவரின் மூலம்தான் வெளியாயிற்று. அவரே அந்தப்புதைபொருளின் மகத்துவமான ஸ்தானமாக இருந்தார். இப்படிப்பட்டவருடைய வார்த்தை கடவுளுடைய புரத்திலிருந்து புறப்படுகின்ற ஒரு ஓசை என்பதில் எள்ளளவும் ஐயமில்லை. மற்ற வைகளெல்லாம் அந்த ஓசைக்கு முன் துரும்புக்குச் சமானமாக இருக்கின்றன.

(முஹம்மதிய்யா மகத்துவம் 3-வது அதிகாரம்)

## என்றைக்கும் மாறுதல் அவசியப்படாத இஸ்லாம்

வருஷத்திற் கொருமுறையாக, அல்லது அவசியமான காலங்களில் பாதிரிமார் சேர்ந்து தேச விஷயங்களைப் பற்றி மாறுதலாகவும், நூதன ஏற்பாடு முதலியன செய்வதுபோல் இஸ்லாம் மார்க்கத்திற்கு எவ்விதமான மாறுதலும், நூதன ஏற்பாடும் அவசியமில்லை. அது எப்போதும் ஊர்ஜிதமான ஏற்பாடுகளையும், ஒழுக்கங்களையும் உடையதாகவே ஸ்தாபிக்கப் பட்டிருக்கின்றது. என்று டேவிட் அர்க்கு வாட்டி "ஸ்பிரிட் ஆவ்தி ஈஸ்" என்ற சஞ்சிகையில் எழுதியுள்ளார்.

(நூல் : முஹம்மதிய்யா மகத்துவம் 3-வது அதிகாரம்)

## இஸ்லாம் ஒன்றே எளிய மார்க்கம்

மிஸ்டர் ஓகன்ஸ் தனது புத்தகம் 6-ம் பக்கத்தில் :

பகிரங்கமான எல்லா மார்க்கங்களின் விபரங்களையும் நான் படித்திருக்கிறேன். அதில் இஸ்லாம் மார்க்கம் மிக

எளிதானதாகவும், நீதி கற்பனைகளை உடையதாகவும் இருக்கின்றது அது மேலான பரிசுத்தமான ஆண்டவனுடைய கற்பனைகளை அதிகக் கஷ்டமில்லாமல் பரப்பிக் கொண்டு வருகின்றது 'லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ், என்ற அதன் மூலமந்திரம் மிக மேலாம்பரமானது என்று சந்தேகமறச் சொல்லலாம் (முஹம்மதிய்யா மகத்துவம்)

## உன்னதமான சட்டங்களைக் கொண்ட இஸ்லாம்

எர்பாட் என்ற சட்ட நிபுணர் கூறுகின்றார்:

''இஸ்லாத்தின் சட்டங்கள் மிகவும் உன்னதமான நீதி கற்பனைகள் அடங்கியாதகக் காணப்படுகின்றது. அச்சட்டங்களை வழக்கத்திற்குக் கொண்டுவநது சித்திபெறச் செய்திருப்பது எல்லாவற்றைவிட ஆச்சரியப்படத் தக்கது (முஹம்மதிய்யா மகத்துவம்)

இப்படி எத்தனை எடுத்துக் காட்டுகளையோ எடுத்தியம்ப முடியும்.

ஐரோப்பிய அறிஞர்கள் மாத்திரமல்லாது, நமது நாட்டைச் சேர்ந்த பண்டிட் ஜவஹர்லால் நேரு, காந்தியடிகள், சக்ரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார், ஈ வே. ரா. பெரியார், பேரறிஞர் அண்ணா போன்ற பெரும், பெரும் தலைவர்களெல்லாம் நபிகளாரின் நற்புகழை நுகராமல் இருந்ததில்லை என்பது கண்கூடு.

மனிதர்களின் புகழ்ச்சி மாத்திரமில்லை. எல்லாம்வல்ல அல்லாஹ் தனது சுத்த சுத்தியத் திருமறையிலே பல இடங்களில் பல விதமாக தனது கடைசித் திருத்தூதர் அவர்களை போற்றிப் புகழ்ந்துள்ளான்.

பரகத்திற்காக இதோ அவைகளில் சில:

## கடைசி முத்திரை நபி

உங்களுடைய ஆண்களில் எவருக்கும் முஹம்மதுநபி வளர்ப்புத்) தகப்பனாக இருக்கவில்லை. ஆனால் அவரோ, அல்லாஹ்வுடைய தூதராகவும், நபிமார்களுக்கு (க் கடைசி) முத்திரையாகவும் இருக்கின்றார். அல்லாஹ் யாவற்றையும் நன்கறிந்தோனாக இருக்கின்றான்.

## விசுவாசிகள் மீது அன்புடையவர்

(விசுவாசிகளே!) உங்களிலிருந்து நிச்சயமாக ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கிறார். நீங்கள் கஷ்டத்திற் குள்ளாகி விட்டால் அது அவருக்கு மிக்க வருத்தமாகவே இருக்கும், அன்றி; உங்களைப் பெரிதும் விரும்பக்கூடியவ ராகவும். விசுவாசிகளின்மீது மிக்க அன்பும் கிருபையும் உடையோராக இருக்கின்றார்:

(குர் : 49, 128)

## நபிகளாருக்கு வழிப்படுவது அல்லாஹ்வுக்கே வழிப்படுவதாகும்

எவன் (அல்லாஹ்வுடைய தூதரான முஹம்மது நபிக்கு) வழிப்படுகின்றானோ அவன், நிச்சயமாக அல்லாஹ்வுக்கே வழிப்பட்டான். ஆகவே, (நபியே! உம்மை) எவனும் புறக் கணித்தால் (அதற்காக நீர் கவலைப்பட வேண்டாம்). அவர்களைக் கண்காணிப்பவராக உம்மை நாம் அனுப்ப வில்லை. (குர் : 4, 80)

அன்புடையீர் ! இதுவரை எம்மானின் ஈடிணையற்ற புகழாரமுத்துக்களில் கொஞ்சத்தை, ஆமாம்— மிக கொஞ்சத்தை விண்டு காண்பித்தேன். நீங்களும் வண்டினங் களைப் போல அதனை மொய்த்து பேரின்பத்தேனைச் சுவைத்தீர்கள் அல்லவா?

ஆனால், இதோ நமது நாயகப் புகழ்பாடி பூசிரி (ரஹ்) அவர்கள் இவை அனைத்தையும் மிஞ்சும் வண்ணமாக

கொஞ்சும் மொழி வளத்தோடு கோமான் நபிகளாரின் புகழ்மணிக் கோவையைக் கொய்து, கொய்து எனக்கும் உங்களுக்குமாக 'புகழாரம்' என்ற இந்தக் காண்டத்தில பரிமாறிப் பரிணமிக்கிறார்.

கான முத்துக்களால் ஞானப் புகழாரம் தொடுத்துக் கொடுக்கும் அந்த மோனக் கவியின் புகழாரமழையில்

முஹம்மது நபியென் றாலோ
மூவுல கனைத்தும் போற்றும்
முஹம்மது நபியென் றாலோ
முன்னவன் கருணை யுண்டாம்
முஹம்மது நபியென் றாலோ
முஸீபத்தும் பலாயும் நீங்கும்
முஹம்மது நபியென் றாலோ
முடிவில்லாப் பதவி யுண்டாம்

- என்பதால் - துணிந்து நனைந்திடுவோம் வாரீர்

ظَلَمْتُ سُنَّةَ مَنْ اَحْيَ الظَّلَامَ اِلَى
اَنِ اشْتَكَتْ قَدَمَاهُ الضُّرَّ مِنْ وَّرَمٍ ﴿٢٩﴾

**ழலம்(த்)து சுன்ன(த்)த மன் அஹ்யள்
ளலாம இலா**

**அனிஷ்(த்)தகத் கதமா ஹுழ்ழுர்ர
மின்(வ்)வரமி**

தனது இருகால்களும் வீங்கி, வீக்கத்தினால் ஏற்பட்ட துன்பத்தை அவை முறையீடு செய்யுமளவு இருளிரவை (தொழுகையால்) உயிர்பித்தவரான நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் சுன்னத்தை (நடை முறையை) கை விடுத்தேனே —

—இதனை

இருகாலும் வீங்கும்வரை யிராப்பொழுது
நின்று தொழும்
பெருமானின்வாழ்க்கைமுறை பேணாமற்
கைவிடுத்தேன்.

என மறைக்காயர் மெய்யுறுகிப் பாடுகின்றார்.

வி-ரை : -பக்தி வழி சென்று முக்தி நிலை பெறுவதற்கு தனித்திருந்து விழித்திருந்து பசித்திருக்க வேண்டும் எனக் கூறுவர்.

பெருமான் நபிகளாரின் வாழ்க்கையில் அந்த தவநிலை இயற்கையாகவே அமைந்து மிளிர்வதைக் காண்கின்றோம்

அனைத்து படைப்பினங்களின் ஏகபோகக் காவலனாகிய அல்லாஹ்வின் அனைத்து அருளுக்கும் சொந்தம்பெற்ற அண்ணல், அவர்கள் முன்பின் பாவங்கள் அனைத்தும் பொருத்தருளப்பட்ட புனிதர்.

ஆகவே அப்பெருந்தகை உபரி வணக்க வழிபாடுகளில் ஈடுபாடு கொண்டுதான் புதிய மெருகு பெற்றிட முடியும் என்ற நிலையில் இல்லைதான்.

இருப்பினும் அவர்களின் வாழ்க்கை ஏட்டைப் புரட்டி பார்த்தால் ஒவ்வொரு நொடிப் பொழுதும் வணக்க வழிபாடுகளால் அலங்காரம் செய்யப்பட்டிருப்பதைத்தான் நம்மால் காணமுடியும்.

முகீரா (ரலி-அன்ஹு) எனும் நெருங்கிய நாயகத் தோழர் கூறுகின்றார்.

(வணக்க வழிப் பாடுகளுக்காக தமது பொன்னான உடலுறுப்புக்களை புண்படச் செய்து கொண்டிருந்த நபிகள் நாயகம் (ஸல்-அம்) அவர்களிடம்) ''நபியே! நீவிர் உமது உடல் உறுப்புக்களுக்கு ஓய்வு கொடுத்திடக்கடவீர்!

ஏனெனில் உறுப்புக்களுக்கென சில உரிமைகள் உள்ளன' (என்று)

வானவர்கோன் ஜிப்ரயீரல் (அலை) அவர் அறிவுறுத்தியதாகக் கூறுகின்றார்.

பெருமான் அவர்களின் பிராட்டிமார்களில் ஒருவரான ஆயிஷாஸித்தீக்கா (ரலி-அன்ஹா) கூறுகின்றார் :

அண்ணல் அவர்கள் அனுதினமும் இரவில் பெரும்பகுதி நேரம் நின்று வணங்குவார்கள் அதனால் அவர்களின் பொற்பாதங்கள் இரத்தம் கட்டிச் சுரந்துவிடும். அதனைப் பார்த்து வியந்து கொண்டிருந்த நான் ஒருதினம், அண்ணலே தாங்கள் அனைத்துப் பாவங்களும் பொருத்தருளப்பட்ட புனிதராயிற்றே! இருந்தும் ஏன் இவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்கிறீர்கள்' எனக் கேட்டுவிட்டேன். அதற்கு அண்ணல் அவர்கள் (அமைதியாக) 'நான் நன்றியுள்ள நல்லடியானாகத் திகழ்ந்திட வேண்டாமா? என என்னையே திரும்பக் கேட்டு திகைப்படையச் செய்தார்

பக்த சிகாமணிகளே! பார்த்தீரா சேதியை!

பாவங்கள் அனைத்தும் பொருத்தருளப்பட்ட மனிதர்;

வணக்கங்களில் ஈடுபட்டுத்தான் புதுமெருகு பெற்றிட வேண்டும் என்ற அவசியமற்ற அதிசய மனிதர்;

இறைநேசர் என்றும், அருளுக்கரசர் என்றும், அன்பின் ஊற்றுக்கண் என்றும் இறைவனாம் அல்லாஹ்வினாலேயே அங்கீகாரம் வழங்கப்பட்ட அற்புத புருசர் அண்ணலெம் பெருமான் அவர்கள் எந்த அளவு இறைவணக்கங்களில் இமயமென உயர்ந்து நின்றுள்ளார்கள் என்பதனை?

அன்னார் இடைவிடாது தஹஜ்ஜுத் எனும் நடுநிசித் தொழுகையினைக் கடைபிடித்து வந்துள்ளார்கள். எண்ணிக்கையில் அது எட்டு ரகா அத்துகள்தான்!

இருப்பினும் நிலையில், ருகூவில், ஸஜ்தாவில் ஆக அந்தத் தொழுகையின் ஒவ்வொரு அங்கத்தினையும் நெடுநேரம்' செய்து வந்துள்ளார்கள். ஆகவே தான் நெடுநேரம் நின்று வணங்குவதால் அவர்களின் பொற்பாதங்கள் இரத்தம் கட்டி சுரந்து விடும் கொடுமை நிகழ்ந்து வந்துள்ளது.

நபிதாசர் பூசிரி அவர்கள் அண்ணல் அவர்களின் வாழ்க்கையில் நிகழ்ந்து வந்துள்ள இந்த நிலையினைத் தான் —

''இரு காலும் வீங்கி முறையீடு செய்யும் வரை இருளிரவை ஒளிபெறச் செய்த எம்மான்'' எனக் குறிப்பிடுகின்றார்.

ஐயறிவு மட்டும் கொண்ட ஒட்டகையும்; ஓரறிவு மட்டும் படைத்த தாவரவர்க்கங்ளும் அண்ணல் நபி மணி (ஸல்-அம்) அவர்களிடம் முறையீடு செய்த அற்புதங்கள்— உரையாடி நின்ற விநோதங்கள், அறிவுறுத்தி நின்ற அதிசயங்கள் நிகழ்ந்துள்ள போது அண்ணல் அவர்களின் அவயங்களில், ஒன்றான 'கால்' முறையீடு செய்தன என்றால் அதில் நாம் ஆச்சரியப் படுவதற்கொன்றுமில்லைதான் ஆனால்;

பக்தி சிரத்தையுடனும், பரிசுத்த உணர்வுடனும் கூடுதல் குறைவு ஏற்பட்டு விடாமல் பாதுகாக்கப்பட்ட அண்ணல் நபி அவர்களின் ஒவ்வொரு அங்க அசைவுகள் அடங்கிய ஹதீது இலக்கியத்தில் கால்கள் முறையீடு செய்த இந் நிகழ்ச்சி காணக் கிடைக்கவில்லை.

ஆகவே கவி அவர்கள்;

நபிகள் பெருமான் அவர்களின் பொற்பாதங்கள் இரத்தம் கட்டி சுரந்து காணப்பட்ட உண்மையை நம் இதயங்களில் பதிய வைப்பதற்காக, வணக்க வழிபாட்டிற்காக உடலுறுப்புக்களை வேதனைக்குள்ளாக்கவும் தாஹா

நபி! அவர்கள் தங்கவில்லை'' என்ற தூயதோர் நிலையினைப் படம் பிடித்துக் காட்டுவதற்காக 'முறையீடு செய்தன' என்ற சொல் நயத்தைப் பயன்படுத்தியுள்ளதாகவே கொள்ள வேண்டியுள்ளது.

நன்றியுள்ள நல்லப்படியாராகத் திகழ்ந்திட வேண்டும் என்பதற்காக உறுப்புகள் எல்லாம் உருக்குலையும் அளவிற்கு வணக்க வழிபாடுகளில் ஈடுபட்டு, வானகமும் வையகமும் வியந்துரைக்கும் அளவில் இறையச்சத்தோடு வாழ்ந்த வள்ளல் திரு நபி (ஸல்-அம்) அவர்களின் வாழ்க்கை நெறி சுன்னத் முறையினை தவற விட்டு விட்டதாக புலவர் பூசிரி (ரஹ்-அன்ஹு) அவர்கள் ஈற்றடியில் புலம்பிடுவதை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது.

அன்றி-

'காணக் கண்கோடி வேண்டும்' என்ற நிலையில் உள்ள காமில் நபி (ஸல்-அம்) அவர்களை கனவில் கண்டு களிக்கும் அளவு பாக்கியம் பெற்ற பூசிரி (ரஹ்-அன்ஹு) அவர்களே சுன்னத்துக்களை தவற விட்டதாக புலம்புகின்றார் என்றால் வெறும் பெயரளவில் உடையளவில் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் உம்மத்தினர் என தம்பட்ட மடித்துக் கொண்டு வாழும் நாம், நம்மின் இயலாமையை சுன்னத் வழிமுறைகளை தவற விட்டு வாழும் தரங் கெட்ட தன்மையினை எங்கனம் ஆற்றிக் கொள்ள முடியும் —தேற்றி கொள்ள முடியும்?

இத்தகு ஆக்க உணர்வினை பூசிரி (ரஹ்) அவர்களின்- ''வழி முறையினைத் தவற விட்டேனே'' என்ற ஈற்றின் (மூலம்) பெற முடிகின்றது; அல்லவா?

சொல்வின் செல்வர் பூசரி (ரஹ்-அன்ஹு) அவர்களின் சொல் நயத்தை என்னவென்பது...?

وَشَدَّ مِنْ سَغَبٍ اَحْشَاءَهُ وَطَوٰى
تَحْتَ الْحِجَارَةِ كَشْحًا مُتْرَفَ الْاَدَمِ (٣٠)

**வஷத்தமின்ஸஃகபின் -**
**அஹ்ஷாஅஹூ வதவா**
**தஹ்(த்)தல்ஹிஜாறதிகஷ்ஹன் (ம்)**
**முத்ற ஃபல்அதமி**

இன்னும் (எம்பெருமான்) கடும் பசியால் தங்களின் (தங்க நிகர்) வயிற்றில் வன்மைமிகு கற்களை வரிந்து கட்டி பசியின் நிர்பந்தத்தை வெற்றி கண்டார்கள்.

இதனை—

மென்மையுறுதம்வயிற்றில் -வெம்பசியால்-எம்பெருமான்
வன்மையுறுகற்கள்வைத்து வரிந்து-பொறுத்திருந்தார்

என்று மதுரை மரைக்காயர் மனமுருகிப் பாடுகின்றார்.

'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்' என்று நாட்டு வழக்கில் கூறிடுவர்.

இதனை-

மானங் குலங் கல்வி வண்மைய அறிவுடமை தானந்
தவமுயற்சி தாளாண்மை - தேனின் கசிவந்த சொல்லியர்
மேற் காமுறுதல் பத்தும் பசி வந்திடப் பறந்துபோம்

என்று இனிக்கும் தீந்தமிழில் பாடி, இன்றைய மனிதனின் சொத்தைத் தன்மையை அன்றே படம் பிடித்துக் காட்டினான் பைந்தமிழ் புலவனொருவன்.

## கலைப் பசி

ஆமாம்...... பணப்பசியை போக்கிக் கொள்வதற்காகவே 'கற்பு' எனும் பொற்புடை நெறியினை காற்றில் பறக்க விட்டு விட்டு 'நாங்களும் மானமுள்ள மனிதப் பிறவிகள்' என்று மார்தட்டிக் கொண்டு வாழும் மனித பிறவிகள் தங்களின் அந்த ஈனச் செயல்களுக்கு 'கலை' எனும் அலங்காரத் திரையைப் போர்த்திக் காட்டி தமக்குத் தாமே போலிச் சமாதானம் கூறிக் கொள்ளும் வேடிக்கையைக் கண்கூடாகக் கண்டு வருகின்றோம், நாம்.

## ஆதிக்கப் பசி

குலப் பெருமை என்பது பக்தி பொறையை அள. கோலாகக் கொண்டமையும் ஒருவகைக் குணப் பண்பாகும் ஆனால், பக்தியால் உயர்ந்திட வேண்டிய இந்த குலப் பெருமை இன்றைக்கு பிறப்பின் அடிப்படையில் உயர்குலமென்றும் தாழ்ந்த குலமென்றும் வகை பிரிக்கப் பட்டு கொண்டாடப்படுகின்றதென்றால் அதற்கு 'ஆதிக்கப்பசி' காரணமாக அமைந்திருப்பதைப் பார்க்கின்றோம்

## இச்சைப் பசி

உள்ளடங்கிக் கிடக்கும் அறிவைக் கிளறி விட்டு அகத்தையும் புறத்தையும் அறிவொளியால் பிரகாசிக்கச் செய்திடும் பயிற்சியின் மறுபெயர் தான் கல்வி. ஆனால் இன்று சிற்றின்பங்களைக் கிளறிவிடும் கேடுகெட்ட பயிற்சிகளுக்கும்; பணஆசை, பதவியாசை, விளம்பரஆசை முதலான தரங்கெட்ட ஆசைகளைக் கிளறிவிடப் பயன்படும் கேடுகெட்ட பயிற்சிகளுக்கும், அழிவு சக்திகளை ஊக்குவிக்கப் பயன்படும் விஞ்ஞானமென்னும் அஞ்ஞானப் பயிற்சிகளுக்கு கெல்லாம் 'கல்வி' எனும் அந்த கலாஞானப் பெயர் பயன்படுத்தப் படுகின்றதென்றால் அதற்குக் காரணம் இச்சைப் பசியாகும்.

## பதவிப் பசி

மனிதனைப்புனிதனாக உயர்த்தும் கொள்கை எது, கோட்பாடு எது, என்பதனைக் கண்டறிந்து, அந்த அற்புதக் கொள்கை வழியில் தன்னை முழுசாகூ மாற்றிக் கொண்டு, தான் ஏற்றுக் கொண்ட அந்தக் கொள்கைக்காக தனது உடல், பொருள், ஆவியனைத்தையும் தத்தம் செய்திட தன்னைத் தானே தயார்படுத்திக் கொள்ளும் தங்கத் தன்மையின் மறு பெயரே வண்மையாகும். ஆனால்; இன்று அப்போதைக்கப்போது தனக்கு எது சாதகமாகத் தெரிகின்றதோ அந்த அந்தக் கொள்கையைச் சார்ந்து நிற்பதும், சாதகம் பாதகமாக மாறும் என்றுணர்ந்தவுடன் அழுக்குச் சட்டையைக் கழற்றி எறிவதுபோல அதுவரை பற்றி நின்ற கொள்கையைப் புறந்தள்ளிவிட்டு, இனி எதனால் தனக்குச் சாதகம் என்றுபடுகின்றதோ அந்தப் புதுக் கொள்கையின் வழியில் தனது நடையை மாற்றி அமைத்துக் கொள்வதுமான பேடித்தனம் இன்றைக்கு வண்மை என்ற புனிதப் பெயரால் அழைக்கப்படுகின்ற தென்றால் அதற்குக் காரணம் பதவிப்பசியாகும்.

## சுயநலப் பசி

எதனை, எதனால், எப்படி, எதன் மூலம் இயக்கினால் தனக்கும், பிறருக்கும், இம்மையிலும், மறுமையிலும் நலன் பயக்கும் என்றாய்ந்தறிந்து; அதனை, அதனால், அப்படி அப்படி, அது அதன் மூலம் இயக்கி, தான் அதன் வழியில் இயக்குவதற்கும், மற்றவரை அதன் வழியில் இயங்கிக் கொண்டு செல்வதற்குமே ''அறிவுடமை'' என்று பெயர். ஆனால், இன்றைக்கு மறுமையில் நலன் கிடைப்பது ஒருபுறமிருக்கட்டும். இம்மையில் இப்போதைக்கு தான் உயர்வடைந்திட எதனை, எதனால் எப்படி, எதன் மூலம் இயக்கினால் அது முடியுமோ அதனை' அதனால், அப்படிக்கப்படி, அது அதன் மூலம் இயக்கி தன்னை மாத்திரம் தற்காலிகமாக உயர்த்திக் கொள்ள முற்படும் வடிகட்டிய சுயநலத்திற்கு-தூர நோக்கமற்ற துரதிஷ்டத்திற்கு அறிவுடமை என்ற அந்த புனிதமான பெயர் வழங்கப்படுகிறதென்றால் அதற்குக் காரணம் சுயநலப்பசியாகும்.

## ஆணவப் பசி

செல்வம் மனிதனுக்கு இறைவனால் வழங்கப்படுகின்றதென்றால் அதற்கு அவன் 'மானேஜராக' இருந்து, அதை யார் யாருக்கு பங்கிட்டுக் கொடுக்கும்படி கட்டளை பிறப்பிக்கப்பட்டிருக்கிறானோ அவர் அவருக்கு, அதை பங்கிட்டுக் கொடுப்பதோடு, தான் செய்யும் அந்தக் குற்றேவலுக்குச் சம்பளமாக அதிலிருந்து கொஞ்சத்தை தனக்கும் எடுத்து உபயோகித்துக் கொள்வதற்குத்தானே தவிர 'முதலாளி' என்று தன்னை தம்பட்டமடித்துக் கொள்வதற்கும்; நான் படாதபாடு பட்டு-நெற்றிவியர்வையை நிலத்தில் சிந்தச் சம்பாதித்த செல்வமிது ஆதலால் அது எனக்கு மாத்திரம் சொந்தமானது ஆகவே அதை எனது இஷ்டத்திற்கு-எனது சுகபோகங்களுக்குச் செலவு செய்வேன். அதை ஏன் எதற்கு என்று கேட்க உலகில் எவருக்கும் எப்போதும் உரிமை இல்லை என்ற இருமாப்போடு, தொழிலாளர்-உழைப்பாளர்-அனாதையர்-ஆதரவற்றோர்-விதவையர் அண்டியிருப்போர் போன்ற அப்பாவிகளின் வாயிலும் வயிற்றிலுமடித்து அவர்களை வஞ்சிப்பதற்காக அல்ல என்ற தத்துவத்தை இதயப் பூர்வமாக உணர்ந்து, யார் யாருக்கு, எப்போதெப்போது, எவ்வளவு தேவைப்படுகிறதோ அவ்வளவை பகிர்ந்து கொடுப்பதற்கே 'தானம்' என்று பெயர். ஆனால், இன்றைக்கு எந்தக் காரியத்திற்கு, எவரின் மூலம், எவ்வளவு கொடுத்தால் அவரின் மூலம் ஒன்றைப் பத்தாகப் பெருக்கலாம் என்ற உள்நோக்கத்தோடு வழங்கப்படும் லஞ்சலாவண்யங்களுக்கும்; பஞ்சை பராரிகளைப் பெருங்கூட்டமாகத் திரட்டி ஆளுக்கு ஐந்து பத்து பைசாக்கள் வீதம் சில ஆயிரம் ரூபாய்களை பகிர்ந்தளித்து வெளிச்சம் காட்டி அதன் மூலம் தனது பல லட்ச கருப்புப் பணங்களை வெள்ளையாக மாற்றிக் கொள்ளும் நாடகத்திற்கும்; வள்ளல் என்று வைய்த்து மக்களால் போற்றிப் புகழப்பட வேண்டுமென்ற விளம்பர பிரியத்திற்கும் விலையாகக்கொடுக்கப்படும் போலி செலவுகளுக்கெல்லாம் 'தானம்' என்ற அந்த புனிதப் பெயர் சூட்டப்படுகிறதென்றால் அதற்குக் காரணம் ஆணவப் பசியாகும்

## விளம்பரப் பசி

தனித்திருந்து, விழித்திருந்து, தாகித்திருந்து தன்னைப் பற்றி, இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றி, தன்னையும் இந்தப் பிரபஞ்சங்களையும் படைத்தாளும் பரமனைப் பற்றியெல் லாம் ஆய்ந்து தோய்ந்து அதன்மூலம் தன்னையும் இப்பிர பஞ்சங்களையும் உணர்ந்து, அதன் பின்னணியில் தன்னை யும் இப்பிரபஞ்சங்களையும் படைத்து இரட்சித்து ஆளும் தயாபரனாகிய வல்ல இறைவனை உணர்ந்து அவனில் தன்னை முழுதாக ஒப்படைத்து விடும் ஒப்பில்லா நிலைக்கு 'தவம்' என்று பெயர் ஆனால், இன்றைக்கெல்லாம் 'தவம்' என்ற அந்த தூயவாழ்க்கை மனிதன் செய்திடும் தவறு களுக்கும்-அக்கிரமங்களுக்கும் திரையாக மாற்றப்பட்டும் 'ஷைகு' என்றும், 'யோகி' என்றும், 'தெய்வ அவதாரம்' என்றும், மனிதர்களின் முன்பின் வாழ்க்கை ரகசியங்களை எடுத்தோதி, அவர்களது வருங்கால முன்னேற்றத்திற்கு வழியமைத்துக் கொடுக்கும் 'சுவாமிகள்' என்று மெல்லாம் கொண்டாடப் படுவதற்குரிய ஏமாற்றுப் பாலமாக தவம் என்ற அந்தத்தூய திருநாமம் துஷ்பிரயோகம் செய்யப்பட்டு வருகிற தென்றால் அதற்குக் காரணம் உழைக்காமல் உயர்வு பெறு வதற்குரிய உத்திகளில் ஒன்றான விளம்பரப் பசியாகும்.

## மதிப்புப் பசி

அனைத்துப் படைப்பினங்களிலும் மனித இனம் ஒன்று மாத்திரமே மிக்குயர்ந்த இனமாகும் வானம் வானத்தில் வதியும் சூரியன் சந்திரன் முதலான அனைத்துக்கோளங் கள், பூமி, பூமியில் வதியும் கல், கடல் முதலான அனைத் தும் மனிதனின் வசதிக்காக- அவனது நல்வாழ்வுக்காகப் படைக்கப் பட்டிருக்கும் துணைப்படைப்புகள்தான் என்று படைப்பின் ரகசியங்களை உணர்ந்து இத்தகு உன்னத நிலையினை தனக்கு வழங்கியமாப்பெரியோ னாகிய வல்ல இறைவனுக்கு மாத்திரம் தலைவணங்கி மற்ற எதற்கும், எதற்காக வேண்டியும், எப்போதும் தலைவணங் கிடாமல் நெஞ்சுயர்த்தி வாழும் சுயமரியாதைக்கே

'தாளாண்மை' என்று பெயர். ஆனால் இன்று கேவலம் ஒரு குறு நிலத்தில், ஒரு குறுகிய துறைக்கு ஒரு குறுகிய அளவு மேலாண்மை வழங்கும் பதவிப் பவிசுகளுக்காக மனிதனுக்கு மனிதன் நெடுஞ்சாணாக விழுந்து பாத வணக்கம் செய்வதற்கும் கல்விக் கேள்விகளில், வயதில், அனுபவத்தில், ஒழுக்க விழுப்பங்களிலெல்லாம் தன்னைப் பார்க்கிலும் அதள பாதாளத்தில் இருக்கும் பிறவிகளுக்கு மறியாதை செய்து அப்பிறவிகளின் முன் கை கட்டி வாய்ப்பொத்தி 'சரணம்... சரணம்' என்று சரணம்பாடிக் கொண்டிருக்கும் அவலநிலைக்குத் தன்னைத்தானே தாழ்த்திக் கொண்ட மனிதப் பதர்களும் தங்களைச் சுயமரியாதைக்குச் சொந்தக் காரன் என்று தம்பட்டமடித்துத் திரிய முடிகிறதென்றால் அதற்குக் காரணம் பவிசுப் பசியாகும்.

## கபடப் பசி

எவரையும், எதற்காகவும், எப்போதும், சொல்லால் செயலாலெல்லாம் புண்படுத்திடாமல், எவர் தம்மைதாழ்வு படுத்திட்டாலும் அதனையெல்லாம் பொருட்படுத்தாமல் அனைவரிடத்தும், அனைத்துக் கால கட்டங்களிலும் தேன் சிந்தும் சொல்லால் சொக்கவைத்து வாழும் வாழ்க்கைதான் சாந்தம்தவழுவதற்குரிய சத்திய வாழ்க்கையாகும். ஆனால் இன்றைக்கு உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசியும், தனக்குக் கீழால் உள்ளவர்களின் சுயமரியாதைகளை புறையோடிடச் செய்யுமளவு தூசணமாக ஏசிப் பேசியும் தனக்கு மேலே உள்ளவர்களை அளவுக்குமீறித் துதி பாடியும் வாழும் மனிதப் பிறவிகள் பல்கிப் பெருகிக் காணப்படுகின்றனர் என்றால் அதற்குக் காரணம் கபடப் பசியாகும்.

## காமப் பசி

பெற்றோர் தம் மக்களின்மீது பாசத்தைப் பொழிவதற்கும், ஆசிரியர் தமது மாணாக்கர்மீது நேசத்தைப் பொழிவ

தற்கும், முதலாளி தமது தொழிலாளியின்மீது அன்பைப் பொழிவதற்கும், நண்பன் தமது அன்பன்மீது நட்பைப் பொழிவதற்கும், கணவன் தனது மனைவிமீது காதலைப் பொழிவதற்கும், தொண்டன் தமது தலைவர் மீது விசுவாசத்தைப் பொழிவதற்கும், ஒரு மண்ணின் மைந்தன் தமது தாய்த்திரு நாட்டின் மீது பற்றைப் பொழிவதற்கும், ஒரு மொழிக்குரியவன் தமது தாய் மொழியின்மீது விருப்பைப் பொழிவதற்கும், பக்தன் தமது தெய்வமான இரட்சகனின் மீது பக்தியைப் பொழிவதற்குமெல்லாம் 'காமுறுதல்' எனலாம். இது இயற்கையாக ஒவ்வொரு மனிதனிடமும் இருந்து தீர வேண்டிய அத்தியாவசியப் பண்பாகும். ஆனால், இன்று என்ன நடக்கிறது? பாசம், நேசம், அன்பு, நட்பு, காதல், விசுவாசம், பற்று, விருப்பு, பக்தி என்ற பெயர்களில் வெறி' என்ற விஷம் கலக்கப்பட்டு விட்டதால் அந்த அந்தப் பண்புகளெல்லாம் வெடித்துச் சிதறி அந்தப் பண்புகளால் விளைந்திட வேண்டிய ஒற்றுமை, ஒழுக்கம், விழுப்பம் உண்மை அரவணைப்பு, ஆதாரம் ஆகிய அனைத்தும் சிதறித் துகள் துகளாகப் போய் விட்டுள்ளதோ. இது எதனால் தெரியுமா? காமுறுதல் என்ற அந்தப் புனிதப் பண்பைக்காமப் பசியாக மாற்றி விட்ட காலக் கொடுமையாலன்றோ!

## வயிற்றுக்காக மனிதனா?

இத்தகு விபரீதங்கள் ஏற்பட்டதன் காரணியம் என்ன தெரியுமா?

மனிதன் வயிற்றுப் பசிக்கு அடிமைப்பட்டு அந்த வயிற்றுப் பசியை ஆற்றுவதொன்றுதான் வாழ்க்கை என்று முடிவு கட்டிக் கொண்டு, வயிற்றை நிரப்போ நிரப்பென்று நிரப்பியதால் அவனுள் ஒளிந்து கொண்டிருந்த மிருக குணம் மிகைத்து; அவனுள் மிகைத்திருக்க வேண்டிய மனித இயல்பை இழக்கச் செய்து அதனை நாளடைவில் இல்லா

மலாக்கி விட்டதன் விளைவன்றோ அந்தக் கொடுமை மனிதனில் தலைவிரித்தாடத் தொடங்கி விட்டுள்ளது:

இதனை இல்லையென்று எவரால் மறுத்திட இயலும்?

மனிதனுக்காக வயிறா, அல்லது வயிற்றுக்காக மனிதனா?

உலகத்திற்காக மனிதனா, அல்லது மனிதனுக்காக உலகமா?

கடவுளுக்காக மனிதனா; அல்லது மனிதனுக்காக கடவுளா?

கடவுள் நம்பிக்கையுள்ள சராசரி மனிதர்களால் இந்த வினாக்களுக்கு; மனிதனுக்காகவே வயிறு, மனிதனுக்காகவே உலகம்; ஆனால், படைத்த படைப்பெல்லாம் மனுவுக்காக, மனுவைப்படைத்தான் தன்னை வணங்க!' என்பதற்கொப்ப மனிதனோ கடவுளுக்காக என்றறிந்து கொள்ள முடியவே செய்யும்.

## தீமைகள் பத்தும் பறந்து தூய்மை பிறக்கும்

இப்படி மனிதனுக்காகவுள்ள வயிற்றை அவன்தான் அதிகாரம் செலுத்திட வேண்டுமே தவிர அவனுக்காக உள்ள வயிறு அவனை ஆட்டிபடைக்கும் அதிகாரியாக உயர்ந்திட அவன் அனுமதித்து விடக் கூடாது.

இந்தத் தத்துவத்தை உணர்ந்து அதனடியொட்டி வாழ்ந்திட மனிதன் கற்றுக் கொண்டால், பொய், புறம் கூறுதல், பொறாமை கொள்ளுதல், கோளுரைத்தல் கொலை, களவு, மோசநாசம், சூதுவாது பெருமை, அடங்காமை போன்ற பத்து தீய குணங்களும்-பசி வந்து அவனை வாட்டோ வாட்டென்று வாட்டி, வறுத்தெடுத்

தாலும்-அவனிடம் தலைகாட்டவே காட்டாதென்பது சர்வ நிச்சயமாகும்.

அங்கனம் மனிதனின் அந்த தீமைகள் பத்தும் இல்லாமையாகிடும்போது அவனில் வாய்மையும், தூய்மையும் இயற்கையாகவே வளர்ந்து, செழித்து அவனைப் புனிதனாக மாற்றி அமைத்து விடும் என்பதில் எவருக்கோ சந்தேகம் இருந்திட முடியும்.

இந்த பக்குவ வாழ்க்கைக்கு முழு உதாரண புருசராகத் திகழ்பவர் நமது உத்தமத் திரு நபிகள்தான்.

வள்ளல் திரு நபி (ஸல்-அம்) அவர்கள் தங்களது ஜீவியத்தில் தொடர்ந்தாற்பேலே உண்டதே இல்லை. ஆகவே தான் அந்த பத்து வகைப் பண்புகளில் எந்த ஒரு பண்பும் குன்றாத குணக் குன்றாகவே நடந்துக் காட்டி வந்துள்ளார்கள்.

## வறுமையில் பெருமை

அண்ணலாரின் துணை நல்லார்களில் ஒருவரான அன்னை ஆயிஷா (ரலி-அன்ஹா) அவர்கள் நபிகளாரின் பசியின் கடினத்தை அறிந்தபோது மிக்க துக்கமடைந்தார்கள்.

அதனைக் கண்ட நபிகளார், அன்னையிடம் சொன்னார்கள்,

'ஆயிஷாவே! எனது ஆத்மாவின் எஜமானாகிய வல்ல அல்லாஹ்வின் மீதாணை! திஹாமாவில் உள்ள மரஞ்செடி கொடிகள் அனைத்தும் என்னுடன் அணிவகுத்து நடக்க வேண்டுமென நான் அல்லாஹ்வின் சமூகம் வேண்டினால் எங்கு எனது உத்தேசமோ ஆங்கு அவைகளை என்னுடன் அணிவகுத்து வரும்படி செய்திடுவான் -

ஆனால்,

இம்மையில் வயிறு புடைக்க சாப்பிடுவதைவிட பசித்து பசித்து இருப்பதையும்.

சௌபாக்கியங்களைக் காண ஏழ்மையாக வாழ்வதையும்,

சந்தோஷமாக இருப்பதைக்காண துக்கித்து துக்கித்து இருப்பதையுமே சிறப்பாக நான் கருதுகின்றேன்.

''ஆயிஷாவே ! நிச்சயமாக இம்மையும் இம்மையின் வாழ்வாங்கும் முஹம்மதுக்கும் முஹம்மதின் குடும்பாதிகளுக்கும் அந்தஸ்த்தில் ஈடுகொடுக்க கூடியதன்று.

வல்ல அல்லாஹ் கண்ணியம் பொருந்திய நபிமார்களிடம் வறுமையின்போது பொருமையையும், விருப்பமான கொள்கைகளை பிரச்சாரம் செய்வதில் பொருமையையும் தவிர வேறு எதனையும் எதிர் பார்க்கவில்லை.

அதற்கொப்ப வல்ல அல்லாஹ் அந்த நபிமார்களிடம் ஒப்படைத்த பொறுப்புக்களனைத்தையும் என்னிடம் ஒப்படைத்துள்ளான். அவர்களிடம் எதிர்பார்த்ததை என்னிடமும் எதிர்பார்க்கும் முகமாக ''முஹம்மதே கண்ணியவான்களான மற்ற நபிமார்கள் பொறுமையைக் கொண்டு வாழ்ந்ததுபோல நீரும் பொருமையைக் கைக் கொள்ளும்'' என என்னை சமாதானப்படுத்தியுள்ளான்.

ஆகவே

வல்ல அல்லாஹ்வின்மீதாணை ! நிச்சயமாக எனது சகோதர நபி, ரசூல்மார்களைப் போல நானும் பொறுமையைக் கைக் கொள்வேன், அல்லாஹ்வின் உதவிக் கொண்டல்லாமல் உலகில் எதற்கும் சக்தி ஏற்படவே ஏற்படாது.

''என்று சமாதானம் கூறியபின்னர்

எங்கள் எஜமானனே ! எம்பெரும !

வறுமையின்போது பொறுமையை எங்களுக்கு வழங்கி அருள்பாலித்திடக் கடவாய்.

எங்களால் தாங்கிக் கொள்ள முடியாத எதனையும் எங்களின் மேல் சுமத்திவிடாமல், பாதுகாத்தருள்வாய்...'' என இறைவனிடம் பிரார்த்தித்ததாக ஹஜ்ரத் ஜாபிரிப்னு அப்துல்லாஹ் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

ஹிஜ்ரி ஐந்தாம் ஆண்டில் நடந்து முடிந்த அகழி யுத்தத்தின் போது நடந்தேறிய ஒரு நிகழ்ச்சி இதற்குரிய சிறிய எடுத்துக்காட்டுகளில் ஒன்று என்பேன்.

அதாவது

அந்த யுத்தத்தில் தற்காப்பு நடவடிக்கையாக சல்மான் அல்ஃபாரிசி (ரலி-அன்ஹு) அவர்களின் அரிய ஆலோசனைக் கிணங்க முப்புறமும் இயற்கை அரண்களால் சூழப்பட்ட மதீனாபுரியின் மற்றோர் பகுதியில் அகழி தோண்டப்படுகின்றது.

அண்ணல் நபிமணி உள்ளிட்ட அனைவரும் அகழி தோண்டும் அறப் பணியில் முனைப்பாக ஈடுபடுகின்றனர். அப்போது ஓரிடத்தில் பெரும்பாறைக் கல் ஒன்று குறுக்கிடு கின்றது. அப்பாறையினை உடைத்து எடுப்பதற்கு பலரும் முயன்று பார்க்கின்றனர்; முடியவில்லை; கடைசியாக காமில்நபி அவர்கள் தங்களது தங்கக் கைகளில் கடப்பாறை ஏந்தி பிஸ்மில்லா மொழிந்து அந்தப் பாறையினை ஓங்கித் தாக்குகின்றனர். பலரின் பலத்தை பரிகாசம் செய்த அப்பாறைக்கல் அண்ணல் அவர்களின் ஆன்மீக பலத்தின் முன் தாக்குப் பிடிக்க முடியாமல் தகர்ந்து விடு கின்றது.

அப்போது

தனி மனிதனாகிய என்னால் தகர்க்கப்பட்டு விட்ட இந்தப் பாறையினை உடைக்க உங்கள் அனைவராலும் முடியாமல் போய்விட்டதே ஏன்?- என

அருகிலிருந்த அனைவரையும் ஒளி சிந்தும் பார்வை யால் கேட்டார்கள் நபியுல்லா.

அண்ணல் நபிமணி அவர்களின் பார்வையில் பொதிந்து நின்ற கேள்வியினைப் புரிந்து கொண்ட தல்ஹா (ரலி) கூறுகின்றார்.

'அண்ணலே நாங்கள் தொடர்ந்தார் போல பல நாள் பட்டினி கிடக்க நேரிட்டு விட்டது. அதனால்தான் எங்களால் அது முடியவில்லை,- என

இதனைக் கேட்ட ஏந்தல் அவர்கள் தங்களின் அடிவயிற்றைத் திறந்து காட்டினார்கள். அங்கே குழிவிழுந்து முதுகோடு முதுகாக ஒட்டிப் போயிருந்த வள்ளலாரின் மென்மையான வயிற்றில் இரண்டு கருங்கல் துண்டுகள் வரிந்து கட்டப்பட்டிருந்தன; அதனைச் சுட்டிக்காட்டி ,,நானும் பல நாட்களாக முற்றிலும் உண்ணாமலிருந்து வருகின்றேன்'' என்று அறிவுறுத்தினார்கள் அண்ணல் நபிமணி அவர்கள்.

அதன் மூலம்

வயிறு நிரம்ப உண்ணுவதால் ஏற்படும் உடல் வலிமையினைப் பார்க்கிலும் ஆன்மீக வளர்ச்சியில் ஏற்படும் வலிமையே உன்னதமான- உண்மையான வலிமையாகும் என்ற தத்துவத்தை உணர்த்தினார்கள்,

நமது நபி தாசர் பூசிரி அவர்கள் அண்ணலாரின் வாழ்க்கையில் நடந்தேறிய இது போன்ற நிகழ்ச்சிகளை இந்தக் கண்ணியில் ஈண்டு காண்பித்து இவ்விதமெல்லாம் பசித்திருந்து ஆன்மீக வலிமையைப் பெருக்கி தத்துவம் அமைத்துக் கொடுத்த தாஹா நபி (ஸல்-அம்) அவர்களின் சுன்னத்தை - பசித்திருந்து பக்குவம் பெறும் பழக்கத்தை தவற விட்டு நன்னெறி கெட்டு தான் வாழ்ந்து வருவதாக புலம்பி -

ஹராம் ஹலால் எதனையும் பொருட்படுத்தாமல் வயிறு புடைக்க உண்பதொன்றையே வாழ்வின் குறியாகக் கொண்டு வாழும் நம்மவரை நையாண்டி செய்கின்றார்.

  

“பசி வந்திடில் பத்தும் பறந்துபோம் என்பதனை மாற்றி, பசித்து இருந்தாலும் வயிற்றுக்கு அடிமை பட்டிடாமல் பத்தியமாக வாழ்ந்திட முடியும் என்றதொரு புதிய தத்துவத்தை பாருக்குணர்த்தினார் எம்மான்” என பெருமான் நபிகளாரைப்பற்றி பெருமை பேசிய பூசிரீ அவர்கள்.

வேறு வக்கு வழி எதுவுமின்மையால் அவர் பட்டினிக் கிடந்தார் இதில் என்ன புதுமை?” என குறைமதி கொண்ட சில அரை வேக்காடுகள் எண்ணிடக் கூடும் என்று கருதினார் போலும்.

அப்படியொரு தப்பான எண்ணம் தாஹா நபி அவர்களைப்பற்றி எழுந்திட இடம் கொடுத்திடக்கூடாது என்னும் நன்னோக்கில் அடுத்த கண்ணியில் பெருமான் அவர்களின் செல்வம் கொழிக்கும் நிலையினை ஈண்டு காண்பிக்கின்றார்:

وَرَاوَدَتْهُ الْجِبَالُ الشُّمُّ مِنْ ذَهَبٍ
عَنْ نَفْسِهِ فَأَرَاهَا أَيَّمَا شَمَمِ ٣١

**வராவதத்ஹுல்ஜிபா லுஷ்ஷும்மு மின்தஹபின் அந்நஃப்ஸிஹீஃப அரா ஹாஅய்யமாஷமமி**

மிக உயர்ந்த தங்கமலைகள் தானாக முன் வந்து தாஹா நபிகளாரை விழித்து (தன்னைப் பயன்படுத்தி) வறுமையினைப் போக்கிக் கொள்ளும்படி வேண்டி நின்ற போதும்; அவ்வேண்டுதலைப் புறக்கணித்துத் தங்களின் (சுயமரியாதை) உயர்வை (உலகிற்குக்) காட்டினார்களென்றால் அவ்வுயர் நோக்கின் தன்மைதான் என்னே...!

இதனை—

மிக்குயர்ந்த பொன்மலைகள் வேண்டியமைழத்தும் அவர் ஒக்க மறுத்தே தாங்கிநின்றஉயர்நோக்கின் தன்மையென்னே!

என மறைக்காயர் வர்ணித்துக் காட்டுகின்றார்.

வி-ரை: நபித்துவம் அருளப்பெற்ற ஆரம்ப நாட்களில் பெருமானாருக்கு சீமாட்டி கதீஜா பிராட்டியார் (ரலி-அன்ஹா) அவர்கள் அவர் தம் செல்வங்கள் அனைத்தையும் கொட்டிக் கொடுத்திருந்தார்.

மெய்யன்பர் அபூபக்கர் சித்தீக் (ரலி-அன்ஹு) அவர்களும் தமது செல்வங்களிலிருந்து அள்ளி அள்ளிக் கொடுத்தார். ஆனால் தாஹா நபி அவர்கள் தனது விருப்பத்திற்கு விடப்பட்ட அச்செல்வங்கள் அனைத்தையும் பஞ்சை பராரிகளுக்கும் ஏழை எளியோருக்கும் அனாதைகளுக்கும் வாரி வாரி வழங்கினார்களன்றி தமக்கு என எதனையும் சேமித்து வைத்துக் கொள்ளவே இல்லை.

அது மட்டுமா?

மக்கமா நகரைச்சுற்றிலும் ஓங்கி உயர்ந்து நிற்கும் மலைக்குன்றுகளெல்லாம் மன்னர் நபியுல்லா அவர்களுக்கு நன்றிக் கடன் செய்யும் பொருட்டு,

''மன்னவரே ஆணையிடுங்கள்! மின்னும் பொன்னாக மிளிர்ந்திடுவோம்'' (என) மண்டியிட்டு தவம் செய்தன.

அபூஉமாதத்துல் பாஹிலி (ரலி-அன்ஹு) அவர்கள் நந் நபிகளார் நவின்றதாக அறிவிக்கின்றார்கள்.

''எனது இறைவன் மக்காவிலுள்ள மலைகளை தங்கம் வெள்ளியாய் மாற்றி எனக்குக் கொடுத்தான். ஆனால் நான் எனதுரப்பிடம் எனது எஜமானனே! எனக்கு இவை தேவை

யன்று. ஒருநாள் புசித்து உனக்கு நன்றி செலுத்திடவும், மறுநாள் பசித்திருந்து உன்னிடம் கெஞ்சிக் கேட்டிடவுமான குறைந்தபட்ச வாழ்க்கையினையே விரும்புகின்றேன்'' (என) இறைவனிடம் வேண்டிக் கொண்டதாக

மதீனா புரியில் வள்ளலார் வாழ்ந்து வந்த நாட்களில் போர்ப் பரிசாகக் (கனீமத்து) கிடைத்தபொருட்களும், நேச நாட்டின் மன்னர்களால் அன்பளிப்பாக வழங்கப்பட்ட செல்வங்களும் குவியல் குவியலாக குவிந்து கிடந்தன.

ஆனால் இத்தகு செல்வம் கொழிக்கும் இனியதோர் நிலைகளிலும் ஏந்தல் நபியுல்லா அவர்கள் பத்தியத் தன்மையோடு பசித்திருப்பதையே வழக்கமாகக் கொண்டே வாழ்ந்தார்கள்.

ஒப்பாரும் மிக்காருமில்லா இந்த உயர் வினைத்தான் மிக்குயர்ந்த பொன்மலைகள் வேண்டி யழைத்தும்... எனத் தொடங்கும் இந்தக் கண்ணியில் இமாம் பூசிரி அவர்கள் சித்தரித்துக் காட்டுகின்றார்கள்.

وَأَكَّدَتْ زُهْدَهُ فِيهَا ضَرُورَتُهُ
إِنَّ الضَّرُورَةَ لَا تَعْدُو عَلَى الْعِصَمِ ٣٢

வ அக்கதத் ஜுஹ்தஹூ ஃபீஹா-
ழரூறத்துஹூ இன்னழ்ழரூறத லா
தஃது அலல் இஸமி

அச்செல்வங்களின் தேவைகள் (மிக மிக அதிகமாக இருந்தும்கூட அத்தேவைகளை உதறி) நபிகளார் தங்களது பற்றில்லாத் தன்மையையே உறுதிப்படுத்தினார்கள்.

நிச்சயமாக உலகில் தேவைகளால், பாவங்கள் அனைத்தையும் விட்டுப் பாதுகாக்கப் பட்ட புனிதரை வென்றிட முடியுமோ

இதனை—

எண்ணிறந்ததேவையவர் இருந்துறவை நாட்டினவே!

மண்ணுலகத்தேவைபவம் மாய்த்தவரை

வென்றிடுமோ?

எனப்பாடுகின்றார்; மறைக்காயர்.

**இம்மையில் இன்பம் கூடினால்**
**அம்மையில் சுகம் குறையும்**

வி-ரை :

நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் கனம் குறைந்ததும் பச்சை நிறமுள்ளதுமான விரிப்பு விரிக்கப்பட்ட ஒருகட்டிலில் சாய்ந்து படுத்திருந்தார்கள். திருமேனியின் தலைக்குக் கீழே பேரீத்தம் கொட்டைகளால் நிறப்பப்பட்ட ஒரு தலையணை காணப்பட்டது.

அப்போது நாயகத்தோழர் ஹஜ்றத் உமர் (ரலி-அல்ஹு) அவர்களும் மற்றும் சில தோழர்களும் ஆங்கே நுழைகின்றார்கள்.

சாய்ந்து கிடந்த நபிகளாரின் பொன்மேனியில் விரிப்பின் வரைகோடுகள் பதிந்திருந்ததைக் கண்டு மிக்க வியாகூலம் அடைகின்றார்கள் வந்தவர்கள்.

வந்தவர்களின் முகத்தில் கவலை ரேகைகள் படர்ந்திருப்பதைக் கண்ட நபிகளார் ‘‘உமரே! ஈதென்ன அதிசயம்... உங்களின் மதிமுகம் வாடிக் காணப்படுவதேன்......?’’ என்றார்கள்.

அதற்கு உமர் (ரலி-அன்ஹு) அவர்கள்:

''ஏந்தலே! எப்படி எங்களால் வியாகூலம் அடையா திருக்க முடியும்......?'' கிஸ்ரா மன்னனும் கைசர் மன்னனும் உலகின் சுகமான சுகங்களை எல்லாம் சுவைத்தின்புறும் போது உலகம் உள்ளவரை தோன்றும் மன்னர்களுக்கெல் லாம் தனிப் பெரும் வழிகாட்டியாக உள்ள தாங்களை இந்த அலங்கோலத்தில் காணும் படியுள்ளதே......''

எனக்கூறி பெருமூச்சு விடுகின்றார்கள்.

''உமரே! அவர்களுக்கு கொஞ்ச நாளில் அழிந்துபட வல்ல இம்மையில் மாத்திரமே அவர்களுக்கு சொந்தமான தாக உள்ளது. ஆனாலும் நமக்கு அழிவே இல்லாத அம்மை யிலும் சுகம் கிடைப்பதை நீர் விரும்பவில்லையா.........'' நபிகளார்

''அதுவே எங்களின் வேணவாவாகும்''— உமர்— (ரலி-அன்ஹு)

அதுபோது ஆங்கு வருகை தந்த ஜிப்ரயீல் (அலை) அவர்கள்:

''இம்மையில் இன்பம் கூடுவதற்கேற்ப அம்மையின் சுகம் குறையும் என்பது வல்ல அல்லாஹ்வின் கற்பனை யாகும்'' என்றார்களாம்.

ஆகவே தான் அண்ணலெம் பெருமான் மண்ணுல ஆசைகளை மாய்த்து ஏழையாக- எளிமையாக வாழ்ந்தா கள்.

இதனையே இங்கே 32-ஆம் கண்ணியில் கவிக்கே பூசிரி (ரஹ்) அவர்கள் சுட்டுகின்றார்கள்.

وَكَيْفَ تَدْعُو إِلَى الدُّنْيَا ضَرُورَةُ مَنْ
لَوْلَاهُ لَمْ تُخْرَجِ الدُّنْيَا مِنَ الْعَدَمِ

**வகைஃப தத்வூ இலத் துன்யா**
**-ழரூறதுமன் லவ்லாஹு லம் துக்ருஜித்**
**துன்யா மினல் அதமி**

எவர் தோன்றாவிடின் இல்லாமையிலிருந்து இவ்வுலகம்தோன்றியிருக்காதோ அந்தக் காரண கர்த்தாவை உலகியல் தேவைகளால் எங்ஙனம் அடிமை கொண்டிட முடியும்...?

இதனை—
எவர் இல்லையேல் உலகம் இன்மைநின்று -
தோன்றாதோ
அவரையிகத் தேவைதன்பால் அழைத்தடிமை
கொண்டுடிமோ?

என மறைக்கரயர் பாடிக் காட்டுகின்றார்;

## "முஹம்மதே! அனைத்துமே உனக்காக"

வி-ரை: மிஃராஜ் பயணத்தின் போது சித்ரதுல் முன்தஹாவில் வைத்து நமது நபிகளார் சஜ்தாவில் கிடந்த போது "முஹம்மதே! அஹ்மதே! என் மனம் கவர்ந்த ஹபீபே! நானும் நீயுமல்லாத அனைத்தையும் நான் உனக்காகவே படைத்துள்ளேன்" என வல்லவனாகிய அல்லாஹ் நபிகளாரை வாழ்த்தினானாம்

அதற்கு,
"யா அல்லாஹ்! எம்பெருமா! நானும் நீயும் தவிரவுள்ள அனைத்தையுமே உனக்காக வேண்டி நான் தியாகம் செய்து விட்டேன்" என நமது நபிகளார் நவின்றார்களாம்.

இதனை-

அம்மையை விரும்பவருக்கு இம்மை ஹராமாகும். இம்மையை விரும்புபவருக்கு அம்மை ஹராமாகும். அல்லாஹ்வை விரும்புபவருக்கு அவை இரண்டுமே ஹராமாகும்-என குர்த்துபி(ரஹ்-அன்ஹு) அவர்கள் கூறி விளம்பியுள்ளார்கள்.

□ □ □

சொர்க்கத்து தோரண வாயிலில் 'லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரஸூலுல்லாஹி' என்ற தவ்ஹீது கலிமா எழுதப்பட்டதைக் கண்ட ஆதம் நபி (அலை) அவர்களுக்கு புதிராக காணப்பட்டது.

'நாம் தானே முதல் மனிதர்! அப்படியிருக்க நமக்கு முன் வேறொரு மனிதரைப் பற்றி பிரஸ்தாபிக்கப்பட்டுள்ளதே என ஆதம் அவர்கள் நினைத்தார்கள் போலும்.

ஆகவே அனைத்துப்படைப்புகளின் ஒரே அதிபதியாம் வல்ல அல்லாஹ் அனைத்துப்படைப்புக்களுக்கும் முஹம்மது என்ற அந்த பெயருக்குரியவரே காரணஸ்தர் என்ற பேருண்மையினை ஆதம் அவர்களுக்கு அப்போது உணர்த்தினான்.

மண், விண், மலை, கடல், நதி, பாதாளம், வானவர் முதலான அனைத்தும் முஹம்மதெனும் கடைசி நபி பொருட்டால் படைக்கப்பட்டன. என்ற இந்தப் பேருண்மையினை இங்கு ஈண்டு காண்பித்து இப்படி அனைத்துப் படைப்புக்களுக்கும் காரணமாக உள்ள காமில் நபி அவர்களை அவரது தவால் படைக்கப்பட்ட உலகம் எங்ஙனம் நிர்பந்திக்க முடியும்? அவரின் பரிசுத்தத் தன்மையினை நெருடி பார்க்கும் துணிவு இவ்வையகத் தேவைகளுக்கேது? எனக்கேட்டதின் மூலம் நபிகளார் அவர்களின் பற்றற்ற வாழ்க்கையின் தூய்மையினை தெளிவுபடுத்துகின்றார் இமாம் பூசிரி அவர்கள்.

مُحَمَّدٌ سَيِّدُ الْكَوْنَيْنِ وَالثَّقَلَيْـ
ـنِ وَالْفَرِيقَيْنِ مِنْ عُرْبٍ وَمِنْ عَجَمِ (٣٤)

**முஹம்மதுன் ஸய்யிதுல்**
**கவ்னைனி வத்தகலை னிவல்ஃபரீகை**
**னி மின் உர்பின் வ**
**மின் உஜ்மி**

முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் (இம்மை மறுமை ஆகிய) இரு உலகிற்கும்; [மனுவர்க்கம் பூதவர்க்கம் ஆகிய] இரு வகுப்பினர்க்கும் அரபியர், அரபியல்லாதார் ஆகிய இரு பிரிவினர்க்கும் தானைத் தலைவராக உள்ளார்கள்.

இதனை-

அம்மை, யிம்மை, ஜின், மாந்தர் அரபி,
அவர் அல்லாதார்
எம்மைக்கும் நாயகராம் எங்கள்
முஹம்மதரே

எனப் பாடுகின்றார் மறைக்காயர்.

வி-ரை: 'ஆதம்-ஹவ்வா' என்ற ஒரே மூலத்திலிருந்து உருவாக்கப்பட்ட மனித சமுதாயம் நிறத்தால்-மொழியால்-வாழும் நாட்டின் அமைப்பால் எத்தனையோ பாகுபாடுகளுக்கு உள்ளாக்கப்பட்டிருந்தாலும் அத்தனை பாகுபாடுகளையும், வேறுபாடுகளையும் களைந்தெறியும் விதத்தில் மனித குலம் அனைத்திற்குமே-அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும்-மக்கத்து மனுநீதராம் முஹம்மது (ஸல்-அம்) அவர்களே தனிப்பெரும் தலைவராக திகழ்கின்றார்கள்.

அன்றி நெருப்பால் படைக்கப்பட்டு சொந்தமான உருவம் ஏதுமின்றி-ஆனால் நினைத்த உருவில் உருமாறும் ஆற்றல்

கொடுக்கப் பெற்றுள்ள-'ஜின்' எனும் பூத வர்க்கத்திற்கும் பூமான் நபிகளார்(ஸல்-அம்)அவர்களே ஆன்மீகத் தலைவராக ஆக்கப்பட்டுள்ளார்கள்.

இம்மையில் தனிப்பெரும் தலைமை பொறுப்புக் கொடுக்கப்பட்டுள்ள அந்த இறைநேசர் அவர்கள், இம்மை அழிக்கப்பட்டு அதன் பின் நிகழ இருக்கும் மறுமை வாழ்க்கையிலும் அனைவருக்குமே தலைவராக ஆக்கப்பட்டுள்ளார்கள்.

## அண்ணலார் குறுக்கிட்ட பின்னரே அமளி குறைந்திடும்

இதனை இன்னமும் விளம்பிடும் வகையில் அமைந்துள்ள இமாம் குர்த்துபி (ரஹி-அன்ஹு) அவர்களின் அறிக்கையை ஆய்ந்திடுவோம் :
கியாமத்து நாளில் நரகத்தை அதன் காவலர்களான மலக்குகள் இழுத்துக்கொண்டு வருவர்.

நரகம் அதற்குரிய நான்கு கால்களினால் நடந்து வரும்.

70 ஆயிரம் சங்கிலிகளால் அஃது பிணைக்கப் பட்டிருக்கும்.

ஒவ்வொரு சங்கிலிக்கும் 70 ஆயிரம் கன்னிகள் இருக்கும்

ஒவ்வொரு கன்னியையும் 70 ஆயிரம் மலக்குகள் பற்றி நிற்பர்.

அந்த மலக்குகளின் பிடி நழுவி விடுமானால் அதனை பிடித்துக் கட்டுபடுத்துவதென்பது முடியாத காரியமாகிவிடும்.

அதுபோது மஹ்ஷர் வெளியில் நபி ரசூல்மார் உட்பட அனைத்து ஜனங்களுமே செய்வதறியாது திகிலுடன் திகைத்து நிற்பர். ஆனால் இப்றாஹீம், மூஸா, ஈசா (அலைஹிம்-சலம்) ஆகிய மூன்று நபிமார்களும் அர்ஷினுடைய கல்களுடன் அந்த நரகத்தைப் பிணைத்துக் கட்டுவார்கள்.

அதன் காரணமாக அம்மூவரில் ஒருவர் பலி கொடுத்திடக் கொண்டுபோன தனது மகனையே மறந்து விடுவார். மற்றவர் உலகில் தனக்கு வணிலும் உறக்கத்திலும் கூட்டா ளியாக இருந்த தனது சகோதரர் ஹாரூனைக் கூட மறந்து விடுவார், மற்றவர் தனது அருமை மாதாவாகிய மாய்மைக் கூட மறந்து விடுவார்.

அனைவரும் நஃப்ஸீ...........நஃப்ஸி (என் ஆத்மாவே ...ஆத்மாவே) என அடைக்கலம் தேடி அலையாக அலைந்து திரிவர்.

ஆனால் முஹம்மது நபி(ஸல்-அம்) அவர்கள் மட்டும்.

''யா உம்மத்தீ......யா உம்மத்தீ...... [என் சமுதாயமே என் சமுதாயமே] அவர்களுக்கு அடைக்கலம் கிடைத்திட வேண்டுமே அவர்களுக்கு அபயம் கிடைத்திட வேண்டுமே'

என பிரார்த்தித்த வண்ணமாக மன்றாடிடுவார்கள் அதற்கிடையில் திருமேனி முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் எழுந்து மலக்குகளால் இழுத்து வரப்பட்ட அந்த நரகத்தின் சங்கிலிகளைப் பற்றி கொண்டு ''கோபிக்காது நீ பின் வாங்குக'' எனக் கூறிடுவார்கள். அப்போது ''எனது ஹபீபாகிய ரஹமதுன் லில் ஆலமீனாகிய: ஈருலக நாயக ராகிய முஹம்மதின் உத்திரவை நீ அனுசரித்து நடந்து கொள்'' என ஒரு சப்தம் உண்டாகும்.

ஆகவே அந்த ஜஹன்னத்தை அர்ஷினுடைய இடது பக்கத்திற்கு இழுத்துக் கொண்டு போகப்படும்.

அதன் பின்னரே அமளிகுறைந்து ஜனங்கள் பயம் தெளிவார்கள்,

ஒப்பாரும் மிக்காருமற்ற முறையில் இத்தகு சிறப்பான் மையினை எல்லாம் வல்ல இறைவனால் வழங்கப்பட்டுள்ள முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் வழிமுறைகள் கிடைத்தும் பின்பற்றாது வாழ்வது அபத்தமல்லவா?

இதனைத்தான் இறைநேசராம் நம்மின் நபி தாசர் பூசிரீ அவர்கள் இங்கே விளக்கிக் காட்டுகின்றார்.

نَبِيُّنَا الْآمِرُ النَّاهِي فَلَا أَحَدٌ
أَبَرَّ فِي قَوْلِ لَا مِنْهُ وَلَا نَعَمِ ﴿٣٥﴾

**நபிய்யுனல் ஆமிறுந் நாஹீ**
**ஃபலா அஹதுன்**
**அபர்ர ஃபீ கவ்லிலா**
**மின்ஹு வலா நஅமி**

நம்மின் நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் (நல்லவைகளை) ஏவியும் (அல்லவைகளை) விலக்கியும் நல்வழிகாட்டும் நற்றவப்பெருந்தூதர்.

ஆதலால்; 'ஆம்' அல்லது 'அல்ல' என்ற வாய்மையில் அப்பெருந்தகையைவிட மற்றெவரும் சத்தியவானில்லை:

இதனை

பொருந்தும்விதிவிலக்கைப் புகுத்தும் நபி நாதரினும்
தெரிந்துரை 'ஆம்!' 'அல்ல'! வெனச் செப்புமெய்யர்
வேறிலரே

என இன்பத் தமிழில் இயம்புகின்றார் மறைக்காயர்.

**வி-ரை:** சுயநலம், அச்சம், தயவு, தாட்சண்யம், சபலபுத்தி ஆகிய சருக்கி விடும் தன்மைகள் மனித சுபாவங்களில் கலந்திருப்பதால் சிலசமயங்களில் மனிதன் இல்லாதவைகளை 'உண்டு' எனவும், இருப்பவைகளை 'இல்லை, எனவும் கூறி நிலைமைகளை தனக்குச் சாதகமாக மாற்றிக் கொள்கின்றான். இந்த சுயநலப் போக்கு இன்றைய

தலைவர்கள் எனப்படுவோரின் அன்றாடப் பழக்கமாக இருந்து வருவது கண்கூடு, அல்லவா!

ஆனால் ஈருலகத் தலைவர் எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுடைய வாழ்வில் வாக்குகளில் இவ் வித சருகும் தன்மைகளில் எந்த ஒன்றையும் மருந்திற்குக் கூட தேடிக் காணமுடியவில்லை.

மனித தர்மத்திற்கு பொருந்தக்கூடிய அவசியப்பட்ட கருத்துக்களை விருப்பு வெறுப்பிற்கு அப்பாற்பட்டு நின்று கொண்டு, தாம் அவைகளை செயன் மேற்கொண்டு வாழ்ந்து, மற்றவர்க்கும் அதனை எடுத்துரைத்தார்கள். அதே நேரத் தில் மனித தர்மத்திற்கு மாசு கற்பிக்கக் கூடியவைகளை விட்டும், தாம் ஒதுக்கி வாழ்ந்து கொண்டதோடு, மற்றவர் களும் அதனை ஒதுக்கி வைத்து வாழ வேண்டுமென நெஞ்சுரத்தோடு பணித்தார்கள்.

ஆனால் தன் பக்கம் மக்கள் கூட்டம் மந்தை மந்தையாக வந்து சேரக்கூடிய வாய்ப்பிருக்கின்றது என்பதற்காக தனது கொள்கைகளில் எந்த ஒன்றையும் கடுகளவு கூட தளர்த்திக் கொடுத்திட்டார்களில்லை.

ஒரு தடவை ஒரு பெருங் கூட்டத்தினர் பெருமானார் (ஸல்அம்) அவர்களிடம் "ஐங்காலத் தொழுகை என்றிருப் பதை மூன்று நேரமாகச் சுருகித் தரும் பட்சத்தில் நாங்கள் அனைவருமே இஸ்லாத்தில் இணைந்து கொள்கின்றோம்" எனக் கூறி நின்றனர். அதற்கு தனது இஸ்லாமியத்தில் மக்கள் அனைவருமே இணைந்து இன்புற்றிட வேண்டும் என்பதில் வேணவா கொண்டு வாழ்ந்த வள்ளல் திரு நபி (ஸல்-அம்) அவர்கள், "ஐந்தை ஆறாகக் கூட்டவோ அன்றி மூன்றாகக் குறைத்திடவோ எனக்கு அதிகாரமில்லை விரும்பினால் இணைந்து கொள்ளுங்கள். வெதும்பினால் எழுந்து விடுங்கள்" என்றுரைத்தார்கள்.

இவ்விதம் நெஞ்சுரத்தோடுச் சத்தியங்களை எடுத்துரைத்து நன்மைகளை செய்யும்படி ஏவியும், அசத்தியங்களைச் சுட்டிக் காட்டி தீமைகளை விடுத்து வாழும்படியும் கூறி உண்மைக்காக உயிர் பொருள் ஆவி அனைத்தையும் தத்தம் செய்த உத்தம சீலரை பின்பற்றாமல் வாழ்வதைவிட ஒரு அபாக்கியம் வேறென்ன இருக்கின்றது.

هُوَ الْحَبِيبُ الَّذِي تُرْجَى شَفَاعَتُهُ
لِكُلِّ هَوْلٍ مِنَ الْأَهْوَالِ مُقْتَحِمِ (٣٦)

**ஹுவல்ஹபீபுல்லதீ துர்ஜா**
**ஷஃபா அதுஹு**
**லி குல்லிஹவ்லின் (ம்)மினல்**
**அஹ்வாலி முக்தஹிமி**

அப்பெருந்தகை அளப்பரிய அன்பராவர், திடுமெனச் சம்பவிக்கும் விபத்துக்களனைத்திற்கும் அவ்வருளாளரின் துணை (ஷபாஅத்) ஒன்றையே அருமருந்தாக ஆதரவு வைக்க முடியும்.

இதனை-

அன்பர் அவர்; மானிடரை அணுகுதுயர் சேர் கொடிய

துன்பெலாம் தீர்க்க, அவர் துணைகோரப் பட்டிடுமே!

என மறைக்காயர் பாடி மகிழுகின்றார்.

வி-ரை : முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களுக்கும் அன்பு எனும் பண்பிற்கும் உள்ள தொடர்பை நான்கு வகையாக வகைப்படுத்தலாம். அவைகள் : 1. அல்லாஹ்

வின் அன்பர் 2. அல்லாஹ்வின் அன்பிற்குரியவர் 3. அடியார்களின் அன்பர் 4. அடியார்களின்பால் அன்பு செலுத்துபவர் என்பதாம்.

## அல்லாஹ்வின் அன்பர்

அடுக்கடுக்காக இடுக்கன் பல வந்துற்ற போதும் அயர்ந்து விடாமல் தன்னிடம் ஒப்படைக்கப்பட்ட நுபுவ்வத்தை (திருத்தூதத் தன்மையை) உயர்த்திப்பிடித்து நின்ற உத்தமத் திரு நபி (ஸல் அம்) அவர்களின் நெஞ்சுர மும் கொள்கைப் பிடிப்பும் அல்லாஹ்வின்பால் அவர்கள் கொண்ட அன்பிற்கு எடுத்துக்காட்டுகளாகும்.

இதனைத்தான், அல்லாஹ்வின் அன்பர் என்ற கருத் தில் இறை நேசக் கவி பூசிரி (ரஹ்) அவர்கள் இங்கே வியாபித்துக் காட்டுகின்றார்.

## அல்லாஹ்வின் அன்பிற்குரியவர்

திக்கற்ற அனாதை முஹம்மதை சமுதாயத்தில் சத்திய மூர்த்தியாக உயர்த்திக் காட்டியதோடு உலகில் எந்த இறை நேசருக்கும் அருளியிராத 'மிஃராஜ்' எனும் தனிப் பெரும் பாக்கியத்தை அப்பெருந்தகைக்கு ஈந்தருளியது மட்டுமல்லாமல் இன்னும் எண்ணிறந்த அருட்செல்வங் களை - வியத்தகு வெற்றிக் கனிகளை பகைவர்களையும் வாயடைக்கச் செய்யவல்ல பக்த கோடிகளை அன்னா ருக்கு ஏகனாம் வல்ல அல்லாஹ் வழங்கி அருள்பாலித்த தானது அண்ணலார் அல்லாஹ்வின் அன்பிற்குரியவர் என்பதற்குரிய அடையாளங்களாகும்.

## அடியார்களின் அன்பர்

அனுதினமும் ஒரு வினாடிகூட, இடைவிடாமல் அருள் பொருந்திய முதல் ஆலயமாம் கிப்லா (கஃபா)வை நோக்கி

கோடானு கோடி சிரசுகள் தலைவணங்கி இறைவணக்கத் தினை நிறைவு செய்யும் கண்கொள்ளாக் காட்சிகளும்;

பாலைகளில், சோலைகளில், பனிபடர்ந்த நாடுகளில் எல்லாம் பரிணாமம் கொண்டுள்ள மினராக்களின் எழிலான ஏற்றங்களும் அடியார்கள் அண்ணல் நபி நாதர்பால் வைத்துள்ள அன்பின் சின்னங்களாகும்.

## அடியார் பால் அன்பு செலுத்திடும் அண்ணல்

பாலைவனப் பிரதேசமான ஹிஜாஜ் நாட்டின் கோடை வாசஸ்தலம் தாயிப், என்ற இயற்கை எழில் மிகுந்ததோர் ஊராகும்) இடம்தான் கோடை வாசஸ்தலமாக இருந்ததே யன்றி அங்கே வாழ்ந்தவர்களோ கோடையின் வெப்பத்தை விட கொடூரமானவர்களாக இருந்தனர். ஆம்; அங்கு சென்று சத்தியத்தைப் போதிக்க முயன்ற ஒரே குற்றத் திற்காக அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்களை கிறுக்கனை விடக்கேவலமாக நடத்தினர் அந்தத் தாயிப் வாசிகள்.

அண்ணலாரின் பொன் மேனியிலிருந்து செங்குருதி கசிந்தோடும் வண்ணமாக கல்லாலும் முள்ளாலும் அங்கே ஒருகணம் கூட தங்க விடாது ஓடத் ஓடத் துரத் னர் இதயமே இல்லாத அந்த ஈனர்கள்,

அப்போது ''அழித்து விடுகின்றோம் இவர்களை அனுமதி தாருங்கள்'' என்று வானவர் கோன் ஜிப்ராயீலும் மீக்காயிலும் அனுமதி கேட்டுக் காத்திருந்தனர் அண்ண லிடம்.

ஆனால் அண்ணல் அவர்களோ, கல் நெஞ்சங்களும் கசிந்துருகிவிடும் முறையில் ''பாவம் இவர்கள் பாமரர்கள். இவர்கள் இல்லாவிட்டாலும் இவர்களின் சந்ததியின ராவது சத்தியத்தை உணர்ந்திடக்கூடும்; ஆகவே

இவர்களை ஒன்றும் செய்து விடாதீர்கள்'' எனக் கூறி தாயிப் வாசிகளுக்கு நேரவிருந்த அலங்கோலமான அழிவி லிருந்து அவர்களைக் காப்பாற்றினார்கள்.

அடியார் பால் அண்ணலவர்கள் அன்பு செலுத்திய நிகழ்ச்சி இத்தோடு முடிந்துவிட்டதன்று.

கத்தியின்றி இரத்தமின்றி மக்கா வெற்றி கொள்ளப் படுகிறது. அப்போது ஹிந்தா என்ற காதகி அண்ணல் நபிகளார் சந்நிதானத்தில் சிறைப்பிடிக்கப்பட்டு நிறுத்தப் படுகின்றாள். ஆம்; அண்ணலாரின் அருமைச் சிறிய தந்தை ஹம்ஜா (ரலி-அன்ஹு) அவர்கள் உஹத்போரில் சின்னாபின்னப்படுத்தி அலங்கோலமாக கொல்லப் பட்டதற்கு முழுப் பொறுப்பாளி அந்த ஹிந்தாதான். வஞ்சகத்தின் பிறப்பிடமான அவள் கூட மன்னிப்புக் கேட்டிட கூசுகின்றாள். ஆனால் அண்ணல் நபி நாதரோ, குமுறும் எரிமலைக்கிடையில் அவளை மன்னித்து விடுதலை செய்கின்றார்கள். ஒருகணம் தனக்கு விடுதலை கிடைத்து விட்டதை அந்த ஹிந்தா கூட நம்பவில்லை.

அதே மக்கா வெற்றியின் போது - சற்று முன்பு வரை தனக்கும் தனது கொள்கை பற்றவர் கூட்டத்திற்கும் கொடுமைகள் செய்வதொன்றையே பொழுது போக்காகக் கொண்டு வாழ்ந்த-அபூஸுப்யானையும், உலக வரலாற்றில் கறைபடிந்த இடத்தை பிடித்துக் கொண்ட அபூஜஹிலின் மகனும் - மக்கா வெற்றியின்போது உயிருக்குப் பயந்து ஊரைவிட்டே ஓடிப்போனவருமான இக்ரிமாவையும் கருணை நபியுல்லா அவர்கள் பெரிய மனதுடன் மன்னித்து உயிர் பிச்சை கொடுத்தார்கள்.

இப்படியாக அண்ணலாரின் அன்புள்ளத்தைப் படம் பிடித்துக் காட்டும் வியப்புமிகு வரலாற்றுத் நிகழ்வுகளை எண்ணிக் கொண்டே போகலாம்.

அன்றைய நிலையை விடுத்து இன்றைய அடியார் களுக்கும் அண்ணலாரின் அன்பு உண்டா எனச் சிந்திக்கப்

புகின் வியப்புமேல் வியப்புத்தான் ஏற்படுகின்றது. சுருங்கக் கூறின் இன்றைய உலகம் இன்னும் அழிவிலிருந்து பாது காக்கப்பட்டு வருவது கூட அண்ணல் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் தயவால்தான் என்பது வெள்ளிடைமலை

''இன்றைய உலகில் நவ நாகரிகத்தின் பெயரால் நடத்தப்பட்டு வருகின்ற அநாகரிகங்களையும், கீழ்மட்டத் திலிருந்து மேல்மட்டம் வரையில் நடந்து வருகின்ற மோசடிகள், மனித தர்மத்தைக் குழிதோண்டிப் புதைத் திடும் கொடுமைகள், இறைப் புறக்கணிப்புகள் ஆகியவை களுக்காக அகிலமனைத்தையுமே அடியோடு அழித்துவிட எண்ணுகின்றான் இறைவன். அல்லது குறைந்த பட்சம் முந்திய மக்களுக்கு ஏற்பட்டது போன்ற சம்பந்தப்பட்ட குற்றவாளிகளை மட்டிலும் அழித்து விட அல்லது உருவம் மாற்றி கேவலப்படுத்திட நாடுகின்றான் அந்த நாயகன். ஆனாலும் ''அண்ணல் நபிகளாருக்கு அவன் தந்திருக் கின்ற வாக்குறுதியைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டு குறித்த தவணை வரும் வரை அனைவரையும் விட்டு வைத்திருக்கின்றான்' என இறைநேசர் ஒருவர் கோடிட்டுக் காட்டிய கருத்து இங்கே நினைவு கூறத்தக்க ஒன்றாகும்.

சுருங்கக் கூறின் அடியார்களின் பால் அண்ணல் நபி நாதரின் அன்பு மழை அன்றிலிருந்து இன்றுவரை குறை வின்றி பொழிந்து கொண்டே இருக்கின்றது.

ஆக அண்ணலாரின் அன்புள்ளம் நான்கு முனைகளை யும் குறையற சூழ்ந்திருப்பதால் தான் நபி தாசர் பூசிரி அவர்கள் அப்பெருந்தகையை 'ஹபீப்' அதாவது அன்பாளர் அன்பை ஆளக் கூடியவர் என வர்ணிக்கின்றார். எவ்வளவு பொருத்தம் பார்த்தீர்களா?

அன்றி :

மனித சமுதாயத்திற்கு ஒரு திடுக்கம் காத்திருக் கின்றது;

அந்தத் திடுக்கத்தின் தன்மையினை அதனால் ஏற்படும் விளைவுகளை அந்த திடுக்கத்தின் விளைவால் ஆண்டியிலிருந்து அரசன் வரை சாதுவிலிருந்து சண்டி வரையில் மனித சமுதாயம் அனைத்திற்கும் ஏற்படக்கூடிய நடுக்கத்தின் தன்மையை கற்பனை கூட செய்து பார்த்திட முடியாது. அதுதான் 'கியாமத் நாளின் திடுக்கம். அந்த நாளன்று மனிதர்கள் செய்வதறியாது மனித மூலவர் பாவா ஆதம் (அலை) அவர்களை மொய்த்துக் கொள்வர்.

ஆனால் ஆதம் அவர்களோ தன்னின் பரிதாப நிலை மைகளை எடுத்துக் கூறி தன்னை விடுவித்துக் கொள் வார்கள்.

ஆதம் (அலை) மட்டுமல்ல! தீர்க்கதரிசிகளான ஒவ் வொருவரும் இந்த மனித சமுதாயத்திற்கு பிணையேற்பதி லிருந்து ஒதுங்கிக் கொள்வார்கள்.

கடைசியாக: கடைசி நபி - காமில் நபி-கலை மறை முஹம்மது (ஸல்-அம்) அவர்கள்தான் மனிதர்களின் போக்கற்ற நிலைகண்டு வருந்தி அனைவருக்குமே கதி யற்ற அந்த நாளில் முழுப் பொறுப்பேற்று துணைபுரி வார்கள்.

## என்னை விடச் சிறப்புற்ற எவருக்குமேயில்லை

இதனை இன்னமும் விளம்பிடும் வண்ணமாக அமைந்து விட்டதொரு ஹதீதைப் பாருங்களேன்.

நாயகத் தோழர்களில் சிலர் ஓரிடத்தில் ஒன் றிணைந்து இருந்து உரையாடிக் கொண்டிருக்கிறார்கள்

ஒரு தோழர் சொன்னார் —

''இப்றாஹீம் நபி (அலை) அவர்களை வல்ல அல்லாஹ் தனது கலீலாவாக ஒப்புக்கொண்டுள்ளான்''

மற்றவர் சொன்னார்—

''மூஸாநபி (அலை) அவர்களிடம் வல்ல அல்லாஹ் உரையாடினான்''

மூன்றாமவர் சொன்னார்

''ஈசாநபி (அலை) அவர்கள் அல்லாஹ்வின் திருவாக்காகவும் அவனது ரூஹாகவும் இருக்கின்றார்கள்''

நான்காமவர் சொன்னார்.

''ஆதம்நபி (அலை) அவர்களை வல்ல அல்லாஹ் தேர்ந்தெடுத்துக் கொண்டான்''

தோழர்களின் இந்த உரையாடலைச் செவிமடுத்துக் கொண்டே ஆங்கு வந்த நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள்-

''தோழர்காள்! நான் உங்களுடைய உரையாடலைச் செவிமடுத்து உங்களின் அறிவாற்றலை அறிந்து கொண்டேன். அல்ஹம்து லில்லாஹ்.

இப்றாஹிம் அவர்களை கலீலாக ஒப்புக் கொண்டது உண்மைதான். மூஸா, ஈசா, ஆதம் ஆகிய நபிமார்களைப் பற்றி நீங்கள் பேசிக்கொண்டது யதார்த்தம்தான். ஆனால் நான் அல்லாஹ்வின் ஹபீபாக உள்ளேன்.

என்னை விடச் சிறப்பு மற்ற எவருக்கும் இல்லை.

கியாமத்துநாளில் ஆதம்நபி முதற்கொண்டு மற்றெல்லா நபிமார்களுக்குமே நிழல் தந்திட வல்ல 'லிவாவுல் ஹம்து' எனும் கொடியைப் பிடிப்பவன் நானே.

என்னைவிடச் சிறப்பு மற்றெவருக்கும் இல்லை.

கியாமத்து நாளில் ஆரம்பமாக பரிந்துரை (ஷஃபாஅத்) செய்பவன் நானே. ஆரம்பமாக சிபாரிஷ் ஒப்புக்கொள்ளப் படுபவனும் நானே.

என்னைவிடச் சிறப்பு மற்றெவருக்கும் இல்லை.

சொர்க்கத்துத் தலைவாசலின் வளையத்தைப் பிடித்து ஆட்டுபவன் நானே. அப்போது அல்லாஹ் சொர்க்கத்தை திறந்து விடுவான். அதனுள் என்னையும் முஹாஜிரீன்களாகிய விசுவாசிகளையும் ஆரம்பமாக நுழைந்திடச் செய்வான்.

என்னை விடச் சிறப்பு மற்றெவருக்கும் இல்லை.

நான் வல்ல அல்லாஹ்வின் சன்னிதானத்தில் முன்பின் உள்ள அனைவரது ஆதரவையும் பெற்றவன்.

என்னைவிடச் சிறந்தவர் மற்றெவரும் இல்லை

என நபிகளார் நவின்றதாக ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

நாளை நடக்கவிருக்கும் இந்த திடுக்கத்தையும், அந்த திடுக்கத்தின் விடுதலைக்கு துணை புரியும் நபிகளாரின் பெரிய மனதினையும் தான் கவிக்குரிசில் இமாம் பூசிரி (ரஹ்) அவர்கள்-

-தீண்டும் திடுக்கம்,

துன்பமெல்லாம் தீர அவர் துணையொன்றே அரு மருந்தாமே! எனச் சுட்டிக் காட்டுகின்றார்.

அங்ஙனம் சுட்டிக்காட்டி 'இத்தகு மேன்மைமிகு அன்பாளரை - துன்பம் துடைக்கும் துணிவுடை வீரரை கிடைக்கப்பெற்றும் பின்பற்றாது வழிதவறி வாழுகின்றேனே'' என அங்கலாய்க்கின்றார்.

دَعَا إِلَى اللهِ فَالْمُسْتَمْسِكُونَ بِهِ

(٣٧) مُسْتَمْسِكُونَ بِحَبْلٍ غَيْرِ مُنْفَصِمِ

**தஆ இலல்லாஹி ஃபல் முஸ்தம்ஸி**

**- கூன பிஹி**

**முஸ்தம்ஸிகூன பிஹப்லின் ஙைரி**

**- முன்ஃபஸிமி**

அப்பெருந்தகை (அடியார் அனைவரையும்) அல்லாஹ்வின் (மார்க்கத்தின்) பால் அழைத்தார்கள். அவர்களை விடாப் பிடியாகப் பற்றிப் பிடித்தவர்களே அறாக் கயிற்றை பிடித்த வராவர்.

இதனை

அடியாரை அல்லாஹ்பால் அழைத்தார் அவரைவலுப்
பிடியாய்ப்பிடித்தவர்கள் பிடித்தார் அறாக்கயிறே

என மறைக்காயர் பாடிமகிழ்கின்றார்.

வி-ரை : அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்களுக்கு நாற்பதாவது வயதில் கி. பி. 10-8-610-ம் ஆண்டு ரமலான் பிறை-27-ம் இரவு திங்கட் கிழமையன்று 'ஹிரா' மலைக் குகைதனில் வைத்து தீர்க்கதரிசனம் அருளப்பட்டது.

ஆனால் தீர்க்கதரிசனம் வழங்கப்பட்ட ஆரம்ப நாட்களில் அண்ணல் அவர்களுக்கு ஒன்றுமே புலப்படவில்லை.

கால் பூமியில் பதிந்தும், தலை வானத்தை முட்டியும் இருக்கும் வண்ணம் தன்னிடம் வருகை தந்த அந்த மகாப் பெரிய உருவத்தை உடையவர் யார்? அவர் தனக்கு ஓதிக் காண்பித்த வசனங்களின் தன்மை யாது? தனக்கு இப்படியொரு காட்சி அடிக்கடி தோன்றுவதன் மர்மம் என்ன? என்பதற்கெல்லாம் விடை கிடைக்கவில்லை.

இன்னும் சொல்லப்போனால் அண்ணல் அவர்கள் இந்தக் காட்சிகளைக் கண்டு தீங்கு செய்யும் ஜின்னுகளினால் தனக்கு ஏதோ பெரியதொரு அபாயம் ஏற்படுவதாகவே கூட உணர்ந்தார்கள்.

ஆனாலும் அனுபவசாலியான தனது வாழ்க்கைத் துணை நல்லார் கதீஜா (ரலி-அன்ஹா) பிராட்டியாரின் அன்பணைப்பாலும் 'வரகதிப்னு நவ்ஃபல்' எனும் மூதறிஞரின் மூதுரைகளாலும் அவ்வப்போது ஆறுதலும் தேறுதலும் அடைந்து வந்தார்கள் அண்ணலார். எனினும் ஏறக்குறைய மூன்றாண்டு காலம்வரை அந்தக் குழப்பநிலை நீடித்து கொண்டுதான் இருந்தது.

'தீர்க்க தரிசனம்' அருளப்பட்டு மூன்றாண்டுகள் சென்றபின் மீண்டும் ஒருநாள் அந்த மகாப் பெரிய உருவம், வானத்திற்கும் பூமிக்கும் இடைப்பட்ட அந்தரத்தில் பிரமாண்டமானதொரு ஆசனத்தில் அமர்ந்த நிலையில் தோன்றிடக் கண்டு, கலக்கமும் மிகக்கொண்டு, வீட்டிற்கு ஓடோடிச் சென்று, உடல் உதற, உதடுகள் பதற "போர்த்திவிடும் போர்த்திவிடும்" எனக் கூறியவாறே முழுமையாகப் போர்த்திக் கொண்டு முடங்கி படுத்துக் கொண்ட முஹம்மத் (ஸல்-அம்) அவர்களை;

(வஹி அறிவிப்பின் அதிர்ச்சியால்) போர்த்தியிருப்பவரே! (-பூமான் நபியே)! நீர் எழும்! (மனிதர்களுக்கு) அச்சமூட்டி எச்சரிக்கை செய்யும்! உமதிறைவனைப் பெருமைப்படுத்தும்! உமது ஆடைகளைத் தூய்மையாக வைத்துக் கொள்ளும்! அசுத்தங்களை வெறுத்து விடும்! (நீர் கொடுப்பதை விட) அதிகமாக கருதி (எவருக்கும் நன்றி செய்யாதீர். உமது இறைவனுக்காக (கஷ்டங்களை) நீர் பொறுத்திரும் குர் : 74:1-7

என்ற வேதக்கட்டளைகள் தட்டி எழுப்பியது.

மூன்றாண்டு இடைவெளிகளுக்குப் பின் வெளிப்பட்ட இரண்டாவது வேதவெளிப்பாடு இவைதான்.

இந்தக் கட்டளைச் சொற்கள் காமில் நபியுல்லாவின் கலக்கத்தையும் குழப்பத்தையும் முழுசாகப் போக்கியது. 'தனது கண் முன் தோன்றும் அந்த மகாப்பெரிய உருவம் ஜின்னு, அல்லது ஷைத்தானின் பயமுறுத்தலுமல்ல. சிலர் கருதுவதைப் போல தனக்கு சித்தப்பிரமையுமல்ல. மூதறிஞர் வரகாகவும், கதீஜாபிராட்டியும் முன்பு சொல்லி வந்ததைப் போல தனக்கு 'தீர்க்க தரிசனம்' தான் வழங்கப்பட்டுள்ளது'' என்ற தெளிவும் புதுவகைத் தெம்பும் திராணியும் ஏற்பட்டது.

ஆகவே அதன்பின் அண்ணலார், அறியாமை- கல்லாமை-இல்லாமைகளை எதிர்த்து தொடர்ந்து பிரச்சாரம் செய்யத் தொடங்கினார்கள்.

## அரசர்களுக்கு அன்பழைப்பு

'அன்பழைப்பு' எனும் அண்ணல் அவர்களின் அந்த சீர்திருத்தப் பிரச்சாரம், ஆரம்ப நாட்களில் மக்காவிற்குள்ளும் அதன்பின் சுற்று வட்டாரங்களிலும் பரவி ''ஹிஜ்ரத்'' திற்குப் பின் ஹிஜாஸ் மாநில முழுவதுமாக விரிந்து ஹிஜ்ரி 6-ஆம் ஆண்டு (கி. பி. 628 பிப்ரவரி) மக்கா காபிர்களுக்கும் அண்ணல் அவர்களுக்கும் ஏற்பட்ட 'ஹுதைபிய்யா' உடன் படிக்கையின் பயனாக அந்த அன்பழைப்பு கடல் கடந்த நாடுகளிலும் எதிரொலிக்கத் தொடங்கியது.

அக்காலை தன்னேரில்லாப் பேரரசாகத் திகழ்ந்த ரோமாபுரியின் பேரரசர் 'ஹிரகல்' (Heraclius) அவர்களுக்கும்.

பாரசீகப் பேரரசர் கிஸ்ரு (Cbosroes Ebarwz) அவர்களுக்கும்.

'மிஸ்ரு' என்று அன்று வழங்கப்பட்ட எகிப்துப் பேரரசின் ஏந்தல் 'மகூகிஸ்' (Rakchios) துரைகளுக்கும் என்று,

அனைத்து நாட்டு அதிபதிகளுக்கும் அனாதை முஹம்மதுவின் நேர்முக அழைப்பு எட்டி அந்த அதிபதிகளையெல்லாம் நிலைகுலையச் செய்துதது.

## ஜவஹர்லால் நேருவின் பாராட்டு

மறைந்த நமது பாரதப் பிரதமர், நேரு அவர்கள் முஹம்மது (ஸல்) அவர்களின் இந்தத் துணிவான நடவடிக்கையினைப் பற்றி குறிப்பிடுகையில்—

''அனாதையாகவும் மிகச் சாதாரணமானவராகவும் வாழ்ந்த முஹம்மத் தனது கொள்கை தான் சிறந்தவை எனவும் அதை ஏற்றுக் கொண்டு வாழ்வதில்தான் சிறப்பு இருக்கின்றதெனவும், வலியுறுத்தி பெரு நாட்டு அதிபதிகளுக்கெல்லாம் நேர்முக அழைப்பு விடுத்ததானது வேறு எவராலும் செய்ய முடியாத மிகத் துணிவான நடவடிக்கையாகும்''

-என்று கோடிட்டுக் காட்டுகின்றார்.

## பேரறிஞர் அண்ணாவின் பாராட்டு

''காட்டு மிராண்டிக் காலமான அந்தக் காலத்திலே - 1400 ஆண்டுகளுக்கு முன்னே - நபிகள் நாயகம் அவர்கள் தன்னந்தனியாக அக்காலத்து மக்கள் வணங்கிய தெய்வங்கள் பொய்யானவை என்றும், அவர்கள் வழிபட்ட கோயில் இறைவனின் உண்மையான உறைவிடமல்ல என்றும்,

எடுத்துக் கூறித் திருத்தினார்கள் என்றால், அதற்காகவாவது சுயமரியாதைக்காரர்கள் அவரை 'மகான்' என்று கொண்டாடுவார்கள். அக்கால மக்கள் ஈடுபட்டிருந்த வேறுபாடுகளை எல்லாம் இடித்துரைக்க எவ்வளவோ நெஞ்சுரம் வேண்டும். நபிகள் நாயகத்தின் நெஞ்சுரம் இறுதி வரையிலே கொஞ்சமும் மாறாத தாய் இருந்தது. அது மாத்திரமல்ல அந்த நெஞ்சுரத்தை இஸ்லாமியருடைய பரம்பரைச் சொத்தாகவும் அவர்கள் விட்டுச் சென்றிருக்கிறார்கள்'' என்று பேரறிஞர் அண்ணா குறிப்பிடுகின்றார்.

ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்குப் பின்னும் மாற்றாரும் பாராட்டுமளவு எக்கு போன்ற நெஞ்சுரத்தோடு, சமுதாயக் கேடுபாடுகளை இடித்துரைத்து, சத்திய நெறியின் பால் மக்களை ஈர்த்த அண்ணலாரின் அன்பழைப்பு, அப்பெருந்தகையின் ஜீவிய காலத்திலேயே அங்கிங்கெனாதபடி அகிலமனைத்திலுமே எதிரொலித்து நின்றது என்பதை சமீபகால நிகழ்ச்சிகள் எண்பித்துக் காட்டுவனவாக அமைந்துள்ளது.

## தமிழகத்தில் 1500 ஆண்டுகளுக்கு முன்பே இஸ்லாம்

அண்ணலாரின் காலத்திலேயே இஸ்லாமிய மார்க்கம் நமது பாரதத் திரு நாட்டிற்குள் வந்து வேரூன்றத் தொடங்கி விட்டது என அன்றிருந்தே சொல்லி வருகின்றோம் நாம்.

ஆனால்;

வடபுலத்தில், இஸ்லாமியரின் ஆட்சி மாட்சி பெற்ற பிறகு தான் கி. பி. 1311-ம் ஆண்டு வாக்கில், அதாவது

அண்ணல் நபியுல்லா அவர்கள் இவ்வுலகை நீத்து ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகளுக்குப் பின்புதான் இந்தியத் துணைக் கண்டத்தில் இஸ்லாம் நுழையத் தொடங்கியது என வரலாறுகள் எனப்படும் கட்டுரைகள் நம்மின் உண்மை வாதங்களை மறுத்துரைத்து வந்தன இதுகாறும்.

அன்றி,

நபிகளாரின் காலத்திலேயே சேரமான் பெருமாள் அவர்கள் முடிதுறந்து, முக்திபெறும் நோக்கோடு மக்கா புறத்திற்குப் புறப்பட்டு விட்டார்கள் என்ற உண்மைச் சம்பவத்தைக் கூட மூடிமறைக்க முயன்று வந்தன அந்த வரலாறு எனும் வெற்றுரைகள்.

## திருச்சி மெயின்கார்ட் கேட்டில் அதிசயக் கல்வெட்டு

ஆனால் சமீப காலத்தில் திருச்சியில் கண்டு பிடிக்கப் பட்ட 'கல்வெட்டு' ஒன்று, நாம் கூறி வந்த வரலாறுகளை உண்மைப்படுத்துவதாகவும் நாட்டு வரலாறுகளை வெறும் வெற்றுரைகள் என நிரூபிப்பதாகவும் அமைந்துள்ளது.

திருச்சி மெயின்கார்ட்கேட்டிலிருந்து உறையூருக்குச் செல்லும் பாதையில்-மேம்பாலத்திற்கு அருகில்-கோட்டை ரயில் நிலையத்திற்கு எதிரே 'ஹோலி கிராஸ்' கல்லூரிக்குப் பின் புறத்தில் ஒரு சிறிய இடிபாடுகளுடன் கூடிய கல்மண்டபம் போன்ற பள்ளி ஒன்று இருக்கின்றது. அந்தப் பள்ளியில் சமீக காலத்தில் கல்வெட்டுத் துறையினர் ஆய்வு நடத்தினர்

அப்போது—

அந்தப் பள்ளியினுள் மிஹ்ராபிற்கு மேலே ஒற்றைத் தனிப்பெறும் கல்லிலான கல்வெட்டு ஒன்று கண்டு பிடிக்கப் பட்டுள்ளது. அதில் கி. பி. 7-ம் நூற்றாண்டின் அராபி லிபியில்;

லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி

-எனும் தவ்ஹீதின் மூலமந்திரம் பொறிக்கப்பட்டுள்ளது. அன்றி, அக்கல் வெட்டின் மேல் பகுதியின் வலப் புறத்தில் நான்கு கலீபாக்களுடைய திரு நாமங்களும், இடப் புறத்தில் அந்தப் பள்ளி கட்டி முடிக்கப்பட்ட ஆண்டு ஹிஜ்ரி 116-எனவும் அதைக் கட்டியவர் பெயர் 'அப்துல்லாஹிப்னு முஹம்மது அன்வர்' (ஜனாப் முஹம்மது அன்வரின் குமாரர் அப்துல்லா) எனவும் குறிப்பிடப் பட்டுள்ளது.

'இந்தியாவில் இஸ்லாமியர்களின் ஆளுகை ஏற்பட்ட பிறகுதான் இஸ்லாமியம் இங்கே வரத் தொடங்கியது' எனக்கூறி நிற்கும் வரலாற்று வல்லுனர்களுக்கு நாம் இங்கே ஒன்றே ஒன்றை மட்டும் சுட்டிக்காட்டக் கடமைப்பட் டுள்ளோம்.

நமது நபிகளார் (ஸல்) அவர்களின் மரணம் ஹிஜ்ரி 22-ம் ஆண்டு. இங்கே, திருச்சியில் கல்லுப்பள்ளி கட்டப் பட்டது ஹிஜ்ரி 116-ம் ஆண்டு. இரண்டிற்கும் இடைப் பட்ட ஆண்டுகள் 94 வருடங்கள்தான்.

இந்த 94 வருடங்களில் தென்னகத்தின் நடுநாயக மான திருச்சி நகரில் இஸ்லாமியத்தின் இரண்டாம் தலைமுறையினர் பள்ளி கட்டிட வேண்டிய அளவு பலுகிப் பெருகி வாழ்ந்திருக்கின்றார்கள் என்பதைத் தானே அந்தக் கல்வெட்டு காட்டுகின்றது. அப்படியென்றால் நபி களாரின் ஜீவிய காலத்திலேயே திருச்சியில் இஸ்லாமியர்

கள் இருந்துள்ளார்கள் என்பதை எவர்தான் மறுக்க முடியும்?

சுருங்கக் கூறின், எவ்வளவு பெரிய வல்லுனரும் நபிகளார் (ஸல்) அவர்களின் ஜீவிய காலத்திலேயே- அதாவது கி. பி. 6-ம் நூற்றாண்டின் ஆரம்பத்திலேயே - இந்தியாவில் இஸ்லாமியம் வந்து வேரூன்றவும் தொடங்கி விட்டது என்ற பேருண்மையினை இனியும் மூடிமறைக்க முடியாது.

அதுபோல அங்கிங்கெனாதபடி அகிலமனைத்திலுமே அண்ணலார் வாழ்ந்து கொண்டிருந்த 6-ம் நூற்றாண்டின் தொடக்க காலத்திலேயே இஸ்லாமியம் பரவி, செழுமையிரென படரத் தொடங்கி விட்டது, 'அண்ணல் அவர்கள் அகிலத்தின் வழிகாட்டி, என்பதன் பொருளும் அதுதான் என்பதை 'இன்ஷா அல்லாஹ்' காலப்போக்கில் இந்த உலகம் ஒப்புக்கொண்டே தீரும்.

இந்த வரலாற்றுப் பேருண்மையினைத்தான் இமாம் பூசிரி அவர்கள் தமது காவியமாம் புர்தா ஷரீஃபின் இந்த 37-ஆம் கண்ணியின் முதல் ஈற்றில்...

"அடியாரை அல்லாஹ்பால் அழைத்தார்" என்று சொல்லிக் காண்பிக்கிறார்.

"அல்லாஹ்வின் சன்னிதானத்தில் அங்கீகரிக்கப்பட்ட மார்க்கம் இஸ்லாமியம் ஒன்றே" எனும் வேத வசனத்தின் விளக்கவுரையாக,

"அவரை வலுப்பிடியாகப் பிடித்தவர்கள் பிடித்தார் அறாக்கயிறே" எனும் 37-ஆம் கண்ணியின் இரண்டாம் ற்று அமைந்துள்ளது. எப்படி என்கின்றீர்களா?"

"அனைவரும் அல்லாஹ்வின் கயிற்றைப் பற்றிப் பிடித்திடக்கடவீர்" என்ற வேத வசனத்தில் 'அல்லாஹ் வின் கயிறு, என்பதற்கு மிகப் பெரும்பாலான விரிவுரை யாளர்கள் 'இஸ்லாமிய மார்க்கம்' எனப் பொருள் கூறி உள்ளனர்.

அன்றி இஸ்லாமிய மார்க்கம் கியாமத்தின் நிரந்தர வாழ்க்கைக்கும் இணைப்புப் பலமாகத் திகழ்கின்றது. இந்த அடிப்படையினை வைத்துத்தான் அம் மார்க்கத்தை 'அறாக்கயிறு' என வர்ணித்துக் கூறி, அதன் மூலம் அண்ணலாரின் அடியொற்றி வாழ்ந்தால்தான் அறாக்கயிறு போன்ற இஸ்லாமியத்தின் இன்பத்தினை நுகர முடியும் என அறிவுறுத்திக் காட்டுகின்றார் இமாம் பூசிரி.

ஆகவேதான் கூறினேன் : இந்த இரண்டாம் ஈற்று "அல்லாஹ்வின் சன்னிதானத்தில் அங்கீகாரம் பெற்ற மார்க்கம் இஸ்லாமியம் ஒன்றே" என்ற வேதத்தின் விளக்க வுரையாக அமைந்து உள்ளது என்று. புரிந்திருக்குமே...

அன்றி

"இம்மைக்கும் அம்மைக்கும் இணைப்புப் பாலமாகத் திகழும் எம்மானின் அடியொற்றி வாழாது பாழாகின் றோமே" என இமாம் அவர்கள் அங்கலாய்ப்பதாகவும் கொள்ள இடமுண்டு.

فَاقَ النَّبِيِّينَ فِي خَلْقٍ وَفِي خُلُقٍ
فَلَمْ يُسَاوُوهُ فِي عِلْمٍ وَلَا كَرَمِ (٣٨)

ஃபாகந்நபிய்யீனஃபீ கல்கின்
- வஃபீ குலுகின்
ஃபலம்யுசாவூஹுஃபீ இல்மின்(வ்)
- வலா கரமின்

நந் நபிகளார் (ஸல் -அம்) அவர்கள் உருவ அமைப்பாலும், நற்குணத்தாலும் மற்ற நபிமார்கள் அனைவரையும் மிகைத்து நிற்கின்றார்கள்.

அறிவு, மேன்மை ஆகியவற்றிலும் மற்ற நபிமார்களால் அண்ணல் நபிநாதரை நெருங்கிடக்கூட முடியவில்லை.

இதனை -

நல்லுருவினால்குணத்தால் நபிமார்க்
- குயரும்அவர்
சொல்லறிவைமேன்மையினைத் தொடநபிமார்க்
- கிட்டவில்லை

என இயம்புகின்றார் மறைக்காயர்.

(வி-ரை) அண்ணலாரின் சிறப்பியல்புகளை சரம் தொடுத்துக் காண்பித்து நம்மையெல்லாம் ஆனந்த சாகரத்தில் மூழ்கித் தவிக்கச் செய்த நமது புலவர் பெருமான் அவர்கள், இந்த 38-ம் கண்ணியிலிருந்து மற்ற நபிமார்களுக்கும் நமது அண்ணலார் அவர்களுக்கும் இடையே ஒப்புநோக்கிக் காண்பித்து பரிணமிக்கின்றார்.

மல்லிகையும் முல்லையும் மகிழம்பூ வாடையின் முன் பரிணாமம் கொள்கின்றது.

தும்பை மலரின் தூய வெண்மை, வெண்மை நிறத்திற்கே இலக்கணம் வகுத்துக் காட்டுகின்றது.

விண்ணில் மின்னும் விண்மீன்களில் பல, முழு நிலவைக்கான அளவிலும் அமைப்பிலும் பெரியதாக இருந்தும்கூட அந்த முழு நிலவின் பேரொளியின் முன் அவை மயங்கியும் மறைந்தும் காணப்படுகின்றது

அதுபோல அண்ணல் நபியுல்லா அவர்களின் முன் மற்ற நபியுல்லாக்கள் அனைவரும், முழு நிலவின் பேரொளியில் கரைந்து விடும் விண்மீன்களைப் போன்று இருக்கின்றனர். என்கிறார் கற்பனை வளமிக்க பூசிரி.

'அந்தத் தீர்க்கதரிசிகள், அவர்களில் சிலர் சிலரைக் காண மேம்பாடு உடையவர்களாக ஆக்கியுள்ளோம்''

என்று

இறைவன் கூறி இருப்பதால், நபிமார்களிடையே ஒப்பு நோக்கி உயர்வு காண்பது, கூடாத ஒன்றல்ல. ஆகவே பூசிரி அவர்களின் இந்த ஒப்பு நோக்குப் படலத்தை நம்மால் ருசித்து ரசிக்க முடியும்.

பூசிரி அவர்கள் ஒப்பு நோக்குவதற்குக் கருப்பொருளாக எடுத்துக் கொண்டவை உருவ அமைப்பு, அருங்குணச் சிறப்பு, அறிவுத்திறன், அன்புப் பெருக்கு ஆகிய நான்காம்.

ஆதலால் அவை ஒவ்வொன்றையும் நாம் தனித்தனியாக ஒப்பு நோக்கி ஆய்வோமே!

## உருவ அமைப்பு

''நான் அல்லாஹ்வின் ஒளியில் நின்றும் படைக்கப்பட்டவன். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் அனைத்தும் என்னில் நின்றுமுள்ள ஒளியால் படைக்கப்பட்டவை''

- என நபியுல்லா அவர்கள் தம் படைப்பின் ரகசியத்தைக் கூறியுள்ளார்கள்.

இதிலிருந்து மற்ற நபிமார்கள் அனைவருக்கும் அமைந்திருந்த உருவ அழகு, அண்ணலாரின் உருவ அழகில் நின்றும் சிதறிய, சிறு துளிகள்தான். என நம்மால் உணர முடிகின்றது.

அன்றி, ஜாபிர் (ரலி-அன்ஹு) என்ற நெருங்கிய நாயகத் தோழர் கூறுகின்றார்—

'ஒரு நாள் இரவு' அன்று. பூரணச் சந்திரன் தனது முழு ஒளியினையும் அள்ளிப் பொழிந்து கொண்டிருந்தது. அந்நேரம் நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் அமர்ந்திருந்தார்கள். அவர்களின் அருகில் இருந்த நான், விண்ணில் காயும் அந்த முழு நில்வையும், மண்ணில் பாயும் அண்ணல் அவர்களின் முக அழகினையும் மாறி மாறிப் பார்த்தேன். அப்போது அண்ணலாரின் அந்த முக அழகு விண்ணின் முழு மதியை மங்கச் செய்வதாகவும் மழுங்கச் செய்வதாகவும் அமைந்திருக்கக் கண்டேன்''

ஆகவே, உருவ அழகில் அண்ணல் அவர்கள் அனைத்து நபிமார்களையும் மிகைத்து இருந்தார்கள் என்பது மறுக்க வொண்ணா உண்மையாகும்.

## அருங்குணச் சிறப்பு

அடுத்து, அருங்குணச் சிறப்புகளை எடுத்துக் கொண்டால், மற்ற நபிமார்கள் ஒவ்வொரு வரும் ஒரு சில குண நலன்களில்தான் குன்றாகத் திகழ்ந்திருப்பதைக் காண முடிகின்றது.

யூசுப் நபி (அலை) அவர்கள் அன்பு, பாசம், அறிவுக் கூர்மை போன்ற நற்பண்புகளை நிறையப் பெற்றிருந்தும்

த்வ்ரது தந்தை யாகூப் (அலை) அவர்கள் நீண்ட பல காலங்களுக்குப் பின் தமது மகனைப் பார்க்க எகிப்து நாட்டின் அரசவைக்கு வருகை தந்தபோது, அவரை எழுந்து சென்று வரவேற்று உபசரிக்கத் தவறி விட்டார்கள்.

வேதம் பெற்று வர தூர்சீனா சென்று திரும்பிய நபி மூஸா அலை) புதிய குழப்பம் ஏற்பட்டு இருப்பதை அறிந்து அதிர்ந்து, அதற்காக அவர், தன்னுடன் தோளோடு தோள் உராய்ந்து நின்று சமுதாயத் தொண்டு செய்து வாழ்ந்த ஹாரூன் (அலை) அவர்களைக் கடுமையாகக் கண்டித்ததன் மூலம் எதையும் தாங்கும் இதயமில்லாதவராக தன்னைக் காட்டிக் கொண்டார்.

நமது பாவா ஆதம் (அலை) அவர்களுக்கு ஏற்பட்ட மறதியின் காரணமாக சொர்க்க வாழ்வையே துறக்க வேண்டியதேற்பட்டு விட்டது.

இப்படியாக, ஒவ்வொரு நபிமார்களும் ஒவ்வொரு வகை சருகுதல் உடையவர்களாகவே நம்மால் காண முடிகின்றது.

ஆனால் அன்றும், இன்றும், இனி என்றும் எப்போதும், எவ்வகையிலும் அணுவளவு சருகுதல் கூட இல்லாத அருங்குணங்களுக்கு இலக்கணமாக காட்சி தருகின்றார்கள் நமது காமில் நபியுல்லா முஹம்மது (ஸல்-அம்) அவர்கள்.

இதனைத்தான் இமாம் பூசிரி அவர்கள்; இந்த 38-ம் கண்ணியின் முதல் ஈற்றில்.

''உருவ அமைப்பினால் அருங்குணச் சிறப்பினால் நபிமார்க்கு உயரும் அவர்...'' எனச் சித்தரித்துக் காட்டுகின்றார்.

# அறிவுத்திறன்

அறிவுத்திறன் என்றவுடன் 'நமது அண்ணல் அவர்கள் தான் உம்மி நபி ஆயிற்றே. அப்படியிருக்க அப்பெருந்தகைக்கு 'அறிவுத்திறன்' எனும் அணிகலன் எங்கனம் பொருந்தும்? எனச் சிலர் கேட்டிடக்கூடும்.

ஆனால், அங்கனம் எண்ணுவதும் கேட்பதும் கிள்ளி எறியப்பட வேண்டிய ஒன்றாகும்.

ஏனெனில் 'உம்மிநபி' என்பதற்கு, எழுது கோல் பிடித்து எழுதவும் ஏட்டில் உள்ளவைகளைப் படிக்கவும் கற்றறியாதவர். என்பதுதான் பொருளே தவிர 'அறிவு சூன்யம்' என்பது பொருளல்ல.

அன்றி, அறிவுத்திறன் என்றால் அதில் ஆயிரம் வகையுண்டே! அவைகளில் எந்த வகை அறிவு என்பதனையும் தெரிந்தாக வேண்டும்.

இங்கே நாம் எடுத்துக் கொள்வது அந்த ஆயிரம் அறிவுத் திறன்களையும் உள்ளடக்கியுள்ள மூல அறிவாகிய இறைவனைப் பற்றிய அறிவைத்தான்.

ஏனெனில் 'அறிவு' என்றால், அது இறைவனைப் பற்றிய அறிவைத்தான் குறிக்கும்' என அறிவுக் கடலாம் கஸ்ஸாலி (ரஹ்-அன்ஹு) போன்ற தத்துவ வித்தகர்கள் பலர் அறுதியிட்டுக் கூறியுள்ளனர்,

ஆகவே 'இறைவனைப் பற்றிய அறிவு' என்ற கண்ணோட்டத்தில் இங்கே நாம் தொடர்வோம்.

இறைவனைப்பற்றிய அறிவு என்றவுடன் அது; இல்முல் யகீன், ஐனுல் யகீன், ஹக்குல் யகீன், ஹகீகத்துல் யகீன்

என நான்கு வகைகளாக வகைப் படுத்தப்பட்டுள்ளதை இங்கு எடுத்து விளக்கிக் காண்பிப்பது அவசியமாகின்றது.

## இல்முல் யகீன்

'இல்முல் யகீன்' என்றால் நம்மைப் போன்ற சாமான்யர்கள் இறைவனைப் பற்றி அறிந்து வைத்துள்ளோமே அதற்குத் பெயர். என்று மொட்டையாகக் கூறிக் காண்பிப்பதைவிட, ஒரு உவமையின் மூலம் கூறினால் சுவையாக இருக்கும்.

சென்ற சில ஆண்டுகளுக்கு முன் அமெரிக்கர் ஒருவர் விண்கலத்தின் துணை கொண்டு விண்வெளி சென்று நிலா வில் உலாவந்த வியப்புமிகு செய்தியை நம்மில் பலர் கண்டும் கேட்டும் அறிந்திருக்கின்றோமே; ஞாபகம் இருக்கின்றதா?

அப்படி அவர் விண்வெளி சென்றதைப் பற்றி ஏடுகளில் படித்தும் சொல்லக் கேட்டும் தான், நம்மில் பலர் அதை அறிவோம்; அல்லவா?

அதுபோல; வேதங்களைப் படித்தும், திருத் தூதர்கள் மூலம் சொல்லக் கேட்டும் இறைவனை அறிந்து கொள்ளும் ஞானத்திற்கு "இல்முல் யகீன்" எனச் சொல்லப்படுகின்றது.

## ஐனுல் யகீன்

நம்மில் வசதி படைத்த வேறு சிலர், அமெரிக்கர் விண்வெளி சென்ற அந்த விந்தை மிக்கக் காட்சியை, டெலிவிஷன் மூலமும், நிழற் படங்கள் மூலமும் பார்த்து அதை அறிந்து தெளிந்துள்ளார்கள். இவர்கள், ஏடுகளைப் படித்து, படித்தவர்கள் சொல்வதைக் கேட்டு மட்டும் அறிந்துள்ள சாமானியர்களான நம்மை விட அந்த ஞானத்தில் கொஞ்சம் தெளிவுடையவர்கள். அப்படித்தானே?

அதுபோல கனவின் மூலம் இறை தரிசனம் கிடைக்கப் பெற்றும், ஆன்மீக உதிப்புகளின் மூலம் இறை உணர்வு கிடைக்கப் பெற்றும் இறைஞானம் அடைந்துள்ளார்களே அந்த ஞானவான்களின் இறை ஞானத்திற்குப் பெயர் 'ஐனுல் யகீன்' என சொல்ல முடியும். இத்தகு இறைஞானம் உள்ளவர்கள்தான் அவ்லியாக்கள் எனப்படும் இறை நேசர்கள்.

## ஹக்குல்யகீன்

அமெரிக்க நாட்டில் வாழும் பல லட்சம் மக்கள் விண்வெளி வீரர்களை சுமந்து கொண்டு உயரப் பறந்த விண் கலத்தை தங்களின் நிசக் கண்களால் கண்டு களித்தனர் அல்லவா? இவர்கள் இந்த ஞானத்தில் முந்திய இரு சாரா ரைப் பார்க்கிலும் எவ்வளவோ கூடுதல் ஞானம் படைத்தவர்கள்.

அதுபோல 'வஹீ' அறிவிப்பின் மூலம் இறை தரிசனம் கிடைக்கப் பெற்றும், முழுக்க முழுக்க உண்மைக் கனவின் வாயிலாக இறைவனின் அகம்மியத்தை உணர்ந்தும் இறை ஞானம் பெற்றுள்ளார்களே, அவர்களின் இறை ஞானத்திற்கு ''ஹக்குல் யகீன்'' எனப்படுகின்றது. இத்தகு ஞானம் உள்ளவர்கள் 'அன்பியாக்கள்' எனும் தீர்க்க தரிசிகளாகும்.

நான்கு வகை இறைஞானங்களில், மூன்றின் தன்மை பற்றி ஓரளவு விளக்கம் கிடைத்திருக்கும். அடுத்து நான்காம் வகை பற்றி நன்கு ஆய்வோம். ஏனெனில் கருப்பொருளே இந்த நான்காவதைப் பற்றியது தானே.

## ஹகீகத்துல் யகீன்

விண்கலத்தின் துணைக் கொண்டு விண்வெளி சென்று ஆங்கே நிலாவில் இறங்கி உலா வந்தார்களே விண்வெளி வீரர்கள், அவ் வீரர்களின் உணர்வுகளும், நிசக்கண்களால் நிலாவின் நிசக் காட்சியைக் கண்டு, நிசக்கால்களால் நிலாவின் தரைகளிலே நடந்து நிச உறுப்புகளால் நிலாவின் தன்மைகளை அனுபவித்தார்களே, அவர்களுக்கு அந்த விண்ணைப் பற்றியும், நிலாவினைப் பற்றியும் ஏற்பட்டுள்ள ஞானமும், தெளிவும் மற்ற மூன்று சாரார்களுக்கு கிடைக்கப்பெற்ற தெளிவைப் பார்க்கிலும் எவ்வளவோ பன்மடங்கு பெரிது. அல்லவா?

அதுபோல

அண்ட சராசரங்கள் அனைத்தையும் படைத்து
அவை நின்றுவிடாமல் விண்டுவிடாமல் பாதுகாத்து,
ஈவு இரக்கத்தோடு இரட்சித்தாளும் இறைவனை;
உற்ற துணையோ ஒப்புவமையோ ஏதுமற்ற ஏகனை
உறவு, உருவம், உறுப்புகள் எனும்
அனைத்து சார்புகளுக்கும் அப்பாற்பட்ட அருட்பெருஞ் ஜோதியான அல்லாஹ்வை-

தன் கண்களால் கண்டு, அவனின் உணர்வோடு உணர்வாக - எண்ணத்தோடு எண்ணமாக ஈகையோடு ஈகையாகக் கலந்து, அவனுடன் நேருக் நேராக உறவாடிய ஒருவரின் இறை ஞானத்தைப் பற்றி சொல்லவும் வேண்டுமா?

ஒப்புவமை அற்ற இத்தகு இறைஞானத்திற்கு 'ஹகீகத்துல் யகீன்' எனச் சொல்லப்பட்டுள்ளது.

உச்சகட்டமான இந்த அளவு இறைஞானம் உலகில் ஒரே ஒருவருக்குத்தான் அருட்கடாச்சமாக அருளப்பட்டிருந்தது. அந்த ஒரே ஒருவர்தான் அண்ணலெம் பெருமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள்!

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

இதனைக் குறிப்பிடும் முகத்தான் அறிஞர் பெருமகன் இமாம் பூசிரி அவர்கள்

அவர் - அறிவுத்திறனை நெருங்கிட நபிமாரால் முடிந்திட வில்லை என்று கூறுகிறார்

## அன்புப் பெருக்கு

கடைசியாக அன்புப் பெருக்கு!

தரங்கெட்ட தாயிப் நகர மக்களின் மீது தயை செய்து அவர்களை அழிவிலிருந்து பாதுகாத்த அண்ணலை-

தியாக மலர் ஹம்ஜா (ரலி) அவர்களை கொடுமையாகக் கொன்று குவித்த கடுமை உள்ளம் கொண்ட ஹிந்தாவை 'மறப்போம் - மன்னிப்போம்' என மன்னித்து விடுதலை கொடுத்து மனிதத் தன்மைக்கு இலக்கணம் வகுத்தளித்த வள்ளல் பெருமானை-

உண்மையினைப் போதித்த ஒரே குற்றத்திற்காக பிறந்த ஊரை விட்டே துறத்தியடித்த மக்கத்து தலைவர் அபூசுஃப்யானையும், அபூஜஹிலின் சந்ததிகளையும் மன்னித்ததோடு அவர்களுக்கு உரிய மரியாதைகளும் செய்து, மன்னிக்கும் மரபிற்கு உதாரண புருடராய்

விளங்கும் உத்தமர் அண்ணல் நபிமணி (ஸல் அம்) அவர்களை -

அன்புப் பெருக்கு உடையவர்கள் எனக் கூறியது ஏற்புடைய போற்றுதலேயாகும்.

ஆனால்,

மிஃராஜ் நிகழ்ச்சியின் போது அல்லாஹ்வின் சன்னதி முன் சென்றவுடன் ''உடல் வணக்கம், உடமை வணக்கம் மற்ற காணிக்கைகள் அனைத்தும் அல்லாஹ்வே! உனக்கே சொந்தம்'' என காணிக்கை செலுத்திய நேரத்தில்,

''நபியே! உமக்கே சாந்தி''

என அனைத்திற்கும் அதிபதியாம் அல்லாஹ் அண்ணலாருக்கு வெகுமதி கொடுத்ததை,

எனக்கு மட்டும் போதாது. என் உம்மத்தினர் அனைவருக்குமே உனது சாந்தி வேண்டும் என வேண்டிடும் வண்ணமாக-

''சாந்தி எனக்கும் நல்லடியார்கள் அனைவருக்கும் உண்டாகக் கடவது'' என வேண்டி வரம் பெற்றார்களே நம் அருமை அண்ணல்;

அந்த அன்பு பெருக்கிற்கு ஈடு இணை உண்டோ?

அன்றி, மறுமையில் அனைத்து நபிமார்களும் 'யா நஃப்ஸீ-யா நஃப்ஸீ' என்று தன்னை மாத்திரம் காப்பாற்றிக் கொள்ள அலைமோதிக் கொண்டிருக்கும்போது நமது அருமை அண்ணல் -

"யா உம்மதீ - யா உம்மதீ" என தன்னைப் பற்றி கவலை கொள்ளாமல், தனது குடும்பத்தைப் பற்றி கவனியாமல், சமுதாய மக்களுக்காக மன்றாடி நிற்பார்களே! அந்த அன்பு வெள்ளத்திற்கு ஒப்பேது? உவமைதான் ஏது?

இதனைத்தான் இமாம் பூசிரி அவர்கள் -

அவர்......அன்புப் பெருக்கினை நெருங்கிட நபிமாரால் முடிந்திடவில்லை. எனச் சொல்லிக் காட்டுகின்றார் சுப்ஹானல்லாஹ். பூசிரிப் பெருமகனார் பூமான் நபிகளாரின் அந்தரங்கத்தை எந்த அளவு ஆழமாகப் புரிந்து வைத்துள்ளார் பார்த்தீர்களா?

وَكُلُّهُمْ مِّنْ رَّسُولِ اللّٰهِ مُلْتَمِسٌ
غَرْفًا مِّنَ الْبَحْرِ اَوْ رَشْفًا مِّنَ الدِّيَمِ

**வ குல்லுஹும் மின்(ர்)ரஸூ லில்லாஹி**
**- முல்தமிஸுன்**
**ஙர்ஃபம் மினல் பஹ்ரி அவ் ரஷ்ஃபம்**
**- மினத்தியமி**

இன்னம், மற்றைய நபிமார்கள், அல்லாஹ்வின் திருத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களிடமிருந்து, ஒரு சிறங்கையளவு; அல்லது, விடா மழையின் ஒரு துளி அளவு சிறப்பைத் தான் பெற்றுச் சிறந்தனர்.

இதனை -

ஆர்கலிநீர்ஓர்சிறங்கை அதிமழைநீர் ஓர்துளிபோல
பேரறிவுநாதர்வழி பெற்றார் பிறந்தநபிமார்.

என மறைக்காயர் அழகுபடப் பாடுகின்றார்.

---

وَوَاقِفُونَ لَدَيْهِ عِنْدَ حَدِّهِمِ
مِنْ نُقْطَةِ الْعِلْمِ أَوْ مِنْ شَكْلَةِ الْحِكَمِ (٤٠)

**வவாகிஃபூன லதைஹி இன்த**
**- ஹத்திஹிமி**
**மின் நுக்ததில் இல்மி அவ்**
**- மின் ஷக்லதில் ஹிகமி**

எம்பெருமான் முன்னிலையில் மற்ற நபிமார்கள் அறிவின் ஒரு புள்ளி, அல்லது ஞானத்தின் நிழல் உருவம் போன்றே உள்ளனர்.

---

இதனை -

பெருமனார்முன்னிலையில், பிறர்அறிவின்
- ஓர் புள்ளி

**இரும்ஞானச்சிற்றுருவம் எனும்எல்லை நிற்பவரே!**
**என மறைக்காயர்.**

فَهُوَ الَّذِي تَمَّ مَعْنَاهُ وَصُورَتُهُ
ثُمَّ اصْطَفَاهُ حَبِيبًا بَارِئُ النَّسَمِ (٣١)

ஃபறுைவல்லதீதம்மமஃ னாறுைவ
- ஸூரத்துஹு
தும்மஸ்த:பாஹுைஹபீ பன்பாரி
- வுன்னஸமி

ஆதலால்; அண்ணலாரின் அகமும் புறமும் (அழகால்) சம்பூரணம் அடைந்தபின் தான் அன்னாரை அன்பராகத் தேர்ந்தெடுத்தான்; ஆதியந்தமில்லா அந்த நாயகன்.

இதனை -

ஆதலின் உள்ளும்புறமும் அவர் நிரப்பம்
- எய்தியப்பின்

நீதசிருட்டிகர்த்தா நேயர்எனத் தேர்ந்தெடுத்தான்
என மறைக்காயர் பாடியிருக்கின்றார்.

வி-ரை : உருவ அமைப்பில், ]உள்ளொளிச் சிறப்பில் அறிவுத் திறனில், ஆன்மீக நலனில் ஆக அனைத்துத் துறைகளிலும் உத்தமத் திரு நபி (ஸல்-அம்) அவர்கள் தேர் நிகரற்ற வண்ணம் தனித் தன்மை வாய்ந்தவர்கள் எனக் கூறி பெருமானார் புகழ்விரித்த இமாம் பூசிரி அவர்கள்.

முப்பத்தி ஒன்பதாம் கண்ணியில் -

மன்னர் நபியுல்லா முன் மாண்புமிகு மற்ற நபிமார்க ளெல்லாம் அறிவுப் பெருங்கடலில் சிறங்கை நீர்! விடாத அடைமழையின் ஒரு துளி நீர் எனவும்.

நாற்பதாவது கண்ணியில் -

மற்ற நபிமார்களின் அறிவுத் திறன் அனைத்தும் நல்வழி நாதர் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் அறிவு முன் அறிவுப் பேழையில் ஒரு புள்ளியைப் போன்றது. இமயத்தின் முன் எறும்பு போன்றது எனவும் சித்தரித்துக் காண்பித்தார். சிந்தை குளிர நாமும் அதனைச் சுவைத்தோம்.

இந்த நாற்பத்தி ஒன்றாம் கண்ணியில் —

அகமும், புறமும் சம்பூரணத் தன்மை வாய்ந்தவர்; எங்களின் ஏந்தல் என இரத்தினச் சுருக்கமாகக் காண்பித்து;

இரவின் இருளை ஓட்டும் குளிர்மா மதி நிரப்பம் உடையதன்று.

பகலின் வனப்பைக் கூட்டிக்காட்டும் கதிரவன் சம்பூரணத் தன்மை பெற்றதன்று.

இம்மையின் எழிலுக்கு ஏற்றத்திற்கு சான்றாகத் திகழும் சூரியனும், சந்திரனும் சம்பூரணம் பெற்றதல்ல என்றால் வையத்தில் வேறு எதனைத்தான் நிரப்பம் உடையதாகக் கருத முடியும்?

அதனை விடுத்து படைப்பினங்களில் தனித் தன்மை பெற்றுத் திகழும் மனித இனத்தை எடுத்துக்கொண்டாலும் அனைவரும் அனைத்திலும் சிறந்தவர் எனச் சொல்லுவதற்கில்லை. சிலர். சிலதில் சிறந்து விளங்குவர்; வேறு சிலர் மற்றதில் மலர்ந்து காணப்படுவர் என்பதுதான் இதுகாறும் நிகழ்ந்து வரும் பேருண்மையாகும்.

ஆனால் அகிலத்தின் அருட்கொடை வள்ளலான அண்ணல் அஹ்மது முஜ்தஃபா முஹம்மது முஸ்தபா (ஸல்-அம்) அவர்கள், அல்லவை அகற்றி, நல்லவை அனைத்தையும் பெற்றுத் திகழும் பேற்றினில் 'நிரப்பம்' அடைந்து விட்டார்கள். அப்பெருந்தகை அடையாத நல்லவை எதுவும் இல்லவே இல்லை, என உணர்த்திய பின் —

அங்ஙனம் அனைத்திலும் நிரப்பம் அடைந்தவர்களாக அண்ணல் நபியுல்லா திகழ்ந்ததால் தான், அப்பெருந்தகையை தன்னின் நேயராக- காத்திமுல் அன்பியாவாக இறைவன் தேர்வு செய்தான்- என கோடிட்டுக் காட்டுகின்றார்; கவிமணி பூசிரி (ரஹ்-அன்ஹு) அவர்கள்.

வள்ளல் திரு நபி (ஸல்-அம்) அவர்களைப் புரிந்தோ புரியாமலோ வஞ்சக கண்ணோட்டத்துடன் அணுகிய- அணுகிக் கொண்டிருக்கக் கூடிய வன்கணாளர்களுக்குப் பூசிரி (ரஹ்) அவர்களின் இந்த இடித்துரைப்பு தக்கதொரு பாடமாக அமைந்துவிட்டது.

---

مُنَزَّهٌ عَنْ شَرِيكٍ فِي مَحَاسِنِهِ
(42) فَجَوْهَرُ الْحُسْنِ فِيهِ غَيْرُ مُنْقَسِمِ

முனஸ்ஸஹுன் அன் ஷரீகின் ஃபீ
- மஹாஸினிஹீ
ஃபஜவ்ஹருல் ஹுஸ்னி ஃபீஹி
- ஃகைரு முன்கஸிமி

நல்லியல்புகளில் நந் நபிகளாருக்கு மற்றெவரும் இணையாகுவதை விட்டும் பரிசுத்தமாக்கப்பட்டு விட்டது. ஏனெனில் அப்பெருந்தகையில் அமைந்துள்ள அழகு பங்கிடப்படமுடியாத ரத்தினமாகும்.

---

இதனை -

உத்தம குணத்தில் அவர்க் கொப்பாவார் யாருமில்லை.
அத்தன் அமைப்பில் அவர் அழகு முழு மாமணியாம்.

-என மறைக்காயர் பாடுகின்றார்.

## அழகுக்கோர் சிகரம்

அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரளி- அன்ஹா) அவர்களிடம் நாயகத் தோழர் ஒருவர் ''அன்னையரே! அண்ணல் அவர்களின் அருங்குணங்கள் குறித்து சொல்லிடுக''! எனக்கேட்ட போது - ''அண்ணலாரின் குணம் குர்ஆனாக இருந்தது'' என அன்னையவர் கூறினார்களாம்.

ஆதலால் அண்ணலாரின் குண நலன்களுக்கு ஒப்புவமையே இல்லை என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது. குர்ஆனுக்கு ஒப்புவமை இருந்தால் அல்லவோ அண்ணலாரின் குண நலன்களுக்கும் ஒப்புவமை கண்டிட முடியும்?

அண்ணலார் அல்லாஹ்வின் பேரொளியில் இருந்து படைக்கப்பட்டார்கள். அர்ஷு, குர்ஷு, லவ்ஹு, சூரியன். சந்திரன், பூமி ஆகிய அனைத்தும் அண்ணல் நபியுல்லா அவர்களின் ஒளியிலிருந்து படைக்கப்பட்டன என்ற அறிவிப்பிலிருந்து;

ஒரே ஒரு மூலப்பொருள் பத்தாக- நூறாக -ஆயிரமாக பங்கிடப்படுவதைப் போன்று அல்லாஹ்வின் பேரொளியிலிருந்து அண்ணல் அவர்கள் படைக்கப்பட்டதும்,

அண்ணலாரின் ஒளியிலிருந்து சூரியன், சந்திரன், லவ்ஹு, கலம் போன்ற அனைத்தும் படைக்கப்பட்டது. என்றுதான் விளங்கிட முடியும்.

ஆனால் அத்தகு விளக்கம் தவறானதாகும்.

ஏனெனில்;

ஒரு மூலப் பொருளை ஒன்றாக- பத்தாக- நூறாக பங்கிடும் போது மூலம் கரைந்து குறைந்து கடைசியில் ஒன்றுமே இல்லாமலும் ஆகிவிடும்.

ஆனால் அல்லாஹ்வின் பேரொளியிலிருந்து அண்ணல் அவர்கள் படைக்கப்பட்டதால் அல்லாஹ்விற்கு அணுவளவு கூட குறைவு ஏற்பட்டதில்லை அதுபோல அண்ணல் நபியுல்லாஹ் அவர்களின் ஒளியிலிருந்து சூரியன், சந்திரன் முதலாக உள்ள அனைத்தும் படைக்கப்பட்டதனால் அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்களின் ஒளியில் எந்த ஒரு குறையும் நிச்சயமாக ஏற்பட்டு விடவில்லை.

''அது எப்படி?'' என்பீர்கள் அல்லவா?

முகம் பார்த்திடும் கண்ணாடியொன்றில் சூரிய ஒளியினைப் பாயச் செய்து, நிழலின பக்கம் கண்ணாடியின் முன்பாகத்தை திருப்பினால் கண்ணாடியில் பாய்ச்சப்பட்ட சூரிய ஒளி நிழலிலும் பிரதிபலிக்கும். அல்லவா?

இப்படி சூரிய ஒளியை கண்ணாடியில் பாயச் செய்வதால் சூரிய ஒளி கொஞ்சமேனும் குறைகின்றதா? அன்றி கண்ணாடியில் பாய்ந்த ஒளி, நிழலில் பிரதிபலிப்பதால் கண்ணாடி ஒளி குறைகின்றதா? இல்லையே! இதுபோலத்தான் அண்ணலார் ஒளியின் சமாச்சாரமும்! புரிந்திருக்குமே?

இதனைத்தான்

"அத்தனாகிய அல்லாஹ்வின் அமைப்பில் அவர், அழகு முழுமாமணியாம். அதாவது, பங்கிடப்பட முடியாத இரத்தினமாம்" என இமாம் பூசிரி (ரஹ்-அன்ஹு) இரத்தினச் சுருக்கமாகச் சொல்லிக் காண்பிக்கின்றார்.

## அழகில் அண்ணல் நபியவர்களா? அருமை யூசுஃப் (அலை) அவர்களா?

இங்கே, யூசுஃப் நபி (அலை) அவர்களைப் பற்றி தெரிந்திடுவது அவசியமாகின்றது. ஏனெனில் அல்லாஹ்வின் படைப்பில் அழகின் எல்லையாக நபியூசுஃப் (அலை) திகழ்ந்ததாக திருமறை கூறுகின்றது.

ஆகவே, அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்களின் அழகிற்கும், நபி யூசுஃப் (அலை) அவர்களின் அழகிற்கும் ஒப்புநோக்கி, உண்மைநிலை புரிந்திட வேண்டிய அவசியம் ஏற்படுகின்றது அப்போதுதான் இமாம் பூசிரி (ரஹ்-அன்ஹு) அவர்களின் கருத்தினை முழுமையாகச் சுவைத்தின்புற இயலும்.

'அன்றொரு நாள். காலை வேளையில் அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்கள் மதீனாபுரி மஸ்ஜிதில் அமர்ந்து' 'சூரா யூசுஃப்' நாவினிக்க-செவிமடுப்போர் தம் செவியினிக்க ஓதிக்கொண்டிருந்த பொழுது, அதில் 'அழகான வரலாறு' எனப் பொருள் தரும் 'அஹ்சஸனுல் கஸஸ்' எனும் சொற்றொடர் வந்ததும்; தோழர்கள் குறிக்கிட்டு, அண்ணலே! இறைவன் இந்த சூராவை 'அஹ்சனுல் கஸஸ்' எனக் குறிப்புடுகின்றானே அதன் காரணமென்ன? என வினவினார்கள்.

அதற்கு அண்ணல் அவர்கள் ''எவரின் வரலாற்றினை இதில் கூறிக் காண்பிக்கப்படுகின்றதோ அந்த வரலாற்று நாயகரும் (நபியூசுஃப்-அலை-அவர்களும்) அழகுமிக்கவர் அழகுபட பேசக்கூடியவர், அதுபோல வரலாற்றினைக் கூறிடும் வல்லோனும் அழகன்; அழகுப்படப் பேசுவதில் வல்லவன்; ஆகவேதான் இங்கனம் இந்த சூராவிற்கு 'அஹ்ஸனுல் கஸஸ்' எனச் சிறப்புப் பெயர் வழங்கப்பட்டுள்ளது'' எனக் கூறினார்கள்.

மீண்டும் நபித்தோழர்கள் வினவினர். மற்ற நபிமார் எவரும் அழகானவராக இருந்ததில்லையா?

''ஏன் இருந்ததில்லை? ஆனால் சகோதரர் யூசுஃப் அவர்களைப் போன்று அத்துணை அழகு படைத்தவராக எவரும் இருந்ததில்லை தான். ஏனெனில் சகோதரர் யூசுஃப் சொர்க்கத்து மாந்தரைப்போன்று அழகு படைத்தவராக இருந்தார். அவரின் அழகுருவைக் கண்டபின் ''இத்தகைய முக அழகுதான் தங்களுக்குச் சொர்க்கத்தில் தரப்படும்' என்பதனை இறை நம்பிக்கையாளர்கள் அறிந்து கொள்ளும் பொருட்டு இறைவன் அவரை அவ்வளவு பேரழகராகப் படைத்திருந்தான்'' என பதிலிறுத்தினர் அண்ணல்.

''அவ்விதம் யூசுப்(அலை) அவர்களுக்கு அத்துனை பேரழகு கொடுக்கப்படும் வண்ணமாக அவர் என்ன அரும் பெரும் செயலை ஆற்றி விட்டார்கள்?'' மீண்டும் நபித் தோழர்கள் வினவினார்கள்.

''துவக்க காலத்திலேயே தனது பொருளைப் பங்கிடும் பொழுது அவரின் செயல் எதனையும் கவயனியாமலேயே

அல்லாஹ் அவருக்கு அதனை வழங்கி விட்டான்'' என்றார்கள். ஏந்தல் நபியுல்லா.

இந்த உரையாடல் மதீனாபுரி அனைத்தும் பரவியது. அன்னை நல்லார் ஆயிஷா (ரலி-அன்ஹா) அவர்களுக்கும் தெரியவந்தது.

இதனைக் கேள்விப்பட்டதிலிருந்து ஒன்றுமே ஓட வில்லை அவருக்கு! அருமைத் துணைவர் அண்ணல் நபியுல்லா அவர்கள் வீடு வந்ததும் அதனைக் குறித்து தெளிவு பெற்று விட்டுத்தான் மறுவேலைபார்க்க வேண்டும் என பரபரப்போடு காத்திருந்தார், ஆயிஷா (ரலி-அன்ஹா)

அன்னை அவர்களின் அந்த சிந்தனை முற்றுப்பெறும் முன்பாகவே செம்மல் நபியுல்லா வீடு வந்தடைந்து விட்டனர்.

உடனே ஆயிஷா அவர்கள் சிந்தைதனில் உதித்த சிந்தனையை சொல்லாரமாக வடித்து -''நான் இன்ன, இன்ன மாதிரியெல்லாம் கேள்விப்பட்டேனே, உண்மை தானா?'' எனக் கேட்டே விட்டார்கள்.

அது கேட்ட அண்ணலெம் பெருமான் (ஸல்-அம்) அவர்கள் - 'இதற்காகவா நீ இவ்வளவு சினமுற்றுள்ளாய்? விடு, விடு உன் சினத்தை. சகோதரர் யூசுஃப் பேரழகர் தான். நான் அவரைவிடப் பல மடங்கு அதிக அழகு படைத்தவன். யூசுஃபின் அழகு அவரின் முகத்தில் மட்டுமே இருந்தது. அதனால் பெரிய ஃபித்னா (குழப்பம்) ஏற்பட்டது. அவர் அனுபவித்த துன்பம் துயரம் ஆகிய அனைத்திற்கும் அவரின் அந்த அழகே காரணமாக இருந்தது.ஆனால் எனக்குக் கொடுக்கப்பட்டுள்ள அழ

அப்படிப்பட்டதன்று.மாறாக, நல்ல பழக்கவழக்கங்களுடனும் பண்பாடுகளுடனும் என் அழகு இணைந்ததாக உள்ளது. என் அழகினால் அல்லாஹ்வின் படைப்புக்களுக்கு மகிழ்ச்சியும் மன அமைதியும் ஏற்படுகின்றது. என்னைப் பற்றி இறைவன் தன் திருமறையில் கூறும்பொழுது ''நிச்சயமாக நீவிர் உயர்ந்த பண்பாடுகளையும் பழக்க வழக்கங்களையும் பெற்றுள்ளீர்'' என்பதாகவும், அகில உலகங்களுக்கும் என்னை அருட்கொடையாக அனுப்பி வைத்துள்ளதாகவும் சிறப்பித்து இயம்புகின்றான்'' எனக் கூறினார்கள்.

இதனிடையே, ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பெருமான் நபிகளாரிடம் வருகை தந்து ''முஹம்மதே! இதே விஷயம்தான் விண்ணுலகிலும் சற்றுமுன் சர்ச்சை செய்யப்பட்டது. தங்களின் அழகையும் நபியூசுஃப் (அலை) அவர்களின் அழகையும் ஒப்பு நோக்கிய வானவர்கள், நபியூசுஃப் (அலை) போன்றில்லாமல் தங்களுக்கு புற அழகோடு அக அழகும் சேர்த்து வழங்கப்பட்டுள்ளது. வீரம், வள்ளான்மை, நெஞ்சுரம், பொறுமை, மார்க்கப்போர், ஷஃபாஅத், மிஃராஜ் போன்ற எண்ணிறந்த நற்பேறுகளெல்லாம் தங்களுக்கு அவரைவிட அதிகபட்சமாக வழங்கப்பட்டுள்ளன''- என்ற முடிவுக்கு வந்துள்ளனர். வானவர்கள், என்று ஜிப்ரயீல் (அலை) அவர்கள் கூறினார்கள்.

ஜீப்ரயீல் (அலை) அவர்கள் கூறிச்சென்ற இந்தச் செய்தியினையும் அன்னை நல்லார் ஆயிஷா (ரலி-அன்ஹா) அவர்களிடம் கூறிய பொழுது அன்னையவர்களின் முகம் அன்றலர்ந்த மலர் போல் பிரகாசித்தது.

அன்பரீர்! பார்த்தீரா சேதியை?

நம் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் அழகிற்கு ஒப்புவமையே இல்லை என்பதற்கு இதனைவிட வேறு சான்று என்ன வேண்டியிருக்கிறது?

ஆகவே, தான் 'அழகின் முழு மாமணி' என புலவர் பூசிரி அவர்கள் வள்ளல் திரு நபி அவர்களை வர்ணித்துக் கூறுகின்றார்,

دَعْ مَا ادَّعَتْهُ النَّصَارَى فِي نَبِيِّهِمِ
وَاحْكُمْ بِمَا شِئْتَ مَدْحًا فِيهِ وَاحْتَكِمِ (٤٣)

த:மாத்தஅத்ஹை"ன்நஸா ரா:ரி
- நபியியிஹிமி
வஹ்கும்பிமஷி:த்தமத் ஹன்:பிஹி
- வஹ்தகிமி

கிருத்துவர்கள் தம்மின் நபியான ஹஜ்ரத் ஈசா ரூஹுல்லா விசயத்தில் (அல்லாஹ்வின் குமாரன் என) வாதித்தது போல நபிகளாரையும் வாதிப்பதை மட்டும் நீ விட்டிடக் கடவாய்.

மற்றபடி நீ எப்படியெல்லாம் அண்ணலாரைப் புகழ்ந்தேற்ற முடியுமோ அப்படி அப்படியெல்லாம் புகழ்ந்து போற்றிடு. அஃதன்றி அம்மாப்புகழை உறுதிப்படுத்திடக் கடவாய்.

இதனை -

கிருத்துவர்கள்தம் நபிக்குக் கிளத்துபுகழ்
- கைவிடுப்பாய் !

உரித்தாம் பிரான்புகழை உன்மனம்போல்
- நாட்டிடுவாய்!

என மறைக்காயர் பாடுகின்றார்.

## நபிகளாரைப் புகழ்வதற்கும் ஓர் எல்லையுண்டு !

வி-ரை : ஹஜ்ரத் ஈஸா ரூஹுல்லா (அலை) அவர்கள் ஏகத்துவத்தை - நேர்வழியைக் காண்பிப்பதற்காக யூத சமுதாயத்தினருக்கு இறைவனால் அனுப்பித்தரப்பட்டதொரு தீர்க்கதரிசி. அவ்வளவுதான்.

அப்பெருந்தகை, பிறப்பால் ஓர் அற்புதப் பிறவி. அன்றி அவரின் வாழ்வும் அற்புதமானதாக அமைந்து விட்டது. இதனையெல்லாம் கண்டு, சத்தியத்தை உணர்ந்த யூதர்களில் பலர் ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களை நம்பி, அவர் காட்டிய நல் வழியில் வாழத் தொடங்கினர். அங்ஙனம் வாழ்ந்த மக்களுக்கு - யூதர்களுக்கு - நஸாராக் (கிருதுவர்) கள் எனப் பெயர் வழங்கலாயிற்று.

ஆனால், நாளடைவில் அந்தக் கிருத்துவப் பெருமக்கள் தங்களின் வழிகாட்டியை - ஈஸா (அலை) அவர்களை புகழ்வதாக எண்ணிக் கொண்டு எல்லைமீறத் தொடங்கி விட்டனர்.

'ஒரு ஆணும் பெண்ணும் சேர்ந்து கலவுவதால் தான் குழந்தை பிறக்க முடியும்' என்ற உலகியல் பழக்கத்திற்கு மாறாக, 'அல்லாஹ்வாகிய நான் நாடினால் நான்' வகுத்துத்

தந்த' அந்த உலகியலுக்கு மாற்றமாக ஆண் துணையின்றி ஒரு பெண்ணிற்கு பிள்ளை பிறக்கச் செய்திடவும் என்னால் முடியும். என்ற தன்னின் வல்லமையினை உலகிற்கு உணர்த்துவதற்காக ஈஸா (அலை) அவர்களை அங்ஙனம் பிறக்கச் செய்தான்; இறைவன்.

அங்கனம், அல்லாஹ்வின் வல்லமைக்குச் சான்றாகத் திகழும் இந்த அற்புதத்தை தவறாகப் புரிந்து கொண்டு அதனையே ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களுக்கு உச்ச கட்டப் புகழாகச் சூட்டிட நினைத்த கிருத்துவ சகோதரர் கள் -'பிதா' குமாரன் - பரிசுத்த ஆவி' என திரியேகத்துவக் கொள்கையினைக் கற்பிக்கத் தொடங்கி விட்டனர்.

'ஒன்றே இறை. அதை இன்றே உணர்வீர்' என்ப தனைச் சொல்லி வஹ்தானிய்யத்தை நிலை நாட்டும் ஒரே நோக்கத்திற்காக அல்லாஹ்வினால் அனுப்பப்பட்ட ஒரு நபியை-நம்மைப்போன்ற மனிதரை - ''கடவுளின் குமாரன்'' என்று கூறி, தாய் தந்தையோ,அன்றி,பெண்டு பிள்ளையோ தேவையற்ற இறைவனுக்கு இணை கற்பித்து ஈஸா (அலை) அவர்கள் இவ்வையகத்திற்கு அனுப்பப்பட்ட நோக்கத்தையே சிதைந்து சின்னாபின்னமாக்கிவிட்ட கிருத்தவர்களின் அந்தச்செயல் எல்லை மீறிய செயலன்றோ?

ஆகவே, நமது நபிகளாரைப் புகழும் விசயத்திலும் இத்தகு முறைகேடு நடந்துவிடக் கூடாது - எல்லை மீறல் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதற்காக 'கிருத்தவர்கள் தம் நபிக்கு சொல்லுகிற புகழ் கைவிடுப்பாய்'' - எனக் கூறி நம்மை எச்சரிக்கின்றார் இமாம் பூசிரி (ரஹ்-அன்ஹா)

இங்கே நாம் கவனித்திட வேண்டியது யாதெனில் அகிலத்திற்கோர் அருட்பிழம்பாக-காத்திமுல் அன்பியாவாக காமிலூர் ரசூலாக வந்துதித்த நம் நபிகள் நாதரைப் புகழுவதற்கே எல்லையுண்டு என்றிடும்போது நம்மின் உம்மத்தில் உள்ள அவ்லியாக்களை புகழ்வதிலும் கவனமாக இருத்திட வேண்டும் என்பதைத்தான்.

நாட்டு நடப்பு அப்படியா உள்ளது?

நபிகளார் (ஸல்-அம்) அவர்களைவிட மேலாக அல்லவா நம்மவரில் சிலர் அவ்லியாக்களை புகழ்ந்தேற்றத் தலைப்பட்டு விட்டனர்?

'இப்படியெல்லாம் எல்லை மீறலாகுமா?, என நம்மில் யாரேனும், எவரையாவது கண்டித்ததுண்டா? அல்லாஹ் தான் நம்மின் ஈமானைக் காப்பாற்றி யருள வேண்டும்.

---

وَانْسُبْ اِلٰى ذَاتِهٖ مَا شِئْتَ مِنْ شَرَفٍ (٤٢)
وَانْسُبْ اِلٰى قَدْرِهٖ مَا شِئْتَ مِنْ عِظَمِ

**வன்சுப் இலா தாத்திஹீ மாஷிஃத்த**
**-மின் ஷரஃபின்**
**வன்சுப் இலா கத்ரிஹீ மாஷிஃத்த**
**- மின் இழமி**

(ஆதலால்) உன் விருப்பம்போல புகழார மாலைகளை அண்ணலாருக்குச் சூட்டிடு. உன் பக்தியின் சக்தியளவு மாண்புகளை அன்னவர்பால் சாற்றிடு

---

இதனை -

அவர் இயல்பின் மேன்மையுன்றன் அகம்போல்
-அவர்க்களிப்பாய்

தவ நிலைமைக் கேற்ப அவர் தம் மாண்பு
-சாற்றிடுவாய்

என மறைக்காயர் பாடிக்காட்டுகின்றார்—

வி-ரை : முன்சொன்ன கூடாப் புகழ் விடுத்து-
அண்ணல் நபிமணி முஹம்மது (ஸல்-அம்) அவர்களின்.

அங்க அடையாளங்கள் பற்றி.
அவர்தம் குங்கும நிற மேனி அழகினைப் பற்றி-
கஸ்தூரிவாசம் கமழும் இயற்கை மணம் பற்றி,
இலக்கண இலக்கியச் சுவை மிகுந்த அவர் தம்சொல் அலங்காரம் பற்றி-
சட்டென புரிந்து கொள்ளும் அறிவுக் கூர்மை பற்றி.
மாற்றாரையும் கவர்ந்திழுக்கும் அவர் தம்
அறிவு முதிர்ச்சி பற்றி
பகைவர்களாலும் புகழ்ந்திடத் தக்க பண்புகள் பற்றி
அருளாளர்களை அரவணைத்து மருளாளர்களை மயங்கிடச்செய்யும் அவர் தம் அன்பு பற்றி-

அவர் தம் நாணயம், நன்னயம், ஒழுக்கம், விழுப்பம், வீரம், வல்லான்மை ஆகிய அனைத்து சிறப்பம்சங்கள் பற்றியெல்லாம் அண்ணலெம் பெருமானார் அஹமது முஸ்தபா (ஸல்-அம்) அவர்களின் மேன்மைகேற்ப அவரவர்க்கு எப்படி எப்படியெல்லாம் முடியுமோ அவ்வாறெல்லாம் புகழ்ந்திடலாம் - புகழ்ந்திட வேண்டும் என்கின்றார்,

فَإِنَّ فَضْلَ رَسُوْلِ اللّٰهِ لَيْسَ لَهُ

(௪௫) حَدٌّ فَيُعْرِبَ عَنْهُ نَاطِقٌ بِفَمِ

:ப இன் ன :பஞ்மரகூ லில்லா ஹு
-லைசலஹு

ஹந்நா ன் :ப யு :ரிபஅன்
-ஹு நாத்தி நன் பீ :பமி

ஏனெனில், இறைத்தூதராம் நம் நபிகளாரின் சிறப்புக்கு எல்லையே இல்லை. (அப்படி இருக்கும் போது) வாய் மொழியால் எந்த மனிதரால்தான் அண்ணலாரின் சம்பூரணச் சிறப்புகளை விவரித்து விடமுடியும்...?

இதனை-

ஏனெனில்அல்லாஹ்தூதர் இருஞ்சிறப்புக்
- கெல்லை யில்லை

மானிடர்நாக்கவர்தம் மாண்பனைத்தும் கூறிடுமோ?

என மறைக்காயர் பாடிக்காட்டுகின்றார்.

வி-ரை: இதற்கு முன் உள்ள கண்ணியில் ''எவ்வாறெல்லாம் புகழமுடியுமோ அவ்வாறெல்லாம் புகழ்ந்திடலாம்'' - என பூசிரி அவர்கள் கூறியதும், அப்படியென்றால் அவரின் மேன்மைக்கு எல்லை உண்டா இல்லையா? என்ற ஐயம் எழுந்தது.

ஆகவே; இந்தக் கண்ணியில்,

மானிடராகப் பிறந்த எவரின் நாவிற்கும்- எக்காலத்திலும்- அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்களின் மாண்புகள்- மேன்மைகள்- அனைத்தையும் கூறிவிடத்தக்க ஆற்றல் இல்லவே இல்லை.

அன்றிலிருந்து இன்று வரை லட்சோப லட்சம் மக்கள் எந்த எந்த வகைகளில் எல்லாம் புகழ்ந்திட முடியுமோ அந்த அந்த வகைகளில் எல்லாம் புகழ்ந்து முடித்து விட்டனர். ஆனாலும் புகழ்ந்தவர் தம் நாவுகள் தான் தோற்று விட்டனவே தவிர, தாஹா நபி (ஸல்-அம்) அவர்களின் புகழ்வாழ்வு புகழ்மேனி - புகழ்வாக்கு கொஞ்சமும் குன்றாமல் குறையாமல் அப்படியே தான் இருக்கின்றது.

அதுபோலவே, இனி உலகம் முடியும் வரை கோடானு கோடி மக்கள் புதுப் புது முறைகளை எல்லாம் கையாண்டு அதந் பூமானை புகழ்ந்தேற்ற இருக்கின்றனர். அப்படி புகழ்ந்துவிடுவதாலும் பூ மா ன் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் புகழ்வாழ்வின் நுனியை கூட அவர்களால் எட்டிப் பிடிக்க முடியப்போவதில்லை. ஏனெனில் எம்மான் முஹம்மது (ஸல்) அவர்கள்

எல்லை காணமுடியாத புகழ் கடலாக இருக்கின்றனர். புகழான புகழ் எல்லாம் அப்பெருங்கடலில் நனைத்தெடுத்த ஊசி நுனிச் சொட்டுகள் தான்; என்றுரைக்கின்றார்.

لَوْ نَاسَبَتْ قَدْرَهُ آيَاتُهُ عِظَمًا
أَحْيَا اسْمُهُ حِينَ يُدْعَى دَارِسَ الرِّمَمِ (٢٦)

**லவ்நாஸபத்கத்ரஹு -**
**-ஆயாத்துஹு இழமா**
**அஹ்யாஸ்முஹு ஹீனயுத் ஆதாரி-**
**-ஸர்ரிமமி**

அண்ணலாரின் மாண்புகளுக்கு அற்புதங்கள் (முஃஜிசாக்கள்) உரை கல்லாகுமெனில் அன்னாரின் திருநாமம் உச்சரிக்கப்பட்டாலே, மக்கிப் போன எலும்புகள் கூட உயிர் பெற்றெழும் [ஆகவே, அன்னாரின் மகத்துவத்திற்கு அற்புதங்கள் உரைகல் அல்ல என்றுணர்க]

**இதனை-**

அன்பர்அவர்தம்பெருமைக் கற்புதம்ஒப் பாகுமென்றால்
என்பும் உயிர் பெற்றே எழும் அவர் பேர் உச்சரித்தால்
எனச் சவால் விட்டுப் பாடுகின்றார் மறைக்காயர்.

வி-ரை : நபிமார்களில் வெளிப்பட்ட (முஃஜிசாக்கள்) அற்புதங்கள் அனைத்தையும் உன்னிப்பாக நோட்ட மிட்டால் அவைகள் அனைத்தும் அவ்வக்கால மக்களின் மன நிலைகளைப் பிரதிபலிப்பதாகவும், மக்களின் கவர்ச்சி எந்தக் கலையின் மீது லயித்துக் காணப்படுகின்றதோ அந்த கலையைப் பின்னணியாகக் கொண்டதுமாகவே இருந்திடக் காண்போம்.

ஆனால்; இந்தப் பேருண்மையினைப் புரிந்து கொள்ள முடியாத கிருத்துவச் சகோதரர்கள் அவர்கள் நபியான-அவர்களால் கடவுளின் குமாரர் என அமர்க்களப்படுத்தப் படும் மனிதரான-ஈசா ரூஹுல்லா (அலை) அவர்களை மற்ற தீர்க்கதரசிகள்- நபிமார்கள் - முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் உட்பட்ட அனைவரைப் பார்க்கிலும் சிறந்தவர் - உயர்ந்தவர் - என வாதிட்டு: தங்களின் அந்த கூடாவாதிப் பிற்கு ஆதாரமாக ஈசாரூஹுல்லா (அலை) அவர்கள் செய்துகாட்டிய முஃஜிசாக்களை ஆதாரமாகக் காட்டு கின்றனர்.

எங்களின் ஏசுபெருமான் இறந்தவர்களை - மண்ணில் புதையுண்டு மண்ணோடு மண்ணாக மக்கிப்போனவர்களை யெல்லாம் உயிர்கொடுத்து எழுப்பினார்; இது எவரால் முடியும்?'' எனப் பீற்றித் திரிகின்றனர்.

''ஐயா! ஏசு பெருமானோ அல்லது மற்றவரோ செய்து காட்டிய - அவர்களின் மூலமாக இறைவன் வெளிப்படுத்திய

-முஃஜிசாக்கள் அம்மேன் மக்களின் பிரச்சாரங்களுக்கு உரிய உபகரணங்களே தவிர, நீங்கள் நினைப்பதுபோல அம்மேன்மக்களின் மேன்மைக்கு, உயர்வுக்கு, சிறப்பிற்கு உரிய அளவுகோல்கள் அல்ல அந்த முஃஜிசாக்கள்'' என்று மீண்டும் மீண்டும் நாம் கூறினாலும் நாம் சொல்லும் அந்த நியாயத்தை அவர்கள் ஏற்பதாய் இல்லை.

ஆகவே; முஃஜிசாக்கள்தான் நபிமார்களின் உயர்வுக் குரிய அளவுகோல்- எனும் கிருத்துவச் சகோதரர்களின் பிதற்றலை நாமும் வாதத்திற்காக- ஒப்புக்கொண்டு எந்த முஃஜிசாவினால் மற்ற மேன்மக்களைக் காண தங்களின் ஏசு பிரானுக்கு உயர்வு கிட்டியதாக கருதுகின்றார்களோ அந்த மரணித்தவர்களை மீண்டும் உயிர்பெற்று எழச் செய்யும்- முஃஜிசாவை 'கராமத்' என்ற மறு பெயரால் எங்களில்- உம்மத்தே முஹம்மதிய்யாக்களில் - உள்ள ஒரு முஸ்லிம் செய்துகாட்ட முடியும்- அங்ஙனம் மரணித்தவர்களை உயிர் எழச்செய்யும் அற்புதத்தை எங்களில் உள்ள பலரின் மூல மாக இறைவன் வெளிப்படுத்தியுள்ளான் எனும் போது கிருத் துவச் சகோதரர்கள் வாய்மூடி மௌனம் சாதிப்பதை நம் மால்புரிந்து கொள்ள முடியவில்லை.

## ஈஸா ரூஹுல்லாஹும் முஹ்யித்தீன் ஆண்டகையும்!

ஒரு முறை பகுதாது நகரில் முக்கிய வீதியொன்றில் மெய்நிலை கண்டஞானி முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (குத்திச-சிர்ருஹு) அவர்கள் சென்று கொண்டிருக் கின்றனர். அப்போது நடு முச்சந்தியில் ஒரு கிருத்தவச் சகோதரரும், இஸ்லாமியர் ஒருவரும் நின்று கடுமையாக

வாக்கு வாதம் செய்து கொண்டிருக்கின்றனர். கிருத்துவச் சகோதரர் பல எடுத்துக்காட்டுகளை எடுத்துக் கூறி 'தங்களின் ஏசுதான் சிறந்தவர்' என வாதிடுகின்றார். இஸ்லாமிய நண்பரும் விட வில்லை. அதனைக்காண அர்த்த புஷ்டியுள்ள-அழுத்தமான பல எடுத்துக்காட்டுகளை கூறி ஏசுநாதரைக் காட்டிலும் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்கள்தான் சிறந்தவர்-உயர்ந்தவர்—என வாதிடுகின்றார். வாதம் உச்சகட்டத்தை அடைகின்றது. கடைசியாக கிருத்துவச் சகோதரர் இந்த முஃஜிசாவை-மரணித்தவரை மீண்டும் உயிர்பெறச் செய்யும் அற்புதத்தை-எடுத்துக்காட்டி, இதுபோல எப்பேதாவது உங்களின் முஹம்மது நபிசெய்து காட்டியுள்ளாரா? முடியுமா அவரால்? எனச் சவால் விடுக்கின்றார். கிருத்துவச் சகோதரரின் இந்தச் சவால் இஸ்லாமிய நண்பரை நிலை குலையச் செய்து விடுகின்றது. இந்நிலையில் அந்த இடத்திற்கு அண்மித்துவிட்ட முஹ்யித்தீன் ஆண்டகை (குத்திசசிர்ருஹு) அவர்கள்-இது போன்றவாதங்களை வெறுப்பவர்களாக இருந்தும் கூட-கிருத்து சகோதரரின் கெக்கலிப்பை மந்தகாசச் சிரிப்பைக்கண்டு சகியாதவர்களாக, அந்த கிருத்துவரை அணுகி-''அன்பரே! எங்களின் நபி முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் ஏசுநாதர் செய்து காட்டிய அந்த முஃஜிசாவை செய்து காட்டினார்களா? அல்லவா? என்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அந்த முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் சாதாரணத் தொண்டனாகிய நான், அந்த முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் திரு நாமத்தின் மகிமையால் மரணித்தவரை மீண்டும் உயிர்பெற்று எழும்பும்படி செய்கின்றேன்-அங்ஙனம் செய்து காட்டிவிட்டால் உம்மின் வாதத்தைத் திரும்ப பெற்றுக் கொள்வீரா?''- எனக் கேட்டார்கள்.

முஹ்யித்தீன் ஆண்டகை (குத்திச-சிர்ருஹு) அவர்களின் இந்த எதிர் சவாலைக் கேட்டு ஆரம்பத்தில் அயர்ந்து நின்ற அந்த கிருத்துவர், சற்று நேரத்தில் சமாளித்துக் கொண்டு ''அங்கனம் நீவிர் செய்து காண்பித்தால் என் வாதத்தைத் திரும்ப பெற்றுக்கொள்வது மட்டு மன்று, நான் உங்களின் மார்க்கத்தையும் ஏற்று மதம் மாறவும் தயங்கேன்'' என்றார்.

இதன்படி; நேரம்- இடம் - குறிப்பான மண்ணறையில் (கப்ரில்) புதைக்கப்பட்ட இன்னமனிதர் என்பதெல்லாம் குறிக்கப்பட்டது.

குறித்த நேரத்தில் குறித்த மண்ணறையில் மூவரும் கூடினர்.

குறிப்பிட்ட அந்த மனிதரின் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு ''முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களது திருநாமத்தின் பொருட்டால் நீவிர் மீண்டும் உயிர்பெற்று எழக்கடவீர்!'' என முஹ்யித்தீன் ஆண்டகை வேண்டினார்கள்.

சுப்ஹானல்லாஹ்! என்ன ஆச்சரியம். கிருத்துவச் சகோதரர் எவரைக் குறிப்பிட்டாரோ, அதே மனிதர்- கவிஞர் -அந்தப் புதை குழியிலிருந்து உயிர்பெற்று எழுந்தார். எழுந்ததோடு மட்டுமின்றி எழுந்த அம்மனிதர் கிருத்துவரை நோக்கி, ''வழிகேட்டிலிருக்கும் எம்மின் உடன்பிறப்பே! விழிப்புக்கொள். ஏசுபிரான் இயம்பிச் சென்ற தேற்றரவாளர் முஹம்மது நபியே என ஒப்புக்கொள். அஷ்ஹது அன்லா யிலாஹ இல்லல்லாஹ் வ அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்'' எனக்கூறி மறைந்தார்.

விழிப்பில் கண்கூடாக நடந்த அற்புதத்தைக் கண்டு'முஹம்மத்' என்ற பெயருக்கே இவ்வளவு சக்தி என்றால் அவரின் மார்க்கம் எவ்வளவு

அற்புதமான மார்க்கமாக இருந்திடும் எனத் தெளிந்து-அந்த கிருத்துவச் சகோதரர் அந்த இடத்திலேயே திருக்கலிமா மொழிந்து தீனுல் இஸ்லாத்தை ஏற்றார்.

இனியவர்களே! என் இஸ்லாமிய நண்பர்களே! பார்த்தீரா பேதியை! ஈஸா ரூஹுல்லா (அலை) அவர்கள் ஒரு தீர்க்கதரசி- 'அல்லாஹ்வின் உயிர்' என்ற சிறப்புப் பெயர் பெற்ற பெருந்தகையாளர்- அவர் மரணித்த வரை உயிர் பெறச் செய்தார் என்றால் தமது சொந்த சக்தியால் அவர் அதனைச் செய்தாரில்லை. அல்லாஹ்வின் தனிப்பெரும் கடாச்சம் கொண்டே அத்தகு முஃஜிசாவைச் செய்துள்ளார். ஆனால் முஹ்யித்தீன் ஆண்டகை சாமானியர். ஒரு நபியினுடைய சாதாரணத் தொண்டர் அந்தச் சாமானியரால் மரணித்தவரை மீண்டும் உயிர்பெறச் செய்யும் 'கராமத்' நிகழ்ந்துள்ளதென்றால் அதனைப்பற்றி என்ன நினைக்க முடியும்...? அன்றி முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் திருப்பெயரின் மகிமையால் அந்தக் கராமத் நிகழ்ந்துள்ளது என்றால் நம் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் மகிமையை என்னவென்பது?

இதோ அடுத்து வரும் நிகழ்ச்சியையும் பாருங்களேன்.

## நபிகளாரின் பெயருக்கே பேரற்புதம்

நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களது காலத்தில் ஒரு அன்சாரித் தோழர் மரணித்த போது அருகிருந்தவர்கள் அவரை துப்பட்டி கொண்டு மூடி மரியாதையாகக் கிடத்தியபின் அவரது தாயாருக்கு தகவல் சொல்லுகின்றார்கள்.

அது கேட்ட மூதாட்டியாகிய அம்மாது சிரோன் மணி:

‘‘யா அல்லாஹ்! நான் எல்லாக் கஷ்ட நஷ்டங்களையும் பொறுத்துக் கொண்டேன். உனது திருப்தியை மட்டும் பெரிதாக எண்ணி, உனது தீனுக்காக என்னாலியன்ற எல்லா தியாகங்களையும் மனப்பூர்வமாகச் செய்து வந்துள்ளேன்.

யா அல்லாஹ்! நான் செய்த அந்த தியாகங்கள் எல்லாம் சத்தியமானதாக இருந்தால், தற்போது எனக்கேற்பட்டிருக்கும் இந்த பேரிழப்பிலிருந்து எனக்கு மீட்சி தந்தருளுவாயாக; எங்களின் ஈருலக வழிகாட்டியாகிய உனது ஹபீப் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் மகத்துவம் கொண்டு எனக்கு மீட்சி தந்தருள் வாயாக’’- என மனம் உருகிப் பிரார்த்தித்தாள்.

என்னே ஆச்சரியம்!

மவ்தாகி ஜனாஜாவாகக் கிடந்த, அவளது மகன் உசும்பி அங்குமிங்கும் புரண்டவராக எழுந்து உட்கார்ந்து மற்றவர்களுடன் எப்போதும் போல உறவாடி பழகத் தொடங்கி விட்டார்.

சுப்ஹானல்லாஹ்... சுப்ஹானல்லாஹ்...

அப்படியென்றால் நமது நபிகளாரின் பெயருக்கு எவ்வளவு மகத்துவம் பார்த்தீர்களா?

ஆனால் இதனையெல்லாம் உணராத- உணரும் உள்ளம் இல்லாத- கிருத்துவப் பெருமக்கள் உண்மை

யினைத் திரித்துக் கூறிக் கொண்டிருந்தால்- உங்களின் நபி ஏசுபெருமான் அப்படிச் செய்தார் என்றால் எங்கள் நபியின் திருநாமமே அதனை- மரணித்தவரை உயிர்பெறச் செய்யும் அற்புதத்தைச் - செய்து காட்ட வல்லது என்று எதிர் சவால் விடுவதில் குற்றம் காண முடியுமா?

இதனைத்தான் நமது இறை நேசப் புலவர் பூசிரி அவர்கள் இந்த 46ம் கண்ணியில்-

''அன்பர் அவர் தம் பெருமைக் கற்புதம் ஒப்பாகு மென்றால் என்பும் உயிர் பெற்றே எழும் அவர் பேர் உச் சரித்தால்'' என இடித்துரைக்கின்றார்.

நபிகள் நாயகம் (ஸல்-அம்) அவர்கள் உள்ளிட்ட அனைத்து நபிமார்களின் பெருமைக்கும்- கீர்த்திக்கும்- சிறப்பிற்கும் முஃஜிசாக்கள் அளவுகோல் அல்ல. வாதத் திற்காக முஃஜிசாக்கள் தான் அளவுகோல் என வைத் துக் கொண்டாலும், ஈசா ரூஹுல்லா (அலை) உள்ளிட்ட மற்ற அனைத்து நபிமார்களையும் அண்ணல் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் முஃஜிசா மிகைத்ததாகவே காணப்படுகின்றது. ஈசா ரூஹுல்லா (அலை) அவர்கள் செய்துகாட்டிய முஃஜிசாக்களில் உச்சகட்ட முஃஜிசா வான மரணித்தவரை திரும்பவும் உயிர்பெற்று எழச் செய்யும் இந்த முஃஜிசாவை முஸ்லிம்களில் உள்ள சாமான்யத் தொண்டர் - அந்த முஹம்மது எனும் திருப் பெயரின் பொருட்டால் - செய்துகாட்டிட முடியும்- அங்ஙனம் செய்து காட்டப்பட்டுள்ளது என புதுமைக்கவி பூசிரி (ரஹ்-அன்ஹு) சொல்லிக் காட்டுகின்றார் உண்மைநிலை அதுதானே!

لَمْ يَمْتَحِنَّا بِمَا تَعْيَى الْعُقُولُ بِهِ
حِرْصًا عَلَيْنَا فَلَمْ نَرْتَبْ وَلَمْ نَهِمِ ﴿٢٧﴾

**லம்யம்தஹின்னாபிமா தஃயல்**
**- உகூலுபிஹி**
**ஹிர்சன் அலைனாஃபலம் நர்தப்**
**- வலம்நஹிமி**

உம்மத்துகளான நமக்கு அல்லாஹ்வின் சமூகம் அதிகமான வரவேற்பைப் பெற்றுத் தர வேண்டும் என்ற அவிழ்க்கையின் காரணமாக, அறிவுக்குப் பொருந்தாதவற்றை ஏவி, நம்மை அன்னார், சோதனைக்கு உள்ளாக்கவில்லை, ஆதலால் அன்னாரின் போதனைகளில் ஐயம் கொண்டிடவோ, தடுமாற்றம் கண்டிடவோ வழி இம்மியும் இல்லை.

இதனை -

மாந்தர் அறிவுக்கடங்கா மருமப்பரீச்சை அன்பால்;
சாந்திநபிசெய்யவில்லை' தடுமாறோம் ஐயம்
- இல்லோம்.
என்று பெருமிதம் பொங்க கூறுகின்றார் மறைக்காயர்.

## அறிவார்ந்த மார்க்கம்

வி-ரை : உலகினில் சமயம் என உள்ளதெல்லாம் அறிவுக்குப் பொருந்தாத மதங்களாக இருக்கின்றனவே

தவிர அறிவுக்கு அடங்கும் மார்க்கமாக எதுவுமே இல்லை. எம்மின் இஸ்லாமியத்தைத் தவிர்த்து.

பிரிய நபித்தோழர்களான அம்ரு பின் கஃபு அபூஹுறைரா (ரலி - அன்ஹுமா) ஆகிய இருவரும் ஒரு சமயம் நபிகளார் சமூகம் வருகை தந்து பின்வருமாறு வினவினார்கள்;

அல்லாஹ்வின் தூதே! மனிதனுள் அறிஞன் என்போன் யார்?'' என்று. அதற்கு அண்ணல் நபிமணி இப்படி பதில் சொன்னார்கள்; ''கசடறக் கற்று, கற்றபடி ஒழுகுபவன்''

மனிதருள் வணக்க வழிபாடுகளால் சிறந்தவன் யார்? என வந்த இருவரும் திரும்பக் கேட்க, அதற்கும் ''கசடறக் கற்று, கற்றபடி ஒழுகுபவன்'' என்று நபியுல்லா பதில் கூறினார்கள்.-

'மேன்மையில் சிறந்தோன் யார்? 'இது வந்தவர்களின் வினா. இதற்கும்' 'கசடறக் கற்று, கற்றபடி ஒழுகுபவன்' என்றே பதில் சொல்லிய பைகம்பர் (ஸல்-அம்) அவர்கள் ''அனைத்துப் பொருட்களுக்கும் ஒவ்வொரு அடிப்படை உண்டு. ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒவ்வொரு வகையான வழிகாட்டிகள் உண்டு. இறை நம்பிக்கையாளர்களின் வழி காட்டி, நல்லறிவேயாகும். ஒவ்வொரு சமுதாயத்திற்கும் ஒவ்வொரு வகையான உச்ச நிலை உண்டு. நல்லடியார்களின் உச்சநிலை 'கசடறக் கற்று, கற்றபின் அற்குத் தக வாழ்வதாகும் எனத் தொடர்ந்து கூறினார்கள்.

அறிவு எனும் அச்சாணியை பகல் விளக்கெனப் படம் பிடித்துக்காட்டும் இந்த நபிமணியின் நன்மொழி 'ஹயாத்துல் குலூப்' எனும் கிரந்தத்தில் பதிந்து பாதுகாக்கப்பட்டுள்ளது.

அன்பரீர்! இங்ஙனம், அறிவை உயிரோட்டமாகக் கொண்டு இயங்கிடும் எம்மின் இஸ்லாமியத்தில் அமைத்துக் கொடுக்கப்பட்டுள்ள வாழ்க்கைத் திட்டங்கள் அனைத்துமே அறிவுக்குப் பொருந்தக் கூடியதாகவே அமைந்திருப்பதைக் காணலாம்

## அமெரிக்காவில் நடந்த அதிசய வழக்கு

ஒரு தடவை அமெரிக்க நாட்டின் நீதி மன்றம் ஒன்றில் விசித்திரமான வழக்கொன்று கூண்டேறியது.

திருமணம் முடிந்து ஐந்து மாதம் கூட நிறைவு பெறாத நிலையில், தனது மனைவிக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்திருப்பதாகவும், ஆகவே அக்குழந்தை தனக்குரியதென ஏற்பதற்கு இயலாது எனவும், கணவன் தரப்பில் கூறப்பட்டது.

கணவனைத்தவிர்த்து வேறு ஒருவருடனும் எவ்வகையான தொடர்பும் தனக்கு இருந்ததில்லை ஆதலால் பிறந்த குழந்தை, தனது கணவனின் மூலம் உற்பத்தியானது தான். என, மனைவி தரப்பில் கூறப்பட்டது.

'தனது மனைவி மாற்றானுடன் எவ்விதத் தொடர்பும் வைத்திருக்கவில்லை' என்பதனை, சந்தேகத்திற்கிடமின்றி ஒப்புக்கொண்ட கணவன், குழந்தை தனக்குரியது இல்லை என்பதனை மீண்டும் வலியுறுத்தினான்.

எப்படி? சுவையும் வியப்பும் மிகுந்த வழக்குத்தானே அது?

நிலமை சிக்கலாகிவிடவே, உடற்கூறு நிபுணர்களின் உதவி நாடப்பட்டது. 'குறைந்த பட்சம் ஆறு மாதத்திற்குக் குறைவாக முழுமையான குழந்தை பிறப்பதற்கு வாய்ப்பே இல்லை' எனவும்; பிறந்துள்ள குழந்தையினையும், வாதியான கணவனையும் பரிசோதித்துப் பார்க்கையில், குழந்தைக்கும் வாதியான அந்தக் கணவனுக்கும் எவ்வித ரத்த பந்தமும் இருப்பதாகத் தோன்றவில்லை' எனவும் உடற்கூறு நிபுணர்கள் அறிக்கை சமர்ப்பித்தனர்; கோர்ட்டாரிடம்.

நிலமையினை ஆதியோடு அந்தமாக ஆய்ந்தறிந்த பின் தீர்ப்பு வழங்கிய நீதிபதிகளின் குழு "குழந்தை பிரதிவாதியான கணவனுக்குரியது அல்ல. ஆனால் வாதியாகிய மனைவி நடத்தை கெட்டவளுமல்ல" என்று கூறிவிட்டு' வாதியாகிய மனைவி இதற்கு முன் வேறு ஒருவரின் வாழ்க்கைத் துணைவியாக இருந்தனள். அப்போது அந்த முதல் கணவனுடைய விந்தில் சர்ச்சைக்குரிய இந்தக் குழந்தை ஜனித்திருந்தது. குழந்தை ஜனித்துவிட்ட சில வேளைகளில், தாய் தனது முதல் கணவனிடம் - அதாவது வயிற்றில் வளர்ந்து கொண்டுள்ள குழந்தையின் தந்தையிடம் - விவாக விலக்குப்பெற்று, அடுத்த சில தினங்களிலேயே இந்த வழக்கின் வாதியான இரண்டாம் கண

வனை திருமணம் செய்து கொண்டாள், என காரணகாரியங்களை விளக்கிக் கூறி; ''ஆகவே குழந்தை முதல் கணவனுக்குச் சொந்தமானதே அன்றி வாதியான இரண்டாவது கணவனுக்குச் சொந்தமானதன்று'' என தீர்ப்பு வழங்கினார்.

என் இனியவர்களே! சுவையும் வியப்பும் நிறைந்த அந்த வழக்கின் விபரத்தை மீணடும் ஒருமுறை படித்துப் பார்த்து, இது போன்ற பிரச்சினைகளுக்கு உலகினில் வதியும் எந்த மதத்திலாவது பரிகாரம் கூறப்பட்டுள்ளதா என சற்று சிந்தித்துப் பாருங்கள். எவரிடமாவது கேட்டுப் பாருங்கள்.

கிடையாது. ஆகவேதான் அந்த அமெரிக்க நீதிபதிகள், தங்கள் தீர்ப்பின் கடைசியில், இப்படி ஒரு ஆலோசனையினை அமெரிக்க மக்களுக்குக் கூறி இருந்தனர்.

என்ன ஆலோசனை தெரியுமா?

'விவாக விலக்குப் பெறும் பெண்கள்' மூன்று மாத விடாய்கள் வரை பொறுத்து (இத்தா) இருந்து, அதன் பின்பே மறுமணம் செய்ய வேண்டும்'' என்ற இஸ்லாமியத்தின் நடை முறையினை, நமது நாட்டவரும் பின்பற்றி நின்றால், இது போன்ற பிரச்சினைகளை - குழந்தை யாருக்குடையது என்ற பிரச்சினைகளை - ஏற்படாமல் தவிர்க்கலாம்'' என்பதுதான் அந்த ஆலோசனை.

'தலாக் பெறும் பெண்களும், கணவன் இறந்துவிட்டதால் விதவையாகிவிட்ட பெண்களும் குறிப்பிட்ட காலகட்டம் வரை, 'இத்தா' இருந்திடவேண்டும்' என எம்மின் இஸ்லாமியம் கூறுவதின் தத்துவம் இப்போது புரிகின்றதா?

இப்படி அறிவுக்கு அடங்கக் கூடியதாகவும், இயற்கையினைப் பின்னணியாக கொண்டதாகவும் எம்மின் இஸ்லாமியம் வகுத்தளித்த வாழ்க்கைத் திட்டங்களை காணலாமே தவிர, அறிவுக்குப் பொருந்தாத— இயற்கைக்கு முரணான எதனையும் அதில் நிச்சயம் காணவே முடியாது.

## பலதார மணம்

இஸ்லாம் அனுமதிக்கும் சில வாழ்க்கை முறைகளில் பலதாரமணத்தைப் பற்றி, சில அப்பாவிகள் அருவருப்புத் தெரிவிக்கின்றனர். ஆகவே இதுபற்றி இந்த இடத்தில் கோடிட்டுக் காட்ட வேண்டியுள்ளது.

'தாக்குத்தைரியமும்' ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர்களைக் கட்டி, சரியாக நிர்வாகம் செலுத்திட வல்ல வசதி வாய்ப்பும், ஆண்மை வீரியமும், படைத்தவர்கள் தேவைப் பட்டால், ஒன்றிற்கு மேல் நான்கு வரை, ஏககாலத்தில் திருமணம் செய்து கொள்ளலாம் என்று கூறும் இஸ்லாமிய மார்க்கம்; அங்ஙனம் பல மனைவிகளைக் கட்டியவர்கள் அந்த மனைவிகளிடம் இன்னின்ன முறைகளில் நடந்து அவர்களின் பெண்மைக்கு மதிப்பளிக்க வேண்டும் எனவும் நிபந்தனை விதித்துள்ளது.

இதில் என்ன தவறு?

பெண்கள் என்றால் அவர்களுக்கு பேறு காலம், மாறு காலம் என பலவித ஓய்வுக் காலம் சம்பவிப்பது இயற்கை.

இந்நிலையில் தாக்குத் தைரியமும். ஆண்மை வீரியமும் படைத்த ஒரு மனிதன், தனது மனைவிக்கு ஏற்படும் அந்த ஓய்வு காலங்களில் மனதைக் கட்டிப்போட்டுக்

கொண்டு இருப்பானா? பெண்களுக்கு இப்படிப்பட்ட பருவக்கோளாறுகள் ஏற்பட்டுவிடுவதால் அப்பெண்களின் கணவர்கள் தங்களது மனைவிகளை அணுக முடியாத அந்தக் காலங்களில் அடக்கவுணர்வு இல்லாமையால் அடாத காரியங்களில் இறங்கிவிடவும் கூடுமல்லவா?

இன்றைய காலகட்டத்தில் நமது நாட்டில் திருமணம் முடிந்த ஆண்களைப் பற்றி கள்ள நட்பு சம்பவமும், கூட்டி ஓடும் சம்பவமும் நித்தம் நித்தம் செய்தித் தாள்களில் சுடப்படுகின்றதே. திருமணம் முடித்தவர்கள் இப்படி அடாத காரியங்களில் ஈடுபடுவது எதனைக் காட்டுகின்றது?

ஆகவே, தான் விபச்சாரக் குற்றங்கள் நிகழாமல் தடுக்கும் விதமாக இஸ்லாம் பலதார மணத்தை அனுமதிக்கின்றது. ஆனால் வலியுறுத்தவில்லை.

## பெண்களின் பெருக்கம் ஏன்?

இன்றைக்கெல்லாம் பெண்களின் விகிதாச்சாரம் பெருகிக்கொண்டே வருகின்றது.

இத்தாலி நாட்டு விஞ்ஞானி 'கர்லோசில் தோரி' என்பவர்;

''காற்றில் நச்சுப்பொருட்கள் அதிகமாகிக் கொண்டே வருவதாலும், சிகரெட் பிடிக்கும் பழக்கம் பெருகி வருவதாலும் ஆண் கருக்கள் குறைந்து பெண் கருக்கள் மிகுந்து பெண்களின் பிறப்பு அதிகரித்து சில இடங்களின் நூற்றுக்கு நூற்று ஐம்பது என்ற விகிதத்தில்

பெண்களின் பிறப்பு விகிதம் அதிகரித்து விட்டது. இந்நிலை நீடித்தால் ஆண் இனமே இல்லாது முற்றாக அழிந்துவிடவும் கூடும்'' என அபாயச் சங்கு ஒலிக்கின்றார்.

இப்படி பெண்களின் விகிதாச்சாரம் பெருகி வரும் இந்நாளில் 'ஒருவனுக்கு ஒருத்தி' என்பது எடுபடுமா? அல்லது பலதார மணம் எடுபடுமா? என்பதை அன்பர்கள் சிந்திக்க வேண்டும்.

இரண்டில் எது இயற்கைக்கு பொருந்தக் கூடியது என்பது உள்ளங்கை நெல்லிக்கனி அல்லவா?

இப்படி இயற்கையோடு இணைந்ததைத் தான் இஸ்லாமியத்தில் காணமுடியும்.

## ஒரானமான உறவு முறை

'இன்னின்ன உறவுப் பெண்களை மணக்கலாம். இன்னின்ன உறவுப் பெண்களை, மனதால்கூட, நினைத்திடக் கூடாது. என எம்மின் இஸ்லாம் வகுத்துள்ளது.

அந்த தொகுப்புகளை சிந்தித்துச் சீர்தூக்கிப் பார்த்தால் இஸ்லாமியத்தில் இயற்கை ஒட்டமும் அறிவார்ந்த அம்சங்களும் நிறைந்திருப்பதைக் காணலாம்.

ஆனால் ஆய்ந்தறியும் ஆக்கமில்லாதவர்கள் தகப்பனுடன் பிறந்த சிற்றப்பா பெரியப்பா பிள்ளைகளை மணந்து கொள்ளலாம் எனவும், தாயுடன் பிறந்த சின்னம்மா பெரியம்மா பிள்ளைகளை மணந்து கொள்ளலாம் எனவும் அனுமதித்திருப்பதைக் கிண்டல் செய்கின்றனர்.

அதே நேரத்தில் தகப்பனுடன் பிறந்த அத்தையின் பெண்களையும், தாயுடன் பிறந்த மாமனின் பெண்களையும் மணப்பதை அவர்கள் விரும்பி வரவேற்கின்றனர்.

இத்தகு எண்ணம் கொண்டோர் சற்று சிந்திக்க வேண்டும்.

அத்தகைக்கு மீசை முளைத்தால், சித்தப்பா. அல்லது பெரியப்பா, என்றுதானே அழைக்கப்படும். அப்படி இருக்க மீசை இல்லாத அத்தை மகளை திருமணம் செய்வது விரும்பத்தக்கதாக இருந்திடும் போது, மீசை முளைத்த ஒரே காரணத்தால் சிற்றப்பா என்று அழைக்கப்படும். சின்னத்தா பெரியத்தாவின் பெண்களை திருமணம் செய்வது மட்டும் எப்படி கூடாமல் போய் விடும்?

சம்பந்தம் செய்வதற்கும், சம்பந்தத்தை விடுப்பதற்கும் கேவலம் மீசைதான் உரைக்கல்லா? அறிவு படைத்தவர்களே! ஆய்ந்து பாருங்கள். இஸ்லாம் அனுமதித்துள்ள உறவு முறை இயற்கைக்கும் அறிவுக்கும் ஈடு கொடுத்திடக் கூடியதே தவிர, அறிவுக்கு அடங்காதது எதுவுமே இல்லை அதில்,

ஆகவே தான் நம்பின் பகுத்தறிவுப் பகலவன் இமாம் பூசிரி அவர்கள்,

மாந்தர் அறிவுக்கு அடங்காத மருமப் பரீட்சை-புரியாத புதிர் - எதனையும் அன்பு படைத்த அண்ணல் திரு நபி (ஸல்-அம்) அவர்கள் அவர் தம் அன்பு மார்க்கமாம் இஸ்லாமியத்தில் புகுத்தவில்லை. ஆகவே மற்ற மதங்களில் உள்ளது போல் தடுமாற்றத்திற்கு சந்தேகத்திற்கு இடமான-

அறிவுக்கு முரணான-சிக்கல் இஸ்லாத்தில் இல்லை என அடித்துக் கூறுகின்றார். உண்மை தானே!

آغَيَى الْوَرٰى فَهْمُ مَعْنَاهُ فَلَيْسَ يُرٰى
لِلْقُرْبِ وَالْبُعْدِ مِنْهُ غَيْرُ مُنْفَحِمِ ﴿٨٧﴾

அஃயல்வராஃபஒிறமுமஃ
-னாஒறாஃா லலஸயுரா
லில்துர்பிவல்புஃதிரிஷி
-ஒறாஒறயிர முஃிஃாஒறிரி

அண்ணல் நபியுல்லா அவர்களின் அந்தரங்க நிலையை படைப்பினங்களால் உணர்ந்து கொள்ள முடிந்ததில்லை. அடுத்தோ (ரான சஹாபாக்களும்) ரும், அகன்றோ (ரான தாபிஈன்கள், இமாம்களும்) ரும்,(அண்ணலாரை சம்பூரணமாகப் புரிந்து கொள் ளும் விசயத்தில்) மௌனிகளேயன்றி வேறில்லை.

இதனை

படைப்பினம்அன்னார்நிலையைப்

-பகுத்துணரக் கூடவில்லை

அடுத்தோர்அகன்றோர் நாவடங்கினர்

-அல்லார் இலரே!

என மறைக்காயர் பாடிக் காட்டுகின்றார்.

முன்சென்ற 45-ஆம் கண்ணியில் 'மன்னர் நபியுல்லா (ஸல்-அம்) அவர்களின் முழுமையான மகத்துவங்கள் எந்த நாவினாலும் சொல்லி முடிக்க முடியாது' என்று சாற்றிய புலவர் பூசிரி (ரஹ்-அன்ஹு) அவர்கள் இங்கே கீழ் காணும் வண்ணம் கூறி தமது அந்தக் கூற்றுக்கு வலிமை சேர்க்கிறார்.

## உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட உத்தம நபி

'நாவால் மட்டுமென்ன? எந்த அறிவாலும் எங்கள் அஹமதுல்லா (ஸல்-அம்) அவர்களின் அந்தரங்கத்தை அகம்மியத்தை - அதிசயிக்கவைக்கும் ஆன்மீகத்தை பகுத்துணர முடியாது, என அடித்துக் கூறி 'ஆகவேதான், அண்ணல் நபியுல்லா (ஸல்-அம்) அவர்களை அடுத்தவர் களான உத்தம சஹாபாக்களும், அகன்றவர்களான தாபியீன்களும் - இமாம்களும் அன்னாரை சம்பூரணமாகப் புரிந்திட முடியாமல் நாவடக்கம் காட்டினர்' எனக்கூறி தன்னின் வாதுக்கு வலிமை சேர்க்கின்றார்.

மனிதன் தனது மனதில் உருப்பெற்ற சில கருவை, பார்வையில் பட்ட சில காட்சியை தனக்கிருக்கும் நாவன்மையாலும் கை வண்ணத்தாலும் முழுமையாகச் சித்தரித்துக் காட்டி விடுகின்றான்; இது ஒரு வகைத் திறன்!

மற்றும் சில வகைக் கருக்களும் காட்சிகளும் உண்டு. அவைகளை நாவன்மையால் மட்டுமோ அல்லது கை

வண்ணத்தால் மட்டுமோ தான் அவனால் சித்தரிக்க முடியும்.

மற்றும் சில உண்டு. அவைகளை மனதாலும் புரிய முடியாது. நாவாலும் சித்தரிக்க முடியாது. கையாலும் எழுதிக் காட்ட முடியாது. ஆனால் உணர்ந்து கொள்ள மட்டும் முடியும். இப்படிக்கூட சில வகை அறிவு உண்டு. ஆச்சரியமாக இருக்கின்றதல்லவா?

''ரூஹு - உயிர் -'' என்ற ஒன்றிருக்கின்றதே, அது இந்த மூன்றாவது வகையைச் சேர்ந்ததுதான்.

உயிரைப் புரிந்து கொண்டவர் யார்? அந்த உயிரை நாவால் இன்னதென்று சொல்லிக் காட்ட முடியுமா? அல்லது எழுதிக்காட்டத்தான் முடியுமா?

'வேறு சில விளக்கங்கள் உண்டு; அவை மனதினால் நாவன்மையிலும் வெளியாக்கிக் காட்டிட முடியும் கை வண்ணத்திலும் எழுத்து வடிவம் காணும் 'ஆனால் மனம் நாவு கை ஆகிய மூன்றாலும் அவைகளை முழுமையாகச் சூழ முடியாது-மூன்று உணர்வுகளுக்கும் அவை அடங்காது

இந்தக் கடைசி வகை - உணர்வை விளக்கத்தை-அறிவைச் சேர்ந்ததுதான் நபிகளார் (ஸல்) அவர்களின் அந்தரங்கமும்.

இதனைத்தான் இறையருட் பூசிரி அவர்கள் இங்கே 48-ஆம் கண்ணியில்-

படைப்பினம் அன்னார் (அந்தரங்க) நிலையைப் பகுத்துணரக் கூட முடியவில்லை) ஆகவே தான் அடுத்தோ

ராகிய சஹாபாக்களும் அகன்றோராகிய தாபியீன்கள், தபஅ தாபியீன்கள், இமாம்கள் ஆகியோரும் நாவடங்கினர் அல்லார் (அதுவன்றி) இலரே! (வேறுகாரணமன்று என்று கூறிக் காண்பிக்கின்றார்.

படைப்பினம் அண்ணல் நபி (ஸல்-அம்) அவர்களின் அந்தரங்கத்தைப் புரியவில்லை- புரியாது' என மொட்டை யாகக் கூறுவதைவிட அன்னாரின் அந்தரங்கத்தில் ஒன் றிரண்டைக் கூறிக் காண்பித்து அதனை மனித சக்தியால் புரியமுடிகிறதா? என்று தீர்மானிப்பதை வாசகர்களான உங்களின் உசிதத்திற்கு விட்டு விடுவது பயன் தரும் என்பதால் ஒன்றிரண்டை ஈண்டு தருகின்றேன்.

''அல்லாஹ்வின் படைப்புக்களின் முதல் படைப்பு எனது உயிரா (ரூஹா)க இருக்கின்றது'' என தாஹா நபி (ஸல்) அவர்கள் தங்களைப் பற்றி விமரிசித்துள்ளார்கள்.

மனித குலத்தின் மூலவராக - அபுல் பஷராக - பாவா ஆதம் (அலை) அவர்கள் ஆக்கப்பட்டுள்ளதை போன்று நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் உயிர் (ரூஹ்) உயிர்களுக் கெல்லாம் மூல உயிராக - அபுல் அர்வாஹாக - ஆக்கப் பட்டுள்ளது என்ற பேருண்மையினை மட்டும் மேலே கண்ட நபி வாக்கிலிருந்து நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது.

ஆனால்,

பாவா ஆதம் (அலை) அவர்கள் மனித குலத்தின் மூலவர் என்பதை வழி வழியாக வந்த பிறப்பு வரலாறு களைக் கொண்டு புரிந்து கொள்வதைப் போன்று உயிர்

களுக்கெல்லாம் நபிகளார் (ஸல் அம்) அவர்களின் உயிரே மூலமாக இருக்கின்றது' என்பதை பகுத்து புரிந்து கொள்ள முடிகின்றதா?

நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் உயிர் (ரூஹ்) இப்படிப்பட்டது. மற்ற உயிர்களெல்லாம் அந்த மூல உயிரில் இருந்து இப்படி இப்படிப் பல்கி வந்துள்ளது என்பதை எந்த அறிவாலும் பகுத்துணர முடியுமா? அல்லது சொல்லால் வடித்துக்காட்ட முடியுமா? அல்லது எழுத்தால் தான் சித்தரித்துவிட முடியுமா?

முடியாதே!

அதுபோன்ற அண்ணல் நபி மணி (ஸல்-அம்) அவர்கள் மிஃராஜிற்கு சென்ற போது அல்லாஹுதஆலா வின் (திரு லிகாகை) நேர்முகச் சந்திப்பைப் பெற்றார்கள், சந்தேகத்திற்கு இடமின்றி நம்பிள்ளோம் நாம்; அல்லவா?

ஆனால்;

அண்ணலாருக்கும் வல்ல அல்லாஹ்விற்குமிடையே ஏற்பட்ட அந்தச் சந்திப்பின் நெருக்கத்தை;

'காபகவ் ஸைனி அவ் அத்னா' என்று வர்ணிக்கப்படு கின்றது. அதாவது; நாணேற்றப்பட்ட வில் அதனை வேகமாக எய்யப்படும் போது தலைப்பிறை வடிவத்தைக் கொண்ட அந்த வில்லின் இருமுனைகளும்-ஓரங்களும்-எந்த அளவிற்கு வளைந்து ஒன்றிணையுமோ அந்த அளவு அல்லது அதனை பார்க்கிலும் மிக நெருக்கமாக அண்ணலார் அல்லாஹு தஆலாவை நெருங்கியிருந்தார்கள். என்பது

அந்த வர்ணனையின் கருத்து என கொள்ளப்படுகின்றது.

அன்பரீர்! அல்லாஹ்வின் சன்னிதானத்தில் அண்ணலார் எத்த அளவு நெருக்கம் பெற்றார்கள் என்பதனை விளக்கிடும் அந்த 'காப கவ்ஸைனி அவ் அத்னா' என்ற சொற்றொடரில் உள்ள உவமை நயத்தையும் இலக்கண இலக்கியச் சுவையினையும் சற்றே ஆய்ந்திடுங்கள்.

அதே நேரத்தில் உருவமோ, ஒண்டிட இடமோ, அல்லது வேறெந்த சார்புகளோ தேவையற்ற பரம் பொருளாகிய அல்லாஹுதஆலாவை அண்ணலார் அவர்களால் எங்கனம் அந்த அளவு நெருங்க முடிந்தது? என்பதுதான் அதில் தொக்கி நிற்கும் அந்தரங்கமாகும்.

அதை மனதால் புரிந்து கொள்ள முடிகின்றதா? கொஞ்சம் சிந்தைக்கு வேலை கொடுத்துப் பாருங்கள்... புரியவில்லை - புரியாது, ஏன் தெரியுமா? நம்மிடம் உள்ள அறிவுக்கு அதை புரிந்து கொள்ளுமளவு பவர் இல்லை அவ்வளவுதான்.

இதனைத்தான் இறையருட்கவி இமாம் பூசிரி அவர்கள் -

படைப்பினங்களால் அன்னாரின் அந்தரங்க நிலைகளைப் புரிந்து கொள்ள முடியாது'' என இங்கே கூறிக் காண்பிக்கின்றார்.

உண்மைதானே!

மனித அறிவின் இயலாமையினை இவ்விதம் கூறிக் காண்பித்தவுடன் 'பகுத்தறிவுக் களஞ்சியங்கள் நாங்கள்

"நிலாவில் உலா வருமளவு - செவ்வாயையும் ஒரு கை பார்த்துவிடலாம் என எண்ணத் துணியுமளவு - கடுகிச் செல்லும் காற்றையும் அளந்து சொல்லுமளவு அறிவு படைத்த எங்களையா - எங்களின் அறிவையா குறைத்து மதிப்பிடுகின்றீர்...?" என எவராவது தோள் தட்டிக் கொண்டு வந்திடக்கூடும் என நினைத்தார் போலும் நமது கவிக் கோமான்.

ஆகவே, தன் கூற்றுக்குச் சான்றாக அடுத்த கண்ணி யில் ஒரு உவமையைச் சொல்லிக் காண்பிக்கின்றார்.

---

كَالشَّمْسِ تَظْهَرُ لِلْعَيْنَيْنِ مِنْ رَمَدٍ
صَغِيرَةً وَتُكِلُّ الطَّرْفَ مِنْ أَمَمِ (٤٩)

கஷ்ஷம்ஸி தள்ஹறு லில் அய்னைனி
- மின் ரமதின்

ஸகீரதன் வதுகில்லு த்தர்ஃபு
- மின் அமமி

(நமது நபிகளார்) அவர்கள் கதிரவனைப் போன்றவர்களாம். அது தொலைவில் இருந்திடுவதால் பார்வைக்குச் சிறியதாகத் தோன்றுகின்றது. ஆனால் அது சமீபத்தில் வந்தால் நம் பார்வைகள் மழுங்கி ஒழுகிப் போய்விடும். அல்லவா?

---

இதனை -

சூரியனைப் போல்வார் அவர் தொலையில் சிறி
- தாய்த் தோன்றும்
பாரில் அது கிட்டிவந்தால் பார்வை மழுங்கிவிடும்.
என்று மறைக்காயர் பாடுகின்றார்.

விளக்கம் - பூமியை விடச் சூரியன் பன்மடங்கு பெரியது ஆனால் பூமியில் வாழும் நமக்கு அது சிறியதாக - ஒரு வண்டிச்சக்கரத்தைப் போன்று-தெரிகின்றது. அல்லவா?

காரணம், நமக்கும் அந்தச் சூரியனுக்கும் உள்ள இடை வெளி தூரம் அதிகமாக இருக்கின்றது.

ஆனால் பார்வைக்குச் சிறியதாகத் தென்படக்கூடிய அந்தச் சூரியனை அருகே இருந்து பார்த்திட வேண்டும் என ஒருவன் நாடினால், அது முடியக்கூடிய காரியமா? அவனின் கண்ணொளி-பார்வை - மங்கிப்போகுமல்லவா?

அதுபோலவே -

அண்ணல் நபிமணி (ஸல் - அம்) அவர்கள் ஞான சூரியனாக உள்ளார்கள். நாம் அஞ்ஞானத்தில் உழலும் புழுக்களாக உள்ளோம். நாம் சுழலக் கூடிய அஞ்ஞானத் திற்கும், அந்த ஞான சூரியனுக்கும் இடையே உள்ள இடை வெளி - தூரம் - பூமிக்கும் சூரியனுக்குமிடையே உள்ள தூரத்தைப் பார்க்கினும் மிக மிக அதிகமாகும். ஆகவேதான் ஞான சூரியனாகிய முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் மகிமை நமக்குச் சிறியதாகப்படுகின்றது. சூரியன் சிறிய தாகக் காணப்படுவதைப் போன்று.

ஆனால் அஞ்ஞானக் கண் படைத்த நாம், அந்த ஞான சூரியனின் முழு மகிமையினையும் - அந்தரங்கத்தையும் - காண விரும்பினால் சூரியனை பக்கத்தில் நிறுத்தி பார்த்

தால் கண்ணொளி-பார்வை-மழுங்கிவிடும் என்பது போல-ஞான சூரியனின் முழுமையை-அந்தரங்கத்தை-கண்டிட-அறிந்திட விரும்புவோரின் அறிவுக் கண்ணும் மழுங்கிவிடும் என தத்துவக்கவிஞர் பூசிரி இங்கே எடுத்தோதுகின்றார்.

இமாம் பூசிரி அவர்களின் தத்துவ விளக்கம் எப்படி?

சுப்ஹானல்லாஹ் !

---

وَكَيْفَ يُدْرِكُ فِي الدُّنْيَا حَقِيقَتَهُ
قَوْمٌ نِيَامٌ تَسَلَّوْا عَنْهُ بِالْحُلُمِ ۞

**வகைஃபயுத்ரி நஃபித் துன்யா-**
**-ஹகீகத்ஹூ**

**கவ்முன் நியாமுன் தஸல்-**
**-லவ் அன்ஹூ பில்ஹுல்மி**

கனவு கண்டு அதனை (கனவில் தென்பட்ட அந்த இன்பக் காட்சிகளையே) போதுமென திருப்தி கொண்டு தூங்கும் மாந்தர்க்கு; இத்தொல்லுலகில் அந்நபிகளாரின் அந்தரங்கத்தை எங்ஙனம் புரிந்து கொள்ள முடியும்...?

---

இதனை

மாயக்கனாக்காண்பதனால் மனம் நிறைந்து
- தூங்குபவர்

தூயபிரான் மெய்யினைத் தொல்லுலகில் -
-காண்பதெங்கே?

என மறைக்காயர் கேட்கின்றார்.

வி-ரை : 'அண்ணல் நபி மணி (ஸல்-அம்) அவர்களின் அந்தரங்கத்தை மனிதன் புரிந்து கொள்ள முடியாமல் போவதற்கு 'மனிதனிடம் குடிகொண்டுள்ள ஒருவகைப் பல ஹீனமும் மற்றொரு காரணமாக இருக்கின்றது' என இங்கே எடுத்துக்காட்டுகின்றார் இமாம் பூசிரி

அதாவது,

மனிதன் அழிந்து படக்கூடிய இந்த மாய வாழ்க்கையில் - இவ்வையகத்தில் அவனை வந்து சேரக்கூடிய சுக துக்கங்களைக் கண்டு பிரமிக்கக்கூடியவனாகவும், திணரக்கூடியவனாகவும் இருக்கின்றான். சுகங்களை தன்னடக்கத்தோடும், துக்கங்களை சகிப்புத்தன்மையோடும் ஜீரணிக்கும் தன்மை அவனில் மிகவும் குறைவாக இருக்கின்றது.

இது எதனைப் போல இருக்கின்றது தெரியுமா?

தூக்கத்தில் ஒரு மனிதன் கனாக் காண்கின்றான் அந்தக் கனவில்,

மதன மாளிகையொன்று தென்படுகின்றது. அதனுள் இரத்தினக் கம்பளங்கள் விரிக்கப்பட்டுள்ளன. அங்குமிங்கும் வண்ண வண்ண மலர்கள் பூத்து மணம் பரப்பிக்கொண்டுள்ளன, வழிநெடுகிலும் பூக்கள் தூவி -பன்னீர் தெளித்து, "வருக மன்னவா! என்னவா!" என வாழ்த்துக் கூறி அழைத்துச் செல்ல வனிதையர் கூட்டம் வழிமேல் விழிவைத்துக் காத்திருக்கின்றனர். பட்டணிந்து, கூட்டாக நடந்து செல்லும் அவன்- கனவுலகக் கதாநாயகன்- முத்தும், பவளமும் பதிக்கப் பட்டுள்ள தங்க ஆசனத்தில்-சிம்மாசனத்தில்-அமர்த்தப் படுகின்றான். தனிமை அவனை தாக்குகின்றது அதனைக் குறிப்பால் உணர்ந்தது போல தோகை மயிலாள் ஒருத்தியை

கூட்டி வருகின்றனர் அந்தத் தாரிகைகள். தாகம் மேலிடுகின்றது. அவனுக்கு, அதனை வாய்திறந்து சொல்வதற்குள்ளாக, பழரசம் ஒரு கிண்ணத்திலும், பால் மறுகிண்ணத்திலும் பனி நீர் வேறு கிண்ணத்திலும் அவன் முன் நீட்டப்படுகின்றது. அதற்குள் சேள் விழியால் சாவிக்கொத்தை அவன் முன் நீட்டுகின்றாள். வரிசையாக உள்ள அறைகளில் முதல் அறை திறக்கப்படுகின்றது. அங்கே நெல்லும் மணியும் அம்பாரம் அம்பாரமாகக் குவிக்கப்பட்டுக்கிடக்கின்றன. இரண்டாம் அறையில் கத்தை கத்தையாக நோட்டு அடுக்கி வைக்கப்பட்டுள்ளன. மூன்றாம் அறையில் தங்கத் தாம்பளங்களில் வைர வைடூரியங்கள், பச்சை சிகப்புக் கோமேதகங்கள் -மரகதக்கற்கள் கொட்டி வைக்கப் பட்டுள்ளன. இதனிடையே பாழாய்ப்போன தூக்கம் கலைந்து கனிவான சுகங்களை தந்து கொண்டிருந்த கனவு கலைந்து விடுகின்றது என்றால் எப்படி இருக்கும் அவனுக்கு?

தூக்கத்தில் கண்ட- கற்பனைக்குக்கூட எட்டாத— அந்தக் கனவு தனை நினைத்து ''ஆஹா! அதுவல்லவோ வாழ்க்கை'' என மனம் உருகி, உண்ணாமல் உறங்காமல் தவித்துக் கொணடிருக்கின்றான் ஒரு பைத்தியக்காரன் என்றால் அவனது வாழ்க்கை என்னவாகும்? உழைக்க முன் வருவானா அவன்—?

அந்தக் கனவைப் போன்றதுதான் இந்த உலக வாழ்க்கையும். ஆகவேதான் ''உலகே மாயம், உறவே மாயம், உலகில் நாம் காணும் சுகமே மாயம்'' என்ற தத்துவம் பிறந்தது. கனவில் தென்பட்ட கண்ணுக்கினிய காட்சிகள் கையும் எட்டாமல் வாய்க்கும் எட்டாமல் எப்படி மறைந்து விடு

கின்றதோ- அதுபோன்றே இந்த மாய உலகில் இவனுக்குக் கிட்டும் இன்ப துன்பங்கள் யாவும் அவனை விட்டும் மறைந்து விடக்கூடியனவாகவே இருக்கின்றது.

ஐம்பது அல்லது அறுபது ஆண்டுகள் வாழக்கூடிய மனிதனுக்கு 'கனவு' என்பது ஒரு நொடிப்பொழுது தானே ஏற்படுகின்றது? அது போன்றே அழிவே இல்லாத மறு உலக சொர்க்கம்; அல்லது நரக வாழ்க்கையினை ஒப்பு நோக்கும் போது, இந்த உலக வாழ்க்கை-ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்தாலும் - ஒரு நொடிப்பொழுதாகவே இருக்கின்றது.

கவிமணி பூசிரி (ரஹ்-அலைஹி) அவர்கள் இவ்வகை வாழ்க்கையினை' மாயக்கனாவில் ஏற்படும் சுகங்களைக் கண்டு 'மனநிறைவு' எனும் தூக்கத்தில் மூழ்கி இருப்பது மனிதனுக்கு உள்ளபலஹீனமென்கின்றார்; இன்றில்லாவிடினும் என்றாவது ஒரு நாள் அழிந்துபடக் கூடிய உலக வாழ்வும் அதில் கிடைக்கும் ஆனந்தமும் மன நிறைவு தரக் கூடியது தானா?

மன நிறைவு கொள்ள வேண்டிய மறுமையினைப் புறத்தள்ளி, அழிந்து படக்கூடியதை - கைக்குக் கை மாறும் இயல்பு கொண்டதை நினைத்து மந்தகாச நித்திரையில் மூழ்கிக் கிடக்கும் இம்மனிதனுக்கு விழிப்பு எப்போது ஏற்படும் தெரியும்?

மலக்கல் மவ்த்து வந்தவுடன் தான்

நானாக அங்ஙனம் சொல்லவில்லை, நம்மின் நாயகத் திருமேனியே அங்கனம் சொல்லியுள்ளார்கள்.

"மனிதர்கள் (மந்தகாசத்) தூக்கத்தில் மூழ்கிக் கிடக்கின்றார்கள். மவ்த்து வந்தால் விழித்துக் கொள்ளவார்கள்" என்று.

இப்படி தலைக்கு மேல் வெள்ளம் வந்தபிறகு நீந்தக் கற்றுக் கொள்ள துடிப்பதால் பயனென்ன? பயன் அளிக்கும் முயற்சியாகுமா அது? ஆகவேதான் இந்த மந்தகாசத் தூக்கம் எனும் பலஹீனம் மனிதர்களில் பலரிடம் இருப்பதாலும் அண்ணல் நபியுல்லா அவர்களின் அந்தரங்கத்தில் கொஞ்சத்தைக் கூட புரிய முடியாமல் போகின்றது. என்கின்றார் இமாம் பூசிரி.

அவரின் கூற்று எவ்வளவு பேருண்மை கொண்டது?

அல்லாஹ்தான் நமக்கு விழிப்பைத் தர வேண்டும்.

فَمَبْلَغُ الْعِلْمِ فِيْهِ أَنَّهُ بَشَرٌ
وَأَنَّهُ خَيْرُ خَلْقِ اللهِ كُلِّهِمِ (٥١)

ஃபமப்லஃகுல் இல்மி ஃபீஹி அன்னஹு
-பஷருன்
வஅன்னஹு கைரு கல்கில்லாஹி
-குல்லிஹிமி

'அண்ணல் நபிகளார் மனிதர்தான். எனினும் படைப்பினங்களில் 'அன்னவர் ஒருவரே மிகச் சிறந்தவர்' என்பதே மனித சக்தியின் உச்சக்கட்ட கணிப்பாகும்.

இதனை

அறிவின் முடிவாகும் எல்லை. அவர்மனிதரே

யெனினும்

இறைசிருட்டியாவையினும் ஏற்றமுள்ளார்'

என்பதுவே.

எனப் பாடிக் காட்டுகின்றார் மறைக்காயர்

விரை : கனவு போன்ற குறுகிய வாழ்க்கையைக் கொடுக்கப்பட்ட நம்மால் சூரியனையும் மிகைத்திடவல்ல பெருமைகள் கொண்டுள்ள முஹம்மது (ஸல்-அம்) அவர்களை முழுமையாக விளங்கிட முடியாது என்பதனை வலியுறுத்திக் கூறிய பூசிரி அவர்கள் இங்கே 51 -வது கண்ணியில்;

மனித சுபாவம், அறிவு, விளங்கும் சக்தி ஆகிய அனைத்தையும் ஒன்றிணைத்து சிந்தித்தால் 'நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் நம்மைப் போன்றதொரு மனிதர். ஆனால் சிருட்டிகள் அனைத்தையும் விட சிறப்பம்சம் நிறைந்த நிறை மனிதர்' என்ற அளவிற்கு விளங்கிக் கொள்ள முடியும் என சூளுரைக்கின்றார்.

## நபிகளார் நம்மைப் போன்றதொரு மனிதர் தான்

நபிகள் நாயகம் - நானிலத்தின் தாயகம் நைனார் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் நம்மைப் போன்றதொரு மனிதர்தான்.

நம்மைப்போன்றே ஒரு தாய் தகப்பனுக்குச் சேயாகப் பிறந்தவர்கள்தான்.

நம்மைப் போன்றே உண்டு-கழித்து-உறங்கும் சுபாவம் கொண்டவர்கள்தான்,

நம்மைப் போன்றே மணமுடித்து- குடும்ப சுகங்களை அனுபவித்தார்கள் தான்.

இதோ அதனை இறைவன் தனது சுத்த சத்தியத் திருமறையில் -

(நபியே! நீர்) எடுத்துக் கூறும்: நிச்சயமாக நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதர்தான் ..(குர் : 19-110) என்று கூறி உறுதிப்படுத்துகின்றான்.

## மாணிக்கமும் கல்லுதான்

'மாணிக்கம் கல்லுதான்' அதற்காக கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாக முடியுமா?

மல்லிகை மலர்தான். அதற்காக மலரெல்லாம் மல்லிகையாக ஆகிட முடியுமா?

தாஜ்மஹால் கட்டிடம்தான் அதற்காக கட்டிடங்களெல் லாம் தாஜ்மஹாலாக ஆகிட முடியுமா?

மலைகளெல்லாம் கடல் மட்டத்தைக் காட்டிலும் அளவில் உயர்ந்ததுதான். அதற்காக இமயத்தின் சிகரத்தை சிறியது என, எதனையாவது, எவராலும் சொல்லிட முடியாதே.

அதுபோன்றே நபிகளார் மனிதர்தான். ஆனால் மனிதர்களெல்லாம் நபிகளாராக ஆகிவிட முடியுமா என்ன?

அந்நாருக்கென்று மற்ற எவராலும், எக்காலத்திலும் மிஞ்சிட மாத்திரமல்ல. அது அதன் அருகில் நெருங்கிடக் கூட முடியாத பற்பல சிறப்புகள் - தனித் தன்மைகள் இருந்து கொண்டுள்ளது.

இதோ அதனை வல்லவனாம் அல்லாஹ்வே மீக் கோடிட்டுக் காட்டப்பட்ட அந்த அருள் திருவசனத்தின் அதே தொடரில் தொடர்ந்து கூறுகின்றான் பாருங்கள்.

...(ஆனாலும்) நிச்சயமாக உங்களுடைய நாயன் ஒரே நாயன்தான் என்று எனக்கு வஹீமூலம் அறிவிக்கப் பட்டுள்ளது. ஆகவே, எவன் தன் இறைவனைச் சந்திக்க விரும்புகிறானோ அவன் நற்கருமங்களைச் செய்து, தன் இறைவனுக்கு ஒருவரையும் இணையாக்காது (அந்த ஒருவனை மாத்திரம்) வணங்கி வருவானாக.

என்று கூறி நபிகளார் மனிதர்தான் என்றாலும் மற்ற மனிதர்களிலிருந்து சிறப்பம்சங்களாலும் எந்த மனிதப் புனிதராலும் நாட நண்ண முடியாத தனித்தன்மைக ளாலும் அப்பெருந்தகை வேறுபட்டவர் என்பதை சுடச் சுடச் சுட்டிக்காட்டியுள்ளான்.

## தெய்வங்களாக ஆக்கப்பட்டு விட்ட சாமானியர்

நபிகளார் நம்மைப் போன்றதொரு மனிதர் என்பது வெட்ட வெளிச்சமான சமாச்சாரம் தானே; அப்படியிருக்க கடைசி, கடைசி வேதமான குர்ஆனில், அப்படி 'அன்னார்

ஒரு மனிதர்தான்' என்று ஊர்ஜிதப்படுத்திக் காட்டப் பட்டிருப்பதன் நோக்கமென்ன? என்றதொரு வினாவை நமக்கு நாமே எழுப்பிக் கொண்டு, அந்த கற்பனை வினா விற்குரிய பதிலை நாம் ஆய்ந்து தோயும் போதுதான், 'அடேயப்பா! எவ்வளவு பாரதூரமான விஷயத்தை வல்லவன் கூறியுள்ளான்!' என்ற ஆச்சரியம் நம்மின் உச்சியைப் பிடித்து உலுக்கோ உலுக்கென்று உலுக்கி விடுகின்றது.

ஏனெனில்

நாட்டின் சுதந்திரத்திற்காக உடல் பொருள், ஆவி யனைத்தையும் அர்ப்பணித்த காந்தியடிகளார், நாட்டவ ரால் மறக்கப்பட முடியாத தனித்தன்மை வாய்ந்த உத்தமர்தான்-அதில் எவருக்கும் இரு கருத்து இருந்திட முடியாது.

அதுபோல' திராவிடர்களைப் பொறுத்த மட்டில் சுய மரியாதை உணர்வினை கிளறிவிட்டு அது ஒவ்வொருவரின் ஊனிலும், உயிரிலும் ஜுவாலை விட்டெரியச் செய்த பெரியார் ஈ.வெ.ரா. அவர்களின் தனித்தன்மையை குறைத்து மதிப்பிடவும் முடியவே முடியாது.

அதுபோல, தமிழ் எழுத்துலகிலும் மேடைப் பேச்சிலும் எண்ணி எண்ணி பெருமிதம் கொள்ளத் தகுமான உன்னத நிலையினைப் பெற்றிருந்த அறிஞர் அண்ணாவை எவரால் தான் மறந்திட முடியும்?

ஆனால், இந்தத் தலைவர்களெல்லாம் இன்றைக்கு அவர் அவரின் தனித்தன்மைகளைவிட கூடுதலாக

கூடுதல் என்றால் மலைக்கும் மடுவிற்குமுள்ள வித்தியாசம் என்பார்களே- அந்த அளவு கூடுதலாக கொண்டாடப்படும் அளவிற்கு- தெய்வமாகக் கொண்டாடப்படும் அளவிற்கு மிக, மிக உயர்த்தப்பட்டுப் போய்விட்டார்களே?

உண்டுமா இல்லையா?

தங்கம் தங்கம்தான்-

அதற்காக தங்க ஊசியை எடுத்துக் கண்ணைக் குத்திக் கொள்வது புத்திசாலித் தனமா?

வைரம் வைரமேதான்.

அதற்காக வைரத்தைப் பொடியாக்கி 'அரிசியை உண்ணும் பரதேசிகளே! நீங்கள் பட்டினிப் பட்டாளம் ஆதலால் அரிசியை உண்ணுகின்றீர் ஆனால் நானோ கோடீஸ்வரபிரபு ஆகவே இதோ வைரப் பொடியை புசிக்கின்றேன் பாருங்கள்!' என்று எவராவது செய்திட முன் வருவார்களா? அங்ஙனம் எவராவது முன் வந்தால் அவரின்கதி அதோ கதியாகப் போய்விடுமே!

பட்டுச்சேலை பார்ப்பதற்கு பளபளப்பாகவும் மினு மினுப்பாகவும இருக்கிறது என்பதற்காக ஆண்மகனொரு வன் அதனைக் கட்டிக்கொணடு உலாவரத் தொடங் கினால் அவனது ஆண்மை- அவனிடம் அது இருந்தும் கூட- பரிகசிப்பிற்கும் விமரிசனத்திற்கும் உள்ளாக்கப் பட்டு விடுமே! நடக்குமா, நடக்காதா?

**அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும்
நஞ்சாகும்**

அதுபோன்றுதான் தங்கத்திற்கென்று தனி மதிப்பு இருந்தாலும் அதன் மதிப்பளவிற்குத்தான் அதைக் கொண்டாடி, எது? எதற்கு அதனைப் பயன்படுத்தினால் அதன் மூலம் மனிதனுக்கு நலன் பயக்குமோ அது அதற்குத் தான், அந்தத் தங்கத்தைப் பயன்படுத்திட வேண்டும். அப்போதுதான் தங்கத்திற்குரிய மதிப்பும் மதிக்கப்படும். அதனால் பயன் பெறுபவர்களும் நற்பயனடைந்திடவும் முடியும்.

அல்லவா?

வைரம், பட்டு ஆகியவற்றின் நிலையும் அதுதான்.

அதுபோன்றுதான் தலைவர்களை அவர்களின் தகுதிக்குத் தக்கவாறு புகழ்ந்தால்தான் அது அந்தத் தலைவருக்குச் செய்யப்படும் உண்மையான மரியாதையாக மிளிர்வதோடு நாட்டிற்கும் நாட்டு மக்களுக்கும் அந்தத் தலைவரின் மூலம் நன்மை ஏற்பட்டிட முடியும்.

அளவுக்கு மீறினால் அமிர்தம்கூட நஞ்சாகப் போய் விடுமே.

ஆனால்; இன்றையத் தலைவர்கள்- சிலரின் சுயநலன்களுக்காக- அந்தச் சிலரால் திட்டமிடப்பட்டு- தெய்வங்களாக உயர்த்தப்பட்டு இருப்பதைப் போன்றே, அன்றைய கிருத்துவ அறிஞர்கள்- தங்களின் சுயநலன்களுக்காக- ஹழ்றத் ஈசா நபி (அலை) அவர்களை- அப் பெருந்தகையின் அபூர்வப் பிறப்பு நிகழ்ச்சியையும்-

அன்னவரின் மூலம் வெளிப்பட்ட முஃஜிஜாக்களையும் சுட்டிக்காட்டி- அப்பெருமகனாரை தேவகுமாரனாக) கற்பித்துவிட்டார்கள்.

## பிதா-சுதன்-பரிசுத்த ஆவி உண்டாக்கப்பட்ட கதை

ஈஸா (அத்தாட்சிகளில்) தெளிவானவைகளைக் கொண்டு வந்த பொழுது (தன் ஜனங்களை நோக்கித் "மெய்யாகவே ஞானத்தை தான் உங்களுக்குக் கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் தர்க்கித்துக் கொண்டிருப் பவைகளில் சிலவற்றை உங்களுக்கு விவரித்துக் கூறுவேன் ஆகவே, நீங்கள் அல்லாஹ்வுக்குப் பயந்து எனக்கு வழிப் படுங்கள்" என்றும், நிச்சயமாக அல்லாஹ்தான் என்னுடைய இறைவனுமாவான் (நான் இறைவனல்லன்) ஆதலால், அவன் ஒருவனையே நீங்கள் வணங்குங்கள் (என்னை வணங்க முற்பட்டு விடாதீர்கள்) இதுதான் நேரானவழி என்றும் கூறினார்.

எனினும் (அவருடனிருந்த அறிஞர் எனப்படும்) கூட்டத்தினர் (அவரைப் பற்றி பிதா, சுதன், பரித்த ஆவி என்று) தங்களுக்குள் (தர்க்கித்துக் கொண்டு) மாறுப் பட்டனர். ஆகவே, (தங்களுக்குள் உள்ள, போட்டி: பூசல்களில் அவர்களில் ஒவ்வொருவரும் தங்கள், தங்கள் நிலையை ஊர்ஜிதப்படுத்திக் கொள்ளும் மன இச்சை

யுடன் இப்படி அபாண்டம் சுமத்தி ஜுனங்களைவழி கெடுத்துவிட்ட) இவ்வக்கிரமக் காரர்களுக்குத் துன்புறுத் தும் நாளுடைய வேதனையின் கேடுதான்! குர் : 43, 63-66)

யூதர் 'உஜைரை' அல்லாஹ்வுடைய மகன் என்று கூறுகின்றனர். (இவ்வாறே) கிருத்துவர்கள் 'மஸீஹை அல்லாஹ்வுடைய மகன் என்று கூறுகின்றனர். இவர்கள் தங்கள் வாய்களால் கூறும் இக்கூற்றானது, இவர்களுக்கு முன்னிருந்த நிராகரிப்போரின் கூற்றை ஒத்திருக்கின்றது (அதில் புதுமை, புரட்சி வேறொன்றுமில்லை. (குர்: 9, 30)

## புனிதராக இருந்தும் நீதி விசாரணை

இப்படி அவாகள் அபாண்டம் சுமத்தியதன் காரண மாக பரிசுத்தவானாகிய ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர் கள் உலகில் விமரிசனத்திற்கு உரியவராக ஆக்கப்பட்டார் கள்.

அது மாத்திரமல்லாது மறுமை நீதி விசாரணையின் போது அவரைப் பரிசுத்தவான் என்று நிருபிக்கும் பொருட்டு நீதி விசாரணைக்கு அந்தப் புனிதர் உள்ளாக் கப்பட இருப்பதாக வல்லவனாம் அல்லாஹ் குர்ஆன் ஷரீபில் பின்வருமாறு கோடிட்டுக் காட்டுகின்றான்.

அன்றி, (மறுமை நாளில் ஈஸாவை நோக்கி,) ''மர்யமுடையமைந்தர் ஈஸாவே! 'அல்லாஹ்வைத்தவிர, என்னையும் என்னுடைய தாயையும் இரண்டு தெய்வங் களாக எடுத்துக் கொள்ளுங்கள் என்று மனிதர்களுக்கு நீர் கூறினீரா?'' என்று (அல்லாஹ்) கேட்பான் (அதற்கு அவர் கூறுவார்,) ''நீ மிகப் பரிசுத்தமானவன்; எனக்கு ஒரு சிறிதும் தகாததை, நான் ஒரு போதும் கூறவில்லை,

அவ்வாறு நான் கூறியிருந்தால் நிச்சயமாக நீ அதனை அறிந்திருப்பாயே! என் உள்ளத்தில் உள்ளதையும் நீ, நன்கறிவாய். உன்னில் உள்ளத்தை நான் அறிய மாட்டேன். நிச்சயமாக நீதான் மறைவான யாவற்றையும் நன்கறிபவன்

''(அன்றி) நீ எனக்கு ஏவிய பிரகாரமே நான் அவர்களை நோக்கி'' நீங்கள் எனக்கும் உங்களுக்கும் இறைவனாகிய அல்லாஹ்வையே வணங்குங்கள்'' என்று கூறினேனே யன்றி வேறொன்றையும் (ஒரு போதும்) நான் கூறவில்லை. நான் அவர்களுடன் இருந்தவரையில். நான் அவர்களின் செயலைப் பார்த்துக் கொண்டிருந்தேன். நீ என்னை (அவர்களின் கொலைபாதக முயற்சியிலிருந்து) காப்பாற்றி வானகத் தளவில் என்னை உயர்த்திக் கொண்ட பின்னர் நீதான் அவர்களைக் கவனித்தவனாக இருந்தாய் (அவர்கள் என் மீதும் எனது தாயார் மீதுப் சுமத்திய அபாண்டம்) யாவற்றிற்கும் நீயே சாட்சி (குர் : 5; 116- 117)

சிந்திக்கும் திறன்படைத்த சுயமரியாதைச் சின்னங்களே, விருப்பு, வெறுப்பிற்குப் பலியாகிடாமல் நடுநோக்குடன் ஆய்ந்தறியும் அடலேறுகளே! படித்தீர்களா திருவசனத்தின் முன்னறிவிப்பை.

இப்படி, முன் பின் பாவங்கள் அனைத்தையும் முழுசாகப் பொருத்தருளப்பட்ட மனிதப் புனிதரான ஹஜ்ரத் ஈஸா (அலை) அவர்களை உலகில் விமரிசனத்திற்கு

உள்ளாக்கியதோடு; மறுமை நாளிலும் நீதி விசாரணைக்கு உட்படுத்தப்படக் கூடிய அவலத்தையும்...?

இதுபோன்றதோர் அபாண்டம், தனது ஹபீபாகிய முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களுக்கு எப்போதும் எவராலும் ஏற்பட்டு விடாத படி வேலி அமைத்திட ஆமாம்... எந்த சக்திகளாலும் ஆட்ட அசைக்கக்கூட முடியாத படி வலுவான வேலியை-தடையை- அணையை அமைத்திட நாடிய இறைவன் தனது திருவுளத்தை (நபியே!) நீர் (தங்களது சாதக பாதகங்களுக்காக எதனையும், எப்படியும் மாற்றித் திருத்திடத் தயங்காத- சுத்த சுயநலமிகளான மனிதப் பிறவிகளுக்குத் திட்டவட்டமாக) எடுத்துக் கூறும். நானும் உங்களைப் போன்ற தொரு மனிதர்தான் (அவ்வாறின்றி, நான் கடவுளோ அல்லது கடவுளின் அவதாரமோ அல்ல என்பதனை)

என்று அந்த 19; 110 வசனத்தின் மூலம் எடுத்தியம்பியுள்ளான்.

## இதயதெய்வங்கள்

இதன் விளைவு என்ன தெரியுமா? இன்றைய விஞ்ஞான யுகத்தில் கூட, சுயமரியாதையைச் சொரணையோடு உணரப்படும் இன்றைய கால கட்டத்தில் கூட-காந்தியடிகள், பெரியார், அண்ணா போன்ற சராசரி மனிதர்களையே கடவுளர்களாக - இதய தெய்வங்களாக-கண் கண்ட தெய்வங்களாகவெல்லாம் அபாண்டம் சுமத்தப் பட்டு வருகின்ற நிலை நிலவுகையில்; இன்றைக்கு

ஆயிரத்து நானூறு ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த அந்த அண்ணல் நபிகளார் மீது- இந்த நொடிவரை- உலகின் எந்தச் சக்தியாலும் அத்தகு அபாண்டம் சுமத்த மாத்திரமல்லாது அது போன்று நினைக்க வைக்கும் ஊடையாடை நெடில்கூட நெருங்க முடியாத அளவிற்கு சத்தியத் திருத்தூதரான முஹம்மது நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் உண்மைப்புகழ் பாதுகாக்கப்பட்டு வருகின்றது.

இனியும் உலகம் உள்ளவரை நபிகளார் மீது அத்தகு அபாண்டத்தை எந்த சக்தியாலும் ஏற்படுத்திவிட முடியவே முடியாதபடி அந்தத் திருவசனம் முழுமையான அரணாக விளங்கிப் பாதுகாத்து வருகின்றது.

இதனை, மறுக்க, மறைக்க, அல்லது "அல்ல, அல்ல, முஹம்மது நபிகளார் அங்கு, அல்லது இங்கு, அப்போது, அல்லது இப்போது இன்னவர்களால் 'கடவுள்' என்று கொண்டாடப்பட்டார்கள்" என்று ஒரேயொரு சுட்டுவிரல் நீட்டிட எவராலாவது முடிந்திடவா போகின்றது

அல்லவே!

இதற்காகவேதான் வல்ல அல்லாஹ் அந்தத்திருவசனத்தில் அங்ஙனம் "நானும் உங்களைப் போன்ற ஒரு மனிதர் தான்" என்று பிரகடனப்படுத்தி விடும்படி தனது வேதத்தின் மூலமாகவே பகிரங்கக் கட்டளை பிறப்பித்து உள்ளான்.

## ஸலவாத்தை நையாண்டி செய்திடும் சாமான்யர்

இந்தத் திருவசனத்தின் இந்தக் கருவைப் புரிந்தும் வேண்டுமென்றோ, அல்லது புரியாமையின் காரணத்தினாலோ நம்மிலே உள்ள சிலர்-

நபிகளாரும் நம்மைப் போன்ற மனிதர்தான் என்று வல்ல அல்லாஹ்வே தனது வேதத்தின் மூலம் பகிரங்கமாக அறிவித்து விட்டதால் நபிகளாருக்கென்று தனித்தன்மை ஏதும் கிடையவே கிடையாது என்று வாதிடத் தொடங்கி:

ஆட்டைக் கடித்து, மாட்டைக் கடித்து கடைசியில் மனிதனையே கடித்துக் குதறும் நிலைக்கு வந்து விட்டதாகச் சொல்லப்படுமே அதுபோல நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் பால் ஸலவாத் சொல்வதையே நையாண்டி செய்திடுமளவு அந்தச் சிலர் வளர்ந்து விட்டுள்ளார்கள் என்பதனை எண்ணிடும்போது பாவம். அவர்களைப் பற்றிப் பரிதாபப் படாமல் நம்மால் இருந்திட முடியவில்லை.

இந்த விழுமிய கருத்தைத்தான் இன்னருட் செல்வரான பூசிரிப் பெருமகனார் தனது தத்துவக் காவியமான புர்தாஷரீபின் இந்த 51-ம் கண்ணிதனில்

அறிவின் முடிவாகும் எல்லை அவர்மனிதரே
யெனினும்

இறைசிருட்டி யாவையினும் ஏற்றமுள்ளார்-

-என்பதுவே

எனக்கூறி, எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் ஒப்புவமை யில்லாத் தனித்தன்மையினை எடுத்து விளம்போ விளம்பென்று விளம்புகின்றார்.

---

وَكُلُّ آيٍ آتَى الرُّسُلُ الْكِرَامُ بِهَا
فَإِنَّمَا اتَّصَلَتْ مِنْ نُوْرِهٖ بِهِمِ ٥٢

**வகுல்லுஆயின் அ(த்)தர் ருசுலுல்-**

**-கிராமுபிஹா**

**ஃப இன்னமத்தஸலத்**

**-மின் நூரி ஹிபிஹிமி**

அல்லாஹ்வின், மேன்மைமிகு (மற்ற எல்லாத் தூதர்கள் கொண்டு வந்த அற்புதங்கள் (முஃஜிசாக்கள்) அனைத்தும் (பெருமானார்) அவர்களின் பேரொளியிலிருந்து பெற்றுக் கொண்டவையே.

---

இதனை

சங்கைநபிமார்கொணர்ந்து தருபுதுமை யெல்லாமும்
எங்கள்நயினார்ஒளிவில் இருந்தவர்கள்-

-பெற்றவையே

என மறைக்காயார் படித்திகழ்கின்றார்.

வி-ரை : உலகிலேயே முதன் முதலாக மரக்கலம் செய்து நீரில் அதனை மிதக்கச் செய்த பெருமை நபி நூஹு (அலை) அவர்களைச் சாரும். ஆனால் நூஹு நபி (அலை) அவர்களுக்கு மரக்கலம் செய்யும் விவேகம் எங்கிருந்து வந்தது?

உத்தமத் திரு நபி (ஸல்-அம்) அவர்களின் பேரொளி யின் பொருட்டால்!

தனல் பறக்கும் நெருப்புக் குண்டத்தில் தூக்கி வீசப் பட்ட நபி இப்றாஹீம் (அலை) அவர்கள் அந்நெருப்புக் கங்குகளால் சுட்டெரிக்கப்படாமல் சுகம் பெற்றார்களே அது எவரால்?

உத்தமத் திருநபி (ஸல்-அம்) அவர்களின் பேரொளி இப்றாஹீம் நபியின் முதுகந்தண்டில் ஒளிர்ந்து கொண் டிருந்த காரணத்தால்!

கலீமுல்லா (அல்லாஹ்வின் சொல்) என்ற சிறப்பினைப் பெற்ற மூஸா நபி (அலை) அவர்கள் நீல் நதியை நடந்து கடந்து செல்லும் வாய்ப்பினைப் பெற்றார்களே அந்த மாட்சி எந்த ஏந்தலின் பொருட்டால் அவருக்கு கிடைத்தது?

உத்தமத் திருநபி (ஸல்-அம்) அவர்களின் பொருட் டால்!

ரூஹுல்லா (அல்லாஹ்வின் உயிர்) என்ற சிறப்பினைப் பெற்ற ஈசா நபி (அலை) அவர்கள் மரணித்தவர்களை

உயிர்ப்பித்தார்கள்- பிறவிக் குருடருக்குப் பார்வை கொடுத்தார்கள்- குட்ட நோயாளிகளை அவர் தடவிய மாத்திரத்தில் கொடுநோய் பறந்து குணம் கிட்டியது. ஆனால் இத்தகு விந்தையான ஆற்றல்களெல்லாம் எங்கிருந்து ஈசா (அலை) அவர்களுக்கு கிடைத்தது?

உத்தமத் திருநபி (ஸல்) அவர்களின் பேரொளியின் சுடரிலிருந்து அத்தகு விந்தைகள் அவருக்குக் கிடைத்தது.

இல்லை என மறுக்க முடியுமா?

இதனை உள்ளங்கை நெல்லிக்கனி போல எண்பிக்கும் ஒரு ஹதீதை படித்துப்பாருங்கள்

அப்போது புரியும் நான் இயம்புவது எவ்வளவு பொருத்தமான வாதம் என்று!

ஹழ்றத் ஜாபிர் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்.

ஒருபோது உத்தமத் திருநபிகளிடம் ''அல்லாஹ்வின் திருத்தூதே எம் தலைவா! வல்ல அல்லாஹ் ஆதியில் எதனைப் படைத்தான்?''

என்று நான் விபரம் கேட்டேன்.

அப்போது:

''ஜாபிரே! அனைத்திற்கும் ஆதியாக உனது நபியின் நூரை (பேரொளியை)ப் படைக்கப் பட்டது. அந்த நூரே முஹம்மதியாவிலிருந்து மற்றெல்லா நன்மை தீமைகளும் படைக்கப் பட்டது. அதன் பின் மற்ற மற்ற படைப்பினங்களும் அதிலிருந்தே படைக்கப்பட்டது.

ஆதியில் படைக்கப்பட்ட (எனது) அந்த நூர் அல்லாஹ்வின் சன்னிதானத்தில் 'குர்பு' எனும் ஸ்தானத்தில் 12,000 ஆண்டுகள் நூராகவே இலங்கிக் கொண்டிருந்தது.

அதன் பின்னர் அந்த நூர் நான்காகப் பங்கிடப்பட்டு; ஒருபாகம் கொண்டு அர்ஷையும், இரண்டாம் பாகம் கொண்டு குர்ஷையும், மூன்றாம் பாகம் கொண்டு அர்ஷைச் சுமக்கும் மலக்குகளையும், குர்ஷைக் காக்கும் காவலர்களையும் படைக்கப்பட்டு மீதமுள்ள நான்காம் பாகம் 'ஹுப்பு' எனும் ஸ்தானத்தில் 12,000 ஆண்டுகள் இலங்கிக் கொண்டிருந்தது.

அதன் பின்னர் அதனை நான்காகப் பங்கிடப்பட்டது. இந்த நான்கில் ஒரு பாகம் கொண்டு கலமையும், ஒரு பாகம் கொண்டு லவ்ஹுல் மஹ்ஃபூலையும், மூன்றாம் பாகம் கொண்டு சொர்க்கத்தையும் படைக்கப்பட்ட பின் மீதமுள்ள ஒருபாகம் 'கவ்ஃபு' எனும் ஸ்தானத்தில் 12,000 ஆண்டுகள் ஒளிர்ந்து கொண்டிருந்தது.

அதன் பின்னர் அதனை நான்காகப் பங்கிடப்பட்டது. இந்த நான்கில் ஒருபாகம் கொண்டு மலக்குகளையும், ஒரு பாகம் கொண்டு சூரியனையும், ஒரு பாகம் கொண்டு சந்திரனையும் படைக்கப்பட்ட பின்னர் மீதமுள்ள ஒரு பாகம் 'ராஜாவு' எனும் ஸ்தானத்தில் 12,000 ஆண்டுகள் ஒளிர்ந்து கொண்டிருந்தது.

அதன் பின்னர் அதனை நான்காகப் பங்கிடப்பட்டு ஒருபாகம் கொண்டு 'அக்லு' எனும் உணர்வையும், ஒரு பாகம் கொண்டு 'ஞானம்' எனும் பகுத்தறிவையும், ஒரு பாகம் கொண்டு 'சமாதானம் - பரிசுத்தம், ஆகியவைகளையும் படைக்கப்பட்ட பின்னர் மீதமுள்ள ஒரு பாகம் 'ஹயாவு' எனும ஸ்தானத்தில் 12,000 ஆண்டுகள் ஒளிர்ந்து கொண்டிருந்தது.

அப்போது அந்த நூரே முஹம்மதிய்யாவை வல்ல அல்லாஹ் ஏறிட்டு நோக்கினான். ஆகவே அதிர்ச்சியடைந்த அந்த நூரே முஹம்மதியாவிலிருந்து வியர்வைத் துளிகள் துளிர்த்து 1, 24, 000 சொட்டுகள் சொட்டியது. அந்த வியர்வைத் துளிகளிலிருந்து நபி ரசூல்மார்களின் ருஹைப் படைக்கப்பட்டது.

இங்ஙனம் படைக்கப்பட்ட நபி ரசூல்மார்களின் ருஹுகள் சுவாசித்தன. அந்த சுவாசத்திலிருந்து வலிமார்களின் ருஹுகளும், சத்திய விசுவாசிகளின் ருஹுகளும் படைக்கப்பட்டன.

இதன்படி,

அர்ஷும், குர்சும் எனது பேரொளியிலிருந்து படைக்கப்பட்டவைதான்.

கர்ருபிய்யூன், துக்கானிய்யூன்களான அனைத்து மலக்குகளும் எனது பேரொளியிலிருந்து படைக்கப்பட்டவர்கள்தான்.

ஏழு வானங்களும், சொர்க்கமும் அதன் வகுப்புகளும், சூரியனும், சந்திரனும், நல்லடியார்களும் எனது பேரொளி யிலிருந்து படைக்கப்பட்டவைகள்தான்.

அதன் பின்னர் வல்ல அல்லாஹ் பனிரெண்டு திரைகளைப் படைத்து, ஒவ்வொரு திரையிலும் 1000 ஆண்டுகள் வீதம் அந்த ஒளியை ஒளிரச் செய்தான். அடிமைத்தனம், மகத்துவம், சௌபாக்கியம், பயம், கருணை, ஆதரவு, சமாதானம், சகோதரத்துவம், ஞானம், பொறுமை, சத்தியம், விசுவாசம் ஆகிய குணாதிசயங்களின் அடிப்படையில் ஒவ்வொரு திரையிலும் 1000 ஆண்டுகள் வீதம் அந்த ஒளி அல்லாஹ்வை ஆராதனை செய்து கொண்டு இருந்தது.

அதன் பின்னர் திரையிலிருந்து புறப்பட்டு அது பூமியில் இறக்கப்பட்டது. ஆகவே, பூமியில் உதயகிரி முதல் அஸ்த்தகிரி வரை அந்த ஒளி ஒளிர்ந்தது.

அதன் பின்னர் ஹஜ்ரத் ஆதம் (அலை) படைக்கப்பட்டார். அப்பெருந்தகையின் நெற்றியில் (எனது) அந்த பேரொளி ஒளிர்ந்து கொண்டிருந்தது. அதன் பின்னர் ஷீது நபி (அலை) அவர்களுக்கு அதுமாறி; இப்படியாக ஒவ்வொரு பரிசுத்தவான்களிலிருந்து பரிசுத்தவான்களுக்கு மாறி மாறி வந்து, முடிவாக அப்துல் முத்தலிபின் மைந்தர் அப்துல்லாஹ்விற்கு மாறி, அவர்களிடமிருந்து எனது தாயாராகிய ஆமினா மாதாவின் கர்பக்குவளறையில் மாறி அதன் பின்னர் இப்பூவுலகில் நான் பிரசவிக்கப்படுகின்றேன்.

நபி ரசூல்மார்களின் தலைவராகவும், ரஹ்மதுன்லில் ஆலமீனாகவும், கடைசித் திருத்தூதராகவுமாக ஆகிய தோடு கை கால்கள் வெளுத்தவர்களின் நாயகராகவும் ஆக்கப்பட்டுள்ளேன்.

ஜாபிரே! இப்படித்தான் உனது நபியின் பேரொளி பரிணாமம் கண்டது.

என்று நபிகளார் முஹம்மது முஸ்தஃபா (ஸல்) அவர்கள் தங்களது ஒளியின் ரகசியத்தை விளக்கிக் கூறினார்கள்.

அப்படியென்றால் நமது நபிகளாரின் மகத்துவத்தை மட்டிட எவரால் தான் முடியும்?

குறிப்பு : இந்த மூன்றாவது காண்டத்தின் முகப்புரை யான புகழாரத்தில் சொல்லப்பட்டுள்ள நாயகப்பேரொளி யின் பரிணாமச் செய்திக்கும் இங்கே 52-ம் கண்ணியில் ஹஜ்றத்ஜாபிர் (ரலி-அன்ஹு) அவர்களால் அறிவிப்புச் செய்யப்படும் நாயகப் பேரொளியின் பரிணாமச் செய்திக்கு மிடையில் முரண்பாடு இருப்பதாகத் தோன்றக்கூடும்.

ஆனால்; எவ்வித முரண்பாடும் இல்லவே இல்லை.

ஏனெனில்; ஹஜ்ரத் நபிகளார் அவர்கள் பாத்திர மறிந்து பிச்சையிடுவதில் நேர் நிகரற்றவர்கள். ஆதலால், உருவகப்படுத்திச் சொல்லப்பட்டால் தான் இவர் இதனைப் புரிந்து கொள்வார் என்று அவர்களுக்குத் தோன்றியதன் அடிப்படையில் முகப்புரையில் உள்ளபடி நூரே

முஹம்மதிய்யாவின் பரிணாமத்தை விளக்கிக் காட்டியிருக்கக்கூடும். அதுபோல ஹஜ்ரத் ஜாபிர் (ரலி-அன்ஹு) அவர்களுக்கு உருவகப் படுத்திக் காட்டத் தேவையில்லை என்று நபிகளார் கருதியதால் அன்னாருக்கு இங்கு கண்டுள்ளபடி உருவகப்படுத்தாமல் உள்ள விபரத்தை அப்படிக்கப்படியே கூறியிருக்கக் கூடும்.

அஃதன்றி, முன்செய்தியில் போராளியை ஐந்தாகப் பங்கிடப்பட்டதாக இருப்பதைப் பற்றியும் குழப்பம் கொள்ளத் தேவையில்லை.

ஏனெனில்; அல்லாஹ்வின் சந்நதியில் எண்ணிக்கைக்கு எவ்விதப் பொருளுமில்லை. ஆனாலும் மனிதர்களாகிய நம்மவர்க்குத்தான் எண்ணிக்கை என்ற வகை தொகை அத்தியாவசியப்படுகின்றது. இந்நிலையில் 'ஐந்து' என்பதும் நான்கு என்பதும் முன்னிலையாளரின் கவனக் குறைவால் ஏற்பட்ட முன் பின்னாகவும் இருக்கக் கூடும்.

ஆகவே அவைகளை யெல்லாம் குழப்பத்திற்குரிய ஒன்றாக எடுத்துக் கொண்டு வீண் குழப்பங்களில் ஆழ்ந்து கொண்டிருக்காமல் 'அனைத்திற்கும் அந்த நூரே முஹம்மதிய்யா தான் மூல வித்து' என்ற அசல் கருத்தை மாத்திரம் சிந்தனைக்கு விருந்தாக எடுத்துக் கொள்ளும்படி வேண்டுகின்றேன்.

பொதுவாகச் சொல்வதென்றால் உலகில் தோன்றிய ஒரு லட்சத்து இருபத்து நான்காயிரம் நபிமார்கள் - ரசூல்

மார்கள் ஆகிய அனைத்துச் சீர்திருத்த வாதிகளின் சீர்திருத்தக் கருவாக- பிரச்சாரக் கருவியாக-கொள்கையாக -கோட்பாடாக- லட்சியமாக இருந்தது எங்கள் நயினார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் பேரொளி தான் என்பதனையே 'எங்கள் நயினார் ஒளியில் இருந்தவர்கள் பெற்றவையே' எனச் சாற்றுகின்றார் சாற்றுகவி பூசிரி அடுத்து ஓர் உவமை தனைக் கூறிக் காண்பிக்கின்றார்; அதாவது:-

فَإِنَّهُ شَمْسُ فَضْلٍ هُمْ كَوَاكِبُهَا
يُظْهِرْنَ أَنْوَارَهَا لِلنَّاسِ فِي الظُّلَمِ ٥٣

ஃபஇன்னஹு ஷம்ஸு ஃபள்லின்-
-ஹும் கவாகிபுஹா
யுள்ஹிர்ன அன்வாரஹா-
-லின்னாஸி ஃபிள்ளுலமி

ஏனெனில் உறுதியாக அண்ணல் நபிகளார் மேன்மை எனும் சூரியனாக உள்ளார்கள். அவ (மற்ற நபிமா) ர்கள் (ஆன்மீக வானின்) நட்சத்திரங்களாக ஒளிர்கின்றனர். அவை(நட்சத்திரங்கள்) இருளில் தான் மாந்தர்க்கு ஒளிகளை உமிழ்கின்றன.

இதனை

உயர்வாம்பரிதியவர் உடுக்குலமாம் ஏனைநபி

அயர்இருளில் தம்ஒளியை அவை நரர்க்குக்
-காட்டிடுமே.

என மறைக்காயர் பாடுகின்றார்.

வி-ரை : காரிருள் கப்பிய அமாவாசை இருட்டு- மின் விளக்குகளும் பொய்த்து ஒளிதர மறுத்த இக்கட்டானதொரு நிலை-பாட்டரியும் கைவசமில்லை-அகல் விளக்கோ அரிக் கண்லாந்தலோ இல்லவுமில்லை. இந்நிலையில் என்ன செய்வது? சாதாரண வேலை என்றால் சரிதான் காலை யில் பார்த்துக் கொள்ளலாம் என இருந்து விடலாம்' அசாதாரண வேலை. வெளியில் சென்று ஆகவேண்டுமே என்ன செய்வது?

என்ன செய்ய முடியும்? தெருவில் இறங்கி நடந்துவிட வேண்டியதுதான். கும்மிருட்டில் எப்படி நடப்பது என்று கேட்கின்றீர்கள். கும்மிருட்டிலும் ஒருவகை மங்கலான வெளிச்சம் நிச்சயம் தென்படத்தான் செய்யும் அந்த வெளிச் சத்தின் உதவிகொண்டு தட்டுதடுமாறி நடக்க வேண்டியது தான்.

கும்மிருட்டிலும் மங்கலான வெளிச்சம் தெரிகின்றதே அந்த மங்கலான வெளிச்சம்தான் வானிலே மினனிக் கொண்டிருக்கும் நட்சத்திரக் கூட்டம் தரும் வெளிச்ச மாகும்.

ஆனால் அந்த நட்சத்திரங்களுக்கு சுயமாக ஒளி உமிழும் ஆற்றல் உள்ளதா? இல்லை. சூரிய வெளிச்சத்தை இரவலாக—இனாமாகப் பெற்று பிரதிபலிக்கின்றன; அவ்வளவுதான்.

அதுபோன்று தான்

ஏனைய எல்லா நபிமார்களும்- தீர்க்கதரசிகளும்- மக்களுக்கு வழிகாட்டினார்கள். ஆனால் சுயமான ஆற்றல் இருந்ததே இல்லை; அவர்களில் எவருக்குமே.

அனைத்து நபிமார்களின் சீர்திருத்தங்களும் எங்கள் அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்கள் தான்.

ஏனைய அனைத்து நபிமார்களின் கொள்கையாக கோட்பாடாக- லட்சிய தீபமாகத் திகழ்ந்தவர் எங்கள் அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்கள் தான்.

விந்தைமிகு அற்புதங்களைச் செய்து காட்டி வேந்தர்களையும் விழும்படி, செய்தார்கள் ஏனைய நபியுல்லாக்கள் என்றால், அவர்கள் அங்கனம் அற்புதங்கள் நிகழ்த்த அச்சாணியாக இருந்தவர் எங்கள் நபிமணி (ஸல்-அம்) அவர்களன்றோ.

'எப்படி இதனைச் சொல்லுகின்றாய்(?) உன் கூற்றுக்கு ஆதாரம் என்ன?' என்று கேட்பீர்கள்; அல்லவா?

நான் அல்லாஹ்வின் ஒளியிலிருந்து படைக்கப்பட்டேன் மற்ற படைப்பினங்கள் அனைத்தும் என் ஒளியிலிருந்து

படைக்கப்பட்டன" என எங்கள் அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்கள் சொல்லி உள்ளார்கள். இதைவிட வேறு என்ன ஆதாரம் வேண்டும்?

ஞான சூரியனாகிய எங்கள் நயினார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் ஞான ஒளியை இரவலாக-இனாமாகப் பெற்றுத்தான் ஞான நட்சத்திரங்களான ஏனைய நபிமார்கள் உலகிற்கு வழிகாட்டினார்கள் என்பதற்கு அதனை விட வேறு சான்று தேவைதானா?

இதில் இன்னுமொரு விளக்கமென்னவென்றால்;

இருளிரவில் நட்சத்திரங்களின் மங்கலான ஒளியில் வழிநடந்தாக வேண்டிய நிர்பந்தம், எல்லா மக்களுக்குமா ஏற்படுகின்றது? இல்லை, ஏதோ ஒரு சிலருக்கு ஒரு சில சந்தர்ப்பங்களில்.

அது போல ஏனைய நபிமார்களின் வழிகாட்டுதல் எல்லா மக்களுக்கும் எல்லா நேரங்களிலும் தேவைப்படவில்லை- பயன்படவில்லை. ஒரு குறிப்பிட்ட இனத்தவருக்கு- மொழியினருக்கு- குறிப்பிட்ட கால கட்டத்திற்கு - குறிப்பான சில நபிமார்களின் வழிகாட்டுதல் தேவைப்பட்டது. ஆகவே அந்தக் குறிப்பிட்ட மக்கள் குறிப்பான அந்த நபிமார்களின் துணைகொண்டு தீன் வழி கண்டார்கள்.

ஈசா நபி இப்றானி மொழி பேசும் இஸ்ரவேலர்களுக்கு ஒரு குறிப்பிட்ட கால கட்டத்திற்கு நபியாக வழிகாட்டினார்கள்;

சுரியானி மொழி பேசிய இஸ்ரவேலர்களுக்கு மூஸா நபி (அலை) வழிகாட்டியாகத் திகழ்ந்தார்கள்.

அரபி மொழியினருக்கு ஆதம்நபி (அலை) வழி காட்டினார்கள்.

இப்படியாக அன்றைய தமிழர்களுக்கு ஒரு நபி.

இப்படித்தான் அனைத்து நபிமார்களும்.

ஆனால் எங்கள் நபிமணி (ஸல்-அம்) அப்படியா?

அனைத்து நாட்டவருக்கும்- அனைத்து நிறத்தவருக்கும்- அனைத்து மொழியினருக்கும்- அனைத்து காலத்தவருக்கும் உலகம் இருக்கும் வரை- உடலில் உயிர் இருக்கும் வரை பொது வழிகாட்டியாக இருக்கின்றார்கள். சூரியனைப் போன்று,

அன்றி,

நட்சத்திரங்களின் ஒளி மங்கலானது தெளிவற்றது.

அது போல ஏனைய நபிமார்களின் வழி காட்டுதலும் மங்கலான-சம்பூரணமற்ற வழி காட்டுதல்தான்.

ஆகவேதான் அருட்கவி பூசிரி (ரஹ்) அவர்கள் உயர் வாம் பரிதியவர்; உடுக்குலமாம் ஏனை நபி எனச் சாற்று கின்றார்.

أَكْرِمْ بِخَلْقِ نَبِيٍّ زَانَهُ خُلُقٌ
بِالْبِشْرِ مُشْتَمِلٍ بِالْحُسْنِ مُتَّسِمِ (٥٢)

**அக்ரிம் பிகல்கி நபிய்யின் ஸானஹு**
**- குலுகுன்**

**பில்பிஷ்ரி முஷ்தமிலின் -**
**-பில்ஹுஸ்னி முத்தஸிமி-**

நந் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் உருவ அழகே அழகு! நற்குணம் அதனை (மென் மேலும்) அலங்கரித்து உள்ளது; அன்னார் (அகம் புறம் ஆகிய சாமுத்ரிகா) இலட்சணங்களால் பிணைந்தவர்கள்; 'மலர்ந்த முகத்தார்' என வர்ணனை பெற்றவர்கள்.

இதனை -

உருவால்நபிஉயர்வே உயர்வுகுணம்
மணனும் அதை-
முருகேஉருவானோரர் முறுவல்தவழ்-
-இன்முகத்தார்.

என மறைக்காயர் பாடி மகிழ்கின்றார்.

வி-ரை : நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் உருவ அமைப்பில் அழகின் உச்சாணியில் இருந்தார்கள் என்பது

எப்படி மறுக்க முடியாத-மறைக்க முடியாத உண்மையோ அப்படியே அக அழகிலும்- குணவியலிலும்- உச்சாணியில் இருந்துள்ளார்கள். ஆகவேதான்,

அல்லாஹ்வையும், இறுதிநாளையும் (மெய்யாகவே நம்பும் உங்கள் அனைவருக்கும் நிச்சயமாக (இந்த முஹம்மது) நபியிடம் ஓர் அழகிய முன் மாதிரி இருக்கின்றது எவனும் புறக்கணித்தால், நிச்சயமாக அல்லாஹ் (அத்தகையோரிடம்) தேவையற்றோனும் மிக்க புகழுடையோனுமாக இருக்கின்றான் (குர் : 60; 6)

என்றும்;

அல்லாஹ்வையும், இறுதிநாளையும் உறுதியாக நம்புகிறவர்களுக்குரிய அழகிய முன்மாதிரி. நிச்சயமாக அல்லாஹ்வுடைய தூதரிடமே உங்களுக்கு இருக்கின்றது. அவர்கள், (அவரைப் பின்பற்றி) அல்லாஹ்வை அதிகமாக நினைத்துருகி (துதி செய்து) கொண்டிருப்பவர்கள் (குர் : 33; 21)

என்றும்;

(நபியே, முஹம்மதே!) நாம் உம்மை உலகத்தார் யாவருக்கும் ஓர் அருளாகவே அனுப்பியிருக்கின்றோம் (குர் : 21; 107)

என்றும்;

(விசுவாசிகளே!) உங்களிலிருந்து நிச்சயமாக (நம்முடைய) ஒரு தூதர் உங்களிடம் வந்திருக்கின்றார்.

(உங்களுக்கு ஏதாவதொரு சின்னத் துன்பம் ஏற்பட்டு நீங்கள் கஷ்டத்திற்குள்ளாகும்படி நேரிட்டால் (அதுகூட) அவருக்கு மிகுந்த வருத்தமாகவே இருக்கும் (அவ்வளவு தூரம் உங்களின்பால் பற்றையும், பாசத்தையும், பொழியக் கூடியவர்) அன்றி, உங்களை (அல்லாஹ்வாகிய எனது பொருத்த மிக்க (நல்லடியார்களாகத் திகழச் செய்ய வேண்டுமென்பதில்) பெரிதும் பேராசை கொண்டவர். விசுவாசிகளின்மீது மிகுந்த அன்பும், கிருபையும் உடைய வராக (அவர்) இருக்கின்றார். (குர் : 10; 128)

என்றும்;

("இந்த நபியிடம் எவ்வளவு கீழானவர் எதைக் கூறிய போதிலும் அதற்கும்கூட) செவி கொடுக்கக் கூடிய வராக அவர் இருக்கின்றார்" என்றுகூறி (நமது நந்) நபியைத் துன்புறுத்து வோரும் அவர்களில் பலர் இருக் கின்றனர். (அத்தகு ஆணவக்காரர்களுக்கு நபியே!) நீர் கூறும்" (அவ்வாறு சமுதாயத்திலுள்ள அனைவருக்கும் அவர்) செவி கொடுப்பது உங்களுக்கே நன்று. அவர் அல்லாஹ்வையும் நம்புகின்றார். அன்றி; உங்களில் விசுவாசங் கொண்டவர்கள் மீது மிக்க கிருபையுடையோ ராகவும் இருக்கின்றார்"... (குர் : 9; 16)

என்றும்;

(நபியே! விசுவாசிகளை நோக்கி,) நீர் கூறும்; உங்க ளுடைய தந்தைகளும், உங்களுடைய மக்களும், உங்க

ளுடைய சகோதரர்களும், உங்களுடைய துணைவர்களும், உங்களுடைய குடும்பமும், நீங்கள் சம்பாதித்து வைத்திருக்கும் பொருட்களும், நஷ்டமாகி விடுமோ என்று நீங்கள் பயந்து (மிகுந்த எச்சரிக்கையுடன்) செய்து வரும் வர்த்தகமும், உங்களுக்கு மிக்க விருப்பமுள்ள உங்களின் வீடுகளும் அல்லாஹ்வையும் அவனுடைய தூதரையும் விடவும், அவனுடைய பாதையில் தர்மயுத்தம் செய்வதை விடவும் உங்களுக்கு மிக்க உயர்வானவைகளாக நீங்கள் கருதினால் (எச்சரிக்கை!) அல்லாஹ்வுடைய கட்டளை வரும் வரையிலும் நீங்கள் (ஆடாத ஆட்டம் போட்டுக்கொண்டு) எதிர்பார்த்திருங்கள். (உங்களைப் போன்ற) பாவிகளை, அல்லாஹ் நேரான வழியில் செலுத்தப் போவதில்லை. (குர் : 9; 24)

என்றும்;

விசுவாசிகளுக்கு அவர்களுடைய இன்னுயிர்களைவிட (நமது திருத்தூதரான முஹம்மது) நபிதான் மிக்கப் பிரதானமானவர். நபிகளாருடைய மனைவியர்களோ அவர்களின் தாய்மார்களாவர். (குர் : 33; 6)

என்றுமெல்லாம் இறைவன் தனது திருமறையில் கூறி நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் குணப் பண்புகளை புகழ்ந்துரைக்கின்றான்.

இதனைத்தான் இங்கே ''குணம்'' உருவ அழகினை அலங்கரிப்பதாக இருந்தது,'' என்று இயம்புகின்றார் இயற்கை கவி பூசிரி.

كَالزَّهْرِ فِيْ تَرَفٍ وَّالْبَدْرِ فِيْ شَرَفٍ
وَالْبَحْرِ فِيْ كَرَمٍ وَّالدَّهْرِ فِيْ هِمَمٍ ٥٥

[illegible] [illegible]
[illegible]
[illegible] [illegible]
[illegible]

மன்னர் நபியுல்லா மென்மையில் மலரையொத்தவர்கள்; மேன்மையில் முழு மதி போன்றவர்கள்; ஈகையில் (கடல்-) அலையைப் போன்றவர்கள்; ஆண்மையில் காலத்தை ஒத்தவர்கள்,

இதனை —

மலர்போல்வார்மென்மையிலே-
-மதிபோல்வார் மேன்மையிலே
அலைபோல்வார்ஈகையிலே-
-ஆண்மையினிற் காலம்ஒப்பார்;

என மறைக்காயர் பாடி மகிழ்கின்றார்

வி-ரை 'குண நலத்தின் குன்றாக இருந்தார்கள் எங்கள் கோமான் நபியுல்லா' — என வாய்ப் பந்தல் போட்டுக் கொண்டிருந்தால் போதுமா?— ''இன்னின்ன குணாதிசயங்களில் இப்படிச் சிறந்து விளங்கினார்கள்'

என்று குறிப்பிட்டுக் காட்டினால் அல்லவா பாமரரும் பண்டிதரும் புகுத்துணர முடியும்''?

ஆகவே இங்கே மென்மை, மேன்மை, ஈகை, ஆண்மை ஆகிய குணச் சிறப்புகளில் நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் வகித்த பங்கினைச் சொல்லிக் காண்பிக்கின்றார் நமது சொல்லேருழவர் பூசிரி (ரஹ்) அவர்கள்.

## மென்மை

'மாமனிதர்' என எவரையேனும் சொல்ல வேண்டு மெனில் அவரிடம் மென்மை இருந்திட வேண்டும் என்கிறார் அறிஞரொருவர். கடுமை கடுகடுப்பு-ஆகிய தீய குணங்களுக்கு மாற்றமான பண்பிற்கே மென்மை என்று கொள்ளப்படுகின்றது. இதனை வைத்துப் பார்த்தால் நமது நபிகள் நாதர் (ஸல்-அம்) அவர்களிடம் எந்த நிலையிலும் கடுமை இருந்ததாக எவரும் காட்ட முடியாது. எவரிடமும் கடுகடுப்புடன் நடந்துள்ளதாக நிருபிக்க முடியவே முடியாது; மாறாக ஜென்மப் பகைவர்களிடம் கூட மென்மையாக நடந்துள்ள நன் நிலையினைத்தான் நமது நபிகளாரிடம் காண முடிகின்றது.

மதீனா முனவ்வராவில் மன்னர் நபியுல்லா கொடிகட்டி வாழ்ந்து கொண்டிருந்த காலமது. அந்நேரத்தில் நபிகளாரின் அன்பு மனைவியர்களில் ஒருவரான ஆயிஷா ஸித்தீக்கா (ரலி-அன்ஹா) அவர்களின் மீது அவதூறு

கற்பிக்கப்பட்டது. சூழ்நிலை-சந்தர்ப்பம் அவதூறுக்கு சாட்சியம் கூறியது ''இருக்கும்-இருக்கும்'' என்று சில மனிதர்கள் கூட நினைக்கத் தொடங்கினர். இது எப்படியோ நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களுக்கும் எட்டி விட்டது.

'தமது மனைவியின் நடத்தையில் களங்கம் ஏற்பட்டு விட்டது' என்றவுடன் என்ன செய்தார்கள் நமது நபிகளார் என்பதனை அடுத்துப் பார்ப்போம். அதற்கு முன்; நம் மனைவியின் மீது அப்படி ஒரு களங்கம் கற்பிக்கப் பட்டால் என்ன செய்வோம் நாம்? என்பதைச் சற்று சிந்தித்துப் பார்ப்போம். ஒன்று; எந்த மனிதனை நமது மனைவியுடன் சம்பந்தப்படுத்தி பேசப்படுகின்றதோ அந்தப் பிரதிவாதியைத் தேடிப் பிடித்து அவனைக் கொன்று குவிப்போம் அல்லது கலங்கப்படுத்தப் பட்ட நமது மனைவியைக் கொலை செய்து கோபாவேசத்தைத் தணிப்போம் அதுவும் முடியாவிட்டால் நம்மை நாமே மாய்த்துக் கொள்வோம் இப்படி ஏதாவதொரு கர்ணகடூர மான பதில் நடவடிக்கை எடுத்தால்தான் நமது மனம் சாந்தியடையும் அல்லவா?

ஆனால்,

தமது மனைவியான ஆயிஷா (ரலி-அன்ஹா) மீது களங்கம் சம்பந்தப்பட்டதைக் கேள்விப்பட்ட நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் அப்படி ஏதாவது கொதிப்பைத் தணிக்கும் நடவடிக்கைகளில் இறங்கினார்களா? . இல்லை! இல்லவே இல்லை! மாறாக ஒன்றுமே தெரியாதவர்கள்

போல காணப்பட்டார்கள். மனக் குழப்பமோ சஞ்சலமோ கிஞ்சிற்றும், கொள்ளாமல் அமைதியாக இருந்தார்கள்.

அது மாத்திரம் தானா?

''எவர்கள் (ஆயிஷா நாயகி மீது பொய்யாக) அவதூறு கூறினார்களோ அவர்களும் உங்களிலுள்ள ஒரு கூட்டத்தினர் தான்.

உங்களுக்கு ஏதும் அ(ங்கனம் அவதூறு கூறப்பட்ட) தனால் தீங்கு ஏற்பட்டு விட்டதாக நீங்கள் எண்ண வேண்டாம். அது உங்களுக்கு நன்மையாகவே முடிந்தது. அவதூறு கூறிய ஒவ்வொருவருக்கும் அவர்கள் (அவதூறு கூறித் தேடிக் கொண்ட) பாபத்தின் அளவுக்கு தக்க தண்டனை (நிச்சயமாக இந்த உலகிலும், மறுமையிலும்) உண்டு. இந்த அவதூற்றில் அவர்களில் எவர், பெரும் பங்கெடுத்துக் கொண்டார்களோ (அந்த அளவுக்கு) அவர்களுக்கு மகத்தான வேதனை யுண்டு (குர் : 24. 11)'' என்று இறைவனே எடுத்துக் கூறி

ஆயிஷா (ரலி) அவர்கள் 'தங்கத்துள் தங்கம் தனித் தங்கம்'' என்று வஹியின் மூலம் களங்கம் துடைக்கப் பட்டபோது சஹாபாக்கள் எல்லாம் ஒன்றிணைந்து ''அண்ணலே! அனுமதியுங்கள் அவதூறு கற்பித்த அயோக்கியனை சின்னா பின்னப்படுத்துகின்றோம்'' என துடித்தபோது- வேண்டாம் விட்டுவிடுங்கள், மறப்போம் மன்னிப்போம்'' என்றார்கள்.

யார் சொல்வார் இப்படி? உதாரணம் காட்ட முடியுமா?

நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் வாழ்க்கை தனில் இப்படி மென்மை போக்கினைத் தான் காண முடிகின்றது. ஆகவேதான் ''மென்மையிலே மலர் போன்றவர்'' என பூசிரி (ரஹ்) அவர்கள் வர்ணிக்கின்றார் உண்மைதானே!

## நேர்மை

ஒரு கிருத்துவர் அபூஜஹ்லிடம் வசமாக மாட்டிக் கொள்கிறார். கொடுத்து வைத்த பணத்தை 'இல்லை' என்று அவன் நிமித்தி விடுகின்றான். அபூஜஹ்லிடம் யார் பேச முடியும்? மக்கத்திலுள்ள நியாயவாதிகளெல்லாம் ''அபூஜஹ்லிடம் அது விஷயமாக பேச இயலாது. அவர் ஒரு வம்பர். உங்களது பணத்தைப் பற்றி அவரிடம் எதுவும் பேசாமல் விட்டு விடுவதுதான் உங்களுக்கு நல்லது'' என்று பணத்தை பறிகொடுத்த கிருத்தவரிடம் 'சமாதானம்' கூறித் தலையைக் கழற்றிக் கொள்கின்றனர். கடைசியாக அந்த கிருத்துவர் நமது நபிகளார் அவர்களை அணுகுகின்றார். நபிகளாரும் அவரைத் தீர விசாரித்து ''இவர் பணம் கொடுத்து வைத்தது உண்மைதான்'' என்பதை ஊர்ஜிதம் செய்து கொண்டபின் உடனடியாக அவரை அழைத்துக் கொண்டு அபூஜஹ்லின் வீட்டிற்கு சென்று வாங்கி வைத்துள்ள பணத்தை கொடுத்து விடும்படி அபூஜஹ்லிடம் வேண்டுகின்றார்கள். சுப்ஹானல்லாஹ்! என்ன ஆச்சரியம்! ''இல்லை, இல்லை. கொடுக்கவே இல்லை'' என்று அடித்துப் பேசிக் கொண்டிருந்த அபூஜஹ்ல், அண்ணலாரை கண்ட மாத்திரத்தில் அணாப்பைசா பாக்கி

இல்லாமல் அனைத்துப் பணத்தையும் எண்ணிக் கொடுத்த துடன். ''இவ்வளவு தானே ! சரி பார்த்துக் கொள்ளுங்கள் என்று ஒன்றுமே நடக்காத பாவனையில் பேசி அந்தக் கிருத்துவரையும் அண்ணலாரையும் வழியனுப்பி வைத்தான் என்றால் என்ன பொருள்?

அப்படி என்னதான் அண்ணலவர்களிடம் இருந்தது?

அண்ணலும், கிருத்துவ நண்பரும் அங்கிருந்து சென்ற வுடன் அபூஜஹிலின் மனைவி ''என்ன பெரிதாகப் பீற்றி னீர்கள் முஹம்மதைக் கண்ட மாத்திரத்தில் முனைப்பை யெல்லாம் மூட்டைக்கட்டி வைத்து விட்டு பெட்டிப் பாம்பாக படுத்து விட்டீர்களே'' என்ற போது ''ஆமாம் வீராப்புப் பேசினேன் தான். ஆனால் முஹம்மதுவின் இரு தோள் புஜங்களிலும் இரண்டு சிங்கங்கள் பாய்ந்து பிடுங்கப் பதுங்கிய நிலையில் இருந்தனவே ! என்ன செய்யச் சொல்லுகின்றாய்?'' என்று தனது கண்களுக்குப் பட்ட பயங்கரக் காட்சியைச் சொல்லி; போக்கிரித் தனத்தின் துணைகொண்டு மோசடி செய்து விடலாம்'' என்ற மனக் கோட்டை தகர்ந்து விட்டமைக்கு சால் சாப்புச் சொன்னான் அந்த அபூஜஹில் என்றால், உண்மையில் அண்ணல் நபியுல்லாஹ் அவர்களின் தோல் புஜத்தில் சிங்கங்கள் அமர்ந்தா இருந்தது? இல்லை. ஆனால் அபூஜஹிலின் கண்களுக்கு அல்லாஹ் அப்படியொரு காட்சியைக் காண்பித்தான்.

இல்லாவிட்டால் மக்கத்து வம்பர்களெல்லாம் கண்டு நடுங்குமளவு வம்பனுக்கு வம்பனாக இருந்த அபூஜஹில் அவ்வளவு சுலபத்தில் வழிக்கு வந்திருப்பானா என்ன?

இங்கே இந்த வரலாற்றுத் துணுக்கு ஏன்? நபிகளார் (ஸல்-அம்) அவர்களிடம் மேன்மை மேலோங்கி நின்றது என்பதற்கும் இந்த துணுக்கிற்கும் என்ன சம்பந்தம் என்கின்றீர்கள் அல்லவா?

ஆமாம்! சம்பந்தம் இருக்கத்தான் செய்கின்றது. எப்படி என்றால் அண்ணல் நபி அவர்களின் தோள்புஜங்களில் சிங்கம் இருப்பதாக அபூஜஹிலிற்குத் தென்பட்டதல்லவா? அதற்குப் பெயர் தான் மேன்மை.

என்னங்க ஹஜ்ரத் கதையளக்குகின்றீர்? என்றுதானே கேட்கின்றீர்?

பிறரை மரியாதை செய்யத் தூண்டத் தக்க அம்சம் ஒருவரில் இருப்பதற்கு மேன்மை என்று கொள்ளப்படுகின்றது. அப்படி மரியாதை செய்யத் தூண்டத்தக்க அம்சம் அவர் அவரின் தன்மையினைப் பொறுத்து மாறுபடலாம்

அபூஜஹில் போக்கிரித்தனத்தை கை முதலாகக் கொண்டிருந்தவன். ஆதலால் அவனின் தன்மைக்கு ஈடு கொடுப்பதற்காக அண்ணல் நபியுல்லாவின் மேன்மையை சிங்கத்தின் வடிவில் வெளிப்படுத்தினான் இறைவன் ஆனால் அதே அபூஜஹில் ஆட்சி அதிகாரங்களுக்கு மதிப்பளிப்பவனாக இருந்திருந்தால் அண்ணலாரின் மேன்மையை அரசர்கள் வடிவில் வெளிப்படுத்தியிருப்பான். அதாவது வருங்காலத்தில் இந்த முஹம்மது அரச அந்தஸ்த்தைப் பெற வாய்ப்புள்ளவர் ஆகவே இவரின் விசயத்தில் நாம் கொஞ்சம் அடிபணிந்து தான் போக வேண்டும் என்ற மனநிலையினை ஏற்படுத்தி அதன் மூலம்

அண்ணலாரின் சொல்லிற்கு 'மதிப்பு' கொடுக்கும்படி செய்திருப்பான் இறைவன்;

இப்படி எதிர்படுவோரின் தன்மைக்கு ஒப்ப 'மரியாதை செய்யத் தூண்டத்தக்க' அம்சம்' மாறிக் கொண்டேயிருந்தாலும் அதன் முடிவு மேன்மையாகவே மிளிரும்.

அந்த மேன்மை நமது நபிகளார் அவர்களிடம் எல்லா நேரத்திலும், எதிர்படும் எல்லா மனிதர்களின் தன்மைக்கு ஈடு கொடுக்கும் விதத்தில் முழுமையாக அமைந்திருப்பதை எவரும் எவ்வகையிலும் மறுக்க முடியாது. இந்தத் தன்மைக்கு நம்மவர் 'முகராசி' என்று கூறிடுகின்றனர்.

இந்த இயல்பினைத்தான் இலக்கிய நயத்தோடு ''மேன்மையில் மதிபோன்றவர் முஹம்மது நபிகளார்'' என்று கூறி; பூரணச் சந்திரன் எப்படி ஒளி உமிழ்வதின் உச்ச நிலையோ அது போன்றே மேன்மை எனும் மாண்பின் உச்ச கட்டத்தை அண்ணலார் அடைந்திருந்தார்கள் என்று சொல்லுகின்றார்.

எப்படி பூசிரியின் இலக்கிய நயம்?

---

**ஈகை**

---

அன்று, ஈதுல்ஃபித்ரு பெருநாள். விபரமறியா சிறுவன் முதற்கொண்டு விருத்தாப்பியமடைந்து விட்ட முதுகிழவர் வரை அனைவரும் அகம் குளிர, முகம் மலர கொண்டாடும், திருநாள். சிறுவர்களெல்லாம் புத்தாடை பூண்டு சந்து

முனைகளில் நின்று சிந்து பாடி மகிழ்கின்றார்கள். ஆனால் ஒரே ஒரு சிறுவன் மட்டும் அழுக்கடைந்த கந்தலோடு கண்களில் செந்நீர் பொங்க ஆங்கொரு மூலையில் ஆதர வற்று நிற்கின்றான். அந்நேரம் பார்த்து அவ்வழி சென்ற அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்கள் துயரத்தின் சின்னமாய்க் காட்சி தந்த அச்சிறுவனைக் கண்டு விடுகின் றார்கள்.

அப்புறமென்ன? ஆதரவற்ற அப்பாலகனை நெருங்கி ஆதுரத்துடன் வருடி, ''பிள்ளாய்! நீ யார்? ஏன் இப்படி?'' எனக் கேட்ட போது; நான் அனாதை. என் தந்தை சென்றடைந்த ஜிஹாதில் (அறப்போர்) வீரமரணத்தைத் தழுவிக் கொண்டார். என் அன்னையோ மறுமணம் செய்து கொண்டாள். ஆகவேதான் இப்பெரு நாளில் இப்படி ஏங்கும்படி ஆகிவிட்டது என்கிறான் சிறுவன்.

சிறுவனின் சோக வரலாற்றை செவிமடுத்த செம்மல் நபியுல்லாஹ் அவர்கள், மகனே! கவலையை விடு என்னைத் தந்தையாகவும் ஆயிஷாவை அன்னையாகவும் ஏற்றிடு'' என்ற போதுதான் தன்னைத் தேற்ற- ஏற்றம் பெறச் செய்ய முயன்றிடுபவர் ஹஸரத் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் என்று விளங்கிய அச்சிறுவன் அகம் குளிர்ந்து முகம் மலர்ந்து அண்ணலாரின் அரவணைப்பை -அன்பணைப்பை- பெற்றுச் சிறக்கின்றான்- சிரிக்கின் றான்.

இது நமது நபிகளார் அவர்களின ஈகை குணத்திற்கு மிக மிகச் சிறியதொரு எடுத்துக் காட்டு. இதயத்தை

நெகிழச் செய்யும் இது போன்ற எடுத்துக்காட்டுகள் எம் மானின் வரலாற்றில் நிறைய நிகழ்ந்துள்ளன.

ஈகை எனும் ஈரத்தன்மைக்கு அலைகடல் ஒன்றே பொருத்தமான உவமைப் பொருளாகும்.

கடலில் கிடைக்கும் மீனினம் மனிதர்களின் உணவுத் தேவையில் பெரும்பகுதியை ஈடுசெய்கின்றன. சிப்பியில் முத்து வளர்ந்து மனிதர்களை அலங்கரிக்கும் நகைகளாகப் பயன்படுகின்றது! அஃதன்றி, கடல் உலகின் ஒரு முனையை மறு முனையில் இணைத்து ஒற்றுமைக்கு கட்டியம் கூறுகின்றது. அன்றி உப்பாக மாறி உணவுப் பண்டங்களை ருசி பெறச் செய்வதும் இந்த கடல் நீர்தான். இப்படி தனக்கென்றில்லாமல் மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்கு- வாழ்விற்கு வளத்திற்கு முழுமையாக அர்ப்பணமாவது அந்த அலைகடல் தான். இதனைத்தான் ஏகனாம் நம் இறைவன் ''அவன் எப்படிப் பட்டவனென்றால் நீங்கள் புத்தம்புதிய இறைச்சியை (மீன்) உண்டு சுகிப்பதற்காக அலை கடலை உங்களின் வசமாக்கிக் கொடுத்து, நீங்கள் அணிந்து அலங்காரம் பெறும் நகைகளையும் அதிலிருந்து வெளிப்படுத்து கின்றான்'' என்று அலை கடலின் ஈகையினைச் சுட்டிக் காண்பிக்கின்றான். ஈகைக்கு இலக்கணம் கூறி நிற்கும் இந்த அலைகடலைப் போன்றவரே எங்கள் நபியுல்லாவும் என மிடுக்காக எடுத்துரைக்கின்றார் பூசிரி.

# ஆண்மை

அண்ணல் நபிமணி அவர்கள் மென்மையில் மலரி னைப் போல மிருதுவானவர் என்றவுடன் சிலர் அண் ணலை மிதவாதி என்றோ; கோழை என்றோ கருதி விடக்கூடாது என்று நினைத்தாரோ என்னவோ அண்ணலின் ஆண்மையினைப் பற்றியும் சுட்டுகின்றார் சுயகவி பூசிரி.

''பைத்தியம்'' என்று தூற்றிய காலத்திலிருந்து, பைகம்பர் என மக்கத்து மாந்தர் அனைவரும் ஒரு மனதுடன் ஏற்றுக்கொண்ட இறுதிக் காலம் வரை எடுத் துப் பாருங்கள். அண்ணல் நபிமணி அவர்களின் ஒவ் வொரு அங்க அசைவிலும் ஆண்மை பளிச்சிடுவதைத் தான் பார்க்க முடியும்.

ஆகவே அண்ணலின் ஆண்மைப் பண்பு வெள்ளிடை மலை, ஆனால் 'காலத்தைப் போன்றது அண்ணலின் ஆண்மை' என்கின்றார் இமாம் பூசிரி.

அப்படி என்றால் எப்படி?

ஆமாம்; காலம் எத்தனை எத்தனை வில்லாதி வில்லர் களையும் வீரமார்த்தாண்டர்களையும் பார்த்திருக்கின்றது? அவர்களில் எவருக்காவது காலம் வளைந்து கொடுத்தி ருக்கின்றதா?

காலம் பிர்அவனைச் சந்தித்தது- காபிலைச் சந்தித் தது, ஹாமானைச்சந்தித்தது- அபூஜஹிலைச் சந்தித்தது- ஆனால் அவர்களையெல்லாம் தூக்கி விழுங்கி அது ஜீரணித்து விட்டதே தவிர அவர்களின் அக்கிரமங்களுக்கு வளைந்து கொடுத்து விடவில்லையே!

அதுபோல அண்ணல் நபிமணி (ஸல்-அம்) அவர்கள் ஆள் நாட்டியத்தைச் சந்தித்தார்கள்- அதிகார வர்க்கத்தைச் சந்தித்தார்கள் ஆனால் அவையனைத்தும் அண்ணல் நபியுல்லாஹ் அவர்களின் காலடியில் சரணடைந்ததே தவிர நமது நபியுல்லா அச்சக்திகளின் கோரப்பிடிகளுக்கு இம்மியும்- எப்போதும்- வளைந்து கொடுத்ததே இல்லை.

ஆகவேதான் ஆண்மையில் காலத்தைப் போன்றவர் என்கிறார் இமாம் பூசிரி-

சுப்ஹானல்லா! என்னே உவமை! என்னே உவமை!!

كَأَنَّهُ وَهُوَ فَرْدٌ مِنْ جَلَالَتِهِ
فِي عَسْكَرٍ حِينَ تَلْقَاهُ وَفِي حَشَمِ ٥٦

கஅன்னஹூ வஹுவ ஃபர்
-துன் மின் ஜலாலதிஹீ
ஃபீ அஸ்கரின் ஹீன தல்காஹு
-வஃபீ ஹஷமி

பெருமானார் அவர்களைப் போர்க்களத்திலும் ஊழியர் மத்தியிலும் நீ சந்திக்க நேர்ந்தால் அவர்களுக்கே உரிய கம்பீரத்தின் காரணமாக தனித்தன்மையுடையவராக இருந்திடக் காண்பாய்.

இதனை -

போர்க்களத்தும்ஊழியர்சூழ் பொதுவிடத்தும்
நீபவரைப்

பார்க்கின்அவர்தம் தனிமை பகுத்துணர்த்
துணர்த்தும் கம்பீரம்.

என மறைக்காயர் பாடுகின்றார்.

வி-ரை: அள்ளிச் சிதறிய வைரக் கற்களைப் போல விண்ணில் பரவி, விரவிக் கிடக்கும் கோடானுகோடி நட்சத்திரக் கூட்டங்களிடையே முழு நிலவு தனது முழு ஒளியின் காரணமாகத் தனித்தன்மை பெற்றுத் திகழ்கின்றதல்லவா? அதுபோன்று அண்ணலெம் பெருமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் ஆயிரமாயிரம் பேருக்கிடையே இருந்தாலும் போர்க்களமாயினும் அல்லது ஊர்க்களமாயினும் அண்ணலுக்கே உரித்தான கம்பீரத் தோற்றத்தால்- 'இவர் தான் அந்த முஹம்மத்' -என அவர்களை உச்சினார்ப்போல் சுட்டிக்காட்ட முடிந்தது.

வல்லவனாகிய அல்லாஹ் அத்தகு கம்பீரத் தோற்றத்தை- ஒளி உமிழும் கண்களை -திரண்டெழுந்த திண்தோள்களை-வசீகரிக்கும் முகராசியைக் கொடுத்திருந்தான்; எம்மானுக்கு!

كَأَنَّمَا اللُّؤْلُؤُ الْمَكْنُوْنُ فِيْ صَدَفٍ
مِنْ مَعْدِنَيْ مَنْطِقٍ مِنْهُ وَمُبْتَسِمِ ٥٨

க அன் ன மல் லு:லுஉல் மக்னூனு-
:பிஸத:பின்
மின் (ர்) மஃதினை மன் திகின் -
- மின் ஹு வ முப் தஸமி

பெருமானார் அவர்கள் பேசிடும் போதும், புன்ன கைக்கும் போதும் சிப்பிக்குள் முத்து பளிச்சிடுவது போன்றிருக்கும்.

இதனை-

அப்பெருமான் புன்னகைசெய் -
-தருளுங்கால், பேசிடுங்கால்
சிப்பியினுள்சேமவைப்பாய்
சேருமுத்துப்போன்றிடுமே

என மறைக்காயர் பாடிக் காட்டுகின்றார்;

வி-ரை : அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்களின் உருவ அழகை குண நலத்தை கம்பீரத் தோற்றத்தின் முழுமையை எல்லாம் சொல்லிச் சொல்லி மனமகிழ்ந்த சொல்லாளர் பூசிரி அவர்கள் இங்கே அண்ணலின்

பல்வரிசை அழகைச் சொல்லிச் சோபித மடைகின்றார்-சோபனம் பெறுகின்றார் நம்மிடம்.

"அமைப்பில் ஒவ்வொரு அங்கங்களும் இப்படி இப்படித்தான் இருக்க வேண்டும்" என ஒரு நியதி புண்டு. அந்த நியதியோடு அங்கங்கள் அமைந்திருந் தால்தான் மனித அமைப்பு சம்பூரணமெய்தும்.

இந்த நியதிப்படி பார்க்கும் போது உலகில் எந்த மனிதனும் சம்பூரண உருவ அமைப்புப் பெற்றிருந்ததாகக் கூறவே முடியாது. 'அது இருந்தால் இது இல்லை. இது இருந்தால் அது இல்லை' என்று தான் மனித சமுதா யம் அமைந்திருந்தது, இன்றுங் கூட அப்படித்தான்.

ஆனால்; எங்களின் அண்ணல் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் அப்படியன்று. அவர்களின் அனைத்து அங்கங் களும் சம்பூரண அமைப்பைப் பெற்று இருந்தன. குட்டை யும் நெட்டையுமற்ற அளவான உயரம் - வெளுப்பும் கறுப்புமற்ற பொதுவான தங்க நிறம்-பருமனும், மெலிவுமற்ற நடுக்கட்டான பாடி அமைப்பு, இப்படியாக சம்பூரண அங்க அமைப்புப் பெற்றிருந்த பெருமானின் பல்வரிசை முத்துச் சரங்களாகவுமிருந்தால் எப்படி இருக்கும்... ..?

ஆமாம். அண்ணலின் பல்வரிசை முத்துச் சரங்களாகத் தான் இருந்தன.

கருமேகக் கூட்டத்தினிடையே மின்வெட்டி மறையும் போது ஒளிக்கீற்றுகள் ஏற்படுமல்லவா? அதுபோன்று கருந்தாடி கொண்ட காமில் நபிமணி அவர்கள் புன்முறுவல் செய்திடும்போது ஒருவகை ஒளிக்கீற்றுகள் ஏற்பட்டு மறையுமாம், சுப்ஹானல்லாஹ்.

இதனைத்தான் இங்கே இமாம் பூசிரி (ரஹ்) அவர்கள் 'அண்ணல் முஹம்மது (ஸல்) அவர்கள் உரையாடும் போதும் சிப்பியினுள் புதைந்துள்ள வெண்முத்து வெளிப் படுவதைப் போன்றிருக்கும் எனச் சொல்லிக் காண்பிக் கின்றார்.

பூசிரி (ரஹ்) அவர்களின் இந்த வர்ணனையினைப் பார்க்கும்போது முஹம்மது (ஸல்) அவர்களின் அங்க அழகு மனக்கண்முன் பளிச்சிடுகின்றது அதனைப்பார்க்கும் போது ஒரு வகை மயக்கம் ஏற்படுகின்றது. அது மட்டுமா? பூசிரி யின் சொல் நயத்தைக் கண்டு ஒருவகைச் சொக்குமல்லவா ஏற்படுகின்றது? இதை ரசிப்பதா? ருசிப்பதா? எதை ரசித்து ருசிப்பது? அப்பப்பா திணரலே ஏற்படுகின்றது.

لَا طِيبَ يَعْدِلُ تُرْبًا ضَمَّ أَعْظُمَهُ
طُوبَىٰ لِمُنْتَشِقٍ مِنْهُ وَمُلْتَثِمِ ﴿٥٨﴾

**லா தீபயஃதிலு துர் பன் ளம்ம-**
**-அஃழுமஹூ**
**தூபா லிமுன்தஷிகின் மின்ஹு**
**-வமுல்தஸிமி**

அன்னாரின் மேனி எலும்புகளை (உடலை) அணைத்துக் கொண்டு நிற்கும் மண்ணிற்கு நிகரான எந்த நறுமணமும் (உலகில் இல்லவே) இல்லை. அதனை (புனித ரவ்ழா ஷரீபை) முந்தி முகர்ந்த புனிதருக்கேமங்களம்.

இதனை

அன்னவர்தம்மேனியெலும் பணையுமண்போல-
-வாசமில்லை!

மன்னும்அதைமுத்திமுகர் மாந்தருக்கு மங்களமே.
என மறைக்காயர் பாடுகின்றார்.

**கருத்து:** நபிகள் நாயகம் அவர்களின் பூத உடலை மூடியுள்ள மண்ணைக் - கப்ரை போன்ற நறுமணம் உலகில் வேறு எதற்குமே இல்லை. ஆதலால், அதனை முத்தமிடுவதால் ஏற்படும் மங்களம் ஈடு இணையற்றதாகும்.

வி-ரை : 'புகழாரம், எனும் தலைப்பில்; 'நபிகளாரின் ஒழுக்கத்தைப் பின்பற்றி, சுன்னத்தான நற்செயல்கள் புரியத் தவறி விட்டேனே' - என 29-ஆம் கண்ணியில் துவங்கி அண்ணலின் எளிமையை - வலிமை பரிசுத்தத் தன்மையை - ஈடு இணையற்ற தலைமையை பிரச்சாரப் பொறிவை - குண நலனை - கோல அழகை - அறிவாற்றலை - உருவால், உள்ளத்தால் உயர்ந்து நின்ற உவகையை எல்லாம் இனிக்க இனிக்க உயர்ந்த உவமை நயத்தோடு கூறிக் காண்பித்த இயற்கைக் கவி பூசிரி (ரஹ்) அவர்கள் கடைசியாக ஒரு பேருண்மையினை இலக்கிய நயத்தின் உச்சாணியில் இருந்து கொண்டு சொல்லிக் காண்பிக்கின்றார், இங்கே.

ஆமாம்; அண்ணல் நபிமணி அவர்கள் உயிருட னிருக்கும்போது மனித சமுதாயத்திற்கு மங்களம் சேர்க்கும் புனிதராகத் திகழ்ந்ததைப் போன்றே 'மரணம்' என்ற நிலையினை அடைந்த பின்னும் கொஞ்சம் கூட குன்றாமல் குறையாமல் மனித சமுதாயத்திற்கு மங்களம் சேர்க்கும் அந்த மகத்துவத்தைச் செய்து கொண்டிருப்பதாகச் சொல்லி இங்கே புகழாரம் சூடுகின்றார்.

மன்னர் நபிமணி அவர்களின் பூத உடலைப் போர்த்தி யுள்ள மூடியுள்ள மண் அதாவது பெருமானாரின் ரவ்ழா ஷரீஃபிற்கு ஒருவித வாசனை இருக்கின்றதாம். அந்த வாசனைக்கு ஈடான வாசனை-நறுமணம் வேறு எதுவுமே இல்லையாம். எனவே 'ரவ்ழா' இருக்கும் புனித மதீனா மாநகர் சென்று அந்த ரவ்ழாவை முத்தமிட்டால், அதாவது

ஜியாரத்துச் செய்தால், அப்படி ஜியாரத்துச் செய்யும் மனிதனுடைய அகநோய், புறநோய், அனைத்துமே பறந்தோடி அம்மனிதனுக்கு 'மங்களம் பொங்குமாம்' இப்படிச் சொல்லி சுதி ஏற்றுகின்றார் பூசிரி

பூசிரி அவர்களின் இந்தச் சொல்லையும் ''என்னை ஜியாரத்துச் செய்ய நாடி என்னிடத்தில் எவரேனும் வந்தால் அவருக்காக மன்றாடுபவனாக இரும்பேன் நான்' என வந்துள்ள ஹதீதையும் ஒப்பு நோக்கும்போது பூசிரி அவர்கள் எவ்வளவு, பெரிய பேருண்மையினை இங்கே தெளிவுபடுத்துகின்றார் என்பதை நம்மால் உணர்ந்து உவகை கொள்ள முடிகின்றது அல்லவா?



# 4

''ஆசை அலைகளில்'' ஓசை நயத்தோடு மனித சுபாவங்களை, சுவைபட எடுத்துரைத்து;

'அலைபாயும் மனதில்' அலைக்கழிக்கும் மனித மனதை வசை மொழியில் இசை பாடி முடித்து;

'புகழாரத்தில்' பொன் மணியை மிஞ்சும் புகழ்மணிச் சரங்களை வாழ்த்துப்பா நாணில் தந்து புகழாரம் தொடுத்து

நான்காவது முயற்சியாக பிறப்பின் சிறப்பை - காவிய நடையில் - மடை திறந்த வெள்ளம் போல கடை பரப்பு கின்றார் கவிமணி பூசிரி (ரஹ்-அன்ஹு)

புகழாரத்தில், குணச் சிறப்பை- கோமான் நபியவர் களின் கோலச் சிறப்பை, அறச் சிறப்பை. அண்ணல் நபிமணியின் அகச்சிறப்பையெல்லாம் கதம்பமாகக் கூறி முடித்து கையிலெடுத்துப் பார்க்கிறார் பூசிரி.

ஆனால்,

தன் திறமையனைத்தையும் கொட்டிக் கோத்த அந்தப் புகழாரம் 'கடலில் நனைத்தெடுத்த ஊசிமுனை நீர்போல' பொசுக்கென்று தெரிகின்றது அவருக்கு!

என்னைய்யா! பூமான் நபிகளாரின் புகழ், கடலையும் மிகைத்த மாக்கடல்தான்: ஆனால் புகழ்பாடவென்றே

பிறப்பெடுத்த நான் என் திறமைகள் அனைத்தையும் இம்மிகூட பாக்கியில்லாமல் கொட்டி எவ்வளவோ அரும் பாடுபட்டு பெருமானாரின் புகழைப் பாடி முடித்து 'ஒருபடி இல்லாவிட்டாலும் 'ஒருபிடி' யாவது இருக்குமென்று பார்த்தால் ஒரு சொட்டுக்கூடத் தேறவில்லையே; என அயர்ந்து விட்டார் ஒரு கணம். என்றாலும் ஒருவாராகத் தன்னைச் சமாளித்துக் கொண்டு' -'குணவியல் கோல வியல், அறத்தியல் 'அகத்திய லென்று கதம்பமாக எடுத்துக்கொண்டால் அப்படி ஆகியிருக்கக்கூடும்; பிறப் பியலின் சிறப்பை மட்டும் தனித்துப் பாடிப் பார்ப்போம்' என பிறப்பின் சிறப்பைப் பற்றி இங்கே தொடங்கு கின்றார்.

இதில் எந்த அளவு புகழ்ந்தாலும் ஆகப்போவது ''ஊசியின் நுனிநீர் அளவுதான்'' என்றாலும், பூசிரி அவர்களின் சொன்னயம் வருணனையின் பாங்கு, விசய தானத்தின் சிறப்பு எவருக்கு வரும்? ஆகவே, அவர் ஆக்கிக்கொடுக்கும் 'பெருமானாரின் பிறப்பின் சிறப்பு, ஒரு துளியாக - ஊசியின் நுனி நீராக- இருந்தாலும் அதை உட்கொள்ளும் நமக்கு அதுவே ஒரு மாமலை போன்றது தான்.

எனவே, பூசிரி தரும் பெருமானாரின் பிறப்பின் சிறப்பை தேனுண்ட வண்டு போல சுவைத்துச் சுகிப் போம் வாரீர்!

أَبَانَ مَوْلِدُهُ عَنْ طِيبِ عُنْصُرِهِ
يَا طِيبَ مُبْتَدَإٍ مِنْهُ وَمُخْتَتَمِ (٥٩)

**அபான மவ்லிதுஹூ அன் தீபி-**
**உன்ஸுரிஹி**
**யா தீப முப்ததஇன் (ம்) மின்ஹு-**
**வமுக்ததமி**

அண்ணல் நபிகளாருடைய பூர்வீகத் தூய்மை யொன்றே அவர்களது பிறப்பின்- சிறப்பைப் பிரதிபலிக்கின்றது. முதல் தொடரான ஆதம் நபி அவர்களிலிருந்து கடைசித் தொடரான அப்துல்லா அவர்கள் வரையுள்ள அன்னாரின் கலங்கமேயில்லாப் பரம்பரையின் மகிமையே! (மகிமை)

இதனை-

பூர்விகத் தூய்மை, அவர்புவித்தோற்றம்
காட்டி நிற்கும்;
நேர்மைப் பரம்பரையும் நிட்களங்கம்
ஆதியந்தம்
என மறைக்காயர் பாடுகின்றார்.

வி-ரை : காட்டு மரங்களிலே 'பலஜாதியுண்டு. அதில் தேக்கு மரம் ஒரு உயர்ந்த ஜாதி, ஆனால் பார்வைக்கு இந்த உயர்ந்த ஜாதி தேக்கு மரத்தைப் போன்றே பல

வகை மரங்களுண்டு. ஆகவே, ஒரு தேக்கு மரத்தை இது 'ஒரிஜினல்' தேக்குத்தான் என முடிவெடுக்க வேண்டின் அதன் அசலைப் பார்க்க வேண்டும்.

அதுபோல் புகழ்படைத்த மனிதர்கள் உலகில் எத்தனை எத்தனையோ பேர்களுண்டு. ஆனால் புகழுக் குரிய ஒரு மனிதனைப் பற்றி, இவன் உண்மையிலேயே புகழுக்குரியவன் தானா? அல்லது இன்றைக்கு புதிதாக பணம் வந்ததால் புகழுக்குரியவன் ஆனானா? அல்லது பதவி வந்ததால் புகழுக்குரியவன் ஆனானா?'' எனத் தெரிய வேண்டுமானால் புகழப்படுபவனின் அசலை- பூர்வீகத்தை- பரம்பரையை- நோட்டமிட வேண்டும். எந்த மனிதனின் பூர்வீகம் எந்த அளவு அப்பழுக்கற்றதாக இருக்கின்றதோ அந்த மனிதனும் புகழப்படுபவனும் அந்த அளவிற்கு புகழுக்குரியவன் தான்.

இப்படிப் பார்த்தால்,

இன்றைக்கு புகழாரத்தின் உச்சாணியிலே இருக்கின் றார்களே அவர்களையெல்லாம் உண்மையான புகழ் படைத்தவர்களாகக் கொள்ள முடியுமா?

அப்படியே உண்மையான புகழ் படைத்தவர்களாக இருந்தாலும் ஒரு தலைமுறை, அல்லது இரண்டு தலை முறை, அல்லது கூடினால் மூன்று தலைமுறையளவு தான் பாரம்பரியம் படைத்தவர்களாக இருக்க முடியுமே தவிர, மூன்று தலைமுறைக்குமேல் எவரும் உலகிலேயே அன்றும் இன்றும் பாரம்பரியம் படைத்தவர்களாக இருந்த தில்லை. இருக்க முடியாது.

ஆனால், எங்கள் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் ஒருவர் மட்டும் அதற்கு விதிவிலக்கு என்பேன்;

ஏனெனில் உலகின் ஆதிமனிதர் ஆதம் அலைஹிஸ் ஸலாம் அவர்களில் இருந்து முஹம்மது (ஸல்-அம்) அவர் களின் தகப்பனார் அப்துல்லா என்பவர் வரையிலும் தோராயமான கணிப்பின்படி 7000 ஆண்டுகள் இடை வெளிகள் இருக்கின்றன.

இவ்வளவு பெரிய இடைவெளிக் காலத்தில் ஆதம் (அலை) அவர்களுக்கும், அப்துல்லா அவர்களுக்குமிடை யில் உள்ள தலைமுறைத் தொடர்பில் உதித்த எவருமே.

- பொய் சொன்னதேயில்லை!
- திருடியது, கிடையவே கிடையாது!
- கொலை குற்றம் செய்ய நினைத்ததாக வரலாறு கூறமுடியாது!
- குடிக்கு மண்டியிட்டு இருந்ததாக எவரையுமே காட்ட முடியாது!
- ஆண் வாரிசோ அன்றி பெண் வாரிசோ விபச் சாரமெனும் அபச்சாரத்தில் சந்தர்ப்ப வசமாகக் கூட மாட்டியது கிடையாது.
- மோசடியா? இல்லவேயில்லை.
- நாசமா? அப்படி என்றால் அவர்களுக்கு என்னவென்றே தெரியாது.

என்ன அடிக்கிக்கொண்டே போகிறாய்? என்பீர்கள். வார்த்தைகளை அடுக்கிக்காட்ட வில்லை. வாழ்ந்த முறையைத்தான் சொல்லுகிறேன், ஆதாரம் வேண்டுமா?

## பாரம்பரியச் சிறப்பு

ஹஜ்ரத் இஸ்மாயீல் (அலை) அவர்களுக்குப் பின் நபிகளார் (ஸல்) அவர்களின் பரம்பரைத் தொடருக்கு 'இஸ்மாயிலீ' எனப்பெயர் வழங்கலாயிற்று.

'புக்துநஸர்' எனும் பேரரசன் அரபுகளின் மீது ஆக்ரமிப்புச் செய்த போது அர்மியாவு (அலை) பாக்கியாவு (அலை) ஆகிய இரு நபிமார்களின் பரிந்துரைக்கிணங்க 'இஸ்மாயிலீ' வகுப்பைச் சேர்ந்த அதாவது நபிகளார் (ஸல்) அவர்களின் நேரடிப்பாட்டன் தொடர்புடைய 'அத்னான்' என்பவர் பாதுகாப்பும் பராமரிப்புச் சிறப்பும் உள்ளவராகப் பிரகடனம் செய்யப் பட்டார்.

அன்றி 'புக்துநஸர்' எனும் அந்தப் பேரரசன் இரண்டாம் முறையாக அரபுநாட்டின் மீது படையெடுப்பு நடத்தியபோது 'அத்னானின் மகன் 'மஇத்து' என்பவர் 'அர்மியாவு' (அலை) அவர்களின் நேரடிப் பாதுகாப்பும் அரவணைப்பும் கிடைக்கப் பெற்றார்.

## வள்ளல் பெருந்தகை குஸஸ்

இஸ்மாயிலீ, வகுப்பிலுதித்த 'குஸஸ்' என்பவர், நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் நேரடிப் பாட்டன்

தொடர்பில் உள்ளதொரு உத்தமர். இவர் வன்நெஞ்சம், வன்முறை, ஆணவம், போட்டி, பொறாமை ஆகிய தீய குணாதிசயங்களை வன்மையாகக் கண்டித்தவர், மற்றவரை கண்டித்தமட்டில் இல்லாமல் தன்னிலும் அத்தீய குணாதிசயங்கள் வெளிப்படாமல் பத்தியத்தன்மையோடு வாழ்ந்து காட்டியவர். அன்றி வெளியூர்களிலிருந்தும், வெளிநாடுகளிலிருந்தும் ஆண்டுதோறும் ஹஜ்ஜுக்கு வரும் (அறியாமைக் காலங்களிலும் ஹஜ்ஜு வணக்கம் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளது) பயணிகள் அனைவருக்குமே இலவசமாக உணவு, உறையுள் வசதிகளைச் செய்து கொடுத்ததின் மூலம் அக்கால மக்களால் 'வள்ளல்' எனப் போற்றப்பட்ட பெருந்தகையாளர் அவர்.

## நாணயத்தின் இலக்கணமான ஹாஷிம்

ஒரு சந்தர்ப்பத்தில் மக்கமா நகரில் மாபெரும் பஞ்சம் ஏற்பட்டது. மக்கள் ஒருவகை மண் கட்டிகளைக்கூடத் தின்று வாழ்ந்திருந்த அவல நிலை, அந்நேரம் வியாபார நிமித்தம் அயல்நாடு சென்ற 'ஹாஷிம்' என்பார் தமது சரக்குகளை விற்று அதன் மூலம் பெரிய அளவில் உணவுப் பண்டங்களை வாங்கி தனது தாயகமான மக்கமா நகருக்கு கொண்டு வந்து அங்கே பஞ்சத்தின் கோரப்பிடிப்பில் அகப்பட்டு ஊசலாடிக் கொண்டிருந்த மக்களனைவருக்கும் இனாமாக வழங்கி நீண்ட நாளைக்குப்பின் இறைச்சிக் குழம்புடன் ரொட்டிகளை ருசித்துச் சாப்பிடச் செய்து, அதன் மூலம் ஏழைகளின் சிரிப்பிலே இறைவனைக்

கண்டார் அந்தப் பெருந்தகை. இது மட்டுமா? நாணயமான வியாபாரத்தாலும், நாநயத்தாலும் அண்டை நாட்டு ஆளுநர்களிடம் தனிச் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்த அவர், தனக்கிருந்த செல்வாக்கைப் பிரயோகித்து அந்நாடுகளில் விற்பனைவரி, சுங்கவரி, ஏதுமின்றி வியாபாரம் செய்திடும் உரிமையை மக்கத்து மக்கள் அனைவருக்குமே பெற்றுத் தந்து தனக்கிருக்கும் பொது நலத்தை பரிணமிக்கச் செய்தார் அவர். இத்தகு இனிய இயல்புகொண்ட அந்த ஹாஷிம் யார் தெரிகின்றதா? நமது நபிகள் (ஸல்-அம்) அவர்களின் பாட்டனார் வரிசையிலுள்ளவர்தான்.

## ஹாஷிம் என்ற பெயர் ஏற்பட்டதன் காரணியாய்

மக்கமா நகரத்திலுள்ள இறையில்லமாகிய கஃபாவின் வரலாற்றுச் சிறப்பையும், தெய்வீகப் பெருக்கையும் கேள்விப்பட்ட யமன் நாட்டு அரசன் 'ஹஸ்ஸான்' எந்நாட்டவரும் போற்றும் இறையில்லம் என் நாட்டிலல்லவா இருந்திட வேண்டும், என எண்ணினான். அதற்கு ஆவன செய்திடும்படி அமைச்சர் பெருமக்களை வேண்டினான். ஆகவே "மக்காவிலுள்ள கஃபாவை இடித்துத் தரை மட்டமாக்கி விட்டு அதன் இடிபாடுகளை எடுத்து வந்து அதனைக் கொண்டு இங்கே (யமனில்) அது போன்ற இறையில்லத்தை உருவாக்கிடல் வேண்டும்" என் யமன் நாட்டின் மதியூகிகளால் திட்டம் கொடுக்கப்பட்டது. ஆகவே யமனின் அதிபதி புனித மக்காவின் மீது பெரும் படையுடன் போர் தொடுத்தான். அப்போது கஃபாவின்

கண்காணிப்பாளராக இருந்த நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் பாட்டன் வரிசையில் உள்ள 'பிஹ்ரு' என்ற பெருந்தகை இறையில்லத்தை எவன் தொட்டாலும் அவனின் துரைத்தனத்தைத் தரைமட்டமாக்குவேன்' என வீர சபதமெடுத்து, பெரும் படையுடன் மக்காவினுள் நுழைந்திட எத்தனித்த யமன் நாட்டு அதிபனுடன் பொருதி, போரிட்டு அவனை வென்று அவனது படை பட்டாளங்களை கொன்று குவித்து 'ஹஸ்ஸான்' என்ற பெயர் கொண்ட அவ்வரசனை உயிரோடு சிறை பிடித்தார்.

ஆகவே அன்றைய காலகட்டத்தில் தனிப் பெரும் வல்லரசாகத் திகழ்ந்த யமன் நாட்டு அதிபதியை அந்நியர் எவரின் உதவி ஒத்தாசைகளின்றி தனித்து நின்று எதிர்த்துப் போராடி எமன் நாட்டின் வல்லரசு வல்லமையை துவம்சம் செய்த காரணத்தால் அந்த 'பிஹ்ரு' என்பாருக்கு 'குறைஷ்' என்று சிறப்புப் பெயர் கொடுக்கப்பட்டது.

கடல் மீன்களில் மிகுந்த ஆற்றலும், எதனையும் எப்போதும் தனித்து நின்று போரிட்டு வெற்றி வாகை சூடும் வீரமும் செறிந்த ஒருவகை மீனுக்கு 'குறைஷ்' என்று பெயர்.

'பிஹ்ரு' என்பாரின் வீரத்தை பறைசாற்றும் வண்ணமாக அவருக்கு அங்ஙனம் 'குறைஷ்' என்று சிறப்புப் பெயர் வழங்கப்பட்டது. எவ்வளவு பொருத்தம் பார்த்தீர்களா?

இந்த பிஹ்ரு என்பாரிலிருந்துதான் நபிகளார் (ஸல் - அம்) அவர்களின் பரம்பரைக்கு 'குறைஷிகள்' என்ற சிறப்புப் பெயர் வழங்கலாயிற்று,

## வெளிச்சத்திலே வாழ்ந்த வெண்முத்துக்கள்

ஹஜ்ரத் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் பரம்பரைத் தொடர் அத்னான் என்பவர் வரை இருபத்திரெண்டு தலைமுறைகள் சங்கிலித் தொடர்போல் மேல் நோக்கிச் செல்கின்றது. ஆனால் அந்த இருபத்திரெண்டுக்கு மேல் ஹஜ்ரத் இஸ்மாயீல் (அலை) அவர்கள் வரையிலும் எத்தனை தலைமுறை என்பது வரலாற்றில் விவரிக்கப் படவில்லை.

ஆகவே வரலாற்றில் இடம் பெற்றுள்ள இருபத்திரண்டு தலைமுறையினரில் (1) அத்னான் (2) ஹாஷிம் (3) பிஹ்ரு ஆகிய மூவரைப்பற்றி மட்டும் இங்கே குறிப் பிட்டுக் காட்டப்பட்டுள்ளது. இப்படியே இருபத்திரண்டு தலைமுறையினரையும் நோட்டம் விட்டுப் பார்த்தால் அவர்களில் எவரிடமும் எவ்விதக் களங்கமுமில்லாத தூய்மையையும், அதே நேரத்தில் ஏதாவது ஒரு வகையில் சிறந்து விளங்கிய மேன்மையையும்தான் நம்மால் காண முடிகின்றது.

அன்றி 'அத்னான்' என்பவரிலிருந்து ஹஜ்ரத் இஸ்மாயீல் (அலை) அவர்கள் வரையுள்ள தலைமுறை யினரின் வாழ்க்கைகளும் தூய்மையானதாகவும் மேன்மை

மிக்கதாகவுமே இருந்திருக்கும் என்பதை சந்தேகத்திற்கிட மில்லாமல் நம்ப முடிகின்றது. ஏனெனில் 'அறியாமைக் காலம்' என உலக வரலாற்றில், பதிப்பு பெற்றுள்ள அந்தகாரச் சூழலில் வாழ்ந்திருந்த அந்த இருபத்திரெண்டு தலைமுறையினருமே இவ்வளவு சுத்தமாக வாழ்ந்திருக்கும் போது அந்த இருபத்திரெண்டு தலைமுறைக்கு மேலே வாழ்ந்த தலைமுறையினர், நபிமார்களும், வேத வெளிப் பாடுகளும் வெளிப்பட்டுக் கொண்டிருந்த கால கட்டங் களில் வாழ்ந்திருந்தவர்கள். ஆகவே இருளில் வாழ்ந்த வர்களே தடுமாறாமல் தவறிவிடாமல் வாழ்ந்திருக்கும் போது, வெளிச்சத்தில் வாழ்ந்தவர்கள் தடுமாறியோ, தவறியோ இருந்திருக்க முடியாதல்லவா?

அது போன்றே,

ஹஜ்ரத் இஸ்மாயீல் (அலை) அவர்களுக்கு மேலே ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்கள் வரையிலும் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் பரம்பரைக்கு ஒரு வகை நேரடித் தொடர்பு இருந்தே வந்துள்ளது.

'ஹஜ்ரத் இப்ராஹிம் (அலை) அவர்கள்' கல்லையும் கரித்து சாம்பலாக்கிவிட வல்ல கொடுமையான நெருப்புக் குண்டத்தில் தூக்கி வீசப்பட்ட நிகழ்ச்சியையும், அந் நெருப்புக் குண்டம் சம பலமுள்ள சீதோஷ்ண முடைய பூங்காவாக மாறி ஹஜ்ரத் அவர்களுக்கு இதமளித்த ஆபூர்வத்தையும் அனைவரும் அறிவோம்.

ஆனால் கரிக்கும் இயல்புடைய நெருப்பு இதமூட்டும் இன்பப் பூங்காவாக மாறியது ஏன் தெரியுமா? ஹஜ்ரத் அவர்கள் நபியாக இருந்ததால் என்பீர். ஆனால் உண்மை அதுவல்ல. நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் 'வித்து

ஹழ்ரத் அவர்களின் முதுகந்தண்டின் முகிழ்ந்து கொண்டிருந்தமையால் தான் அந்த அபூர்வம் நிகழ்ந்துள்ளது

அதுபோல, ஹழ்ரத் நூஹ் (அலை) அவர்கள் உலகப் பிரளயம் ஏற்பட்ட நேரத்தில் கப்பல் கட்டி அதன் மூலம் தன்னையும் தன்னைச் சார்ந்தோர்களையும் பிரளயத்தில் அமிழ்ந்துவிடாது காப்பாற்றியதை அனைவரும் அறிவோம்

ஆனால் பூமி நீரை கொப்பளிக்கவும், வானம் மழையைப் பொழியவுமான முறையில் ஏற்பட்ட அப் பிரளயம் எளிதில் வடிவதாக இல்லை. அந்நேரத்தில் கப்பலில் தேக்கி வைத்திருந்த உணவும் குறைந்து விட்டது. ஆகவே ஹழ்ரத் நூஹ் (அலை) அவர்கள் நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் பொருட்டால் பிரளயம் வடிந்து மறு வாழ்வு வேண்டும் என இறைஞ்சினார்கள். அதன் பிறகுதான் பூமி நீர் கொப்பளிப்பதை நிறுத்தியது - வானம் மழையைப் முற்றுப்பெறச் செய்தது. அவ்விரண்டும் வறண்ட பிறகுதான், பிரளயம் வடிந்தது என்ற உண்மையை நாம் உணரும் போது, நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் தொடர்பு ஹழ்ரத் நூஹ் (அலை) அவர்களிலும் வியாபித்து இருந்ததை உணர்கின்றோம்.

அதுபோல, முதல் மனிதர் ஹழ்ரத் ஆதம் (அலை) அவர்களைப் பார்க்கின்றோம். இறைவனது தடையை மீறி கோதுமைக் கனியைச் சுவைத்த குற்றத்திற்காக சொர்க்கத்து வாழ்வை பறிமுதல் செய்யப்பட்டு அழியும் இவ்வுலகிற்கு நாடு கடத்தப்பட்டார்கள். நாடு கடத்தப் வர்கள் நாயனின் நாட்டமின்மையும் சேர்த்துக் கொடுக்கப் பட்டார்கள். நாடு கடத்தப்பட்டதையாவது சகித்துக்

கொள்ளலாம் நாயனின் நாட்டமின்மையைச் சகிப்பது எங்ஙனம்? ஆகவே பல்லாண்டுகள் விரிந்து பரந்த இவ்வுலகில் நாயனின் நாட்டத்தை மீண்டும் பெற்று பெருவாழ்வு வாழ்ந்திட வேண்டுமென்பதற்காக கடுஞ்சோசதனைகளை மேற்கொண்டார்கள். கடைசியாக 'இறைவா! எனது வம்சத்தில் உதயதாரகையென உதிக்கவிருக்கும் எனது அன்பு மகனார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களது பொருட்டாலாவது எமது குற்றத்தை பொருத்தருள்வாயாக.' என மனமிளகிப் பிரார்த்திக்கின்றார்கள். அங்ஙனம் 'நமது நபிகளாரை' பொருட்டாகக் காட்டிய பிறகுதான் மாமனிதராகிய ஆதம் (அலை) அவர்களின் கறை துடைக்கப்பட்டு தனிமையில் வாடிய ஆதம் - ஹவ்வா தம்பதிகள் இணைகின்றார்கள்.

இப்படியாக நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் தொடர்பு ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்கள் வரை சங்கிலித் தொடர்பாக மேல் நோக்கிச் சென்று கொண்டே இருக்கின்றது.

அன்றியும் அந்தச் சங்கிலித் தொடரின் கன்னிகளாகவுள்ள ஒவ்வொரு தனிநபரும் பரிசுத்தத்தின் ஊற்றுக் கண்களாக இருப்பதோடு அவர்களுக்குச் சோதனை குறிக்கிடும் போதெல்லாம் அவர்களில் சங்கமாகியிருந்த நமது நபிகளாரின்பொருட்டால் அச்சோதனைகளை சாதனைகளாக மாற்றப்பட்டு வெற்றி வேந்தர்களாகவும் திகழ்ந்து உள்ளார்கள் என்பதனை வரலாறு உணர்த்துகின்றது.

இந்த வரலாற்றுப் பேருண்மையினைத்தான் இமாம் பூஸிரி அவர்கள்,

'பூர்வீகத் தூய்மை அவர்புவித் தோற்றம் காட்டி நிற்கும்; நேர்மைப் பரம்பரையும் நிட்களங்கம் ஆதியந்தம்; - என 'புர்தா ஷரீபின் 59 - ஆம் கண்ணியில் எண்பித்துக் காட்டுகின்றார்.

எவ்வளவு பெரிய வரலாற்று நிகழ்ச்சிகளை இரண்டே ஈற்றுகளில் அவ்வளவு நயமாக எடுத்துக்காட்டுகின்றார், என்பதனை ஒரு கணமும், நமது நபிகளார் (ஸல் - அம்) அவர்களின் பாரம்பரியம் எவ்வளவு சிறப்புடையதாகவும் தூய்மைக்கு இலக்கணமாகவும் திகழ்கின்றது, என்பதனை மறுகணமும் எண்ணிப் பார்த்து உவகைகொள்கின்றோம். சுப்ஹானல்லா.

இத்தகு பாரம்பரிய பெருமை வாய்ந்த நமது நபிகளார் அவர்கள் இவ்வையகத்துள் பிறந்த அன்று சில நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன. அந்நிகழ்ச்சிகள் 'சத்தியம் வெளிப்பட்டது. அசத்தியம் அழிந்தது' என்பதை பறைசாற்றுவதனை இமாம் பூசிரி (ரஹ்) அவர்கள் அடுத்து வரும் கண்ணிகளிலே கோவையாகத் தொடுத்துக் கொடுக்கின்றார். சொல் நயமும் வார்த்தை ஜாலமும் மிகுந்த அக்கண்ணிகளைச் சுவைத்து மகிழ்ந்திடுவோம் வாரீர்!



يَوْمَ تَفَرَّسَ فِيهِ الْفُرْسُ أَنَّهُمْ
قَدْ أُنْذِرُوا بِحُلُولِ الْبُؤْسِ وَالنِّقَمِ (٦٠)

**யவ்முன் த:பர்ரஸிபி ஹில்ஃபு ருஸு**
**-அன்னஹும்**
**கத்உன் திருபிஹுலூலி லில்புஊஸி**
**- வந்நிகமி**

பெருமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் அவனியில் அவதரித்த அன்று.

பாரசீகர்கள் தங்களுக்கு வீழ்ச்சியும், வேதனையும் விளைவதற்குரிய எச்சரிக்கை பிறந்ததினை குறிப்பால் உணர்ந்தாரன்றோ!

இதனை

எம்பெருமான்தோன்றியநாள் எழுகுறிப்பால், பாரசீகர்
தம்பெருமை தாழ்ந்து, துயர்தனைச்சாரும்
என்றுணர்ந்தார்.

என மறைக்காயர் பாடிப் பரிணமிக்கின்றார்.

வி-ரை : மாநிலந்தனக்கோர் மணிவிளக்கெனலாய், மாநிலத்திலாதாரம் பெருக நல்வழிப் பொருளாய், துறவறந் தவறி இல்லறமடித்து சுடரிலாமனையதுபோலக் குறைபடும் காலம் இருளெனும் குஃப்ரில் குலமறுத்து அறநெறி விளக்க மருவிலாது எழுந்த முழுமதி போல பிறந்தருளிய முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் பிறப்பின் சிறப்பையும், அன்னவர் பிறக்கும் போது ஏற்பட்ட குறிப்பின் சிறப்பை

யும் இங்கே இமாம் பூசிரி அவர்கள் எண்பித்துக் காட்டும் முகமாக ஒரு நிகழ்ச்சிக் குறிப்பையும் அதன் பின் விளைவை யும் எடுத்தோதுகின்றார்.

## ஈரான் அரண்மனையில் அதிர்ச்சி

கி. பி. 570 ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் 20 ஆம் தேதி திங்கட் கிழமை வைகறை நேரத்தில் குழந்தை முஹம்மது குவலயந் தன்னில் பிறக்கின்றது. அதே நேரத் தில் வரலாற்று வல்லுநர்களால் 'பாரசீகம்' என்றழைக் கப்படும் ஈரானில் அரண்மனை அதிர்ந்து கிடு கிடுக்கின்றது. ''நில அதிர்ச்சியா''? என நோட்டமிடுகின்றனர் இல்லை பிறகு ஏன் இந்த அதிர்ச்சி?'' என பாரசீகத்து மதியூகிகள் மருண்டு கிடக்கும் நேரத்தில் அரண்மனையில் உள்ள பிரதானமான பதினான்கு கலசங்கள் விண்டு வீழ்ந்துவிட்ட செய்தி சொல்லப்படுகின்றது. கலசங்களின் வீழ்ச்சிக்குப் பின் அதிர்ச்சி நின்று விடுகின்றது. இதனை உன்னிப்பாகக் கவனித்த மதிமந்திரி கூறுகின்றார். ''இன்னும் பதினான்கு பரம்பரைதான் பாரசீகத்தை ஆளும்; அதன்பின் பாரசீகப் பேரரசு வீழும்; இன்றைய அதிர்ச்சியும், அதிர்ச்சியின் விளைவால் வீழ்ந்துபட்ட கலசங்களும் இதனைத்தான் உணர்த்துகின்றன'' என. மதிமந்திரியின் யூகம் இது பொய்த்ததில்லை. ஆகவே பாரசீக மன்னன் கிஸ்ராவும் அவனைச் சார்ந்தோரும் நிலை குலைவின் விளிம்பிற்கே, சஞ்சலத்தின் உச்சாணிக்கே சென்று செய்வதறியாது திகைக்கின்றனர்.

ஆனால் பாரசீகத்தின் அரச குருக்களும் மந்திரவாதிகளும் மாறுபட்ட பல்வேறு கருத்துக்களைக் கூறி மதி மந்திரியின் மதியூகத்தைப் பொய்யென்று உரைக்கின்றனர். குழப்பமான மாறுபட்ட பல்வேறு கருத்துக்கள் கூறப்பட்டதால் 'இப்படியா, அல்லது அப்படியா?'' என்று எந்த முடிவுக்கும் வரமுடியாமல் மன்னன் மென்மேலும் குழம்புகின்றான்.

ஆனால் விதி எவரைத்தான் விட்டு வைத்தது? நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களுக்கு நான்கு வயது பாரசீகத்து கலசங்கள் வீழ்ந்து நான்கு ஆண்டுகள். இந் நான்கு ஆண்டுகளில் பாரசீகத்தில் பத்து மன்னர்கள் ஒருவர்பின் ஒருவராக மாறி, மாறிப் பட்டத்துக்கு வந்திருக்கின்றனர். அதன்பின் இஸ்லாமியக் குடியரசின் மூன்றாவது குடியரசுத் தலைவர் ஹஜ்ரத் உதுமான் (ரளி - அன்ஹு) அவர்கள் ஆளுகைப் பொறுப்பை ஏற்கும் வரையில் ஏறக்குறைய எழுபத்துஐந்தாண்டுகள் இடைவெளியில் பதிமூன்று மன்னர்கள் ஆண்டு விட்டு பதினான்காவது மன்னன் பாரசீகத்தை ஆளும் நிலையில் அரபு நிலத்தின் குடியரசுப் பொறுப்பை உதுமான் (ரளி - அன்ஹு) ஏற்கின்றார்கள்.

இந்நேரத்தில் குடியரசுக் கோமான் உதுமான் அவர்கள் தமது ஆட்சி பொறுப்பின் முதல் கட்ட வேலையாக பாரசீக மன்னனுக்கு மடலொன்று வரைகின்றார். அதில்;

''...பலமுறை தீனுல் இஸ்லாத்தை ஏற்கும்படி பரிந்துரைத்தும் தாங்கள் அதனைப் புறக்கணித்து விட்டீர்கள். பரவாயில்லை. ஆனால் தங்களது நாட்டில் - பாரசீகத்தில்

இஸ்லாமியப் பிரச்சாரம் நடைபெற அனுமதித்து அந்தப் பிரச்சாரத்தின் விளைவாக மனம் மாறி இஸ்லாமியத்தில் இணைந்திட முன்வருபவர்களை தடுக்காது இருக்கவும் நீங்கள் சித்தமாகிக் கொள்ளுங்கள்'' என அம்மடலில் வேண்டியிருந்தார்கள்.

ஆனால் ''நாட்டு மக்களை அனாச்சாரச் சேற்றில் உருண்டு புரண்டு திரியும் எருமைகளாக - நிர்மூடர்களாகவே வைத்திருந்தால் தான் தனது ஆட்சியும் அதிகாரமும் நிலைத்திருக்கும். மக்கள் சிந்திக்கும் நிலைக்கு வந்து விட்டால் தனது ஆட்சியும் அதிகாரமும் ஆட்டம் கண்டு விடும், என்ற எண்ணத்தில் ஊறிப் போயிருந்த அந்த மட மன்னன் 'இஸ்லாமியத்தின் வாடைகூட என் நாட்டில் நுழைந்திட அனுமதியேன்' என இறுமாப்போடு கலீபா உதுமான் (ரலி-அன்ஹு) அவர்களுக்கு பதில் வரைந்தான்.

ஆகவே பாரசீகத்தின் மீது படையெடுப்பு நடத்துவது இஸ்லாமியருக்கு தவிர்க்க முடியாத அவசியமாகி விட்டது.

பாரசீக மண்ணில் உறுதிக்கும் உண்மைக்கும் தக்கதோர் முன்மாதிரியாகத் திகழ்ந்த இஸ்லாமியப்படை நுழைந்தது மிகக் குறுகிய சிறுமுயற்சியிலே பாரசீகம் வீழ்ந்தது. பாரசீகப் பேரரசு நபிகளார் அவர்களின் பிறப்பிற்குப் பின் பதினான்காவது மன்னவனின் காலத்தில் அவனது மடமையால் வீழ்ந்து இஸ்லாமிய சாம்ராஜ்யத்தோடு இணைந்தது.

இவ்விதம் பதினான்கு மன்னர்களுக்குப்பின் பாரசீகம் வீழ்ந்து இஸ்லாமியர்களின் ஆதிக்கத்தின் கீழ்வரும் என்பதனையே,

நபிகளார் அவர்களின் பிறப்பு நேரத்தில் ஏற்பட்ட அந்தக் குறிப்பு, அதாவது பதிநான்கு கலசங்களின் வீழ்ச்சி முன்னறிவிப்புச் செய்வதாக இருந்தது. இதில் ஒரு விசேஷம் என்னவெனில் பாரசீக அரண்மனைக் கலசங்கள் வீழ்ந்துபட்டதால் பிற்கால விளைவு இன்ன முறையில் இப்படி மாறுபடும் என்பதை குறிப்பாக பாரசீக மன்னனாலும் அவனைச் சார்ந்தவர்களாலும் உணர முடியாவிட்டாலும் கலசங்களின் வீழ்ச்சி ஏதோ ஒரு அபசகுணம் தாங்க முடியாததொரு வீழ்ச்சிக்கு அறிகுறி என்பதை மட்டில் விளங்கி அந்த மன்னர் பரம்பரையில் வந்த ஒவ்வொருவரும் அணு அணுவாக சித்திரவதைக்குள்ளாகி நிம்மதியற்றே வாழ்ந்து வந்தனர், என்பதனை இங்கே நமது நாவலர் பூசிரி அவர்க்ள், ''பாரசீகர், தம் பெருமை தாழ்ந்து, துயர்தமைச்சாரும் என்றுணர்ந்தனர்'' —எனக் கூறிக்காட்டுகின்றார். இமாம் அவர்களின் சொல் ஆதிக்கத்தில் எவ்வளவு பொருள் செறிவு தொக்கி நிற்கின்றது என்பதனைப் பார்த்தீர்களா? சுப்ஹானல்லாஹ்! அன்று அரண்மனைக் கலசங்கள் விண்டு வீழ்ந்துபட்ட நிலையினை அடுத்துச் சித்தரிக்கின்றார் பாருங்கள்.

وَبَاتَ إِيوَانُ كِسْرَى وَهُوَ مُنْصَدِعٌ

كَشَمْلِ أَصْحَابِ كِسْرَى غَيْرَ مُلْتَئِمِ (٧١)

**வ பா(த்)த ஈவானு கிஸ்ராவஹுவ**
**-முன்ஸதிஉன்**
**கஷம்லி அஸ்ஹாபி கிஸ்ரா ஙைர-**
**முல்தயிமி**

(அன்றைய பாரசீக நாட்டு மா மன்னனான) கிஸ்ராவின் தோழர்கள் கருத்தொற்றுமை காண முடியாதபடி (அவர்களிடையே) பிளவு விண்டது போல கிஸ்ராவின் மாளிகையின் மங்கலக் கலசங்களும் சரிந்து வீழ்ந்ததுவே.

இதனை —

பிரிந்து கிசுராதோழர் பிளவுண்ட
வாறதுபோல்
சரிந்தன்று வீழ்ந்ததவன் தங்கும்மணி
மாளிகையே
என மறைக்காயர் பாடுகின்றார்,

---

(٦٢) والنار خامدة الأنفاس من أسف
عليه والنهر ساهي العين من سدم

**வன்நாறுகாமித(த்)நல் அன்(ஃ)-**
**-ஃபாஸிமின் அஸஃபின்**
**அலைஹிவந்நஹ்றுஸாஹியல்**
**அய்னி மின்ஸதமி**

அஃதன்றி; பெருமான் நபிகளார் பிறந்த அன்று பாரசீகர்களால் தெய்வமென பூஜிக்கப் பட்ட நெருப்புக்குண்டம் கவலையுடன் அணைந்தும் அந்நாட்டில் ஜீவ நதியாக ஓடிக் கொண்டிருந்த நதியின் ஓட்டம் துக்கத்துடன் நின்றும் போயின.

---

இதனை

ஈரானியோர் தொழுதஎரி கவலையால்
அணையச்
சோரா, புராத்து நதி சோர்வடைந்து
நின்றதுவே
என மறைக்காயர் பாடிக் காட்டுகின்றார்.

## நீள் நெருப்பும் அணைந்தது

வி-ரை :- பாரசீகர்களில் பெரும்பாலோர் நெருப்புக்கு மண்டியிடும் மஜூசிகளாவர். அவர்கள் கோயில்கட்டி அதில் சங்கிலி தொடராக ஆயிரமாண்டுகள் நெருப்பை அணையாமல் காத்து பூஜித்து வந்தனர். இப்படி நீண்ட காலம் அணையா விளக்காக எரிந்து கொண்டிருந்த அந் நெருப்பு, நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் இப்பூவுலகில் பிறந்த மாத்திரத்தில் அணைந்து போய் விட்டது. இந்நிகழ்ச்சியை இந்தக் கண்ணியின் முதல் ஈற்றில் ஈண்டு காண்பிக்கும் நமது பாவலர் பூசீரி அவர்கள் 'கவலையால் அணைந்து' என குறிப்பிடுகின்றார், ஆம்; ஆண்டாண்டுகளாக வணங்கப்பட்டும் வழிபாடு, மரியாதைகள் செய்யப்பட்டும் வந்த நம்மைப் பொய்ப்பிக்க மெய் (நபிகளார்) பிறந்துவிட்டதே! என்று அந் நெருப்பு கவலையடைந்திருக்கும் என்பதில் ஐயமில்லைதான்; அப்படி கவலையடைந்த நெருப்பு ''வருவது வரட்டும் ஒரு கை பார்த்து விடுவோம்' என வறட்டு ஜம்பம் பேசித்திரியாமல் தனது தோல்வியை-தான்-பொய்மை என்பதை-ஒப்புக்கொண்டு பொய்மைக்கு எதிரியான மெய்நிலை (நபிகளாரின் வருகை) தோன்றியவுடன் தன்னை மாய்த்துக்கொண்டதே இந்த உயர் பண்பு, நடைப்பிணங்களாக உலாவரும் சிலமனிதப் பிண்டங்களுக்கு ஏற்படவில்லையே என்பதையும் இங்கே சிந்திக்கத் தூண்டுகிறார். அடுத்து இரண்டாம் ஈற்றில்;

முற்காலத்திலென்ன! எக்காலத்திலுமே வற்றாமல் வறளாமல் ஜீவநதியாக ஓடிக்கொண்டிருந்த ''புராத்து'' நதிக்கு - அதன் ஜீவித தன்மைக்கு - தெய்வீகத்தன்மை

கற்பித்து அந்த நதியையும் அங்கே பலர் வணங்கி வழிபட்டு வரலாயினர். இங்கே இப்போதும் 'ஆடிப் பெருக்கு' நடத்தப்படுவதைப்போல. ஆகவே நபிகளார் பிறந்த நேரத்தின் புனிதத் தன்மையை உணர்ந்த அந்த புராத்துநதி 'இனி எனக்கு மக்களால் சூட்டப்பட்ட தெய்விகத் தன்மை பறிக்கப்பட்டு விடுமே' என - எண்ணி சோர்வடைந்து அந்தச் சோர்வால் அந்நதியின் நீர் ஓட்டம் நின்றும் போய்விட்டதாம். சுப்ஹானல்லாஹ்! நபிகளாரின் பிறப்பின் மகிமைதான் என்னே?......

وَسَاءَ سَاوَةَ اَنْ غَاضَتْ بُحَيْرَتُهَا

٦٢ وَرُدَّ وَارِدُهَا بِالْغَيْظِ حِيْنَ ظَمِيْ

**வஸாஅஸாவத்நஅன் ஙாழத்**
**- புஹைர(த்)**

**நூஹா வநத்தவாரிதுஹா**
**- பில்ஙைழி ஹீனா ளமி**

'சாவா' எனும் (மிகப்பெரிய) ஏறி வறண்டு விட்டதால் பீடை பற்றியது. தாகத்தோடு ஆங்கே நீர் அருந்தச் சென்றவர்கள் (ஏறி சுக்கு போல வற்றி வறண்டு காய்ந்து போயிருப்பதைக் கண்டு) நெஞ்செரிந்து மீண்டனர்.

இதனை-

ஏறிவற்றலால் சாவா எனும் நகரப் பீடைபற்றி,
நீர் அருந்தப் போனவர்கள் நெஞ்செரித்து மீண்டனரே,
என மறைக்காயர் பாடுகின்றார்.

# ஏரி வறண்டது!

விரை:- 'சாவா' என்பது பாரசீகத்தின் பெருநகர்களில் ஒன்று. 'ஹமதான்' 'ரே' ஆகிய இரு முக்கிய நகர்களுக்கிடையே அந்நகரம் இருந்தது. அந்நகரில் நம் நாட்டு 'வீராணத்தைப் போன்று பத்துமைல் நீளமும், ஆறுமைல் அகலமும் கொண்ட பெரும் ஏரி ஒன்று இருந்தது. அந்த ஏரியின், கரைகளில் கன்னிமார் கோயில்களை எழுப்பி வணக்க வழிபாடு செய்து வந்த அந்நகரவாசிகள், கரைகளில் இருக்கும் கன்னிமார்களுக்கும் அந்த ஏரிக்கும் தொடர்பை ஏற்படுத்தி புனிதம் கற்பித்து வரலாயினர்;

ஆனால்; மூடச்செயல்களுக்கு இலக்காகத் திகழ்ந்த அந்த ஏரி, நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் பிறந்த அதே நேரத்தில், முற்றாக வற்றி-வறண்டு போயிற்று;

அன்று காலை அங்கே நீராடவும், நீர்முகரவும் நீர்யாத்திரை செய்யவும் வந்த அந்நகர மக்கள் திடீரென ஒரு சொட்டு நீர் கூட இல்லாமல் வற்றி வறண்டு போயுள்ள விந்தை நிலைக்கண்டு திடுக்கிட்டனர்!

ஏரி ஏன் வறண்டது என்பதனைச் சிந்தித்து உண்மை நிலையினை பரவது கண்டுணர்ந்தனரா அம்மக்கள்?

இல்லை, மாறாக 'நாம் ஏரிக்குச் செய்து வந்த பூஜைகளில் ஏதோ குறைபாடு நிகழ்ந்து விட்டது. ஆகவே கன்னிமார்கள் கோபித்துக் கொண்டு ஏரியை வற்ற வைத்துவிட்டனர். என்றே நம்பினர் பரிதாபத்திற்குரிய அம்மூடர்கள். அங்கனம் நம்பியவர்கள் 'அடடா! செய்ய

வேண்டிய பூஜைகளை முறையாகச் செய்யாது மோசம் போய்விட்டோமே, என மௌடீகமான முறையில் நெஞ்செரிந்தனர். இந்நிகழ்ச்சியினைத்தான் இங்கே, கேவலம் கால் அலம்பப் பயன்படக் கூடிய குளம் குட்டைக்குக் கூட புனிதம் கற்பித்தால் அவர்களை பீடை பற்றி ஏறி வற்றியது' என மிக நயமாக அம்மக்களின் மௌடீகத்தைச் சாடுகின்றார் இமாம் பூசிரி (ரஹ்) நல்லவேளை! நம் காலத்தில் அவர் இல்லாமல் போய்விட்டார். இருந்தால் 'இஸ்லாம்' என வெளி வேடம் போட்டுக் கொண்டு நம்மில் பலர் செயல் மேற்கொண்டு வரும் மௌடீகங்களையும் அனாச்சரங்களையும் சொல்லால் சுட்டெரித்து விடுவார் மனிதர் தப்பித்தோம் போங்கள்.

---

كَأَنَّ بِالنَّارِ مَا بِالْمَاءِ مِنْ بَلَلٍ
حُزْنًا وَبِالْمَاءِ مَا بِالنَّارِ مِنْ ضَرَمٍ (٦٣)

**கஅன்னபின்னாரிமா பில்மாஇ**
**-மின் பலலின்**
**ஹுஜ்னா(வ்)வ பில் மாஇமா**
**-பின்னாரி மின் ழராமி**

(உச்சக்கட்டக்) கவலையினால் நெருப்பு இருந்த இடம் ஈரநைப்பாகவும், நீர் இருந்த இடம் நெருப்பு அனல் போலவும் காணப்பட்டது.

இதனை—

ஆகுலத்தால் தீயிருந்தஅனற்றரை
குளிர்ந்திருப்பச்

சாகரம்போல் நீர்இருந்ததரை
நெருப்பைப்போன்றதுவே!

என மரைக்காயர் பாடிக் காட்டுகின்றார்.

வி-ரை : நானிலம் போற்றும் நபிகள் பெருமான் அவர்கள் பிறந்த நேரத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் - கடலைப் போன்ற 'சாவா' ஏரி அறவே நீரில்லாமல் வற்றி வறண்டது. ஆயிரமாண்டு காலம் தொடர்ந்து எரிந்து கொண்டிருந்த 'நெருப்பு' அணைந்தொழிந்தது ஆகியவைகளை மீண்டும் நினைவு படுத்தி அவைகள் நூற்றுக்கு நூறு உண்மை நிகழ்ச்சிகள் என்பதை வலியுறுத்துகின்றார்.

ஏனெனில் கவிவாணர்கள், நிகழ்ச்சிகளுக்கு சுவை கூட வேண்டுமென்பதற்காக மிகைப் படுத்தியும் கூட்டிக் குறைத்தும் கூறிடுவது மரபாக இருப்பது போல அங்ஙனம் புலவரும் செயல்பட்டிருக்கின்றார் என எவரும் சுட்டிடக் கூடுமல்லவா?

ஆகவே,

ஆயிரம் ஆண்டுகள் தொடர்படியாக எரிந்து அருகிலிருந்த இடங்களையெல்லாம் அனல் தரையாக்கிவைத்திருந்த நெருப்பு முற்றாக அணைந்து பட்டது. அங்ஙனம் அணையும்போது 'அடடா இவ்வளவு பெரிய பாரம்பரியச்

சிறப்பையும், இவ்வளவு நீண்டநாள் வாழ்வையும் மாய்த்துக்கொள்ளப் போகின்றோமே, என அந்நெருப்பு கவலையடைந்ததால், அதற்குக் கண்ணீர் கசிவு ஏற்பட்டு அனற்றயாக இருந்து அந்த இடங்களில் 'ஈரநைப்பை' ஏற்படுத்தி விட்டது. அதாவது நெருப்பிருந்த அறிகுறி கூட இல்லாத அளவுக்கு அணைந்து விட்டது எனவும்;

கடல் போல தண்ணீர் தேங்கியிருந்த 'சாவா' எனும் ஏரி முழுமையாக ஒரு சொட்டு நீர்கூட இல்லாமல் வற்றிப் போய்விட்டது. அங்ஙனம் வற்றும்போது ''கடலைப் போன்ற பெரும் புகழ் பெற்றிருந்த நாம் இப்படி ஒரு நொடிப் பொழுதில் வற்றி வறளப் போகின்றோமே'' என்ற கவலை உச்ச நிலையை அடைந்ததால் வறண்ட ஏரி நெருப்பிருக்கும் அடுப்பைப் போன்று 'தகிப்பு' ஏற்பட்டு விட்டது. அதாவது நீர் இருந்த அறிகுறி கொஞ்சங்கூட இல்லாத அளவு ஏரியிலிருந்த களிமண்களெல்லாம் சுக்கு நூறாகக் காய்ந்துவிட்டன'' என்றும் கூறுகின்றார்.

உவமை கூறி அந்த உவமையால் தன் உள்ளக் கிடக்கைக்கு வலிமை சேர்க்கும் இந்த உயர்திறன் இமாம் பூசிரியைத் தவிர உலகில் வேறு எவருக்கு இருக்கின்றது?

وَالْجِنُّ تَهْتِفُ وَالْأَنْوَارُ سَاطِعَةٌ
وَالْحَقُّ يَظْهَرُ مِنْ مَعْنًى وَمِنْ كَلِمِ ٦٥

**வல்ஜின்னு தஹ்திஃபு வல்-**
**- அன்வாரு ஸாத்திஅதுன்**
**வல்ஹக்கு யழ்ஹரு மின் மஃனன் (ன்)**
**- வ மின் கலிமி**

இன்னும், ஜின்னுகள் (எனும் பூத வர்க்கம்) (பேய்க்) கூச்சலிட்டன. [திக்குத் திகந்தமெங்கிலும்] ஒளிக்கற்றைகள் உமிழ்ந்தன;

சத்தியம் உள் அறிவாலும் உரைகளாலும் வெளியாகுகின்றது.

இதனை-

ஜின் இனங்கள் கூச்சலிடத், திசைதோறும்
ஜோதிமின்ன
மன்னும்உண்மை நெஞ்சறிவால்வாயுரை
யால் தோன்றியதே
என மறைக்காயர் பாடுகின்றார்.

வி-ரை நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் பிறப்பால் மலைகளிலும் மடுக்களிலும் உயிர் வாழும் ஜின்னுகள் பீதியடைந்து வீறிட்டலறின. அன்றி, அண்ணல் நபிகளார் பிறந்தபோது அவர்களுடன் ஒருவகைப் பேரொளியும் சேர்ந்து பிறந்தது. அந்த ஒளியின் ஆதிக்கத்தில் அகிலமே தெரிந்தது.

இங்கே;

''ஜின்னுகள் கூச்சலிட்டன'' என்பதன் மூலம்; மனித சமுதாயத்தில் வேரூன்றிப் போயிருந்த அறியாமையும், மூடத்தனங்களும் வேர் பிடுங்க ஆரம்பித்தன - என்பதையும், 'திசை தோறும் ஜோதி மின்ன' என்பதன் மூலம்; வேர் பிடுங்கத் தொடங்கிய அறியாமையிருளும் மூட முட்டமும் அங்கிங்கெனாதபடி எங்கும் இல்லாமல் அழிந்தொழிந்து - என்பதையும், 'மன்னும் உண்மை நெஞ்சறிவால் வாயுரையால் தோன்றியதே' என்பதன் மூலம்' அறிவாற்றல்' என்ற ஞான சூரியனின் உதயத்தாலும் 'வாய்மை' என்ற பூரணச் சந்திரனின் வருகையாலும் (அதாவது நபிகளாரின் அறிவாற்றலை சூரியனுக்கும், வாய்மையை பூரணச் சந்திரனுக்கும் ஒப்பிடுகின்றார்') இஸ்லாமியம் எனும் பகலை மனித சமுதாயமெனும் உலகம் பெற்றுச் சிறந்தது - என்ற தத்துவ விளக்கத்தை எண்பித்துக் காட்டுகின்றார். ''சுப்ஹானல்லா!'' என்ன ஆழ்ந்த கருத்து பார்த்தீர்களா?

---

عَمُوا وَصَمُّوا فَإِعْلَانُ الْبَشَائِرِ لَمْ
تُسْمَعْ وَبَارِقَةُ الْإِنْذَارِ لَمْ تُشَمِ (٦٦)

**அமூ வஸம்மூ: ஃபஇஃ லானுல்**
**- [illegible]**
**[illegible] இன் தாரி**
**- [illegible]**

(ஆனாலும்) அவர் (பாரசீகர்) கள் (கண் இருந்தும்) குருடராய்' (செவி இருந்தும்) செவிடராய் இருந்தனர் திருவாக்குப் பிரகடனம் மின்னல் கண்களைத் தாக்கவில்லை.

இதனை-

திருவாக்கு நல்லுரைக்குச்செவிடராய், எச்சரித்த
குருவாக்குமின் காணாக்குருடராய் ஆயினரே!

எனப்பாடுகின்றார், மறைக்காயர்.

வி-ரை : ''அண்ணலாரின் அறிவாற்றலாலும் வல்லமையாலும் இஸ்லாமியம் எனும் பகலவன் தோன்றி விட்டான்'' என்றீரே! அப்படியானால் உலக மக்கள் தொகையில் மூன்றில் இரண்டு பகுதியினர் இஸ்லாமியத்திற்கு வெளியிலல்லவா இருக்கின்றார்கள்? அது எதனால்? என்று கவிக்கோ பூசரியை எவரோ சீண்டி விட்டார் போலும். வெறும் வாய்க்கு அவல் கிடைத்து விட்டது போல் பொறிந்து தள்ளுகின்றார் மனுசன்.

மூன்றில் இரு பகுதியினர் இஸ்லாமியத்திற்கு வெளியில் இருக்கின்றார்களென்றால் அது யார் குற்றம்? அண்ணல் நபியுல்லாஹ்வின் குற்றமா? ''பாதையின் நடுவே நடக்காதீர்கள் ஓரமாகச் செல்லுங்கள்'' என்று எச்சரிக்கை போர்டு வழி நெடுகிலும் வைக்கப்பட்டுள்ளது. அந்த எச்சரிக்கையைப் பார்த்து படித்த பின்னும் நடு வழியிலே ஒய்யாரமாக நடை பயிலுகின்றான் ஒருவன்; அவனுக்குப்பின்னால் பயணிகள் பஸ் விரைவாக வருகின்றது. விரைந்தோடி வரும் பஸ்ஸை இயக்கும் ஓட்டுனர் நடுப்பாதையில் நடை பயிலும் அம்மனிதனைத் தூரத்தில் பார்த்தவுடனேயே தொடர்ச்சியாக 'ஹாரன்' கொடுக்கின்றார். காதைச் செவிடாக்கும் அந்த ஹாரன் சப்தத்தையும் அந்த நடு வழிப்பாதசாரி சட்டை செய்யவில்லை அப்படியென்றால் அத்தகு மத்தம் பிடித்த பாதசாரி விபத்துக்குள்ளாவது பற்றி கேட்கவா வேண்டும்? அப்படி விபத்து நடந்த பின் நடைபாதை அமைத்த அரசாங்கத்தையோ, பஸ்ஸை இயக்கிய ஓட்டுனரையோ எவராவது குறை சொல்லாகுமா?

மின்சாரம் மனிதனின் உயிரைக் குடித்து விடுமென்பது சொல்லாமல் தெரிந்த ரகசியம்! இருந்தும்கூட இரண்டு எலும்புகளையும் ஒரு மண்டை ஓட்டையும் கொண்ட பயங்கரப் படமொன்றை சிவப்பு போர்டில் போட்டுக் காட்டி அதன் கீழே 'அபாயம் தொடாதீர்கள்' என்று வேறு எழுதி வைத்துள்ளார்கள். இருந்தும் மின் கம்பத்தைத் தொட்டு அதனால் ஒருவன் விபத்திற்குள்ளாகின்றானென்றால் அது யார் குற்றம்? மின்சாரத்தின் குற்றம் என்றோ மின்வாரியத்தின் குற்றமென்றோ எவராவது சொல்ல முடியுமா?

அதுபோல;

அல்லாஹ் தனது திருவாக்காம் திருக்குர்ஆன் ஷரீஃப்மூலம் அறிவிப்புச் செய்துவிட்டான். அண்ணல் நபி (ஸல்-அம்) அவர்களும் எச்சரிக்கை செய்துவிட்டார்கள். நல்லுரையாய் திகழும் அல்லாஹ்வின் திருவாக்கு விஷயத்தில் கருத்துக் குருடர்களாகவும் மின்னொளி போன்ற அண்ணலாரின் எச்சரிக்கை விசயத்தில் கருத்துச் செவிடர்களாகவும் வாழும் அம்மக்கள் வழிகோட்டில் உள்ளத்தைப்பற்றி எவர் மீது குற்றம் சாட்டுவது? ஆகவே அணி மாறியிருப்போர் அனைவரும் மனித வர்க்கத்தில் 'கழிசடைகள்' என்று ஒதுக்குவதைத் தவிர வேறு மார்க்கமில்லை என்கிறார் இமாம்பூசிரி.

---

مِنْۢ بَعْدِ مَآ اَخْبَرَ الْاَقْوَامَ كَاهِنُهُمْ *
(٩٤) بِاَنَّ دِيْنَهُمُ الْمُعْوَجَّ لَمْ يَقُمِ

**மின் ப:திமா அக்பரல் அக்வாம**
**- காஹினுஹும்**
**பி அன்ன தீனஹுமுல் முஃவஜ்ஜ**
**- லம்யகுமி**

அவர் (பாரசீகர்)களின் சோதிடர்கள் "(தம்மின்) கோணல் மதம் இனி நிலைகொள்ளாது" என (அவர்களுக்கு) அறிவுறுத்திய பின்னும்;

---

இதனை -

அவ்வினத்திற்சோதிடர்கள், அது தொடர்ந்த
- கோணல்

மதம்இவ்வுலகில் நில்லாதென்றியம்பியறிவித்த
- பின்னும்

என மறைக்காயர் பாடுகின்றார்.

இந்தக் கண்ணிக்கு விரிவுரை காணுமுன் இதற்கு முன் உள்ள அறுபத்து ஐந்தாம் கண்ணியின் முதல் ஈற்றான ''ஜின் இனங்கள் கூச்சலிட'' என்பதற்கு விரிவுரை காண்பது அவசியமாகின்றது.

## ஜின்கள் பற்றிய விளக்கம்

மனித இனம், மலக்கினம் ஆகியவையல்லாத மூன்றாவதாக 'ஜின்' என்றதொரு வர்க்கமும் உண்டு. அது 'நெருப்பி'னால் படைக்கப் பட்டது. அந்த ஜின் இனத்தின் மூலபிதா 'ஜான்னு' என்பதாகும். இந்த இனத்திற்கு சொந்தமான உருவமென்று எதுவுமில்லை. ஆனால் மனிதன் மிருகம் போன்ற அனைத்து உயிரினங்களைப் போன்றும் உருப்பெறும் ஆற்றல் அவ்வினத்திற்கு வல்ல அல்லாஹ்வினால் வழங்கப்பட்டுள்ளது. ஈயைப் போன்றும் வருவர், எறும்பைப் போன்றும் மாறுவர். நாயைப் போன்றும் வருவர்; கருநாகத்தைப் போன்றும் போன்றும் வருவர்; சில வேளைகளில் மனிதனைப் போன்றும் வருவர்; எந்த நேரத்தில் எந்த உருவமெடுக்கின்றாரோ அந்த குறிப்பிட்ட உருவத்திற்

குரிய குணாதிசயங்களும், இயல்புகளும் குறிப்பிட்ட அந்த உருவத்திலிருக்கும் வரை அந்த ஜின்னுகளுக்கு இருக்கும்.

உதாரணமாக : மனித உருவமெடுத்தால் மனித இயல்புகளான மொழியும் சக்தியும்; சிந்திக்கும் ஆற்றலும் மனித உருவை மாற்றும் வரை அந்த ஜின்னிடம் வெளிப்படும். யானை உருவெடுத்தால் பிழிரும் இயல்பு வெளிப்படும். பூனை உருவெடுத்தால் பதுங்கிப் பாயும் இயல்பு வெளிப்படும். கருநாகத்தின் உருவெடுத்தால் படமெடுத்தாடும் இயல்பும், எதிரியை தீண்டும் போது விஷத்தை பாய்ச்சும் இயல்பும் வெளிப்படும்.

## ஜோதிடக்கலை வளர்ந்த விதம்

அந்த ஜின்னுக்கு விண்ணகம் மண்ணகம் ஆகிய இரண்டு மண்டலங்களிலும் சஞ்சரிக்கக் கூடிய வல்லபத்தை யும் வல்லவன் வழங்கியுள்ளான். ஆகவே நினைத்த நேரத்தில் விண்ணகத்திலிருந்து மண்ணகத்திற்கும் மண்ணகத்திலிருந்து விண்ணகத்திற்கும் சென்று வர முடியும், (ஆதார நூல் : ஹயாத்துல் ஹைறவான்)

ஜின்னுகளின் இயல்பு இவ்வாறிருக்க; அன்றாட நிர்வாகங்களைக் கவனிப்பதற்கென்று இறைவன் ஒரு பகுதி வானவர்களை நியமனஞ் செய்துள்ளான். அந்த வானவர்கள் விண்ணகத்தில் ஒருவருக்கொருவர் தங்களின் பொறுப்புக்களைப் பரிமாறிக் கொள்வர்,

''இன்று இன்னானின் மகன் இன்னானுக்கு இன்ன வகை உணவை இன்ன தொழிலின் மாறலாக கிடைக்கச் செய்யப் பணிக்கப்பட்டுள்ளேன்'' என்றும்.

"இன்று, இன்னாரின் மனைவி இன்னாரின் கர்ப்பத்தில் இன்னபாலுடைய (ஆண் அல்லது பெண்பால்) சிசுவைத் தரிக்கச் செய்யப் பணிக்கப்பட்டுள்ளேன்" என்றும்;

"இன்னார் இன்ன வகையில் விபத்திற்குள்ளாகி திடீர்மரணம் அடைவான் என்றிருந்ததை இன்ன தர்ம காரியத்தைச் செயல் மேற்கொள்ளும்படி செய்து அதன் விளைவாக அவனுக்குச் சம்பவிக்கவிருந்த விபத்திலிருந்து அவனைப் பாதுகாத்து அவனது ஆயுளை நீட்டிக் கொடுக்கும்படி பணிக்கப்பட்டுள்ளேன்" என்றெல்லாம் விண்ணகத்தில் அன்றாட நிர்வாகப் பொறுப்புக்களைக் கொடுக்கப்பட்டுள்ள வானவர்களான மலக்குகள் அன்றாட நிர்வாகங்களைப் பற்றி ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொள்வதனை விண்ணகம் செல்லவும், வரவுமான வல்லபமுள்ள ஜின்னுகள் ஒட்டுக்கேட்டு அவ்வனம் ஒட்டுக் கேட்டவற்றை மண்ணக மாந்தர்களிடம் அதாவது எந்த மனிதனிடம் எந்த ஜின்னு வசப்பட்டு (வாசிலாவாகி) உள்ளதோ அந்த மனிதனிடம் எத்தி வைத்து விடும். ஜின்னுவின் மூலம் மனிதர்களின் தினப்பலன்களைத் தெரிந்து கொண்ட அந்த ஜின் வாசிலைக்காரன் அந்த தினப்பலன்களுக்கு கண், காது, மூக்கு, முழி எல்லாம் கற்பித்து ஜோடனையாக மனித சமுதாயத்திற்கு எத்தி வைப்பான். இப்படித்தான் 'ஜோதிடக் கலை' வளர்ந்தது.

அன்றி வாராந்திர நிர்வாகங்களுக்கென்றும், வருடாந்திர நிர்வாகங்களுக்கென்றும் இறைவன் குறிப்பிட்ட மலக்குகளை நியமனஞ் செய்துள்ளான்.

இப்படி வார, மாத, வருட நிர்வாகப் பொறுப்புக்களைக் கொடுக்கப்பட்டுள்ள அந்தந்த மலக்குகள் தங்களிடையே மேற்கண்ட வண்ணமாக தங்களுக்குள்ள நிர்வாக நியதிகளைப் பரிமாறிக் கொள்கின்றனர்.

ஆகவே விண்ணகம் செல்லவும், வரவுமான வல்லமை கொடுக்கப்பட்டுள்ள ஜின்னுகள் இந்த விதமான உரையாடல்களையும் ஒட்டுக்கேட்டு உலகில் பரப்பினர். அதிலிருந்து வாரப்பலன்களும் மாத-வருடப்பலன்களும் உருவாகியது.

இதிலொரு வித்தையென்னவெனில் ஜோதிடம் சொல்லி அதன் மூலம் சொகுசு வாழ்வு பெற்றுத் திகழ்ந்த ஜோதிடர்கள் தங்களின் ஜோதிடத் தொழிலுக்கு முதுகெலும்பாகத் திகழும் ஜின்னுகளை 'தேவதைகள்' என்றும், தெய்வப்பிறவிகள், என்றும் வர்ணனை செய்து ஜின்னுகளை மகிழ்வித்து வந்தனர்.

ஆதலால் ஜோதிடர்களின் இந்த வர்ணனை வழிபாடுகளால் மதி மயக்கமடைந்து கொண்டிருந்த அந்த ஜின்னுகள் வானவர்களின் உரையாடல்களை ஒட்டுக் கேட்கும் திருட்டுத் தனங்களை மென்மேலும் ஊக்கமுடன் செய்து வந்தன.

இந்த நிலையில்தான் எமது நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் பிறப்பு நிகழ்கின்றது.

பெருமானாரின் பிறப்பின்போது இறைவனின் ஒருமைக்கு—வஹ்தானிய்யத்திற்கு-புறம்பான முறைகேடுகளுக்கு 'முற்றுப் புள்ளி' வைக்கப் பட்டதைப் போன்று, அந்த வஹ்தானிய்யத்தின் ஆணிவேரையே ஆட்டங்

காணச் செய்திடவல்ல இந்த ஜோதிடக் கலைக்கும் சாவு மணி அடிக்கப்பட்டுவிட்டது.

ஆமாம்,

விண்ணகத்தில் வானவர்களிடையே நடைபெறும் உரையாடல்களை ஒட்டுக் கேட்கும் ஜின்னுகள் இனி எப்போதும் ஒட்டுக் கேட்க முடியாத வண்ணம் பெருமனார் பிறந்த நேரத்திலிருந்து இரும்புத்திரைபோடப் பட்டுவிட்டது. ருசி கண்ட பூனை உரியை சுற்றிச்சுற்றி வருவதைப் போன்று ஒட்டுக் கேட்பதற்காக விண்ணகத்தைச் சுற்றிச் சுற்றி வந்த ஜின்னுகளை மலக்குகள் அடித்துவெருட்டினர். மலக்குகளின் அடியின் வேதனையைத் தாங்க முடியாமல் அடிப்பட்ட ஜின்னுகள் கூச்சலிட்டுக் கொண்டு அங்கு மிங்கும் சிந்திச் சிதறி ஓடினர்.

நபிகளார் அவர்களின் பிறப்பின்போது ஜின்னுகளுக்கு நேர்ந்த இந்த இழிநிலையினைத்தான் நமது நாயகப் பாவலர் பூசிரி அவர்கள் அறுபத்தைந்தாம் கண்ணியின் முதலீற்றின் முற்பகுதியில் ''ஜின் இனங்கள் கூச்சலிடக்'' எனக் கூறிக் காண்பிக்கின்றார்.

விண்ணகம் சென்று மலக்குகளின் உரையாடல்களை ஒட்டுக் கேட்க முடியாதவாறு முடக்கப்பட்ட ஜின்னுகள் ''இனி விண்ணகத்துச் செய்திகளை சேகரிக்க முடியாது ஆகவே இதுகாறும் நாம் கடைபிடித்து வந்த கோணல் மதத்தை மாற்றிக் கொள்ள வேண்டியதுதான்'' என்று தங்களை பூஜித்து வந்த ஜோதிடர்களிடம் கூறி, அந்த ஜோதிடர்களும் தங்களை அணுகும் ஜோதிடப் பிரியர்களை அங்ஙனமே கூறி ''நாம் இதுவரை நம்பி ஏமாந்து வந்த ஜோதிடர்களை

யும் பல தெய்வ வணக்க வழிபாடும் பொய்யானவை - கோணல் மதம் - ஆகவே இனி அதனை நாம் விட்டுத் தொலைத்து விட்டு சத்திய மார்க்கத்தைப் பின்பற்ற வேண்டியதுதான்'' என்று உண்மை நிலையினை எடுத்துக் கூறிய பின்னும் அவர்கள் தங்களின் போக்கை மாற்றிக் கொள்ள முன் வரவில்லை என இங்கே 67-ம் கண்ணியில் சுட்டிக் காண்பிக்கின்றார்.

அன்றி, மனித சமுதாயத்தை அறியாமையில் ஆழ்த்திக் கொண்டிருந்த ஜோதிடக்கலை மன்னர் நபியுல்லா அவர்களின் பிறப்பின் சிறப்பால் அழிந்துவிட்டது என்பதையும் இங்கே சூசகமாகச் சொல்லிக் காண்பிக்கின்றார்.

சுவையும் சுறுசுறுப்பும் மிக்க இன்னும் இது போன்ற பல விபரங்களை அடுத்தடுத்த கண்ணிகளில் சமைத்துத் தருகின்றார் இமாம் பூசிரி.

وَبَعْدِ مَا عَايَنُوا فِي الْجَوِّ مِنْ شُهُبٍ
مُنْقَضَّةٍ وَّفْقَ مَا فِي الْأَرْضِ مِنْ صَنَمِ ﴿٦٨﴾

வ பஃதிமா ஆயனூ ஃபில்ஜவ்வி
- மின் ஷுஹுபின்
முன்கள்ள(த்)தின் (வ்)வஃபிக்மா
- ஃபில்அர்ளி மின் ஸனமி

உலகம் அனைத்திலும் உள்ள சிலை (விக்கிரகங்) களின் தலைகளுக்கு நேராக விழும் எரி நட்சத்திரங்களை ஆகாயத்தில் அவர்கள் கண்ணுற்ற பின்னும் (அந்த அறிவினர்கள் தங்களின் வீண் பிடிவாதத்தை தளர்த்திக்கொள்ள வில்லை)

இதனை -

வணங்குஞ்சிலை தலைமேல்வானில் எரிதாரகைகள்

பிணங்கிவிழும் காட்சிகண்ட பின்னும்அவர்
மாறிலரே!

என மதுரை மறைக்காயர் பாடி பரிணமிக்கின்றார்.

பெருமானாரின் பிறப்பின் சிறப்புக்களை மாலையாகத் தொடுத்த பூசிரி அவர்கள் தான் தொடுத்த பாமாலைக்கு குஞ்சம் அமைந்திடும் முகமாக பரணமைக்கிறார் ;

பெருமானார் அவர்கள் பிறந்திட்ட நேரத்தில் நிகழ்வுற்ற பல அதிசயங்களில் ஒன்றான வானகத்தில் ஒட்டுக் கேட்ட ஜின்னுகளை எரி நட்சத்திரங்களால் வெருட்டப் பட்ட வெகுமதிகளை இதற்குமுன் கண்டோம்; இங்கே அதன் தொடர்விளைவுகளை கடைவிரிக்கின்றார்.

அதாவது;

ஜின்னுகளை- வெருட்ட ஏவப்பட்ட எரி நட்சத்திரங்கள் ஜின்னுகளை வெருட்டினதோடு தம் வேலைகளை முடித்துக்கொள்ளவில்லை. அதனையும் செய்து அதற்கடுத்து ஏகத்துவத்தினை எகிரிக்கொண்டுள்ள கல்லுருவங்களின் தலைமீதும் விழுந்து அவைகளை முகம் குப்புற வீழச் செய்தன. உலகம் அனைத்திலுமுள்ள கற்சிலைகள் பெருமானார் பிறந்த அன்று அங்கனம் வீழ்த்தப்பட்டதைக் கண்ட சிலைத் தொழும்பர்கள் சிலை வணக்கத்திற்கு முற்றுப் புள்ளி படியத் தொடங்கி விட்டது, என்ற அளவில் உணர்ந்தும்கூட ஒளியப்போகும் சிலை வணக்கத்தை

விட்டகன்று மோட்சம் பெற வேண்டுமென்ற நோக்கம் உருவாக வில்லை. அந்த சிலைத் தொழும்பர்க்கு, என்பதைத்தான் இங்கே 68-ஆம் கண்ணியில் சுட்டுகின்றார்.

حَتّٰى غَدَا عَنْ طَرِيقِ الْوَحْيِ مُنْهَزِمٌ
مِنَ الشَّيَاطِينِ يَقْفُوا إِثْرَ مُنْهَزِمِ (٦٩)

ஹத்தா ஃகதா அன் தரீகில்
- வஹ்யி முன்ஹஜிமுன்
மினஷ்ஷயாதீனி யக்ஃபூ இஃத்ர
- முன்ஹஜிமி

முடிவாக,

தோல்விகண்ட அந்த அறிவினர்களும் அவர்கள் தம் அடிச்சுவட்டில் ஷைத்தான்களும் தெய்வ தூதரின் நேர்பாதையை விட்டும் வெருண்டோடினர்.

இதனை -

முடிவாகத் தோற்றவர் கால் முன் சுவடு மீது
- ஷைத்தான்

படிமேல் இறை தூதின் பாதை விடுத்
-தோடினவே

என மறைக்காயர் பாடிக் காட்டுகின்றார்.

க-ரை : கடைசியில் எதிரிகள் தோற்றோடினார்கள்; அவர்களைத் தூண்டிய ஷைத்தான்களும் அவர்களைப் பின்பற்றி ஓடியொழிந்தன.

வி-ரை : கற்சிலைகள் அனைத்தும் குறிப்பிட்டதொரு நாளில் குறிப்பிட்ட ஒரே நேரத்தில் முகம் குப்புற வீழ்ந்தமையால் சிலை வணக்கத்திற்கு முற்றுப்புள்ளி படியத் தொடங்கி விட்ட உண்மை நிலையினைப் புரிந்த பின்னும் பொய்யினை -சிலை வணக்கத்தை, விட்டகலாத பழமை வாதிகள் தங்களின் தெய்வங்கள் முகம் குப்புற வீழக் காரணமாக விளங்கிய காமில் நபியுல்லாவை - அவர்தம் மெய்வழியை - வளர விடாது தடுப்பதின் மூலம், ஒழியப் போகும் சிலை வணக்கத்தை ஒழியாது தடுத்து தக்க வைத்து விடலாம் எனக் கனவு கண்டனர். அவர்களின் இந்த கனவிற்கு தூபமிட்டான் ஷைத்தான். ஆகவே ஆற்று நீரில் அடித்துச் செல்லப்படுபவன் துரும்பைப் பிடித்தாவது தப்பி விடலாம் என்று எண்ணிடும் கடைசி முயற்சிபோல, காமில் நபியுல்லா அவர்களுக்கு தடைக் கற்களை ஏற்படுத்தினர். அன்னவர் தம் பிரச்சார ஒளியை மங்கச் செய்திட முட்டுக்கட்டை பலவற்றை முட்டுக் கொடுத்துப் பார்த்தனர். கருமுகிலைத் துளைத்துக் கொண்டு ஒளிரும் முழுநிலவின் பேரொளியை முறம் கொண்டு மறைத்து மங்கச் செய்துவிட முடியாது என்பதனைக் கண்டபின் முஹம்மது (ஸல்-அம்) அவர்களைக் கொன்று விடவும் எத்தனித்தனர். அதிலும் தோல்விகண்ட பின் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் மீது யுத்தங்கள் பலவற்றைத் திணித்து அதன் மூலம் பணிய வைத்திட தங்களின் உயிரையே பணயமாக்கினர். ஆனால் அவர்களின் அனைத்து முயற்சிகளும் விழலுக்கிறைத்த நீராகப்

போனதேயன்றி திருவினையாகப் பரிணமிக்கவே இல்லை. ஆகவே வேறு வழியின்றி தோல்வியைத் தழுவிக் கொண்டனர். முறுக்கிவிடப்பட்ட முன்னணிப் படையே சிதறியோடும் போது பின்னணியினால் ஈடுகொடுக்க முடியுமா? அங்கனமே சிலை தொழும்பர்களை முடுக்கிவிட்டு, வெற்றிக் கனியை தட்டிச் செல்லக் காத்திருந்த ஷைத்தான்களும் சிலைத் தொழும்பர்களின் தோல்வியினைத் தொடர்ந்து ஓடியொழிந்தன. முஹம்மது (ஸல்-அம்) அவர்களும் அவர் தம் மெய்வழியும் நிலைத்து நாலா பாகங்களிலும் கிளைவிடத் தொடங்கியது. என்பதனை இந்த 69-ஆம் கண்ணியில் எண்பித்துக் காட்டுகின்றார்.

---

كَأَنَّهُمْ هَرَبًا أَبْطَالُ أَبْرَهَةٍ
أَوْ عَسْكَرٍ بِالْحَصَا مِنْ رَاحَتَيْهِ رُمِي (٧٠)

க அன்னஹும் ஹரபன் அப்தாலு
- அப்ரஹதின்
அவ் அஸ்கரின் பில்ஹஸா
- மின்ராஹதை ருமீ

(அங்ஙனம்) ஷைத்தான்கள் புறமுதுகு காட்டியது, அப்ரஹா எனும் சர்வாதிகாரனின் வீரர்கள் (புறமுதுகு காட்டியது) போலவும்.

இன்னம்-

நம் பெருமான் அவர்களின் இரண்டு உள்ளங்கைகளின் மூலம் (வீசப்பட்ட) கூழாங்கற்களால் அடிபட்டு (வெருண்டோடிய) வீரர்களைப் போன்றும் இருந்தது.

---

இதனை-

வெருண்டோடல் அப்ரஹாவீரரையும் எம்பெருமான்
திரண்ட கரக்கல்லடியால் சிதறுபடையும்போலும்!
என மகாகவி மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : அந்தச் சிலைத் தொழும்பர்கள் பின் வாங்கி ஓடியது. பெருமானார் பிறக்குமுன் கஃபாவை இடித்து நொறுக்க வந்த அப்ரஹாவின் படையும், போர்முனையில் பெருமானார் எரிந்த பொடிக் கல்லடி பட்ட படையும் சிதறியோடியது போலுமிருந்தது.

வி-ரை : சிலைத் தொழும்பர்கள் பெருமானார் அவர்களிடம் தோற்று ஓடினர் என்றார். இதற்கு முன்னுள்ள கண்ணியில்.

ஆனால் 'தோல்வி' என்றால் எப்படிப்பட்ட தோல்வி? நிரந்தரத் தோல்வியா? அல்லது "தோல்வி வெற்றியின் முதற்படி" என்கிறார்களே! அந்த இனத்தைச் சேர்ந்த தோல்வியா? இரண்டில் எது? விளக்கமில்லை அங்கே. விளக்கம் கொடுக்கப்படாமலேயே போய் விட்டால் பூசிரி அவர்களின் கவித்திறனிற்கு ஒரு குண்டுமணியளவு குறைவு ஏற்பட்டேதீரும் அப்படியிருக்க ஏன் மொட்டையாகக் கூறினார்... என நாம் சிந்தித்துக் கொண்டிருக்கும்போது "ஓய் அவசரக்குடுக்கைகளே! நானா குறைவைப்பேன், குறை வைக்கும்குறைக்கவியாக நானிருந்தால் நபிகள் நாதரின் அணிந்துரை என்புர்தா காவியத்திற்கு எங்ஙனம் கிடைத்திடும்? இதோ பாருமின்: நீவிர் விரும்பும் விளக்கங்களை!" என்று கூறும் விதமாக இங்கே 70-ஆம் கண்ணியை சமைத்துத் தருகின்றார்! சூடான விளக்கமும், சுவையான விபரமும் நிறைந்த அந்தக் கண்ணியினைத்தான் சுவைத்துத் திணருகின்றோம் நாம்.

## அப்ரஹாவின் அவலகதி !

ஆமாம்; பூசிரி கூறுகின்றார்: சிலைத் தொழும்பர் தோற்றோடினர் என்றால் அது சாதாரணத் தோல்வி யன்று, கஃபாவை இடித்து நொறுக்கித் தரைமட்டமாக்கு வதின் மூலம் தனது - யமன் - நாட்டில் புதிய பொலிவுடன் கட்டப்பட்டுள்ள 'கிருத்துவக் கோயிலின் பக்கம் ஜனங் களின் கவனத்தைத் திருப்பிடவேண்டும்' - என்ற கெடு நோக்குடன் பெரும் படையொன்று திரட்டி வந்தான் அப்ரஹா. அங்ஙனம் வந்த அரக்கனை எதிர்த்து நின்று போரிட்டும் புறமுதுகு காட்டச் செய்திடவேண்டிய பொறுப் பிலும் உள்ள அப்துல் முத்தலிப் - நபிகளாரின் பாட்டனார் - மக்கமா நகரிலுள்ள தங்களின் ஆடு, மாடுகளையும் அசை யும் பொருட்களையும் ஓட்டிக் கொண்டு மலைக்குன்று களில் ஓடி ஒளிந்து கொண்டார். ''பொறுப்புமிக்க நீங் கள் இப்படிச் செய்யலாகுமா? போர்ப் பரணி பாடிவரும் அப்ரஹாவுடனும், அவனது யானைப் படைகளுடனும் பொருதி இரண்டிலொன்று பார்த்திடுவதல்லவா உங்களின் பொறுப்பிற்கழகு'' எனக் கேட்டபோது ''ஆமாம்! ஆனால்; வந்துள்ள எதிரிப் படையோ எங்களின் சக்திக்கு மீறிய பெரும்படை, அவர்களின் நோக்கமும் எங்களையோ எங்களின் மண்ணையோ, பொன் பொருளையோ அபகரிக்க வேண்டுமென்பதன்று, பெரியவனான அல்லாஹ்வின் முதல் ஆலயமான கஃபாவை இடித்து நொறுக்கி அதனை இல் லாமல் செய்ய வேண்டுமென்பதே அப்ரஹாவினது படை யெடுப்பின் முழு நோக்கம். ஆகவே; பெரும் படையுடைய அப்ரஹா, பெரியவனான அல்லாஹ்வினுடன் பொருதப் போகும் பொழுது சாதாரண மக்களாகிய நாம் அதில்

குறுக்கிட்டு குறை நிறைகளை ஏன் அனுபவிக்கவேண்டும்? இரண்டு பெரிசுகளும் தங்களின் வலிமையை வெளிக் காட்டட்டுமே'' எனக் கூறினார்களாம்.

அப்துல் முத்தலிப் அங்கனம் கூறி முடிக்கவில்லை, அங்கே - போர்முரசு அறைந்த மக்கத்து எல்லையிலிருந்து - எவ்வித பேச்சும் மூச்சும் இல்லாத மயான அமைதி நிலவு கிறது.

நடந்தது என்ன? அல்லாஹ் தோற்று கஃபா இடிக்கப் பட்டு விட்டதா? அல்லது அப்ரஹா தான் அரண்டோடி விட்டானா? என்பதனைக் கண்டறிய மக்கத்து தலைவர் அப்துல் முத்தலிப் அவர்கள் மக்கத்து எல்லைக்கு ஓடி வந்து பார்க்கின்றார். அங்கே அவர் கண்ட காட்சி அவரை மெய்சிலிர்க்கவைக்கின்றது.

ஆமாம்; அப்ரஹாவின் பட்டாளம் அங்குமிங்கும் சிந்திச்சிதறி ஓடுகின்றது. கரிய நிறமும் மஞ்சள் வர்ண மூக்கும், பச்சை வர்ண கழுத்துக்களும் கொண்ட. முன்பின் எப்போதும் கண்டிராத - நூதனப் பறவைகள் வெறுண்டோடும் அப்ரஹாவின் பட்டாளங்களை வெருட் டிக் கொண்டிருக்கின்றன. அப்பறவைகளின் வாயில் ஒரு கல் - பருப்பிற்கு கீழ்படாத கொண்டைக் கடலைக்கு மேற்படாத பருமனுள்ள கல் - இருப்பதையும் இரு கால் களிலும் அதே மாதிரியான இரு கற்கள் இருப்பதையும் பார்க்கின்றார். அங்கனம் அவர்களைத் துறத்தும் பறவை கள் சிலரை தான் சுமந்துள்ள அக்கற்கலால் அறை கின்றன. பறவைகளால் விசப்பட்ட பொடிக் கற்கள் அந்தப்போர்வீரர்களின் தலையில் தைத்து கால்பக்கம்

ஊடுருவுவதையும்; அங்கனம் ஊடுருவியவுடன் பெரியம்மை போன்றதொரு கொப்புளங்கள் தாக்குண்டவரின் மேனியில் ஏற்பட்டு அதனால் அவதிப்பட்டு துடி துடித்துச் சாவதையும் பார்க்கின்றார்.

எல்லாம் மூடி முளிக்கும் நேரத்திற்குள் நடந்தேறுகின்றது.

இது கண்ணால் கண்ட காட்சி என்றால் அடுத்துக் கேள்விப்படும் செய்திகளோ அதனை விட அதிபயங்கரமானதாக உள்ளது.

ஆமாம்; தப்பித்தோம் பிழைத்தோமென புறமுதுகு காட்டிய தளக்கர்தன் - யமன் நாட்டின் அதிபதி - அப்ரஹாவிற்கு இடை வழியிலேயே ஒருவகைக் கொள்ளை நோய் ஏற்பட்டு அந்நோயினால் அவனது கை கால்களின் விரல்களெல்லாம் இலையுதிர் காலத்தில் வீழ்ந்திடும் காய்ந்த சருகுகளைப் போன்று பிய்ந்து வீழ்ந்துபட்டதாகவும், சில உடலுறுப்புகள் கூட அங்கனமே வீழ்ந்து பட்ட நிலையில் கொடுஞ் சித்ரவதைக்குள்ளாகி மாண்டு விட்டதாகவும் செய்தி வருகின்றது.

அன்றி; உயிர்பிச்சை கொடுக்கப்பட்ட அப்ரஹா வீரர்களின் நிலையோ நொண்டியாக - சப்பாணியாக முடமாக ஆக்கப்பட்ட அனுதாபத்திற்குரிய நிலைதான். சுருங்கக் கூறின்; அல்லாஹ்வின் முதல் ஆலயமாம் அருள் மிகு கஃபாவை இடித்து நொறுக்கப்புறப்பட்ட யமன் நாட்டு அதிபதி அப்ரஹாவும், அவனது பெரும் படையும் சாதாரணப் பறவைகளால் துரத்தப்பட்டு துவம்சம் செய்யப்பட்டு துற்பாக்கியத்திற்குள்ளான நிலையினைத்தான்

பார்க்கின்றோம். எவரும் மிஞ்சவில்லை எதுவுமே எஞ்ச வில்லை. இறைவன் அப்ரஹாவிற்கும் அவனது பெரும் படைக்கும் சம்பவித்த இந்த நிலையினை ''தின்னப் பட்ட வைக்கோல்களைப் போன்றாயினர்'' எனச் சித்தரிக் கின்றார்.

அப்ரஹாவின் அந்தத் தோல்வியை எந்த இனத்தில் சேர்ப்பது? நிரந்தரத் தோல்வியின் இனத்தில்தானே அதனைச் சேர்த்திட முடியும். நிரந்தரத்தோல்விக்கு இலக்கணமே இதுதானே.

பெருமானார் (ஸல் - அம்) அவர்களுடன் சகல முஸ்தீ புகளுடனும் எல்லாத் துறைகளிலும் - பொருதி புறமுதுகு காட்டிய சிலைத் தொழும்பர்களின் தோல்வி மீக்கூறிக் காண்பிக்கப்பட்ட அப்ரஹாவின் தோல்வியைப் போன்றது. என்பதை இந்த எழுபதாவது கண்ணியின் முதலீற்றின் முற்பகுதியில் ''வெருண்டோடல் அப்ரஹா வீரரையும்...'' எனச் சொல்லிக் காண்பிக்கின்றார்.

பூசிரி அவர்களின் இந்த விளக்கத்தைக் கேட்டு பூரிப்பில் திளைத்திருக்கும் நமக்கு மற்றொரு விபரத்தை யும் எண்பித்துக் காட்டுகிறார்;

அதாவது;

சிலைத் தொழும்பர்கள் நிரந்தரத் தோல்வியைத் தழு விடும் அளவிற்கு பெருமானாரின் முயற்சி திருவினையாகப் பரிணமித்துள்ளது என்றால் உக்கிரமமான பெரும் போர் செய்து அந்நிலைக்குள்ளாக்கினார்கள் என்று எவருமே எண்ணி விடாதீர்கள்.

ஏனெனில்; மேனியில் பட்ட தூசியை, வாயால் ஊதித் துடைப்பதைப் போன்றதொரு சாதாரண சிறுமுயற்சியினாலேயே அவர்களுக்கு அங்கனம் நிரந்தரத் தோல்வியினை ஏற்படுத்தினார்கள் நம் நபியுல்லா என்கின்றார்.

அது எப்படி என்பதனைச் சற்று உற்று நோக்குவோமே.

ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டு ரமலான் பிறை 17 - ல் மக்கத்து மக்களால் மதீனாவாழ் முஸ்லிம்களின் மீது வலிந்து போர் திணிக்கப்பட்டதையும் அதுவே 'பத்ருப் போர்' எனப் பெயர் பெற்றதையும் நாமறிவோம்.

அந்தப் போரின் ஆரம்பத்தில்; எண்ணிக்கையால் வலிமையால் - இப்படி அனைத்திலுமே மிக மைனாரிட்டியினராக விளங்கிய முஸ்லிம்கள் அல்லாஹ்வின் உதவி ஒன்றை மட்டிலுமே மூலதனமாகக் கொண்டு அனைத்து சௌகரியங்களுடனும் ஆர்ப்பரித்து நிற்கும் எதிரிகளுடன் பொருதும் முன்பு, நம் நபிகளார் அவர்கள் குனிந்து ஒரு பிடி கூழாங் கற்களை எடுத்து தங்களது பரக்கத்துப் பொருந்திய வலக்கரத்தால் எதிரிப் படைகளின் மீது தூவி விட்டார்கள். இதனை இறைவன் சத்தியத் திருமறையாகிய குர்ஆன் ஷரீபில் கூறிக் காண்பிக்கும் போது (''நபியே! கூழாங்கற்களை) நீவிர் எறிந்த நேரத்தில் நீவிர் எறியவில்லை; அதனை நாமே எறிந்தோம்'' எனச் சொல்லிக் காண்பிக்கின்றான். ஆமாம்! வெளிப்பார்வைக்கு நபிகளார் அதனை எறிந்தாலும் உண்மையில் அப்படிச் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தை நபிகளாருக்கு ஏற்படுத்தியது இறைவன்தான். அப்படி இறைவனது

தூண்டுதலால் எறிந்ததால்தான் சாதாரணமாக எறியப்பட்ட ஒரே ஒரு பிடி கூழாங் கற்கள் எதிரிப் படையினுள் ஊடுருவி அவர்கள் அனைவருடைய கண்களிலும் விழுந்து அவர்கள் அனைவரையுமே திக்கு முக்காடச் செய்தது. அங்கனம் போரின் ஆரம்பத்திலேயே அவர்களுக்கு ஏற்பட்ட அடி, அவர்களின் இதயங்களில் இனம் தெரியாத பீதியைக் கிளப்பி அந்த பீதி உணர்வே அவர்களது தோல்விக்கு முதற்படியாக அமைந்து விட்டது.

இந்த வரலாற்றுச் சம்பவத்தைத்தான் 70 - ம் கண்ணியின் முதல் ஈற்றின் பிற்பகுதியிலிருந்து ''...எம்பெருமான், திரண்ட கரக்கல்லடியால் சிதறுபடையும்போல'' என சொல்லிக் காண்பிக்கின்றார் வரலாற்று வல்லுனர் பூசிரி.

இங்கே இதனைச் சொல்லிக் காண்பிப்பதின் மூலம் சிலைத் தொழும்பர்களுக்கு நிரந்தரத் தோல்வியை நபிகளார் அவர்கள் ஏற்படுத்தினார்களென்றால் பெரும் பாடு பட்டு அங்கனம் செய்தார்களில்லை. மாறாக ஒரு பிடி கூழாங்கற்களை எறிந்ததால் பத்ருப் போரில் எதிரிகளின் பெரும் படைகளை சிதறியடித்தது போன்ற சிறு முயற்சி கொண்டே அங்கனம் அவர்களுக்கு நிரந்தரத் தோல்வியை ஏற்படுத்தினார்கள் என்பதைச் சொல்லாமல் சொல்லிக் காட்டுகின்றார். சுப்ஹானல்லாஹ்! என்னே கவிக்கோ பூசிரியின் இலக்கிய நயம்.

نَبْذُ آيِهِ بَعْدَ تَسْبِيحِ بَطْنِهِمَا
نَبْذَ الْمُسَبِّحِ مِنْ أَحْشَاءِ مُلْتَقِمِ ٥١

**நப்தன் (ன்) பிஹி பஃத தஸ்பீஹின் - (ன்) பி பத்னிஹிமா**

**நப்தல் முஸப்பிஹி மின் அஹ்ஷாயி - முல்தகிமி**

விழுங்கிய மீனின் வயிற்றில் இருந்து கொண்டு தஸ்பீஹ் செய்து கொண்டிருந்த யூனுஸ்நபி (அலை) அவர்களை அந்த மீன் கரையில் கக்கி விட்டது போல நபிகளார் அவர்களின் கரத்தில் தஸ்பீஹ் செய்து கொண்டிருந்த அந்தக் கூழாங்கற்கள் குறி தவறாமல் எறியப் பட்டது.

இதனை —

மீன்வயிற்றில் ஏத்தும்நபி விரைந்தெறியப்பட்டது
போல்
கோன்கரத்தில் ஏத்தியகல் குணித்தெறியப்
பட்டனவே

என மறைக்காயர் பாடுகின்றார்.

## யூனுஸ் (அலை) அவர்களின்
## புனித வரலாறு

விரை :- செல்வச் செறுக்கால் சாபத்திற்கும் இறை கோபத்திற்கும் உள்ளாகி அழிந்து பட்ட 'ஆது' வர்க்கத்தாரில் எஞ்சியவர்கள் - ஈமான் கொண்டதால் மிஞ்சியவர்கள் 'மோஸல்' தீவில் 'டைகிரீஸ்' நதிக்கரையில் அமைந்திருந்த 'நீனவா' நகரில் குடிபுகுந்து பெருவாழ்வு வாழ்ந்து வந்தனர்.

காலப் போக்கில் அருளாளர்களாகத் திகழ்ந்த அவர்களும் கறைபடிந்த குறை வாழ்வில் லயித்து இறையையும் மறை நெறியையும் மறந்து விட்டார்கள்.

ஆதலால்,

அவர்களுக்கு அருள்நெறியைக் காட்டுவதற்காக அவர்களிலேயே ஒருவரை - யூனுஸ் அவர்களை - நபியாகப் பிரகடனப் படுத்தினான் இறைவன்.

ஈடில்லா இறைக்கு இணைகற்பிக்கும் கேடினைக் கண்டித்தும், ஈதலத்து வாழ்வில் தீதலங்களை விடுக்கும் படி, நற்போதங்களை எடுத்தோதியும் சுயமரியாதையுடன் வாழும்படி தொடர்ந்து துணிந்து - தாக்குத் தைரியமுள்ளவரை பிரச்சாரம் செய்தார்கள் நபி யூனுஸ் (அலை) அவர்கள்.

ஆனால்,

வளைந்து கொடுக்காத அவர்களின் முரட்டுத் தனமும், நெளிந்து கொடுக்காத வரட்டு கௌரவமும் நபி

யூனுஸ் அவர்களின் நற்போதங்களால் இம்மியும் மசிய வில்லை.

ஆகவே இனியும் இவர்களை நயமாகப் பேசி நன்மையின் பக்கம் ஈர்க்க முடியாது என்ற இறுதி முடிவிற்கு வந்துவிட்ட நபி யூனுஸ், வல்லவனாம் அல்லாஹ்விடம் ''இறைவா! இனி இவர்கள் திருந்தவோ திரும்பவோ மாட்டார்கள் இனியும் இவர்களை விட்டு வைத்தால் பூமியில் வீண் குழப்பங்கள்தான் விளைந்திடும். ஆகவே அதாபினை இறக்கி அடியோடு இவர்களை அழிந்துபடச் செய்திடக்கடவாய்'' என முறையீடு செய்து தனது பொறுப்பை ஒப்படைத்து விட்டார்கள்.

ஆனால் அடியார்க்கருளும் அன்பனாகிய அல்லாஹ் ஒரு காலக்கெடுவை நிர்ணயம் செய்து குறிப்பிட்ட அந்தக் காலக் கெடுவிற்குள் அவர்கள் திருந்தி திரும்பா விட்டால் அவர்களின் பால் அதாபை இறக்கி விடுவதாக வும், ஆகவே மீண்டும் அந்த மக்களுக்கு இறுதி எச்ச ரிக்கை செய்து அவர்களை மனம் மாறச் செய்யமுயன்று பார்க்கும்படியும் நபி யூனுஸ் (அலை) அவர்களைப் பணித்தான்.

இறைவனது இந்த கடைசி நேரக் கட்டளையினை சிரமேற்றாங்கி ஏற்றுக் கொண்டாலும், ''நாற்பதாண்டு காலம் தொடர்படியாக மறுக்கவோ மறைக்கவோ முடியாத ஆதாரங்களை எடுத்துக்கூறி, கல்லும் கறைந்திடும் வண்ணம் நயமாக பயமாக - உபதேசங்களைச் சொல்லிக் காண்பித்த போதெல்லாம் மசிய மறுத்துவிட்ட இவர்களா இந்தக் கடைசி நேர எச்சரிக்கையால் கசியப் போகின்

றார்கள்?'' என அவர் நீனவா நகரத்தாரின் மனமாற்றத்தில் அவநம்பிக்கை கொண்டு விரக்தியடைந்தார். ஆனாலும் இறைவனது கட்டளையினை நிறை வேற்ற வேண்டுமே என்ற கடமையுணர்வுடன் அவர்களை எச்சரித்து குறிப்பிட்ட இந்த நாளிற்குள் நீங்கள் மன மாற்றம் கொண்டு திருந்தா விட்டால் இறை தண்டனை உங்கள் பால் இறங்கி உங்கள் அனைவரையும் பூண்டோடு அழித்தொழித்து விடும்'' என்பதை அவர்களிடம் எத்திவைத்து விட்டு - இறைவனது மறு உத்திரவை எதிர்பாராமல் - நீனவா நகரத்தை விட்டும் புறப்பட்டு அந்நகரின் புறநகர் பகுதியிலுள்ள காடுகளில் தங்கி இறைவனது அதாபு இறங்குவதை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார் நபி யூனுஸ் (அலை) அவர்கள்.

குறிப்பிட்ட அந்த கடைசி நாளும் வந்தது. அன்று காலை நேரத்தில் கரிய புகை மூட்டங்களுடன் கூடிய மேகக் கூட்டங்கள் - அலை அலையாக நீனவா நகரை நோக்கி விரைவதைப் பார்க்கின்றார் நபி அவர்கள் 'திருந்த மாட்டார்கள்' என அம்மக்களைக் குறித்து தான் எடுத்த முடிவு மிகச் சரியானதுதான் என தனக்குத்தானே திருப்திபட்டுக் கொண்ட யூனுஸ் (அலை) அவர்கள். இந்நேரம் நீனவா நகரம் 'தூள் தூளாக' ஆகியிருக்கும் என மனக் கோட்டை கட்டுகின்றார்.

ஆனால், மறுநாள் நீனவா நகரைச் சேர்ந்த தொரு விறகுத் தலையான் காட்டிற்குள் தென்படுகின்றான். நீனவா நகரின் நிலை குறித்து அவனிடம் விசாரித்த போது அவன் சொன்ன பதில் நபி யூனுஸ் அவர்களின் தலையில் சம்மட்டி கொண்டு தாக்கியது போலிருந்தது.

ஆமாம்; வானத்தில் உருண்டு திரண்டு வந்த மேகக் கூட்டங்களைக்கண்ட மாத்திரத்தில் நீனவாவின் முடிவை உறுதி செய்து நின்ற அவரிடம் 'நீனவா நகரமும் அதன் மக்களும் மிக மகிழ்ச்சியுடன் எவ்வித இடரோ ஏற்படமால் - வாழ்ந்து வருகின்றனர்' என அந்த விறகுத்தலையான் பதில் கூறினால் அவருக்கு எப்படி இருந்திருக்கும்?

ஆகவே இறைவன் தன்னை ஏமாற்றி விட்டதாக அவர் எண்ணுகின்றார்.

விரக்தி, ஏமாற்றம் ஆகிய கடுமைகளால் தாக்குண்டு நிலை குலைந்து இருந்த அவருக்கு ஒன்றுமே புரிய வில்லை. ஆகவே அங்கிருந்து 'தப்பித்து ஓடும் கைதியைப் போன்று' விரண்டோடுகின்றார் அவர்; எங்கே போகின் றோமென அவருக்கே புரியவில்லை. கடைசியாக ஒரு கடற்கரையினை அடைகின்றார். அப்போது அங்கு ஒரு மரக்கலம் புறப்படத் தயாராக நிற்கின்றது. புறமுதுகு காட்டி ஓடி வந்துவிட்ட அவருக்கு அப்போதைக்கு - அந்த மரக்கலம் தான் புகலிடமாகத் தென்படுகின்றது. ஆகவே ஓடிச்சென்று அந்த மரக்கலத்தில் அவரும் ஏறிக் கொள்கின்றார்.

நபி யூனுஸ் அவர்களையும் மற்ற பிரயாணிகளையும் சுமந்து கடலின் மேற்பரப்பில் கிடுகிப் பாய்ந்து கொண் டிருந்த அந்த மரக்கலம் நடுக் கடலில் - அனைவரையும் வேதனையில் ஆழ்த்தி விட்டு - அங்குமிங்கும் நகராமல் அப்படியே நின்றுவிட்டது.

ஏன்? எதுவும் கோளாறா? இல்லவே இல்லை. அப்படியானால் அவரவரும் அவர் அவர் தெய்வங்களை வேண்டிப் பார்ப்போம். என பிரார்த்தனையில் ஈடுபட்டால் அதனாலும் பயனேதும் ஏற்படுவதாக தெரியவில்லை.

கோளாறுகளுமில்லை, பிரார்த்தனையாலும் பயனேற் படவில்லை என்றால் என்ன பொருள்? "ஒருவேளை நம்மில், எஜமானனிற்கு துரோகம் செய்து விட்டு தப்பி ஓடி வந்துவிட்ட குற்றவாளிகள் எவரும் இருக்கக்கூடும். அத்தகு குற்றவாளி எவரேனுமிருந்தால் தயவுசெய்து மரக்கலத்தை காலி செய்து கடலில் குதித்து விடுங்கள். இல்லை யென்றால் ஒருவருக்காக நாம் அனைவரும் மாண்டு மடியும் நிலை ஏற்பட்டு விடும்" என அறிவிப்புச் செய்யப் படுகின்றது. ஆனால் ஒருவரும் அதை ஏற்று காலி செய்வதாகத் தெரியவில்லை. ஆகவே குலுக்குச் சீட்டு முறையில் அத்தகு குற்றவாளி எவர் என்பதை முடிவு செய்யக்கருத்தொருமித்து குலுக்குச்சீட்டு முறை கையாளப் படுகின்றது.

நீண்ட முயற்சிக்குப்பின் நபி யூனூஸ் அவர்கள்தான் அத்தகு குற்றவாளி என அனைவராலும் முடிவு செய்யப் படுகின்றது. அனைவருமே ஒரு மனதாக அங்ஙனம் முடிவு செய்து விட்டதால் நபி யூனூஸ் அவர்களால் அந்த முடிவை புறக்கணிக்க முடிய வில்லை. மேல் தளத்திற்குச் சென்று அங்கிருந்து ஆழ்கடலில் குதித்து விடுகின்றார் அவர்.

அங்ஙனம் கடலில் குதித்த நபி யூனூஸ் (அலை) அவர்கள் கடல் நீரில் மூழ்கியிருந்தால் 'நடக்க வேண்டியது

நடந்து விட்டது' என ஆறுதல் அடைந்து கொள்ளலாம். ஆனால் நீரில் மூழ்குவதற்குப் பதிலாக வாயை பிளந்து கொண்டு நின்ற ஒரு வகை ராட்சத மீனினால் விழுங்கப் படுகின்றார். இதைக்கூட 'தற்செயலானது என சமாதான மடைந்து கொள்ளலாம். ஆனால் மீனினால் விழுங்கப் பட்ட அவரின் உடல் ராட்சத மீனினால் சப்பி உருக் குழைக்கப் படாமலும் ஜீரணிக்கப் படாமலும் அந்த மீன் வயிற்றினுள்ளேயே பாதுகாத்து வைக்கப்படுகின்ற விந்தை மிகு செய்தியைக் கேள்வியுறும் போதுதான் நபி யூனூஸ் (அலை) மீனினால் விழுங்கப்பட்டது தற்செயலானதோ திடுகூறானதோ அல்ல அல்லாஹ்வின் ஆயிரமாயிரம் திருவிளையாட்டுக்களில் இதுவும் ஒன்று என்பதை நம்மால் யூகிக்க முடிகின்றது'

ஆமாம்! அது அல்லாஹ்வின் திருவிளையாடல்தான், யூனூஸ் (அலை) கடலில் குதிக்கப் போவதை மீனுக்கு அறிவித்து, ஆழ்கடலில் அவர் விழுந்து விடாதவாறு அவரை பிடித்துக் கொள்ளும்படியும், அங்கனம் பிடித்து அவரது உடலுறுப்புக்களுக்கு எவ்விதச் சேதங்களும் ஏற்பட்டுவிடாமல் அவரை விழுங்கி, ஜீரணித்தும் விடாமல் - கருவைப்போல - அவரைப் பாதுகாத்து வைத்திருக்கும் படி அந்த மீனுக்கு இறைவன் கட்டளைப் பிறப்பித்திருந் தான்; அல்லாஹ்வின் இத்தகு கட்டளைப் படிதான் நபியூனுஸ் (அலை) அவர்கள் மீன் வயிற்றினுள் பாது காக்கப்படுகின்றார்கள்.

அதுவரை - விரக்தி, ஏமாற்றம் ஆகிய உணர்வுகளால் தடுமாறிப் போயிருந்த நபி யூனூஸ் (அலை) அவர்கள்

இப்போது சிந்திக்கத் தலைப்படுகின்றார்; இறைவனது உத்திரவுப்படி இயங்கிட கடமைப்பட்டுள்ள நாம் அவனது உத்திரவு கிடைக்கப்பெறாமல், அல்லது அனுமதி பெறாமல் நீனவா நகரத்தை விட்டு புறப்பட்டது நாம் செய்த குற்ற மல்லவா? அன்றி குறித்த நாளில் நீனவா நகரத்தாரின் மீது இறைவனது வாக்குப்படி அதாபு இறங்கவில்லை எனத் தெரிந்தபின் 'அதன் ரகசியமென்ன? என்பதை தெரிந்து கொள்ளாமல் 'இறைவன் நம்மை ஏமாற்றி விட்டான்' என முடிவு செய்தது அதைவிடப் பெரிய குற்றமல்லவா? இப்படிப்பட்ட குற்றங்களுக்காக எஜமானனாகிய அவன் இன்று இந்த மீன் வயிற்றினுள் சிறைவைத்துள்ளான் போலும்' என அவரின் சிந்தனை அவரை இடித்துரைக்கின்றது.

ஆகவே; கண்ணீரைச் செந்நீராக ஓட்டி வெட்கமும் வேதனையும் கலந்த உணர்வுகளுடன் வல்லவனாம் அல்லாஹ்விடம் தவ்பா செய்கின்றார்; அவர். தனது தவ்பாவிற்கு உத்தாரமாக ''இறைவா! உன்னைத்தவிர வணங்கிட வழிபடத் தகுதியான நாயன் வேறு யாருமே இல்லை. (நீ என்னை ஏமாற்றி விட்டதாக நான் கருதி னேனல்லவா அப்படி ஏமாற்றுவது போன்ற மோச நாசங் களை விட்டும்) உன்னை பரிசுத்த மாக்குகின்றேன். (பரிசுத்தமான உன்னை அங்கனம் கருதியதன் மூலம்) நானே அநியாயக்காரர்களில் உள்ளவனாக ஆகி விட்டேன்'' என்ற தஸ்பீஹையும் ஜபிக்கத் தொடங்கி விடுகின்றார்.

நபியூனூஸ் அவர்கள் இப்படி தவ்பாச் செய்து தஸ்பீஹ் செய்ததின் மூலம் 'தான் குற்றவாளிதான்' என்பதை

ஊர்ஜிதம் செய்த காரணத்தால் அடியாருக்களும் அன்பனா கிய அல்லாஹ்வும் மனமிரங்கி மன்னிப்புச் செய்து நஸீபீன் என்ற கடற்கரையில் அவரைக் கக்கி விடு தலை செய்யும் படி அந்த மீனுக்கு உத்திரவிடுகிறான். இறைவனது கட்டளைப்படியே அவரை விழுங்கி சிறை கொண்ட அந்த ராட்சத மீன் நாற்பது நாள் அவரை தன் வயிற்றினுள் சிறைப்படுத்தி வைத்திருந்த அந்த மீன் - அல்லாஹ்வின் மறு உத்திரவு கிடைக்கப் பெற்றவுடன் இறைவன் சொன்ன அந்த குறிப்பிட்ட கடற்கரையின் மணலில் அவரைக் கக்கிவிடுதலை செய்கின்றது.

ஆனால் ஏறக்குறைய நாற்பது நாட்கள் மீன் வயிற்றி னுள்ளேயே இருந்த காரணத்தால் உறுப்புக்கள் நசியாம லிருந்தாலும் உடல் நொந்துபோய் காணப்பட்டது. அவரின் மேனியெல்லாம் ரணமாக இருந்தது. சிறகுகள் முளைக்காத பறவைக் குஞ்சினைப் போன்று அவர் அந்த நேரத்தில் காட்சியளித்ததாக வரலாறுகளில் குறிப்பிடுகின் றார்கள். இப்படிப்பட்ட நிலையில் உள்ள அவர் பூமியின் வெட்ப தட்பங்களைத் தாங்கிட முடியாதல்லவா?

ஆதலால் நபி யூனூஸ் (அலை) அவர்களுக்கு நிழல் தரும் குடையாகவும் அதே நேரத்தில் அவரது மேனியின் ரணங்களை ஆற்றிடும் அருமருந்தாகவும் அந்தக் கடற் கரையினில் ஒரு சுரைக்கொடியினைப்படரும்படி செய் கின்றான். அன்றி அப்போதிருந்த நிலையில் அவர் திடப் பொருளைச் சாப்பிட இயலாதவராக இருந்தார். ஆகவே பால் சுறந்த மடுவுடன் கூடிய ஒரு வெள்ளை மானிற்கு உத்திரவு செய்து, காலையிலும் மாலையிலும் பாலூட்டி

வளர்க்கும் படியும் ஏற்பாடு செய்திருந்தான். ராஜிக்காகிய அந்த தயாளன்.

ஆண்டவன் அருளிய இந்த இயற்கை வைத்திய வசதி களால் ஏறக்குறைய நாற்பது நாட்களில் முழுச்சுகங்களைப் பெற்று மாமுல் வாழ்க்கைக்குத் தகுதியானவராக அவர் மாறியவுடன்! அற்புதமாக முளைத்துப் படர்ந்த சுரைச்செடி காய்ந்து கருகி விட்டது. வழக்கம் போல பாலூட்ட வரும் வெள்ளை மானும் நின்று விட்டது. அப்போது "இறைவா! ஈதென்ன? சுகம் தந்த சுரைக்கொடி காய்ந்து விட்டது!" என விசனப்படுகின்றார் நபியூனுஸ் (அலை) ஆ! அப்படியா!... அது சரி! நான் முளைக்க வைத்த இந்த சுரைச்செடி காய்ந்து கருகியதைப்பற்றி நீவிர் இவ்வளவு வருத்தமடை கின்றீரே! ஆனால் நான் படைத்து நானே பராமரித்து வளர்த்து வரும் நீனவா நகரத்து மக்களை அழித்தொழிக்க வேண்டுமென நீர் எவ்வளவு பிரயாசை எடுத்துக்கொண்டீர்? ஒருகால் அவர்கள் உன் விருப்பப்படி அழிந்து பட்டிருந்தால் அவர்களது எஜமானனாகிய எனக்கு எவ்வளவு வருத்தமேற் பட்டிருக்கும்" என இறைவன் இடித்துரைக்கின்றான்.

அப்போதுதான் நீனவா நகர வாசிகளை மீண்டும் காண வேண்டும். அவர்களிடம் நேரில் விசாரித்து அவர்க ளின்பால் அதாபு இறங்காமல் நின்று போன ரகசியத்தைத் தெரிந்து தெளிய வேண்டும் என்ற உணர்வு நபியூனுஸ் (அலை) அவர்களுக்கு ஏற்படுகின்றது.

ஆகவே நீனவா நகரை நோக்கிப் பயணமாகுகின்றார் அவர்.

நெடுந்தூரப் பயணத்திற்குப்பின் நீனவா நகருக் கருகாமையிலுள்ள காட்டுப் பகுதியை அடைந்து விட்டார்.

ஆனால் அதற்கு மேல் செல்ல அவரின் வெட்க உணர்வு இடம் தரவில்லை. ஆகவே அந்தக் காடுகளிலேயே சுற்றித் திரிகின்றார் அவர், இதற்கிடையில் தங்களின் நபி அவர்கள் பக்கத்துக் காடுகளில் தென்படுகின்றார் என்பதைக் கேள்விப்பட்ட நீனவா நகரத் தலைவன் ஆள் அனுப்பி 'அது உண்மையா' என்பதைத் தெரிந்த பின் பெரும் கூட்டமாகத் திரண்டு வந்து தங்களின் தீர்க்கதரிசியை பெரும் ஆரவாரங்களுடன் அழைத்துச் செல்லுகின்றார்கள் நீனவா நகரவாசிகள்.

தனது பிறந்த ஊரையும் தன் உடன்பிறப்புக்களையும் கண்டபின் நபியூனூஸ் அவர்கள் ''இவர்கள் அனைவருமே தவ்பா செய்து ஈமான் கொண்டுவிட்ட காரணத்தினால்தான் இவர்களின் மீது இறங்கவிருந்த இறை தண்டனை - அதாபு - திட்டப்படி இறங்காமல் இருந்து விட்டது'' என்னும் ரகசியத்தைப் புரிந்து மனித உணர்விற்குப் புரியாத புதிர்களையும் - புதுமைப் பூக்களையும் - செய்வித்து மனித அறிவை மங்கச் செய்திடும் திறன் படைத்த வல்ல அல்லாஹ்வை மனமாரப் புகழ்ந்து வழிபடுகின்றார்.

''அண்ட சராசரங்களனைத்தையும் படைத்து, அவை விண்டு விடாமல் - நின்று விடாமல் பாதுகாத்து பராமரித்தருளும் பரம் பொருளாகிய அல்லாஹ் எக்காரியத்தைச் செய்தாலும் அது படைப்பினங்களுக்கு - குறிப்பாக மனித வர்க்கத்திற்கு - நன்மையாகவே அமையுமேயன்றி பருப்பளவு கூட தீமையா அமையவே அமையாது. ஆனால் சிறிய அளவே அறிவு கொடுக்கப்பட்டுள்ள மனிதனுக்கு

அல்லாஹ்வின் அந்த ஆற்றல் புரிவதில்லை. தனது நோக்கத்திற்கு முரணாக எதுவும் நடந்தேறி விட்டால் உடனே வல்லவனாம் அல்லாஹ்வைச் சாடவும் - சடையவும் ஆரம்பித்து விடுகின்றான். சில நேரங்களில் நபி யூனூஸ் (அலை) அவர்களைப் போல அல்லாஹ் தன்னை ஏமாற்றி விட்டதாகவும் எண்ணத் தலைப்பட்டு விடுகின்றான். அங்ஙனம் அல்லாஹ்வின் செயல் குறித்து தப்பெண்ணம் கொள்பவர் நல்லவராக - நாயனுக்கு கந்தவராக - இருந்திடும் போது நபி யூனூஸ் (அலை) அவர்களுக்கு ஏற்படுத்தியது போன்ற சோதனைகளை ஏற்படுத்தி ''தான் அல்லாஹ்வின் செயல் குறித்து ஏற்படுத்திக் கொண்ட தப்பெண்ணம் முறையற்றது'' என்பதை இவ்வுலகிலேயே நபி யூனூஸ் (அலை) அவர்களை போல உணரவும் செய்து விடுகின்றான். எனும் இந்தத் தத்துவத்தை சத்தாகக் கொண்டதோடு;

இறைவனை மறுத்த - மறந்த - எத்தனையோ சமுதாயங்கள் உலகில் வாழ்ந்து வீழ்ந்துள்ள நிலையில் ஆரம்ப காலங்களில் மனமுரண்டு கொண்ட இறை விரோதிகளாகத் திகழ்ந்திட்டாலும்; காலப்போக்கில் அல்லாஹ்வின் தண்டனை இறங்கப் போகின்ற அறிகுறிகளைக் கண்டவுடன், பயந்து - மனம் மாறி - தவ்பா செய்து ஈமான் கொண்டு விட்ட ஒரே சமுதாயம் நபி யூனுஸ் (அலை) அவர்களுடைய சமுதாயம் தான் என்ற வரலாற்றுப் பெருண்மைகளையும் கருவாகக் கொண்டு உருப்பெற்றுள்ள இந்த அழகிய வரலாற்றுச் சம்பவத்தை இங்கே நினைவு படுத்திய வரலாற்று வல்லுனர் இமாம் பூசிரி (ரஹ்) அவர்கள்; நபி யூனூஸ் (அலை)

அவர்களுக்கு நிகழ்ந்த இந்த முஃஜிசாவிற்கும் நமது நபிகளார் (ஸல்) அவர்களுக்கு நிகழ்ந்ததொரு முஃஜிசாவிற்கும் ஓரளவு ஒற்றுமை இருப்பதைச் சொல்லிக் காண்பிப்பதற்கே இந்த வரலாற்று நிகழ்ச்சியைப் பயன்படுத்துகின்றார்.

அதாவது;

நபி யூனுஸ் (அலை) அவர்கள் மீன் வயிற்றினுள் சிறைப்பட்டிருந்த நேரத்தில் ஷெ தஸ்பீஹை ஜபித்துக் கொண்டிருந்த காரணத்தினால் அவருக்கு விடுதலையும் விமோசனமும் கிடைத்தது என்பதை இங்கே 71-ஆம் கண்ணியில்;

'மீன் வயிற்றில் ஏத்தும் நபி விரைந்தெறியப்பட்டது போல்' என்று சொல்லிக் காண்பித்து.

அதுபோல;

நமது நபிகளார் (ஸல்) அவர்கள் பத்ருப் போரில் ஒரு பிடி கூழாங்கற்களை எதிரிப் படைகளின் மீது விட்டெறிந்தார்களல்லவா? அந்த ஒருபிடி கூழாங்கற்களும் நபிகளார் (ஸல்) அவர்களின் கரத்திலிருக்கும் போது மீன் வயிற்றினுள் சிறையிருந்த ஹழ்ரத் யூனுஸ் நபி (அலை) தஸ்பீஹ் செய்ததே போல - அந்த கற்களும் நமது நபிகளார் அவர்களின் கரத்தினுள் இருக்கும்போது தஸ்பீஹ் செய்து கொண்டிருந்த காரணத்தால்தான் அதனை பெருமானார் எறிந்தவுடன் ஆயிரத்திற்கு மேற்பட்ட பெரும் கும்பலாகத் திகழ்ந்த எதிரிப்படையினுள் ஊடுருவிச் சென்று அபூஜஹில், உத்பா, ஷைபா போன்ற குறிப்பான

வர்களின் மேல் மட்டும் பாய்ந்து அவர்களின் இதயத்தில் பெருமானார் அவர்களைப் பற்றியும், உத்தம சஹாபாக்களைப் பற்றியும் ஒருவகை திகிலை ஏற்படுத்தி அங்கன மேற்பட்ட திகிலே அவர்களின் தோல்விக்கு முழுமுதற் காரணமாகவும் அமைந்திடத் தக்க அறப்பணியை - அற்புதப் பணியை - அந்தக் கூழாங்கற்களால் செய்விக்க முடிந்தது' என்பதை இங்கே நாசுக்காகச் சுட்டுவதன் மூலம் தஸ்பீஹ் செய்த யூனுஸ் (அலை) அவர்களையும், பெருமானார் கரத்தில் தஸ்பீஹ் செய்த அந்தக் கூழாங்கற்களையும் ஒப்புநோக்குகின்றார் உவமை கூறுவதில் நேர் நிகரற்று விளங்கும் கவிக்கோ பூசிரி (ரஹ்) அவர்கள்

சுப்ஹானல்லாஹ்! என்னே உவமை! என்னே உவமை!

நமது நபிகளாரின் உரிமைமிக்க ஊழியர் திலகம் அனஸ் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்.

'பத்ருப் போரின் போது எதிரிகளின் மீது விட்டெறியும் நோக்குடன் பெருமானார் அவர்கள் ஒரு பிடி கூழாங்கற்களை குணிந்தெடுத்தார்கள். அந்தக் கூழாங்கற்கள் பெருமானார் அவர்களின் கரத்தில் எடுக்கப்பட்டவுடன், எங்களின் செவிகளுக்கு எட்டுமளவு (உயர்ந்த குரலில்) தஸ்பீஹ் செய்தன. அதனை அபூபக்கர் (ரலி - அன்ஹு) அவர்களிடம் கொடுத்தார்கள் அபூபக்கர் (ரலி) அவர்களின் கரங்களிலும் அந்தக் கற்கள் தஸ்பீஹ் செய்தன. அதன் பின் உமர்பாரூக் (ரலி - அன்ஹு) அவர்களிடம் அதனைக் கொடுத்தார்கள். உமர் அவர்களின் கைக்கு மாறிய அந்த கற்கள் அவர்களின் கரங்களில்

இருந்தவாறும் தஸ்பீஹ் செய்தன. அடுத்து எங்களின் கைகளில் கொடுக்கப்பட்டன. எங்களின் கைகளுக்கு வந்தபின் தஸ்பீஹ் செய்வதை அந்தக் கற்கள் நிறுத்தி விட்டன.'' (பாஜுரி) அனஸ் (ரலி - அன்ஹு) அவர் இந்த அறிவிப்பையும் கற்கள் தஸ்பீஹ் செய்ததாகக் கூறும் இமாம் பூசிரி (ரஹ்) அவர்களின் கவிதையினை யும் ஒன்றினைத்துப் பார்க்கும் போது நம்மின் மெய்சிலிர்க் கின்றது. மற்ற கவிஞர்கள் உவமை கூறினார்கள் என்றால் அதில் 'மிகைப் படுத்துதல்' இல்லாமலிருக்காது. ஆனால் இமாம் பூசிரி அவர்களுடைய உவமை மிகநயமாக இருப்ப தோடு, அதில் ''மிகைப்படுத்துதல்'' இம்மியும் இல்லாமல், உள்ளதை உள்ளபடி கூறிக் காண்பிக்கும் பாங்கு பளிச்சிடு வதைப் பார்க்கும் போது 'அவர் ஒருவரே தெய்வீகக்கவி' எனச் சொல்லத் தோன்றுகின்றது.

இது வரை 'பிறப்பின் சிறப்பு' எனும் தலைப்பில் எம்பெருமான் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் ஜனித்த அன்று: பாரசீகப் பேரரசின் கோட்டை கொத்தளங்களும் அதன் பதினான்கு கலசங்களும் விண்டு வீழ்ந்த விந்தை மிகு காட்சிகளையும்,

ஈரான் நாட்டு தீ தொழும்பர்கள் ஆயிரம் ஆண்டு களாக வணங்கி; வழிப்பட்டு வந்த நெருப்புக்குண்டம் அணைந்து, அவர்களுக்கு அதுவே அபசகுணமாக அமைந்த நிகழ்ச்சிதனையும்.

ஜீவநதியாகத் திகழ்ந்த ஒரே காரணத்தால் தெய்வீகம் கற்பிக்கப்பட்டுக் கொண்டாடப்பட்ட ஈரான் நாட்டு புராத்து நதி வற்றி வரண்டு போன மாறுதலையும்,

"லால் சாவா" எனும் ஏரி வற்றி வரண்டமையால் அந்நாட்டவர் நெஞ்செரிந்து நின்ற புண்மையினையும்,

விண்ணில் ஒட்டுக்கேட்டு மண்ணக மாந்தர்க்கு செய்தி கொடுத்து வந்த ஜின்களுக்கு விண்ணகம் ஏகத் தடை ஏற்பட்டு விட்டதால் அந்த ஜின்கள் வீறிட்டலறிய அவலத்தையும் இன்னும் இதுபோன்ற பல்சுவை நிகழ்ச்சிகளையும் படம் பிடித்துக் காட்டி எம்பெருமான் அவர்களின் பிறப்பின்போது விளைந்த சிறப்புக்களை - எம்பெருமான் பிறந்த மாத்திரத்தில் - புறையோடிப் போய்க்கிடந்த புண்மைகள் - சூரியனைக் கண்ட பனிக்கட்டிகள் போல உறுகியோடிய உண்மைகளை எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனி போல தடம் பிறழாமல் வெளிச்சம் போட்டு காட்டியதன் மூலம் தனது புலமைக்கு தனித்ததோர் சிறப்பிடத்தைத்தக்க வைத்துக்கொண்ட கவிக்கோ பூசிரி இதனையடுத்து **புதுமைப் பூக்களை** நுகர நம்மையெல்லாம் அழைத்துச் செல்லுகின்றார். அதற்கும் முன்னதாக அண்ணல் நபிகளார் கருரில் - ஆமாம் கருப்பையில் - வளர்ந்த போது சம்பவித்த விந்தைகளைக் கொஞ்சம் சிந்தனை விருந்தாக அருந்திக் களிப்போம்.

**உத்தமத் திருத்தூதர் அவர்களுக்கு உடலகம் கொடுக்கப்பட்ட உன்னதம்**

அண்ட கோளங்கள் அனைத்துடைய ஏகபோக அதிபதியான வல்ல அல்லாஹ் அண்டங்களின் அசல்

ஒளிவாகிய 'நூரேமுஹம்மதிய்யா' எனும் அந்த அருளொளிக்கு மனித உருவகம் கொடுத்து புனிதரான முஹம்மது (ஸல் - அம்) அவர்களை தனிரகமாகப்படைத் திட நாடி - இன்று மதீனா நகரில் நபிகளாரின் அடக்கத் தளம் எந்த இடத்தில் இருக்கிறதோ அந்த இடத்தில் மண் எடுத்து வரும்படியாக வானவர்கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்களுக்கு கட்டளை பிறப்பித்தான்.

அதற்கிணங்க, அன்னவர், அங்கே மண்ணெடுத்து - நறு மணங்கமழும் அப்புனித மண்ணைக்கொண்டு ஏழு சுவர்க்கங்களையும் வலம் வந்து - சுவர்க்கங்களைச் சூழ்ந்து சலசலத்து ஓடிக் கொண்டிருக்கும் 'தஸ்னீம்' என்ற தண்ணீரில் கழுவிச் சுத்தம் செய்து - சுத்தத்தின் முழுமையினைப்பெற்ற அந்த மண்ணை அல்லாஹ்வின் அருட்திருச் சன்னதியில் சமர்ப்பிக்கிறார்.

மணமான மணம் அனைத்தையும் ஒருங்கே பெற்று மாண்புகளின் மொத்த உருவாகத் திகழ்ந்த அந்த மண்ணைக் கொண்டு மாந்தருள் மாணிக்கமாகிய முத்து முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களுக்கு மனித உருவகம் கொடுத்து அந்த மண்ணிலிருந்து மிஞ்சிய கலவைகளைக் கொண்டு மற்ற அனைத்து நபி, ரசூல்மார்களுக்கும் உருவகம் கொடுத்தான் அந்த மகாவல்லவன்.

இப்படி உருவகம் அமைக்கப்பெற்ற பின்னர், ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்களின் உருவகத்தில் நூரே முஹம்மதிய்யா எனும் அந்த நாயகப் பேரொளியை இலங்கும் படி செய்தான் அந்தப் பேரொளி ஆதம் (அலை) அவர் களின் முதுகந்தண்டில் முத்தொளி வீசிக்கொண்டிருந்தது

அதன் காரணமாகவே வானவர்களான மலக்குகள் அனை வரையும் ஆதம் (அலை) அவர்களுக்கு சுஜூது செய்யும் படியாக ஏவினான் அந்த வேந்தர் வேந்தன்.

அதன்பின்னர், ஆதம் நபி (அலை) அவர்களிலிருந்து ஷீது நபி (அலை) அவர்களுக்கு, ஷீது அவர்களிடமிருந்து நூஹ் நபி (அலை) அவர்களுக்கு, நூஹிடமிருந்து இப்ராஹீம் நபி (அலை) அவர்களுக்கு, இப்ராஹீமிடமிருந்து இஸ்மாயீல் நபி (அலை) அவர்களுக்கு என்று அந்த பேரொளி மாறி மாறி இடம் பெயர்ந்துவந்து கடைசி கடைசியாக அப்துல்முத்தலிபு அவர்களின் அருமந்தச் செல்வர் அப்துல்லா அவர்களில் குடிகொண்டு அவர்களிட மிருந்து ஆமினாமாதாவின் அடிவயிற்றிற்கு மாற்றப்பட்டு அந்த மணிவயிற்றில் வைத்து நபிகளாரின் அந்த உருவக மும் அந்தப் பேரொளியும் ஒன்றிணைந்து நல்லியல்புகளின் புகலிடமான பிள்ளை முஹம்மதாக உருப்பெற்றது.

(நூல் : ஸரஃபுல் முஸ்தஃபா)

## கருவில் உருவான திரு

கர்ப்பப்பைகளில் மகா பாக்கியம் பெற்ற கர்ப்பப் பையாகிய ஆமினா மாதாவின் கர்ப்பப்பையில் முத்துமுஹம்மதராக உருப்பெற்ற அந்தத் திருவை மாதா அவர்கள் தங்களின் திரு வாயாலேயே சொல்வதைப் பாருங்கள்.

எனக்கு ஹய்ளு (மாத விடாய்) நின்றதைத் தவிர்த்து மற்ற கர்பஸ்திரிகளுக்கு ஏற்படும் இயற்கை இன்னல்களான மசக்கை வருத்தமோ வேறு எவ்வகை வருத்தங்களோ

இம்மியும் ஏற்படவே இல்லை. இப்படி இருக்கும்போது ஒரு நாள் இரவில் எனது சொப்பனத்தில் தோன்றிய ஆதிபிதா ஆதம் (அலை) அவர்கள் 'மகளே! நீ இந்த அண்டகோளங்களின் காரணக் கருவான கண்ணியமான பிள்ளையை உண்டாகி இருக்கிறாய். என்று அறிவித்துச் சென்றார்கள்.

இரண்டாது மாதத்தின் சொப்பனத்தில் தோன்றிய இத்ரீஸ் நபி (அலை) அவர்கள் ''மகளே! மாண்புகளான மாண்புகள் அனைத்திற்கும் ஏகபோகச் சொந்தக்காரரான தகுதிகளான தகுதிகள் அனைத்தையும் தன்னகத்தே கொண்ட தவத்திருவேந்தரை நீ கற்பமுற்றிருக்கின்றாய்'' என்று அறிவித்துச் சென்றார்கள்.

மூன்றாவது மாதத்தில் எனது சொப்பனத்தில் தோன்றிய நூஹ் நபி (அலை) அவர்கள் ''மகளே! அல்லாஹ்வின் அனைத்து அருட்களுக்கும் அதிபதியான - உண்மையின் வெற்றி வேந்தரான உத்தம மகனை நீ கருவுற்றிருக்கிறாய்'' என்று கூறி மறைந்தார்கள்,

நான்காவது மாதத்தில் தோன்றிய கலீலுல்லாஹ் இப்ராஹீம் நபி (அலை) அவர்கள் 'மகளே! சிறப்பின் சிகரமான - அந்தஸ்துகள் அனைத்துடைய ஏகபோக அதிபதியான அற்புதரை நீ கருவுற்றிருக்கிறாய்'' என்று கூறிச் சென்றார்கள்.

ஐந்தாவது மாதத்தில் தோன்றிய தபீஹுல்லாஹ் இஸ்மாயீல் நபி (அலை) அவர்கள் ''மகளே! உன்னதங்

களின் உறைவிடமான - சன்னிதானங்களின் சன்னதியான உண்மையாளரை நீ கருவுற்றிருக்கிறாய்'' என்று கூறி மறைந்தார்கள்.

ஆறாவது மாதத்தில் தோன்றிய கலீமுல்லாஹ் மூஸா (அலை) அவர்கள் ''மகளே! நீ, பதவி, பவிசுகளின் ஏக போகச் சொந்தக்காரரான - தலைமைத்தனங்களின் தயாரிப்புத் தளமான தயாளரை கருவுற்றிருக்கிறாய்'' என்று கூறிச் சென்றார்கள்.

ஏழாவது மாதத்தில் தோன்றிய தாவூது நபி (அலை) அவர்கள் ''மகளே! மகாமுன் மஹ்மூது' என்ற சுவர்க்கத்துடைய சிம்மாசனத்திற்குச் சொந்தம் பெற்ற - 'லிவாவுல்ஹம்து' என்ற சுவர்க்கத்து தேசியக் கொடிக்கு உரியவராகத் தேர்வு பெற்ற - 'ஹவ்ளுள் கௌதர்' என்ற சுவர்க்கத்து தடாகத்தின் ஆதிபத்யம் பெற்ற, வள்ளல் தன்மை - தயாளகுணம் ஆகியவற்றின் ஊற்றுக் கண்ணாகிய உன்னதரை நீ கருவுற்றிருக்கிறாய்'' என்று கூறிச் சென்றார்கள்.

எட்டாவது மாதத்தில் தோன்றிய சுலைமான் நபி (அலை) அவர்கள் ''மகளே! நீ நபித்துவத்தின் முத்திராங்கமான கடைசித்திருத்தூதரை கருவுற்றிருக்கிறாய்'' என்று என்று கூறிச்சென்றார்கள்.

ஒன்பதாவது மாதத்தில் தோன்றிய ஈசா நபி (அலை) அவர்கள் ''தங்காய்! நீ, நித்திய மார்க்கமாம் சத்திய தீனுல் இஸ்லாத்தினைச் சம்பூரணம் பெறச் செய்திடும் சத்தியவானை நாகரீகமான நாவன்மைக்குச்

சுரங்கமான நபிகள் நாயகத்தை - பரிசுத்தமான பாரம்பர்யச் சிறப்புடைய பைகம்பரை கருவுற்றிருக்கிறாய்'' என்று கூறி மறைந்தார்கள்.

இப்படி எனது சொப்பணத்தில் தோன்றிய இந்த அற்புதர்கள் அனைவருமே,

'நேர்வழி - வெற்றி ஆகியவற்றின் உதய சூரியனாகத் திகழப்போகும் அந்த நேர்த்திமிகு நேர்மையாளரை நீ பெற்றெடுத்தால் அவருக்கு 'முஹம்மது' என்று பெயர் சூட்டிடு'' என்பதனை வலியுறுத்திச் சொல்லத் தவற வில்லை.

## பிரசவத்தின் போது நிகழ்ந்த பேரற்புதம்

அன்னை ஆமினா மாதா தொடர்ந்து கூறுகின்றார் கள்.

பிரசவிக்கும்கெடு வந்துற்றபோதும் எனக்கு எவ் வகையான நோவினைகளும் ஏற்படவில்லை. அன்று இரவு நான் உறங்கிக் கொண்டிருக்கும் போது வெள்ளுடை பூண்ட உருவம் என் முன் தோன்றி எவ்வகைத் தேவை களுமற்ற பரிசுத்தப் பரம்பொருளான அல்லாஹ்விடம் பொறாமைக்காரர்களின் சகலவிதமான தீங்குகளை விட்டும் நீ காவல் தேடிக்கொள்'' என்று கூறியது.

நானும் அங்கனமே பாதுகாவல் தேடினேன்.

அதுபோது எனது அறையில் ஒளி வெள்ளம் புகுவது போன்றதொரு பிரமை எனக்கு ஏற்பட்டது. உடன் நான் கண்விழித்துக் கொண்டேன் அப்போது அங்கே நான் கண்ட காட்சி என்னை ஆனந்தப் பரவசத்தில் ஆழ்த்தியது. அது என்னவெனில்; பிர் அவ்னின் மனைவியாக இருந்தும் கூட அல்லாஹ்வின் அருளுக்கு அருகதையாகிக் கொள்ளும் பேறுபடைத்த ஆசியா அம்மையாரும், ஈசா நபி அவர்களின் தாயாரும் பரிசுத்தத்தின் மொத்தக் குத்தகையாளருமான மர்யம் அம்மையாரும் அங்கே காட்சி அளித்ததோடு அவ்விரு மாதரசிகளுடன் 'ஹூருல்ஈன்' எனும் சுவர்க்கத்து ரம்பையர் களும் கூட்டங் கூட்டமாகக் கூடியிருக்கக் கண்டேன்.

அங்கனம் நான் கண்ணுற்ற கொஞ்ச நேரத்தில் எனக்கு பிரசவம் சம்பவித்தது.

நான் பிரசவித்த அக்குழவியை - எனது அந்தக் குலத் கொழுந்தை அனைவரும் எடுத்து முத்தி முகர்ந்து மோகனம் பெற்றனர்.

எனது மகன் பிறந்த அந்த சந்தர்ப்பத்தில் ஒரு பேரொளிக் கீற்றுத் தோன்றி மறைந்தது. அந்த ஒளி வெள்ளத்தில் உதயகிரி முதல் அஸ்தகிரி வரையிலுள்ள அகிலத்தின் மாட்சிகள் அனைத்தையும் கண்டு வியந்தேன்!

பிறந்த எனது குழந்தை எவ்வித அசுத்தங்களும் இல்லாத பரிசுத்தவனாகவும் கண்களில் 'சுருமா' தீட்டப் பட்டவராகவும், தொப்புள் அறுக்கப்பட்ட வராகவும் - விருத் தசேதனம் எனும் மார்க்கக் கல்யாணம் செய்யப்பட்டவரா கவும், வெளிப்படும்போது சுஜூது செய்த வண்ணமாக - தனது வலக்கரத்தின் ஆள்காட்டி விரலை

வானத்தை நோக்கி உயர்த்தியவராகப் பிறந்து என்னை ஆட்சர்யத்தில் மூழ்கடித்தார்.

பிறந்த கொஞ்சநேரத்தில் அமரர்களான மலக்குகள் வந்து எனது அந்த அற்புதக் குழந்தையை சுவர்க்கத்துடைய சுன்துஸ் இஸ்தப்ரக் எனும் பட்டுத்துணிகளால் பொதிந்து தூக்கிச் சென்று அகிலமனைத்தையும் வலம் சுற்றியதை எனது கண்களால் கண்டு வியந்தேன். இத்தகு அற்புதங்களைக் கண்டபோதுதான் நான் கற்ப முற்றிருக்கும் போது மாதந்தோறும் ஒவ்வொரு நபியாக என்னிடம் தோன்றி எனது அந்த மகனைக் குறித்து முன்னறிவிப்புச் செய்த அந்த மாட்சிகளின் மகிமைகளை உணரலானேன்.

(நூல் : ஷரபுல் முஸ்தஃபா)

பெருந்தகையீர்! படித்தீர்களா பைகம்பரின் பிறப்பின் சிறப்புகளை

இந்த அபூர்வ நிகழ்ச்சிகளை அறிந்திடும் போதுதான் இந்த நான்காவது காண்டத்தில் நபிகளார் பிறந்தபோது சம்பவித்ததாக இது வரை நமக்கு கூறிக்காண்பிக்கப்பட்ட அந்த அதிசய நிகழ்ச்சிகளை முழுமையாக ரசித்து ருசிக்க முடிகின்றது அதுவன்றி இனி இதனையடுத்துவரும் புதுமைப் பூக்களில் பூசிரி அவர்களால் சொல்லிக் காட்டப் படும் அந்த புதுமைகளையும் புரிந்து புரிப்படைந்திட இது உதவிகரமாக இருந்திடும் என்பதால் இங்கே இடை மறித்து இந்த விபரங்களைக் கடைபரப்பிக் காட்டினேன்.

சரி, இனிவாருங்கள் புதுமைப் பூக்களை நுகர் வோம்!

# 5

அங்கிங்கெனாதபடி எங்கும் எதிலும் நீக்கமற நிறைந்து நிற்கும் வல்ல அல்லாஹ், சிற்சில அனுகூலங்களைக் கருதி, புதுமைப் புதினங்களை - அபூர்வங்களை சிலபல நல்லடியார்களின் மூலம் வெளிப்படுத்துவதுண்டு.

அந்தப் புதுமைகளுக்கு அது வெளிப்படும் பாத்திரங்களான அடியார்களின் பதவி, தகுதிகளைக் கவனித்து முஃஜிஸா என்றும், கராமத் என்றும், மஊனத் என்றும், இஸ்தித்ராஜ் என்றும் இஹானத் என்றும் நான்கு பெயர்களுண்டு.

## 'முஃஜிஸா' எனும் புதுமையின் விபரம்

திருத்தூதர்களான நபி ரசூல் மார்களின் மூலம் வெளிப்படும் புதுமைகளுக்கு "முஃஜிஸா" என்று பெயர்.

நபி ரசூல்களின் மூலம் வெளிப்பட்ட அந்த முஃஜிஸாக்கள்;

தவ்ஹீது எனப்படும் ஏகத்துவத்தை உறுதிப்படுத்துவதாகவும்,

திருத்தூதுவத்தை ஒளிரச்செய்வதாகவும்.

அடியார்களின் கவனத்தை அல்லாஹ்வின் பக்கல் திசை திருப்புவதாகவுமே அமைந்திருக்கும்.

அஃதன்றி;

அவ்வக்கால மனிதர்களின் மனக்கவர்ச்சி எவற்றில் களில் லயித்துக் காணப்பட்டதோ அந்தந்தக்கலை கலாச் சாரங்களை பின்னணியாகக் கொண்டதாகவே அந்தந்த முஃஜிஜாக்கள் பெரும்பாலும் அமைந்தன.

## மூஸா நபியவர்களின் காலமும் கருத்தும்

ஹஜ்ரத் மூஸாநபி (அலை) அவர்களது காலம் மந்திரக்காலம்.

அந்த காலத்தவரின் கருத்து மந்திரக்கலையில் லயித்துப்போய்க் கிடந்தது.

மந்திரவாதிகள் யந்திரவாதிகளை மிகைத்து அந்த மக்களின் முழுக் கவனத்தையும் ஈர்த்து மோச வலையில் அவர்களை வீழ்த்திக் கொண்டிருந்தனர்.

ஆண்டிதொடுத்து அரசன்வரையுள்ள அனைவருமே தங்களுக்குச் சம்பவிக்கும் அனைத்து நன்மை தீமைகளும் மந்திரவாதிகளுடைய மாய்மாலங்களின் விளைவே என நம்பினர்.

மந்திரவாதிகளின் மனம் கோணினால் மங்களகாரியங்களேதும் நடவாது போய்விடும் என நம்பி நடு நடுங்கினர்.

எவருக்காவது அசம்பாவிதமேதும் நிகழ்ந்து ''கேட்டானா பாவி! இன்ன மந்திர வாதியின் மனதை நோக வைத்தான் சரியாக மாட்டிக் கொண்டான்'' எனப் பழக்கம் பேசினர்.

மந்திரவாதிகளின் பெயரால் ஏழைகள் சுரண்டப் படுவர். இயலாதோர் வஞ்சிக்கப்படுவர். ஏமாளிப் பேதை களின் கற்புச் சூறையாடப்படும். அப்போது நியாய உள்ளம் படைத்த எவராவது ''அடுக்குமா இது?'' என்றால் ''பொறு, பொறு. உன்னை இன்ன மந்திரவாதி யிடம் சொல்லிக் கவனித்துக் கொள்கின்றேன்'' என அரட்டப்படுவான் அவன். இதனைக் கேட்ட மாத்திரத்தில் தீயை மிதித்து விட்ட உணர்ச்சிக்குள்ளாகி 'ஐயனே! மெய்யனே! அடியேனை மன்னித்து ரட்சித்து விடு என அந்த நியாயவாதி மன்றாடி மௌனமாகப் போய்விடு வான்.

எப்படி, அந்த மக்களின் மௌட்டீகம்?

இப்படி அடுக்கிக் கொண்டே போகலாம். அந்த அப்பாவிகளின் அவலங்களை.

மௌட்டீகச் சேற்றில் இப்படி மண்டிக்கிடந்த அந்தக் கால மக்களைத் திருத்துவ தென்றால் அஃது, எளிதானா காரியமா?

ஆனால்; திருத்தியாக வேண்டுமே! அதற்கென்ன செய்வது?

பகுத்தறிவையெல்லாம் அடகு வைத்து விட்டு வகுத்தறி வொன்றை மட்டுமே குறியாகக் கொண்டு வாழ்ந்த அந்த

அபாக்கியவான்களைத் திருத்தி தீனுல் இஸ்லாத்தினுள் கொண்டு வர வேண்டுமானால் இந்த மந்திரத்தை மிகைக்கும் அபார சக்தியை திருந்தூதர் மூஸா (அலை) அவர்களுக்குக் கொடுத்தாக வேண்டும் - என வல்லவனாம் அல்லாஹ் கருதினான் போலும்.

ஆகவே ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களின் மூலம் மந்திரத்தைப் பின்னணியாகக் கொண்ட முஃஜிஜாக் களை வெளிப்படுத்தினான்.

ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களுக்கு தான் வெளிப் படுத்திய அந்த முஃஜிஜாக்களை தனது குர்ஆன் ஷரீபில் வல்லவனான அல்லாஹ் வகைப்படுத்திக் காட்டுவதை இதோ பாருங்களேன்:

## மூஸா நபி அவர்களின் மூலம் வெளியிபட்ட முஃஜிஜாக்கள்

"(என் இனத்தாராகிய) இஸ்ராயீலின் சந்ததிகளை நீ அடிமையாக வைத்துக் கொண்டிருக்கும் நிலையில், இது நீ எனக்குச் சொல்லிக் காண்பிக்கக் கூடிய ஒரு நன்றி தானா?" என்று (மூஸா) கூறினார்.

அதற்கு பிர் அவ்ன் "உலகத்தாரின் சிருஷ்டிகர்த்தா யார்?" என்று கேட்டான்.

அதற்கு (மூஸா) "வானங்களையும் பூமியையும் இவைகளுக்கு மத்தியிலுள்ளவைகளையும் சிருஷ்டித்துப் போஷிப்பவன் தான் (உலகத்தாரின் சிருஷ்டிகர்த்தாவும்

போஷிப்போனும் ஆவான். இவ்வுண்மையை) நீங்கள் நம்புவீர்களா?'' என்று கூறினார்.

அதற்கவன், அதனைச் சூழ இருந்தவர்களை நோக்கி 'நீங்கள் இதனைச் செவியுறவில்லையா?'' என்று, கூறினான்.

அதற்கு அவர் ''உங்கள் இறைவன் (மட்டும் அல்ல; உங்களுக்கு முன் சென்றுபோன உங்கள் மூதாதைகளின் இறைவனும (அவன் தான்)'' என்று கூறினார்.

அதற்கு (பிர் அவ்ன் அவர்களை நோக்கி) ''உங்களிடம் அனுப்பப்பட்ட (தாகக் கூறும்) உங்களுடைய (இறை) தூதர் நிச்சயமாக ஒரு பைத்தியக்காரர்', என்று சொன்னான்.

அதற்கு (மூஸா) ''கீழ் நாட்டையும் மேல் நாட்டையும் இவைகளுக்கு மத்தியிலுள்ளவை (களாகத் திகழும் நாடு) களையும் படைத்துப் போஷிப்பவன் (அவன் தான்) இதனை நீங்கள் உணர்ந்து கொள்ள வேண்டாமா?''

(நாட்டிலுள்ள) சகல மனிதர்களிடமும் ''(குறித்த காலத்தில் நீங்கள் போட்டியைப் பார்க்கவும் விசுவாச மந்திரவாதிகள் மூஸாவை ஜெயித்து விடும் மகிழ்ச்சியைக் கண்டு களிக்கவும்) வந்து சேருவீர்களா?'' என்று (உறுதி மொழி) கேட்கப்பட்டது.

மந்திரவாதிகள் ஜெயித்துக் கொண்டால் (அந்த மந்திரவாதிகளின் மார்க்கத்தையே மூஸாவும் ஹாருனுமாகிய) நாங்கள் பின்பற்றவுங்கூடும்'' (என்றும் மூஸா என்று கூறினார்.

அதற்கவன் ‘‘என்னைத் தவிர (மற்றெதனையும்) நீர் ஆண்டவனாக எடுத்துக் கொண்டால் நிச்சயமாக நான் உம்மைச் சிறைச்சாலைக்கு அனுப்பிவிடுவேன்’’, என்று கூறினான்.

அதற்கவர் ‘‘தெளிவான (அத்தாட்சி - முஃஜிஜா) ஒன்றை நான் உன்னிடம் கொண்டு வந்த போதிலுமா (நம்ப மாட்டாய்)’’ என்று கேட்டார்.

அதற்கவன் ‘‘நீர் சொல்வது உண்மையானால் அதனைக் கொண்டு வாரும்’’ என்று கூறினான்.

ஆகவே மூஸா தன் (கைகளில் இருந்த) தடியை எறிந்தார்; உடனே அது தெளிவானதொரு மலைப்பாம்பாகி விட்டது.

அன்றி, அவர் தன்னுடைய கையை (ச் சட்டைப் பையிலிட்டு வெளியில் எடுத்தார்; (உடனே அது பார்ப்போரின் கண்ணைக் கூசச் செய்யும் பிரகாசமுடைய) வெண்மையாகத் தோன்றியது.

(இதனைக் கண்ணுற்ற பிர் அவன்) தன்னைச் சூழ இருந்த பிரதானிகளை நோக்கி ‘‘நிச்சயமாக இவர் மிகவும் நன்கு அறிந்த மந்திரக்காரராக இருக்கின்றார்.

இவர் மந்திரத்தைக் கொண்டு, உங்கள் ஊரை விட்டும் உங்களைத் துரத்திவிட எண்ணுகிறார்., ஆகவே இதைப்பற்றி நீங்கள் என்ன கூறுகின்றீர்கள்?’’ என்று கேட்டான்.

அதற்கவர்கள், அவருக்கும் அவருடைய சகோதரரு (ஹாரூனு) க்கும் (போட்டிக்குரிய) ஒரு தவணையளித்து பறைசாற்றுவோர்களை நமது நாட்டின்) பல ஊர்களுக்கும் 'அனுப்பிவை.

''அவர் (பறைசாற்றுவோர்) கள் நன்கறிந்த (கெட்டிக்கார) மந்திரவாதிகள் யாவரையும் உம்மிடம் அழைத்து வருவார்கள்'' என்று கூறினார்கள்.

(அவ்வாறே, பறைசாற்றுவோர் பல ஊர்களுக்கும் அனுப்பி வைக்கப்பட்டு) குறித்த நாளில் குறித்த நேரத்தில் (குறித்த போட்டி மைதானத்தில்) மந்திரவாதிகள் யாவரும் ஒன்று சேர்க்கப் பட்டார்கள்.
ஹாரூன் ஆகிய இரு அருளாளர்களிடமும் உறுதிமொழி வாங்கப்பட்டது)

மந்திரவாதிகள் யாவரும் (போட்டி மைதானத்திற்கு) வந்த பொழுது அவர்கள் பிர் அவ்னை நோக்கி ''மெய்யாகவே நாங்கள் ஜெயித்துக் கொண்டால் அதற்குரிய கூலி எங்களுக்குண்டல்லவா? என்று கேட்டார்கள்.

அதற்கவன் ''ஆம், உண்டு, (கூலிமட்டுமா?) அந்நேரத்தில் நிச்சயமாக நீங்கள் (நம்முடைய அரசவையிலும் வீற்றிருக்கக் கூடிய தகுதி படைத்து) நமக்கு நெருங்கிய பிரமுகர்களிலும் ஆகிவிடுவீர்கள்'' என்று ஆசை (வார்த்தையும்) கூறினான்.

அவர்களை (போட்டிக்குத் தயாராகி வந்திருந்த அந்த மந்திரவாதிகளை) நோக்கி மூஸா ''நீங்கள் மந்திரம் செய்ய எறியக் கூடியதை எறியுங்கள்'' எனக் கூறினர்.

ஆகவே இவர்கள் தங்களுடைய தடி (மந்திரக்கோல்) களையும் கயிறுகளையும் எறிந்து (அது பயங்கரமான பாம்புகளாக மாறி அங்குமிங்கும் நெளியந் தொடங்கியது. அவையோர் அனைவரும் அதிசயித்து கைதட்டி ஆரவாரம் செய்தபோது ''(கண்கண்ட கடவுளான) பிர் அவ்னுடைய கௌரவத்தின் மீது சத்தியமாக, நிச்சயமாக நாங்களே ஜெயித்து விட்டோம்'' என்று கூறி (கெக்கலி பேசி)னார்கள்.

பிறகு, மூஸாவும் தன் (கையிலிருந்த) தடியை எறிந்தார் அது (மிகமிகப் பெரியதொரு மலைப்பாம்பாக மாறி) அவர்கள் செய்திருந்த மந்திர (மாய்மால)ங்கள் யாவையும் விழுங்க ஆரம்பித்து விட்டது.

(இதனைக் கண்ணுற்று தங்களின் இயலாமையை ஒப்புக்கொண்ட) மந்திரவாதிகள் யாவரும், விழுந்து சிரம்பணிந்து,

''உலகங்கள் யாவற்றின் இறைவனையே நாங்கள் விசுவாசித்தோம்.''

''அவன் (தான்) மூஸா, ஹாரூனுடைய இறைவனுமாவான்'' என்று கூறினார்கள்.

(குர்ஆன் : 26 : 22-48)

வாசகப் பெருமக்களே!

மீக்கூறப்பட்ட குர்ஆன் ஷரீப் வசனங்களை மீண்டுமொருமுறை படித்துப் பாருங்கள்.

சாதாரண மந்திரவாதிகளைக் காட்டிக் காட்டி இஸ்ராயீல் மக்களை ஏமாற்றி வாழ்ந்த பிர்அவ்னை அவனால் ஏற்பாடு செய்யப்பட்ட போட்டி மைதானத்திலேயே மூஸா, நபியவர்கள் இறைவனது தனிப்பெரும் சக்தியினால் - தன்னின் மூலம் வெளிப்பட்ட முஃஜிஜாவினால் - எப்படி மண்கவ்வச் செய்தார்கள் என்பது புலனாகும்.

நின்று நிலைத்து நீள்பயன் தந்திட முடியாத மந்திரங்களிலும் - மந்திரவாதிகளிடமும் லயித்துப் போய்க்கிடந்த அந்த மக்களது கவனத்தை, இந்த முஃஜிஜாக்களின் துணை கொண்டே இஸ்லாமிய சன்மார்க்கத்தின் பால் திசை திருப்பிட முடிந்தது என்பதும் புலனாகும்.

அதன் விளைவால், உடனுக்குடன் பலன் கிடைத்தது 'அதாவது' மக்களின் மௌட்டீகத்தை வளர்க்கப் பயன் பட்ட கவர்ச்சி ஜீவிகளான - ஷோ பாய்களான - அந்த மந்திரவாதிகளே முதன் முதலாக மூஸா நபியவர்களின் பிரச்சாரத்திற்குத் தலை சாய்த்து முஸ்லிம்களாக மதம் மாறினர் என்பதும் - புலனாகும்.

அல்லவா?

இப்படி அவ்வக் காலங்களில் மக்களின் கவனத்தையும் - ரசனையையும் கவர்ந்திருந்த மாயைகளிலிருந்து மக்களை விளிக்கச் செய்வதற்குஇந்த முஃஜிஜாக்கள் பயன் பட்டு வந்துள்ளன என்பதனை இன்னும் பல நபிமார்களின் மூலம் வெளியான முஃஜிஜாக்களும் எண்பித்துக் காட்டுகின்றன.

## தாவூதுநபி அவர்களின் மூலம் வெளிப்பட்ட மு:ஃஜிஜாக்கள்

ஹஜ்ரத் தாவூது நபி (அலை) அவர்களின் மூலம் முஃஜிஜாக்களை குர்ஆன் ஷரீபில் வல்லவன் வகைப் படுத்திக் காட்டுவதைப் பாருங்கள் :

''மெய்யாகவே நாம் தாவூதுக்கு நம்மிடமிருந்து (பெரும்) அருள்புரிந்து (மலைகளை நோக்கி) ''மலைகளே! நீங்கள் அவருடன் (சேர்ந்து என்) துதியை எதிரொலியுங்கள் பறவைகளே! [நீங்களும் துதிசெய்து பாடுங்கள் என்று கட்டளையிட்டோம்] அன்றி, அவருக்கு இரும்பை [மெழுகைப்போல்] மெதுவாக்கித் தந்தோம்.

[மேலும் ''சங்கிலி] வளையங்களை[ச் செய்து ஒழுங்] காக இணைத்து போர்ச் சட்டை செய்யும் என்றும் [கட்டளையிட்டதுடன் அவரையும் அவரைச் சார்ந்தோரை யும் நோக்கி]'' நீங்கள் நற்கருமங்களையே செய்து கொண்டிருங்கள்; நிச்சயமாக நான் நீங்கள் செய்பவை களை உற்று நோக்கினவனாக இருக்கிறேன் [என்றும் கூறினோம்].''

வாசகர்களே !

நபி தாவூது [அலை] அவர்களது காலத்தவர் சங்கீதப் பிரியர்களாகவும், உலோகப்பிரியர்களாகவும், உலோகங்களில் எவர் நிபுணத்துவம் பெற்றிருந்தனரோ அவர்களை மிக மிகப் பெரியவர்களாக மதித்து அவர் களையே போற்றிப் புகழ்பவர்களாகத் திகழ்ந்தனர்.

ஆகவே மேலே கண்ட குர்ஆன் வசனங்களில் கண்டுள்ளபடி, மலைகளை எதிரொலிக்கச் செய்து இசை

எழுப்பக் கூடியதும், பறவைகளை கானம் பாடிடச் செய்திடக் கூடியதுமான முஃஜிஜாக்களையும், தொட்டமாத்திரத்தில் இரும்பு மெழுகுபோல உருகிடத் தக்கதுமான முஃஜிஜாவையும் ஹஜ்ரத் தாவூது நபி [அலை] அவர்களின் மூலம் வெளியாக்கப்பட்டு அதன் மூலம் அந்தக் கால மக்களின் கவனம் திசைமாற்றப்பட்டு தீனுல் இஸ்லாத்தில் லயிக்கச் செய்ய ஆவன செய்யப்பட்டது.

## ஹஜ்ரத் சுலைமான் அவர்களின் மூலம் வெளிப்பட்ட முஃஜிஜாக்கள்

ஹஜ்ரத் சுலைமான் நபி (அலை) அவர்களது காலத்தவர் ஆட்சி அதிகாரங்களில் லயித்துக் காணப்பட்டனர் ஆகவே அப்பெருந்தகைக்கு, இன்றையவரும்கூட வியந்திடத் தக்க ஆளுகையினை வல்லவனாம் அல்லாஹ் கொடுத்தான்.

ஹஜ்ரத் சுலைமான் அவர்களின் மூலம் வெளிப்பட்ட அந்த முஃஜிஜாக்களை அல்லாஹ்வே கூறிக் காண்பிக்கின்றான் பாருங்கள்.

"அன்றி, ஸுலைமான் காற்றை (வசப்படுத்தித் தந்தோம்) அதன் காலைப் பயணம் ஒரு மாத தூரமும், அதன் மாலைப் பயணம் ஒரு மாத தூரமுமாக இருந்தது. அன்றி, உருகிய செம்பின் ஓர் ஊற்றை (நீரைப் போல்) நாம் அவருக்காக ஓடச் செய்தோம். தன் இறைவனுடைய அனுமதிப்படி அவருக்கு வேலை செய்யக்கூடிய (சேவகர்களாக) ஜின்களையும் நாம் அவருக்கு வசப்படுத்திக் கொடுத்து அவருக்கு வழிப்பட்டு (நடப்

பதில்) அவர்களில் எவன் நம்மைப் புறக்கணிக்கின்றானோ அவனைக் கொழுந்து விட்டெரியும் (நரக) வேதனையைச் சுகிக்கும்படி நாம் செய்வோம் (என்றோம்).

(குர் : 34 : 12)

பின்னர் ஸுலைமானை தாவூதுக்கு (ஆளுகையிலும்) வாரிசாகி; "மனிதர்களே! பட்சிகளின் மொழி எங்களுக்கு கற்பிக்கப்பட்டிருக்கிறது. எங்களுக்கு வேண்டிய (சகல பொருள்களும்) ஏராளமாகவே) கொடுகப்பட்டிருக்கின்றன. நிச்சயமாக இது ஓர் (இறைவன்) மிகத் தெளிவான ஓர் அருளாகும்" என்று கூறி (நன்றியும் செலுத்தி)னார்.

ஜின்கள், மனிதர்கள், பட்சிகள் முதலியவர்களைக் கொண்ட ஸுலைமானுடைய ராணுவம் அவர் முன் திரட்டப் பட்டு, இனவாரியாக அணிவகுக்கப்பட்டது.

(குர் : 27, 16-17)

## ஹஜ்ரத் ஈஸா நபி (அலைஹி) அவர்களின் மூலம் வெளிப்பட்ட முஃஜிஜாத்கள்

பிறப்பிலேயே அல்லாஹ்வின் வல்லமையினைப் பிரதி பலித்த ஹஜ்ரத் ஈஸா நபி [அலைஹி] அவர்களின் வாழ்க்கையில் அதிபற்புதமான பல முஃஜிஜாக்கள் நிறைந் திருப்பதைக் காணுகின்றோம்.

அந்த திருத்தூதரின் மூலம் வெளிப்பட்ட அந்த முஃஜிஜாக்கள் அனைத்தும் வைத்தியக் கலையை பின்னணியாகக் கொண்டிலங்குகின்றன.

காரணம்; அன்றைபக் காலம் வைத்தியக் கலைக்கு மரியாதை கொடுக்கப்பட்ட காலமாகும். அனைவரினும் மருத்துவர்கள் மிக மதிக்கப்பட்டார்கள். மருத்துவம் மக்களின் முழு கவனத்தையும் ஈர்த்து வந்தது. மக்களின் மனக்கவர்ச்சி இப்படி மருத்துவத்தில் லயித்துப்போயிருப்ப தால் மருத்துவ அடிப்படையிலான அற்புதங்களை— புதுமைகளை ஈஸா நபி மூலம் வெளிப்படுத்தினாலே அன்றைய மக்களின் கவனத்தை மார்க்கத்தின் பக்கம் ஈர்க்க முடியும் என வல்லவனாம் அல்லாஹ் கருதினான் போலும்.

ஆகவே; பிறவிக் குருடர்களுக்கு கண்ணொளி வழங்குதல், குஷ்ட நோயாளிகளைக் குணப்படுத்துதல், மரணித்தவர்களை உயிர்பெற்றெழச் செய்வது போன்ற அற்புதங்களை ஹழ்ரத் ஈசா ரூஹுல்லா அவர்களின் மூலம் வெளியாக்கப்படுகின்றது.

''பிறகு அல்லாஹ், (ஈஸாவை நோக்கி) கூறுவான்'' மர்யமுடைய மகன் ஈஸாவே! உம் மீதும், உம் தாய் மீதும் [நான் புரிந்து] உள்ள என்னுடைய அருளை நீர் நினைத்துப்பாரும். பரிசுத்த ஆத்மாவைக் கொண்டு உமக்கு உதவி புரிந்து, [உம் தாயின் பரிசுத்தத் தன்மையைப் பற்றி] நீர் தொட்டிற் குழந்தையாய் இருந்த சமயத்திலும், [உம் தீர்க்கதரிசனத்தைப் பற்றி] வாலிபத்திலும், உம்மை மனிதர்களிடத்தில் பேசச் செய்ததையும், (நினைத்துப் பாரும்) வேதத்தையும் ஞானத்தையும், தவ்றாத்தையும், இன்ஜீலையும் நான் உமக்குக் கற்பித்ததையும், (நினைத்துப் பாரும்) அன்றி, நீ என் கட்டளைப்படி

களிமண்ணால் பட்சியின் உருவத்தைப்போல் செய்து, அதில் நீர் ஊதிய சமயத்தில் அஃது [இறைவனாகிய] என் கட்டளையைக் கொண்டு பட்சியானதையும் பிறவிக் குருடனையும் வெண் குஷ்ட ரோகியையும் என் உதவியினால் நீர் சொஸ்தப்படுத்தியதையும் (நினைத்துப்பாரும்) நீர் என் அனுக்கிரகத்தைக் கொண்டு மரணித்தோரைக் (கல்லறையிலிருந்து உயிர் பெற்றுப்) புறப்படச் செய்ததையும் [நினைத்துப் பாரும்] அன்றி, இஸ்ராயீலின் சந்ததிகளிடம், நீர் தெளிவான அத்தாட்சிகளைக் கொண்டு வந்தபோது அவர்களில் நிராகரித்தவர்கள் நிச்சயமாக இது தெளிவான மந்திரத்தைத் தவிர வேறல்ல'' என்று கூறியதுடன் உமக்குத் தீங்கிழைக்க முயற்சித்த] சமயத்தில், அவர்களுடைய தீங்கு] களிலிருந்து நான் உம்மைத் தடுத்துக் கொண்டதையும் நினைத்துப் பாரும்.''

[குர் : 5, 10]

இப்படி நபிமார்களுக்கு வெளிப்பட்ட அனைத்து முஃஜிஸாக்களையும் எடுத்து வகைப்படுத்திப் பார்த்தோமானால் அவையனைத்துமே அவ்வக்கால மக்கள் எது எதில் லயித்துப் போய்க் கிடந்தார்களோ அது அதிலிருந்து அவர்களை விழிக்கச் செய்து மார்க்கத்தின் பக்கம் அவர்களைத் திருப்புவதற்காக வேண்டி நிகழ்த்திக் காட்டப்பட்ட கவன ஈர்ப்புக்கள் தான் என்பது புலனாகும்.

## நம் நபிகளாரின் காலமும் கருத்தும்

கடைசி நபியாக - காமில் நபியாக வந்து - உதித்த நம் நபிகளார் முஹம்மது [ஸல் - அம்] அவர்களுடைய

காலத்தவரின் கருத்தும் கவர்ச்சியும் இலக்கியத்தில் சங்கம மாகி இருந்தன.

காவியங்கள் புனைந்திடும் கவிவாணர்கள் மக்களில் முதல்தரமான மனிதர்களாகக் கருதப்பட்டனர்.

செய்யுட்களை இயற்றும் ஆற்றல் பெற்ற சிந்தனை யாளர்கள் மக்களின் சிந்தையைக் கொள்ளை கொண்டிருந் தனர்;

உரைநடை இலக்கியங்களைப் படைக்கும் வசனகர்த் தாக்கள் அந்தக்கால மக்களின் உள்ளக்கர்த்தாக்களாக உலாவந்தனர்;

ஆகவே,

அந்தக்கால மக்களின் இலக்கண இலக்கிய மோகங் களைத்தனிய வைத்திட, மனித சக்திகளை கிறு கிறுக்க வைத்திட வேண்டிய பேரிலக்கியம் தேவைப்பட்டது.

ஆகவே 'திருகுர்ஆன்' எனும் எந்த சக்தியாலும் எப்போதும் மிகைக்கவே முடியாத உயர் இலக்கியத்தை நம் நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு முஃஜிஜாவாக அருளப்பட்டது.

## குர்ஆன் எனும் முஃஜிஜா

குர்ஆன் ஒரு முஃஜிஜாதான்.

ஆனால் மற்ற முஃஜிஜாக்களைப் போல

அல்லது மற்ற நபிமார்களுக்கு வழங்கப்பட்ட முஃஜ்ஜாக்களைப் போல சாதாரணமான முஃஜிஜா அல்ல அது.

உலகம் உள்ளவரை.
உலகில் உயிரினம் உள்ளவரை
கொஞ்சம்கூட சக்தி குன்றி விடாமல் இறக்கப்பட்ட நிலையில் இருந்தது போன்ற முழுச் சக்தியோடு நின்றிலங்கிட வல்லதொரு தொடர் முஃஜிஜாவே அது.

## ஜெர்மானியக் கவிவாணர் கத்தே

ஜெர்மன் நாட்டின் மிகப்பெரும் கவிவாணரும் அகிலமனைத்திலும் மகாப்புகழ் பெற்றுத் திகழ்பவருமான 'கத்தே' என்பவர் குர்ஆன் ஷரீபைப் பற்றி :

''முஹம்மது நபி ஒரேயொரு அற்புதத்தி (முஃஜிஜாவி)ற்கே சொந்தம் கொண்டாடினார். அது 'குர்ஆன்' எனும் அற்புதமாகும். உண்மையில் அஃது தன்னிகரற்றதோர் அற்புதமே எத்தனை தடவை ஓதினாலும் ஒவ்வொரு தடவையிலும் புதுப்புது உணர்வுகளை எழுப்பிவிட்டு தன்னில் லயிக்கும்படி செய்துவிடுகின்றது அது)''

என வியந்து கூறுகின்றார்.

## பேராசிரியர் வைன்லால்

''அரபிகள் பாரசீகத்தை வென்றதும் பாரசீகத்தவர்கள் பலர் தாமாக முன் வந்து இஸ்லாத்தைத் தழுவினர். இவர்களுடைய உள்ளங்களிள் அதியற்புதப் பேரிலக்கியமான திருக்குர்ஆன் மிகுந்த ஆதிக்கம் பெற்றது.

அவ்வேதத்தின் தத்துவங்கள் இவர்களுடைய தனி, சமுதாய வாழ்க்கைகளில் எதிரொலிக்கலாயின. எதையுமே அவர்கள் திருக்குர்ஆன் முன்னிலையிலேயே நிறுத்தி மதிப்பிட லாயினர். திருக்குர்ஆனின் உன்னதமான போக்கு, அதன் தெளிவான, துல்லியமான வாக்கியங்கள், ஓசை நயமிக்க ஓட்டம், கடைந்தெடுத்த வார்த்தையமைப்பு, அழுத்தமான பிரகடனம், கனறும் உணர்ச்சி, மகத்தான வீரியம், பளபளக்கும் விதமான பல்வகை உவமானங்கள், இன்ப மூட்டும் தெளிவு - இவையாவும் பாரசீகர் உள்ளங்களிலே மாபெரும் உணர்ச்சிகளை உண்டாக்கின

என்று இயம்புகின்றார் வரலாற்றுப் பேராசிரியரான 'திரு வைஸ்லால்'

## சர்வில்லியம் மூர்

பிரபஞ்சத்தில் இயற்கையாக உள்ள அற்புதங்களால் குர்ஆன் நிரம்பப்பட்டுள்ளது. அல்லாஹ் ஒருவன் உண்டு என்பதனையும், அவன் ஏகாந்தன் என்ற உண்மையினையும், மனிதர்கள் அவனுக்கு வழிப்பட்டு, நன்றியுள்ளவர்களாகத் திகழ்ந்திட வேண்டும் என்பதனையும், மறுவுலகத்தில் மனிதர்களின் நன்மை தீமைகளுக்குத் தக்கவாறு பிரதிபலன்கள் கொடுக்கப்படும் என்பதனையும், தீதியைக் கொண்டு, அநீதியை விட்டகன்று வாழ்ந்தி வேண்டும் என்பதனையும், அடியார்கள் ஆண்டவனுக்கு தொண்டூழியம் செய்து வாழ்வது அவசியம் என்பதனையுமெல்லாம் - உன்னதமான மொழி வளத்துடன் - ஊக்கத்துடன் சுத்தமான வாக்கிய அமைப்புகளால் ஆக்கப்பட்டுள்ளது. மற்ற

மதங்களால் மனிதன் அடைய முடியாத உன்னத நிலையினை இஸ்லாமிய மதத்தினால் மாத்திரமே அடைந்திட முடியும் என்பதனை குர்ஆன் மிக வலியுறுத்திச் சொல்லுவதை என்னால் புறக்கணிக்க முடியவில்லை. என்று சர்வில்லியம் மூர் என்ற சரித்திரப் பேராசிரியர் தனது 'லைப் ஆவ்முஹம்மத்' என்ற நூலில் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

## ஹானரபில் வில்லியம்

குர்ஆனின் ஒவ்வொரு வாக்கிலும் சத்தியம் பிரதிபலிப்பதை என்னால் உணர முடிகின்றது. அதில் முஹம்மது நபி தனது சொந்தக் கருத்து எதனையும் சொருகி இருக்க எவ்வித நியாயமுமில்லை. ஆதலால், குர்ஆனின் மூலம் மனித சமுதாயத்திற்குக் கிடைக்கும் வழிகாட்டுதலை மிஸ்டர் வான்மீர் என்பவரைப் போன்று நானும் 'மிகச் சிறந்த வழிகாட்டுதல்' என்று மனமாற ஒப்புக் கொள்கிறேன் - என்று ஹானரபில் வில்லியம் என்ற அறிஞர் கூறுகின்றார்.

## மிஸ்டர் எட்வர்டு குயின்

இஸ்லாம் எனும் மார்க்கம் சந்தேகங்களை நிவாரணம் செய்கின்ற பரிசுத்தமார்க்கம் என்பதில் எவ்வித ஐயப்பாடும் இல்லை. அம்மார்க்கத்தின் வேத நூலான குர்ஆன் ஆண்டவனுடைய ஏகத்துவத்தின் பேரில் மேலான சாட்சியாக ஒளிர்கின்றது - என்று மிஸ்டர் எட்வர்டு குயின் என்ற தத்துவ வித்தகர் கூறியுள்ளார்.

## ஜான் டெவன்பார்க் - வாஷிங்டன் இர்விங்

நீதியில்லாத எதுவும், அனாச்சார-துராச்சாரச் சடங்குகள் எதுவும், கட்டுக்கதை எதுவும், புத்திக்கும் பொருந்தாத பாவ தோசங்கள் எதுவும் குர்ஆனில் ஒன்றே ஒன்றேனும் காணக் கிடைக்கவில்லை-என்று 'ஜான் டெவன்பர்க்' என்ற பேரறிஞர் தனது 'முஹம்மதும் குர்ஆனும்' என்ற நூலில் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார்.

## எர்பாட்

குர்ஆனின் சட்டங்கள் மிகவும் உன்னதமானது. நீதி கற்பனைகள் அடங்கியது. அக்கட்டளைகள் அனைத்தையும் அன்றிலிருந்து இன்றுவரை வாழ்க்கைத் திட்டமாக அனுஷ்டித்து வாழ்ந்து வரும்படி செய்யப்பட்டிருப்பது எல்லாவற்றைப் பார்க்கிலும் ஆச்சர்யப்படத்தக்கதாகும் - என்று 'எர்பாட்' என்ற எழுத்துலக மேதை வியந்து பாராட்டியிருக்கிறார்

மீக்கூறப்பட்ட அறிஞர் பெருமக்களின் கருத்துக்கள் 'முஹம்மதிய்யா மகத்துவம்' என்ற தமிழ் நூலின் இரண்டாம் அதிகாரத்தில் பதிந்து வைக்கப்பட்டுள்ள செய்திகளாகும்.

## குர்ஆன் ஷெரீபின் அறைகூவல்

இந்தக் கருத்துக்கள் அவ்வப்போது அறிஞர் பெருமக்களால் சொல்லப்பட்ட கருத்துச் சிதறல்கள் என்று நீங்கள் சாதாரணமாக அவைகளை நினைத்து விட வேண்டாம்.

சுத்த சத்திய சம்பூர்ண வேதமாகிய குர்ஆன் தன்னைப்பற்றி தானே கீழ்வருமாறு அறிமுகம் செய்கிறார்.

அதாவது;

'நான் அல்லாஹ்வின் திருவாக்குகளாவேன். நீங்கள் அதில் ஐயம்கொள்வீர்களானால் என்னைப் போன்று (எல்லா வகை சிறப்பம்சங்களையும் கொண்ட) ஒரு சிறு அத்தியாயத்தை இயற்றிக் காண்பியுங்கள் பார்க்கலாம்'' என்று உலகிற்கு சவால் விட்டுக் கொண்டிருக்கிறது.

இதோ அதன் அறைகூவலைப் பாருங்கள்.

(நந் நபியே!) நீர் கூறும் மனிதர்களும் ஜின்னு(பூதவர்க்கங்)களும் ஒன்று சேர்ந்து, இதைப் போன்ற ஒரு குர்ஆனை உருவாக்கிட (முழுமையாக) முயற்சித்து (அம்முயற்சியில்) அவர்களில் சிலர் சிலருக்கு உதவியாக இருந்த போதிலும் இதைப்போல் உருவாக்கிட அவர்கள் அனைவராலும் (ஒருக்காலத்திலும்) முடியவே முடியாது.

(குர் : 17 : 88)

(நம்முடைய தூதராகிய) அவர் இந்தக் குர்ஆனைப் பொய்யாகக் கற்பனை செய்து கொண்டாரென அவர்கள் கருதுகின்றார்களா? அவ்வாறாயின் நபியே! (அவர்களை நோக்கி) நீர் கூறும். இதைப்போன்று கற்பனை செய்யப்பட்ட பத்து அத்தியாயங்களையேனும் நீங்கள் உருவாக்குங்கள் (பார்க்கலாம் அம்முயற்சியில்) அல்லாஹ்வையன்றி உங்களுக்குச் சாதகமான அனைத்துச் சக்திகளையும் கூட்டுச் சேர்த்து உங்களுக்குத் துணையாக ஆக்கிக்) கொள்ளுங்கள். [இந்த குர்ஆன் கட்டுக்கதை என்ற வாதத்தில்] நீங்கள் உண்மை சொல்பவர்களாக இருந்தால் [இவ்வாறு ஒரு முயற்சி செய்து பார்க்கலாமே!]

[ஆனால் நபியே! உலகில் எவரும் இத்தகு விஷப் பரீட்சையில் இறங்கத் துணியமட்டார்கள். ஏனெனில் அல்லாஹ்வாகிய என்னைத் தவிர்த்து இதுபோன்று உரு வாக்கிட எதனாலும், எப்போதும் முடியவே முடியாது. ஆகவே அவர்கள் அவ்வாறு உருவாக்கிட முயன்று (அதில் அவர்கள் தோற்று) உங்களுக்கு விடையளிக்காவிடில், [இது மனித அறிவு கொண்டு உருவாக்கப்பட்டதன்று] நிச்சயமாக அல்லாஹ்வின் அருட்கடாச்சம் கொண்டே அருளப்பட்டது தான்; [என்று அவர்களை தோல்வியை ஒப்புக்கொள்ளும் படி செய்து] அந்த வல்லமை பொருந்திய அல்லாஹ்வைத் தவிர்த்து [வணக்கத்திற்குரிய வேறு நாயன் இல்லவே] இல்லை என்பதையும் உணர்ந்து [ஒப்புக்] கொள்ளும்படி செய்து இனியேனும் இறைவனுக்கு நீங்கள் முற்றிலும் வழிப்படுவீர்களா? என்று (அவர்களிடம் வாக்குறுதியும்) கேளுங்கள்.

[குர் : 11 : 13-14]

நமது கடைசிப் பெருந்தூதர் முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எனும் நமது அடியாருக்கு நாம் அருளுகின்ற [குர்ஆன் எனும்] இவ்வேதத்தில் நீங்கள் சந்தேகப்பட்டு ['இது' இறைவனால் அருளப்பட்டதல்ல முஹம்மது சுயமாக இட்டுக் கட்டிய கட்டுக் கதையே இது என்ற உங்களது வாதத்தில் நீங்கள் உண்மையானர்வாக ளாகவுமிருந்தால் [நீங்களும்] அல்லாஹ்வைத் தவிர உங்களால் மதிக்கப்படுகின்ற அந்த மகா [?] சக்திகளை யும் [உங்களுடன்] கூட்டணி சேர்த்துக் கொண்டு இதைப் போன்ற [சிறிதான] ஒரு அத்தியாயத்தை உருவாக்கிக் கொண்டு வாருங்கள்! (பார்க்கலாம்!)

இடம் பெற்றிருந்தவர்களாவர் அது மாத்திரமல்ல அவர்களின் அந்த கருத்துக்கள் அந்தக் குழுவின் அறிக்கையில் இடம்பெற்ற அற்புதமான கருத்துக்களுமாகும்.

அப்படியென்றால் இந்த குர்ஆன் எந்த அற்புதங்களாலும் - முஃஜிஜாக்களாலும் - எந்தக் காலத்திலும் மிகைக்கப்பட முடியாத மகா உன்னதமான அற்புதமல்லவா?

ஆகவேதான் இந்த புதுமைப் பூக்கள் என்ற காண்டத்தின் ஆரம்பத்தில்,

உலகம் உள்ளவரை,

உலகில் உயிரினம் உள்ளவரை

கொஞ்சம் கூட சக்தி குன்றிவிடாமல் இறக்கப்பட்ட நிலையில் இருந்தது போன்ற முழுச் சக்தியோடு நின்றிலங்கிடவல்ல தொடர் முஃஜிஜா,

என்று இந்தக் குர்ஆன் ஷரீபைப்பற்றி கோடிட்டுக் காட்டினேன்.

குர்ஆன் முஃஜிஜாக்களின் கோனாக உள்ளது என்பதற்கு வேறு சில குறிப்புகளையும் விண்டு தருகின்றேன் அவைகளையும் கண்டு காமுறுங்கள்.

## குர்ஆன் ஷரீபில் மாதவிடாய் பற்றிய விபரங்கள்

'ஹைளு' எனும் மாதவிடாய் பெண்களுக்கு ஏற்படும் ஒருவகை இயற்கைத் தொடராகும்.

இதனைப்பற்றி கோன்மறையாம் குர்ஆனில்

ஒன்பது வயதிலேயே பெண்களுக்கு மாதவிடாய ஏற்பட்டுவிட வாய்ப்புள்ளது என்றும்

உச்சகட்டமாக ஐம்பத்தைந்து வயதுடன் அது முற்றாக நின்று விடுமென்றும்.

பிரதி மாதந்தோறும் குறைந்த பட்சம் மூன்று நாட்களும் உச்சகட்டமாக பத்து நாட்கள் வரையிலும் அது ஒலித்தோடும் என்றும், சராசரியாக ஐந்து முதல் ஏழு நாட்கள் வரை அது ஒலித்தோடும் என்றும், மூன்று நாட்களுக்குக் குறைவாக அது நின்று விட்டால் அது மாதவிடாயல்ல என்றும், அதுபோல பத்து நாட்களுக்கு மேலாக அது நீடித்தால் ஒவ்வொரு பெண்களுக்கும் வழக்கம் எத்தனை நாட்களோ அத்தனை நாட்களுக்கு மேல் ஏற்படுவது மாதவிடாயல்ல. மாறாக கூடுதல் நாட்களில் ஒலித்தோடுவது 'பெரும்பாடு' எனப்படும் சீக்குரத்தம் என்றும்.

குறைந்தபட்சம் பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை வீதம் மாதவிடாய் ஏற்பட வாய்ப்புள்ளது என்று மெல்லாம் உடற்கூறு விபரங்களை எடுத்தோதும் குர்ஆன் ஷரீப் ஒன்பது வயதிலிருந்து ஐம்பத்தைந்து வயதுவரையுள்ள பெண்களுக்கு — கற்ப முற்றிராத சாதாரணக் காலங்களில் — அவர்களின் கற்பப்பை பிளிஞ்சு விடக்கூடிய இரத்தத்திற்கே 'மாத விடாய்' என்று பெயர் என்றும் அது சிவப்பு, கருப்பு, மண்நிறம், கலங்கல்நிறம், மஞ்சள்நிறம், வெள்ளைநிறம் ஆகிய ஐந்து நிறங்களில் ஏதாவதொரு நிறத்தை உடையதாக இருக்கும் என்றெல்லாம் ஹய்ளு என்னும் மாதவிடாயைப் பற்றி விபரம் கூறுவதுடன்,

மாதவிடாய்க் காலங்களில் கணவன் மனைவியுடன் 'கூடிக் கலவுவது' முற்றாகக் கூடாது என்று தடை செய்து பெண்களின் பெண்மைக்கு மதிப்புக்கொடுத்து,

மாதவிடாய் நின்றவுடன் சுத்தமாகக் குளித்து பரிசுத் தமாகிக் கொள்ளவேண்டும் என்று சட்டம் வகுத்துக் கூறுகின்றது.

சேச்சே...இந்த அசிங்கத்தைப் பற்றி எல்லாமா குர்ஆன் ஷரீபில் கூறப்பட்டுள்ளது'' என்று அருவருப் புடன் நீங்கள் முகம் சுளிப்பதை இதோ நான் உணர் கின்றேன்.

ஆனால்; வாழ்க்கைத் திட்டமாக வல்லவனாம் அல்லாஹ்வினால் வழங்கப்பட்டுள்ள சம்பூரணமான வேதத்தில் அது பற்றிய விபரங்களும் - அந்நேரங்களில் பெண்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்ற திட்டங்களும் சொல்லப்பட வில்லையானால் அதனை வளமார் வாழ்க்கைத்திட்டமாக எப்படி ஒப்புக் கொள்ள முடியும்?

ஆகவேதான் அதுபற்றிக்கூட இவ்வளவு துலாம்பர மான விபரங்கள் - சட்டங்கள் அதில் கூறப்பட்டுள்ளது.

## குர்ஆனையோ ஆராய்ச்சிக் களமாகக் கொண்டுள்ள உடற்கூறு சாஸ்திரம்

ஏறக்குறைய 1400 ஆண்டுகளுக்கு முன்னர் உடற்கூறு சாஸ்திரம் இன்றைய அளவிற்கு வளர்ச்சி பெற்றிராத

அன்றைய கால கட்டத்தில் - மாதவிடாய் என்னும் பெருந்தொடக்கு பற்றி மீக் கூறிக் காண்பிக்கப்பட்ட வாறு குர்ஆனில் கூறப்பட்டதென்றால், மனித இதயத்தையே கூட மாற்றி வேறு இதயம் பொறுத்தி அவனை வாழவைக்கக் கூடிய அளவுக்கு - செயற்கைக் குழந்தையை உற்பத்தி செய்ய முயன்று அதில் முழுவெற்றியும் பெற்றிடும் அளவிற்கு - உச்சக்கட்டத்தை அடைந்து விட்ட உடற்கூறு சாஸ்திரம் மாதவிடாய் சம்பந்தமாக என்ன கூறுகின்றது தெரியுமா?

அது சம்பந்தமாக குர்ஆனில் கூறப்பட்ட அத்தனை விபரங்களையும் அப்படிக்கப்படியே முழுசாக ஏற்றுக் கொண்டு குர்ஆனையே தனக்குரிய ஆராய்ச்சிக் களமாகவும் ஆக்கிக்கொண்டுள்ளது என்றால் இதனைவிட, நமது புனித வேதமாகிய குர்ஆனின் கோன் நிலைக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டி இருக்கிறது.

அதே சந்தர்ப்பத்தில் வேதங்கள் என்றும் ஆகமங்கள் என்றும் கொண்டாடப்படுகின்ற வேறு எதிலாவது இது போன்ற விபரங்கள் - விளக்கங்கள் இருக்கவா செய்கின்றது?

காட்டிட முடியுமா?

## 'ஆபாசம்' என்றால் என்ன?

இன்றைக்கு நமது நாட்டில் இயங்கும் பெண்கள் சங்கங்கள் பல, ஆபாச ஒழிப்பு இயக்கம் நடத்திட முன் வந்துள்ள நல்ல செய்தி நமது காதுகளில் தேனாகப் பாய்கின்றது.

வரவேற்க மாத்திரமல்ல ஊக்குவிக்கப் பட வேண்டிய காரியம்தான் அல்லவா?

ஆனால், 'ஆபாசம்' என்றால் என்ன என்பதை தெரிந்தால் அல்லவா அதை ஒழிக்க முடியும்!

என்னவென்றே தெரியாத ஒன்றை ஒழிப்போம். ஒழிப்போம் என்று ஆண்டாண்டுகளாக அனைவருமே ஒன்று கூடிக் கூக்குரலிட்டாலும் ஆகப்போவது ஒன்றும் இல்லையே!

ஆகவே 'ஆபாசம்' என்பதற்கு எதிலாவது இலக்கணம் வகுத்துக் காட்டப்பட்டிருக்கின்றனவா என்று, நாமல்ல, நமது நாட்டில் இயங்கும் சட்டமன்றங்களும், பாராளு மன்றமும் பல முறை பல்வேறு அறிஞர்கள் கொண்ட குழுவை நியமித்துத் துருவித் துருவி ஆராய்ந்து கொண்டு இருக்கிறார்கள் பல்லாண்டுகளாக. ஆனால் எந்த ஒரு குழுவினாலும் 'இதோ இது தான் ஆபாசம்' என்று இனம் காட்டிட முடிந்ததாகத் தெரியவில்லை.

அதே சந்தர்ப்பத்தில் மற்றவர்களைவிட ஆபாசத்தை ஒழித்துக் கட்ட வேண்டும் என்பதில் நமக்கு கொஞ்சம் கூடுதல் பொறுப்பு இருப்பதால் நாமும் வேதங்கள் என்றும் ஆகமங்கள் என்றுமெல்லாம் சொல்லப்படும் நூல்களை புரட்டிப் புரட்டிப் பார்க்கிறோம்.

ஊஹூம் - அவைகளிலெல்லாம் கடுகில் கால்மாகாணி யளவு விபரம் கூட நமக்குத் தென்படவில்லை.

கடைசியாக உலகப் பொதுமறையாகிய குர்ஆனைப் புரட்டிப் பார்க்கும் போது அதில்,

ஆண்கள் தொப்புளில் இருந்து முழங்கால் வரையிலும் அவசியம் ஆடைகொண்டு மறைக்க வேண்டும். பெண்கள் முகம், இருகைகளின் மணிக்கட்டு வரையிலும் உள்ள பாகங்கள் தவிர மற்ற அங்கங்கள் அனைத்தையும் முழு சாக ஆடைகொண்டு மறைத்திருக்க வேண்டும். இதற்கு மாற்றமாக ஆண்களோ பெண்களோ ஆடை அணிந் தால் அது ஆபாசமாகும் என்றும்,

ஒரு பெண் தனது பெற்றோர், உடன் பிறந்த சகோதர சகோதரிகள் மற்றும் திருமணம் செய்து கொள் வது கூடாது என்ற நிலையிலுள்ள சொந்தக்காரர்களைத் தவிர வேற்று மனிதர்களுக்கு தனது குரலை எட்டச் செய்வது ஆபாசமாகும் என்றும்,

ஒரு பெண் தனது மேனியில், கூந்தலில் வாசனைத் திரவியங்கள் தடவி அந்த வாசனையை அவள் கணவனல்லாத மற்றவர்கள் நுகர நேர்ந்தால் அது ஆபாசம் என்றும்,

ஒரு ஆண் தனது மனைவியல்லாத மற்ற பெண்களை சபல புத்தியுடன் பார்ப்பது ஆபாசம். அதுபோல ஒரு பெண் தனது கணவனல்லாத மற்ற எந்த ஆணையும் சபல எண்ணத்துடன் பார்ப்பது ஆபாசம். ஒரு ஆண் தனது மனைவியல்லாத மற்றவர்களிடம் இச்சையைக் கிளப்பி விடத்தக்க பச்சை பேச்சுக்களைப் பேசுவது ஆபாசம். அதுபோல ஒரு பெண் அத்தகு அசிங்கமான பேச்சுக்களை தனது கணவனிடம் தவிர மற்றவர்களிடம் பேசுவது ஆபாசம். அதுபோல கணவனல்லாத மற்றவர் களின் மூலம் ஈரர்த்தமுள்ள பச்சைப் பேச்சுக்களை - பாட்டு

களை - வசனங்களைக் கேட்பது ஆபாசம் அதுபோலவே மனைவியில்லாத மற்றவர்களிடம் ஆண்கள் அத்தகு பச்சைப் பேச்சுக்களைக் கேட்பது ஆபாசம் என்றெல்லாம் ஆபாசத்திற்கு சரியான - பொருத்தமான - மனிதர்களின் கற்பைப் பத்திரப்படுத்தும் படியான இலக்கண வரம்புகளை குர்ஆனில் கூறிக் காண்பிக்கப்பட்டுள்ளதைப் படிக்கும்போது நம்மின் உச்சி முடிகளெல்லாம் ஆச்சர்யத்தால் குத்தி நின்றிடும் நிலையினை உணர்கின்றோம்.

## சுத்தம் என்றால் என்ன? அசுத்தம் என்பது எது?

இன்றைக்கு சுத்தத்தை வளர்க்கவும் அசுத்தத்தை முழுசாகப் போக்கவும் என்று சுகாதார இலாக்காக்கள் உருவாக்கப்பட்டு - மாநிலந்தோறும் சுகாதார இலாக்காவிற் கென்றே தனியானதொரு அமைச்சகம் உருவாக்கப்பட்டு - பலகோடி ரூபாய்கள் அதற்காகச் செலவிடப்பட ஆவன செய்யப்படுவதுடன்; ஒவ்வொரு மாநகராட்சி, நகராட்சி முதல் கொண்டு சாதாரணக் கிராமப் பஞ்சாயத்துகள் வரை சுகாதார அதிகாரிகள் நியமிக்கப்பட்டு - சுகாதாரம் பேணப்பட ஆவன செய்யப்பட்டு வரும் நிலை காண நமது உள்ளமெல்லாம் பூரிப்பால் துள்ளிக் குதிக்கின்றது.

காரணம் சுத்தத்தை இறைவிசுவாசத்தின் சரிபாதியாக கொண்டவர்கள் நாம். சுத்தம் இல்லாமல் செய்யப்படும் எந்த இறை வணக்கமும் முழுசாக ஏற்கப்படாமல் போவதோடு, சுத்தமில்லாதவர்களை முஸ்லிமாகவே கூட ஒப்புக் கொள்ளப்பட முடியாது.

ஆகவே சுத்தத்திற்கும் சுகாதாரத்திற்கும் இவ்வளவு பெரிய முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ள நிலை மற்றவர் களைப் பார்க்கிலும் முஸ்லிம்களான நமக்குத்தான் கூடுதல் சாதகமானதாகும்.

ஆகவே இன்றைய அரசுகளை அந்த வகையில் பெரிதும் பாராட்ட நாம் கடமைப்பட்டு உள்ளோம்.

ஆனால் சுத்தம் என்றால் என்ன, அசுத்தம் என்பது எது?

இந்தக் கேள்விக்குச் சரியான பதில் கொடுத்திட நிச்சயமாக உலகில் எவருமே முன்வர மாட்டார்கள்.

ஏனெனில் எவருக்கும் அது நிச்சயமாகத் தெரியவே தெரியாது

அதே நேரத்தில் அகிலத்தின் அற்புதப் பொதுமறை யாகிய குர்ஆன்ஷரீப் ஒன்றில் மாத்திரம்தான் அதற்குச் சரியான - உண்மையான - யதார்த்தமான பதில் இருப்ப தையும் எவராலும் மறுக்கவோ மறைக்கவோ முடியாது.

## சுத்தம், அசுத்தம் பற்றி குர்ஆன் கூறும் இலக்கணம்

மனிதர்களின் மலம், மூத்திரம், இரத்தம், அடிவயிற் றிலிருந்தது வெளிப்படும் வாந்தி ஆகியனவும்; ஆடு, மாடு, ஒட்டகம் போன்றவற்றின் சாணம், மூத்திரம், பித்துப்பையினுள் இருக்கும் பித்த நீர்; சபலத்தினால்

ஆண், பெண் அபங்களில் கசியும் - வழு வழுப்பான நீர், வெட்டைச் சூட்டினால் ஆண், பெண் அபங்களிலிருந்து கசியும் நீர்; மனிதன், மீன், வெட்டியினம் ஆகிய இம்மூன்றல்லாத - முறைப்படி அறுக்கப்படாமல் - செத்து விட்ட அல்லது கொல்லப்பட்ட உயிரினங்கள், முறைப்படி அறுக்கப்பட்டாலும் தின்பதற்கு ஆகுமாக்கப்படாத உயிரினங்கள் - அந்த உயிரினங்களின் எலும்பு, நரம்பு, தோல்வகையறாக்கள்; கள், சாராயம் போன்ற போதைப் பொருட்கள் ஆகியன பொறுக்கப்படாத (பெரிய) அசுத்தங்கள் என்றும்;

மூட்டைப், செள்ளு, கொசு, ஈசல், ஈ ஆகியவற்றின் இரத்தம்; சிலந்தி போன்ற கட்டிகளிலிருந்து தானாக உடைந்து வெளிப்படும் இரத்தம்; நாய், பன்றி தவிர மற்ற உயிரினங்களின் கொஞ்ச இரத்தம், மாதவிடாய் இரத்தம், ஈ, வௌவால் போன்றவற்றின் எச்சம். ஆகிய பொறுக்கப்பட்ட (சிறிய) அசுத்தங்கள் என்று மெல்லாம் அசுத்தங்களை வகை பிரித்துக் கூறிக் காண்பிக்கும் கோன்மறையாம் குர்ஆன் ஷரீப்;

இத்தகு அசுத்தங்களிலிருந்து துப்புரவாகிக் கொள்வது ஒவ்வொரு மனிதனின் மீதும் வாஜிபாக, அதாவது: தவிர்க்கப் படமுடியாத கட்டாயக் கடமையாக இருக்கிறது என்று எச்சரித்துக் கொண்டுள்ளது.

அஃதன்றி அசுத்தத்தின் வாடை, நிறம், சுவை ஆகிய இம்மூன்றும் நீங்கும் வரை தண்ணீரை ஊற்றி கழுவவேண்டும் அல்லது ஓடும் தண்ணீராக இருந்தால்

அசுத்தமாகி விட்ட ஆடை, அல்லது பாத்திரம் ஆகிய வற்றை அதில் முக்கிக் கசக்கி அம்மூன்று குணங்களும் மாறும் சுத்தம் செய்வதற்குரிய வரை முறைகளைக் கூட குர்ஆன் எடுத்தோதிக் கொண்டிருக்கின்றது.

(நூல் : மகானி)

அன்புடையீர்! குர்ஆனில் கூறப்பட்டுள்ள சுத்தம் அசுத்தம் பற்றிய விபரங்களில் எடுத்துக்காட்டாக மிக மிகச் சிறிய விளக்கத்தை மாத்திரமே இவண் எடுத்துக் காட்டியுள்ளேன்.

குர்ஆன் கூறும் சுத்தம் அசுத்தம் பற்றிய முழு விபரங் களையும் அசுத்தங்களை சுத்தமாக்குவதற்கு கூறப் பட்டுள்ள வழி முறைகளின்முழு விபரங்களையும் கூறிடத் தொடங்கினால் அதுவே ஒரு பெரும் புத்தகமாக மாறி விடும். அந்த அளவு முறையான - முக்கியமான - விபரங் களும் விளக்கங்களும் விரித்துக் கூறப்பட்டுள்ளன.

இப்படியான விபரங்கள், விளக்கங்கள், சுகாதாரச் சட்ட வரம்புகள் எம்மின் குர்ஆன் ஷரீபில் தவிர வேறு எதிலாவது இருப்பதாகக் காட்டிட முடியுமா?

அன்று, அல்லது இன்று, என்று மாத்திரம் அல்லாமல் இனி என்றைக்கும், எந்நாட்டவருக்கும், எந்த தட்ப வெப்பங்களில் வாழுபவர்க்கும் பொருந்தும்படியான - புரியும் படியான இத்தகு வாழ்க்கைத் திட்டங்கள் - குர்ஆன் மாத்திரம் இல்லாது இருந்திருக்குமானால் - இந்த உலகிற்கு தெரியாமலே போயிருக்குமே!

இன்னும் என்னென்ன வேண்டும்?

குற்றவியல் சட்டம் வேண்டுமா?

பொருளியல் திட்டம் வேண்டுமா?

அறிவியல் வேண்டுமா, அரசியல் வேண்டுமா? அறத்தியல் வேண்டுமா, அருளியல் வேண்டுமா, எது வேண்டும்?

அத்தனையுமே அகிலத்தின் பொது மறையாகிய எம்மின் குர்ஆனில் மாத்திரமே தெளிவாக - திட்டவட்டமாக - வாழ்க்கை நிலைகளுக்குப் பொருந்தும்படியாக - இயற்கை அம்சங்களுடன் இணைந்ததாக் கூறப்பட்டுள்ளது.

இத்தகு உன்னத வாழ்க்கை வழி காட்டியான அந்த வேதம் உலகில் வெளிப்படுத்தப்பட்ட அதிசயங்களிலேயே - முஃஜிஜாக்களிலேயே-தன்னிகரற்றதோர் அதியுன்னதமான அதிசயம் என்பதில் இரு கருத்துக்கள் இருந்திட முடிந்திடுமா?

இத்தகு அதியுன்னதமான - உலகம் உள்ள வரையிலும், உலகில் உயிரினம் உள்ளவரையிலும் நின்று நீள் பயன் கொடுத்திட வல்ல அற்புதத்தைக் கொடுக்கப்பட்ட உத்தமத் திருநபிகளாரை மிகைத்திட, மிஞ்சிட வேறு எவருக்குத் தகுதியுண்டு?

ஆகவே; அற்புதங்கள்தான் ஒருதீர்க்கதரசியின் உயர்வுக்கு 'உரைகல்' என்று வைத்துக்கொண்டாலும் கூட குர்ஆன் என்ற இந்த அற்புதம் ஒன்று மாத்திரமே நபிகளாரை மற்ற அனைவரையும்விட உச்சாணிக்கு உயர்த்திக் காட்டிட போதுமான அத்தாட்சி என்பேன்.

இது இவ்வாறிருக்க;

அண்ணலெம்பெருமான் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் நம்மின் காலமான இந்தக்கால மக்களுக்கும் வழிகாட்டி அல்லவா?

நம்மவரின் இந்தக்காலம் விஞ்ஞானக் காலம், நிலா வில் உலா வரும் காலம்.

அதிவேகக் ராக்கட்டுகள் அங்குமிங்கும் அதிவேகமாகச் சென்று கொண்டிருக்கும் அதியற்புதக்காலம்.

ஆகவே நமது நபிகளாரின் மூலம் இன்றைய விஞ் ஞானக் கலையை பின்னணியாகக் கொண்ட முஃஜிஜாக் களும் வெளிப்பட்டு இருக்கின்றன.

## முஃஜிஜா வும் விஞ்ஞானமும்

விண்வெளியில் சென்று நிலாவில் உலா வருவது விஞ் ஞானமென்றால்,

எங்களின் ஏந்தல் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் அந்த நிலாவையே கீழே இறங்கி வரச் செய்து அதனை தங்களின் தளிர் கரங்களில் உலா வரச்செய்தது முஃஜிஜா வாகும்.

கணநேரத்தில், பல லட்சம் மைல்களைக் கடந்து சென்று திரும்பக் கூடிய ராக்கட்டுகள் விண்கலங்கள் விஞ் ஞானக் கண்டுபிடிப்புகள் என்றால்,

மூடி முளிக்கும் நேரத்திற்குள்ளாக விண்மண்டலங்கள் -கிரகங்கள் அனைத்தையுமே கடந்து சென்று இறை தரிசனம் பெற்றுத் திரும்பிய மிஃராஜ் பயணம் முஃஜிஜா வாகும்.

அதிசயிக்க வைக்கும் ஆப்ரேசன்களும், மருத்துவங் களும், மனநோய் சிகிச்சைகளும் விஞ்ஞானப் புதுமைகள் என்றால்,

உமிழ் நீரால் விஷம் இறங்கியதும், கோரமாக இறந்து பட்ட அப்துல்லாஹிப்னு ஜாபிர் (ரலி-அன்ஹு) அவர்களின் இரு குழந்தைகள் மீண்டும் உயிர் பெற்று மீண்டதும், வெட்டப்பட்ட கை மீண்டும் பொருதிக் கொண்டதும் நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் மூலம் வெளிப் பட்ட முஃஜிஜாப் புதுமைகளாகும்.

இப்படி

எல்லாக் காலகட்டங்களில் ஒளிரும் எல்லாக் கலைகளையும் உள்ளடக்கிய முஃஜிஜாக்கள் நமது நபிகளார் அவர்களின் மூலம் வெளிப்பட்டு முடிந்து விட்டன.

நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் கடைசி நபி என்பதால் நபிப்பதவி அவர்களோடு முற்றுப்பெற்று விட்டது.

ஆனால், புதுமை வெளிப்பாடு தொடர்கின்றது. 'முஃஜிஜா' என்ற பெயரில் அல்ல. 'கராமத்' எனும் மறு பெயரில், காரணம் நபிமார்களின் மூலம் வெளிப்படும் புது மைகளுக்குத்தானே முஃஜிஜா என்று பெயர் அதனால்.

## கராமாத் எனும் புதுமைகளின் விபரம்

இறை நேசர்களான அவ்லியாவுல்லாக்களின் மூலமும் புதுமைகள் வெளிப்படும்.

அவ்லியாக்களின் மூலம் வெளிப்படும் அத்தகு புதுமை களுக்கு 'கராமாத்' என்று பெயராகும்.

அவ்லியாக்கள் உள்ளனரா?

ஆம், நிச்சயமாக அவ்லியாக்கள் அன்றும் இருந்தனர் இன்றும் இருக்கின்றனர். என்றும் இருந்து கொண்டே இருப்பர். அவர்கள் இல்லாது போனால் அகிலத்தின் இயக் கமே ஸ்தம்பித்து விடும்.

யார் அவ்லியாக்கள்?

அவ்லியாக்கள் இருக்கின்றனர் என்பது உண்மையே தவிர, அவர்கள் யார் என்பது யாருக்கும் தெரியாது. காரணம், நபி ரசூல்மார்களுக்கு அத்தாட்சி இருந்தது போன்று, அவ்லியாக்களுக்கு அத்தாட்சிகளேதும் இருந்திட வில்லை. ஆனால் சிலபல அறிகுறிகள் இருந்திடும்.

கராமாத்துகள் அவ்லிய்யாக்களின் சின்னங்களா?

அவ்லிய்யாக்களின் மூலம் வெளிப்படும் புதுமைகளுக்கு 'கராமாத்' என்று பெயரே தவிர, அதற்காக அவ்லிய்யாக் கள் அனைவருக்கும் கராமாத் ஏற்பட வேண்டும் என்ற நிர்ப்பந்தம் ஏதுமில்லை. அது அவ்லிய்யாக்களுக்குரிய சின்னமுமல்ல. புதுமைகள் வெளிப்படுவர்கள் அனைவரும் அவ்லிய்யாக்களும் அல்லர்.

தனக்கு புதுமைகள் ஏற்படுவதாகக் கூறிக் கொள்ளும் நபர்களை அவர்களில் வெளிப்படும் புதுமைகளை மாத்திரம் அளவு கோலாகக் கொண்டு 'அவ்லியாக்கள்' எனக் கொண்டாடுவதும் அபத்தத்திலும் அபத்தமாகும்.

## அவ்லியாக்கள் மூலம் வெளிப்பட்ட 'கராமாத்'கள்

வலிகள் கோமான் என்றறியப்படும் குத்புல் அக்தாப் முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (குத்திஸ - ஸிர்ருஹு) அவர்களின் மூலம் வெளிப்பட்ட,

மரணித்து கல்லறையில் அடக்கம் பெற்று மண்ணோடு மண்ணாக மக்கிப்போன கிருத்துவக் கவிஞர் உயிர் பெற்றெழுந்த புதுமையும்,

கொள்ளையர்களால் வழி மறிக்கப்பட்ட நல்லடியார்களைக் காப்பாற்றும் பொருட்டு அப்பெருந்தகையின் காலணி பறந்து சென்ற புதுமையும்,

கொடுங்காற்றின் கொடுமையால் கடல் பொங்கி ஆர்ப்பரிக்கும்போது அதில் அகப்பட்ட கப்பல் கௌது நாயகத்தின் உத்திரவால் பத்திரமாகக் கரைசேர்ந்த புதுமையும் நம்மின் ஏகதெய்வ நம்பிக்கையினை ஊக்குவிக்கும் இறைவனது வல்லபங்களாகும்.

அதுபோன்றே,

அஜ்மீர் குவாஜா முஈனுத்தீன் ஜிஸ்தி (ரஹ்) அவர்களின் மூலம் வெளிப்பட்ட கராமாத்துகளும்.

நாகூர் ஷாகுல் ஹமீது (ரஹ்) ஆண்டகையவர்களின் மூலம் வெளிப்பட்ட கராமாத்துகளும்,

ஏர்வாடி பாதுஷாநாயகம் சைய்யிது இப்றாஹீம் ஷஹீத் (ரஹ்) அவர்களின் மூலம் வெளிப்பட்ட புதுமைகளும் இன்னபிற இறைநேசர்களின் மூலம் வெளிப்பட்டதாக அறியப்படும் மற்ற மற்ற புதுமைகளும் தவ்ஹீதையும், தவக்குலையும், தஃபக்குரையும் வளர்க்கும் அல்லாஹ்வின் வல்லமைகளாகும்.

## 'மஊனத்' எனும் புதுமைகளின் விபரம்

நபிமார்களின் மூலம் வெளிப்படும் புதுமைகளுக்கு முஃஜிஜாக்கள் என்றும்.

வலிமார்களின் மூலம் வெளிப்படும் புதுமைகளுக்கு 'கராமாத்' என்றும் விபரங்கள் அறிந்தோம்.

ஆனால் சிலநேரங்களில் 'வலி' என்று சொல்ல முடியாத, ஆனால் நல்லடியானாக வாழ்ந்திடும் சாதாரண முஸ்லிம்களின் மூலமும் சில பல புதுமைகள் வெளிப்படும்.

அங்ஙனம் சாதாரண முஸ்லிம்களின் மூலம் வெளிப்படும் புதுமைகளுக்கு 'மஊனத்' என்று பெயர்.

இன்றைக்கும் கூட அவ்வப்போது ஆங்காங்கே சர்வசாதாரணமான அப்பாவி முஸ்லிம்களின் மூலம் அதிசயிக்கத் தகுந்த சில காரியங்கள் நிகழ்ந்திடுவதாக

கண்டும் கேட்டும் வருகின்றோமல்லவா? அவைகளெல்லாம் இந்த 'மஊனத்' வகையினைச் சார்ந்தவைதான்.

இங்ஙனம் அபூர்வச் செயல் வெளிப்படும் ஒரே காரணத்தாலேயே அவன் மெச்சத் தகுந்த முஸ்லிம் என்றோ 'சொர்க்கவாசி' என்றோ 'நல்லடியான்' என்றோ சொல்லிவிட முடியாது. கொண்டாடவும் கூடாது.

## பத்தாம் பசலித்தனம்

நற்குணம், சுயநலமற்ற பரந்த மனப்பான்மை, ஏற்ற தாழ்வற்ற பொது நோக்கு, எல்லாவற்றிற்கும் மேலாக பர்ளு, சுன்னத் போன்ற கிரியைகளில் விடாப்பிடியான - அழுத்தமான அமல், தீனுக்காக எப்போதும் எதனையும் தியாகம் செய்யச் சித்தமாகுதல் போன்ற நற்கிரியைகளாலேயே ஒவ்வொரு முஸ்லிமும் அல்லாஹ்வின் பேரருளிற்கு உரித்தாக முடியுமே தவிர, ஒருவரிடம் மீக்கூறப்பட்ட விபரப்படி மஊனத் எனும் புதுமைகள் வெளிப்பட்டதாலேயே அவர் வெற்றிவாகை சூடிவிட்டார் எனக் கருதுவது வடிகட்டிய பத்தாம் பசலித்தனமாகும்.

## இஸ்தித்ராஜ் - இஹானத் எனும் புதுமைகளின் விபரங்கள்

முஃஜிஜா, கராமாத், மஊனத் போன்ற புதுமைகளையும் விபரங்களையும் அதன் தாரதம்மியங்களையும் தெரிந்து கொண்டபின் 'இஸ்தித்ராஜ் - இஹானத்' எனும் சில

கசப்பான புதுமைகளைப் பற்றி தெரிந்து கொள்ளப் போகின்றோம்.

இந்த வகைப் புதுமைகள் கசப்பானவைதான்.

இதைப் படிக்கும்போதே சிந்தனை எப்படி எப்படியோ சுழலத்தான் செய்திடும்.

அல்லாஹ்வின் வல்லபங்களைப் பற்றி உரிமையுடன் கூடிய சந்தேகங்கள் எழத்தான் செய்திடும்.

ஆனாலும் இறை நம்பிக்கையை வைரம்பாயச் செய்து இதனையும் ஜீரணிக்கத்தான் வேண்டும் என ஆரம்பத்தி லேயே உணர்த்திடக் கடமைப்பட்டு உள்ளேன்.

## காபிர்களின் மூலமும் புதுமை வெளியாகும்

காபிர்கள், முஷ்ரிக்குகள், யூதர்கள், கிருத்தவர்கள், நாத்திகர்கள் போன்ற மாற்றார்களின் மூலம் வல்லவனாகிய அல்லாஹ் சிலபல நேரங்களில் சிலபல புதுமைகளை- அபூர்வச் சம்பவங்களை - அதிசயங்களை வெளியாக்கு கின்றான்.

[சுப்ஹானல்லாஹ்......லா ஹவ்ல, வலா குவ்வத்த, இல்லா பில்லாஹ்!]

இங்ஙனம் மாற்றார்களின் மூலம் வெளிப்படும் புதுமை களை இரண்டு வகையாக வகைப்படுத்தப்படுகின்றன.

தனது வாதத்தை, அல்லது; சவாலை மெய்ப்பிப்பதற்காகச் செய்து காட்டும் புதுமை ஒருவகை.

இந்த முதல்வகைப் புதுமைக்கு 'இஸ்தித்ராஜ்' என்று பெயர்.

வாதப்பிரதிவாதங்களோ சவால்களோ ஏதுமின்றி திடீரென மாற்று மத சகோதரர்களில் வெளிப்படும் புதுமை இரண்டாம் வகை.

இந்த இரண்டாம் வகைப் புதுமைக்கு 'இஹானத்' என்று பெயர்.

## 'இஸ்தித்ராஜ்' எனும் புதுமைக்கு எடுத்துக்காட்டு

இப்லீஸ் (சாத்தான்) அல்லாஹ்வினால் சபிக்கப்பட்டவன் என்பது வெள்ளிடைமலை. அல்லவா?

இவன் தெய்வத் தீர்க்கதரிசியான நபி அய்யூபு (அலை) அவர்களைப் பற்றி பொறாமைக் கொள்கின்றான்.

'கணக்கிலடங்காத செல்வங்கள் அவருக்கு இருப்பதாலேயே அவர், அல்லும் பகலும் அனவிரதமும் அல்லாஹ்வை வணங்கி வழிபடுவதில் திளைத்திருக்கின்றார்''. என்றும்

''மற்ற சாதாரண ஜனங்களைப் போல அவரும் ஏழையாக இருந்தால் இந்த அளவு தியானங்களில்-வணக்க வழிபாடுகளில் மூழ்கிட மாட்டார்'' என்றும் வாதிக்கின்றான்.

''அப்படியல்ல

அவர் எப்படி இருந்தாலும் இதே நிலையில் இருந்திடுவார்'' என்று சொல்லப்படுகின்றது.

''பொய்...சுத்தப்பொய்-

நிச்சயமாக அய்யூபுநபி(அலை)ஏழையாக-எளியவராக இருந்தால் இப்படி சதா சர்வ காலமும் தொழுகை, நோன்பு, திக்ரு, ஃபிக்ரு என ஈடுபடவே மாட்டார்''

என இப்லீஸ் சாதிக்கின்றான்.

வாதத்திற்கு மருந்து உண்டு.

ஆனால் பிடிவாதத்திற்கு...?

ஆனாலும் உண்மை நிலையை உலகுக்கு உணர்ந்திட வேண்டுமே! அல்லவா?

ஆகவே அந்த அற்பனான இப்லீஸ் லயீனிற்கு சில சக்திகளை வழங்குகின்றான் வல்ல அல்லாஹ்.

வல்லவனிடம் பிச்சையாகப் பெற்று வந்த அந்த சக்திகளைக் கொண்டு நபிஅய்யூபு (அலை) அவர்களின் வாழ்க்கையில் விளையாடத் தொடங்கினான் அந்த பொல்லாப் புலையன்.

## ஹழ்ரத் அய்யூபு (அலை) அவர்களுக்கு ஏற்பட்ட கடுஞ்சோதனைகள்!

அவர்களது வயல் வெளிகள், நிறைகதிர்களோடு கொஞ்சிக் குலாவிக்கொண்டு நிற்கின்றன.

மாடுகட்டிப் போரடித்தால் மாளாது என்று யானை கட்டிப் போரடித்த கதைகளை இங்கே - நம் தமிழகத்தில் நடந்ததாகக் கேள்விப்பட்டு இருக்கின்றோம்.

ஆனால் ஆயிரமாயிரம் யானைகள் கட்டி போரடித்தாலும் அய்யூபு நபி (அலை) அவர்களின் போர் மாளாதாம்.

அந்த அளவிற்கு விளைந்து போயிருந்த அந்த விளை நிலங்களின் பக்கம் வந்த இப்லீஸ் தனது சுவாசத்தை அவைகளில் ஊதுகின்றான்.

அனைத்து நிலங்களும் குபுகுபுவென தீப்பற்றி எரிந்து கறிந்து சாம்பலாகி விடுகின்றன.

எல்லாம் மூடிமுளிக்கும் நேரத்திற்குள்ளாக நடந்து முடிந்து விட்டது.

ஓடுகின்றான் அய்யூபு நபியிடம் - நல்ல விசுவாச வேலையாளைப்போல பதை பதைக்க ஓடி வந்த-இப்லீஸ்,

"...முதலாளி ... மோசம் போய் விட்டோம் முதலாளி..." எனக் கூக்குரலிடுகின்றான்.

ஆனால் நபி அய்யூபு (அலை) அவர்கள் அந்நேரம் தொழுகையில் மூழ்கி இருக்கிறார்கள்.

சாதாரணமான நேரங்களில் போல இப்பவும் ரசனையோடு தொழுது முடித்து விட்டு அதற்குபின் விபரம் கேட்கிறார்.

விபரங்களைக் கூறுகின்றான்.

அதனைக் கேட்டவுடன் அலறுவார் - உளறுவார்- அல்லாஹ்வே ஈவு இரக்கம் உனக்கு இல்லவே இல்லையா...! அல்லும் பகலும் அல்லாஹ் - அல்லாஹ் என உன்னையே நினைத்து நினைத்து நெஞ்சம் நெக்குறுகிக் கொண்டிருந்த எனக்கா இக்கதி...? என்றெல்லாம் புலம்புவார் அவர் என்பது அவனது கணிப்பு.

ஆனால் அதனைக் கேட்டு "அல்ஹம்து லில்லாஹ்..." என அல்லாஹ்வைப் புகழுகின்றார் நபி அய்யூப் (அலை) அவர்கள்.

தோல்வி இப்லீசின் உள்ளத்தைச் சுருக்கென்று தைக்கின்றது.

ஆனாலும் முடங்கி உட்கார்ந்து விடவில்லை அவன் மீண்டுமொரு முயற்சி செய்கின்றான்.

அய்யூபு நபி (அலை) அவர்களின் பிள்ளைகனியமுது கள் அனைவரும் திடுகூறாக விபத்திற்குள்ளாகி இறந்து படுகின்றனர். அந்த இப்லீஸ் லஈனின் சாகசத்தால்.

அதனைக் கேள்விப்பட்டபோதும் அய்யூபுநபி கலங்க வில்லை. அல்லாஹ்வை நிந்திக்கவுமில்லை. வணக்க வழிபாடுகளில் இம்மியும் குறை வைக்கவுமில்லல.

எப்போதும் போலவே இறை தியானத்தில் திழைத் திடுகின்றார்.

மீண்டும் இப்லீஸ் லஈனுடைய சாகசம் விளையாடு கின்றது,

கோடீஸ்வர பிரபுவாக வாழ்ந்த அந்தக் கொள்கைக் குன்று கோவணாண்டியாக ஆக்கப்படுகின்றார்.

அப்போதும் அசைந்து கொடுக்கவில்லை அந்த அருளாளர்.

மீண்டும் விளையாடுகின்றான், அவன்.

பொன்நிறப் பூமேனிக்குச் சொந்தக்காரரான பூமான் அய்யூப் நபி அவர்களின் பொன்மேனி முழுவதும் புண் மேனியாகி புழுத்து வடிகின்றது.

பொறுமை வருமா நமக்கு...?

பொறுமி, உறுமிப் புழுங்கிப் போவோம் நாமாக இருந்தால்.

ஆனால் காய்ச்சக் காய்ச்ச சுத்தத் தங்கம் சொக்கத் தங்கமாக உயர்ந்து உயர்ந்து வருவதே போல,

சோதனையின் வேகம் கூடக்கூட சாதனைக்காரரான அய்யூப்நபி அவர்களின் இபாதத்துக்கள் கூடிக்கூடி வந்தனவே தவிர குறையவோ கூர் மழுங்கவோ இல்லை.

மீண்டும் விளையாடுகின்றான் அந்த மோசக்காரன்.

ஊருக்குள் ஒரே பரபரப்பு.

''அய்யூபை இனியும் இங்கே விட்டு வைத்தால் அனைவரையும் அந்தத் சீதாத்து நோய் பிடித்துக் கொள்ளும்'' என ஊரார் அனைவரும் கூடிப்பேசி அவரை இன்றே ஊரைவிட்டு வெளியேறி விடவேண்டும்'' என ஏகோபித்த முடிவெடுத்து, அதனை அய்யூபு நபி(அலை)

அவர்களின் துணைநல்லார் ரஹீமா அமையாரிடம் தெரிவிக்கின்றனர்

அம்மையார் எவ்வளவோ மன்றாடி கொஞ்சம் தவணை கேட்கின்றார்.

''முடியாது. இப்போதே உடனுக்குடன் வெளியேற்றி யாக வேண்டும். இல்லாவிட்டால் நாங்கள் அனைவரும் சேர்ந்து வெளியேற வைப்போம்'' என தங்களின் முடிவான முடிவை அம்மையாரிடம் எடுத்துக்கூறி எச்சரிக்கின்றார்கள்.

வேறு வழியின்றி,

அழுகி கொழகொழத்துப் பழம்போல ஆகி விட்ட தனது கணவர் அய்யூபு நபியை இலை கொளைகள் பரப்பப்பட்டதொரு கூடையில் வைத்து, தனது தலையில் சுமந்துகொண்டு, அவ்வூரைக் காலிசெய்து-மனித சஞ்சாரம் கொஞ்சம்கூட இல்லாத - ஒரு காட்டிற்குள் தஞ்சம் புகுகின்றார் அன்னைநல்லார் ரஹீமா அம்மையார்.

ஒரு மனிதனுக்கு இதனைவிடக் கேவலம் வேறு என்ன வேண்டும்.

இப்படி கேவலமான கேவலத்திற்கு உள்ளாக்கப்பட்ட அந்த கடைசி கட்டத்திலாவது இறைநேசச் செல்வர் அய்யூபு நபி (அலை) அவர்கள் தங்களது ஆரம்பநிலையினை கொஞ்சமாவது மாற்றினார்களா?

இல்லை, இல்லை. இல்லவேயில்லை.

மாறாக,

முன்பு இருந்ததைவிட இப்போது அதிகமதிகம் இறை தியானத்தில் மூழ்கித் திளைக்கின்றார்.

எந்த நேரமும் திக்ரு.

எந்த நேரமும் தொழுகை என

எந்த நேரமும் எஜமானர்களுக்கெல்லாம் எஜமானாகிய இறைவனுக்கு நன்றிக் கடன் செலுத்துவதில் பேரின்பம் கண்டு வருகின்றார்.

சுப்ஹானல்லாஹ்! எவ்வளவு பொறுமை பார்த்தீர்களா?

இனியும் அவரைச் சுண்டிப்பார்க்க வேறு என்ன இருக்கின்றது.

ஆகவே இப்லீஸ் லஈன் தனது முழுத்தோல்வியை ஒப்புகின்றான்.

அய்யூபு நபி (அலை) அவர்கள் வல்ல அல்லாஹ்வை வணங்கி வழிபட்டதற்கு செல்வம் செல்வாக்குபோன்ற செருக்குகள் காரணமல்லவே அல்ல.

அவரது தியானம் மனப்பூர்வமானது

அவரது தொழுகை மனப்பூர்வமானது

அவரது நோன்பு மனப்பூர்வமானது

அவரது ஹஜ்ஜு மனப்பூர்வமானது

அவரது ஃபிக்ரு மனப்பூர்வமானது என்பதை இப்லீஸ் லஈன் எனும் அந்த ஈனப் பிறவியால் ஒப்புக்கொள்ளப் படுகின்றது.

ஆகவே சோதனை, சாதனையாக மாறுகின்றது.

இழந்த அனைத்துச் செல்வங்களும் மீளுகின்றது.

அல்ஹம்து லில்லாஹ்... அல்ஹம்து லில்லாஹ்... அல்ஹம்து லில்லாஹ்.

## வெற்று வேட்டுகளைக் கண்டு விரக்தி கொள்ளவேண்டாம்

பேரன்புடையீர்!

பொறுமைக்கும் சகிப்புத் தன்மைக்கும் நிலைகளனாகத் திகழும் ஹஜ்ரத் ஆய்யூபு நபி (அலை) அவர்களது இந்த வரலாற்றை கொஞ்சம் சீர்தூக்குகிப்பாருங்கள்.

அமைதியான அவர்தம் வாழ்க்கையில் இத்தனை இத்தனை சோதனைச் சூறாவளிகள் உருவாகக் காரணஸ்த்தன் யார்?

மனித சமுதாயத்தின் ஒட்டுமொத்த விரோதியும் ஏக வல்லவனாம் அல்லாஹ்வின் பகைவனுமாகிய இப்லீஸ் லஈன் தான். அல்லவா?

அந்த இப்லீஸ்லஈன் தனது சுவாசத்தை ஊதிய மாத்திரத்தில் பச்சைப் பசுமையான வயல்வெளிகள் எல்லாம்

தீப்பற்றி எரிந்து சாம்பலானது என்றால் அஃதொரு புதுமையல்லவா?

கொஞ்சமும் அப்பழுக்கற்ற அய்யூப்நபி அவர்களின் பூமேனியில் அவன் தனதுசுவாசத்தை ஊதியவுடன் புண்பட்டுப் புழுத்து வடியத் தொடங்கியதென்றால் அஃதொரு புதுமையிலும் புதுமையல்லவா?

இப்லீஸ் லஈன் நினைத்த மாத்திரத்தில் பூமி அதிர்வு ஏற்பட்டு அது அய்யூபு (அலை) அவர்களது வீட்டை மட்டும் தகர்க்கவும், அதனால் அவர்களது அந்த வீடு இடிந்து வீழ்ந்து அந்த, இடிபாடுகளுக்கிடையில் அய்யூப் அவர்களது பிள்ளைகள் அனைவரும் சிக்கி மாண்டு மடிந்தார்களென்றால் அஃதுவும் புதுமைதானே?

இப்படியெல்லாம் புதுமைகள் அவனில் வெளிப்பட்டது என்றால் அவனுக்கென்று விசேசமான ஆற்றல் ஏதேனும் உண்டா?

இல்லை. நிச்சயமாக இல்லை.

அல்லாஹ்தான் அந்த ஆற்றலை அவனுக்கும் பிச்சைபோட்டான்,

இந்நிலை எப்படி உருவானது?

அல்லாஹ்விடமே அந்த இப்லீஸ் வழக்கடித்தான்.

அய்யூபுநபி ஏழையாக - பஞ்சையாக - பராரியாக ஆக்கப்பட்டு விட்டால் அவர் நிச்சயம் அல்லாஹ்விற்கு நன்றி கொன்றவராக ஆகிவிடுவார் என சவால் விட்டான்.

அந்த சவாலின் அடிப்படையிலேயே இப்லீஸின் மூலம் அய்யூப்நபி அவர்களுக்கு இத்தகு கொடுமையிலும் கொடுமையான சோதனை வெளிப்பட்டது.

அல்லவா?

இப்படி அல்லாஹ்விற்கு மாறு செய்பவர்கள் சவால் விட்டு, அவர்களின் மூலம் அந்த சவாலின் அடிப்படையில் புதுமைகள் வெளிப்பட்டால் அத்தகு புதுமைகளுக்கு 'இஸ்தித்ராஜ்' என்று பெயர்.

இப்லீஸின் மூலம் மட்டுமல்ல.

எத்தனை எத்தனையோ காபிர்களின் மூலம்,

எத்தனை எத்தனையோ கிருத்துவர்களின் மூலம்,

எத்தனை எத்தனையோ முஷ்ரிக்குகளின் மூலம்,

எல்லாம் இத்தகு இஸ்தித்ராஜ் - புதுமைகள் வெளிப்பட்டதாக அனந்தம் வரலாறுகள் உண்டு.

ஆனால் ஒன்று.

இந்த இஸ்தித்ராஜ் புதுமைகளால் நல்லடியார்களான முஃமின்களுக்கு - முஸ்லிம்களுக்கு ஆரம்பத்தில் சோதனைகள் ஏற்பட்டாலும்! அதன் முடிவு - ஹஜ்ரத் அய்யூபு நபி (அலை) அவர்களுக்கு ஏற்பட்டது போல - முஃமின்களுக்கு - முஸ்லிம்களுக்கு மிகப்பெரிய வெற்றியாகவே அஃது இருந்திடும் என்பது திண்ணமாகும்.

காபிர்கள், முஷ்ரிக்குகள் கிருத்துவர்கள் போன்ற மாற்று அணியில் உள்ளவர்களின் மூலம் இன்றைக்கும்

இன்றைக்கும் கூட 'இஸ்தித்ராஜ்' எனும் இத்தகு புதுமை கள் ஏற்படலாம், ஏற்படுகின்றது.

ஆகவே,

நம்மவர் அதனைப் பார்த்து "ஆஹா! பேஷ் பேஷ்" என அதிசயிக்கவோ,

"இவர்கள் இப்படிப் புதுமைகள் செய்வதால் இவர்களது பல தெய்வகக்கொள்கை சரியானதாக இருக்குமோ" என சலனங்களுக்கு உள்ளாவதோ',

"இவர்களுக்கெல்லாம் இத்தகு ஆற்றல் தருமோ" என ஆ'பாசப்படுவதோ கூடாது என எச்சரிக்கப்பட்டுள்ளது.

இதனால் இத்தகு காரியங்களை நம்மவர் கண்டு கொள்ளாமல் இருந்திடுவதே சாலச்சிறந்ததாகும்.

கருணைக் கடலான வல்ல ரஹ்மான்,

இந்தகு வெத்துவேட்டுகளில் மதிமயங்கி விடாமல் நம்மனைவரையும் பாதுகாத்து ஈமானை கெட்டியாக ஆக்கி அருள்வானாகட்டும்.

## "இஹானத்" எனும் புதுமைக்கு எடுத்துக்காட்டு

வல்லவனாம் அல்லாஹ்விடம் உரையாடி வேதக் கட்டளை பெற்றுவர மூஸா (அலை) அவர்கள் சென்ற தற்குப் பின்னர் 'ஸாமிரி' எனும் தட்டான் தங்கத்தால் கன்றுக்குட்டியின் சிலையொன்றைச் செய்து, அதனை

நிஜ மாடு போலவும் ம்மா...... ம்மா...... என சப்த மிடவும் செய்துவிடுகின்றான்.

இந்த அலங்கோலத்தை அல்லாஹ் தனது திருமறையி லேயே சொல்லிக் காட்டுகின்றான் பாருங்கள்:

"(தன்' இறைவனிடம் உரையாட மூஸா சென்றதற்குப்) பின்னர் மூஸாவுடைய மக்கள் தங்களின் ஆபரணங்களைக் கொண்[டு ஸாமிரி எனும் தட்டானால் செய்யப்பட்)ட கன்றுக் குட்டியின் சிலையை(த் தெய்வமாக) எடுத்துக் கொண்டார்கள். அதற்கு (மாட்டின் சப்தத்தைப் போன்ற) சப்தமிருந்தது..."

(குர்ஆன் 7, 418)

பேரன்புடையீர்!

ஸாமிரியின் சாகசத்தைப் பார்த்தீர்களா?

அவன் செய்தது, என்ன சாதாரணக் காரியமா?

தங்க விக்ரகத்தை சப்தமிடச் செய்வது சாமானியர் களால் முடிந்திடுமா?

இத்தகு புதுமையான புதுமை ஸாமிரி எனும் வங்காஃபிர் மூலம் வெளிப்பட்டுள்ள தென்றால் அதற்குப் பெயர் தான் 'இஹானத்' என்பதாகும்.

இஃதன்றி;

ஹனுமான் சஞ்சீவி மலையை ஒரே கரத்தில் தூக்கிக் கொண்டு பறந்து சென்றதாகவும்;

அகத்தியருடைய கூஜாவை காக்கை உருவெடுத்து வந்த சிவபெருமான் கவிழ்த்துவிட அஃது காவேரியாகப் பெருக்கெடுத்து ஓடியதாகவும்;

அனைத்து வரங்களும் வேண்டி வேண்டிப் பெற்ற அசுரன் தனக்கு வரம் தந்தருளிய சிவபெருமானையே அழித்தொழிக்கும் நோக்குடன் வெருட்ட - சிவபெருமான் பயந்து ஓடு ஓடென ஓட - இந்த தர்மசங்கடமான நிலையினைக் கண்டு மனம் கேளாத கிருஷ்ணபரமாத்மா நன்றி கொன்ற அந்த அசுரனை இடைமறித்து, லீல விநோதங்களில் மதிமயங்கச் செய்து, அவனை அழிந்து படச் செய்திட்ட பின்னர், பெண் உருவெடுத்திருந்த அந்தக் கிருஷ்ணபரமாத்மா மீது மோகம் கொண்ட சிவபெருமான், பெண்ணுருவக் கிருஷ்ணனுடன் கலவிட அதனால் உடனுக்குடன் ஐயப்பன் பிறந்ததாகவும் உள்ள இதிகாசங்களும்,இன்னம் இதுபோன்ற புராணக் காதைகளையும் ஹிந்து சகோதரப் பெருங்குடிகள் நம்புகின்றார்கள் அவைகளுக்குப் புனிதம் கற்பிக்கின்றார்கள். அல்லவா?

அதில் நமக்கு எவ்வித விருப்போ வெறுப்போ நிச்சயமாகக் கிடையாது.

ஆனால் முஸ்லிம்களாகிய நம்மவர் அவைகளையும் அவை போலவுள்ளவைகளையும், நம்பி கொண்டாடவும் வேண்டாம். மறுத்துப் பேசவும் வேண்டாம், என்பதே நம்மின் கொள்கையாகும்.

ஆதலால் 'இஹானத்' என்ற வகையிலோ அல்லது 'இஸ்திஹ்ராஜ்' என்ற வகையிலோ அந்தப்புராணப் புதுமை

களை கொள்ளவேண்டும். அதற்கு மேலாகவோ கீழாகவோ அஃதினை விமரிசிப்பது கூடாது.

இன்றுங்கூட வலீந்துக்களின் மூலமும், கிருத்துவர்களின் மூலமும், மற்றுமுள்ளவர்களின் மூலமும் வியத்தகு புதுமைகள் தெய்வீக சக்திகள் வெளிப்படுவதாக தினம் விளம்பரப் படுத்தப்பட்டு வருகின்றன. அல்லவா?

நம்மவர் அவைகளில் மிகமிக எச்சரிக்கையாக இருந்திட வேண்டும்.

அவைகளை கேள்விப்பட்டு அல்லது நேர்முகமாகக் கண்டு ஆயாசப்படுவதோ அல்லது அருளாளர் என அவர்களைக் கொண்டாட முற்படுவதோ நிச்சயமாகக் கூடாது.

காரணம்: மாற்றார்களின் மூலமும் புதுமைகள் வெளிப் பட முடியும் என்பது நமது கொள்கையாகும்.

அதே நேரத்தில் புதுமைகள் வெளிப்படும் ஒரே காரணத்திற்காக அவர்களது கொள்கை, கொள்ளத்தக்கது என ஏற்றிப் போற்றிட மார்க்கத்தில் இம்மியும் இடமில்லை.

## ஒற்றுமை வேற்றுமைகள்

முஃஜிஸா, கராமாத், மஊனத் எனும் நம்மவர்களின் மூலம் ஏற்படும் புதுமைகள் ;

ஏகதெய்வக் கொள்கை கோட்பாடுகளை ஊர்ஜிதப் படுத்தக் கூடியதாகவும்,

விஞ்ஞான வெளிப்பாடுகளுக்கு முன்னோடியாகவும், பகுத்தறிவுச் சிந்தனைகளுக்கு விருந்தாகவும்,

அல்லாஹ்வின் வல்லமைகளை அடியார்களுக்கு உணர்த்தக் கூடியதாகவுமே அமைந்திடும்.

ஆனால்,

இப்லீஸ் லஈன், காஃபிர்கள், முஷ்ரிக்குகள், கிருத்துவர்கள் போன்ற மாற்று அணியில் உள்ளவர்களின் மூலம் வெளிப்படும் இஸ்தித்ராஜ், இஹானத் எனும் புதுமைகள்-

அவை எவரின் மூலம் வெளிப்பட்டனவோ அவரைத் தெய்வமாகச் சித்தரிப்பதாகவும் அல்லது தெய்வ அவதாரமாகச் சித்தரிப்பதாகவும்,

பல தெய்வ வழிப்பாடுகளை வளர்க்கக் கூடியதாகவும், மூடப்பழக்க வழக்கங்களுக்கு உரமூட்டக் கூடியதாகவுமே அமைந்திடும்.

## ரஹ்மான் என்பதின் தத்துவம்

முஸ்லிம்களின் மூலம், புதுமைககளை வல்ல அல்லாஹ் வெளிப்படுத்துகின்றான் என்றால் அதனைப் புரிந்து கொள்ள முடிகின்றது.

ஆனால் மாற்றார்களின் மூலம் புதுமைகளை வெளிப்படுத்துவது சரியா? அது விசுவாசமுள்ள அடியார்களான முஃமினீன்களுக்கு வல்லவனான அல்லாஹ் செய்திடும் அநீதியாகாதா? என எவரும் சிந்தித்திட வேண்டாம்.

வல்லவனாகிய அல்லாஹ் 'ரஹ்மானாக' இருக்கின்றன் அல்லவா?

'ரஹ்மான் - என்றால்

இம்மையில் நல்லடியார், பொல்லா அடியார் அனைவருக்கும் ஒன்றுபோல கிருபை செய்பவன்.

இம்மியும் பாகுபாடு காட்டாதவன் என்று பொருள் ஆகும்.

அஃதாவது;

உலகைப் பொருத்தவரை வல்லவனான அல்லாஹ் இன, மொழி சார்பற்ற 'பொதுவுடமையாளனாகத்' திகழ்கின்றான் என்பது அதன் தத்துவமாகும்.

நிலைமை இப்படியிருக்க,

முஸ்லிம்களுக்கு மட்டிலும் புதுமைகளைச் சொந்மாக்கப்பட்டிருக்குமானால்;

'ரஹ்மான்' எனும் சிறப்பு வல்லவனாகிய அல்லாஹ் விற்குப் பொருந்தி வருமா?

ஆகவே, மாற்றார்களின் மூலம் புதுமை வெளிப்படுவது நம்மின் ஏகதெய்வ தத்துவத்தை உண்மைபடுத்துவதாகவும், உறுதி செய்வதாகவுமே அமைந்து இருக்கின்றன.

அஃதன்றி;

முஸ்லிம்களிடமுள்ள ஈமானி (இறை விசுவாசத்தி)ன் உறுதியை சுண்டிப்பார்க்கும் முகமாக அங்ஙனம் மாற்றார்ளின் மூலமும் புதுமைகள் வெளியாக்கப்படலாம்.

அல்லவா? முடிவாகச் சொல்லப் போனால் வல்ல ரஹ்மானாகிய அல்லாஹ்விற்கே அதன் ரகசியம் வெளிச்சமானது.

ஆகவே இதுபோன்ற விஷயங்களில் மார்க்கத்தில் சொல்லப்பட்டவைகளை "ஏன்? எதற்கு?" என்றெல்லாம் பல்லைப் பிடித்துப் பார்த்துக்கொண்டிருக்காமல் "ஆமன்னா சல்லம்னா... (விசுவாசித்தோம் ஒப்புக்கொண்டோம்)" என அப்படியே ஏற்றுக்கொள்வதுதான் அழகாகும்.

மார்க்கத்திலுள்ள அனைத்துக் கொள்கை கோட்பாடுகளையும் முழுக்க முழுக்க அனுசரிக்கும் நல்லடியார்களாக நம் அனைவரையும் வல்ல அல்லாஹ் வாழச் செய்தருள்வானாக.

## புதுமைகளை உண்மை கொள்ள வேண்டும்தான்

நபி ரசூல்மார்களின் மூலம் வெளிப்பட்ட முஃஜிஜாக்களையும், அவ்லியாவுல்லாக்களின் மூலம் வெளிப்பட்ட வெளிப்படுகின்ற கராமாத்துகளையும், சாமான்ய முஸ்லிம்களின் மூலம் வெளிப்பட்ட - வெளிப்படுகின்ற மஊனத்துகளையும் அங்கீகரிப்பதும், உண்மை கொள்வதும் - சுன்னத் வல் ஜமாஅத் வழியின்படி அவசியம் தான்.

## உணவும் ஊறுகாயும்

புதுமைகளை உண்மை கொள்ள வேண்டும் என்பதற்காக, அதில் கடப்புச் செய்வது தவிர்க்கப்படல் வேண்டும்.

ஈமானின் (இறை விசுவாசத்தின்) முழுமையும் இஸ்லாமியத்தின் சிறப்புகளும் இந்தப் புதுமைகளில் மட்டும் அடங்கிப் போயுள்ளன - என்ற அளவிற்கு அந்தப் புதுமைகளுக்கு அதி முக்கியத்துவம் கொடுப்பது வேண்டாத ஒன்றாகும்.

ஏனெனில் மார்க்கத்தில் அங்கீகாரம் பெற்றுள்ள மூவகைப் புதுமைகளுக்கும் 'உணவிற்கு ஊறுகாய்' போன்ற அளவில்தான் அந்தஸ்துக் கொடுக்கப்பட்டு உள்ளனவே தவிர 'உணவு' அளவிலான அதிமுக்கியத்துவம் கொடுக்கப்படவில்லை என்பதை வாசகப் பெருமக்கள் உய்த்துணருதல் வேண்டும்.

## உலமாப் பெருமக்களின் கடமை

ஆனால்; இன்றைக்கு நம்மிலுள்ள பாமரர்கள்

'மனிதன் உயிர்வாழ உணவு எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததோ அது போல சன்மார்க்கம் நிலைத்து நிற்க புதுமைகள் அதி முக்கியம் வாய்ந்தது' - என நம்பவைக்கப் பட்டுள்ளனர்.

அதன் விளைவால்,

சமுதாயத்திலுள்ள பாமரர்களின் மத்தியில் மொட நாற்றமடிக்கும் மூட நம்பிக்கைகள் வளர்ந்து - வீண் சடங்

குகள் வளர்ந்து - கேடு கெட்ட கேளிக்கைகள் வளர்ந்து வளர்ந்து விசுவரூபமெடுத்து, உச்சகட்டமாக, இஸ்லாமி யத்தின் ஆணிவேராகத் திகழும் தவ்ஹீது ஆட்டம் காணத் தொடங்கிவிட்டது.

நவூது பில்லாஹ்......

அல்லாஹ்தான் இந்த சமுதாயத்தைக் காப்பற்றியாக வேண்டும்.

ஆகவே சமுதாயத்தில் புரையோடிப் போயுள்ள இந்த மூடப்பழக்க வழக்கங்களிலிருந்து சமுதாயத்தைக் கரை சேர்க்க பேச்சாற்றல், எழுத்தாற்றல் போன்ற அனைத் துத் துறைகளிலும் பிரச்சாரத்தை முடுக்கி விடுவது மார்க்க அறிஞர்களான உலமாப் பெரு மக்களின் தவிர்க்க முடியாத கடமை என்பேன்.

ஏனெனில்,

கிருத்துவ சமுதாயமும், யூத சமுதாயமும் வழி கெட்ட தற்குக் காரணமே புதுமைகளுக்கு அளவிற்குமேலாக முக்கியத்தும் கொடுக்கப்பட்டதால்தான் - என்பதை நாம் மறந்து விடுவதற்கில்லை.

**மெய்நிலை கண்ட மெஞ்ஞானிகள் மந்திரவாதிகளாக ஆக்கப்பட்டு விட்டனரே....!**

இன்ன அளவில்தான் புதுமைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும் என்ற இந்த அளவுகோலைப்

புரிந்தோ அல்லது புரியாமலோ நம்மில் உள்ள சில எழுத்தாளர்களும், பேச்சாளர்களும் -

மெய்நிலை கண்ட மெஞ்ஞானி ஹஜ்ரத் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (குத்திஸ - சிர்ருஹு) அவர்களுடைய சங்கைமிகு வரலாற்றிலும்,

பக்திக்கும், முக்திக்கும், சக்தியுண்டு என்ற மெய்நிலையினை சொல்லால், செயலால் மெய்ப்பித்துக் காட்டிய பக்த சிகாமணி ஹஜ்ரத் குவாஜா முயீனுத்தீன் ஜிஸ்தியுல் அஜ்மீரி (குத்திஸ - சிர்ருஹு) அவர்களுடைய தியாக வரலாற்றிலும்,

மற்றுமுள்ள வலிகள் கோமான்களின் தத்துவ வரலாறுகளிலும் வெறும் கராமாத்துகளுக்கு மட்டுமே அதிமுக்கியத்துவமும் - முதன்மையும் - முழுமையும் கொடுத்துக் கொடுத்து நூல்கள் எழுதியும், மேடைகளில் பேசியும் விபரம் புரியாதவர்கள் அந்த மகான்களை மந்திரவாதிகளாகக் கருதும்படியான ஒரு சூழலை - தரக்குறைவாக எடைபோட்டிட வல்லதொரு மாயையினை சிருஷ்டித்து விட்டனர்.

விபரம் புரியாத அப்பாவி மக்கள் இப்படிக் கருதுமளவு உருவாக்கப்பட்டுள்ள இந்த நம்பிக்கையால் இஸ்லாத்திற்கும் மெஞ்ஞானத் தத்துவத்திற்கும் சம்பந்தப்

பட்ட எழுத்தாளர் - பேச்சாளர்களால் அநீதம் இழைக்கப் பட்டு வருகின்றது என்பதனை வேதனையோடு சுட்டிக் காட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

வல்ல அல்லாஹ்தான் நமக்கும் அவர்களுக்கும் ஹிதாயத் செய்தருளப் போதுமானவன்.

  

பேரன்புடையீர் !

இதுவரை முஃஜிஜா, கராமத், மஊனத், இஸ்தித்ராஜ் இஹானத் போன்ற புதுமைகளின் விபரங்களை ஆய்ந் தறிந்தோம் அல்லவா?

இதனை, ஏன் இவ்வளவு விரிவாக எடுத்துரைக்கப் பட்டது? என நீங்கள் சிந்திப்பீர்கள். தெரியும் எனக்கு.

நமது நபிகளார் முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் மூலமும் முஃஜிஜாக்கள் வெளிப்பட்டுள்ளன. அல்லவா?

நபிகளாரின் மூலம் வெளிப்பட்ட அந்த முஃஜிஜாக்கள் மற்றெல்லா முஃஜிஜாக்களைக் காண பளபளப்பு மிக்கவை என்பதை விளங்க வேண்டுமானால் மற்ற விபரங்களையும் நாம் தெளிவாகத் தெரிந்திடல் வேண்டும்.

ஆகவேதான் இந்த அளவு விபரிக்க நேரிட்டது.

முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் மூலம் வெளிப் பட்ட பள பளப்புமிக்கதும் - படிக்கப் படிக்க கிளு கிளுப்பை ஏற்படுத்துவதுமான முஃஜிஜாக்கள் சிலவற்றை 'புதுமைப் பூக்கள் எனும் தலைப்பில் ; நாவினிக்க - கேட்போர் தம் செவியினிக்க, மெய்சிலிர்க்கும் வகையில் நமது நாயகப் பாவலர் இமாம் பூசிரி (ரஹ்) அவர்கள் பாடிக் காட்டு கின்றார்.

படிக்கப் படிக்க பக்திபரவசம் பொங்கி வழியும் அந்தப் பாக்களின் பொருள் நயத்தையும் அருள் நயத்தையும் பருகிக் களிப்போம் வாரீர் வாரீர்.

جَاءَتْ لِدَعْوَتِهِ الْاَشْجَارُ سَاجِدَةً
تَمْشِيْ اِلَيْهِ عَلٰى سَاقٍ بِلَا قَدَمِ ﴿٤٢﴾

ஜாஅத் லிதஃவதிஹில் அஷ்ஜாரு
-ஸாஜிததன்
தம்ஷீ இலைஹி அலா ஸாகின் (ம்)
- பிலா கதமி

நபிகளார் - அவர்களின் அழைப்பை ஏற்று கால் இல்லாத் தாவரவர்க்கமான மரங்கள் அடக்கத்துடன் வேர்பாகங்களால் நபிகளாரிடம் நடந்து வந்து சிரம்பணிந்தன.

இதனை

நாதர் அழைப்பேற்றவர்பால் நடந்து தலை
- சாய்த்தவையாய்
பாதம்இலாமரங்கள் பராரையால் வந்தனவே

என மரைக்காயர் பாடுகின்றார்.

## மரங்கள் ஓடிவந்த மகத்துவம்!

க - ரை : பெருமானார் (ஸல்) அவர்களின் அன்பழைப்பை ஒப்பி மரம் தூரோடு தூராய்ப் பிடுங்கிக் கொண்டு அவர்களிடம் வந்து அன்னாருக்கு சிறம்பணிந்து மரியாதை செலுத்தியது.

வி - ரை : நபிகள் நாதர் - நானிலத்தின் தூதர் - நாடும் ஏடும் போற்றும் நீதர் - முஹம்மது (ஸல் - அம்) அவர்களிடம் காட்டரபியொருவர் வந்து ''முஹம்மதே! நீவிர் நபியென உம்மைச் சொல்லிக் கொள்ளுகின்றீர்! அப்படியானால், எனக்கொரு புதுமையினைச் செய்து காண்பியும் பார்க்கலாம்'' எனக்கேட்டார்.

'தான் நபியுல்லாதான்' என்பதை உலகிற்கு உணர்த்தக் கடமைப்பட்டுள்ள காத்தமுந்நபியவர்கள் காட்டரபியின் இந்தக் கேள்விக்கும் பதிலுரைக்கத் தயங்கினார்களில்லை. அந்த காட்டரபியிடம் சொன்னார்கள். ''சகோதரரே! அதோ அந்த மரத்திடம் சென்று அல்லாஹ்வின் திருத்தூதர் உன்னை அழைக்கின்றார்' எனக் கூப்பிடும்'' என்று. அதனைக் கேட்டு கொஞ்சம் வியந்து நின்ற அந்தக்

காட்டரபி பெருமானார் குறிப்பிட்டுக் காட்டிய அந்த மரத்திடம் சென்று விபரத்தைக் கூறினார். என்ன ஆச்சரியம்! காட்டரபி சொல்லி வாய் மூடுவதற்குள் அந்த மரம், முன் பக்கமும்- பின் பக்கமும் - இடப்பக்கமும் வலப்பக்கமும்- ஆடி அசைந்து ஆணி வேறும் - அக்கு வேறுமாகப் பிடிங்கிக் கொண்டு, நமது பெருமானார் (ஸல்) அவர்களின் சமூகம் வந்து ''அஸ்ஸலாமு அலைக்க யா ரசூலல்லாஹ்!'' என்று பணிவுடன் சலாம் கூறி, அடக்கமாக - ஒரு எஜமானின் முன் அவனது புழுக்கை நிற்பது போல-நின்றது. இதனைக் கண்கூடாக் கண்டு கசிந்துருகி நின்ற அந்தக்காட்டரபி ''இந்த மரம் மீண்டும் தனது இருப்பிடத்திற்குச் செல்லுமாறு பணியுங்கள்'' எனக் கேட்டுக் கொண்டார். நமது நபிகள் நாயகம் அவர்கள் ஜாடை காட்டினார்கள். உடனடியாக அந்த மரம் வந்த வழியே-வந்தது போலவே மீண்டும் சென்று தனது இருக்கையினில் இருக்கை கொண்டது. சுப்ஹானல்லாஹ்'-

இந்த வியத்தகு புதுமையினை ஆதியோடு அந்தமாகக் கண்டுகொண்டிருந்த அந்த காட்டரபிக்கு, பூரிப்பை அடக்க முடியவில்லை. உடனடியாக வேண்டினார், அவர் ''யாரசூலல்லாஹ்! என்னை அனுமதியுங்கள். நான் தங்களுக்கு சஜ்தா செய்திடத் துடிக்கின்றேன்'' என. ஆனால் அளவிற்கதிகமாக தன்னை புகழ்வதையும், பூஜிப்பதையும் எப்போதுமே எதிர்த்து, எதிர்த்து வந்த எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் அதற்கு மறுத்து விட்டார்கள். ஆனாலும் அந்தக் காட்டரபி விடுவதாக இல்லை ''பெருமானே! சஜ்தா செய்ய அனுமதிக்காவிடினும்

தங்களின் தங்கநிகர் பாதங்களையும் கரங்களையும் முத்தமிடுவது தற்காவது அனுமதிக்கத்தான் வேண்டுமென கெஞ்சுகின்றார். அவரின் அன்புப் பெருக்கிற்கு தடைபோட முடியாத நிர்ப்பந்தத்திற்கு உள்ளான தாஹா நபி அவர்கள் அதற்கு இசைவு தெரிவிக்க, ''பொன்மலர்ப் பாதங்களையும் பூ நிகர் கரங்களையும்'' தனது வாய்களால் முத்தமிட்டு மகிழ்ந்தார் அவர்! மர்ஹபா-மர்ஹபா

இவையின்றி, நம்பிக்கைக்குரிய அறுத்திரட்டுகளில் ஒன்றான 'முஸ்லிம்' எனும் ஹதீதுக் கிரந்தத்தில் வேறு விதமான ஒரு செய்தி காணப்படுகின்றது.

அதாவது, ஜாபிர் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள், ஒரு தடவை, நபிகள் நாதர் அவர்கள், மலம் கழிக்க நாடி அங்குமிங்கும் பார்த்தார்கள். வெட்டார வெளியான அப் பகுதியில் மறைப்பு ஏதும் தென்படவில்லை. ஆனால் கொஞ்சம் தூரத்தில் ஒரு ஓடைக்கரையில் தூரம் தூரமாக இரண்டு மரங்கள் இருப்பதைக் கண்டு அங்கு சென்ற அண்ணலவர்கள் ஒரு மரத்தினடியில் சென்று நின்று ஓங்கி வளர்ந்திருந்த அம்மரத்தினிடம் ''அல்லாஹ்வின் ஆணைப்படி நீ வளைந்து கொடுத்திடக் கடவாய்'' என்று உத்திரவிட்டார்கள். அம்மரம் உடனடியாக வளைந்து கொடுத்தது. ஆனால் போதுமான மறைப்புக் கிட்டவில்லை போலும். ஆகவே கொஞ்சம் தூரத்திலிருந்த மற்றொரு மரத்தை ஜாடையால் அழைக்க, அம்மரம் வேர்ப்பிடுங்காய் பிடுங்கிக் கொண்டு அண்ணலவர்களின் அருகே அடக்

கத்தோடு வந்து நின்றது. அதற்கும் வளைந்து கொடுக்கும் படி கட்டளை பிறப்பித்தார்கள். அங்கனமே அதுவும் வளைந்து கொடுத்தது இரு மரங்களும் சேர்ந்து அண்ணல வர்களைப் புடை சூழ்ந்து கொண்டதால் பூரணமான மறைப்புக் கிட்டியது. அதன்பின் மலம் கழித்து சுத்தி செய்து எழுந்த பின்னர், இடம் பெயர்த்து வந்த மரத்திற்கு ஜாடை காட்டினார்கள். அது தன் இருப்பிடம் மீண்டு இருக்கை கொண்டது அருகிலிருந்து மரத்திற்கு உத்திரவிட அது நிமிர்ந்து முன் மாதிரிய செங்குத்தாக நின்று கொண்டது''

நமது நாயகப் பாவலர் பூசிரி ரஹ்-அன்ஹு) அவர்கள் இங்கே இந்த 72-ஆம் கண்ணியில் பெருமான் அவர்களுக்கு நிகழ்ந்த இந்தப் புதுமையினைத்தான் ''நாத அழைப்பால்.'' என எண்பித்துக் காட்டுகின்றார்.

كَاَنَّمَا سَطَّرَتْ سَطْرًا لِّمَا كَتَبَتْ
فُرُوْعُهَا مِنْ بَدِيْعِ الْخَطِّ فِي اللَّقَمِ (72)

கஅன்னமா ஸத்தரத் ஸத்ரன்
- (லி)லிமா கதபத்
ஃபுரூஉஹா மின் பதீஇல் கத்தி
- ஃபில்லகமி

அந்த மரங்களின் கிளைகளை நடுப்பாதையில் நடந்து வந்தமையால் எழுதிடுவதற்காக (காகிதத்தில்) வரி வரியாகக் கோடுகள் கிழிப்பதைப் போல அந்த வழித்தடங்களில்கோடுகள் காணப்பட்டது.

இதனை

அந்தப்பரம்பரைவழியதன் நடுவே கோடிடுதல்
பிந்திக்கிளையெழுதப் பிளந்தவரி போன்றதுவே

என மரைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : பெருமானார் (ஸல்) அவர்களின் அழைப்பு கேட்டு வேர்ப்பிடுங்காகப் பிடுங்கிக் கொண்டு அன்னவர் சமூகம் வந்த அந்த மரத்தின் வருகை; இம்மியும் கோணல் இல்லாத நேர் கோடு போன்றும், பின் வந்த அம்மரத்தின் கிளைகள் காகிதத்திலுள்ள 'ரூல்' போன்றுமிருந்தது.

வி-ரை : பெருமானாரின் அழைப்புக் கேட்டு அன்னவரிடம் வந்து நின்ற மரத்தின் வருகையினைக் கூறிக் காண்பித்த கவிக்கோ பூசிரி அவர்களுக்கு, அம்மரம் வருகை தந்த பாங்கையும் கூறிக் காண்பிக்க வேணடுமென்ற விருப்பம் வந்து விட்டது ஆகவே அழகியதொரு உவமை மூலம் அதனை இங்கு கூறிக் காண்பிக்கின்றார்.

அதாவது;

செங்குத்தான நேர்கோடு ஒன்று வரைந்தால் அது எப்படி செம்மையாக இருந்திடுமோ அதுபோல; வேர்ப்பிடுங்காகப் கிடுபிங் பூமியில் சாய்ந்த அந்த மரம், வேர்பாகம் முன்னோக்கிய நிலையில் பெருமானாரை நோக்கி நகர்ந்து வந்தது. அப்படி நகர்ந்து வரும்போது பெருமானார் அவர்களுக்கும் அம்மரத்தின் இருப்பிடத்திற்குமிடையே செங்குத்தான நேர்கோடு காணப்பட்டது. அன்றி பிந்தி வந்த அதன் கிளைகள்பூமியில் 'கோனல்-மானல்' என்று இல்லாமல் எழுதுவதற்

குப் போடப்படும் 'ரூல்' போன்ற ஒழுங்கான கோடுகளைக் கீறியிருந்தன என மரத்தின் வநகையின் பாங்கை இப்படிக் கூறிக்காண்பிப்பதின் மூலம்;

'அகிலமனைத்திற்கும் அருட்கொடையாக வந்துதித்த உலகப் பொது நபியே! தாவரவர்க்கத்தின் சார்பில் நுங்களின் நுபுவ்வத்தை ஏற்றுக் கொண்டோம்' என அந்த மரம் மன்னர் நபியுல்லா அவர்களிடம் உறுதிமொழி-யைஅத்து எழுதிக் கொடுத்தது, என்பதை குறிப்பால் உணர்த்துகின்றார் நமது கவிக்கோ.

---

مِثْلَ الْغَمَامَةِ الَّتِىْ سَارَ سَائِرَةً
تَقِيْهِ حَرَّ وَطِيْسِ لِلْهَجِيْرِ حَمِيْ ﴿٥٩﴾

**மித்லல் ஙமாமதிஅல் லாஸார**
**- ஸாயிர(த்)துன்**
**தகீஹி ஹர்ரவதீ ஸின்லில்**
**- ஹஜீரிஹமீ**

நபிகளார் அவர்கள் நடந்து செல்லும் பாதைகளில் எல்லாம்-நடுப்பகலின் வெப்பத்தை விட்டும் அன்னாரைக் காத்திடும் பொருட்டு —

நபிகளாரின் சிரசிற்குமேல் கவிந்து சென்று கொண்டே இருக்கும் மேகத்தைப் போன்று.

---

இதனை

நாயகர்போம்பாதையெல்லாம் நடுப்பகலின்வெப்பம்
- அறத்
தூயசிரம் மேற்கவிந்து தொடர்கார் நிழல்இடுமே !

என மரைக்காயர் பாடுகின்றார்.

## மேகம் நிழலிட்ட புதுமை

க-ரை : உச்சி வெயிலின் வெப்பம் உத்தமத் திருநபி அவர்களின் பூ நிகர் பொன்மேனியில் பட்டு அதனால், அந்த அருளாளருக்கு சிரமம் ஏற்பட்டு விடாமலிருக்கும் பொருட்டு அன்னாரின் சிரசிற்கு மேல் கார்முகில் குடைப் பிடித்து நிழலிட்டு வந்தது.

வி-ரை: புதுமைப் பூக்கள் (முஃஜிஸாா) வரிசையில் நமது நபிகளார் அவர்களுக்கு மேகம் நிழலிடும் புதுமையினை இரண்டாவதாக தொடுத்துக் காண்பிக்கின்றார்.

அண்ணல் அஹமது முஸ்தபா (ஸல்-அம்) அவர்களுக்கு ஆண்மை அரும்பிடும் பனிரெண்டு வயது. அதுவரை ஆடு மேய்த்து தமது சுறுசுறுப்பையும் 'உழைத்துதான் உண்ண வேண்டுமென்ற' சுயமரியாதையினையும் பகிரங்கப்படுத்தி வந்ததால் அன்னாரை வணிகத்துறையில் பழக்க வேண்டும்'' என்ற ஆர்வம் அன்னாரின் ; வளர்ப்புத் தந்தையாகிய அபூதாலிப் அவர்களுக்கு ஏற்பட்டது. ஆகவே தன்னுடன் 'ஷாம்' நாட்டிற்கு வணிகக் குழுவினர் புடைசூழ அழைத்துச் செல்கின்றார்.

வழியில் வழக்கமானதொரு மன்ஜிலில் (ஓய்வு கொள்ளும் தளம்) இளைப்பாறத் தங்கியது அந்த வணிகக் குழு. அந்த மன்ஜிலின் அருகே ஒரு மடம் இருந்தது, அம்மடத்தில் 'புஹைரா' என்ற பெயர் கொண்டதொரு துறவி வாழ்ந்து வந்தார்; புஹைரா வெறும் துறவி மட்டுமல்ல கிருத்துவச் சாமியாரும் கூட! அக்காலை 'அவரை மிகைத்த வேத விற்பன்னர் அகிலத்தில் வேறுயாருமில்லை' என்று சொல்லத்தக்க அளவு கிருத்துவ வேதக்கலையில் விவேகியாக விளங்கியவர் அவர். ஆகவே, அந்நேரம் கொடிகட்டிப் பரந்த ரோமாபுரிச் சக்கரவர்த்தி கூட அந்த புஹைராவிடம்தான் வேத விளக்கம் பெறுவது வழக்கமாம். இப்படி உயர்வு பெற்றுத் திகழ்ந்த புஹைராவின் மடத் தருகே இதற்குமுன் ஆண்டாண்டு காலமாக மக்கா வியா பாரக்குழு தங்கிச் செல்வது வழக்கம்தான். ஆனால் அப் போதெல்லாம் அவர் தம் அருகே வந்து தங்கும் வியாபாரக் குழுவினரை ஏறெடுத்தும் பார்த்ததே இல்லை. ஆனால் இம்முறை முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் வியாபாரக் குழுவினருடன் சேர்ந்து வந்துள்ள இம்முறை அனை வரையும் அதிசயிக்க வைத்திடும் வண்ணமாக அக்குழு வினருக்கு அன்றைக்கு மதியம் விருந்து கொடுத்தார்! அவர்.

விருந்தோம்பும் நிகழ்ச்சிக்கு அனைவருமே வந்திருந் தனர்; ஆனால் விருந்தின் நாயகரை-முஹம்மது (ஸல்-அம்) அவர்களை - மட்டும் காணவில்லை. எங்கே அவர்? என வினவிய பொழுது 'அவர் எங்களின் வியாபாரச் சாமான் களையும் ஒட்டகங்களையும் பாதுகாப்பதற்காக அங்கேயே

இருந்து கொண்டார்' என்று பதில் சொல்லப்படுகின்றது. இதனைக் கேட்டு அதிசயமடைந்த அந்தத் துறவி அப் பெருந்தகைக்குரிய உணவை எடுத்துக் கொண்டு அவரே நேரடியாக சிறுவர் முஹம்மதுவை நோக்கி நடக்கின்றார். இதனைக் கண்டு மென்மேலும் வியப்பு மிகப் பெற்ற அந்த அராபிய வணிகக் குழுவினர் அந்தத் துறவியைப் பின் தொடர்கின்றனர். அப்போது உச்சிவேளை வெயில் உக்கிர மான வெப்பத்தை உதிர்த்துக் கொண்டிருக்கின்றது. ஆனால், சிறுவர் முஹம்மது (ஸல்-அம்) அவர்களைச் சுற் றிலும் ஒரு மேகம், சூழ்ந்து நின்று அவருக்கு வெயிலின் வெப்பம் தாக்கி விடாதவாறு குடைபிடித்துக் கொண்டிருக் கின்றது. தன்னைப் பின் தொடர்நது வந்த வணிகர்க ளிடம் இந்த அதிசயத்தை 'அதோ பாருங்களேன்' என சுட்டிக் காண்பிக்கின்றார். அதுவரை கவனித்தறியாத அவ் வணிகர்கள் அப்போதுதான் மேகம் நிழலிடும் மேன்மை யினை கண்கூடாகப் பார்த்து மகிழ்ந்தார்கள்.

அப்போது மட்டுமன்று! எப்போதுமே எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் நடுப்பகலில் வெளிக் கிளம்பினால் மேகம் குடை பிடிப்பது கடைசிவரை வழக்க மாகவே இருந்து வந்துள்ளது.

இது எம்மான் முஹம்மது (ஸல் - அம்) அவர்களுக்கு அல்லாஹ் வழங்கிய மிக அற்புதமானதோர் அற்புதமாகும்.

நமது நாயசப் பாவலர் பூசிரி அவர்கள் இங்கே 74-ம் கண்ணியில் நபிகள் நாதர் அவர்களுக்கேற்பட்ட இந்தப் புதுமையினைத்தான் 'நாயகர் போம் பாதையெல்லாம்...' எனச் சொல்லிக் காண்பிக்கின்றார்.

மரம் மரியாதை செய்த புதுமையினை முதலில் சொல்லிக் காண்பித்ததின் மூலம் கீழுலகம் அனைத்தும் மன்னர் நபியுல்லா அவர்களை - உலகப் பொது நபி என - ஏற்றுக் கொண்டன’ எனவும், மேகம் குடைப்பிடித்த புதுமையினை அதனை அடுத்து இரண்டாவதாகச் சொல்லிக் காண்பித்ததின் மூலம் ‘கீழுலகம் மட்டுமல்ல மேலுலகமும் மன்னர் நபியுல்லா அவர்களை - அனைத் துலகத்தானைத் தலைவர் என - ஏற்றுக் கொண்டன, என்பதைக் குறிப்பால் உணர்த்துகின்றார் பொடி வைத்து எழுதுவதில் வல்லவரான புலவர் பெருமான் பூசிரி.

---

أَقْسَمْتُ بِالْقَمَرِ الْمُنْشَقِّ إِنَّ لَهُ
مِنْ قَلْبِهِ نِسْبَةً مَبْرُورَةَ الْقَسَمِ (مه)

**அக்ஸம்து பில்கமரில் முன்ஷக்கி - இன்ன லஹூ**
**மின் கல்பிஹி நிஸ்பதன் மப்ரூரதல் - கஸமி**

பிளவுண்ட முழு நிலாவின் மீது பிரமாணம் செய்கின்றேன். நிச்சயமாக அந்தப் பிளப்பிற்கும் அந்த நபிகளாரின் இதயத்தோடு ஒரு விதச் சம்பந்தம் உண்டு.

இதனை

பிளவுண்டசந்திரன்மேல் பிரமாணமாய்,
அதற்கும்
தெரிவுண்டநாதர்நெஞ்சம் தனக்குமொரு
சேர்க்கையுண்டே.

என மறைக்காயர் பாடுகின்றார்.

## ஒரே கல்லில் இரண்டு கனி

க - ரை : பெருமானார் அவர்களின் மூலம் வானத்தின் முழுநிலா இரு கூறுகளாகப் பிளந்த புதுமை நிகழ்ந்தது. இந்தப் புதுமையின் மீது சத்தியமாக! பெருமானாரின் நெஞ்சம் பிளக்கப்பட்டு அதன் உள்ளே உள்ள உள்ளம் சுவர்க்கத்து நீரால் சுத்தி செய்யப்பட்ட புதுமைக்கும் அந்த பிளவுண்ட சந்திரனுக்கும் ஒருவகைத் தொடர்பு உண்டு.

வி - ரை : 'ஒரே கல்லில் இரண்டு கனி' என்பார்களே! அதுபோல இங்கே 75 - ஆம் கண்ணியில் இரண்டு புதுமைகளை ஈண்டு காண்பிக்கின்றார் நமது புதுமைக் கவி பூசிரி :

ஒன்று சந்திரன் பிளந்த புதுமை, இரண்டாவது பெருமானாரின் நெஞ்சம் ஆபரேஷன் செய்யப்பட்ட புதுமை.

அவைகளில் சந்திரன் பிளந்ததின் விபரமாவது :

மக்கமா நகரில் மன்னர் நபியுல்லா அவர்கள் தீவிர மாக தீன் பிரச்சாரத்திலீடுபட்டிருந்த சமயமது. நபிகளார் அவர்கள் தன்னுடைய பிரச்சாரத்திற்கு ஆதாரமாக பல புதுமைகளையும், வரலாற்று உண்மைகளையும் செய்து, சொல்லிக் காண்பித்து வந்ததால் இஸ்லாமியத்தை எதிர்த்து நின்ற எதிரிகளுக்கு 'நேருக்கு நேர் - கொள்கைக்கு கொள்கை' என்ற ரீதியில் நபிகளாரை எதிர்க்க வக்கு வகையில்லாமல் போயிற்று. ஆகவே நபிகளாரை மந்திர வாதி என்றும் சூனியக்காரர் என்றும் கண்கட்டி வித்தைக் காரர் என்றும் துர்ப்பிரச்சாரம் செய்து மக்களின் கவனத்தை திசை திருப்பி வந்தனர்.

## இருள் வானில் முழுநிலா இரண்டாகப் பிளந்த அதிசயம்

இந்நிலையில் ஒரு நாள் ஒரு யூதன் அபூஜஹ்லிடம் வந்து "உங்களில் உதித்துள்ள கோடாரிக் காம்பாகிய முஹம்மது உண்மையில் நபியோ தீர்க்கதரிசியோ அல்ல. மாறாக, அவர் ஒரு மந்திரவாதிதான் என்பதை நிரூபிக்கச் சரியானதொரு யூகம் என்னிடம் உள்ளது, அதைப் பயன் படுத்தினால் உண்மை வெட்ட வெளிச்சமாகிவிடும் எனக் கூறினான்.

எப்படியாவது முஹம்மதைப் பொய்ப்பித்து ஆக வேண்டும் என்பதில் கண்ணுங் கருத்துமாக இருந்து

ந்த அபூஜஹிலுக்கு யூதனின் இந்தப் பேச்சில் சபல ட்டியது.

''அப்படியா என்ன யூதன்? ...உடனடியாகச் சொல் லும்'' என அந்த யூதனிடம் அபூஜஹில் கேட்கின்றான்.

அதற்கு அந்த யூதன் : மந்திரவாதிகள் சாகசங்க ளெல்லாம் இந்த மண்ணில் மட்டும்தான் செல்லுபடி யாகும். விண்ணில் மந்திரத்தின் மாய்மாலங்கள் எடு படாது. ஆகவே நீவிர் அந்த முஹம்மதுவிடம் சென்று விண்ணில் உள்ள சந்திரனைப் பிளந்து காண்பிக்கும்படி சொல்லும். அப்போது நிச்சயமாக அந்த முஹம்மது அதில் தோற்றுவிடுவார். அங்ஙனம் தோற்றுவிட்டால் அவர் தீர்க்கதரிசியல்ல. மாறாக மந்திரவாதியே தான் என்பதைச் சந்தேகத்திற்கிடமின்றி நிரூபித்துக் காட்டிட முடியும்'' எனக் கூறுகின்றான்.

''சபாஷ்! நல்ல யூகம்'' என எகிறிக்குதித்த அபூஜஹில் அன்று இரவே, நபிகள் நாதர் அவர்களைக் கண்டு 'முஹம்மதே நீவிர் கூறும் வாதம் உண்மையாயிருப்பின் இப்போதே நிலவினை இரு கூறுகளாகப் பிளந்து காட்ட வேண்டும். அங்கனம் நீவிர் செய்துகாட்டத் தவறினால் உம் தலையைக் கொய்து உம் கொட்டத்தை ஒடுக்கிடு வேன்'' என எக்காளத்துடன் கூறி நிற்கின்றான்.

இதனைச் செவியுற்ற செம்மல் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள்; இப்படிப்பட்ட புதுமைகளை நிகழ்த்திக் காட்டினாலாவது இந்த மூர்க்கன் அபூஜஹிலின் இதயம் தெளிந்திடாதா? என்ற ஆர்வத்தின் அடிப்படையில்

தங்களின் தங்க நிகர் கலிமா விரலை (ஆள்காட்டி விரல்) வானத்தின் பக்கமாக நீட்டி ஜாடை செய்தார்கள். என்ன ஆச்சரியம்! விண்மீன்களின் ராஜாவாகத் திகழும் அந்த முழு நிலவு - முழு அமாவாசியான அந்த இரவில் - இன்று எந்த நிலாவில் அமெரிக்கர்களும் ரஷ்யர்களும் போட்டி போட்டு உலாவந்து கொண்டிருக்கிறார்களோ அதே நிலவு வானில் வெளிப்பட்டு இரண்டாகப் பிளந்து ஒரு கூறு இருந்த இடத்திலேயே இருக்க மறுகூறு அவ்விடத்தை விட்டுச் சற்று நகர்ந்து போய் நின்றது.

நாயகத் தோழர் இப்னு மஸ்ஊது (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள். ''நபிகளாரின் உத்திரவுப்படி சந்திரன் இரு கூறுகளாகப் பிளந்து பிரிந்து நின்ற போது அதன் இடைவெளியில் 'ஹிறா' மலையினைப் பார்த்தேன்'' என்று.

இந்த அளவு பிளந்து பிரிந்து நின்ற சந்திரனைக் கண்ட அந்த அபூஜஹில் சற்று அதிர்ந்தவனாக 'பிளந்து பிரிந்த நிலாவினை ஒன்றிணைத்து ஒட்டும்படி செய்யும்' என்றான், நபி அவர்கள் மீண்டும் ஜாடை காட்டினார்கள். பிளந்து பிரிந்த அந்த பெரிய நிலா மீண்டும் சேர்ந்து முழு நிலவென ஒட்டிக் கொண்டது சுப்ஹானல்லாஹ்......

ஆனால்; இந்த பூரணமான புதுமைகளை புறக் கண்களால் கண்டு கொண்டிருந்த மூடன் அபூஜஹில் புத்திவரப் பெற்றானா? அதுதான் இல்லை. முஹம்மதே நீவிர் செய்து காட்டியது உண்மையன்று மாறாக எங்களின் கண்களைக் கட்டி; கண்கட்டு வித்தையினைத்தான்

செய்துள்ளீர். ஆகவே நீ, உன் வாதப்படி நபியோ ரசூலோ அல்ல எனக்கூறி நிதர்சனமான உண்மையினை அல்லத் தட்டிவிட்டான். பாவம் அவன்!

ஹதீதுக்கலை நிபுணரான இப்னுல் ஹஜர் (ரஹ்-அன்ஹு) அவர்கள் தங்களின் ஹதீது ஆய்வுப் பெருநூலான 'பத்ஹுல்பாரி' எனும் நூலில் நபிகளார் விளைவித்த இந்த விந்தைமிகு புதுமையினை ஊர்ஜிதம் செய்து எழுதியுள்ளார்கள்.

அன்றி;

'அபூ இஸ்ஹாகில் ஸுஜ்ஜாஜ்' என்ற ஹதீதுக் கலைத் திறனாய்வாளர் சந்திரன் பிளந்தது சம்பந்தமாக பத்தொன்பது ரிவாயத்துக்களைச் சேகரித்து ஹதீதுக்கலை இலக்கியப்படி சந்திரன் பிளந்த இந்த விபரம் 'கதஇ' (நிச்சயமான விபரம்) என்ற இனத்தைச் சேர்ந்தது என எண்பித்துக் காட்டுகின்றார்.

அன்றி ;

இப்னு மஸ்ஊது (ரலி - அன்ஹு) போன்ற பெரும் பெரும் சஹாபிகள் கொண்ட ஒரு பெரும் கூட்டத்தார் சந்திரன் பிளந்த விபரத்தை ரிவாயத்துச் செய்திருப்பதால் இது 'முத்தவாதிர்' என்ற முதல் ரகத்தைச் சேர்ந்த ஹதீதாகுமென 'ஷரஹுஷ் ஷரீப் வில் மவாகிப்' எனும் ஹதீதுக் கலைத் திறனாய்வுக் கிரந்தத்தில் சொல்லப்படுகின்றது.

அன்றி ;

உலகினில் ஒளிருவது ஒரே ஒரு நிலவுதானே! அப்படியிருக்க மக்கா நகரிலுள்ள முஹம்மது நபியால் சந்திரனைப் பிளக்கும் நிகழ்ச்சி நிகழ்ந்திருந்தாலும் மற்ற நாடுகளிலுள்ளவர்களுக்கும் அது தெரிந்திருக்க வேண்டுமே அப்படி மற்ற நாட்டவர் எவரேனும் அங்ஙனம் சந்திரன் பிளக்கப்பட்டதைப் பார்த்துள்ளதாகக் கூறிட முடியுமா? என்றால், அதற்கும் நம் கேரள நாட்டின் அதிபதிகளா இருந்த 'சேரபெருமான்' சாட்சியாக உள்ளார்.

அன்றி ;

இப்போது சந்திரனில் உலா வந்த அமெரிக்க வான வெளி வீரர்கள் சந்திரன் இரண்டாகப் பிளந்ததற்குரிய அடையாளங்கள், அறிகுறிகள்-இன்றும் சந்திரனில் இருந்து கொண்டிருப்பதாக ஊர்ஜிதம் செய்துள்ளார்கள். ஆகவே எந்த கோணத்திலிருந்து பார்த்தாலும் மறுக்கவோ மறைக்கவோ முடியாத இந்தப் புதுமைகள் எங்கள் ஈருலக ஏந்தல் முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் மூலம் வெளிப்பட்ட, விஞ்ஞானிகளை திகைக்க - திக்கு முக்காட - வைத்திடும் மெஞ்ஞானப் புதுமையாகும்.

இந்த மெஞ்ஞானப் புதுமையினைத்தான் நமது தெய்வீகக் கவி இமாம் பூசிரி (ரஹ்) அவர்கள் இந்த 75 - ம் கண்ணியின் முதலீற்றில் 'பிளவுண்ட சந்திரன்மேல் பிரமாணமாய்' எனச் சுட்டுகின்றார்.

## இதயம் பிளக்கப்பட்ட புதுமை

நபிகளாரின் வளர்ப்புத் தாயார் ஹலீமா உம்மா அறிவிக்கின்றார்கள்,

அருள் சொட்டும் திருவதனத்தாராகிய முஹம்மது எனது பராமரிப்பில் வளர்ந்து வந்த சமயம். அப்போது அவருக்கு வயது சுமார் மூன்று இருக்கும். அந்நேரத்தில் ஒரு நாள் எனது சொந்த மகனும் அவரும் எங்களின் வீட்டிற்குப் பின்புறத்தில் உள்ள புல்வெளியில் ஒரு ஆட்டுக் குட்டியுடன் விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது திடீரென என் (சொந்த) மகன் விரண்டோடி வந்தான். அவனது முகத்தில் அதிர்ச்சி ரேகைகள் படர்ந்திருந்தன. அவனது கை கால்களெல்லாம் நடுநடுங்கிக் கொண்டிருந்தன. இந்நிலையில் ஓடி வந்த அவன் எங்களிடம் (தம்பதிகளிடம்) 'பெற்றோரே! யாரோ இனம் தெரியாத வெள்ளுடை பூண்ட மனிதர்கள் எங்களிடம் வந்து அந்த குறைஷி சகோதரரைப் பிடித்துக் கீழே கிடத்தி அவரின் நெஞ்சைப் பிளந்தார்கள் இரத்தம் பீறிட்டது' ...... என உளறிய நிலையில் கூறினான். உடனடியாக நாங்களிருவரும் ஓடோடிச் சென்று பார்த்தோம் அப்போது பாலகர் முஹம்மது நடு நடுங்கிய நிலையிலும், முகமெல்லாம் மஞ்சனித்த தோற்றத்துடனும் அதே இடத்தில் நின்று கொண்டிருந்தார். ஆனால் நெஞ்சு பிளக்கப்பட்டதற்கான அடையாளமோ இரத்தம் பீறிட்ட அறிகுறியோ எதனையும் காணவில்லை. இதனை பார்த்து நான் நிம்மதிப் பெருமூச்செறிந்தேன். ஆனால் என்னவர் மேலும் பீதிக்குள்ளான நிலையில் சொன்னார்; 'ஏதோ விபரீதம் நடந்து விட்டது. அச்சிறுவரின் பல சூழ்நிலைகள் எனக்கு ஏற்கனவே பயத்தைக் கொடுத்துக் கொண்டுதானிருந்தன. ஆகவே இப்போது ஏற்பட்ட விபரீதத்தின் விளைவு வெளிப்படுமுன் இவரை இவரின் தாயாரிடம் (ஆமினா அம்மாளிடம்)

கொண்டு போய்ச் சேர்த்து விடு' என. அதில் பொருள் இருப்பதாக எனக்குப்பட்டது. ஆகவே நான் பாலகர் முஹம்மதை அழைத்துக் கொண்டு மக்காவிற்குச் சென்று ஆமினா அம்மையாரிடம் ஒப்படைத்தேன் ஆனால், ஆமினா அம்மையார் இன்னும் சில காலத்திற்கு அவரை நானே வளர்க்க வேண்டுமென வற்புறுத்தினார், நான் எவ்வளவு மழுப்பிப் பார்த்தும் அவர் விடுவதாக இல்லை. ஆகவே நான் நடந்த உண்மைகளை-நெஞ்சு பிளக்கப் பட்ட மர்மம் முதல் அனைத்தையும் - சொல்லிக்காட்டி ஆகவே இவருக்கு ஏதாவது சம்பவித்து விட்டால் நாங்கள் பொறுப்பேற்கும்படி ஆகிவிடுமே' என முறையிட்டேன்.

நான் சொல்வதின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட ஆமினா அம்மையார் 'ஹலீமாவே! என் பிள்ளைக்கு பேய் பிசாசுச் சேஷ்டை ஏதாவது ஏற்படுமென அஞ்சுகின்றீரா? என என்னிடம் கேட்டார். நான் 'ஆமாம்' என்றேன். அதற்கு அவர் அல்லாஹ்வின் மீது ஆணையாகச் சொல்லு கின்றேன். என் ஈரக்குலைத் துண்டான என் மகன் முஹம்மதுவிற்கு அப்படிப்பட்ட அலங்கோலம் எதுவும் ஏற் படவே ஏற்படாது. நான் இதை இவ்வளவு உறுதியாக எப்படிக் கூறுகின்றேன் தெரியுமா?' நான் இவரைக் கருவுற்ற நேரத்தில் 'என்னிலிருந்து ஒருவகைப் பேரொளி தோன்றியது. அந்தப் பேரொளியின் வெளிச்சத்தில் ஷாம் நாட்டு அதிபதியான கிஸ்ராவின் கோட்டை கொத்தளங் கள் தெரிந்தன. அன்றி நான் கர்ப்பமாக இருக்கும் காலங்களில் சாதாரணமாக கர்ப்பவதிகளுக்கு ஏற்படும் எந்த தொந்தரவுகளும் ஏற்பட்டதே இல்லை. அன்றி

இவரைப் பிரசவித்த போது பிரசவ உதிரம் இம்மியும் கொட்டவில்லை; இன்னும் இதுபோன்ற எத்தனை எத்தனையோ புதுமைகள் இவரின் பிறப்பில் வெளியாயிற்று. இதையெல்லாம் இப்போது உன்னிடம் ஏன் கூறிக் காண்பிக்கின்றேன் தெரியுமா? என்மைந்தன் ஏதோ ஒரு புனித நிலையில் உருவாகி வளர்ந்து வருகின்றார் என்பதை உனக்கு உணர்த்தும் பொருட்டுத்தான். ஆகவே இப்படிப் புனிதம் பெற்றவராக என் மகன் திகழ்வதால் நீ நினைப்பது போன்று அவருக்கு பேய்பிசாசுச் சேஷ்டைகள் ஏற்பட நியாயமே இல்லை' எனக் கூறினார். அவரின் (ஆமினா அம்மாளின்) இந்த நீண்ட பேச்சிலிருந்து எனக்கும் ஒருவகை நம்பிக்கை ஏற்பட்டது. ஆகவே மீண்டும் பாலகர் முஹம்மதைக் கூட்டிக் கொண்டு எனது ஊர் திரும்பி விட்டேன். என ஹலீமா அம்மையார் அறிவிக்கின்றார்கள். (நூல் : அரபி முஹம்மதுர் ரசூலுல்லாஹ் 24 - ஆம் பக்கம்)

## மிஃராஜின் போதும் இதயம் பிளக்கப்பட்டது

மெய்யுடைய பயணமான மிஃராஜ் செல்வதற்குமுன் அந்த இரவில் - பெருமானார் அவர்களுக்கு ஜிப்ரயீல், மீகாயீல், இஸ்ராபீல் உள்ளிட்ட வானவர்கள் புடைசூழ ஒரு - ஷக்கஸத்ரு - நெஞ்சு பிளந்த நிகழ்ச்சி - நடைபெற்றதாக அறுந்திரட்டுகளில் முதன்மைப் பெற்றுத் திகழும் புஹாரி ஷரீபில் பட்டவர்த்தனமாகக் காணப்படுகின்றது.

அதாவது;

ரஜப் மீ (கி.பி. 621) பிறை 27ஆம் இரவன்று முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் தங்களின் அத்தை உம்முஹானி அம்மாளின் இல்லத்தில் படுத்திருந்தார்கள். அப்போது, வானவர்கோன் ஜிப்ராயீல் (அலை) அவர்கள் ஏனைய வானவர்களுடன் வந்து நபிகளாரை எழுப்பி-விழிக்கச் செய்து - அல்லாஹ்வின் அழைப்பைச் சமர்ப்பித்தாகள். அதுகேட்டு ஆனந்தம் மிகக்கொண்ட நபிகளார் உடனடியாக ஜிப்ராயீல் அவர்களுடன் புறப்பட்டு, ஹதீமிற்கு (கஃபாவில் மகாமே இப்ராஹீம் என்ற இடத்தின் அருகே உள்ள பகுதி) வந்தார்கள். அங்கே நபிகளார் அவர்கள் ஒருக்கனித்துப் படுக்கவைக்கப்பட்டார்கள். அப்போது, ஒரு வானவர் தன்னுடன் வானுலகிலிருந்து கொண்டு வரப்பட்ட ஒரு தட்டத்தை நீட்டினார். ஜிப்ராயீல் (அலை) அவர்கள் அந்தத் தட்டத்திலிருந்து பளபளப்பான கத்தி ஒன்றை எடுத்து அக்கத்தியினால் நபிகளாரின் நெஞ்சைப் பிளந்து உள்ளில் இருந்த சதை துண்டங்களை (ஹிருதயம் உள்ளிட்ட சதைத்துண்டு) வெளியே எடுத்தார்கள், உடனடியாக மற்றொரு வானவர் தன்னுடன் வானுலகிலிருந்து கொண்டு வரப்பட்ட ஒரு பாத்திரத்தை நீட்டினார். அதில் 'ஹவ்ளுல் கௌதர்' என்ற தடாகத்தின் நீர் நிரப்பபட்டு இருந்தது. ஜிப்ராயீல் (அலை) அவர்கள் நபிகளாரின் அந்த சதைத் துண்டங்களை அந்த நீரில் கழுவி பின் அதனை எடுத்து நெஞ்சகத்திற்குள் இருந்தபடியே அதனை பொருத்தி வைத்த பின்னர் பிளந்த நெஞ்சகம் மீண்டும் மூடப்பட்டது...' (என்று புஹாரியில் கூறிக் காண்பிக்கப்பட்டுள்ளது.)

அன்றி, நபிகளாரின் பத்தாம் வயதில் ஒரு முறையும் மரணநேரத்தில் ஒரு முறையும் இதே போன்ற ஷக்க ஸத்ரு நிகழ்ந்ததாக புர்தாவின் விரிவுரை பாஜூரி' எனும் கிரந்தத்தில் காணப்படுகின்றது.

இப்படி பலராலும் ஊர்ஜிதம் செய்யப்பட்டு உண்மை யென ஒப்புக்கொள்ளப்பட்ட இந்த நெஞ்சம் பிளக்கப்பட்ட (ஆப்ரேஷன் செய்யப்பட்ட) புதுமை எங்கள் ஈருலக ஏந்த லிற்கு நிகழ்ந்ததின் மூலம்தான் ஆப்ரேஷன் முறை உலகிற்கு அறிமுகமானது எனத் துணிந்து கூறலாம்.

## இதயம் பிளக்கப்பட்டது ஏன்?

நபிகளாருக்கு இந்த ஆப்ரேஷன் ஏன் செய்யப்பட்டது என சிந்திக்கும் போது;

காற்றில் சஞ்சரிக்கும் தூசி மண்டலம் உராய்வதால் மேனியில் அணிந்துள்ள வெள்ளுடை அழுக்காகி விடுவது போல வெண்மையின் மறு உருவாக - உண்மையின் தி உருவாகத் திகழும் உத்தம நபிகளார் அவர்கள், பாவக் கிருமிகள் புடைசூழ உள்ள இந்தப் பொய்யுலகில் வாழ்ந் ததால் அவர்களின் ஒளிமிகுந்த உள்ளத்தில் சிறுசிறு மாசுகள் படிந்து விடாமலிருக்கவே இங்ஙனம் அண்ணலார் அவர்களுக்கு ஆப்ரேஷன் செய்யப்பட்டது' என பேராசிரியர் 'முஹம்மது ரிளா' தன்னுடைய 'முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' என்ற வரலாற்றுப் பெட்டகத்தில் குறிப்பிடுகின்றார்.

புத்திக்கும் யுக்திக்கும் பொருந்தி வரும் இந்த (ஆப்ரேஷன்) புதுமையினைத்தான் நம் பின் பகுத்தறிவுச் செம்மல் பூசிரி அவர்கள் இந்த 75-ஆம் கண்ணியின் இரண்டாம் சுற்றில் ''...தெளிவுண்ட நாதர் நெஞ்சம் தனக்கும்...'' எனச் சொல்லிக் காண்பிக்கின்றார்.

## நபிகளாரின் நெஞ்சுக்கும் நிலாவிற்கும் தொடர்பு

நபிகளாரின் கையால் பிளந்து பிரிந்து நின்ற சந்திரன் சூரிய ஒளியைப் பெற்று பிரதிபலிப்பதை போன்று நபிகளாரின் நெஞ்சு என்ற சந்திரன் அல்லாஹ் என்ற சூரியனின் ஒளியைப் பெற்று பிரதிபலிக்கின்றது என்ற பேருண்மையினை அந்த 75-ஆம் கண்ணியின் இரண்டாம் சுற்றின் இறுதியில் ''...ஒரு சேர்க்கையுண் (தொடர்பு) டே' என எண்பித்துக் காட்டுகின்றார். சுப்ஹானல்லாஹ்...

## பூசிரி அவர்களின் தூர நோக்கு

சந்திரன் சூரிய ஒளியைப் பெற்றுத்தான் பிரதிபலிக்கின்றது. சந்திரனிற்கென்று சொந்தமான தனி ஒளி இல்லை என்பதை சமீப காலத்தில்தான் விஞ்ஞானிகளால் ஊர்ஜிதம் செய்ய முடிந்தது. ஆனால், விஞ்ஞானிகள் தாங்கள் ஏதோ புதிதாகக் கண்டுபிடித்து விட்டதாகப் பீற்றிக் கொள்ளும் இந்தப் (சூரிய ஒளியைத் தான் சந்திரன் பிரதிபலிக்கின்றது என்ற) பேருண்மையை பல நூற்றாண்டு

களுக்கு முன் வாழ்ந்த மெய்ஞ்ஞானி பூசிரி அவர்கள் முன் கூட்டியே சொல்லிவைத்துள்ளார்களென்றால் அவரின் தூர நோக்கை என்னவென்று பாராட்டுவது?

அந்த விஞ்ஞானமென்பது எங்கே இருந்து உருவாகியது என்பதையும் இங்கே நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது அல்லவா?

وَمَنْ حَوَى الْغَارُ مِنْ خَيْرٍ وَمِنْ كَرَمٍ
فَكُلُّ طَرْفٍ مِنَ الْكُفَّارِ عَنْهُ عَمِي (٦٧)

[illegible]
- [illegible]
[illegible]
- [illegible]

குகை தன்னுள் நன்மையும் நற்கொடையையும் அணைத்துக் கொண்டிருந்த போது-
காபிர்களின் கண்ணொளி அதைக் காண்பதை விட்டும் குருடாகி விட்டது.

இதனை

நன்மைவடிவான நபி நாதரையும் வண்கொடையின்
தன்மைவடிவான சித்தீக்தமையும்குகை
- மறைப்பப்,

புன்மைவடிவாம்குபீரோர் போய்வாசல்
நோக்கியும்கண்
இன்மைவடிவாம்குருடர் எனத்திரும்ப
நேர்ந்ததுவே!

என மறைக்காயர் பாடுகின்றார்.

## குகையில் இருந்தவர்

க-ரை : நன்மையின் வடிவான நபிகள் அவர்களையும் வள்ளல் தன்மையின் வடிவான அபூபக்கர் ஸித்தீக் (ரலி-அன்ஹு) அவர்களையும் 'தௌர்' குகை, தன்னுள் மறைத்துக் கொண்டிருக்க (அந்தக் காட்சியைக் கொஞ்சம் மனக்கண் முன் நிறுத்தி கற்பனை செய்துபார்) அவ்விரு அருளாளர்களையும் தேடி ஆங்கே வந்த இருளாளர்களான காஃபிர்கள் அவர்களை கவனிக்க முடியாக் குருடர்களாய் மாற்றப்பட்டார்கள்.

## ஹிஜ்ரத் பயணம்

வி-ரை : நபிகள் நாதர் அவர்கள் பிறந்த ஊரான மக்காவைத் துறந்து மதீனா சென்ற ஹிஜ்ரத் நிகழ்ச்சியின் போது, நபிகளார் அவர்களுக்கு நிகழ்ந்த புதுமைகளை இங்கே சொல்லிக் காண்பிக்கின்றார் பூசிரி;

கி. பி. 622-ஆம் ஆண்டு ஜூன் மதாம் 28-ஆம் தேதி ரபீவுல் அவ்வல் மாதம் பிறை 12-ஆம் நாள் திங்கட்கிழமை ஹிஜ்ரத் நிகழ்ந்தது. இன்றிலிருந்துதான் ஹிஜ்ரி ஆண்டு தொடங்குகின்றது.

மக்காவை துறந்து மதீனாவில் தஞ்சம் புகுந்தார்கள் மன்னர் நபியுல்லா, ஏன் உயிருக்கு பயந்தா? அல்லவே அல்ல, மாறாக, லட்சியத்தின் மீதுள்ள நம்பிக்கையின் காரணமாக. இதனை நபிகளார் அவர்கள் ஹிஜ்ரத் செய்த சூழ்நிலைகளை ஆய்ந்தறிவோர் நிச்சயமாக ஒப்புவர்.

''மண்ணாசைக்கு மசியாமல், பெண்ணாசை காட்டியும் மசியாமல் சொன்ன சொல்லில் பிடிவாதமாகவுள்ள அந்தப் பித்தரை முஹம்மது (ஸல் - அம்) அவர்களை - இனியும் விட்டு வைப்பது அபத்தம். ஆகவே, அவரை கொன்று தீர்ப்பதுதான் விவேகம் என்ற தீர்க்கமான முடிவிற்கு வந்துவிட்ட மக்கத்து மாக்கள் அதற்கான திட்டங்களைத் தீட்டி அன்று - 28-6-622 ஆம் தேதி - ஆம் தேதி - இரவில் நபிகளாரின் வீட்டை வந்து சூழ்ந்து நின்ற அந்த வினர் கூட்டம் கண்ணும் கருத்துமாய் காத்து நின்றனர்.

என்ன செய்ய முடியும்? தாமதித்தால் குவிந்து நிற்கும் பகைவர்தம் கொடுவாளுக்கு இரையாக வேண்டும்! இந் நேரத்தில் விவேகமுள்ள எவரும் என்ன செய்வரோ அதையே தான் எங்கள் அண்ணல் முஹம்மது (ஸல்-அம்) அவர்களும் செய்தார்கள்.

'ஆமாம்; அங்கிருந்து அல்லாஹ்வின் தனிப் பெரும் கருணையின் உதவியால் தப்பித்து அன்புத் தோழர் அபூபக்கர் (ரலி - அன்ஹு) அவர்களையும் அழைத்துக் கொண்டு ஹிஜ்ரத் பயணத்தை மேற்கொண்டனர்.

'தொடர்ச்சியான' பயணத்தை மேற்கொண்டால், எப்படியும் எதிரிகளின் கையில் அகப்பட்டுத் தீரும்படி வருமே' என்ன செய்வது? ஆமாம் இப்படிச் செய்யலாம்... இதோ பக்கத்தில் உள்ள ஜன நடமாட்டம் அதிகமில்லாத 'தௌர்' குகையில் சில நாள் தங்கி மறைந்திருந்து, எதிரிகளுக்குப் போக்குக் காட்டிவிட்டு அவர்கள் 'அங்கே — இங்கே' என எல்லாத் திசைகளியிலும் தேடி அலுத்தபின் மீண்டும் பயணத்தைத் தொடராமே, என ஒரு யோசனை பிறக்கின்றது. இது சரியான - தந்திரமான - யோசனை எனப்பட்டதால் அருளாளர் அஹ்மது (ஸல் - அம்) அவர்களும், பொருளாளர் அபூபக்கர் (ரலி - அன்ஹு) அவர்களும் விரைவாகச் சென்று தௌர் குகையினை அடைகின்றனர்.

ஆள் நடமாட்டமே இல்லாத இடம். அதிலும் குகை... எப்படியிருக்கும்? முற்புதர்களும், கற்கரடுகளும் அடர்ந்தேறியிருக்கக் கேட்கவா வேண்டும்.?

ஆகவே, தனது ஆருயிர்த் தலைவரை சற்று நேரம் வெளியில் அமரச் செய்து விட்டு, அன்பர் அபூபகர் (ரலி-அன்ஹு) அவர்கள் குகையினுள் சென்று புதர்களையும், கற்கரடுகளையும் சுத்தம் செய்து தங்குவதற்குத் தகுதியான இடமாக அதை ஆக்கியபின் அண்ணலை உள்ளே அழைத்து இருவரும் அங்கே மறைந்து வாழத் தலைப்படுகின்றனர்.

## எச்சில், மருந்தாக மாறிய புதுமை

குகையின் உள்ளே, அன்பர் அபூபக்கர் அவர்கள் தமது மடியில் அண்ணலைப் படுக்கச் செய்துவிட்டு அங்குமிங்கும் திரும்பிப் பார்க்கின்றார். அப்போதுதான் குகைச் சுவர்களைச் சுற்றிலும், பொந்தும் - புடவும் நிறைந்திருக்கும் காட்சி அவரது கண்களில் படுகின்றது. பூச்சி பொட்டுகள் - விஷ ஜந்துகள் ஏதேனும் இவைகளில் இருந்து, அது வெளிக்கிளம்பி விட்டால், விபரீதமாகப் பேய்விடுமே! என்ன செய்வது?' என்ற அச்சம் அபூபக்கர் அவர்களை வாட்டுகின்றது. உடனடியாக தன்னிடமிருந்த துணியைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கிழித்து அனைத்துப் பொந்துகளையும் அடைத்து விடுகின்றார். ஆனால் ஒரே ஒரு பொந்திற்கு மட்டும் துணி இல்லாமல் போய் விடுகின்றது. 'இத்தனை துளைகளையும் அடைத்து விட்டு இதனை மட்டும் அடைக்காமல் விட்டால் இத்தனையையும் அடைத்துதான் என்ன பயன்? என்ன செய்யலாம் இதற்கு? ஒன்றுமே ஓடவில்லை. கடைசியாக வேறு வழியில்லாமல் தனது வலக்காலின் பெரு விரலால் அந்தப் பொந்தை மூடிக்கொள்கின்றார்.

இத்தனை காரியங்களும் நபிகளார் அவர்களை தனது இடக்காலின் தொடையில் தூங்க வைத்துக் கொண்டே செய்து முடிந்த செம்மல் அபூபக்கர் அவர்கள் 'இனி ஒரு பயமுமில்லை' என்றெண்ணி, நிம்மதிப் பெருமூச்செறிந்தவராக, அமைதி தவழும் அண்ணலின் முகத்தைப் பார்த்து அகமகிழ்ந்த வண்ணம் அமர்ந்திருக்கின்றார்.

ஆனால், அவர் தனது வலக்காலின் பெருவிரலை எங்கே வைத்துள்ளார்? அது அவருக்கு ஞாபகமே இல்லை. ஏன் தெரியுமா? அவர்தான் பெருமானை ரசித்தும் பேரின்பக் கடலில் மூழ்கிக் கிடக்கின்றாரே! அக உலகின் ஆழத்தில் மூழ்கித் திரிபவர்களுக்கு, புறவுலகின் லாபமோ, நட்டமோ தெரிந்திட நியாயமில்லையல்லவா?

அப்போது,

சுருக்கென்று ஓர் உணர்வு! அதைத் தொடர்ந்து ஒருவகைக் கொடு கொடுப்பு... அதன்பின் தான், தனது வலக்காலை ஏறிட்டுப் பார்க்கின்றார் அபூபக்கர் - அது தான் பொந்தை அடைக்கும் 'காரக்' காக பயன்படுத்தப் பட்டுள்ளதே — ஆகவே நிலைமையைப் புரிய வெகு நேரம் பிடிக்கவில்லை அவருக்கு. ஆமாம் ஏதோ விஷ ஜந்து தீண்டி விட்டது. அவர் இப்படி சிந்தித்துக் கொண்டிருந்த கணநேரத்திற்குள், விஷம் மேல் நோக்கி மின் வேகத்தில் ஏறிக்கொண்டிக்கிறது - கண்கள் கட்டிக் கொண்டு வருகின்றன - மேனியெல்லாம் ஊசிகொண்டு குத்துவது போன்ற உணர்வு தென்படுகின்றது. அப்படியே சாய்ந்துவிட வேண்டுமென தோன்றுகிறது அவருக்கு. ஆனால், சாய்ந்தாலோ அல்லது கை கால்களை ஆட்டினாலோ தன் மடிமீது கண்ணயர்ந்திருக்கும் ஹபீபுல்லாவின் தூக்கம் கலைந்து விடுமே' இப்படி ஒரு எண்ணம் அவரின் மனதை கருங்கல்லாக மாற்றிவிடுகின்றது. உச்ச கட்ட வைராக்கிய உணர்வோடு விடாப்பிடியாக ஆடாமல் அசையாமல் அமர்ந்திருக்கின்றார், அன்பிற்குப் பொருளான அந்த அபூபக்கர் ...சுப்ஹானல்லாஹ்..

ஆனால் இவருக்கு அண்ணல் நபியுல்லா மீது அன்பிருக்கலாம். அதற்காக அவரின் மேனியிலே பாய்ச்சப் பட்டுள்ள விஷத்திற்குமா அன்பிருக்க முடியும்?... ஆகவே அது, அதன் வேலையை தொடர்ந்து செய்தது. அன்புத் தோழர் அபூபக்கரின் முகமெல்லாம் மஞ்சனிக்கத் தொடங்கி - விஷத்தின் கடுரத்தைத் தாங்கிக் கொள்ள முடியாமல் நெற்றியில் வியர்க்கத் தொடங்கி, அந்த வியர்வை முத்துக்கள் சில அவரின் மடி. மீதிருக்கும் அண்ணலாரின் முகத்தில் தெரித்துச் சொட்டுகின்றது. உடனே அண்ணலார் கண்விழித்துப் பார்க்கின்றார்கள்; தோழர் அபூபக்கரை. ''நண்பரே! உமக்கு என்ன நேர்ந்து விட்டது... ஏன் ஒரு மாதிரியாகக் காட்சி தருகின்றீர்'' எனக் கேட்கின்றார்கள்.

அப்போது, கொஞ்சம் தயங்கியவாரே ''ஒன்றுமில்லை... என் வலக்காலின் பெருவிரலில் ஏதோ தீண்டிவிட்டது போலும்'' எனத் தட்டுத் தடுமாறி கூறுகின்றார் அன்பர் அபூபக்கர். இது கேட்டு உணர்ச்சி வசப்பட்ட உத்தம நபிகளார் உடனடியாக எழுந்து, பொந்தை அதுவரையிலும் மறைத்துக்கொண்டிருந்த அபூபக்கர் அவர்களது காலை எடுக்கச் சொல்லி விஷவாயின் மீது தங்களின் பரக்கத்துப் பொருந்திய எச்சிலைத்தொட்டு ''பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்...'' எனக்கூறித் தடவுகின்றார்கள். சுப்ஹானல்லாஹ்; என்ன ஆச்சரியம்! அந்த நொடியிலேயே மேல்நோக்கி ஏறிய அந்த கருநாகத்தின் விஷம்-கீழ் நோக்கி விழும் நீரைப் போல - மடமடவென இறங்கத் தொடங்கி விட்டது. (பெருமான் நபிகள் நாதருக்கு நிகழ்ந்த புதுமைகளில் இதுவும்

ஒன்று) அதன்பின் அண்ணல் படுக்கவில்லை அபூபக்கரும் படுக்க மறுத்து விடுகின்றார். இந்நிலையில் ஆள் அரவம் அங்கும் இங்கும் கேட்கின்றது. அபூபக்கர் அவர்களுக்கு 'வெளியில் ஆள் நடமாட்டம்' எனக் கண்டவுடன் ஒரு வகை பீதி ஏற்படுகின்றது... 'அண்ணலே! அடியேனுக்கு அச்சமாக உள்ளது...' என மெதுவாகக் கூறுகின்றார்.

## அல்லாஹ் நம்முடன் உள்ளான்

இதனைக் கேட்டு அதிசயப்பட்ட அண்ணல் நபியுல்லா 'ஏதென்ன நண்பரே! புதுமை? நாம் மட்டும் தான் உள்ளோமா? நம்முடன் அல்லாஹ்வும் இருக்கின்றான் பயம் விடுமின்...'' எனக்கூறிக் கொண்டிருக்கும் போதே, எதிரிகள் - மக்கத்து மாக்கள் - வேங்கைப் புலியெனப் பாய்ந்து குகையின் தலைவாசலிற்கே வந்து விட்டார்கள்.

அப்போது எதிரிகளில் ஒருவர் கூறுகின்றார்... 'இது வரைதான் கால் தடம் இருக்கின்றது. இதற்கப்புறம் காண வில்லை. ஆகவே அவர்கள் இந்தக் குகையினுள் தான் ஒளிந்திருக்க வேண்டும். ஆகவே குகைக்குள் சென்று நன்றாகத்தேடிப் பாருங்கள்'' என. மற்றவர்கள் குகையின் நுழைவாசலில் எட்டிப் பார்க்கின்றார்கள் (சாதாரணமாக தலைவாசலில் நின்று எட்டிப் பார்த்தால் உள்ளே உள்ளவைகளை நன்கு கண்டு கொள்ளமுடியும். அந்த அமைப்பில் தான் அந்த தௌர் குகை இருந்தது, அங்ஙனம் எட்டிப்பார்த்த அனைவரும் - இங்கே ஆள் இருப்பதாகத் தெரியவில்லை எனக் கூறுகின்றார்கள்.

நமது நாயகப் பாவலர் சீறா அவர்கள் இந்த நிகழ்ச்சியினைத்தான்;

நன்மைவடிவனவான நபி நாதரையும்-
வண்கொடையின்
தன்மைவடிவான சித்தீக் தமையும் குகைமறைப்ப
புன்மைவடிவாம்குபிரோர் போய்வாசல்
நோக்கியும்கண்
இன்மைவடிவாம்குருடர் எனத்திரும்ப நேர்ந்ததுவே

என கூறிக் காண்பித்து தான், ஒரு 'இலக்கிய மாமுனி' என்பதை நிரூபிக்கின்றார்

## வேட்டையாடும் புலி

புதுமைப் பூக்களைத் தொடுக்கும் பணியிலீடுபட்ட புலவர், சாதாரணமான இந்த வரலாற்றுச் சம்பவத்தை ஏன் இங்கே, வீணாகக் கூறிக் காண்பிக்கின்றார்? என எவரும்கருதிட வேண்டாம். ஏனெனில்,

வைகறை நேரம். தவிர, பொழுது உதய திசையை நோக்கி வெளிவரத் தயாராக இருக்கின்றது. ஆகவே வைகறை நேரத்தில் பரவி நிற்கும் மெய் வெள்ளையின் வெளிச்சம் குகையினுள்ளும் பரவியே இருக்கும். தவிர, தலைவாசலில் நின்று பார்த்தாலே உள்ளே "என்ன இருக்கின்றது? என்ன இல்லை?'' என்பதைக் கண்டறிந்து விடத் தக்க அமைப்பில் அந்தக்குகை அமைந்துள்ளது. அன்றி, தேடிவந்துள்ள எதிரிகள் 'வேங்கைப்புலி வேட்டை மிருகத்தை விரட்டுவது போலுள்ள' மன நிலையில் உள்ளவர்கள், இப்படிப்பட்ட சூழலில் எதிரிகள் தலை வாசலில் எட்டிப் பார்த்தும் கூட, உள்ளே இருக்கும் நபியும், தோழரும் அவர்களின் கண்களுக்குத் தெரியவில்லை என்றால், என்ன பொருள்? அல்லாஹ் தனது நபியையும் நபியின் தோழரையும் பார்க்க முடியாதவாறு அந்த எதிரிகளின்

கண்களில் திரையிட்டு விட்டான் என்பதில் எவராவது ஐயம் கொள்ள முடியுமா? ஆகவே, பார்ப்பதற்கு அனைத்துத் தோதுவுகளும் இருந்தும், பார்க்க முடியாதவாறு செய்யப் பட்ட இந்நிகழ்ச்சியும் எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு அல்லாஹ்வினால் வெளிப்படுத்தப்பட்ட ஒரு புதுமை (முஃஜிஸா) தான்; ஆகவேதான் புதுமைப் பூக்களின் வரிசையிலே 3-வது மலராக இதை பூசிரி (ரஹ்) அவர்கள் சொல்லிக் காண்பிக்கின்றார்கள்.

என்ன, பொருத்தம் தானே?

---

فَالصِّدْقُ فِي الْغَارِ وَالصِّدِّيقُ لَمْ يَرِمَا
وَهُمْ يَقُولُونَ مَا بِالْغَارِ مِنْ أَرِمِ (٤٤)

[illegible]
- [illegible]
[illegible]
- [illegible]

ஆதலால்; மெய்யும் மெய்ப்பித்தவரும் - கருத்துக் குருடர்களின் கண்களுக்குப் புலப்படாமல்-குகையுனுள் இருந்தும்

அந்தக் காஃபிர்கள் ‘குகையினுள் எவருமிலர்’ எனக் கூறிப் போந்தனர்.

---

இதனை-

மெய்யும்மெய்ப்பித்தவரும் மெய்யாய் மறைந்திருப்ப
பொய்யர்குகையுள்ளவரும் புகுந்திருக்க
வில்லையென்றார்

என பாடுகின்றார் மறைக்காயர்.

வி-ரை : மெய்யின் முழு உருவமாக நபிகளார் திகழ்வதால் நபிகளாரை மெய்யென்றும், மிஃராஜ் நிகழ்ச்சியை செவியேற்ற மாத்திரத்தில் "எம்மான் முஹம்மது அங்ஙனம் மிஃராஜ் சென்று வந்ததாகக் கூறினார்களென்றால் அது முழுக்க முழுக்க உண்மையாகவே இருக்கும். ஆகவே அவர்களின் மிஃராஜ் பயணத்தை 'மெய்' என விண்ணப்பிக்கின்றேன்" எனக் கூறி அந்த மெய்யுடைப் பயணத்தை மெய்ப்பித்தமையால், சித்தீக்-மெய்ப்பித்தவர், என்ற சிறப்பிற்கு உரிதாகிவிட்ட அபூபக்கர் (ரழி- அன்ஹு) அவர்களை 'மெய்ப்பித்தவர்' என புகழ்ந்து கூறும் இமாம் பூசிரி அவர்கள்; அவ்விரு அருளாளர்களும் தௌர் குகையில் மறைந்திருக்க, அங்கே சென்றடைந்த காபிர்களுக்கிடையே நடைபெற்ற உரையாடலை (இதற்கு முன் கண்ணியின் விளக்கவுரையில் எண்பித்துக் காட்டப்பட்டுள்ளதை) இங்கே சித்தரித்துக் காண்பிக்கின்றார்.

---

ظَنُّوا الْحَمَامَ وَظَنُّوا الْعَنْكَبُوْتَ عَلَى
خَيْرِ الْبَرِيَّةِ لَمْ تَنْسُجْ وَلَمْ تَحُمِ

**ளந்நுல்ஹமாமவளந் நுல்அன்க**
**- பூத்த அலா**
**கைரில்பரிய்யதிலம் தன்ஸுஜ்வ**
**- லம்தஹும்**

'படைப்பினிற் சிறந்தோர் குகையினுள் இருந்தால் அதனைப் புறாக்கள் சுற்றிச்சுற்றி வட்டமிடாது; நுழைவாயிலில், சிலந்திப் பூச்சி, வலை பின்னாது' என அந்தக் காபிர்கள் எண்ணிப் போந்தனர்.

இதனை-

புறவம்பறந்துசுற்றா புகும்வாய்ச் சிலந்திபின்னா
இறைப் படைப்பில் மேலோர் உள்ளிருந்தால்
என நினைத்தார்

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: புறாக்கள் குகையின் தலைவாசலில் பறந்து சுற்றி சுற்றி வருவதாலும், சிலந்திப் பூச்சி தலைவாசலில் வலை பின்னியுள்ளதாலும் படைப்பினிற் சிறந்த பெரியோர் இதில் இருக்க மாட்டார்கள் என அந்தக் காஃபிர்கள் கருதினார்கள்.

## எதிரிகளின் ஏமாற்றம்

வி-ரை: தௌர் குகையினுள் எவருமே இல்லை; என அதனுள் எட்டிப்பார்த்த எதிரிகள் சொன்னவுடன் அவர்களில் ஒரு வீராப்பு மிக்கோன் சொன்னான்; "உள்ளே சென்றுதான் பாருங்களேன். வெளியில் நின்று கொண்டே சாக்சாப்புச் சொல்லுகின்றீர்!" என்று, அதற்கு தலைவாசலை எட்டிப்பார்த்தவர்களில் ஒருவன் (உமய்யதிப்னு கலபு) - சொன்னான் "உள்ளே ஏன் சென்று பார்க்க வேண்டும் - இதோ நுழைவாசலைச் சுற்றிலும் சிலந்திப்பூச்சி வலைபின்னி இருக்கின்றது. போதாக் குறைக்கு, புறாக் கூட்டங்கள் வேறு தலைவாசலில் படபடத்து சுற்றித் திரிகின்றது. இன்று இரவு இதற்குள் ஆள் சென்றிருந்தால் இலைகளெல்லாம் இடுந்திடுமா? சிலந்தி வலை சிதறிப் போயிருக்கும்...புறாக்கள் கலைந்து வேற்றிடம் சென்றிருக்குமே" என

இதனைக் கேட்டதும் மற்றவர்கள் ''ஆமாம்! ஆமாம்!'' என உமய்யதிப்னு கலபிற்குப் பின் பாட்டுப் பாடினார்கள். ஆகவே தௌர் குகையினுள் சென்று பார்ப்பதைக் கைவிட்டு விட்டு அங்கிருந்து ஆயாசத்துடன் சென்று விட்டார்கள் அந்த எத்தர்கள்.

இந்த வரலாற்று நிகழ்ச்சியினைத்தான் நமது வரலாற்று நிபுணர் பூசிரி இங்கே;

''புறவம் பறந்து சுற்றா;...'' எனச் சொல்லிக் காட்டுகின்றார்.

என்றாலும் வரலாற்று நிகழ்ச்சியினைச் சொல்லிக் காட்டுவது மட்டும் அவர் நோக்கமன்று அத்தோடு இந்த வரலாற்றிற்குள் ஒளிந்து கொண்டுள்ள இரண்டு புதுமைகளை சொல்லிக் காட்டுவது தான் பூசிரி அவர்களின் குறிக்கோளாகும். அவைகளாவன;

## சிலந்தியும் - புறாவும்

சிலந்திப் பூச்சி முழுமையாக வலை பின்னி முடிக்க குறைந்தது இருபத்து நான்கு மணித் துளிகள் கொண்ட ஒருநாள் பிடிக்கும் என நிபுணர்கள் கூறுகின்றனர். உண்மை நிலை இப்படியிருக்க, அன்று இரவுதான் அண்ணல் நபி மணியும் அன்பர் அபூபக்கரும் தௌர் குகையினுள் சென்றுள்ளார்கள். சிலந்திப் பூச்சி அவர்கள் வருவதற்கு முன் தௌர் குகையில் தலை வாசலில் வலை பின்னியிருந்தால் அவ்விரு

வரும் உள்ளே நுழையும்போது அது கலைந்து சின்னாபின்னமாகியிருக்கும். அப்படித்தானே?

ஆனால், அன்று இரவுதான் அவ்விரு அருளாளர்களும் குகையினுள் சென்றுள்ளார்கள். அவர்கள் உள்ளே சென்ற சில மணி நேரத்திற்குள் தௌரின் தலைவாசலில் எதிரிகள் பார்க்கும்போது முழுமையான வலை பின்னப்பட்டு இருந்தது. என்றால் இது இயற்கையான காரியமாகுமா? இல்லை இல்லவே இல்லை. மாறாக ஏகனாகிய அல்லாஹ் அந்தச் சிலந்திப் பூச்சிக்கு கட்டளையிட்டு விட்டான் ' எனது ரசூலும் ஸித்தீக்கும் இங்கே தஞ்சம் புகுந்துள்ளார்கள். ஆகவே நீ அவர்களுக்கு அபயம் கொடுத்திடு'' என்று. அன்றி உடனுக்குடன் முழுமையான முறையில் வலை பின்னி முடிக்கும் ஆற்றலையும் அதற்கு வல்ல அல்லாஹ் கொடுத்தான். இந்த அடிப்படையில்தான் எதிரிகள் தேடுவதற்குள் தௌரின் தலைவாசலில் உடனுக்குடன் வலை பின்னி எதிரிகளின் கண்களைக் கட்டியதோடு எம்மான்களுக்கு அபயமும் கொடுத்தது அந்த சிலந்திப்பூச்சி இந்த முஃஜிசா - புதுமை - முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் பொருட்டால் வெளிப்பட்டதன்றோ!

ஆள் நடமாட்டமுள்ள - மனித வாடையுள்ள - இடத்தில் காட்டுப் புறாக்கள் கண நேரமும் தங்காது.

அப்படியிருக்க நபிகளாரும் அபூபக்கர் (ரலி - அன்ஹு) அவர்களும் குகையினுள் இருக்க, குகையின் வாசலில் காட்டுப் புறாக்கள் தங்கியிருந்ததென்றால் இதுவும் தனது

கருதினார்கள். அவர்கள் கருதியதைத்தான் நாங்கள் சொல்லிக் காண்பித்தேனே தவிர, என் இஷ்டத்திற்கு - நபிகளாரை நாம் எப்படிக் குறைத்துச் சொல்லுவது? என்பதற்காக - அப்படிச் சொல்லவில்லை'' என இடித்துரைப்பது நம் மனக்கண்களில் தெரிகின்றது.

ஆகவே, அவர் எதும் சிக்கல் ஏற்படுத்தவில்லை.

---

وِقَايَةُ اللهِ أَغْنَتْ عَنْ مُضَاعَفَةٍ
مِنَ الدُّرُوعِ وَعَنْ عَالٍ مِنَ الأُطُمِ ﴿٤٩﴾

விகாயதுல்லாஹி அஃனத் அன்
- (மு)ழாஅஃபதின்
மினத் துரூஇ வஅன் ஆலின் (மி)
- னல் உதுமி

வல்ல அல்லாஹ்வின் காப்பு எனும் கேடயம் நபிகளாருக்கும், சித்தீக் அவர்களுக்கும் கிடைத்ததால், தற்காப்புக்காகத் தேவைப்படும் இரட்டை உருக்குச் சட்டைகள், உயரமான கோட்டைகள் ஆகியன (அந்த அருளாளர்களுக்கு) தேவையில்லாமல் போய்விட்டது.

அன்றி ;

அரபிகள் மிக ஆபத்தான கால கட்டங்களில் பாதுகாப்பிற்காக இரட்டை உருக்குச் சட்டைகளைப் பயன்படுத்துவதும்; உயர்ந்த கோட்டைக் கொத்தளங்களைப் பயன்படுத்துவதும் வழக்கம். அவ்விரண்டையும் அவர்கள் மிக உயர்ந்த பாதுகாப்புகளாகக் கருதுவர்.

ஆகவே நான் உலகியலின் உயர்ந்த பாதுகாப்புகளான இரட்டை உருக்குச் சட்டைகளையும் உயர்ந்த கோட்டை கொத்தளங்களையும் (அரபிகளின் மனநிலைப் படி) கூறிக் காண்பித்து; அப்படிப்பட்ட எந்த பாதுகாப்புகளின் துணையுமின்றியே 'அல்லாஹ்' என்ற ஒரே பெரும் பாதுகாப்பின் துணையால் அவ்விருவரும் தப்பித்தனர் என இங்கே சொல்லிக் காண்பிக்கின்றார்.

مَاسَامَنِي الدَّهْرُ ضَيْمًا وَاسْتَجَرْتُ بِهِ
اِلَّا وَجَدْتُ جِوَارًا مِنْهُ لَمْ يُضَمِ ﴿٨٠﴾

மா ஸாமனித் தஹ்ரு ளைமன் (வ்) வஸ்
தஜர்த்து பிஹீ
இல்லா வஜத்து ஜிவா ரன் (ம்) மின் ஹு
- லம் யுளமி

அவலம் செய்யும், தீங்கை விட்டும், என்னை காக்கும்
படி நபிநாதர் அவர்களை நான் வேண்டினால்,
சிறு இடையூறு கூட சம்பவிக்காதபடி முழுமை
யான பாதுகாப்பை நான் பெற்றுய்வேனே!

இதனை -
காலம் செய்தீங்கை விட்டுக்காப்பாற்ற நான்
- வேண்டின்
சிலநபி மூலம், நலை தீர்காப்புறாதிலனே!
என மறைக்காயர் பாடுகின்றார்.

## அல்லாஹ்வின் பாதுகாப்பைப் பெற வழி!

கருத்துரை : காலத்தின் கோலத்தினால் அல்லது காலத்தில் வாழும் காழ்ப்புணர்வுக்காரர்களால் எனக்கு ஏதாவது தீங்கு ஏற்பட்டு அந்தத் தீங்கை விட்டும் என்னை பாதுகாத்தருளும்படி எம்மான் முஹம்மது (ஸல் - அம்) அவர்களிடம் நான் விண்ணப்பித்தால் நிச்சயமாக அவர்களின் அரவணைப்பும் பாதுகாப்பும் எனக்கு கிடைக்கத் தான் செய்யும்.

وَلَا التَمَسْتُ غِنَا الدَّارَيْنِ مِنْ يَدِهِ
إِلَّا اسْتَلَمْتُ النَّدَا مِنْ خَيْرِ مُسْتَلِمِ ﴿٨١﴾

வலல்தமஸ்ஸதனா அத்தாரைனி
-மின் (ய) யதிஹி
இல்லஸ்தலம்த்துந்நதா மின்கைரி
-முஸ்தலமி

ஈருலகங்களின் சௌபாக்கியங்களை நபிகளார் அவர்களின் பொருட்டால் நான் வேண்டினால் நல்லோரான நபிகளார் அவர்களின் தயவை நான் பெற்றுக் கொள்வது நிச்சயித்தலும் நிச்சயமாகும்.

இதனை -

ஈருலகப்பேறும் நபிஇரும்துணையாம் நான்வேண்டின்
கோரப்படுவோருள் நல்லார்கொடை நான்
-பெறாதிலனே

என்று மறைக்காயர் பாடுகின்றார்.

## வஸீலா பற்றிய கொள்கை விளக்கம்

இங்கே, இந்த எண்பதாவது எண்பத் தொண்ணாவது கண்ணிகளில் 'காலம் செய்யும் தீங்கை விட்டும் என்னைக் காக்கும்படி வேண்டினால்' என்று தொடங்கி வஸீலாத் தேடுதலினால்தான் அல்லாஹ்வின் அருளைப் பெற்று பரிணமிக்க முடியும் என்று இடித்துரைத்து சுன்னத்-வல்-ஜமாஅத் கொள்கையினைக் குன்றேறி முழங்குகிறார் புலவர்மணி பூசிரி அவர்கள்.

நோய் எற்பட்டால் அதற்கு மருத்துவம் பார்ப்பதை ஃபர்ளாக - மார்க்கத்தின் கட்டாயக் கடமைகளில் ஒன்றாக ஆக்கி நமது இஸ்லாமியத்தில் சட்டம் காணப்பட்டுள்ளது.

எந்த அளவுக்கு இந்த மருத்துவத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு உள்ளதென்றால்; ஒருவன் உயிருக்குப் போராடிக் கொண்டு இருந்திடும் போது-அவனுக்கு உடனடியாக மருத்துவம் செய்திட்டால் அவனைப் பிழைக்கச் செய்திட முடியும் என்றிருக்குமானால் - அந்த சந்தர்ப்பத்

தில் 'இமாம்ஜமாஅத்' தப்பிவிடும் என்றிருந்தாலும், அல்லது நேரத்துத் தொழுகை 'களாவாக' ஆகிவிடும் என்றிருந்தாலும் அவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் அந்த மனிதனுக்கு சிகிச்சை செய்வதற்குத்தான் முக்கியத்துவம், முதன்மையும் கொடுத்து சிகிச்சை செய்வது மருத்துவனாக உள்ள முஸ்லிமின் மீது கட்டாயக் கடமையாக இருக்கின்றது. நிலமை இப்படி இருந்திடும்போது அந்த மருத்துவன் - டாக்டர் - வைத்தியர் 'ஹூம் - நான் தொழுகையை நுறைவேற்றி விட்டு அதன் பின்னர்தான் அவனுக்குச் சிகிச்சை செய்வேன்' என்று அவன் தொழுகை விஷயத்தில் பிடிவாதம், காட்டிக் காலதாமதம் செய்ததின் காரணமாக அந்த நோயாளின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டு இருக்குமென்றால் - அதன் காரணமாக அந்த மருத்துவன் அல்லாஹ்வின் சன்னதியில் குற்றம் பிடிக்கப் படுவான்.

(நூல் : நிஹாயா)

அஃதன்றி;

எல்லாம் வல்ல அல்லாஹ் தனது இனிய திருமறையாம் குர்ஆனில் ஜும்ஆ தொழுகையை வலியுறுத்திடும் முககாக :

விசுவாசிகளே! வெள்ளிக்கிழமையாகிய) ஜும்ஆ நாளன்று (ஜும்ஆத்) தொழுகைக்காக (பாங்கு சொல்லப் பட்டு நீங்கள்) அழைக்கப்பட்டால், வர்தகத்தை விட்டு விட்டு, அல்லாவை தியானிக்க (பள்ளிவாசலுக்கு) நீங்கள்

நீங்கள் விரைந்து செல்லுங்கள். நீங்கள் அறிவுடையோர்களாக இருந்தால், இதுவே உங்களுக்கு மிக்க நன்று.

(குர் : 63; 9)

என்று அறிவுறுத்தியுள்ளான்.

இந்தத் திருவசனத்தை ஆதாரமாகக் கொண்டு, வெள்ளிக்கிழமை ஜும்ஆ நாளன்று ஜும்ஆவிற்கு பாங்கு சொல்லப்பட்டு விட்டால் வர்த்தகம் செய்வதும், தொழில்களில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதும் - உத்தியோகங்களில் கவனம் செலுத்திக் கொண்டிருப்பதும், இன்னம் இது போன்ற சம்பாத்தியங்களிலும், உலகியல் நடவடிக்கைகளிலும் ஈடுபாடு காட்டி ஜும்ஆவைப் புறக்கணிப்பதுமெல்லாம் பச்சையான ஹராமாகும் - என்று பிக்ஹுகலை வல்லுனர்கள் சட்டம் சமைத்துத் தந்துள்ளார்கள்.

ஆனால்; ஒரு மருத்துவர் உயிருக்குப் போராடிக் கொண்டிருக்கும் ஒரு மனிதனுக்கு சிகிச்சை செய்திட வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டு அதன் காரணமாக ஜும்ஆவிற்கு பாங்கு சொல்லப்பட்ட பின்னரும் பள்ளிக்கு வராதிருந்து (இன்னும்) சொல்லப்போனால், அந்த சிகிச்சை செய்திட்ட காரணத்தால் ஜும்ஆவிலேயே) கலந்து கொள்ள முடியாது போனாலும் அந்த மருத்துவருக்கு-அந்தஜும்ஆவில் கலந்து கொள்ளாமல் தனது தொழிலைக் கவனித்ததன் காரணமாக - ஹராம் ஏற்படாது என்பது மாத்திரமல்ல, அவர் ஜும்ஆவில் கலந்து கொள்வதைவிட அம்மனிதனுக்கு சிகிச்சை செய்வதில்தான் அவர் முக்கியத்துவமும், முதன்மை கொடுத்து ஈடுபாடு கொள்ள வேண்டும்

(நூல் : ரத்துல் முக்தார்)

பெருந்தகையீர்! இஸ்லாமிய மார்க்கத்தில் மனித தர்மங்களுக்கு உருவகம் கொடுக்கப்பட்டுள்ள அழகைக் கண்டீர்களா?

அப்படியென்றால், மருத்துவத்திற்கு எவ்வளவு பெரிய முக்கியத்துவம் வளமார் மார்க்கமாம் தீனுல் இஸ்லாத்தில் கொடுக்கப் பட்டுள்ளது?

'ஆவதும் அவனால், அழிவதும் அவனால் அவனல் லால் புவிமீது அணுவும் அசையவே அசையாது' என்று அல்லாஹ் ஒருவனையே நம்பி வாழ்வு தாழ்வு ஆகிய அனைத்திலும் அந்த வல்லவனின் மீதே தவக்குல் வைத்து (பரம் சாட்டி) வாழ்ந்திடும்படி பணிக்கப் பட்டுள்ள இஸ்லாமிய சன்மார்க்கத்தில், மருத்துவத்திற்கு இவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பது முறை தானா?

என்னவரே! என் இனியரே சற்றே சிந்தித்துப் பாருங்கள்.

நோய் குணமாகி சுகம் கிடைக்கின்றதென்றால் அது மருந்தினாலா? அல்லது, மருத்துவரின் திறமையினாலா, அல்லவே! நோயை விடுபவனும் அவன். அதைப் போக் குபவனும் அவன் தானே?

உண்மை இப்படியிருக்கும் போது மருத்துவத்திற்கு மீக்கூறிக் காண்பிக்கப்பட்ட பிக்ஹ சட்டங்களில் கண்டுள்ளபடி மருத்துவத்திற்கு இவ்வளவு பாரதூரமான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு உள்ளதென்றால் என்ன பொருள்.

சிந்திக்கும் திறன் படைத்தோரே! மீண்டும்

சிந்தித்துப் பாருங்கள். நாம் வாழ்ந்து கொண்டுள்ள இந்த உலகம் காரணீய உலகம். காரணத்தை வைத்துத்தான் இங்கே காரியம் உண்டாகும். பெண் கர்ப்பமுற்று தாய்மை அடைகின்றாள் என்றால்' அதற்கு காரணமானவன் கணவன்! அல்லவா? உயிரினம் உயிருடன் - திடகாத்திரமாக - உலவித்திரிய முடிகின்றதென்றால் அதற்கு காரணமாக அமைந்திருப்பது உணவு அல்லவா?

பஸ், விமானம் கப்பல் போன்ற வாகனங்கள் ஓடவும் பறக்கவும், மிதந்து செல்லவும் முடிகின்றதென்றால் அதற்குக் காரணமாக அமைந்திருப்பது எரிபொருள்! அல்லவா? அதற்காக; கணவன்தான் கருக்குழவியை உருவாக்கினான் என்று கூறிடுவது கூடுமா? உணவுதான் உயிரினங்களை வாழவைத்துக் கொண்டுள்ளது என்று பும்பலாகுமா? எரிபொருள் இல்லாவிட்டால் எதுவுமே இயங்கிட முடியாது என்று நினைப்பது தகுமா? கூடாது - நம்பலாகாது-தகாது என்ன, அப்படித்தானே?

ஏனெனில்,

தாயின் கருவில் கரு உண்டாவதற்கு கணவன் ஒரு காரணீயமே தவிர கருவில் கணவனின் விந்தைச் செலுத்த வைப்பவனும், அந்த விந்திற்கு ஜீவாதாரத்தை வழங்குபவனும், கருவில் ஊடுருவிய விந்து மணியை இரத்தக் கட்டியாகவும், சதைத் துண்டாகவும், எலும்பு-நரம்பு கலந்த தசைப் பிண்டமாகவும், ஆண்-பெண் பாலாகவும் மாற்றுவதுடன் அதற்கு நான்கு மாதம் பத்து நாட்களில் உயிரைக் கொடுப்பவனும், உயிர் பெற்ற அக்குழவி தாயின் கர்ப்பத்

தை விட்டும் வெளிப்படும் வரை அதைப் பாங்காகப் பாது காப்பவனும் வல்லவனாகிய அல்லாஹ்தானே தவிர கணவனல்ல.

ஆனால் கணவன் கரு உருவாவதற்கு ஒரு வஸீலா வாக - காரணியமாக இருக்கிறான் அவ்வளவுதான்.

அதுபோலவே, வல்ல அல்லாஹ்தான் எதை - எதை; எங்கு-எங்கு, எவ்வளவு காலகட்டங்களுக்கு உயிர் வாழ்ந் திட வைக்க விரும்புகின்றானோ அது-அதை, அங்கங்கு அவ்வளவு காலகட்டங்களுக்கு உயிர் வாழ்ந்திட வைத்துக் கொண்டுள்ளானே தவிர உயிரினங்களை வாழ வைப்பது உணவு அல்ல. உணவுதான் உயிர் வாழ வைக்கிறது என்றால் இன்றைக்கு வலியவனாக உள்ளவன் மரணிப்ப தற்கு அர்த்தமே இல்லாமல் போய்விடுமே! ஆதலினால் உயிரினம் உயிர் வாழ்வதற்கு உணவு ஒரு வஸீலாவே (காரணியமே) தவிர அதுதான் வாழ வைக்கிறது என்பது உண்மையல்ல.

அதுபோலவே, எரிபொருட்கள் வாகனங்கள்-இயந்திரங் கள் இயங்குவதற்கு ஒரு வஸீலாவே தவிர எரிபொருளி னால்தான் இயங்கின்றது என்பதல்ல.

இவைகள் போலவே மனிதனுக்கு நோய் ஏற்பட்டால் அதை குணமாக்க வேண்டுமென்பது இறைவனது சித்த மாக இருக்குமானால் குணமாக்குகின்றான் அல்லது அந்த நோயையே அவனது மரணத்திற்கு காரணமாக ஆக்க வேண்டுமென்பது அவனது சித்தமாக இருக்குமானால் அந்த நோயாலேயே அவனை மரணிக்கவும் வைக்கின்

றான். அதே நேரத்தில் ஏற்பட்ட நோய் விலகுவதற்கு சிகிச்சையை-மருந்தை ஒரு வஸீலாவாகவும் ஆக்கி வைத்துள்ளான் அந்த மகா வல்லவன். இப்படி தனது சித்தம் - நாட்டம் - விருப்பம் நிறைவேறுவதற்கு காரணியமாக-வஸீலாவாக மருந்தும் மருத்துவம் அறிந்த மருத்துவனும் இருப்பதினால்தான் முன்னர் கூறிக் காண்பிக்கப்பட்டது. போன்று மார்க்கத்தின் கட்டாயக் கடமைகளை ஆற்றுவதிலிருந்தே கூட அந்த மருத்துவர்களுக்கு விதிவிலக்கு வழங்கப்பட்டுள்ளது.

பெருந்தகையீர்! என்ன, எதையோ ஆரம்பித்து, எங்கெங்கோ சுற்றி கடைசியில் வஸீலாவிற்கு வந்து விட்டானே என்று திகைக்கினறீர்! அல்லவா?

மார்க்கத்தில் அங்கீகரிக்கப்பட்டுள்ள வஸீலாவின் இலக்கணம், கொள்கை விளக்கம், கோட்பாடுகளெல்லாம் இதுவரை நான் கூறிக் காண்பித்தவைகளில் முழுமையாக அடங்கிப் போயுள்ளது,

## வஸீலாவின் படித்தரங்கள்

வஸீலாவில் பல படித்தரங்கள் உள்ளன.

நோயாளி கை மருந்துகளினால் நோய் நிவாரணம் பெற்றிட முயல்வது ஒருவகை வஸீலா.

அதே நோயாளி டாக்டரை அணுகுவது ஒருவகை வஸீலா.

டாக்டரை அணுகி பரிசோதனைகளெல்லாம் முடிந்த பின்னர் சாதாரணச் சிகிச்சை மூலம் நோய் நிவாரணம் பெற்றிட முயல்வது ஒருவகை வஸீலா.

சாதாரணச் சிகிச்சை பயனளிக்காத போது ரணச் சிகிச்சை மூலம் நிவாரணம் பெற்றிட ஆவன செய்வது ஒருவகை வஸீலா.

சிகிச்சைக் காலங்களில் டாக்டரின் உபதேசப்படி பத்தியங்களைக் கடைப்பிடிப்பது ஒருவகை வஸீலா.

ரணச்சிகிச்சையினாலும் நிவாரணம் கிட்டாமல் போய் விட்டால் அத்துடன் விரக்திக்கு ஆளாகி விடாமல் ஆன்மீகச் சிகிச்சைகளில் ஈடுபாடு கொண்டிட வேண்டியது ஒருவகை வஸீலா.

இந்த ஆன்மீகச் சிகிச்சையிலும் பல படித் தரங்கள் உள்ளன.

சுய ஆன்மீக பலம் மிகுந்தவர்கள் என்றும், சுய ஆன்மீக பலம் இருந்திட்டாலும் சபலங்களுக்குப் பலியாகி விடும் பலஹீனம் இருப்பதால் ஆன்மீக பலம் குறைந்தவர்கள் என்றும், முற்றாக ஆன்மீக ஆற்றலே இல்லாதவர்கள் என்றும் மூன்றுவகையாக வகைப்படுத்தலாம்.

சுய ஆன்மீக பலம் மிகுந்தவர்களுக்கு பிரச்சனையே இல்லை.

ஏனெனில், எல்லா வகைத் தேவைகளையும் முற்றாக மாய்த்தவர்கள். அவர்கள் தேவையே இல்லாதவர்களுக்கு வஸீலாத் தேடுவதின் அவசியம் இருக்க முடியுமா?

வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத அளவு கனல் கக்கும் கொடுமையான அக்கினிக் குண்டத்தில், இன்னும் சில வினாடிகளில் தூக்கி வீசப்பட இருக்கும் அந்த கடைசி, கடைசியான நேரத்தில் வானவர் கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்களும், மழை, காற்று ஆகியவற்றின் அதிகாரம் கொடுக்கப்பட்ட மீகாயில் (அலை) அவர்களும் ''அல்லாஹ்வின் நண்பரே! ஜாடை காட்டுங்கள் இந்த அக்கினிக் குண்டத்தை சூறாவளிக் காற்றைக் கொண்டும், கனமழையை கொண்டும் தூள் பறக்கச் செய்து விடுகின்றோம் என்று கேட்டபோதும் ''வேண்டேன்... வேண்டேன் உங்களின் தயவை வேண்டேன்!'' என்று கூறி மறுதலித்ததோடு ''உங்களின் கலீலாகிய அல்லாஹ்விடமாவது முறையீடு செய்யுங்களேன்...'' என்று ஆதுரத்துடன் அந்த வானவர்கள் வற்புறுத்த ''ஏன், நான் முறையீடு செய்துதான் இந்நிலமையைத் தெரிய வேண்டிய அவசியத்திலா அவன் இருக்கின்றான்...?'' என்று கூறி வல்லவனாம் அல்லாஹ்விடமே - தனக்காக - முறையீடு செய்ய மறுத்திட்ட கலீலுல்லாஹ் ஹஜ்ரத் இப்ராஹீம் நபி (அலை) அவர்களுக்கு வஸீலா தேவைப் படவா செய்தது?

அனல் கக்கும் கர்பலா களத்தில் ஈரமில்லா இதயம் கொண்டோரின் மத்தியில் வல்லூறு கையில் அகப்பட்ட சிட்டாக மாட்டிக் கொண்டிருந்த தியாகமலர் ஹஜ்ரத் ஹுஸைன் (ரலி - அன்ஹு) அவர்கள் ''பாட்டனாரே! பார்த்தீர்களா எங்களின் இக்கதியை'' என்று வாயால் கூட கூறிட வேண்டாம். இதயத்தால் 'எண்ணியிருந்தால் போதுமே! ஆனால் அங்கனம் அவர்கள் செய்தார்களா? இல்லை. மாறாக அந்த அராஜகத்தை கடைசிச் சொட்டு இரத்தம் இருக்கும் வரை எதிர்த்துப் போராடிப் போராடி தியாக வேள்வியில் தங்களைத் தாங்களே அர்ப்பணித்துக் கொண்டார்கள் அந்ததீரர். காரணம் சுய ஆன்மீகம் அந்த வீர மறவரிடம் மிகைத்திருந்தது.

குர்ஆன் நம்மைப் போன்றதொரு படைப்புத்தான் என்று வாயால் மாத்திரம் சொல்லியிருந்தால் போதுமே! இமாம் அஹ்மதிப்னு ஹம்பல் (ரலி - அன்ஹு) அவர்களுக்கு விடுதலை மாத்திரமல்ல. அன்றைய இஸ்லாமிய சாம்ராஜ்யத்தின் உச்ச நீதிமன்றத்தின் தலைமைப் பதவி அன்னாரின் காலடியில் காணிக்கையாகக் குவிக்கப் பட்டிருக்குமே! ஆனால்; தங்களின் தங்கத்திருமேனி சல்லடைக் கண்களாகத் துளைக்கப் படுமளவு சவுக்கடிகளுக்கு இலக்கானதோடு மாத்திரம் நின்றிடாமல் சிறைச் சாலையின் தனிமைக் கொட்டடியில் சவுக்கடிகளால் ஏற்பட்ட ரண வேதனையால் துடித்துத் துடித்து சாகும படி நேரிட்டதே அந்த அறிஞர் பெருந்தகைக்கு! ஏன்? ஆன்மீக பலம் அந்த அறக்காவலரிடம் மிகைத்திருந்த தால் அல்லவா?

ஆதலினால்தான் கூறினேன், ஆன்மீக பலம் மிகுந்த வர்களைப் பற்றி பிரச்சனையே இல்லை - என்று

ஆனால் ஆன்மீக பலம் குறைந்தவர்கள் ஹஜ்ரத் இப்ராஹீம் கலீலுல்லாஹ் (அலை) அவர்களைப் போன்று அல்லாஹ்விடம்கூட முறையீடு செய்ய மாட்டேன்' என்று கூறிட முடியுமா? முடியுமாவாவது? அத்தகைய பலஹீனர்கள் அங்கனம் சிந்திப்பதேகூட குற்றமாகப் போய் விடுமே!

## சமுதாயத்தில் மண்டிக் கிடக்கும் வண்டிக் கணக்கான பலஹீனங்கள்

ஆன்மீக பலம் குறைந்தவர்களின் கதியே இதுவென்றால் ஆன்மீகம் அறவே இல்லாதவர்களைப் பற்றிச் சொல்லிடவும் வேண்டுமா? அத்தகு அப்பாவிகளிடம் ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) அவர்களின் அந்த நிகழ்ச்சியைச் சொல்லிக் காட்டுவதுகூட தப்பாகப் போய்விடும். அல்லவா?

அங்கனம் ஆன்மீகத் தராசால் நிறுக்கப் பட்டால் இன்றைய முஸ்லிம்களில் மிகப் பெரும்பாலோரின் கதி அதோ கதிதான். ஏனெனில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் ஆன்மீகத்தில் சைபராகத்தான் இருக்கிறோம் என்ற கசப்பான உண்மையினை எப்படித்தான் மூடி மறைக்க முடியும்?

சினிமா போஸ்டரில் ஆபாசமான அலங்கோலத்துடன் காணப்பட்ட சினிமா நடிகையின் படத்தை உற்று உற்றுப்பார்த்து அந்தப் படத்திலுள்ள நடிகையை தனது இதயம்: நிறைந்தவளாகக் கொண்டு கற்பனைக் களியாட்டங்களில் சஞ்சரித்துத் திரியும் அறைகுறை ஆசாமிகளிடம் ஆன்மீக சக்தியின் நெடிலைக் கூட நுகர்ந்திட முடியுமா?

உழைப்பின் உணர்ச்சியை உறிஞ்சிக் குடித்துக் கொண்டிருக்கும் லாட்டரிச் சீட்டுகளை வகைக்கு ஒன்றாக - வரிசைக்கு ஒன்றாக வாங்கி வைத்துக் கொண்டு - அதற்காக நேர்ச்சை - அதற்காக துஆ - அதற்காகத் தொழுகை என்று வணக்க வழிப்பாடுகளின் உயிர்நாடியான இறையச்சத்தை - மன ஓர்மையை எல்லாம் காற்றில் பறக்க விட்டு விட்டு - கற்பனை லட்சாதிபதியாக தன்னை ஏக்க முறச் செய்து கொண்டிருக்கும் அந்தச் சோம்பேரிகளிடம் ஆன்மீகத்தின் அறிகுறிகளைக்கூட கண்டிட முடியுமா?

மஹர் கொடுத்து மணம் முடித்திடுவதை ஆண்மையின் சின்னமாகக் கொண்டு வாழ்ந்திட வழிகாட்டப்பட்டுள்ளவன் இன்றைக்கு எங்கே கல்யாணம் முடித்தால், எவ்வளவு கிடைக்கும் என்று கணக்குப் போட்டுக் கொண்டிருக்கு மளவிற்கு பேடியாக மாறிவிட்டிருக்கும் போது இத்தகு ஈனப் பிறவிகளிடம் ஆன்மீகம் அண்டவா செய்யும்?

இப்படியாக இன்றைய சமுதாயத்தவர்களிடம் மண்டிப் போய்க் கிடக்கும் வண்டிக் கணக்கான எத்தனை பலஹீனங் களை எடுத்தியம்ப முடியும்?

இப்படி சபலங்களிலும் பலஹீனங்களிலும் மூழ்கிப் போய் கிடக்கும் சமுதாய மக்களை 'ஆன்மீகத்தில் முழு சைபராக இருக்கின்றார்கள்' என்று நான் சொல்வதில் தவறு காட்டிட முடியவா போகின்றது?

## முடவன் செயற்கைக் கால் பொருத்துவது குற்றமாகுமா?

ஆகவே ஈமான் என்னும் ஏகதெய்வ விசுவாசத்தின் ஆகக் கடைசி விளிம்பில் தொடங்கிக் கொண்டிருக்கும் முஸ்லிம்கள் விரக்தியின் கோரப்பிடிக்கு உள்ளாகி விடாமல் தடுக்கும் பாதுகாப்புக் கவசமாக வஸீலாத் தேடிக் கொள்வதை நமது சுத்த சத்திய தீனுல் இஸ்லாத்தில் அங்கீகரிக்கப்பட்டு உள்ளது.

கால் இழந்த முடவன் செயற்கைக் கால் பொருத்திக் கொண்டு நடமாடுவது பற்றி குறை சொல்ல முடியுமா?

கேட்கும் சக்தி இழந்த செவிடன் செயற்கைக் கருவி மூலம் கேட்கும் சக்தியைப் பெருக்கிக் கொள்வதைக் குற்றம் சொல்வது கூடுமா?

## விரலால் குர்ஆன் ஓதக்கற்ற விந்தை மனிதர்

அலிஃப்-பே அரிச்சுவடி கூடத் தெரியாத ஒரு மனிதர் தனக்குக் குர்ஆன் ஓதிடத் தெரியவில்லையே என்று கவலையுடன் ஒரு பெரியாரிடம் முறையிட்டு செய்தபோது "நீ அனுதினமும் குர்ஆனைத் திறந்து வைத்துக் கொண்டு அதன் ஒவ்வொரு வரிகளிலும் உனது கலிமா விரலை

நடமாடி விடு. அதன்மூலம் குர்ஆன் ஓதிய பேரின்பத்தை பெற்று நீ சிறந்திட முடியும்'' என்று அந்த அப்பாவி மனிதருக்கு அந்தப் பெரியார் புத்திமதி கூறினாராம். அதற்கிணங்கச் செயல்பட அந்த மனிதன் நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாக அரபி ஞானம் வரப்பெற்று அவரது கடைசி காலத்தில் கசடறக் குர்ஆனை ஓதிடும் அளவிற்குப் பண்பட்டு விட்டாராம்.

இது கதையல்ல - கற்பனையுமல்ல. அங்கனம் விரல்களால் வேத வரிகளைத் தடவித் தடவி வாழ்ந்து கடைசியில் குர்ஆனை கசடற ஓதிடும் அளவிற்கு உயர்ந்து விட்ட அந்த மனிதரை நானே நேரில் கண்டு அவரின் வாக்கு மூலமாகவே அந்த விந்தை நிகழ்ச்சியைச் சொல்ல நானே எனது செவியாறக் கேட்டு வியந்துள்ளேன்.

அதே நேரத்தில் குறிப்பிட்ட அந்தப் பெரியார் அந்த அப்பாவி மனிதரிடம் வேறு வகையாக எதையேனும் சொல்லி அவரை விரக்தியடையச் செய்திருந்தால் அம் மனிதருக்கு இந்த பாக்கியம் கிடைக்கப் பெற்றிருக்குமா?

## வக்கற்றவர்களின் ஊன்று கோலாகத் திகழும் வஸீலா

மார்க்க வளர்ச்சிக்காக - மார்க்க ஞான வளர்ச்சிக்காக தங்களின் உடல் பொருள் ஆவி அனைத்தையும் தத்தம் செய்த தியாக சீலர்களான அவ்லியாக்கள், ஷுஹதாக்கள், ஸாலிஹீன்கள், உலமாக்களைப் பொருட்டாக ஆக்கி

" இறைவ, எம்பெரும ! இன்ன நாதாவின் பொருட்டால், இன்ன ஆலிமின் பொருட்டால் பத்ரு சஹாபாக்களின பொருட்டால் எனது இன்ன காரியத்தை ஜெயம் பெறச்செய்தருள்வாயாக - எனது கஷ்ட நஷ்டத்தை நிவர்த்திசெய்தருள்வாயாக - என்னைப் பீடித்துள்ள நோய் நொடிகளைச் சொஸ்தமாக்கியருள்வாயாக" என்று வஸீலாத் தேடுவது பலஹீனர்களாகிய நமது ஈமானை வலுப்படுத்தும் படிக்கட்டாக வக்கு வகையற்ற நம்மைப் போன்ற சாதாரண மானவர்களின் ஊன்று கோலாக - அமைந்திடும் என்பதால் நமது சுத்த சத்திய சன்மார்க்கத்தில் வஸீலாவை ஆகுமான நற்கிரியையாக ஆக்கப் பட்டுள்ளது என்பதனை ஐயத்திற் கிடமின்றி அறிந்து செயல்பட்டிடக் கடமைப்பட்டு உள்ளோம்.

## வாது புரிந்து தீது பரப்பும் தீயோர்கள்

உண்மை நிலை இவ்வாறிருக்க; நம்மில் தங்களைத் தாங்களே சீர்திருத்தச் செம்மல்களாக (?) நினைத்துக் கொண்டிருக்கும் சீரற்ற குழப்பவாதிகள்:

"அல்லாஹ் நம்மின் எஜமானன். நாம் அவனது கிருபைக்குப் பாத்திரமான கொத்தடிமைகள். உண்மை நிலை இவ்வாறிருக்கும் போது எஜமானனாகிய அவனுக்கும் அடிமையாகிய நமக்கும் இடையில் இடைத் தரகராக எவரையும் ஆக்குவது அநியாயம்" என்று ஆங்காரக் குரல் கொடுத்து இந்த வஸீலா, ஜியாரத், துஆ, போன்ற

இறை நெருக்கம் பெற்றிட ஊன்று கோலாக உதவும் இபாதத்துகளை நையாண்டி செய்வதோடு; முஹம்மது நபி அல்லாஹ்வின் தூதரை நமக்கு எத்திவைத்த ஒரு தபால்காரர்தானே தவிர அவருக்கென்று வேறு தனித் தன்மைகள் ஏதும் இல்லை ஆதலால் அவர் மீது ஸலவாத்து ஓதுவதும், மரணித்து நல்லடக்கம் பெற்று மண்ணோடு மண்ணாக மக்கிப்போன அவரிடம் மன்றாடுவதும் வடி கட்டிய பத்தாம் பசலித்தனமாகும் என்று வாது புரிந்து தீது பரப்பிக் கொண்டு வருகின்றார்கள்.

இந்தத் தீயோர்களின் அந்த வாதை வாத நோயை விடக் கொடிய கேடாகக் கருத முடியுமே தவிர மார்க்க ரீதியான கொள்கையாக ஏற்றுக் கொள்ள இம்மியும் அதில் சத்து இல்லவே இல்லை.

ஆதலால் இப்படிப்பட்ட தில்லு முல்லுக் காரர்களின் தள்ளு முல்லுப் பிரச்சாரத்தினால் சமுதாயம் சீர் கெட்டு விடக் கூடாதென்று எண்ணிய இறைநேச சிகாமணி இமாம் ஷர்புத்தீன் முஹம்மதினில் பூசிரி (ரஹ்-அன்ஹு) அவர்கள் தங்களது தங்கக் காவியமான இந்த புர்தாஷரீபின் 79-ம் கண்ணியில் இப்படிப்பட்ட தீயோர்களின் தீய பிரச் சாரங்களில் மதிமயங்கி விடாமல் காப்பாற்றும்படி அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடும்படி நமக்கு உணர்த்தி விட்டு, அதனையடுத்து 80, 81 ஆகிய இந்த இரு கண்ணிகளின் மூலம் அல்லாஹ்வின் பாதுகாப்பையும்

நல்லுதவிகளையும் நமது ஈருலக நாயகர் முஹம்மது நபிமணி (ஸல்-அம்) அவர்களின் வஸீலாவின் மூலம்தான் சாதாரண மனிதர்களாகிய நம்மால் பெற்றிடமுடியும் என்ற ஷரீஅத்தின் கொள்கை கோட்பாடுகளை;

காலம் செய் தீங்கை விட்டுக் காப்பாற்ற நான் -
- வேண்டின்
சீல நபி மூலம் நவைதீர்க்காப் புறாதிலனே!

என்றும்;

ஈருலகப் பேறும் நபிஇரும் துணையால் நான்
- வேண்டின்
கோரப்படுவோருள் நல்லார்கொடை நான்
- பெறாதிலனே

என்றுமெல்லாம் எடுத்தியம்பி அல்லாஹ்வின் பாதுகாப்பும் நல்லுதவியும் எங்களின் ஈருலகப் பெருமானாகிய முத்து முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் தயவால்தான் கிடைக்கப்பெற்றிட முடியும் என்று இடித்துரைத்து,

அந்த அதிகப்பிரசிங்கிகளின் அர்த்தமற்ற வாதங்களை தூள் தூளாக்கி தூசியென ஊதித்தள்ளுகின்றார் சுன்னத் வல் ஜமாஅத்தின் தூணாகி விளங்கும் அந்தத் துந்துபி.

- சுப்ஹானல்லாஹ்! என்ன அழகான கொள்கை விளக்கம் பார்த்தீர்களா?

لَاتُنْكِرِ الْوَحْيَ مِنْ رُؤْيَاهُ اِزْلَهُ
قَلْبًا اِذَا نَامَتِ الْعَيْنَانِ لَمْ يَنَمِ ﴿٨٢﴾

**லா துன்கிரில்வஹ்யமின் (ர்)**
**- ருஃயாஹு இன்னலஹு**
**கல்பன் இதாநாமத்தில் ஐனானி**
**- லம்யனமி**

நபிகள் பெருமான் அவர்களின் கனாவில் தோன்றிய ஞானத்தை (வஹீ அறிவிப்பை) நீ மறுதலிக்காதே.

(ஏனெனில்) இருவிழிகள் தூங்கும் போதும் அன்னாரின் இதயம் தூங்குவதே இல்லை.

இதனை

நாதர் கருவின் வஹீ ஞானம்மறுத்திடற்க!
நீதர்அவர் கண்ணுறங்கும் நேரம் மனம் தூங்காதே !

என மரைக்காயர் பாடுகின்றார்.

வி-ரை : பெருமானார் (ஸல் - அம்) அவர்களுக்குக் கிடைத்த வேத வெளிப்பாடு (வஹீ) களின் வகைகளை இங்கே எண்பித்துக் காட்டுகின்றார்.

பெருமான் அவர்களின் மூலம் வெளிப்பட்ட முஃஜிசாக் களில் மிக முக்கியமானதும், ஏனையவர்களுக்கு ஏற்பட்ட அனைத்து முஃஜிசாக்களையும் மிகைத்து நிற்பதும், உலகில் உயிருள்ளவரை நிலைத்து நின்றிடும் வன்மை கொண்

டதுமான 'குர்ஆன் ஷரீப்' எனும் கடைசி வேதம் - காமிலான வேதம்-குறை கூறவோ கரை காட்டவோ முடியாத நிறைவேதம் 'வஹி' எனும் வேத வெளிப்பாட்டின் மூலம் தான் பெருமான் அவர்களுக்கு இறக்கியருளப்பட்டது. என்பது அகிலம் அறிந்து வைத்துள்ள பேருண்மை. ஆனால் அந்த வஹி எத்தனை வகைகளில் அமைந்திருந்தன என்பது அறிந்து வைக்க வேண்டிய ஒன்றாகும். ஆகவே அதுபற்றி ஆய்வோம்.

## வஹியின் வகைகள்

வள்ளல் திருமேனி முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு வெளிப்பட்ட வஹி ஏழு வகைகளாக அமைந்திருந்தன.

1) 'உண்மைக் கனவின் மூலம்' வெளிப்படும்.

ஆரம்பக் காலங்களில்; இரவில் கனவு தென்படும். அன்றைப் பகலிலேயே கண்ட கனவு நிதர்சனமாக நிகழ்ந்து விடும், இப்படியாக ஆரம்பித்த வேத வெளிப்பாடு நாளடைவில் கனவின் மூலம் கண்ட-கேட்டவற்றை அன்றைப் பகலில் வானவர் வந்து நேரடியாக அறிவிப்பது வரை வளர்ந்து வரத் தொடங்கின.

2) வள்ளல் திருமேனி முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் இதயக்கமலங்களில் வானவர் ஜிப்ரயீல் ஒரு ஊதிப்பைப் போடுவார். அங்ஙனம் போடப்பட்ட ஊதிப்பு ஊர்ஜிதமான உணர்வின் (இல்முள்ளருரி) அடிப்படையில் இருந்

தால் அதை 'வஹி' என்றும் அங்ஙனமில்லாவிட்டால் 'இல்ஹாம்' என்றும் நபிகளார் பிரித்தறிந்து கொள்வார்கள். இப்படி மனதில் மலக்கு போடும் கை 2-வது வகை வஹி யாகும்.

3) வானவர் மனித உருவில் நேரடியாகத் தோன்றி வேதக் கட்டளையை அறிவிப்பார். அதை வள்ளல் நபி நாயகம் அவர்கள் கவனத்துடன் காது தாழ்த்திக் கேட்டு மனப்பாடம் செய்து கொள்வார்கள்.

4) வள்ளல் நபிகளாரின் எதிரில் 'கிண்கிண்' என ஒருவகை மணியோசை ஒலிக்கும். அந்த மணியோசை ஒலியிலிருந்து வேதக் கட்டளை வெளிப்படும்.

5) ஜிப்ரயீல் (அலை) அவர்கள் 'மலக்கானிய்யத்' எனும் தோற்றத்தில் தோன்றி வேதக்கட்டளையை அறிவிப்பார்.

6) வான உலகில் வைத்து (மிஃராஜின் போது அல்லாஹ்வே நேரடியாக வேதக்கட்டளையினை அறி வித்தவை.

7) மண்ணுலகில் நபிகளார் இருக்கும் போது சில சமயங்களில் மூஸா (அலை) அவர்களுக்கு தெளராத் வேதத்தை அருளியதுபோல் அல்லாஹ்வினால் நேரடியாக வேதக்கட்டளைகளை இறக்கப்பட்டவை.

இந்த ஏழு வகை வஹீகளில் நான்காவது வகையான 'மணிமோசை' வடிவில் வெளியாகும் வஹீதான் பெருமானுக்கு மிகவும் பளுவை - சிரமத்தைத் - தரும். இந்த வகை வஹீ வெளிப்பட்டால் அதன்பின் சில நாள் பெருமானவர்கள் அதனால் ஏற்பட்ட உடல் பளுவையும் சிரமத்தையும் போக்குவதற்கு சிகிச்சை பெறும்படி நேருமென இப்னு அப்பாஸ் (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள். மேலும் இம்முறை வஹீ வெளிப்படுமானால் தமது தோள் புஜங்களில் பார தூரமானதொரு பெரும்மலையினைச் சுமத்தாட்டியது போன்ற பளு ஏற்படுமென நபிகளார் அவர்கள் சொல்வார்கள். மேலும் இவ்வகை வஹீ இறங்குமானால் பெருமானின் முகமெல்லாம் சிவந்து காணப்படும் எனவும் அறிவிக்கப் படுகின்றது.

அன்றி; அதனையடுத்து ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நேரடியாகத் தோன்றி அறிவிக்கும் ஐந்தாவது வகை வஹீ ஆரம்ப நாட்களில் பயத்தையும் பீதியையும் பெருமானுக்கு உண்டாக்கியதாகவும் அறிவிக்கப்படுகின்றது.

(நூல் : புஹாரி ஷரீபின் ஷரஹ்; ஐனி)

## இறக்கப்பட்ட வஹீ பாதுகாக்கப்பட்ட முறைகள்

இப்படி வெளிப்படும் வஹீ வெளிப்பாடுகளை பெருமான் அவர்கள் உடனுக்குடன் மனப்பாடம் செய்துகொள்

வதுடன் தம்மை சூழ்ந்திருக்கும் தமது தோழர்களுக்கு உடனுக்குடன் ஓதிக்காட்டிட அவர்களும் அதனை உடனுக்குடன் மனப்பாடம் செய்து கொள்வார்கள் ஒவ்வொரு ஆண்டு ரமளானிலும், பிரதி மாதத்தின் தலை நாட்களிலும் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நாயகம் அவர்களிடம் நேரடியாகத் தோன்றி ஆரம்பத்திலிருந்து அதுவரை இறக்கப்பட்டுள்ள திருவசனங்களை பெரு மானவர்களை ஓதச்சொல்லிக் கேட்டு சரிகண்டு போவார் கள்.

நூல் : முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்

இப்படியாக வெளிப்பட்ட வேத வெளிப்பாடுகளில் முதல் வகையான உண்மைக் கனவின் மூலம் வெளிப் படும் வஹீயை நம்மிலுள்ள சிலர் மறுத்துக் கருத்துத் தெரிவித்து வந்தார்கள். அந்தப் போக்கினைக் கண்டிக் கும் முறையில்தான் நமது நாயகப் பாவலர் பூசிரி அவர்கள் இங்கே 82 - ஆம் கண்ணியின் முதலீற்றில் ''நாதர் கனாவின் வஹீ'' என்று சொல்லிக் காட்டு கின்றார். அன்றி இரண்டாம் ஈற்றில் ''நீதர் அவர் கண்ணுறங்கும் நேரம் மனம் தூங்காதே'' என்று கூறி நபிகளார் (ஸல்) அவர்களும் 'நம்மைப் போன்றதோர் மனிதர்' என்ற வகையில் இரவு நேரங்களில் கண்ணயர்ந் தாலும் அவர் தம் மனம் - உள்ளம் - அன்னார் ஓர் உலகப்பொது நபி என்ற வகையில் அல்லாஹ்வுடன் நேரடித் தொடர்பில் லயித்திருக்குமென்றதோர் உண் மையை விண்டு காண்பிக்கின்றார், அவர்.

فَذَاكَ حِيْنَ بُلُوْغٍ مِّنْ نُّبُوَّتِهِ
فَلَيْسَ يُنْكَرُ فِيْهِ حَالُ مُحْتَلِمِ ⓭

ஃபதாக்கஹீனபுலூ ஙிம்(ன்) மின்-
நுபுவ்வதிஹி
ஃபலைஸ யுன்கரு ஃபீஹி ஹாலு-
முஹ்தலிமி

[கனாவின் மூலம் தோன்றிய] ஞானமானது நபி களாரின் நபிப்பதவி அண்மித்த போது தோன்றிய தாம்.

ஆகவே நபிப்பதவி அண்மித்த காலகட்டத்தில் தோன்றும் கனா மறுக்கத் தக்கதன்று.

இதனை —

அந்த கனாநுபுவ்வத் தனுகுங்கால்தோன்றியதாம்

முந்தக்காணும் முறை மறுக்கத்தக்கதன்றே
என மரைக்காயர் பாடுகின்றார்.

வி - ரை - பெருமானார் அவர்களின் கனவு' மூலமும் வஹி அருளப்பட்டு என இதற்கு முன்னுள்ள கண்ணி யில் கூறியவுடன்;

அப்படியென்றால் நபிப்பதவி அருளப்படுவதற்கு முன்பும் அவர்களுக்கு கனவு தோன்றாமலிருக்க நியாய மில்லை! கனவு கண்டிருக்கின்றார்கள். அந்தக் கனவு பற்றி உங்களின் கருத்தென்ன? எனவும்;

கனவும் ஒரு வகை வஹீதான் எனக் கொண்டால் பெருமானார் அவர்கள் 'அவர்கள் ஒரு மனிதர்' என்ற நிலையில் சில சமயம் கனவு காணும்பொழுது 'கனவு ஸ்கலிதம் ஏற்பட வாய்ப்புண்டே? அப்படி ஸ்கலிதம் ஏற்பட்ட நிலையில் வஹீயின் புனிதத் தன்மை பாதிக்கப் படாதா? எனவும், 'கனவும் ஒரு வகை வஹீ' தான் என்பதை ஒப்ப மறுப்போர் கேள்விக் கணைகளைத் தொடுத்து விட்டனர் போலும், ஆகவே இங்கு அதற்கு விளக்கம் தருகின்றார் விவேகமிக்க நீதக்கவி பூசிரி.

## நபிப்பதவிக்கு முன் ஏற்பட்ட கனவின் நிலை

பச்சிளம் குழந்தைக்கு திரவ உணவுகளை மட்டுமே நாம் ஊட்டுகின்றோம் ஏன்? அக்குழந்தைக்கு அந்த அளவுதான் ஜீரணிக்கும் தன்மையுண்டு என்பதற்காக. அதுபோல பெருமான் அவர்கட்கு நபித்துவத்திற்கு முன்னும் கனவு தோன்றியுள்ளதென்றால் அந்தக் கனவினை 'வஹீ' என்ற திட உணவாக இறைவன் தோன்றச் செய்யவில்லை. ஏன் தெரியுமா? வஹீயைச் ஜீரணிக்கவல்ல பருவம் அதாவது நபிப் பதவி அவர்களுக்கு அதுகாறும் வழங்கப் பட்டிருக்கவில்லையாதலால். ஆனால் நபிகளாருக்கு நபிப் பதவி கொடுக்கப்படுவதற்கு முன்தோன்றிய அக்கனவுகள் 'முன்னறிவிப்புகள்' என்ற முறையில் அமைந்திருந்தனவேயன்றி அவைகள் நம் கனவுகளைப் போன்ற வீணான கனவுகளாக இருந்ததேயில்லை என்பதைத்தான் ''முத்தக் கனாக் காணும் முறை மறுக்கத் தக்கதன்றே'' என இடித்துரைக்கின்றார்,

அன்றி இந்த 83 - வது கண்ணியின் இரண்டாம் சுற்றிற்கு ஸ்கலித நிலையில் காணும் கனா மறுக்கத் தக்கதன்றே’ என்றும் பொருள் கொள்ள வாய்ப்புண்டு.

இந்தப் பொருளின்படி;

பெருமான் அவர்களுக்கு சில சமயங்களில் நம்மைப் போன்றே தூக்க (கனவு) ஸ்கலிதம் ஏற்படுவதுண்டுதான். ஆனாலும் அது மனித இயல்பு என்ற நிலையில் ஏற்படும் மனித தன்மைகளில் ஒன்றாக இருப்பதால். அதனால் கனவின் - மூலம் ஏற்படும் வஹீயின் புனிதத்திற்கு எவ்வித களங்கமும் ஏற்பட நியாயமில்லை. ஆகவே ‘அப்படி ஸ்கலித நிலையில் ஏற்படும் கனவுகளையும் வஹீயல்ல என மறுத்திடாமல் இருந்திடுக’ என இமாம் பூசிரி அவர்கள் இடித்துரைப்பதாக பொருள் கொள்ள வாய்ப்புண்டு.

تبارك الله ما وحي بمكتسب
ولا نبي على غيب بمتهم (83)

**தபாரக்கல்லாஹு மா வஹ்யுன்**
**-முக்தஸபின்**
**வலா நபிய்யுன் அலா ஙைபின்**
**- முத்தஹமி**

அனைத்து குறைநிறைகளை விட்டும் வல்ல அல்லாஹ் மிக உயர்ந்தவன். ‘வஹீ’ எனும் ஞானம் சுயமாக சம்பாதிக்கக் கூடியதன்று அஃதன்றி.

எந்த தீர்க்கதரிசியும் மறைவானவற்றை சந்தேகிப்பவராக இருந்ததில்லை.

இதனை -

இறைவன் மறு வற்றுயர்ந்தோன்; ஈட்டுவதன்று வஹீ
மறைவான வற்றில் நபிமார் ஐயம் கொள்ளாரே

க - ரை : ஏகனாம் நம் இறைவன் குற்றங் குறைகளை விட்டும் பரிசுத்தமானவன். 'வஹீ' எனும் பொக்கிஷம் எவரின் சொந்த முயற்சியாலும் சம்பாதிக்க முடியாத ஒன்றாகும். அன்றி மறைவானவற்றில் நபிமார்கள் 'கண்டதைக்' கூட்டிக் குறைப்பது, காணாததை இட்டுக் கட்டுவது, போன்ற மோசடிகளை ஒருக்காலமும் செய்ய மாட்டார்கள்.

## கிருத்துவப் பேராசிரியர்களின் விஷமம்

வி - ரை : நபிகளார் அவர்களின் கனவினையும் நாம் வஹீயெனக் கொள்ளும் போது சில கிருத்துவப் பேராசிரியர்கள் கிண்டல் செய்து 'உங்களின் வேதம் கனவில் கொடுக்கப்பட்டதன்றோ!' என இகழ்வாக கூறுகின்றனர்.

அதாவது;

கனவு என்பது காண்பவருக்கு மட்டுமே வெளிப்படும் விசயத்தனம்.

அப்படியிருக்க உங்களின் நபிகளுக்கு கனவிலும் இறக்கப்பட்டதென்றால் அவர் சொன்னதைத்தானே நீங்கள் ஏற்றிட வேண்டும்? அவர் கூட்டிக் குறைத்து அல்லது இல்லாததை இட்டுக்கட்டி இதுவும் எனக்குக் கனவின் மூலம் வெளிப்பட்டதுதான் ஆகவே இதனையும் வேதக் கட்டளையாக ஏற்றுக்கொள்ளுங்கள் என (உங்கள் நபி) சொல்லியிருக்கவும் வாய்ப்பு உண்டல்லவா?!' என்பது அந்தக் கிருத்துவப் பாதர்களின் கேலிக் கூத்தான வினாவாகும்.

அதற்குத்தான் நம் இயற்கவி பூசிரி அவர்கள் இடியென முழங்கி ''தபாரகல்லாஹு! இறைவன் குற்றம் குறையற்ற பரிசுத்தமானவன். அப்படிப்பட்ட இறைவன் இட்டுக் கட்டு பவர்களையும் கூட்டிக் குறைத்து சொல்லும் சூது படைத்த வர்களையுமா தீர்க்கதரிசியாக அனுப்புவான்?'' எனக் கேட்டு எந்த நபியும்-அதாவது உங்களின் ஈசா நபி (அலை) அவர்கள் உள்ளிட்ட எந்த நபியும் - மறைவான காரியங் களின் மீது கூட்டிக் குறைதது்ப் பேசும் இயல்புடையவர்க ளாகவோ இருந்ததே இல்லை. அத்தகு இயல்பு படைத் தவர்களை நபியாக இறைவன் அனுப்பவும் மாட்டான் என இடித்துரைக்கின்றார்.

---

كَمْ اَبْرَاَتْ وَصِبًا بِاللَّمْسِ رَاحَتُهُ
وَاَطْلَقَتْ اَرِبًا مِنْ رِبْقَةِ اللَّمَمِ ۝٨٥

**கம் அப்ர அத் வஸிபன் பில்லம்ஸி**
**- ராஹதுஹூ**
**வ அத்லகத் அரிபன்(ம்) மின்(ர்)ரிப்**
**- கதில் லமமி**

எத்தனை எத்தனையோ நோயாளிகள் நபிகளார் அவர்களின் உள்ளங்கை பட்டதன் மூலம் பிணி நீங்கி முழுச் சுகம் பெற்றுள்ளனர்.

அன்றியும் அந்த மேன்மைமிக்க கை அவசியப் படும்போது 'பைத்தியம்' எனும் அவிழா முடிச்சுக் களையும் அவிழ்த்துவிட்டுள்ளது.

இதனை -

பெம்மன்அங் கைதொடலால் பிணிதீர்ந்தோர்
- எத்தனையோ!

அம்மாகரம் மயக்கம்அறுத்த பித்தர் எத்தனையோ !!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை: பெருமானார் அவர்களின் பரக்கத்துப் பொருந்திய உள்ளங்கை பட்டமையால் கொடுநோய்கள் தீர்ந்து பூரண சுகஜீவிகளாக எத்தனை எத்தனையோ பேர் மாறினர். அன்றி, அந்த கரத்தின் பரக்கத்தால் நோய் மட்டுமன்று கொடுமை மிக்க பைத்தியங்களும் தெளிந்துள்ளன.

வி - ரை : பெருமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் முஃஜிசாக்களின் வரிசையிலே எண்ணி எண்ணி மகிழ்ந்திடத்தக்க மற்றுமொரு முஃஜிசாவை இங்கே எண்பித்து தொடுக்கின்றார். தொடர் கவி பூசிரி

## பிதுங்கி நின்ற கண்விழி

ஒரு சமயம் உஹதுப் போரின்போது ஹஜ்ரத் கதாதா (ரலி-அன்ஹு) அவர்களின் கண்களில் எதிரிகளின் அம்பொன்று தைக்க அவர்களின் கண்விழி ஒன்று பிதுங்கிக் கொண்டு வெளியில் வந்துவிட்டது. அப்போது அண்ணல் அவர்கள் பிதுங்கி நின்ற கண் விழியினை உரிய

இடத்தில் எடுத்து வைத்து அதன்பின் தங்களின் பரக்கத்துப் பொருந்திய உள்ளங் கைகளால் அதைத் தடவ சுப்ஹானல்லாஹ்... அப்படியே அது பொருந்தி நின்று கொண்டது.

## வெட்டுண்ட கை பொருந்திக் கொண்ட புதுமை

பத்ருப் போரின்போது அபூஜுஹைல் எனும் கொடியவன் வெட்டியதால் 'முஅவ்வத்' எனும் இளைஞரின் கைமுறிந்து துண்டாகி விட்டது. உடன் அந்த இளைஞரே மறுகையினால் வெட்டுண்ட கையை எடுத்துக் கொண்டு நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களிடம் வந்து காட்டியபோது நமது நபிகளார் அவர் அதை முறிந்த இடத்தில் வைத்து பொருத்தியபோது சுப்ஹானல்லாஹ் என்ன ஆச்சரியம்! அந்த முறிவு, பொருந்தி இயற்கை கையைப்போல் ஆகி விட்டது.

## பைத்தியம் தெளிந்த புதுமை

ஒரு தடவை ஒரு தாய் தனது பைத்தியம் பிடித்த குழந்தையை பெருமான் அவர்களிடம் கொண்டு வந்து காட்டி ''அண்ணலே! எனக்குள்ளது இந்த ஒரே குழந்தை அதுவும் இந்நிலையில் (பைத்தியமாக) உள்ளதே'' என முறையிட பெருமான் அவர்கள் தங்களின் பரக்கத்துப் பொருந்திய கரங்களை அக்குழந்தையின் நெஞ்சின் மீது

தடவினார்கள். அவ்வளவுதான்...... உடனடியாக அக் குழந்தை வாந்தி எடுத்தது. அதன்பின் பைத்தியம் விலகி விட்டது

நூல் : பாஜுரி.

பெருமான் அவர்களின் பொருட்டால் பூரண சுகம் பெற்றவர்களின் பட்டியல் இம்மட்டுமா; எழுதினால் எண்ண முடியாது. எண்ணினால் எழுத முடியாது.

இதனை இங்கே விண்டு காண்பிக்கும் கவிக் குயில் பூசிரி (ரஹ்) அவர்கள்.

''எங்களின் ஏசுவைப் போன்று எவர் உளா? காட்ட முடியுமா? ஏசுவின் கடைக்கண் பார்வைப்பட்டால் தீராத நோய் தீர்ந்து ஓடிவிடும். அவர்களின் கால் தூசி பட்டால் கண்ணொளி வந்துவிடும்'' என்றெல்லாம் எகிறிக் குதிக்கும் கிருத்துவ சகோதரர்களுக்கு: 'ஆம் அன்பரீர் ஏசு என நீவிர்' கொண்டாடும் ஈசா நபிக்கு அத்தகு புதுமைகளெல்லாம் உண்டுமென்பதை யாம் மறுக்கவில்லை. மறைக்கவுமில்லை. ஆனால் ஈசா (அலை) அவர்களை விட மிகைத்த - திகைக்க வைத்திடவல்ல பல புதுமை கள் எங்களுக்கும் உங்களுக்கும் பொது நபியாகிய முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் மூலம் வெளியாகி யுள்ளது, ஆனால் எம்மான் முஹம்மதுவாக இருப்பினும் ஈசாவாக இருப்பினும் அவர்களின் மூலம் வெளி வந்த அந்தப் புதுமைகளை அவர்களின் மூலம் வெளியான முஃஜிசாக்கள்' என்ற அளவில் நாங்கள் நின்று கொண் டோம். நுங்களைப்போல கடவுள் என்றோ குமாரான் என்றோ திசைதப்பிப் போகவில்லை'' என அறிவுறுத்து கின்றார்.

وَأَحْيَتِ السَّنَةَ الشَّهْبَاءَ دَعْوَتُهُ

حَتَّى حَكَتْ غُرَّةً فِي الْأَعْصُرِ الدُّهُمِ ٨٦

**வஅஹ்யத்திஸ் ஸனதஷ்**
**- ஷஹ்பாஅ தஃவத்துஹூ**
**ஹத்தா ஹகத் குர்ரதன்**
**- ஃபில் அஃஸுரித் துஹூமி**

நபிகளார் அவர்களின் பிரார்த்தனையின் பொருட்டால் பஞ்சமெனும் வெள்ளை ஆண்டு செழித்துப் பசுமை கண்டது.

எந்த அளவுக்கெனில் அந்த வெள்ளை ஆண்டு மற்ற பசுமை ஆண்டுகளுக்கெல்லாம் திலகமாக இலங்கியது.

இதனை -

பஞ்சவெள்ளை ஆண்டுயிர்த்துப் பசுமைஅவர்
-வேண்டுதலால்
மிஞ்சி, மற்றைஆண்டின் நெற்றிமேல்திலகம்
-ஆயதுவே

என மரைக்காயர் பாடுகிறார்.

க-ரை : மழையின்மையால் வறட்சி மிகுந்து பஞ்சம் தலைவிரித்தாடிய கோரமான ஆண்டின் போது பெருமானார் தம் பிரார்த்தனையால் புத்துயிர் பெற்று, வளம் பெருகி அவ்வாண்டு மற்ற எல்லா ஆண்டுகளைவிட மிக்க செழிப் படைந்தது.

## மழைவேண்டிப் பிரார்த்திக்கும்படி காபிர்கள் வேண்டுதல்

வி - ரை -: அப்போது மக்கா நகரில் பல ஆண்டுகள் வானம் பொய்த்து விட்டிருந்ததால் மக்களிடையே கடுமையான பஞ்சம் தலைவிரித்தாடிக் கொண்டிருந்தது. கால்நடைகளெல்லாம் மெலிந்து, எலும்புந் தோலுமாகத் தேய்ந்து, நாள்தோறும் மடியத் தொடங்கி விட்டது. மக்களோ வேறு வழியின்றி செத்த கால் நடைகளின் எலும்புகளைத் தின்று தம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டிய கடைசி நிலைக்கு வந்து விட்டனர். இந் நிலையில் மக்கத்துக் காபிர்களெல்லாம் ஒன்றுகூடி தங்களின் தெய்வங்களை வேண்டிப்பார்த்தனர். அன்றைய அவர்களின் ஐதிகப்படி 'மாட்டின் வாலில் தீயை வைத்து, தெருக்களில் ஓட விட்டுப் பார்த்தனர். இன்னும் அவர்களால் ஆன அனைத்தையும் செய்து பார்த்து விட்டனர். ஆனால் அந்தக் காபிர்களுக்கு 'வர்ணபகவான்' எனக் கொண்டாடப்படும் மழை மசிவதாக இல்லை.

கடைசியாக காபிர்களுக்கு புத்தி வந்தது, அனைவரும் ஒன்று கூடி எந்த மடத்தில் எம்மான் முஹம்மது (ஸல் - அம்) அவர்களை கொன்று குவிக்கத் திட்டமிட்டார்களோ அதே 'தாருந்நத்வா' எனும் மடத்தில் ஒன்று கூடி இனி நம்மால் ஆவது ஒன்றுமே இல்லை. ஆகவே, அமீனாகிய - ஸாதிகாகிய முஹம்மதிடம் தான் முறையிட வேண்டுமெனக் கருத்தொருமித்து 'அபூசுஃப்யான்' தலைமையில் ஒரு தூதுக்குழு புறப்பட்டு, புரவலர் முஹம்மது (ஸல் - அம்) அவர்களிடம் வந்து முறையீடு செய்தனர். அப்போது, நடுமதிய வேளை - சூரியன்

உக்கிரமமாக, தனது ஜுமுஆ பிரசங்கத்தினை பொழிந்து கொண்டிருக்கின்றான். வானம் வெருச்சோடிக் கிடந்தது. இந்த நிலையில் காபிர்களின் முறையீட்டை கேட்ட பெருமான் அவர்கள் தங்களின் முபாரக்கான கரங்களை விண்ணோக்கி உயர்த்தி - மழைக்காகப் பிரார்த்தித்தார்கள் - சுப்ஹானல்லாஹ்! என்ன, ஆச்சரியம்! ஓங்கிய கை ஒடுங்குவதற்கு முன்பாகவே கொட்டு கொட்டெனக் கொட்டத் தொடங்கி விட்டது பெருமழை.

## மதீனாவில் மழை பொழிந்தது

மற்றொரு தடவை பெருமான் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் மதீனாவில் மஸ்ஜிது நபவியில் ஜும்ஆ குத்பா ஓதிக்கொண்டிருக்கையில் ஒரு காட்டரபி எழுந்து ''அண்ணலே! மழையின்மையால் எங்களின் மழலைகளெல்லாம் பாலின்றி செத்துக் கொண்டிருக்கின்றன. ஆகவே மழைக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள் என வேண்டி நிற்கின்றார்.

பெருமானார் அவர்களும் உடனடியாகப் பிரார்த்தனை செய்ய கார்மேகம் குவிந்து - கருணை கூர்ந்து - கனமழையினைப் பொழியத் தொடங்கி மறுவாரம் ஜும்ஆவில் மழையை நிறுத்திக் கொடுக்கும்படி துஆ கேட்கும்வரை ஒருவார காலம் தொடர்ச்சியாகப் பொழிந்து தள்ளியது. ஆகவே அந்த ஆண்டில் வேறு எந்த ஆண்டிலும் இல்லாத அளவிற்கு வேளாண்மை பெருகி கிழாண்மையை நீக்கியது.

நூல் - பாஜூரி

நமது தெய்வீகக்கவி பூசிரி அவர்கள் இந்த நிகழ்ச்சிகளைத்தான் இங்கே 86 - ஆம் கண்ணியில் சுட்டுகின்றார்.

بِعَارِضٍ جَادَ أَوْ خِلْتَ الْبِطَاحَ بِهَا
سَيْبًا مِّنَ الْيَمِّ أَوْ سَيْلًا مِّنَ الْعَرِمِ ﴿٨٩﴾

**ரி ஆரிளின்ஜா தஅவ் கில்த்தல்**
**- பிதாஒஸரிஒஸ**
**ஸைபன் (ம்) மினல்யம்மிஅவ்**
**-ஸைலன் (ம்) மினல்அரிமி**

'கடல்தரும் கொடையோ! அணை கடந்த வெள்ளமதோ!' என எண்ணிடுமளவிற்கு பொழிகின்ற கார்முகில் கூட்டங்கள் (நபிகளாரின் பிரார்த்தனை பசுமைப் புரட்சியைத் தோன்றிடச் செய்து) மழையைக் கொட்டுகொட்டெனக் கொட்டியது.

இதனை

ஆழிதரும்கொடையோ! அணைகடந்தவெள்ள
-மதோ?
சூழும்நீர் ஓடையெனத்தொடர்ந்து மழை
- பெய்ததுவே

என மறைக்காயர் பாடுகின்றார்.

வி - ரை : பெருமானார் (ஸல்) அவர்களிடம் ஒரு ஜும்ஆ குத்பாவின் போது ஒரு காட்டரபி மழைக்காகப் பிரார்த்திக்கும்படி கேட்ட போது பெருமானார் பிரார்த்தனை செய்ததும் அதனைத் தொடர்ந்து அடை மழை பொழிந்த வரிசைகளையும் சொல் மழைகளால் பாக் கோத்து பரிணாமம் பெறுகின்றார் சொல்லேருழவர் பூசிரி.

# புதுமை பூக்களின் முடிவுரை

ஆஷிகே ரஸூல் அருட்பாக்களை பொருட் செறிவோடு கோத்துக் கொடுப்பதில் நேர் நிகரற்ற நாவுக்கரசு - அண்ணலாரின் அனைத்து அம்சங்களையும் அணு அணுவாக ரசித்து ருசித்துப்பாடி படிப்போர்தமை கிறு கிறுக்கச் செய்யும் மகா கவி பூசிரி (ரஹ் - அன்ஹு) அவர்கள் 72 - ஆம் கண்ணியிலிருந்து 87 - ஆம் கண்ணிவரை பெருமான் முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் மூலம் வெளிப்பட்ட வியத்தகு முஃஜிசாக்களில் சிலவற்றை புதுமைப் பூக்கள் என்ற தலைப்பில் விண்டு காண்பித்தார்கள். அவைகளில்,

மல்லிகையும் முல்லையும் போட்டியிட்டுக் கொண்டு நறுமணம் பரப்பியதை நுகர்ந்தோம்.

மலர்களின் ராஜா ரோஜாவின் மென்மையினை உணர்ந்தோம். மரிக்கொழுந்தின் கிறு கிறுக்கவைக்கும் நல்வாடையில் மிதந்தோம். தும்பை மலரின் தூய வெண்மையினை கண்டு மகிழ்ந்தோம். செவ்வந்திப் பூச்சரங்களின் சிரிப்பழகினை ரசித்தோம். அனைத்திற்கும் மேலாக அனைத்துப்பூக்களாலும் தொடுக்கப்பட்ட மலர் மாலையினையும் அணிந்தோம். ஆனால் படித்தோம் படித்தோம் என்றில்லாமல் அண்ணல் முஹம்மது (ஸல்- அம்) அவர்களின் மூலம் இந்தப் புதுமை பூக்களை எதற்காக நிகழ்த்திக் காட்டப் பட்டதோ அத்தத் தத்துவத்தின் அடிப்படையில் நாம் நம்மை வாழப் பழக்கிக் கொள்வதோடு நம்மைச் சார்ந்தவர்களையும் அந்த லட்சிய வழியில் பீடு நடைபோடும்படி செய்திடுவதுதான் படித்ததற்கும் பாடி

முடித்ததற்கும் நாம் செலுத்தும் மரியாதையாகுமென எனக்கும் உங்களுக்கும் நினைவுபடுத்திக் கொள்கின்றேன்.

கிருபைமிக்க கருணாநிதியான வல்ல அல்லாஹ் நம் அனைவருக்கும் லட்சிய வழியில் நிலைத்திருக்கும் பேற்றினை நல்கியருள்வானாக.



# புரவலர்
# போர்த்திய பொன்னாடை
## ஆறாம் இழை

# மோனமறை மகிமை

# 6

ஆசை அலைகளில் மிதந்து திரிந்தாலும் அலைபாயும் மனதினில் மூழ்கிவிடாமல் கரை சேர்ந்து பூமான் நபிகளாரின் புகழாரம் தொடுத்து பிறப்பின் சிறப்பினை நுகர்ந்து புதுமைப் பூக்களில் மதிமயங்கி இப்போது - ஆறாவதாக மோனைமறை மகிமைதனில் தானைத் தலைவாரம் நம் தாஹாநபி (ஸல்-அம்) அவர்களின் கோன் நிலையின் கோபுரத்தைக் காணுகின்றார்; நமக்கும் காட்டுகின்றார்.

## குர்ஆன்

கி.பி. 610 - ஆம் ஆண்டு ரமளான் பிறை 27 - ம் இரவு நடு நிசியில் தொடங்கி 632 - ம் ஆண்டு துல்ஹஜ் மாதம் பிறை 9 அரஃபா நாள் (ஹஜ்ஜத்துல் விதாவு) முற்பகல் வரை சுமார் இருபத்து மூன்று ஆண்டுகளில் கொஞ்சம் கொஞ்சமாக ஜிப்ரயீல் எனும் வானவரின் மூலம் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களுக்கு வல்ல அல்லாஹ் இறக்கியருளிய 6666 திரு வசனங்களின் மொத்தத் தொகுப்பிற்கு 'குர்ஆன்' எனப் பெயர்.

## ஓதப்பட்டது

வானவர் கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்களின் மூலம் தீனவர் கோன் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு ஓதிக்

ஆரம்பிக்கப்பட்ட ஒப்புவமையில்லா ஒரே வேதமாக, திருவேதமாக அது திகழ்வதால் 'ஓதப்பட்டது' என்ற பெயர் மிகப் பொருந்துகின்றது.

## ஓதப்படக் கூடியது

இறக்கியருளப்பட்ட நொடியிலிருந்து இன்று வரை - இனி இறுதிவரை கோடானு கோடி பக்த சிகாமணிகளால் பயன் கருதி - விரும்பி - உணர்ச்சிப் பூர்வமாக - ஓதப்பட்டு வரும் உயர்வேதமாக அது திகழ்வதால் 'ஓதப்படக் கூடியது' என்ற பெயரும் மிகமிகப் பொருந்துகின்றது.

அல்லவா?

## ஓதப்பட வேண்டியது

அகிலத்தின் அன்பும், அறமும் நறுமணமெனக் கமழ்ந்திட வேண்டின்;

அந்தக் கோன்மறை ஓதி ஒழுகப்படல் வெண்டும்.

மருளெனும் இருள் நீங்கி அருளொளி ஒளிர்ந்திட வேண்டின்.

அந்த அருள்மறை ஓதி ஒழுகப்படல் வேண்டும்.
மெய் மெய்யாகி, பொய் பொய்யாக்கப்பட வேண்டின்;
அந்தப் பொய்யாமறை ஓதி ஒழுகப்படல் வேண்டும்.

சுயமரியாதைத் தத்துவம் பரிணமித்து அவமரியாதைத் தத்துவம் அரிதாக்கப்பட வேண்டின்;

அந்த சுயமரியாதைப் பெட்டகம் ஓதி ஒழுகப்படல் வேண்டும்.

பகுத்தறிவு ஒளிர்ந்து வகுத்தறிவு வீழ்த்தப்பட வேண்டின்;

அந்தப் பகுத்தறிவுப் பொக்கிஷம் ஓதி ஒழுகப்படல் வேண்டும்.

ஜனநாயகம் ஜனங்களின் நாயகமாக ஏற்றம் பெற்று தாழ்த்தப்பட வேண்டின்;

அந்த ஜனநாயக இலக்கணம் ஓதி ஒழுகப்படல் வேண்டும்.

இன, மொழி, நிற வேறுபாடுகள் இல்லாமையாகி "உலகமக்கள் யாவரும் ஒருவர் பெற்ற மக்களே" என்ற சகோதர தத்துவம் உள்ளமையாக ஆகிட வேண்டின்;

அந்த சமத்துவத்தின் ஊற்றுக்கண் ஓங்கிட ஓதப்பட்டு ஒழுகப்படல் வேண்டும்.

சுருங்கக் கூறின்;

நல்லவை நாடு தழுவி, அல்லவை கேடு தழுவிட வேண்டின்;

அந்த அற்புதத்திருமறை ஓதி ஒழுகப்பட்டு வரல் வேண்டும். என்ற நிலை நிலவி வருவதால் அம் மாமறைக்கு 'ஓதப்பட வேண்டியது!' என்ற பெயரும் அர்த்தமுள்ள பெயராக பரிணமிக்கின்றது.

அப்படித்தானே? கோன்மறை குர்ஆனின் பெருமையே, பெருமை!

## உள்ளத்தை உருகச் செய்திடும் உயர்வேதம்

ஹஜ்ரத் இக்ரிமா (ரலி - அன்ஹு) அவர்கள் குர்ஆன் ஷரீபை ஓதிடும்போது பலநேரங்களில் உணர்விழந்து கீழே சாய்ந்து விடுவார்களாம். அது போது 'ஹாதா கலாமு ரப்பீ... ஹாதா கலாமு ரப்பீ' (இஃது எனது இரட்சகனின் திருவசனம்... இஃது எனது இரட்சகனின் திருவசனம்) என அவர்களின் நாவு முணுமுணுத்துக் கொண்டிருக்குமாம்.

நபிகள் நாயகம் (ஸல் - அம்) அவர்கள்,

'இறைவா! நீ, அவர்களைத் தண்டித்து விட்டால் அவர்களோ நிச்சயமாக உனதடிமைகள்தாம். நீ அவர்களை மன்னித்தருளுவாயானால் மெய்யாக நீ பெருந்தன்மைக்கும் ஞானத்திற்கும், சொந்தக்காரனே' - என்ற அர்த்த முடைய வசனத்தை மட்டும் ஓதி ஓதி இரவு முழுவதிலும் உள்ளம் உருகி நிற்பார்களாம்.

'பாவிகளே! இன்றையதினம் நீங்கள் நல்லடியார்களை விட்டும் பிரிந்து தனியே செல்லுங்கள்' - என்ற அர்த்தமுடைய வசனத்தை மட்டும் இரவு முழுவதும் ஓதி ஓதி உள்ளம் உருகி நிற்பார்களாம் சயீதுபின் ஜுபைர் (ரலி - அன்ஹு) அவர்கள்.

இப்படி ஓதுபவர்களின் உள்ளத்தை - அவர்கள் அதனின் அர்த்தத்தை அறியாதவர்களாக இருப்பினும் - ஈர்த்து மெழுகுபோல உருகிடச் செய்திடும் சக்தி குர்ஆன் ஒன்றுக்கு மாத்திரமே சொந்தமாகும்.

## குர்ஆன் ஓதுவதை விட உயர்செல்வம் வேறுண்டோ ?

மூதறிஞர் 'சர்கஷி' (ரஹ் - அன்ஹு) அவர்கள் கூறியதாக ஹதீதுக்கலை விற்பன்னர் ஹஜ்ரத் முல்லா அலி காரி (ரஹ் - அன்ஹு) அறிவிக்கின்றார்.

'ஒரு நகரத்திலோ, அல்லது குக் கிராமத்திலோ குர்ஆனை ஓதத் தெரிந்தவர் ஒருவர் கூட இல்லாது போனால் அங்குள்ள அனைவருமே பெரும் பாவிகளாக ஆகிடுவர்.

'குர்ஆன் ஷரீபை தானும் கற்று அதனை மற்றவருக்கும் கற்றுக் கொடுக்கும் மனிதனே உங்களில் மிக்க மேலானவன்' - என்று நபிகளார் நவின்றதாக ஹஜ்ரத் உதுமான் (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

''ஒரு மனிதன் குர்ஆன் ஷரீபின் ஞானத்தை அடைந்தபின், அவன்; மற்ற உலகச் செல்வங்கள் கொடுக்கப்பட்டுள்ள செல்வந்தர்களை - உத்தியோகஸ்த்தர்களை - உயர் பதவி வகிப்பவர்களைப் பார்த்து அவர்கள் தன்னை விட 'மிக உயர்ந்த பாக்கியசாலிகள்' என ஏங்கினால் அத்தகையவன் தனக்கு வல்ல அல்லாஹ்வினால் வழங்கப்பட்ட ஈடிணையற்ற சன்மானத்தை

அழிவுபடுத்தியவனாக ஆகி விடுவான் -'' - என நபிகளார் எச்சரித்துள்ளதாக ஹழ்ரத் சயீதுபின் சலீம் (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

## மா மனிதன்

ஹழ்ரத் முல்லா அலிகாரி (ரஹ் - அன்ஹு) அவர்கள்.

''வல்ல அல்லாஹ்வின் பரிசுத்த வேதத்தின் கலா ஞானங்களை அடைந்த மனிதன் நபிப்பதவிகளின் கலாஞானங்களை தனது சிரசில் திரட்டிக் கொண்ட மா மனிதனாவான்''

என்ற அருள்மிகு ஹதீதை அறிவிக்கின்றார்கள்.

ஹழ்ரத் சாஹல் தஸ்த்தரி (ரஹ்-அன்ஹு) அவர்கள்.

''வல்ல அல்லாஹ்வின் பரிசுத்த வேதமான குர்ஆன் ஷரீபை மனப்பூர்வமாக நேசிப்பது அவன் மீது கொண்ட தெய்வீகக் காதலுக்கு அறிகுறியாகும்''

எனக் கூறிப் பெருமிதமடைகின்றார்கள்.

படுபயங்கரமான நியாயத் தீர்ப்பு நாளின் போது அர்ஷின் நிழலடியில் நிழல்பெற்றுய்யும் மகா பாக்கியவான்களின் ஜாபிதாவில் சிறுவர்களுக்கு குர்ஆனை கற்றுக்கொடுக்கும் முஅல்லிம்களின் பெயர் இடம் பெறும் - என்பதாக இஹ்யாவு உலூமுத்தீன் எனும் கிரந்தத்தின் ஷரஹில் கோடிட்டுக் காட்டப்பட்டுள்ளது.

அப்படியென்றால் குர்ஆனை ஓதுவது அதன்படி ஒழுகுவது அதனைக் கற்றுக்கொடுப்பது போன்ற பாக்கியத்தைவிட இவ்வுலகில் வேறு எதுவும் உயர் செல்வமாக மிளிர முடியுமோ?

## சிலர் உயருவர் சிலர் தாழுவர்

"இதன் (குர்ஆன் ஷரீப்) மூலம் அவன் (அல்லாஹ்) மிகுதி மக்களை வழி கெடுக்கின்றான் மிகுதிமக்களை நேர்வழியில் நடாத்துகின்றான்"

என்று குர்ஆன் தன்னைப்பற்றி விமரிசித்து நிற்கின்றது.

"வல்ல அல்லாஹ் இவ்வேதத்தின் (குர்ஆன் ஷரீபின்) மூலம் மிகுதிமக்களை உயர்த்துகின்றான் மிகுதி மக்களை தாழ்த்துகின்றான்"

என்று நபிகளார் நவின்றதாக ஹஜ்ரத் உமர் (ரலி - அன்ஹு) அறிவிப்புச் செய்கின்றார்கள்.

இரண்டாவது கலீபா ஹஜ்ரத் உமர் (ரலி - அன்ஹு) அவர்கள் தங்களது ஆட்சியின் போது 'நாபிவு பின் அப்தில் ஹாரிது' என்பவரை மக்மா நகரத்தின் கவர்னராக நியமித்திருந்தார்கள். ஒரு சமயம் அந்த கவர்னரிடத்தில் "காட்டிலாக்கா அதிகாரியாக யாரை நியமித்துள்ளீர்?" என கலீபா அவர்கள் வினவிய போது "இப்னு ஹபஸியை அப்பதவியில் அமர்த்தியுள்ளேன்" என்று

ஆமீன். ஆமீன் யாரப்பல் ஆலமீன்.

## ஓதுவோர் எய்திடும் ஒப்பில்லாப் பலன்கள்

'தொழுகையில் குர்ஆனை ஓதுவது தொழுகைக்கு வெளியில் ஓதுவதைவிட மேலானதாகும். தொழுகாதிருக்கும்போது குர்ஆனை ஓதுவது தஸ்பீஹ் தக்பீர்களை ஜபிப்பதைவிட மேலானதாகும். தஸ்பீஹ் ஜபிப்பது தர்மத்தினும் சிறந்ததாகும். தர்மம் நோம்பை விடச் சிறந்ததாகும். நோம்போ நரகத்தைவிட்டும் பாதுகாக்கும் கேடயமாகும்'

என்று நபிகளார் நவின்றுள்ளார்கள். இதனை ஹஜ்ரத் ஆயிஷா (ரலி-அன்ஹா) அறிவிக்கின்றார்கள்.

ஒரு மனிதன் நின்று தொழுதிடும்போது குர்ஆனை ஓதினால் அவனுக்கு ஒவ்வொரு எழுத்திற்கும் 100 நன்மைகள் வெகுமதியாகக் கிடைக்கும். உட்கார்ந்து தொழுகையில் குர்ஆனை ஓதிடும்போது ஒவ்வொரு எழுத்திற்கும் 50 நன்மைகள் வெகுமதியாக வழங்கப்படும். தொழாமல் இருக்கும் சாதாரண சந்தர்ப்பத்தில் உளுவுடன் அதனை ஓதினால் ஒவ்வொரு எழுததிற்கும் 25 நன்மைகள் கிடைக்கும். உளு இல்லாமல் ஓதினால் (பெருந்தொடக்கரு இல்லாதவர் உளு இல்லாமல் குர்ஆனைத் தொடுவதுதான் கூடாது. ஆனால் தொடாமல் ஓதுவது கூடும்) ஒவ்வொரு எழுத்திற்கும் 10 நன்மைகள் கிடைக்கும் மற்றவர் ஓதுவதை செவிமடுத்துக் கொண்டிருந்தால் ஒரு எழுத்திற்கு ஒரு நன்மை வீதம் கிடைக்கு''.

மேற் கூறப்பட்ட ஹதீதிற்கு விளக்கவுரையாக ஹஜ்ரத் அலி (ரலி-அன்ஹு) அவர்களின் அறிவிப்பை ஹுஜ்ஜத்துல் இஸ்லாம் இமாம் கஸ்ஸாலி (ரஹ்-அன்ஹு) அவர்கள் எடுத்துக் காட்டுகின்றார்கள்.

## கவலல் அகற்றும் அருள் மாமருந்து

ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள் :

நபிகளாரிடம் ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் தோன்றி, ''வரும் காலத்தில் மிகுந்த குழப்பங்கள் சம்பவிக்கும்'' என முன்னறிவிப்புச் செய்திட்டபோது ''அவைகளிலிருந்து தப்பி மீள வழிவகையேதுமுண்டோ?'' என நபிகளார் விபரம் கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் வேதமான குர்ஆன் அவைகளுக்குப் பரிகாரம்'' என ஜிப்ரயீல் மறுமொழி பகர்ந்தார்கள்.

''எவர் அதிகாலையில்—பஜ்ரு தொழுகையினை முடித்தபின் குர்ஆன் ஷரீபிலிருந்து 100 ஆயத்துகளை ஓதி வருகின்றாரோ அவருக்கு உலக முழுமையின் அளவு நன்மைகள் வழங்கப்படும். அதனைப் பார்த்து ஓதி வந்தால் கண் பார்வைமிகும்'' என இஹ்யாவில் உணர்த்தப் பட்டுள்ளது.

அபூ உபைதா (ரஹ்-அன்ஹு) அவர்கள் கூறு கின்றார்கள்.

''எனக்கு கண்நோய் ஏற்பட்டு மிக வேதனைப் பட்டேன். அதனைக் கண்ட எனது குருநாதர் குர்ஆன் ஷரீபை பார்த்து ஓதி வருமாறு யோசனை கூறினார்கள் அதன்படி நான் ஓதி வரலானேன்.

ஒரு சில வேளைகளிலேயே என்னைப் பிடித்திருந்த கண்நோய் முற்றாக குணமாகிவிட்டது''

ஹஜ்ரத் அபூஹுறைரா (ரலி-அன்ஹு) அறிவிக் கின்றார்கள்.

''எந்த வீட்டில் குர்ஆன் ஷரீப் தொடர்ந்து ஓதப்பட்டு வருகின்றதோ அந்த இல்லத்தில் புத்திரபாக்கியம் மிகும் நன்மைகளும் அபிவிருத்திகளும் மிகும். மலக்குகள் அந்த வீட்டில் இறங்குவர்; ஷைத்தான் அதனை விட்டும் விரண் டோடிடுவான். எந்த வீட்டில் குர்ஆன் மஜீது ஓதப்படு வதில்லையோ அங்கே வறுமையும் மிடுமையும்மிகும். மலக்குகள் அதில் பிரவேசிக்க மாட்டார்கள். ஷைத்தான் கள் அதனை குடியிருப்பாகக் கொள்வர்.''

'காலிமனை' என்பது குர்ஆன் ஷரீப் ஓதப்படாத இல்லமேயாம்'' என ஹஜ்ரத் இப்னு மஸ்ஊது (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

''பல் துலக்குதல், நோன்பு, நோற்குதல், குர்ஆன் ஓதுதல் ஆகிய இம்மூன்றும் ஞாபக சக்தியை வலுப் படுத்தும்'' என ஹஜ்ரத் அலி (ரலி-அன்ஹு) அறிவிக் கின்றார்கள்.

இன்னும் குர்ஆன் ஷரீபிலுள்ள ஆயத்துக்களால் விளையும் தன்மைகள் அதுமாமருந்தாகத் திகழும் அற்புதங் கள் - அநேகமுண்டு.

## அல்லாஹ்விடம் நெருக்கம் பெற்றிட...

ஹஜ்ரத் இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்-அன்ஹு) கூறுகின்றார்கள்:

நான் வல்ல அல்லாஹ்வை கனாவில் தரிசித்தபோது இறைவ, எம்பெரும! உனது சன்னிதானத்தை நெருங்கிட யாது வழி? என்றேன். அதற்கு ''எனது திருவேதமாகிய குர்ஆன்'' என்று வல்லவன் பதிலுரைத்தான். கருத்து விளங்கி ஓதுவதா? கருத்து புரியாமல் ஓதுவதா? என நான் வினவினேன் ''விளங்கி ஓதினாலும் சரி விளங்காமல் ஓதினாலும் சரி, இருவிதமும் எனது சன்னிதானத்தை நெருங்கும் வழியேயாகும்'' என வல்லவன் பதிலளித்தான்.

''மெய்யாக நீங்கள் அல்லாஹ்வின் சன்னிதானத்தை அண்மிக்க அவனிலிருந்து வெளிப்பட்ட குர்ஆனைவிடச் சிறந்த பொருளைப் பெற்றுக்கொள்ள முடியாது''

என்று நபிகளார் நவின்றதாக ஹஜ்ரத் அபூதர் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

## குர்ஆன் ஷரீஃபை ஓதுவதில் பேரின்பம் கண்ட பெரியோர்கள்

ஹஜ்ரத் உதுமான் (ரலி-அன்ஹு) அவர்கள் சில சமயங்களில் வித்ரு தொழுகையின் போது ஒரேயொரு ரக்அத்தில் முழு குர்ஆனையும் ஓதி முடித்து விடுவார்களாம்.

ஹஜ்ரத் அப்துல்லாஹிப்னு ஜுபைர் (ரலி-அன்ஹு) அவர்கள் ஒரே இரவில் குர்ஆன் முழுவதையும் ஓதி முடித்து விடுவார்களாம்.

ஹஜ்ரத் சயீதுப்னு ஜுபைர் (ரலி-அன்ஹு) அவர்கள் புனித கஃபாவினுள் நின்று இரண்டு ரகா அத்துகள் தொழுதார்கள்; அதில் குர்ஆன் ஷரீப் முழுவதையும் ஓதித் தீர்த்தார்கள்.

ஹஜ்ரத் தாபித் பன்னான் (ரஹ்-அன்ஹு) அவர்கள் ஒரு இரவுபகலில் ஒரு கத்தம் முடிப்பதைப் பழக்கமாகக் கொண்டிருந்தார்கள்.

ஹஜ்ரத் அபூஹைகு ஹனாயி (ரஹ்-அன்ஹு) அவர்கள் கூறுகின்றார்கள்.

"நான் ஒரு இரவில் இரண்டு குர்ஆன்களை கத்தம் செய்து மூன்றாவதாக குர்ஆனின் பத்து ஜுஸ்வுக்களையும் ஓதி முடித்தேன். விரும்பியிருந்தால் மூன்றாம் கத்தமும் செய்திருப்பேன். ஆனால் பெருமை பீடித்துக் கொள்ளும். என்பதால் அங்வனம் செய்யத் துணியவில்லை."

சாலிஹ்பின் கைசான் (ரலி-அன்ஹு) எனும் பெருந்தகை ஹஜ்ஜுப் பயணத்தின் போது அனுதினமும் ஒரு இரவிற்குள் ஒரு குர்ஆன் ஷரீப் கத்தம் ஓதி முடித்து வந்தார்களாம்.

ஹஜ்ரத் மன்ஸூர்பின் சஅதான் (ரலி-அன்ஹு) எனும் பெருந்தகையாளர் லுஹர் தொழுகையின் போது ஒருமுழு குர்ஆனையும் லுஹருக்கும் அஸருக்குமிடையில் மற்றொரு குர்ஆனையும் ஓதி முடிப்பார்களாம்.

இமாம் ஷாஃபிஈ (ரஹ்-அன்ஹு) அவர்கள் ரமளான் அல்லாத காலங்களில் கூட நாளொன்றுக்கு ஒரு கத்தம் வீதம் ஓதி முடிப்பார்களாம்.

சலீம்பின் இத்ரு (ரலி-அன்ஹு) என்பவர் தாபிஈன்களைச் சார்ந்தவர் ஹஜ்ரத் உமர் (ரலி-அன்ஹு) அவர்களது ஆளுகையின் போது எகிப்து வெற்றியில் பங்கு கொண்டவர். ஹஜ்ரத் முஆவியா (ரலி-அன்ஹு) அவர்களது ஆளுகையின்போது கஸஸ் மாகாணத்தின் கவர்னராக ஏற்றம் பெற்றவர். இவர் ஒவ்வொரு இரவிலும் மூன்று கத்தம் ஓதி முடிப்பாராம்.

இமாம் நவவி (ரஹ்-அன்ஹு) கிதாபுல் அக்தர் எனும் நூலில் குறிப்பிடுகின்றார்:

''எமக்குத் தெரிந்தவரை இப்னுகாதிப் என்ற பெரியாரை விட வேறு எவரும் குர்ஆன் ஓதுவதில் வல்லவராகப்படவில்லை. காரணம் அவர் ஓரே நாளில் எட்டு முறை ஓதி முடிப்பதைப் பழக்கமாகக் கொண்டிருந்தார்.

இமாமுல் அஃளம் அபூஹனீபத்துந் நுஃமான் (ரஹ்-அன்ஹு) அவர்கள் ரமளான் மாதங்களில் பகலில் ஒன்றும், இரவில் ஒன்றுமாக ஒரு மாதத்திற்குள் 61 - தடவை 'கத்தம்' முடிப்பதைப் பழக்கமாகக் கொண்டிலங்கினார்கள்.

சுப்ஹானல்லாஹ்...... இத்தகு இறைநேசர்களின் கால் தூசிக்காவது நாம்சமமாகுவோமா?

## கரைகாணாச் சமுத்திரம்

கோதில்மறையாம் குர்ஆன் கரைகாணாச் சமுத்திரமாகும். அது மனித சமுதாயத்திற்கு வழங்கும் வாழ்க்கை முறை மனிதனைப் புனிதனாக ஆக்கிடவல்ல வாழ்க்கைத் திட்டமாகும்.

இந்த மாமறையின் பேரொளியில் அன்று மட்டுமல்ல! இன்றும் எத்தனை எத்தனையோ அற்புதங்கள் விளைந்த வண்ணம் உள்ளன. எங்கே? எப்படி? என துடிப்பீர்கள். அவசரம் வேண்டாம் இதோ சில சுவையான நிகழ்ச்சி களை கோடிட்டுக் காட்டுகின்றேன்.

அவை எனது சொந்தச் சரக்கல்ல. குர்ஆன் ஷரீபின் 14 - ஆம் நூற்றாண்டு விழாவினை கொண்டாடிடும் பொருட்டு பாகிஸ்தானில் - அரசு சார்பில் - மலர் ஒன்று வெளியிடப்பட்டது. உலகின் கவனத்தையெல்லாம் தன் பக்கம் ஈர்த்துக்கொண்ட அந்த மலரில் இடம் பெற்றுள்ள சில நிகழ்ச்சிகளை தென்னாட்டின் தனிப் பெரும் மேதை யாகத் திகழ்ந்த ஷைகுல்இஸ்லாம் உத்தமபாளையம் P. K. S. முஹம்மது இப்றாஹீம் ஹஜ்ரத் கிப்லா அவர்கள் 1975 - ஆம் ஆண்டு மே மாத பிறை இதழில் சிறப்புக் கட்டுரையாக சித்தரித்துள்ளார்கள்.

படிக்கப் படிக்கச் சுவையும் சூடும் விருப்பும் விறு விறுப்பும் ஏற்றிடவல்ல அந்நிகழ்ச்சிகளின் கருவை தொகுத்துத் தருகின்றேன்.

## குர்ஆனின் இசையின்பத்தால் இஸ்லாமாகிய மாஜூஸி

போபால் நகரைச் சேர்ந்த காரி (குர்ஆன் ஷரீபை அதற்குரிய சந்த மாத்திரைகளோடு ஓதிடுபவர்) ஒரு வருக்கு ஹஜ்ஜுச் செய்திட வேண்டுமென்ற ஆவல்

ஏற்பட்டு நாளாவட்டத்தில் அவரின் இலட்சியமாக அந்த ஆவல் உருவெடுத்தது.

ஆனால்; அவர் பரம ஏழை. அவரிடம் எஞ்சியிருந்ததோ ஒரேயொரு ரூபாய்தான். அதில் முக்கால் ரூபாய் செலவில் ஒரு துணிப் பையை தயாரித்து பாக்கியுள்ள கால் ரூபாய்க்கு பொறி கடலையை வாங்கி அந்தப் பையினுள் நிரப்பிக் கொண்டு அல்லாஹ்வின் மீது தவக்குல் கொண்டவராக ஹஜ்ஜுப் பயணத்தைத் தொடங்கி விட்டார்.

போபாலில் இருந்து கால்நடையாகப் பயணம் மேற் கொண்ட அந்த காரி சாஹிப் பட்டினியும் பசியுமாக நடந்து நடந்து பம்பாய் மாநகரை அடைந்தார்.

பம்பாய் துறைமுகத்தில் ஜித்தா செல்லும் கப்பலொன்று நின்று கொண்டிருந்தது.

பணம் படைத்த சீமான்கள் உரிய கட்டணத்தைச் செலுத்தி மிடுக்காக கப்பலில் ஏறிக் கொண்டிருந்தனர் இதனை ஆங்கே நின்று பார்த்துப் பார்த்து ஏங்கிக் கொண் டிருந்த சாஹிபிற்கு திடீரென ஒரு யோசனை உதித்தது, ஒரு முடிவுக்கு வந்தவராக அங்குமிங்கும் விசாரித்து விசாரித்து அந்த கப்பலின் தலைமை மாலுமியை கண்டு பிடித்தார்.

கந்தல் ஆடை குழிவிழுந்த கண்கள், உலர்ந்த உதடு கள் ஆகிய கோலத்தோடு காரிசாஹிபைக் கண்ட அந்த மாலுமி "என்ன மிஸ்டர்...என்ன வேண்டும்?" என இளக் காரமாகக் கேட்டான்.

ஒன்றுமிலலை சார் நான் வந்து, வந்து ஹஜ்ஜுக்குச் செல்ல வேணடும். அதற்காக..." எனத் தயங்கித் தயங்கி தனது ஆசையை வெளியிட்டார் காரிசாஹிப்.

''என்ன...நீ ஹஜ்ஜுக்குப் போக வேண்டுமா? அப்படி யென்றால் கட்டணத்திற்குரிய பணத்தை செலுத்தி டிக்கட் வாங்கிக் கொள்வது தானே...? என்றான் மாலுமி.

''பணமா! நான் பரம ஏழை சார். ஆனாலும் இலவச மாக ஒன்றும் வேண்டாம். உங்களின் கப்பலில் ஏதாவது வேலை இருந்தால் கொடுங்கள். நான் அதனைச் செய்து கொண்டே ஜித்தாவை அடைந்து ஆங்கிருந்து எப்படி யாவது மக்கா போய்ச் சேர்ந்துவிடுகின்றேன்''

''வேலையா வேலைக்கு ஆள் தேவைதான். ஆனால் உமது கோலத்திற்கு அது தகுதியான வேலையன்று'' என மாலுமி உதறினான்.

காரிசாஹிப் விடவில்லை. 'என்ன வேலையாக இருந்தாலும் நான் அதற்குத் தயார். தயவு செய்து என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்' என மன்றாடுகின்றார்.

காரிசாஹிபின் நமச்சலைப் பொறுக்க முடியாமல் தனக்கு முன்கிடந்த ஒரு பெரிய சுமையைச் சுட்டிக்காட்டி ''இதோ இந்தச் சுமையை மற்றவர் உதவியின்றி ஒரே மூச்சில் தூக்கிவிட்டால் நான் உனக்கு வேலை தருகின் றேன்'' எனக் கூறி தட்டிக் கழிக்க முயன்றான் மாலுமி.

இதனைக் கேட்ட காரிசாஹிபிற்கு மகிழ்ச்சி தாங்க முடியவில்லை, ஆனால் அத்தச் சுமையைப் பார்க்கும் போது, ஏற்பட்ட மகிழ்ச்சி ஓடி மறைகின்றது. ஆகவே ''இறைவா! என்னால் முடிந்ததையெல்லாம் செய்து விட்டேன். இதற்குமேல் உனது பேருபகாரம்தான் வேலை செய்திட வேண்டும்'' என மனதிற்குள் வல்ல அல்லாஹ்வை

மன்றாடியவராக "பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்... தவக்கல்த்து அலல்லாஹ்...அல்லாஹு அக்பர்" என்று கூறியபடி ஒரே மூச்சில் அந்த மிகப்பெரும் சுமையை தூக்கிக் காட்டுகின்றார்.

காரிசாஹிபின் அணைபோட முடியாத ஆர்வம், பிரமிக்கத் தக்க ஊக்கம், உறுதி ஆகிய குணப் பண்புகளைக் கண்டு வியந்து அவரின் முதுகைத் தட்டிக் கொடுத்த மாலுமி கப்பலின் சிப்பந்தியாக - எடுபிடியாக - அல்ல, அல்ல. சீப்பராக! அவரை அமர்த்திக் கொள்கின்றான்.

அல்லாஹ்வின் ஆலயமான புனித கஃபாவினை தரிசிக்க வேண்டும் என்ற ஒரே ஆவலில் திழைத்திருந்த அந்த காரிசாஹிபும் அந்த வேலையை ஏற்றுக் கொள் கின்றார்.

கப்பல் புறப்பட்டு விட்டது.

காரிசாஹிப் அனுதினமும் அதிகாலை வேளைகளில் குழாய் வழியாகக் கடல்நீரை கப்பலின் மேல் தளத்திற்கு ஏற்றி அந்த தண்ணீர் கொண்டு கப்பலில் உள்ள கக்கூஸ் களை கழுவி துப்புரவு செய்வார், வேலை முடிந்தபின் குளித்து துப்புரவாகிக் கொண்டு இறை வணக்கங்களிலும் தல்பியா ஒலிப்பதிலும் திக்ரு ஃபிக்ருக்களிலும் மூழ்கி விடுவார்.

இப்படியாக நாளும் உருண்டது. கப்பலும் உருண் டோடியது.

அப்போது ஒரு நாள்! நடு நிசி நேரம்! தலைமை மாலுமி கப்பலைச் சுற்றி பார்த்துக் கொண்டே வருகின்றார். திடீரென ஒருவகை இனிமையான சப்தம். சப்தம் வந்த திக்கை நோக்கி அவர் தன்னையறியாமலே செல்கின்றார். அங்கே சீப்பர் - ஆமாம். காரிசாஹிப் - தொழுது கொண்டிருக்கின்றார். அந்தத் தொழுகையில் அவர் ஏதேதோ ஓதுகின்றார். அந்த ஓதுகைதான் சற்றுமுன் மாலுமி செவியுற்ற இனிமையான அந்த சப்தம்.

தொழுகை தொடர்கின்றது. ஓதுகையும் தொடர்கின்றது. மாலுமியோ மகுடியின் நாதத்தில் கட்டுண்ட நாகம்போல, அப்படியே மெய்மறந்து அங்கேயே நெடு நேரம் நின்று விடுகின்றார்

காரிசாஹிப் தொழுகையினை முடித்து விட்டு திரும்பிப் பார்க்கும் போதுதான் மாலுமிக்கு சுயநினைவு திரும்புகின்றது.

நிலைமையைச் சமாளித்துக் கொண்ட மாலுமி காரிசாஹிபை தனதருகில் அழைத்து ''நீர் இப்போது இசைத்தீரே அது என்ன?'' என்றார்.

''அதுவா? அதுதான் எங்களின் புனித வேதமான குர்ஆன்'' என்கின்றார் காரிசாஹிப்

''அப்படியா! இனிமைக்கு இனிமை சேர்க்கும் தேனாமிர்த இசை. அதனை எனக்கும் கொஞ்சம் கற்றுக் கொடுக்க முடியுமா?''

''கற்றுத் தருகின்றேன் ஆனால்''

''என்ன ஆனால்...? சொல்லும் சொல்லும் எவ்வளவு வேண்டுமானாலும் தருகின்றேன் அதற்காக எது வேண்டு மானாலும் செய்கின்றேன்''

'பணமோ, பரிசோ ஒன்றும் தேவையில்லை. நீங்கள் நீராடி சுத்தமான ஆடையணிந்து வர வேண்டும்'

'இவ்வளவுதானா? இதற்குத்தானா இவ்வளவு தயங் கினீர்? இதோ ஒரு நொடியில்..' என்று கூறிச் சென்ற மாலுமி கொஞ்ச நேரத்திற்குள் குளித்து சுத்தமான ஆடைகள் அணிந்தவராக ஓடோடி வந்து காரிசாஹிப் முன் அமருகின்றார்.

'லாயிலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' எனும் தாரகை மந்திரத்தை மிக்கத் துணிவோடு மாலுமிக்கு காரிசாஹிப் முதலில் சொல்லிக் கொடுத்தார்.

விபரம் புரியாத மாலுமியும் கலிமாவை மொழிந்தார்.

அதன்பின் 'குல் ஹுவல்லாஹ்' சூராவை மாலுமிக்கு காரிசாஹிப் படித்துக் கொடுக்கின்றார்.

மனமகிழ்ச்சியோடு அந்த சூராவை மிக எளிதில் படித்துக்கொண்ட மாலுமி நடக்கும் போதும், இருக்கும் போதும், படுக்கும் போது என எல்லா சந்தர்ப்பங்களிலும் அந்த சூராவை இனம் தெரியாத பக்தியுணர்வோடு இசைத்துக் கொண்டு வரத் தொடங்கி விட்டார்.

இதனை நோட்டமிட்டுக் கொண்டிருந்த வெள்ளையர் கள் ''என்னங்க மிஸ்டர்! நீங்கள் முஸ்லிமாக மதம் மாறி விட்டீர்களா?'' என ஒரு சமயம் கேட்டுவிடுகின்றனர்.

முஸ்லிமாக மதம் மாறி விட்டேனா? இல்லையே ! ஏன் என்னைப் பார்த்து அப்படிக் கேட்கிறீர்கள்...!

நீங்கள் எவ்வளவு தான் மறுத்தாலும் நாங்கள் நம்பத் தயாராக இல்லை மிஸ்டர். நீங்கள் மதம் மாறியது மாறியது தான்'' என அந்த வெள்ளையர்கள் அடித்துப் பேசினர்.

ஒன்றுமே புரியாத மாலுமி காரிசாஹிபிடம் சென்று ''நான் முஸ்லிமாக மதம் மாறி விட்டேன் என எல்லோரும் சொல்லுகிறார்களே ... வாஸ்தவம் தானா?'' எனக் கேட்கின்றார்.

அதிலென்ன சந்தேகம்? நீங்கள் அன்றே முஸ்லிமாக மதம் மாறிவிட்டீர்கள்தான்!'' என்றார் காரிசாஹிப்.

இதனைக் கேட்டதும் ஒரு கனம் துணுக்குற்று நின்ற மாலுமி 'அப்படியா? அப்படியென்றால் இனி இறுதிவரை ஒரு முஸ்லிமாகவே வாழ்வேன்'' என உணர்ச்சியோடு கூறிவிட்டு, தனது துணைவியிடம் சென்று விபரங்களை எடுத்துக்கூறி அவரையும் முஸ்லிமாக மதம் மாறும்படி அழைக்கின்றார்.

ஆனால்; ஆட்டங்களிலும், பாட்டங்களிலும் தன் இஷ்டம் போல எவருடனும், எந்நேரத்திலும் நட்புறவாடுவ திலேயே பேரின்பம் கண்டு கொண்டிருந்த அவள் - மாலுமி யின் துணைவி தனது - கணவரின் இந்தத் திடீர் மாற்றம் கண்டு அயர்ந்து விட்டாள். எவ்வளவோ நயமாகப் பேசி அவரை மனமாற்றம் காணச் செய்ய முயன்று பார்த்தாள்.

இருட்டில் முட்டி மோதிக் கொண்டு திரிந்தவன் வெளிச்சத்திற்கு வந்துவிட்டால் அதற்குப் பின்னும் இருட்டை விரும்புவானா?

குண்டும், குழியும், முள்ளும் கல்லும் அடர்ந்து கிடந்த நொடிப்பாதைகளில் நடந்து நடந்து அலுத்துப் போய் கிடந்தவன் அழகான தார் ரோட்டை அடைந்து விட்டால் அதற்குப் பின்னும் அந்த நொடிப் பாதையை விரும்பு வானா?

ஆர்ப்பரிக்கும் ஆழ்கடலில், வெறும் மரக் கட்டையில் அமர்ந்து உயிருக்கு மன்றாடிக் கொண்டிருந்தவன், அனைத்து வசதிகளும் நிரம்பிய கப்பலுக்கு வந்து விட்டால் அதற்குப் பின் அந்த மரக்கட்டைப் பயணத்தை நினைத்துப் பார்ப்பானா?

ஆமாம் ... ஆமாம் அர்த்தமற்ற மதத்திலிருந்து அர்த்தமுள்ள இஸ்லாம் மார்க்கத்திற்குள் நுழைந்துவிட்ட மாலுமிக்கு அவரது மனைவியின் சாகசப் பேச்சுக்களால் மாற்றமேதும் ஏற்படவில்லை. மாறாக மனதில் வைராக் கியம் மிகுந்தது

ஆகவே ''நான் மீளாத்தபாராக இல்லை. நீ என்னுடன் இணைந்து கொள்ள விருப்பமுண்டா இல்லையா?'' என இறுதியாக ஆனால் உறுதியாக கேட்டார்.

''முடியாது. முடியாது. முடியவே முடியாது'' என முற்றாக மறுத்து விட்டாள் அவள்.

ஆகவே அவளுடன் அவருக்கிருந்த அனைத்து பந்தங்களையும் அறுத்துக் கொண்டு தனது ஆத்மீக வழிகாட்டியான காரி சாஹிபிடம் தன்னை முழுமையாக ஒப்படைத்துக் கொண்டு ஒப்பாரும் மிக்காருமில்லா ஆண்டவனாம் வல்ல அல்லாஹ்வை வணங்கி வழிபடுவதில் மூழ்கித் திளைக்கத் தொடங்கி விட்டார் மதம் மாறிய அந்த மாலுமி.

அதற்குள் கப்பல், ஜித்தா துறையை அடைந்து விடுகின்றது.

உடனடியாக தனது தலைமை மாலுமிப் பதவியை ராஜினாமாச் செய்து, பொறுப்புக்களையெல்லாம் உதவி மாலுமியிடம் ஒப்படைத்து விட்டு உடுத்திய ஆடையோடு கப்பலை விட்டிறங்கி பூவினிற் சிறந்த மக்கமாபுரத்தை அடைந்து புனிதஹஜ்ஜை நிறைவேற்றுவதில் மன மொழி மெய்யன்போடு ஈடுபாடு கொள்கின்றார்.

*சுப்ஹானல்லாஹ் !*

*அன்பரீர் ! படித்தீர்களா சேதியை !*

பம்பாய் துறையிலிருந்து கப்பல் கிளம்பும்போது தலைமை மாலுமி ஒரு கிருத்துவர். அவருக்கு ஹஜ்ஜுச் செய்திட வேண்டும் என்ற எண்ணம் இம்மியும் இல்லை என்பதோடு ;

"இவ்வளவு பெருமுயற்சி செய்து இத்தனை ரூபாய் களை முடக்கி - எத்தனை எத்தனையோ நாட்களை முடமாக்கிவிட்டு ஏதுமற்ற இந்த யாத்திரையில் இவ்வளவு இண்ட்ரஸ்டு காட்டுகின்றார்களே இந்த ஏமாளிகள்..."

என்றுதான் அந்த புனித பயணிகளைப் பற்றி அவர் நினைத்திருக்க முடியும் அல்லவா?

அப்படிப்பட்ட அந்த மாலுமியை மறுகரையான ஜித்தா அடைவதற்குள் இப்படி மனம் மாறச் செய்த சக்தி எது? மதம் மாறச் செய்த கவர்ச்சி எது? ஆடம்பரமான ஆடம்பரங்கள் நிறைந்த வாழ்க்கையினை உதறித் தள்ளிவிட்டு எளிமை நிறைந்த தீனுல் இஸ்லாத்தில் அந்த மாலுமியை இணையச் செய்திட்ட அந்த அபார சக்தி எது, எது?

சிந்திப்பீர் ! செயல்படுவீர் ! சிறப்படைவீர் !

இதுமட்டுமன்று. சிந்தனை விருந்தான மற்றுமொரு நிகழ்ச்சியினைப் பார்ப்போம்.

## பெரு விபத்திலிருந்து
## உயிர்காத்த வேதம்

டெல்லி மாநகரின் ரயில்வே ஸ்டேசன்.

ஆர்ப்பரிக்கும் ரயில்களின் உறுமல் ஒரு பக்கம்.

உரிய இடத்தை தேடிப்பிடிப்பதற்காக அங்குமிங்கும் ஓடியலைபவர்களின் ஆவல் மறுபக்கம்.

''போய் வாருங்கள்...டா டா; நமஸ்தே; அஸ்ஸலாமு அலைக்கும்'' என வழியனுப்புவர்களின் வழியனுப்புச் சாரங்களும்.

''போய் வரட்டுமா...? வீட்டை பத்திரமாகப் பார்த்துக் கொள்ளுங்கள் ... உடம்பை பத்திரமாகக் கவனித்துக் கொள்ளுங்கள் ... ஒழுங்காக கிளாஸிற்குப் போய் வர வேண்டும் ... தெரிகின்றதா...?'' என்ற ஆதுர உபந்நியாசங்களுமாக அல்லோல, கல்லோலப்பட்டுக் கொண்டிருந்தது.

இதோ 'வங்கமெயில்' புறப்பட சிக்னல் கொடுத்தாகி விட்டது பச்சை விளக்கின் பசுமையைப் பார்த்தவுடன் ''சிக்...சிக்...சிக்... குகூ...குகூ'' என்ற பெருமித இரைச்சலோடு வங்கமெயில் சிங்கமென புறப்பட்டு விட்டது.

மறுநாள்,

காலைப் பத்திரிக்கைகளில்?

வங்கமெயில் வெடிவிபத்திற்குள்ளானது !

வங்கப்பிரதமர் மௌலானா ஏ.கே. பஜ்லுல்ஹக் அகால மரணம். அரசியல் சதியா? போலீஸ் தீவிரம் !

என்ற பரபரப்பான செய்தி காணப்படுகின்றது. கல்கத்தா நகர் முழுவதும் சோக வெள்ளத்தில் மூழ்குகின்றது.

அன்று மதியம் 12-15 மணி ஒலிபரப்பில் ''நம்பிரதமர் மௌலானா ஏ.கே பஜ்லுல்ஹக் சாஹிப் அவர்கள். இன்று மாலை மூன்று மணியளவில் அசெம்பிளித்திடலில் நடக்கும் அவசரப் பொதுக் கூட்டத்தில் உரை நிகழ்த்த உள்ளார். என்ற அதனைவிட மிகமிக பரபரப்பாக செய்தி ஒலிபரப்பப்படுகின்றது.

அதனைக் கேட்ட கல்கத்தா நகரம் மட்டுமல்லாது அனைத்து இந்தியாவும் பேராச்சரியத்திலும் குழப்பத்திலும் மூழ்கியது.

அன்று மதியத்திலிருந்தே கல்கத்தா அசெம்பிளித்திடல் மக்கள் வெள்ளத்தால் கரை புரண்டோடுகின்றது.

சரியாக 3 - 00 மணி

மேடையில்,

வங்கச் சிங்கம் மௌலானா ஏ. கே பஜ்லுல்ஹக் சாஹிப் அவர்கள் சிங்கமென கர்ஜிக்கத் தொடங்கி விட்டார்.

அவரது பேச்சின் ஊடே......

இன்றைக்கு நடந்த வங்கமெயில் விபத்தில் நான் மாண்டு விட்டதாகச் செய்தி வந்தது கண்டு நீங்கள் மட்டு மல்ல, எனது துணைவியார் கூட துயர வெள்ளத்தில் மூழ்கிவிட்டார். உண்மையென்னவெனில் வங்கமெயிலில் எனக்காக சீட் ரிசர்வு செய்யப்பட்டது வாஸ்த்தவம் தான். அதிலே நான் ஏறி அமர்ந்து விட்டதும் வாஸ்த் தவம்தான். ஆனால் கடைசி நேரத்தில் எனது குர்ஆன் ஷரீப் தவறிவிட்ட காரணத்தால் - பயணத் தினூடே நான் திருமறை ஓதுவதைப் பழக்கமாக கொண்டவன் என்பதால் - அஃது எனக்கு பெரியதொரு பேரிழப்பாகப்பட்டது. ஆகவே நான் கடைசி நேரத்தில் பயணத்தை ரத்துச் செய்து விட்டேன். இதனையறியாத விஷமிகள் என்னைக் கொல்லும் வெறியில் ஆயிரமாயிரம் அப்பாவிகளின் உயிர்களை பலி கொண்டு விட்டனர்.

அந்த அப்பாவி மக்களுக்கு எனது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அதே நேரத்தில்,

விஷமிகளுக்கொன்று சொல்லிக் கொள்வேன்!

வாழ்வும், மரணமும் வல்லவனாம் இறைவனது கைவசமுள்ளது. நினைத்தபோது நினைத்தவரை கொன்றுவிடலாம் எனஎவனாவது நினைத்தால் அவனைப் போன்றதொரு பைத்தியக்காரன் வேறுயாருமே இல்லையென்பேன்.

அத்தோடு எனதருமை முஸ்லிம் சகோதரர்களுக்கு ஒன்றை உணர்த்த கடமைப் பட்டுள்ளேன்.

சகோதரர்களே!

புனித குர்ஆன் ஷரீப் அல்லாஹ்வின் புனித வேதமாகும். அந்த வேதத்தை எவர் எவர் தனது வழிகாட்டியாகக் கொள்ளுகின்றார்களோ அத்தகைய நல்லடியார்களை அந்த வேதம் காத்து ரட்சிக்கும் என்பதற்கு என் பெயரில் நடந்த இந்த விபத்து ஒரு மறுக்க முடியாத உதாரணமாகும்.

நான் கோன்மறையாம் குர்ஆனை வழிகாட்டியாகக் கொண்டு வாழ்ந்தேன். அந்த குர்ஆனிற்காக அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த எனது பயணத்தையே கூட நிறுத்திவிடத் தயாரானேன்.

அதனால் அந்த புனித வேதம் நேற்று ஏற்பட்ட கோரமான வெடி விபத்திலிருந்து எனது உயிரையே காப்பாற்றியது.

□ □ □

பேரன்பு படைத்தீர்!

சற்றேறக்குறைய ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன்பு நமது பாரதத் திருநாட்டில் நடந்த இந்த அதிசயத்தை சற்று கூர்ந்து கவனித்திடும்காண்.

கோன்மறையாம் நமது குர்ஆன் ஷரீப் இன்றைக்கும் எப்படி எப்படியெல்லாம் தனது அற்புதங்களை வெளிப்படுத்துகின்றது என்பதனை சீர்தூக்கிப் பாரும்காண்.

## கொள்ளை நோய்
## கிள்ளியெறிந்த கோன்மறை

வடநாட்டில் உ. பி. மாகாணத்தில் 'முஜப்பர் நகர்' என்பது அப்போது ஜில்லாவின் தலைநகர்.

அந்த ஜில்லாவிற்குக் கட்டுப்பட்ட 'கடிபுக்தா, எனும் பேரூர்.

அந்த ஊரில் ஆரிய சமாஜத்தைச் சேர்ந்த தொரு ஜாதி ஹிந்து ஒருவர் திடீரென தீனுல் இஸ்லாத்தை தழுவி விடுகின்றார்.

அந்நகரத்தில் வதிந்த 'இர்ஷாதுல் உலூம்' எனும் அரபுக் கல்லூரியின் அப்போதைய முதல்வராகத் திகழ்ந்த மௌலானா ஜஃபர் அஹ்மது உஸ்மானி எனும் மார்க்கப் பெரியார் மதம் மாறிய அவரிடம் மதம் மாற்றத்திற்கான காரணத்தை வினவுகின்றார்.

அதற்கு அந்த புதிய முஸ்லிம் சகோதரர் கீழ்காணும் அதியாச்சரியமான நிகழ்ச்சிகளைக் கூறிக்காண்பிக்கின்றார்.

அதாவது ;

எனது திருமணத்திற்குப்பின் என்னை ஒரு வகையான கொள்ளை நோய் பீடித்துக் கொண்டது.

எனது மூத்த சகோதரர் இந்த நகரிலேயே மிக தலை சிறந்த டாக்டர்.

ஆதலால் அவர் மிக அக்கறையோடு எனக்கு வைத்தியம் செய்தார். நீண்டநாள் வைத்தியம் தொடர்ந்தது. ஆனால் பலனேதும் ஏற்பட்டபாடில்லை. மாறாக நாளுக்கு நாள் நோயின் வேகம் கூடிக்கொண்டே வந்தது. ஆகவே நிராசை கொண்டுவிட்ட டாக்டர் என்னிடம்,

''சகோதரா! இன்றிலிருந்து நீ பத்தியமாக இருந்திடத் தேவையில்லை. ஆசைப்பட்டவைகளையெல்லாம் கூசாது புசித்துக்கொள்.''

என்றார்.

எனக்கு விஷயம் புரிந்து விட்டது. இத்தனை நாளும் 'அது சாப்பிடக் கூடாது' இது சாப்பிடக் கூடாது

என்ற கட்டுப்பாடு இருந்தது. ஆனால் அப்போதெல்லாம் 'அதைச் சாப்பிடவேண்டும் இதைச் சாப்பிடவேண்டும்' என்ற பேயாசை என்னை ஆட்டிப்படைத்தது.

இப்போது கட்டுப்பாடு எடுக்கப்பட்டு விட்டது. எது வேண்டுமானாலும் எவ்வளவு வேண்டுமானாலும் கேட்டால் கிடைக்கும்தான். ஆனால் என்மனம் எதையுமே நாடவில்லையே......? எப்படி நாடும்...? இன்றோ நாளையோ அல்லது இன்னும் சற்று நேரத்திலோ நான் மரணிக்கப் போகின்றேன் - என்பது உறுதியாகி விட்டபோது எதுதான் எனக்குக் கொள்ளும்

இப்படி கடும் சோகத்தில் நான் திழைத்திருக்கும் சமயத்தில் எனது துணை நல்லாள் அதோ வருகின்றாள்.

அவளைக் கண்டவுடன் என்னையும் மீறி கண்ணீர் மடைதிறந்த வெள்ளம்போல் கொட்டு கொட்டெனக் கொட்டுகின்றது.

''நாதா ... ஏன் இப்படி கலங்குகின்றீர்கள்?'' என அவள் என்னை வினவியபோது எனது நிலைமைகளை விபரமாக அவளிடம் எடுத்துக்கூறி கோவெனக் கதறத் தொடங்கினேன்.

எனது பரிதாபகரமான நிலையினைக் கண்ட அவள் சற்று கலங்கினாலும் ஏதோ ஒருவகைத் துணிச்சலோடு ''நாதா! ஊசலாடிக் கொண்டிருக்கும் உங்களின் உயிரை என்னால் நிச்சயம் காப்பாற்றிட முடியும். ஆனால் ஒரு நிபந்தனை'' என்றாள்.

“நிஜமாகவா? நான் பிழைக்க முடியும் என்றால் நான் எதையும் செய்யச் சித்தமாக உள்ளேன். என்ன நிபந்தனையது சொல்...... சொல் சீக்கிரமாகச் சொல்” என வெறி பிடித்தவன் போல கத்தினேன் நான்.

“அவசரம் வேண்டாம்! கொஞ்சம் பொறுமையாக இருங்கள் நான் இன்றிலிருந்து எனது ஆன்மீக வைத்தியத்தை தொடங்குகின்றேன்” என்று சொன்ன எனது மனைவி ஒரு கோப்பையில் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வந்து எனதருகில் நின்று கொஞ்சம் நேரம் எது எதோ முணு முணுத்து அந்த தண்ணீரில் ஊதி அதனை குடிக்கும்படி என்னைப் பணித்தாள்.

நானும் ஏதோ ஒரு குருட்டு நம்பிக்கையோடு அதனைக் குடித்தேன். இஃது அனு தினமும் காலை மாலை வேளைகளில் தொடர்ந்தது.

படுத்த படுக்கையாக இருந்த எனக்கு ஒரு வார காலத்திற்குள் வீட்டுக்குள் எழுந்து நடமாடுமளவுக்கு நோய் குறைந்தது.

இரண்டாம் வாரத்தில் கடைத்தெரு பக்கம் சென்று வருமளவு உடல் தெம்பு பெற்றது.

மூன்றாவது வாரத்தில் முற்றாக நோய் நீங்கியது.

நான்காம் வாரத்தில் சகஜ வாழ்க்கை வாழத் தொடங்கினேன்.

இதனைக் கண்ட எனது மூத்த சகோதரர் டாக்டர் ஆச்சரியமடைந்தார். எனது குடும்பம் முழுவதுமே குதூகலிக்கத் தொடங்கியது.

எனக்கும் குதூகலம்தான் ஆனாலும் என்னுள் ஒரு வகை குறுகுறுப்பு இருந்து வராமலில்லை,

ஆகவே, அன்று இரவு தனிமையாக இருக்கும் போது எனது மனைவியிடம் ''அன்று ஏதோ நிபந்தனை என்றாயே அஃது என்ன?'' என்றேன்.

ஓ அதுவா...? அஃது வேறொன்றுமில்லை. நான் முஸ்லிமாக மதம் மாறிவிட்டேன் அந்த மார்க்கத்தின் புனிதவேதமான குர்ஆன் ஷரிபுதான் உங்களுக்கு ஏற்பட்டிருந்த கொள்ளை நோயைக் கிள்ளி எறிந்து உங்களை சுகஜீவியாக ஆக்கிய அற்புத மருந்து. ஆகவே இந்த சுகஜீவியம் தொடரவும் இம்மையிலும் மறுமையிலும் இன்புறவும் வேண்டின் நீங்களும் முஸ்லிமாக மதம் மாறிவிடல் வேண்டும்' என்றாள்.

இதனைக் கேட்டு என்னையே என்னால் நம்ப முடியவில்லை.

'என்ன நீ' முஸ்லிமாக மதம் மாறி விட்டனையா? அதெப்படி...? உனது தந்தையோ முஸ்லிம்களின் பகைவரான பழுத்த ஆரிய சமாஜியாயிற்றே! அங்ஙனமிருக்க அவரின் மகளான நீ எப்படி இஸ்லாத்தைத் தழுவினாய்'

என விபரம் கேட்டேன் நான்.

அதுவா... அஃதொரு கதை. ஆனாலும் அஃதனைக் கூறுகின்றேன் கேளுங்கள்.

எங்களது பக்கத்து வீடு ஒரு முல்லாஜீயின் விடாரும். அவர் அந்தப் பகுதியிலுள்ள பள்ளிவாசலின் இமாமாக

விளங்கினார். அனுதினமும் அவரின் மனைவி தனது வீட்டில் வைத்து சிறுவர் சிறுமியர்களுக்கு குர்ஆன் கற்றுக் கொடுப்பார்.

அப்போதெல்லாம் சிறுமியாக இருந்துவந்த நான் அந்த முல்லாஜீயின் வீட்டிற்கு அடிக்கடி போய் வருவேன். சில வேளைகளில் குர்ஆன் வகுப்பு நடக்கும் போதுங்கூட ஆங்கு நான் இருப்பேன்.

எனக்கு கொஞ்சம் விபரம் தெரிய ஆரம்பித்த போது குர்ஆனைப் பற்றி அவர்களிடமே தர்க்கம் செய்யத் தொடங்கினேன்.

அப்போது ஒரு நாள். அந்த அம்மையார் என்னிடம் 'பிள்ளாய்! நீ விபரம் தெரியாமல் தர்க்கம் புரிவதில் யாதொரு பயனுமில்லை ஆகவே நீ எங்களது வேதத்தை முதலில் கற்றுக்கொள். அதன்பின் தர்க்கம் செய்துபார். உனக்கு உண்மை விளங்கும்'' என்றார்.

எனக்கும் அது சரியெனப்பட்டது.

ஆகவே, எங்கள் வீட்டார் யாருக்கும் தெரியாமல் குர்ஆனை வாசிக்க கற்றேன்.

ஒரேயொரு மாதத்திற்குள் குர்ஆனின் 30 பாகங்களின் முதல் பாகத்தைச் சரிவர பார்த்து வாசிக்கக் கற்றுக்கொண்டேன்.

அப்போது மொட்டையாக வாசிக்க மட்டும் படிப்பதில் பயனில்லை என்று கண்ட நான் குர்ஆனின் அர்த்தங்களோடு படித்து முடித்தப் பின் முல்லா சாஹிபின் மனைவியும் எனது குருவுமான அந்த அம்மையார்.

''மகளே! நீ, குர்ஆனை முழுமையாகப் படித்துக் கொண்டாய் - இப்போது இஸ்லாம் மார்க்கம் சம்பந்தமாக உனக்கு ஏற்படும் ஆட்சேபனைகளைக் கூறலாம்'' என்றார்.

அதனைக் கேட்டதும் என்னுள் ஏதோ ஒரு சக்தி நுழைந்து என்னை உணர்ச்சி வயப்படுத்தி விட்டது. ஆகவே என்னையும் அறியாமல் எனக்கு அழுகை வந்துவிட்டது ஆகவே -

''அம்மாஜி...... நான் குர்ஆனைக் கண்டு கொண்டேன்! உண்மையில் உலகில் காணப்படும் எந்த தர்ம நூலும் அதன் காலடியில்கூட நிற்க தகுதியுடையவையன்று - என்பதனை நான்' நன்கு உணர்ந்து கொண்டேன். ஆகவே இப்போதே தீனுல் இஸ்லாத்தில் சேர்த்துக் கொள்ளுங்கள்'' என்று மன்றாடினேன்.

உடனடியாக அவ்வம்மையார் எனக்கு நீராடி புத்தாடை அணிவித்து புனிதக் கலிமாவைச் சொல்லிக் கொடுத்ததோடு முறையாகத் தொழும் பாங்கையும் எனக்குக் கற்றுக் கொடுத்து;

''மகளே! உனது தகப்பனார் ஹிந்துமத வெறியர் ஆகவே நீ முஸ்லிமாக மதம் மாறி விட்டதை இப்போதைக்கு வெளிக் காண்பிக்க வேண்டாம். வல்ல அல்லாஹ் சந்தர்ப்பத்தை சாதகமாக்கித் தரும் வரை நீ ரகசியமாக தொழ வேண்டும். ஓதவேண்டும். வணங்கி வழிபட வேண்டும்'' என்றார்.

அன்றுமுதல் ஓராண்டு காலம் வரை தீனை ரகசியமாகவே கடைப்பிடித்து வரலானேன்.

அப்போதுதான் உங்களுக்கு என்னைப் பெண் நிச்சயம் செய்து திருமணமும் நடந்தது.

நான் உங்களுடன் அனுப்பப்பட்ட போது அந்த அம்மையார் எனக்கு அன்பளிப்பாக சில ஆடைகளையும் வழங்கினார். அன்பளிப்பாக வழங்கப்பட்ட அந்த ஆடைகளினுள் புனித குர்ஆனும் மறைந்து கொண்டு இங்கே என்னுடன் வந்துவிட்டது. இதோ அந்த புனித குர்ஆன்'' எனக் கூறிக் கொண்டே அவள் மறைத்து வைத்திருந்த அந்த வேதத்தை என்னிடம் காட்டினாள்.

மேலும் தொடர்ந்தாள்.

இந்த திருவேதத்தின் ஒரு அத்தியாயமான 'அலம் நஷ்ரஹ்' எனும் அத்தியாயத்தையே ஓதி உங்களின் மீது ஓதினேன். அன்றி; அதனையே தண்ணீரில் ஓதி உங்களுக்குக் குடிக்கும்படி செய்தேன்.

இந்த வேதத்தின் தெய்வீகம் கொண்டே உங்களைப் பீடித்திருந்த அந்தக் கொள்ளைநோய் நீங்கியது.

என, எனது மனைவி தான் தீனுல் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட வரலாற்றையும் எனக்கு ஆத்மீகச் சிகிச்சை செய்த சாதுர்யத்தையும் நீண்ட பெருமூச்சினூடே எடுத்தோதினாள்.

அவளின் அந்த துணிச்சலையும், பக்திப் பரவசத்தையும் சாதுர்யத்தையும் எண்ணி எண்ணி பேருவகை பூத்த நான் உடனடியாக நீராடி புனித கலிமா மொழிந்து

எனது மனைவி முன்னிலையிலேயே புனித தீனில் என்னைப் புகுத்திக் கொண்டேன்.

இப்போது நான் புதிய முஸ்லிம்தான் என்றாலும் புனித வேதத்தை மிக நன்றாக கற்றுக் கொண்டுள்ளேன். தொழுகை நோன்பு முறைகளை மிக நன்றாகப் புரிந்து கொண்டு அனுதினமும் செயல் பட்டும் வருகின்றேன்'' என தனது வரலாற்றையும் கூறி முடித்தார் அந்த புதிய முஸ்லிம்.

இதனை ஆதியோடு அந்தமாகக் கேட்டுக் கொண்டு இருந்த மௌலானா ஜஃபர் அஹ்மது உஸ்மானி அவர்களின் கண்களில் கண்ணீர் பொங்கி நின்று கொண்டிருந்தது.

சுப்ஹானல்லாஹ்......! அல்ஹம்துலில்லாஹ்..! அல்லாஹு அக்பர்!

## குர்ஆனைக் கொண்டு பொய்ச் சத்தியம் செய்தான் ஒருவன்

1946 - ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் கடைசி வாரம். அப்போது நிகழ்ந்த படுபயங்கரமான நிகழ்ச்சியொன்றை ஆதியோடு அந்தமாக நேரில் பார்த்து நெஞ்சம் நெக்குருகி நின்றவர்தான் பனாரஸ்கான்' என்பவர்.

இதோ அவரே அதனைக் கூறுகின்றார் கேளுங்கள்:

அதுபோது, நான் ராவல்பிண்டியில் அரசாங்க பஸ்ஸில் கண்டக்டராக வேலை பார்த்து வந்தேன்.

நான் வேலையில் சேர்ந்து ஒரு வருடத்திற்கு மேல் ஆகிவிட்டதால் நீளமான - கும்பல் அதிகம் கூடும் ரூட்டில் அனுப்பப்பட்டேன். ஓமனி பஸ் அலுவலகத்தில் புதிய கண்டக்டர்களுக்கு பயிற்சி அளிக்கப்பட்டு ஒருவார காலத்திற்குள் அவர்களை ரூட் பஸ்களில் அனுப்பப்படுவது வழக்கம்.

அதுபோல புதிய கண்டக்டர் ஒருவர் அங்கு வேலைக்கு வந்தார். அவரின் பெயர் எனக்கு சரியாக நினைவில் இல்லை. அப்போது ராவல்பிண்டியின் மேற்குப் பிராந்தியத்திலிருந்து தலைமை ஆபீஸ்வரை அவருக்கு ரூட் கொடுக்கப்பட்டிருந்தது.

அப்போது அதன் மொத்த டிக்கட் வெறும் 7 காசுகள் தான்.

அந்த ரூட்டில் பகல் ஒரு மணிக்கு கண்டக்டர் மாற்றப்படுவார். முற்பகலில் ஓய்வாக இருந்தவர்கள் பிற்பகல் டியூட்டியை ஏற்கவேண்டும். முற்பகலில் டியூட்டி செய்தவர் வசூலாகியுள்ள பணங்களை ஆபீஸில் செலுத்தவேண்டும்.

வழக்கம்போல் அன்று எனது முற்பகல் வேலை முடித்து வசூலை செலுத்துவதற்காக ஜி. டி. எஸ். ஆபீஸ் நுழைவாயிலில் நின்று கொண்டிருந்தேன்.

உள்ளே அந்தப் புதிய கண்டக்டருக்கும் தலைமைச் செக்கருக்குமிடையே கடுமையான வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது.

அவர்களின் வாக்கு வாதங்களிலிருந்து கீழ்வரும் விபரங்கள் எனக்கு புரிந்தது.

அஃதாவது ;

அன்று, அந்த புதிய கண்டக்டர் ஒரேயொரு தடவை தான் ரூட்டில் சென்று வந்துள்ளார். அவரின் வண்டி ஒரு ஸ்டாப்பில் நின்ற போது தலைமைச் செக்கர் அவரது வண்டியைப் பரிசோதனை செய்துள்ளார். அப்போது; பயணிகளில் ஒரு சிலர் தவிர மற்ற அனைவரும் டிக்கட் வாங்கி இருக்கவில்லை. அதுபற்றி பயணிகளிடம் செக்கர் விபரம் கேட்ட போது, நாங்கள் அனைவருமே கண்டக்டரிடம் உரிய காசுகளைக் கொடுத்து விட்டோம். ஆனால் கண்டக்டர் இதுவரை எங்களுக்கு டிக்கட் கொடுக்கவில்லை. இன்று மட்டுமன்று இதற்கு முன்பும் கூட சில சமயங்களில் இப்படித்தான்'' என அந்த பயணிகள் புகார் கூறினார்கள்.

அந்த புகார் குறித்து செக்கர் கண்டக்டரிடம் சமாதானம் கேட்டபோது அவர் முறையான பதிலேதும் சொல்லாமல் ஏதேதோ சொல்லி குழப்ப முயன்றிருக்கின்றார்.

ஆகவே வண்டியை அந்த இடத்திலேயே நிறுத்தி விட்டு அந்த புதிய கண்டக்டரை ஆபீஸிற்கு அழைத்து வந்து பையில் இருந்த பணங்களை எண்ணிப் பார்த்த போது விற்கப்பட்ட டிக்கட்டுகளுக்குரிய பணங்களைவிட 'ஐந்து ரூபாய் முப்பத்திரெண்டு' காசுகள் உபரியாகக் காணப்பட்டதாம்.

உபரியாகக் காணப்பட்ட பணங்களைப்பற்றி அந்தப் புதிய கண்டக்டரிடம் செக்கர் வவுச்சர் கேட்டபோது ''அவை எனது சொந்தப் பணம்'' என்று ஒரே பிடிவாத மாகச் சொல்லி இருக்கின்றார்.

எவ்வளவு நயமாகக் கேட்டுப் பார்த்தும் அவர் உண்மையினை ஒப்பவில்லை.

ஆனாலும் அந்த உபரிப்பணங்கள் கம்பெனியை மோசடி செய்த பணம்தான் - என்பதை தலைமைச் செக்கர் சந்தேகத்திற்கிடமின்றிப் புரிந்து கொண்டார்.

ஆகவே கடைசி கடைசியாக ''இவை உனது பணமா? அல்லது கம்பெனிக்குச் சொந்தமான பணமா? என இறுதியாகக் கேட்டார்.

''மிஸ்டர் வீண்பிடிவாதம் வேண்டாம் உண்மையினை நீ ஒப்புக்கொண்டால் நான் இத்தோடு பிரச்சனையை விட்டுவிடுகின்றேன். இல்லாவிட்டால் நான் நிச்சயமாக உன்மீது ஆக்சன் எடுக்கும்படி நேரிடும்''

என எச்சரித்துப் பார்த்தார்.

இனி எவ்விதத்திலும் தப்பமுடியாது. ஆனால் அதற்காக தனது வரட்டுக் கௌரவத்தையும் தளர்த்த முடியாது என அந்தப் புதிய கண்டக்டர் நினைத்தார் போலும் உடனடியாக:

''சார்... நீங்களும் நானும் ஒப்புக்கொண்டுள்ள புனித குர்ஆன் ஷரீப் மீது சத்தியமாகக் கூறுகின்றேன்! உபரியாக உள்ள இந்தப்பணம் எனது சொந்தப்பணம்! உங்களிடம்

சொல்லப்பட்டது போல நான் எவ்வித மோசடியும் செய்ய வில்லை'!

எனக்கூறி நின்ற அந்தப் புதியவரை ஏற இறங்கப் பார்த்த தலைமைச் செக்கர் "மிஸ்டர்! குர்ஆன் ஒன்றும் கிள்ளுக் கீரையில்லை. ஆனாலும் அந்தப் புனித வேதத்தின் மீது நீர் சததியம் செய்து விட்டீர்' அதற்காக நான் உன்னை தற்போது விடுவிக்கின்றேன். ஆனால்; ஜாக்கிரதை! என்னிடமிருந்து நீ தப்பிவிடலாம். அந்த சத்தியவேதம் உன்னைச் சும்மா விடாது''

என எச்சரித்து எவ்வித நடவடிக்கையுமில்லாமல் அந்தப் புதிய கண்டக்டரை அவர் விட்டு விடுகின்றார்.

அதற்குள் நானும் வசூலைச் செலுத்தி விட்டதால் நானும் அந்த கண்டக்டருமாகச் சேர்ந்து 'ராஜாபஜார்' செல்வதற்காக அதற்குரிய ஸ்டாப்பில் போய் நின்றோம்.

சிறிது நேரத்தில் எங்களுக்குரிய பஸ் வந்தது.

கூட்டம் மிகுதியாக இருந்ததால் முண்டியடித்துக் கொண்டு பஸ்ஸில் ஏறிடவேண்டியிருந்தது.

எனக்குப் பசி மிகுதியாக இருந்தமையால் நானும் முண்டியடித்துக் கொண்டு பஸ்ஸில் ஏறினேன், மற்ற வர்களும் ஏறினார்கள்.

விசில் கொடுக்கப்பட்டு விட்டதால் பஸ் புறப்பட்ட பிறகு அந்த புதிய கண்டக்டர் ஓடி வந்து பஸ்ஸை தாவிப் பிடித்து ஏறிட முயன்றார்.

ஆனால் பிடி சிக்கவில்லை போலும்.

ஆகவே தடால் என அவர் கீழே வீழ்ந்தார்.

பஸ்ஸின் பின் சக்கரம் அவரின் தலையில் ஏறி நர - நர என்று படு பயங்கரமான சப்தத்தோடு நசுங்கி விட்டது.

உடனே பஸ் நிறுத்தப்பட்டது.

நானும் உடனடியாக இறங்கிப் பார்த்தேன்.

ஆமாம் - அந்த புதிய கண்டக்டரேதான். அவரது கைகளும் கால்களும் துடித்த துடிப்பு அப்பப்பா! இப்போது நினைத்தாலும் படுபயங்கரமாக இருக்கின்றது.

'அட பாவமே! ... என அனைவரும் கைசேதப் பட்டனர். நானும் கூடத்தான். ஆனால் என் உதடுகள் தான் 'பாவம்' என்றதே தவிர, சற்று முன் அவர் புனித வேதமான குர்ஆனைக் கொண்டு பொய்ச் சத்தியம் செய்த காட்சியும் 'ஜாக்கிரதை, என்னிடமிருந்து தப்பி விடலாம் ஆனால் அந்த சத்தியவேதம் உன்னைச் சும்மா விடாது' என தலைமைச் செக்கர் சொன்ன காட்சியும் தான் எனது மனக் கண்முன் நிழலாடியது.

ஆமாம்...என்றும் ஜீவியமுள்ள அந்த ஜீவவேதம் அந்தப் பொய்யரை சும்மா விடவில்லைதான்.

□ □ □

நனது பில்லாஹ் - வல்ல அல்லாஹ் நம்மனைவருக்கும் இதுபோன்ற பயங்கரங்களிலிருந்து படிப்பினை பெறச் செய்து காப்பாற்றியருள்வானாக!

## நரி ஆஃன் பிரதியின் விலை லட்சத்திற்குமேல்

நியான் குலாம் நபி என்பவர் அறிவிக்கின்றார்.

அமிர்தஸரஸிலிருந்து ‘குஷியார்’ நகர் செல்லும் பாட்டையில் ‘காப்பாடுகெலி’ எனும் பெயரிலோர் சிற்றூர். அதற்கு சற்று தொலைவில் ‘கரம்சிங்’ என்னும் நிலக்கிழார் ஒருவர் புதுக் குடியமைப்பொன்றை உருவாக்கி அதில் அவரும் குடியிருந்து வந்தார். நாளாவட்டத்தில் அஃதொரு குக்கிராமமாக மிளிரத் தொடங்கிற்று.

ஒரு தடவை நானும், எனது தந்தை, தனயன் ஆகி யோரும் அமிர்தஸரசில் நடைபெறும் ‘பஸாக்கி’ சந்தைக்குச் சென்று விட்டு ‘ராஜாதால்’ எனும் எங்களின் சொந்த ஊருக்கு திரும்பினோம். சந்தையில் மாடொன்று வாங் கியதால் அதனை ஓட்டிக் கொண்டு நாங்கள் மூவருமே நடந்தே பயணப்பட்டோம்

மஃரிபு நேரமானபோது நாங்கள் அந்த கரம்சிங்கின் கிராமத்தை அடைந்திருந்தோம்.

உடம்பு மிகக் களைப்பாக இருந்தமையாலும் அந்த கரம்சிங் எனது தகப்பனாருக்கு மிக நன்றாக அறிமுகமானவ ராக இருந்தமையாலும் அன்று இரவை அங்கேயே தங்கி கழிக்க நாடி கரம்சிங்கின் காம்பவுண்டிற்குள் நுழைந்தோம்.

அவரின் மாட்டுக்கொட்டிலில் எங்களின் மாட்டையும் கட்டிப்போட்டு விட்டுத் திரும்பினோம். அதற்குள் அவரும் ஆங்கே வந்து எங்களை மிக உற்சாகத்தோடு வரவேற்று தனது வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.

'மஃரிபுத் தொழ வேண்டுமே' என நாங்கள் குசு குசுவெனப் பேசிக்கொண்டதை எப்படியோ தெரிந்து கொண்ட கரம்சிங் உடன் எழுந்து சென்று ஒரு செப்புக் குடத்தில் சுத்தமான தண்ணீர் கொண்டு வந்து எங்களின் முன் வைத்து 'இதோ ஒலுச்செய்து கொள்ளுங்கள்' என்றார்.

'அந்நிய மதக்காரராக இருந்தாலும் எவ்வளவு மரியாதையானவராக உள்ளார்' என்பதைக் கண்டு வியந்த நாங்கள் உலுச் செய்யத் தொடங்கினோம்.

அதற்குள் சிங்கின் மனைவி வெண்மையான உயர்தர விரிப்பு ஒன்றை எடுத்து வந்து சுத்தமான இடத்தில் விரித்து வைத்திருந்தார்.

நாங்கள் அதில் நின்று மிக நிம்மதியாகத் தொழுகையை நிறைவு செய்தோம்.

சலாம் கொடுத்து விட்டு தஸ்பீஹ் ஓதுவதில் நாங்கள் ஈடுபட்டுக் கொண்டிருந்தபோது தமது வீட்டிற்குள் சென்று பட்டுப்புடவையால் பொதியப்பட்டிருந்த ஏதோ ஒன்றை எடுத்து வந்து எங்களின் முன் வைத்து,

''விருந்தினர்களே! நீங்கள் இங்கே காணும் செல்வம் அனைத்தும் இதன் பொருட்டாலேயே எங்களுக்குக் கிடைத்தது. இது எங்களுககுக் கிடைத்தபின் தான் எங்களைப் பிடித்திருந்த தரித்திரியம் நீங்கியது. வேளாண்மையில் அபிவிருத்தி ஏற்பட்டது. தானியமணிகள் அம்பாரம் அம்பாரமாகக் குவியத் தொடங்கியது. கால்நடை

கள் பல்கிப்பெருகத் தொடங்கியது. எருமைகளில் பால் பொங்கத் தொடங்கியது. எங்கள் களஞ்சியம் நிரம்பி வழியத் தொடங்கியது''

என உணர்ச்சி வசப்பட்டு ஒரு குட்டிப் பிரசங்கமே செய்து முடித்து விட்டார்.

அதனை மிக வியப்போடு கேட்டுக் கொண்டிருந்த எங்களின் தந்தை -

''சர்தார்ஜி! உங்களின் உயர்வுக்கு காரணமாகத் திகழும் இது என்ன? அதனைப் பற்றி ஒன்றுமே சொல்ல வில்லையே'' என்றார்.

''நீங்களே அதனை அவிழ்த்துப் பாருங்களேன்... என்றார் சர்தார்ஜி.

அந்த பட்டுப் பொதியை அவிழ்த்து அதனுள் புத்தகம் போன்று இருந்த ஒன்றை எடுத்து விரித்த நான் ''ஆங்... குர்ஆன்... குர்ஆன்... குர்ஆன்' என்று என்னையுமறியாது கத்திவிட்டேன்.

ஆமாம் அது புனித குர்ஆன் தான்!

இதனைச் சற்றும் அங்கே எதிர்பார்த்திராத எனது தகப்பனார் ''சர்தார்ஜி! இந்தப் புனித வேதம் உங்களுக்கு எப்படி கிடைத்தது?''

என்றார்.

சர்தார்ஜி அதற்கு ஒன்றும் சொல்லவில்லை ஆனால் அவரின் மனைவி குறுக்கிட்டு,

''இங்கே எங்களுடன் ஒரு முஸ்லிம் நெசவாளி ஒருவர் குடியிருந்தார். அவர் மிகவும் ஏழை அவருக் கிருந்த ஒரே மகளை திருமணம் செய்து கொடுத்து விட்டார். அதனையடுத்து கொஞ்ச நாளில் அவர் திடீரென இறந்தும் விட்டார்.

அடுத்த நகரிலிருந்து அவரின் உறவினர்களுக்கு நாங்கள் தகவல் கொடுத்தோம். அவர்களும் உடன் வந்து அந்த பிரேதத்தைப் பெற்றுக் கொண்டு இதோ அடுத் துள்ள உங்களது அடக்க ஸ்தலத்தில் நல்லடக்கம் செய்து விட்டதோடு அவர் குடியிருந்த குடிலில் புகுந்து ஆங்கி ருந்த அவரது உடமைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு குடிலை காலி செய்து விட்டு சென்று விட்டனர்.

அந்தக் குடில் கொஞ்சநாள் காலியாகவே கிடந்தது.

ஒரு நாள் நான் அந்தக் குடிலைத் திறந்து அதனைச் சுத்தம் செய்து கொண்டிருந்தேன்.

அப்போது மாடத்தில் தூசிபடிந்து இற்றுப் போன தொரு துணிப்பொட்டலம் தென்பட்டது.

நான் அதனை எடுத்து அவிழ்த்துப் பார்த்த போது இதோ நீங்கள் காணுகின்றீர்களே அந்த குர்ஆன் அதனுள் இருக்கக் கண்டு அதனை எடுத்து வந்து சர்தார்ஜி அவர்களிடம் காட்டினேன்.

அதனை வாங்கி திறந்து பார்த்த சர்தார்ஜி ''இது முஸ்லிம்களின் புனிதவேதமான குர்ஆன் அல்லவா''

என்று கூறியவாறே அதனை ஒவ்வொரு பக்கமாகப் புரட்டி அதில் படிந்திருந்த தூசிகளையெல்லாம் துடைத்து விட்டு இரண்டு பட்டுப்புடவைகளில் அதனைப் பொதிந்து நறுமணம்பூசி எங்களின் இல்லத்தின் மிக உயரமானதொரு இடத்தில் அதனை மிக்க மரியாதையோடு வைத்தோம்.''

என சர்தார்ஜியின் மனைவி குர்ஆன் ஷரீப் தங்களுக்குக் கிடைத்த வரலாற்றினைக் கூறி முடித்தார்.

சர்தார்ஜி தொடர்ந்தார்;

''விருந்தினர்களே! எங்களிடம் ஒரு பால் எருமை இருந்தது. அது பால் கறக்கும் போதெல்லாம் உதைத்து ரொம்ப ரொம்பத் தொந்தரவு கொடுக்கும். ஆதலால் இரண்டு மூன்று நாட்களுக்கொருதரம் மட்டும் கொஞ்சம் கொஞ்சம் பால் அதிகம் கறப்போம்.

ஆனால் இந்த புனிதவேதம் என்று எங்களின் கைக்குக் கிடைத்ததோ அன்றிலிருந்து அந்த சண்டி எருமை ஒழுங்காக வழக்கத்தைவிட மிக மிக அதிகமாக பால் கறக்கத் தொடங்கி விட்டது.

ஆகவே எங்களுக்கு இந்த வேதத்தின் மீது ஆழமான நம்பிக்கையும் மனப்பூர்வமான பக்தியும் உண்டாகி விட்டது.

ஆதலால் வாரம் ஒருமுறை அதனை எடுத்து தூசி துடைத்து நறுமணம் பூசி வருகின்றோம்'

அதுமட்டுமல்ல,

அன்றிலிருந்துதான் எங்களுக்கு நல்லகாலமே ஏற்படத் தொடங்கிற்று. லட்ச ரூபாய் கொடுத்தாலும் இந்த பாக்கியம் நிறைந்த பொக்கிஷத்தை நாங்கள் இழக்கச் சம்மதிக்க மாட்டோம்''

என சர்தார்ஜி கோன்மறையின் அற்புதங்களைப் பற்றிக் கூறி முடித்தார்.

அதனைக் கேட்டுக் கொண்டிருந்த எனக்கு (மியான் குலாம் நபி) குர்ஆன் வெளிப்படுத்தும் கோலங்களை நினைத்து நினைத்து கொதி கிளம்பியது.

  

அன்பர்! 

குர்ஆர் ஷரீபின் கோன் நிலையினை குவலயத்திற்கு எண்பித்துக் காட்டும் எத்தனை எத்தனை நிகழ்ச்சிகள் பார்த்தீரா? எத்தனை படிப்பினைகள்! படிக்கப் படிக்க உடம்பெல்லாம் புல்லரிப்புக் கொள்கின்றதல்லவா?

இப்படி இன்னம் எத்தனையெத்தனையோ நிகழ்ச்சிகளை விண்டு காண்பிக்க இயலும்தான்.

எத்தனை எடுத்துக் காட்டுகளை வகை படுத்திக் காட்டினாலும் வன்குணாளருக்கு விளங்கவா போகின்றது?

'நல்ல மாட்டிற்கு ஒரு சூடு நல்ல மனைவிக்கு ஒரே வார்த்தை' என்பார்களே அதுபோல நன் நம்பிக்கையாளர்களுக்கு இந்த அளவே அதிகம் என்பதால் இத்தோடு இதனை நிறைவு செய்கின்றேன்...?

வல்ல அல்லாஹ் நம் அனைவருக்கும் இதன் மூலம் ஈமானை பிரகாசிக்கச் செய்தருள்வானாகட்டும்.

## குர்ஆன், நம்மைப்போன்றதொரு படைப்பாம்! கோணல் மதியினர் கூறுகின்றனர்

தோன்மறையாம் வான்மறை - வற்றாத்தேன் மறையினை நம்மைப் போன்றதொரு படைப்பே' என கோணல் மதியினர் கூறுகின்றனர்.

''கூறினால் கூறிவிட்டுப் போகட்டுமே'' என்றிடுவர் நம்மில் பலர்; விபரம் புரியாததால்.

ஆனால்; அதில் பொதிந்துள்ள அபத்தத்தை ஆபத்தை கொள்கைக் குழப்பத்தைப் புரிந்தோர் உயிரே போயினும் அதனை ஒப்பிட மாட்டார்கள்.

இன்றைக்குக் காலம் குழப்பம் மிகுந்த காலமாக - குழம்பிய குட்டையில் மீன் பிடிப்பதை சாமார்த்தியமாகக் கருதப்படும் காலமாக இருந்திடுவதால் அந்த வாதத்திலுள்ள சாதகபாதங்களை துகிலுரித்துக் காட்டுவது அவசியத்திலும் அவசியம் எனக் கருதி இதோ அதனைக் கூறிடத் தொடங்குகின்றேன்.

ஒரு காலத்தில் 'குர்ஆன் படைப்புதான்' என்போர் சில சமயம் மிகைத்தும்; 'குர்ஆன் படைப்பன்று' என்போர்

மற்ற சமயங்களில் மிகைத்தும் வாதப் பிரதிவாதங்களில் விறுவிறுப்பேற்றி விவாதங்களை வளர்த்து வந்தனர்.

நாளடைவில் 'குர்ஆன் படைப்பு' என்ற கதைக்குத வாத வாதம் பிசுபிசுத்து 'குர்ஆன் படைப்பன்று' என்ற அர்த்தமுள்ள வாதம் பசுமையுடன் பிரகாசிக்கத் தொடங்கியது.

'ஆனாலும் படைப்பன்று' என்றிடுவோர் தங்களின் வாதத்தை நிலைநாட்டுவதற்காக எடுத்துக் காட்டிய எடுத்துக்காட்டுகளும் சுட்டிக் காட்டிய ஆதாரங்களும் இன்றைக்கும் இளமை முறுக்கோடு - அறமுரசாக ஒலித்துக் கொண்டிருக்கின்றன.

சுவையும் சுறுசுறுப்பும் மிக்க அந்த எடுத்துக்காட்டுகளில் சிலவற்றைச் சிந்திப்போம் சிந்திப்போம்.

## படைப்புக்களும் படைத்த பரம்பொருளும்

உலகினில்,

படைப்புக்கள் —

படைத்த பரம்பொருள்

என இருவகையுண்டு

உலகினை ஆளும் மனிதர்களான நாமும், நமக்குக் கட்டுப்பட்டுள்ள அண்டகோளங்கள் அனைத்தும் 'படைப்புக்கள்' என்ற முதல் வகையினைச் சேர்ந்தவையாகும்.

ஆதியந்தமில்லாப் பெருஞ்ஜோதி - ஒப்புவமையோ, உருவோ யாதொரு மருவோ இல்லாவோதி - கற்பனைகளுக்கோ கணிப்புகளுக்கோ எட்டாத நீதி வல்ல அல்லாஹ்வை 'படைத்த பரம்பொருள்' என்போம் நாம்,

ஆனால்; அல்லாஹ்வின் திருவசனங்களான புனித குர்ஆன் ஷரீபை படைப்பு என்றோ அல்லது படைத்தவன் என்றோ சொல்லிட முடியாது - சொல்லிடக்கூடாது.

'படைத்தவன்' என்றால் 'அந்த குர்ஆனில் நினைத்தவன் நினைத்தபோது எந்த மாற்றங்களையும் செய்திட முடியும்' என்றாகிவிடும்.

'படைப்பு' என்று அதனைச் சுட்டினாலோ நமது தீனுல் இஸ்லாத்தின் தவ்ஹீது - ஏக தெய்வக் கொள்கை தவிடு பொடியாகிவிடும்.

அல்லவா?

காரணம் 'படைப்பு' என்றால் அஃது மாறுதல்களை ஏற்கவேண்டும்.

காலக் கட்டுப்பாடுகளை ஏற்றாக வேண்டும்.

அழிவை ஏற்றாக வேண்டும்.

இந்த மூன்றும் படைப்புகளின் இலக்கணமாகும்.

ஆனால் கோதில்மறையாம் குர்ஆனில் மாறுதல் நிகழவே நிகழாது. காலக்கட்டுப்பாடு அதனை கட்டுப் படுத்தவே முடியாது. அழிவு அதற்கு சம்பவிக்கவே சம்பவிக்காது. அப்படியிருக்க அதனை 'படைப்பு' என எவ்வாறு கூறிட முடியும்.

'படைப்பு' என்றால் அதற்கு மாறுதல், காலக் கட்டுப்பாடு, அழிவு ஆகியன எப்போது எப்படி ஏற் படுகின்றன? குர்ஆனுக்கு அம் மூன்றும் ஏற்படாது என்றால் 'அஃதெப்படி?' என்பதனை சற்று விரிவாகவே ஆய்வோம்.

## மனிதனில் மாறும் இயல்பு

மனித இனத்தை எடுத்துக் கொள்ளுங்களேன்.

அஃதொரு படைப்பினம். அல்லவா?

அந்தப்படைப்பினத்தில் மாறுதல், காலக் கட்டுப் பாடு, அழிவு ஆகிய அந்த மூவியலும் நிகழ்வது கண் கூடு.

'ஆதி மனிதன் ஆடையே இல்லாமலிருந்தான்' எனச் சொல்லப்படுகின்றது.

ஆனால் இன்றைய மனிதன் அப்படியா? வகை வகையான வண்ண ஆடைகள் அவனை அலங்கரித்து 'ஆடையில்லான் அரை மனிதன்' என்ற பழமொழியே உண்டாகி விட்டது.

இது மாறுதல் இல்லையா?

ஆதிமனிதன் ஆள, நீள, உயரத்தில் இன்றைய மனிதனைப் பார்க்கிலும் எவ்வளவோ பெரும் படைப்பாக இருந்தான்.

'ஆது' வர்க்கத்தினரைப் பற்றி குர்ஆன் விமர்சிக்கும் போது பனைமரத்தளவு உயரமும் அதற்கு ஈடு கொடுத்திட வல்ல ஆளநீளமும் படைத்தவர்களாக வாழ்ந்தார்கள் என எண்பித்துக் காட்டுகின்றது.

ஆனால் இன்றைய மனிதர்களான நாம் அப்படியா உள்ளோம்?

அந்த ஆது வர்க்கத்தார் இன்றைய நம்மவரைப் பார்த்தால் 'எறும்பு மனிதர்கள்' என்றல்லவா சொல்லுவார்கள்.....?

அந்த அளவிற்கு உயரத்தில் ஆள நீளத்திலெல்லாம் நாம் மிகமிகக் குறுகிப்போய் விட்டோமென்றால், அது மாறுதல் இல்லையா?

குழந்தையாக இருக்கும்போது அக்குழந்தை திரவ உணவுகளை மட்டுமே உட் கொள்ள முடிகின்றது.

குழந்தைப் பருவம் கடந்து வாலிப வயதினை அடைந்திடும் போது கல்லைக்கூடத் தின்று ஜீரணிக்க வல்ல ஆற்றலை அவன் பெற்றுத் திகழ்கின்றான், அல்லவா?

ஆனால் முதுமையை - முடியாமையை அடைந்திடும் போது கனமான உணவுகளை உண்டு சுகிக்க ஆவல் இருந்திட்டாலும் கூட அது அவனால் இயலுவதில்லை. எதிலும் எதம்பதம் என்று பயந்து பயந்து சுமாரான உணவு வகைகளையே அவனால் உட்கொள்ள முடிகின்றது. அல்லவா?

இது எதனைக் காட்டுகின்றது?

மாறுதல் மனிதனில் சம்பவிக்கின்றது என்பதைத் தானே?

# சூரியனில் மாறும் இயல்பு

இன்றைக்கெல்லாம் நமது நாட்டில் சிலர் காலை நேரங்களில் சூரியனை தெய்வமாக பூஜிக்கும் காட்சியினைப் பார்க்கின்றோம்.

அந்த சூரியனை எடுத்துக் கொள்வோமே.

அதனையும் நம்மைப்போன்றதொரு படைப்பு என்றே நாம் சொல்வோம்.

ஏனெனில் அந்த சூரியனும் படைப்புகளுக்கு இலக்கணமான மாறுதல்களை பல வகைகளில் ஏற்றே கொள்கின்றது.

எப்படி என்பீர்?

ஒரு ஆண்டில் சில மாதங்களில் அது வடதுருவத்திலும், சில மாதங்களில் தென்துருவத்திலும், வேறு சில மாதங்களில் மத்தியரேகைளிலும் அது சஞ்சரித்து வருவதாக இன்றைய விஞ்ஞானம் கண்டுபிடித்துள்ளது.

இந்த மாறுதல்கள் எதனால்?
அது ஒரு படைப்பு என்பதனால்!

இப்படியாக அண்ட கோளங்களில் வதியும் ஒவ்வொன்றையும் சீர்த்தூக்கிப் பாருங்கள்.

அவை ஒவ்வொன்றும் அது அதன் தகுதிக்கும் தரத்திற்கும் தன்மைக்கும் இசைந்தாற்போல மாறுதல்களுக்கு இலக்காகிக் கொண்டேதான் இருக்கும்.

அதில் யாதொரு ஐயமும் இல்லவே இல்லை.

## குர்ஆனில் மாறுதல் ஏற்பட முடியுமா?

மனிதனில், சூரியனில், மற்ற மற்ற படைப்புக்களில் மாறுதல் இயல்பாக ஏற்படுவது போன்று குர்ஆனில் மாறுதல் ஏற்பட்டுள்ளதா? ஏற்பட முடியுமா?

குர்ஆனிலுள்ள ஒரேயொரு புள்ளியை இல்லாமல் ஆக்கப்பட, அல்லது மேலே உள்ள புள்ளியை கீழே மாற்ற, கீழே உள்ள ஒரேயொரு புள்ளியை மேலே மாற்ற, உலகினில் எந்த சக்தியினாலாவது முடிந்ததா? முடியுமா?

முடிந்ததுமில்லை இனி உலகம்வுள்ளளவும் முடியவும் முடியாது.

உதாரணத்திற்கு ஒரு நிகழ்ச்சியினைக் காண்போம்.

## கவளம் உணவுகூட கொடுக்க மறுத்த 'அந்தாக்கிய்யா' மக்கள்

நெடுவழிப் பயணம் மேற்கொண்ட மூஸா கலீமுல்லா, ஹிளுரு (அலைஹிமா) ஆகிய இரு அருளாளர்களும் தங்களின் பயணத்தினூடே 'அந்தாக்கிய்யா' எனும் நகரை அடைகின்றனர்.

அப்போது அந்திமாலை நேரம்.

காடு வணாந்திரம் எனச் சுற்றி வந்த அவர்களுக்கு அப்போது கடும்பசி கண்டிருந்தது.

ஆனால் பசிக்குப் புசிப்பது எங்கே?

இன்று போல அன்று ஊர் தவறாமல் ஹோட்டல்கள் இருந்திடவில்லையே.

ஆகவே, அந்நகரிலுள்ள மக்களிடம் தங்களின் தேவைகளை வாய்விட்டுச் சொல்லி கவளம் உணவாவது கேட்டுப்பார்த்தனர்,

ஆனால்; இதயமுள்ளவர்கள் அங்கிருந்தால் அல்லவா கிடைத்திருக்கும்? ஆங்கே அப்போது வாழ்ந்த மக்கள் இதயமே இல்லாதவர்களாக இருந்திட்டார்கள் போலும்?

அவ்விரு அருளாளர்களையும் ஏன் என்று கேட்கக் கூட நாதியில்லை ஆங்கு.

ஆகவே, அருளாளர்களான மூஸா (அலை) அவர்களும் ஹிள்ரு (அலை) அவர்களும் பட்டினி கிடக்கும் படி நேரிட்டது.

மெய்நிலை கண்ட மெஞ்ஞானிகளின் மூலவர் ஹிள்ரு (அலை) அவர்களும்;

'கலீமுல்லா' எனச் சிறப்பிக்கப்பட்டவரும்' உலுல் அஜ்முகளில் ஒருவராக ஏற்றம் பெற்றவருமான மூஸா (அலை) ஆகிய இருவரையும் பட்டினிபோட்ட அந்த வன்நெஞ்சர்களை வல்ல அல்லாஹ் தனது கடைசி வேதமான நமது குர்ஆன் ஷரீபில் :

''(பின்னர் மூஸா, ஹிள்ரு ஆகிய) இருவரும் நடந்தனர். அவர்கள் ஓர் ஊரார் (அந்தாக்கிய்யா நகர் மக்களி)டம் வரவே, தங்களிருவருக்கும் உணவளிக்கும்படி அவ்வூரா ரைக் கேட்டார்கள். ஆனால் அவர்கள் இவ்விருவருக்கும் விருந்தளிக்காமல் விலகிக் கொண்டனர்... (குர் : 18 ; 77) என்று விமரிகித்துக் காட்டுகின்றான்.

## ''கஞ்சர்கள் - வன்நெஞ்சர்கள்''

மூஸா, ஹிள்ரு (அலைஹிமா) ஆகியோர்களின் காலம், இன்றைக்கு ஏறக்குறைய மூவாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியது.

இவ்வளவு காலத்திற்கு முன்பு அவர்களின் வாழ்க்கை யில் சம்பவித்த அந்த நிகழ்ச்சியை அவர்களின் காலத் திற்கு ஏறக்குறைய 1500 ஆண்டுகளுக்குப்பின் நமது நபிகளாருக்கு இறக்கிக் கொடுக்கப்பட்ட குர்ஆன்ஷரீபில் அங்ஙனம் சுட்டிக் காட்டப்பட்டு உள்ளது.

அதனை இன்றைய நாம் பார்த்து படித்தறிந்து கொண்டு அந்த அந்தாக்கிய்யா நகர மக்களை ''கஞ்சர்கள் வன்நெஞ்சர்கள்'' என தூற்றித் துப்புகின்றோம் அல்லவா?

ஆனால் நம்மோடாவது பிரச்னை ஓய்ந்து விட்டால் பரவாயில்லை இனி உலகம் முடியும் வரை பிறந்து வாழக் கூடிய அனைவரும் அல்லவா அந்த மக்களைத் தூற்றி துப்பப் போகின்றனர்?

இது எவ்வளவு பெரிய இழிவு?

இதிலொரு வேடிக்கை என்னவென்றால் இத்துணை இழிவுகளையும் கேட்டுக் கேட்டு அணு அணுவாக அவர்கள் சித்திரவதைப்படவேண்டும்; என்பதற்குத்தானோ என்னவோ அந்த அந்தாக்கிய்யா நகரை இதுகாறும் அழிக்காமல் ஒழிக்காமல் அப்படியே விட்டு வைத்துள்ளான் வல்ல அல்லாஹ்!

இப்படி இறுதி நாள் வரை தங்களின் ஊருக்கும், மூதாதையர்களுக்கும் தீராத - மாறாத களங்கம் ஏற்பட்டு விடக்கூடாது என்பதை எண்ணிப் பார்த்த அந்தாக்கிய்யா நகர மக்கள் - அந்தக் களங்கத்தை மாற்றும் முகமாக ஹஜ்ஜாஜ் பின் யூசுப் என்ற கலீபாவை அணுகி தங்களின் மூதாதையர்களை விமரிசிக்கும் (குர்ஆனின் 18-ம் அத்தியாயம் 77-ம் வசனத்திலுள்ள) 'ஃப அபவ்' என்ற வார்த்தையினை 'ஃப அதவ்' என மாற்றும்படி வேண்டிக் கொண்டனர்.

கொஞ்சம் கவனித்துப் பார்த்தால் அவர்கள் மாற்றும்படி வேண்டியது ஒரேயொரு புள்ளியைத்தான்,

அவர்களது விருப்பப்படி 'ஃப அதவ்' என மாற்றி விட்டால் 'அந் நகரமக்கள் அவ்விருவருக்கும் உணவளித்து உபசரித்தார்கள்' எனப் பொருள் மாறும்.

## ஆசை வார்த்தை

அப்படி மாற்றினால் அதற்குக் கைமாறாக பொன்னையும் பொருளையும் கொட்டிக் கொடுப்பதாகவும்.

எண்ணிக்கையில் மிகுந்திருந்த அவர்கள் அனைவருமே தீனுல் இஸ்லாத்தில் இணைந்து விடுவதாகவும் ஆசை வார்த்தை காட்டினர்.

ஆனால்;

ஹஜ்ஜாஜ் பின் யூசுப் என்ற அந்த கலீஃபா ''குர்ஆன் ஷரீபிலுள்ள ஒரேயொரு புள்ளியை கூட மாற்றவோ மறைக்கவோ எனக்கு உரிமையில்லை'' என அம்மக்களிடம் முடிவாகக் கூறிவிட்டார்.

'பெரும் எண்ணிக்கையுள்ள பெருங்கூட்டத்தினர் தீனுல் இஸ்லாத்தில் இணைந்திட முன் வருகின்றார்களே!'

'பொன்னும் பொருளும் பெருவாரியாகக் கிடைத்திடுமே'

என்ற ஆவலில் ஒருவேளை அந்த கலீபா அவர்களது விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுக்க முன் வருகின்றார் என வாதத்திற்காக வைத்துக் கொள்வோம்.

அங்ஙனம் மாற்றம் செய்ய அந்த கலீபாவினால்கூட முடிந்து இருக்குமா?

நிச்சயமாக அவரினால் அது முடியவே முடியாது.

# அல்லாஹ்வினால் பாதுகாக்கப்படும் அற்புத வேதம்

அது அல்லாஹ்வின் திருவேதம், மாறுதலை அது ஏற்கவே ஏற்காது.

குர்ஆன் ஷரீபில் மாற்றத்தைத் திணிக்க இது போன்ற பலமுயற்சிகள் அன்றும் இன்றும் மறை முகமாகவும், பகிரங்கமாகவும் நடைபெற்றே வந்துள்ளன. ஆனால் அனைத்து முயற்சிகளும் தோல்விகண்ட வரலாற்றினைத் தான் நம்மால் காணமுடிகின்றதே தவிர குர்ஆனில் கடு களவு மாற்றமும் இதுகாறும் ஏற்படவே இல்லை.

இனிமேலும் எத்தம் பெரிய சக்தி குறிக்கிட்டாலும் - இந்த உலகம் முழுவதும் ஒன்றிணைந்து கொண்டு முயன்றாலும் - அது நடக்கவே நடக்காது. இது முக்காலும் சத்தியம்.

காரணம்,

அவ்வேதம் தன்னை, 'பொய்மை எப்போதும் அணுகவே அணுகாது' என்று அறுதியிட்டுக் கூறிக் கொண்டிருக்கிறது.

இதோ அவ்வேதம் தன்னைப்பற்றிக் கூறிக் கொண்டி ருக்கும் அறுதிமானத்தைப் பாருங்களேன்,

இதற்கு முன்னும் சரி, இதற்குப் பின்னும் சரி, (திருக் குர்ஆன் ஷரீபாகிய) இவ்வேதத்தை பொய் (அணுகவே) அணுக முடியாது. மிக்க புகழுக்குரியவனும் ஞானம் நிறைந்தவனுமால் (இது) இறக்கிக் கொடுக்கப் பட்டிருக்கிறது.

(குர் : 41; 42)

ஆனாலும் முன்னுள்ள வேதக்காரர்கள் தங்களது வேதங்களை தங்களது இஷ்டத்திற்குக் கூட்டிக் குறைத்தும், இல்லாததை இருப்பதாகச் சேர்த்தும், இருப்பதை இல்லாததாக சித்தரித்துக் காட்டியும், தங்களது சொந்தக் கை வரிசைகளை அந்த வேதங்களில் காட்டி, அவைகளின் புனிதத் தன்மையைச் சிதைத்துச் சின்னா பின்னப்படுத்தி விட்டதைப் போன்று கடைசி கடைசி வேதமான இந்த குர்ஆனிலும் அங்ஙனம் எவரும், எக்காலத்திலும் தில்லு முல்லுச் செய்து விடக் கூடாது என்பதற்காக குர்ஆனைப் பாதுகாக்கும் முழுப் பொறுப்பை வல்லவனாகிய அல்லாஹ் தன்னிடமே வைத்துக் கொண்டு அதனையும் குர்ஆனின் மூலமே பிரகடனம் செய்திருப்பதைப் பாருங்கள் :

(' நபியே, முஹம்மதே !) நிச்சயமாக நாம்தாம் இவ் வேதத்தை (உம்மீது) இறக்கி வைத்தோம் : ஆகவே, அதில் எத்தகைய மாறுதலும், அழிவும் சம்பவித்து விடாம லிருக்கும் பொருட்டு) நிச்சயமாக நாமே அதனை இரட்சித்துக் கொள்வோம்.

(குர் : 15 ; 9)

ஆகவேதான் -

'குர்ஆன் படைப்பன்று' என இயம்பிடுவோர் அதற்கு ஆதாரமாக குர்ஆன் மற்ற படைப்பினங்களைப் போன்று மாறுதல்களை ஏற்பதில்லை என எடுத்துக் காட்டுகின்றனர்.

அவர்களின் வாதம் எவ்வளவு பொருத்தமானது - நியாயமானது என்பதனைப் பார்த்தீர்களா?

வாழ்க அவர்கள் தம் நியாய வாதம்.

## காலக் கட்டுப்பாடு

குர்ஆன்ஷரீப் 'மாறுதல்களை' ஏற்றுக்கொள்வதில்லை. அதுபோல அது காலக்கட்டுபாடுகளையும் ஏற்படுத்த கிடையாது.

'அது எப்படி?' என்றால் :

''சாப்பிட்டாயா?'' என ஒருவனிடம் கேட்டால் ''சாப்பிட்டு விட்டேன்'' என சென்ற காலமாவோ அல்லது; ''சாப்பிடுகின்றேன்'' என நிகழ்காலமாகவோ அல்லது; ''சாப்பிடுவேன்'' என வருங்காலமாகவோ இப்படி மூன்றிலொரு காலத்திற்குட்பட்ட பதிலைத்தான் அவனால் சொல்லிட முடியும்.

சாப்பாடுப் பிரச்னையைப் பொருத்தமட்டிலும்தான் இத்நிலை என்பதல்ல.

பொதுவாக 'கேள்வி, என்றெழுந்தால் அதற்குரிய 'பதில்' முக்காலங்களில் ஏதாவதொரு காலத்திற்குள் அடங்கியதாகத் தான் இருந்திட முடியும்.

மனிதனைப் பொருத்தமட்டில் கேள்வி இல்லாத பிரச்னை ஏதாவது இருந்திட முடியுமா?

ஆகவே 'மனிதன்' முழுக்க முழுக்க காலக் கட்டுப் பாட்டை விட்டும் எவ்வகையிலும் தப்பிக்க முடியவே முடியாது.

## வளர்பிறை - முழுநிலா - தேய்பிறை

மனிதனுக்கு மட்டுமா இந்நிலை?

அல்ல அல்ல.

அதோ மேற்குவானில் அறுவாள் மூக்கு போன்று மின்னிடுகின்றதே அந்த இளம் பிறையை எடுத்துக் கொள்ளுங்கள். அதனை நாம் 'வளர்பிறை' என்போம் இதில் வருங்காலம் தொக்கி நிற்பதை எவரால் மறுக்க முடியும்?

இன்னும் கொஞ்சநாள் கழித்தபின் அதனை 'முழுநிலா' என்போம். அதில் நிகழ்காலம் தொக்கி நிற்கிறது.

மாதக் கடைசியில் அதனைத் 'தேய்பிறை' என்போம். அதில் சென்ற காலம் தொக்கி நிற்கிறது.

இப்படியே வையகத்திலும் வானகத்திலும் வதியும் அனைத்தையுமே எடுத்துச் சீர்தூக்கிப் பாருங்களேன்.

அவை ஒவ்வொன்றும் ஏதாவதொருவகையில் காலக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டதாகவே இருந்திடும்.

காரணம்; அவைகள் அனைத்துமே படைப்பினங்கள்.

## காலங்களை வென்றிலங்கும் ஞானக்கருவூலம்

ஆனால்; தெய்வத் திருமறையாகிய குர்ஆன் ஷரீபை எந்தக் கோணத்திலிருந்து ஆய்ந்தாலும் அது காலக்

கட்டுப்பாடுகளுக்கு இலக்காகாத, காலங்களை வென்றிலங்கும் ஞானக் கருவூலமாகவே நம்மால் காணமுடியும்.

வெறுமனே 'குர்ஆன் காலக்கட்டுப்பாட்டை ஏற்காது' ஏற்காது' என்றால் நம்மவர் வேண்டுமானால் அதனை ஏற்பர்.

ஆனால் மாற்றார் எங்ஙனம் ஏற்றிடுவர்?

ஆதலால் சில காரண காரியங்களையாவது கூறிட வேண்டியது நமது கடமையாகின்றது.

## குர்ஆன் எப்போது பிறந்தது?

'குர்ஆன் எப்போது பிறந்தது?' என்றால் 'கி. பி. 610 ஆம் ஆண்டு ரமழான் மாதம் 27 - ஆம் இரவில் மக்கா நகரிலுள்ள ஹிராமலைக் குகையில் அது பிறந்தது - என விபரம் புரியாதோர் சொல்லிடக் கூடும்.

ஆனால் அது தவறான பதிலாகும்.

ஏனெனில்;

அந்நாள், முதல் வானிலிருந்த குர்ஆன் ஷரிபின் மொத்தத் தொகுப்பிலிருந்து இறக்கியருள ஆரம்பம் செய்யப்பட்ட நாள்தானே தவிர குர்ஆன் பிறந்த நாளன்று.

'முதல் வானத்திற்கு எப்படி எங்கிருந்து எப்போது வந்தது?, என்றால்.

கி. பி. 610 - ஆம் ஆண்டு ஷஃபான் மாதம் பதினைந்தாம் (பராஅத்) இரவன்று 'லவ்ஹுல் மஹ்ஃபூல்'

எனும் பலகையிலிருந்து பெயர்த்து முதல்வானத்திற்கு இறக்கப்பட்டது - என்போம்.

'லவ்ஹுல் மஹ்ஃபூளிற்கு எங்கிருந்து எப்போது எவரால் வந்தது? - என்றால்'

அது வல்ல அல்லாஹ் ஒருவனுக்கு மட்டிலுமே தெரிந்த ரகசியம். அதன் உள்ளமையை மனிதர்களான நம்மவர் சூழ்ந்தறிய முடியவே முடியாது என்போம்.

இப்படி குர்ஆனின் ஆதியந்த நிலையைப் பற்றியே புரிய முடியாமல் இருக்கும் போது அதற்கு கெடுவை எங்ஙனம் நிர்ணயிக்க முடியும்......?

அன்றி;

குர்ஆன் ஷரீஃபிலுள்ள கட்டளைகள் — வாழ்க்கை நெறிகள் அன்றையக் காலத்திற்கு மட்டும்தான் பொருந்தியது - என்றோ; அல்லது, இக்காலத்திற்கு மட்டும் தான் பொருந்தும் என்றோ சொல்ல முடியுமா?

அதுவும் முடியாதே!

ஏனெனில்; இறக்கியருளப்பட்ட நாளிலிருந்து அகிலம் முடியும்நாள் வரையிலும் பிறந்து, வளர்ந்து, வாழக்கூடிய அனைத்து மனிதர்களுக்குமே - அனைத்து நாட்டவர்களுக்குமே - அனைத்து நிறத்தவர்களுக்குமே - அனைத்து மொழியினருக்குமே அனைத்து வெட்ப தட்பங்களுக்குமே பொருந்தக் கூடியதாகத் தானே அது அமைந்துள்ளது.

ஆகவேதான்

'குர்ஆன் படைப்பன்று' என்றிடுவோர் குர்ஆனை காலக்கட்டுப்பாடுகள் பிடிக்காது என்கின்றனர்.

அவர்களது வாதத்தில்தான் எவ்வளவு வலு உள்ளது பார்த்தீர்களா?

சுப்ஹானல்லாஹ்! அல்ஹம்துலில்லாஹ்!

## அறிவு

படைப்பினங்களுக்குச் சம்பவிக்கும் மூவகைக் குணங்களில், மாறுதல், காலக்கட்டுப்பாடு ஆகியன குர்ஆன் ஷரீபிற்குச் சம்பவிக்காது என்பதைச் சந்தேகத்திற்கு இம்மியும் இடமின்றி கண்டுகொண்ட நாம் மூன்றாவது குணமாகிய 'அறிவு' அதற்கு சம்பவிக்குமா, சம்பவிக்காதா? என்பதனையும் ஆய்வோம்.

## அலெக்சாண்டரின் தத்துவம்

'உன் பாட்டன் எங்கே? என்றபோது 'மரணித்து விட்டான்' என்றான் ஒருவன்.

கொஞ்ச காலம் கழிந்தபின் அதே மனிதனிடம்

'உன் அப்பன் எங்கே?' என்றபோது 'மரணித்து விட்டான்' என்றானவன்.

இன்னும் கொஞ்சகாலம் கழிந்தபின் இருதடவை பதில் சொன்ன மனிதனை தேடித் தேடிப் பார்த்து அவன் கிடைக்காமல் போகவே அவனது மகனைப் பார்த்து 'எங்கே உன் தகப்பன்?' என்றபோது; அவனும் 'என் தகப்பன் மரணித்து விட்டான்' என்றானாம்.

ஈதென்ன அநியாயமாக இருக்கின்றது?

இந்தக் குடும்பத்தார்களிடம் குடும்பத்திலுள்ள மற்றவர்களை - மூத்தவர்களைப் பற்றி விசாரிக்கும்போதெல்லாம்' மரணம்...... மரணம்' என்கின்றார்களே.

'ஈதொரு பீடைபிடித்த குடும்பமோ'

என நான் எண்ணிக் கொண்டிருக்கும் போது எனது அருகிலிருந்த பெரியவர் ஒருவர் -

''நாளைக்கு, உன் குடும்பத்தார்களிடம் உன்னைப்பற்றி விசாரிக்கும்போது, உன் குடும்பத்தார்களும் அதே பதிலைத்தான் அதாவது, 'மரணித்து விட்டார்' என்ற பதிலைத்தான் சொல்லுவார்கள்'' என இடித்துரைத்தார்.

அதனைக் கேட்டபோதுதான்'' ஓஹோ! இந்த மரணம் நம்மையும் விட்டு வைக்காது போலிருக்கிறதே என நான் உணர்ந்தேன்-என அலெக்சாண்டர் கூறினான்.

இப்போது எங்கே அந்த மகா அலெக்சாண்டரை?

அவரின் மண்ணறைதான் எங்கே?

மக்கிப் போன அவரின் எலும்புதான் எங்கே எங்கே?

## நேற்று, இன்று, நாளை !

'நேற்று' என்பது பிறப்பு 'இன்று' என்பது வாழ்க்கை. 'நாளை' என்பது மரணம் - என்றான் ஓர் ஆங்கில அறிஞன்.

அதுதானே மனித வாழ்க்கை !

ஆகவே அழிவின் பிடியிலிருந்து மனிதனால் தப்பிக்க முடியவே முடியாது.

## ஜெர்மன் விஞ்ஞானியின் அபாயச் சங்கு

மனிதனை மட்டும்தான் அழிவு பீடிக்குமா? அல்ல... அல்ல.

படைப்பினங்களாகவுள்ள எதனையுமே அது விடுவதாக இல்லை.

ஜெர்மன் நாட்டைச் சேர்ந்ததொரு விஞ்ஞானி சூரியனைப் பற்றி நீண்ட ஆய்வு நடத்தி முடித்த பின் .

'சூரியனின் ஒரு பகுதி வெடிப்பிற்குள்ளாகி விண்டு பூமியை நோக்கி அதன் துகள்கள் விரைந்து வந்து கொண்டிருக்கின்றன. இன்னும் சில ஆண்டுகளில் அவை பூமியை அடைந்து விடும். அப்போது அதன் விளைவால் பூமியில் வாழும் லட்சோபலட்சம் மக்கள் புற்று நோய்க்கு இலக்காகி மாண்டுமடிவர், அஃதன்றி; இன்னுமொரு 2000 ஆண்டுகளுக்குள் சூரியன் முற்றாக வெடிப்பிற்கு உள்ளாகி சூரியனே இல்லாது அழிந்துவிடும்'' என அபாயச் சங்கு ஒலித்துள்ளார்.

சூரியனே அழிந்திடும்போது சந்திரனின் நிலை என்னவாகும்? அது எப்படி ஒளிரும்?

இரண்டுமே இல்லாமலாகிவிட்டால் அப்புறம் பூமியின் நிலைதான் என்னவாகும்?

ஜெர்மன் விஞ்ஞானி கூறுவதிருக்கட்டும், சூரியன் அத்தகு கதிக்கு உள்ளாகும் என்பதனை நமது தெய்வத் திருமறை குர்ஆன் ஷரீபே அங்கனம் எச்சரிப்பதைப் பாருங்களேன்:

''அது (மறுமை நாள் வரும்) சமயம், பார்வை தட்டழிந்து, சந்திரனின் ஒளி மங்கி (வெவ்வேராகப் பிரிந்து நிற்கும்) சூரியனும், சந்திரனும் ஒன்று சேர்க்கப்பட்டு விடும்''

குர் : 76 ; 7 - 9)

(''யுக முடிவுக்காக) சூரியனின் ஒளி மங்கும்போது,

நட்சத்திரங்கள் சுடரிழந்து உதிர்ந்து விழும்போது,

மலைகள் பெயர்த்துப் பறக்கடிக்கப்படும் போது,

பத்துமாத சூழ் ஒட்டகங்கள் கவனிப்பாரற்று (க்கட்டுத் தெறித்து) அலைய விடப்படும் போது

கடல் கொதித்துக் கொந்தளிக்கச் செய்யப்படும் போது,

உயிர்கள் ஒன்று சேர்க்கப்படும்போது...

(குர் : 81 ; — 7)

என அழிவு நாளின் அலங்கோலங்களை வர்ணித்துக் காட்டும் வல்ல அல்லாஹ்,

'வானகமும் வையகமும் மலைமடுவுகளும் ஆடிமோதக் காற்றில் பறக்கும் பஞ்செனப் பறக்கும்...''

என மற்றுமொரு இடத்தில் வர்ணித்துக் காட்டுகின்றான்.

அப்படியென்றால்,

அண்டம் அனைத்துமே விண்டு வீழ்ந்து விடும் என்பதில் ஐயம்தான் உண்டோ?

ஆனால், கோதில் மறையாம் குர்ஆன் ஷரீபிற்கு மட்டும் யுகமுடிவில் கூட அழிவு இல்லவே இல்லை.

## யுக முடிவில் குர்ஆன் உயர்த்தப் பட்டுவிடும்

அப்படியென்றால் குர்ஆன் ஷரீபின் நிலைதான் என்ன? என்பீர்.

அழிவு நாளின் அறிகுறிகள் முழுமையாக வெளியாகும் போது அந்தக் கோன்மறை உயர்த்தப்பட்டு விடும்!

குர்ஆன் உயர்த்தப்பட்டு விடும் - என்றதும் உலகில் காகிதங்களில் கருப்பு (அல்லது வேறு) கலர் மையினால் அச்சிடப்பட்டு பைண்டிங் செய்யப்பட்டுள்ளதே அந்த நடைமுறைக் குர்ஆன் உயர்த்தப்பட்டு விடுமோ எனக் கருத வேண்டாம்.

நம்முடைய கரங்களில் தவழும் இவை குர்ஆன் அல்ல 'குர்ஆனின் பதிப்பு' அவ்வளவுதான்.

ஆனால்;

யுகமுடிவின் போது நம்முடைய கரகங்களில் தவழும் இந்த குர்ஆன் பதிப்பில் வசனங்களேதும் இல்லாது மறைந்து விடும். திறந்து பார்த்தால் வெறும் காகிதங் களைத்தான் பார்க்க முடியும்.

மனிதர்கள், மலக்குகள், மலக்கல் மவ்த்து உள்ளிட்ட அனைவரும் அழிந்துபட்டபின், வல்ல அல்லாஹ் தன்னந் தனியாக இருப்பானே அந்த மயான நேரத்திலும், குர்ஆன் ஷரீப் அதற்குரிய 'லவ்ஹுல் மஹ்ஃபூல்' எனும் பல கையில் பத்திரமாக - பாதுகாப்பாக இருந்து கொண்டே இருக்கும்.

விசாரணைக்காக மனிதர்கள் ஆதியோடு அந்தமாக எழுப்பப்படும்போது ஆங்கே - மஹ்ஷர் வெளியில் - குர்ஆன் ஷரீப் ஆஜராகி உலகில் தனக்கு மரியாதை செய்த நல்லடியார்களையும் அவமதித்த அல்லடியார்களை யும் இனம் காட்டிக் கொடுக்கும்.

நீதி விசாரணை முடிந்து நல்லவர்கள் சொர்க்கத் திற்கும், அல்லவர்கள் நரகத்திற்கும் அனுப்பப்பட்டபின் அது (குர்ஆன் ஷரீப்) மீண்டும் லவ்ஹுல் மஹ்ஃபூலிற்கு மீண்டு என்றென்றும் பத்திரமாக இருந்து கொண்டே இருக்கும்.

இதுதான் கோன் மறையாம் குர்ஆன் ஷரீபின் நிலை யாகும்.

இப்படி அழிவின் கோரப்பிடிக்கும் அகப்படாமல் ஆதியந்தமில்லா அருட்கலசமாகத் திகழும் அருள்மா மறையினை எங்கனம் 'படைப்பு' என்று சொல்ல முடியும்?

கைப்பு இல்லாப் பொருளை 'உப்பு' என்றிட முடியுமோ?

உரைப்பு இல்லாப் பொருளை 'மிளகாய்' என்றால் உலகம் ஒப்புமோ?

இனிப்பு கொஞ்சமும் இல்லாப் பொருளை ஜீனி சர்க்கரை என்றால் ஏற்பது யாரோ?

அதுபோல 'படைப்பு' என்பதற்கு இலக்கணமாகவுள்ள (1) மாறுதல் (2) காலக்கட்டுப்பாடு (3) அழிவு ஆகிய மூன்று.

அல்லது

குறைந்த பட்சம் அம்மூன்றில் ஒன்றைக்கூட ஏற்கா திருக்கும் குர்ஆனை 'படைப்பு...... படைப்பு...... படைப்பு' என்றால் அதனைவிடப் பைத்தியகாரத்தனம் வேறு ஏது?

இப்படி பைத்தியகாரத்தனமான கொள்கையினைத் தான் - அதாவது குர்ஆன் படைப்பு என்பனைத்தான் முஃதஜிலா எனும் மூர்க்கர்கள் விடாப்பிடியாகப் பிடித்துக் கொண்டு ஜம்பம் பேசுகின்றனர்.

## முஃதஜிலாக்களின்
## அடாவடித்தனம்

அறிவுலகம் புறக்கணித்துவிட்ட பத்தாம் பசலி கொள்கையை, அறிவுச்சுவடி அறியாதார் கூட ஏற்க மறுக்கும் 'குர்ஆன் படைப்பு' என்ற பைத்தியகாரத்தன மான அக் கொள்கையை,

'பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள்தான்' என்ற பிடிவாத நோக்கோடு பற்றிப்பிடித்து நின்ற முஃதஜிலாக்கள் அடாவடித்தனம் செய்யத் தலைப்பட்டனர்.

பைத்தியகாரத்தனமான அந்தக் கொள்கையினை அரங்கேற்றியே ஆக வேண்டும் என்ற அகங்காரத்தில் திழைத்து நின்ற அவர்கள் அன்றைக்கு அவர்களுக்கிருந்த அரசியல் செல்வாக்கைப் ,பயன்படுத்தி அன்றைய அறிஞர் உலகத்தின் மீது அடக்குமுறையை ஏவி விட்டுப் பார்த்தனர்.

உடல் பொருள் ஆவி அனைத்தையும் பணயமாக வைத்துப் போராடி அந்த அடக்கு முறைகளையெல்லாம் தூள் தூளாக்கியது அன்றைய ஆன்மீக அறிஞர் உலகம்.

அந்த தர்ம யுத்தத்தில் அறிஞர் பலர் வீர மரணம் (ஷஹாதத்) அடைந்திட நேரிட்டது.

ஆனாலும் அசைந்து கொடுக்கவில்லை.

'குர்ஆன் படைப்பன்று' என்ற கொள்கைதனில் குன்றென உயர்ந்தே நின்றனர்,

வீரமரணமெய்திய அந்த வீராதி வீரர்களில் தியாக மறவர்களில் ஒருவர்தான் இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்மத்துல்லாஹி தஆலா அலைஹி) அவர்கள்.

## ஆளவந்தார்களின் அடக்கு முறையும், இமாம் அஹ்மதிப்னு ஹன்பலின் கொள்கை உறுதியும்

ஹிஜ்ரி 200 ஆம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் -

ஹாரூன் ரஷீத் அவர்களுக்குப்பின் அவர் தம் மைந்தர் மாமூன் ஆளுகையில் அமர்ந்திருந்த காலகட்டமது.

அதுபோல அரசபதவிகளில் அதிகமதிகம் ஒட்டிக் கொண்டிருந்த முஃதஜிலாப் பிரிவினர், அவர்களுக்கே உரித்தான குள்ளநரித் தந்திரங்களால், நாளாவட்டத்தில் ஆளவந்தார்களின் செல்லப்பிள்ளைகளாகி அரசை தங் களிஷ்டம் போல ஆட்டிப்படைக்குமளவு ஏற்றம் பெற்று விட்டனர்.

எப்படி எப்படியோ அதிபர் மாமூனின் மூளையைச் சலவை செய்து 'குர்ஆன் படைப்பு' என்ற தங்களின் வாதத்தை முழுக்க முழுக்க அவரை ஏற்கும்படியும் செய்து விட்டனர்

ஆகவே 'குர்ஆன் படைப்பு' என்ற அவர்களின் அந்த கவைக்குதவாக் கொள்கை அரசாங்கக் கொள்கை யாகவே பிரகடனம் செய்யப் பட்டது.

ஆதலால்; 'குர்ஆன் படைப்பன்று' எனக் கூறுவதே அரசாங்கக் குற்றமாக அறிவிக்கப்பட்டது.

ஆனால்; அரசாங்கத்தின் அந்த ஆள் தூக்கிச் சட்டத்தை - கருப்புச் சட்டத்தைக் கொஞ்சம் கூட சட்டை செய்யாத 'சுன்னத் வல் ஜமாஅத்' எனும் அமைப்பைச் சேர்ந்த கொள்கை மறவர்கள் 'குர்ஆன் படைப்பன்று' என்ற தங்களின் கொள்கையை சந்து முனைகளிலெல் லாம் நின்று சிந்துபாடத் தொடங்கினர்.

## ராணுவமும் சவுக்கும்

சுன்னத் வல் ஜமாஅத்தினரின் இந்த துணிச்சலைக் கண்ட துரைத்தனத்தார் துவண்டு விடவில்லை.

ராணுவத்தை ஏவி விட்டனர்.

ஆமாம்... துரோகிகளையும் விரோதிகளையும் அடக்கி யொடுக்கப் பயன்பட வேண்டிய ராணுவம்;

தியாக மறவர்களான சுன்னத் வல் ஜமாஅத்தைச் சேர்ந்த உலமாப் பெருமக்களை அடக்கியெடுக்க ஏவி விடப்பட்டது.

கிரிமினல் குற்றவாளிகளைத் தண்டிக்கவும் கண்டிக்கவும் பயன்பட வேண்டிய சவுக்குகள்;

இஸ்லாமியத்தின் தூண்களான உலமாக்களின் பொன் மேனியைப் புண்படச் செய்ய பயன்படுத்தப்பட்டது.

ஈனர்களையும் வீனர்களையும் நிரப்பப் பயன்பட வேண்டிய சிறைக் கூடங்கள்;

ஈமானுள்ள நல்லடியார்களான வாய்மையாளர்களையும் தூய்மையாளர்களையும் நிரப்பிட பயன்படுத்தப்பட்டன.

ஆனாலும்; அடக்குமுறை வளர வளர அகிம்சாவாதிகளான சுன்னத் வல் ஜமாஅத்தினரின் கொள்கை முழக்கம் ஓங்கி ஒலித்தனவே தவிர தணிவதாக - பணிவதாக இல்லை.

வேட்டான்கள் அலறிடும் சிறைச் சாளைகளை மாங்குயில் கூவிடும் மாந்தோட்டங்களாகக் கருதிய அந்தக் கொள்கை மறவர்கள்,

'மாட்டோம் மாட்டோம் குர்ஆன் படைப்பென்பதை ஏற்க மாட்டோம்' என கர்ஜித்து நின்றனர்.

இந்நிலையில் அதிபர் மாமூன் மரணித்து விடுகின்றார்.

இன்னாலில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்.

# அதிபர் முஃதஜிம் பில்லா

மாமூன் மரணித்துவிட்டதால் அவரின் மைந்தன் முஃதஜிம் பில்லா ஆளுகையில் அமருகின்றார்.

அவர் முஃதஜிலாப் பிரிவினரின் பாசறையிலேயே பயின்று வளர்ந்தவர்.

ஆகவே தகப்பனைவிட மேலாக சட்டங்களைக் கடுமையாக்கினார்.

சுன்னத் வல் ஜமாஅத் அமைப்பைச் சேர்ந்த உலமாக்களிடம் 'எவரும் பேச்சு வார்த்தைகூட வைத்துக்கொள்ளக் கூடாது' என வாய்ப்பூட்டுச் சட்டத்தையே பிறப்பித்தார் அதிபர் முஃதஜிம் பில்லா.

செங்கதிரோனின் பொன்னொளியை முறம் கொண்டு மறைப்பதால் மங்கியா போய்விடும்?

கரைபுரண்டோடிவரும் காட்டாற்று வெள்ளத்தை கை கொண்டு மறைப்பதால் அடங்கியா போய்விடும்?

ரத்தம் கொதித்தெழுந்துள்ள கொள்கை மறவர்களை இந்த வெத்தர்களின் வெற்று வேட்டுக்களினால் விறு விறுப்பு குன்றச் செய்திட முடியுமா?

ஆமாம்...முடியவில்லை தான்

போடப்பட்ட சட்டங்களையெல்லாம் காற்றாகியாக ஊதித் தள்ளிவிட்ட சுன்னத் வல்ஜுமாஅத்தினர் தங்களது தங்கக் கொள்கையினை குன்றேறி முழங்கி வந்தனர்.

நிலமைக் கட்டுக்கடங்க வேண்டுமானால் கலகக் காரர்களின் மூலவரான அஹ்மதிப்னு ஹன்பலை முடக்க வேண்டுமென அதிபர் முஃதஸிம் பில்லாவிடம் யோசனை சொல்லப் படுகின்றது.

ஆகவே, சுன்னத் வல்ஜுமாஅத் இயக்கத்தின் அன்றைய தானைத் தலைவரான இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்-அன்ஹு) அவர்களை பிடி வாரண்டு மூலம் சிறை பிடிக்க கட்டளை பிறக்கின்றது.

ராணுவம் முடுக்கிவிடப்படுகின்றது.

அன்று மாலை நேரத்திற்குள்ளாகவே அடலேறு அஹ்மதிப்னு ஹன்பல் கைது செய்யப்பட்டு அரசவைமுன் நிறுத்தப் படுகின்றார்.

'குர்ஆன் படைப்புத்தான்' என அறிக்கை எழுதித் தரும்படி நிர்பந்திக்கப்படுகின்றார்; அந்த ஆலிம் பெருந்தகை.

''வானமே இடிந்து வீழ்ந்தாலும், வையமே பிளந்து பிரண்டாலும் நான் அங்ஙனம் அறிக்கை தரமாட்டேன்'' என ஆவேசத்தரமாக கூறி நிற்கின்றார் அந்தக் கொள்கைக் குன்று.

## அதிபரின் மதமதப்பு

அரபுலகத்தின் அதிபன் நான் கேட்கின்றேன். குர்ஆன் படைப்புத்தான் என அறிக்கை விட முடியுமா, முடியாதா? - என அரட்டுகின்றார் முஃதஜிம் பில்லா.

'அரபுலகமென்ன அகில உலகத்தையே ஆளும் சக்ரவர்த்தியே சொன்னாலும் நான் அங்கனம் அறிக்கை விடேன்'' என ஆர்ப்பரிக்கின்றார் அஹ்மதிப்னு ஹன்பல்.

'குர்ஆன் படைப்பு என்றிடுவதால் உமக்கென்ன நஷ்டம்...?'' என்கின்றார் முஃதஜிம் பில்லா

என் ஒருவனுக்கு மட்டும் நஷ்டமென்றால் நான் பணிந்துவிடத் தயங்கேன். அஃது அகிலத்திற்கே நஷ்டமாக முடியும்.

வல்லவனாம் அல்லாஹ்விற்குச் செய்யும் துரோகமாக முடியும்.

காலத்தால் கறைக்கவோ குறைக்கவோ முடியாத ஞாலக்கருவூலத்தை காலத்தால் வெல்லமுடியும் ... மெல்ல முடியும் எனக் கூறுவது எவ்வளவு பெரிய அபத்தம்...?

ஆகவே தான் 'குர்ஆன் படைப்பு' என்பதனை ஒப்ப மறுக்கிறேன் போலி அறிக்கை வெளியிட மறுக்கின்றேன் என கர்ஜிக்கின்றார் அந்த அடலேறு.

'அதிபர்' என்ற மதமதப்பு முஃதஜிம்பில்லாவின் நாடி நரம்புகளை முறுக்கேறச் செய்கின்றது.

அதிபன் என் முன்னே, கேவலம் ஒரு ஆலிம் இவ்வளவு இறுமாப்புக் காட்டுவதா? விட்டு வைக்கலாகுமா இந்த வீம்பரை?... என்ற கிறு கிறுப்பு விரு விருப்படைகின்றது.

ஆணை பிறக்கின்றது.

ஒட்டகை நரம்புகளால் முறுக்கேற்றப்பட்ட சவுக்குகள் மின்னலெனப் பளிச்சிடுகின்றது.

துடிக்கின்றார் துவளுகின்றார் அந்தத் தூய்மையாளர்

ஆனாலும்; குர்ஆன் படைப்பன்று... குர்ஆன் படைப்பன்று குர்ஆன் படைப்பன்று' என்ற லட்சிய முழக்கத்தை விண்ணில் முட்டி எதிரொலிக்கும் வண்ணம் முழங்குகின்றது அந்த மூதறிஞரின் நாவு. சுப்ஹானல்லாஹ்...

ஒன்றா? இரண்டா? ஒரு நூறா? இருநூறா?

ஓராயிரம் சவுக்கடிகள் இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களின் பொன்னுடலை சல்லடைக் கண்களாகத் துளைக்கின்றன.

ஈமானின் முதிர்ச்சியால் உரம்பெற்றுப் போயிருந்த செங்குருதி அன்னாரின் பூமேனியில் கசிந்து தியாகக் கறைகளைப் பதிக்கின்றது.

கடைசியாக;

அடிக்கும் கரங்கள் ஓய்கின்றன. அதனால் சவுக்கடியின்

பளார் பளார் ஓசையும் ஓய்கின்றது.

மயங்கிய நிலையில் சுருண்டு போய்க் கிடந்த ஹஜ்ரத்

அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்-அன்ஹு) அவர்களின் கிழிந்து நார் நாராகப் போன புண்ணுடல் சிறைகொட்டிலில் போட்டுப் பூட்டப்படுகின்றது.

## அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களின் வீர மரணம்

'சவுக்கடிகளினால் சல்லி சல்லியாகக் கீறிப்புண்பட்டு புழுத்து புரையோடிப் போயிருந்த ரணவேதனைகளோடு தணல் மணலில் போட்ட புழுவென துடி துடித்துக் கொண்டிருந்த ஹஜ்ரத் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்) அவர்கள் சரியாக இருபத்தெட்டு மாதங்கள் தனிமைச் சிறையின் இருட்டறையிலேயே கிடந்து கிடந்து அலுத்து போனபின் ஹிஜ்ரி 2:1-ம் ஆண்டில் சிறையிலேயே வீர மரணமடைகின்றார்.

இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்...

## இமாம் ஷாஃபிஈ (ரஹ்) அவர்களின் ரகசியத் தபால்

சிறை வாழ்க்கையினை இறைக் கருணை பொங்கும் நிறை வாழ்க்கையாக ஆக்கிக் கொண்ட கொள்கைத் தங்கம் ஹஜ்ரத் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ-அன்ஹு) அவர்களுக்கு அன்று எகிப்து நகரில் வாழ்ந்து கொண்டிருந்த இமாம் ஹஜ்ரத் ஷாஃபிஈ (ரஹ்-அன்ஹு) அவர்களிடமிருந்து ஒரு ரகசியத் தபால் வருகிறது.

அந்தத் தபாலில்;

அன்புக்கரசே ! அருளுக்கரசே !!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ் .....

'குர்ஆன் படைப்பன்று' என்ற நியாயக் கொள்கையில் கடைசிவரை நிலைத்து நின்று அதன் பொருட்டால் தியாகத் தழும்புகளை - வீர முத்திரைகளை - விழுபுண் களை மனமகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்ட நுங்களைப் பற்றி நேற்று இரவு எனது கனாவில் தரிசனம் தந்த நம் நபிகள் நாதர் முஹம்மது (ஸல்-அம்) மிக சிலாகித்துக் கூறியதோடு;

சொர்க்கத்தில் சொகுசுகள் நிறைந்த மதன மாளிகை நுங்கட்குக் காத்திருப்பதாகவும் -

உலகம் உள்ளளவும் உலகில் உயிரினம் உள்ளளவும் உம்மின் தியாகம், திருநாமம், திரு வாழ்வு போற்றிப் புகழப்படுமெனவும் -

வல்லவனாம் அல்லாஹ்வின் 'ரிளா' எனும் திருப்தி நுங்கட்கு விருதாக - பரிசாக கிடைக்க இருப்பதாகவும்

நன்மாறாயம் கூறிச் சென்றுள்ளார்கள்.

ஆகவே -

பொருமை காணும்.

புண்மை வீழும்,

உண்மை வாழும்.

என அந்தத் தபாலில் கண்டிருந்தது.

□ □ □

கிடைக்கப்பெற முடியாத இந்த நன்மாறாயத்தை-நபிகள் நாதர் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் நல்வாழ்த்தை தான் அனுபவித்த வெம்மைகளுக்கெல்லாம் வெகுமதியாகப் பெற்றதிற்குப் பின்னரே ஹஸ்ரத் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்-அன்ஹு) அவர்களின் இன்னுயிர் இன்பமாகப் பிரிகின்றது.

அருள்மறையாம் பொருள் மறையின் வெளிச்சத்தில் வாழ்ந்து வரும் எனதருமை உடன் பிறப்புக்களே!

படித்தீரா தியாக தீபத்தை?

தியாகம் ... தியாகம் என யார் யாரோ எது எதற்கெல்லாமோ சொல்கின்றார்களே இப்போது சொல்லுங்கள். எது தியாகம். யார் தியாகி?

கொண்ட கொள்கைக்காக உடல் பொருள் ஆவி அனைத்தையும் கொட்டிக் கொடுத்த கொள்கை மறவர் யார், யார்?

நம்மிடத்தில் இத்தகு உண்மை தியாகிகள் இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் ஒருவர் மட்டுமல்ல, அவர் போன்ற ஆயிரமாயிரம் பேர்களின் தியாக வரலாறு நமக்குச் சொந்தமானது.

அறியாதவர்களுக்கு அறிவித்துவிடு இதனை.

## 'குர்ஆன் படைப்பன்று' எனும் கொள்கை குன்றென உயர்ந்தது

இப்படி அன்று ஆயிரமாயிரம் கொள்கைத் தங்கங்கள் பட்டம், பதவி, பவிசு போன்ற உலகாயுத பலன்கள் ஏதுக்கோ அல்லாமல் முழுக்க முழுக்க கொள்கையினை நிலை நாட்டுவதற்காகவே தியாகம் செய்தார்கள்.

அதன் விளைவால்,

'குர்ஆன் படைப்புத்தான்' என்ற கோணல் கொள்கை உருத்தெரியாமல் சிதைந்து போயிற்று.

அந்தக் கதைக்குதவாக் கொள்கையில் ஊன்றி நின்ற கோமாளிகளான முஃதஜிலாக்கள் அடிச்சுவடு கூட இல்லாமல் முற்றாக ஒழிந்து போயினர்.

'குர்ஆன் படைப்பன்று' என்ற உண்மைக் கொள்கை அர்த்தமுள்ள கொள்கை - அழுத்தமுள்ள கொள்கை இன்று எதிர்ப்பார் எவருமின்றி ஜே . ஜே என உலகம் தழுவிய கொள்கையாக குன்றென உயர்ந்து நிற்கின்றது.

உடல் பொருள் உயிரையெல்லாம் அதற்காக தியாகம் செய்த உத்தமர்களான ஹஜ்ரத் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்) அவர்களின் புகழ், புகழான - புகழாக நிலைத்து நின்று வருகின்றது.

அந்தக் கொள்கையினைச் சார்ந்து நின்ற சத்திய சுன்னத் வல்ஜமா அத் இயக்கம் இன்று உலகம் தழுவிய பேரியக்கமாக - உயிரோட்டமுள்ள சீர் இயக்கமாக - கார்

இந்தப் பார் உள்ளளவும், கடல்நீர் உள்ளளவும் பின் பற்றியொழுகத்தக்க நேர் இயக்கமாக பரிணாமம் பெற்று பிரகாசிக்கின்றது.

அல்லவா? அல்ஹம்துலில்லாஹ்,

'படைப்பு' என்று சொல்ல முடியாத - படைத்த பரமனின் திருவாக்காகத் திகழக்கூடிய திருக்குர்ஆன், தன்னைப்பற்றி தானே பல வகையில் போற்றிப் புகழ்ந்து கூறிக் கொண்டிருக்கும் பாங்கு,படிப்போரை மெய்சிலிர்க்கச் செய்யும் வகையில் அமைந்துள்ளது. ஆகவே அவைகளில் சிலவற்றை இன்று தருகின்றேன். உண்டு மகிழுங்கள்.

## மதி நிறைந்த மறை

முற்றிலும் ஞானம் நிறைந்த இந்தக் குர்ஆனின் மீது சத்தியமாக.

(குர்: 36 ; 2 )

(நபியே, முஹம்மதே ! ) நாம் உம்மீது ஓதிய இவை (இறைவனுடைய) வசனங்களாகவும், ஞான உபதேசங்க ளாகவும் இருக்கின்றன.

(குர்: 3 ; 58)

## ஆராய்ச்சிக்குரிய அருள் வேதம்

இந்த குர்ஆனை அவர்கள் ஆழ்ந்து கவனிக்க வேண்டாமா? இஃது அல்லாஹ் அல்லாதவரிடமிருந்து

வந்திருந்தால், இதில் அநேக தவறுகளையும்) முரண்பாடு களையு(ம்) அவர்கள் கண்டு பிடித்திருப்பார்கள்.

(குர் : 4 ; 82 )

அவர்கள் இந்தக் குர்ஆனை ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? அல்லது, (அவர்களுடைய) இருதயங்கள் மீது தாளிடப்பட்டு விட்டதா?

(குர் : 4 ; 24)

## அருள்மறை அருளப்பட்டதின் காரணியம்

அதுமிக்க உறுதியானது. அல்லாஹ்வுடைய கடின மான வேதனையைப் பற்றி (நிராகரிப்போருக்கு) அச்ச மூட்டி எச்சரிக்கை செய்வதற்காகவும், எவர்கள் அதனை விசுவாசங்கொண்டு அதில் கூறியவாறு நற்கருமங்கள் செய்கிறார்களோ அவர்களுக்கு அழகான நற்கூலியாகிய சுவனபதி நிச்சயமாக உண்டென்று நன்மாராயம் கூறுவதற் காகவும் (இவ்வேதத்தினை இறக்கி வைத்தான்.)

(குர் : 18 ; 2 )

தொ ... ஹா. (நபியே, முஹம்மதே! இறைவனுக்கு) அஞ்சக்கூடியவர்களுக்கு ஒரு நல்லுபதேசமாகவே இவ் வேதத்தை அருள் செய்தோமே அன்றி) துன்பப்படுவதற் காக இந்தக் குர்ஆனை நாம் உம்மீது அருள் செய்ய வில்லை.

(குர் : 20 ; 2-3)

(நபியே, முஹம்மதே!) நிச்சயமாக நாம், மனிதர்களு(டைய நன்மை)க்காகவே முற்றிலும் உண்மையைக் கொண்டுள்ள இவ்வேதத்தை உம்மீது அருளினோம். ஆகவே, எவன் (அதனைப்) பின்பற்றி நடக்கின்றானோ அவனுக்கே அது நன்று; எவன் (அதிலிருந்து) வழி தப்பி விடுகின்றானோ அது அவனுக்கே தீங்காக முடியும் (நபியே!) நீர் அவர்களை (இஸ்லாத்தில் இணைந்திருக்கும் படி நிர்பந்தித்து)க் காப்போரல்ல

(குர் : 39; 41)

## முந்திய வேதங்களை உண்மைப் படுத்தும் முத்தான வேதம்

''அல்லாஹ் அருளிய (இந்த குர்ஆன் வேதத்)தை நீங்கள் விசுவாசங் கொள்ளுங்கள்'' என அ(ந்த யூத, கிருத்து)வர்களுக்குக் கூறப்பட்டால், ''எங்கள் (நபிகளின்) மீது அருளப் பெற்றவைகளை (மாத்திரம் தான்) விசுவாசிப்போம்' எனக் கூறி அவைகளைத் தவிர இ(ந்த சுத்த சத்திய சம்பூரண வேதத்)தை நிராகரித்து விடுகின்றார்கள். ஆனால் இதுவோ அவர்களிடமுள்ள தவ்றாத் வேதத்)தை மெய்யாக்கி வைக்கிற உண்மையாக இருக்கிறது. (நபியே!) அவர்களை நோக்கி) நீர் கேளும் (உங்கள் வேதத்தையே) மெய்யாக நீங்கள் விசுவாசித்தவர்களாக இருந்தால் (உங்களில் தோன்றிய) அல்லாஹ்வுடைய நபிமார்களை இதற்கு முன், நீங்கள் ஏன் கொலை செய்தீர்கள்?'' (என்று)

(குர் : 2; 91)

வேதங் கொடுக்கப்பட்டவர் (களான யூத, கிருத்துவர்) களே! உங்களிடமுள்ள வேதத்தை உண்மைப் படுத்துகின்ற, நாம் அருளிய (குர் ஆன் எனும்) இவ்வேதத்தை, விசுவாசங் கொள்ளுங்கள். இன்றேல் (அவர்களை) முகங்களைமாற்றி, அவைகளைப் பின்புறமாகத் திருப்பி விடுவோம். அல்லது, (சனிக்கிழமையில் வரம்பு மீறியோரான) 'அஸ்ஹாபுஸ்ஸப்தை' நாம் சபித்த பிரகாரம், அவர்களையும் நாம் சபித்து விடுவோம்! அல்லாஹ்வுடைய கட்டளை நடை பெற்றே தீரும்!

(குர் ஆன் : 4; 47)

## உவமைகள் நிறைந்த உயர்வேதம்

இந்த குர்ஆனில், சகல உதாரணங்களையும் மனிதர்களுக்கு நாம் (திரும்பத் திரும்ப) விவரித்துக் கூறியிருக்கிறோம். எனினும் மனிதர்களில் பெரும்பாலோர் இதனை நிராகரிக்காது இருக்கவில்லை.

மனிதர்களுக்கு இந்தக் குர்ஆனில் ஒவ்வோர் உதாரணத்தையும் விவரித்திருக்கிறோம். எனினும் மனிதனோ அதிகமாக (வீண்) தர்க்கம் செய்வோனாகவே இருக்கிறான்.

(குர் : 18; 54)

## உபாரிவேதம் கூறிநர் நபாகிந உவமைகள்

(நபியே !) அல்லாஹ்வுடைய பாதையில் தங்களுடைய பொருளைச் செலவு (தர்மம்) செய்கின்றவர்களுடைய (அந்தப் பொருளின்) உதாரணம், ஒரு வித்தைப் போன்று இருக்கிறது. அ(ந்தவித்)து ஏழு கதிர்களைத் தந்தது. ஒவ்வொரு கதிரிலும் நூறு வித்துக்கள் ! (ஆக அந்த ஏழு நூறு வித்துக்கள் ஒரு வித்திலிருந்து உற்பத்தியாயின) அல்லாஹ், தான் விரும்பியவர்களுக்கு (இதைப் பின்னும்) இரட்டிப்பாக்கு கின்றான். ஏனெனில் அல்லாஹ் (கொடையில்) மிக்க விசாலமானவனும் அறிபவனுமாக இருக்கின்றான்.

(குர் : 2; 261)

விசுவாசிகளே! அல்லாஹ்வையும் இறுதி நாளையும் விசுவாசங் கொள்ளாது, (தான் தர்மவான் என்பதைப் பிற) மனிதர்களுக்கு அறிவிக்கும் பொருட்டுத் தன் பொருளைச் செலவு செய்து (வீணாக்கி) விட்டவனைப் போல நீங்கள் உங்களுடைய தானங்களை(ப் பெற்ற வனுக்கு) இகழ்ச்சியையும் துன்பத்தையும் (செய்வது) கொண்டு (அதன் பலனை) வீணாக்கிவிடாதீர்கள். அவனுடைய உதாரணம், ஒரு வழுக்கைப் பாறையைப் போன்றிருக்கின்றது. அதன்மீது மண் படிந்தது. எனினும், ஒரு பெரும் மழை பொழிந்து அதை (க் கழுவி) வெறும் பாறையாக்கி விட்டது. இவ்வாறே, அவன் செய்த தானத்தை அவனுடைய பெருமை அழித்து விடும்) ஆகவே, அவர்கள் (தானதர்மம்) செய்ததிலிருந்து

யாதொரு பலனையும் (மறுமையில்) அடைய மாட்டார்கள். மேலும், அல்லாஹ் (தன்னை) நிராகரிக்கும் மக்களை, (அவர்களின் தீச்செயல்களின் காரணமாக) நேரான வழியில் செலுத்தமாட்டான்.

(குர்ஆன் : 2; 264)

## தெளிவான வேதம்

நம்முடைய (தூதராகிய அவருக்கு நாம் கவிதை [இயற்றக்] கற்றுக் கொடுக்கவில்லை. [ஏனெனில்] அது அவருக்குத் தகுமானதல்ல. [அவரின் மீது அருளிய குர்ஆன் எனும் வேதமாகிய] இது நல்லுபதேசமும், [நன்மை தீமைகளை] தெளிவாக்கக் கூடிய குர்ஆனுமேயன்றி வேறன்று.

[அன்றி இது] உயிரோடிருப்பவர்களுக்கு அச்சமூட்டி எச்சரிக்கை செய்து (மரித்தோர் போன்ற) நிராகரிப்போர் மீது (தண்டனையைப் பற்றிய) வாக்கை உறுதிப்படுத்துகின்றது,

(குர் : 36; 69 - 70)

## ஒப்பில்லா மறையை ஓதும் முறை

(நபியே! ஜிப்ராயீல் வஹீ மூலம் ஓதிக் காண்பிக்கும் வசனங்கள் தவறி விடுமோ என்று பயந்து அவர் ஓதி

முடிப்பதற்கு முன்னர்] நீர் அவசரப்பட்டு அதனை ஓத உம்முடைய நாவை அசைக்காதீர். ஏனென்றால் அதனை ஒன்று சேர்த்து (நீர்) ஓதும்படி செய்வது நிச்சயமாக நம்மீதுள்ள கடமையாகும். ஆகவே, (ஜிப்ரயீல் மூலம்) அதனை நாம் (உமக்கு) ஓதிக் காண்பித்தால் [அவர் ஓதி முடிந்த பின்னர்] அவ்வாறே அதனை நீர் பின் தொடர்ந்து ஓதும். பின்னர், அதனை விவரித்துக் கூறுவதும் நம்மீதுள்ள கடமையாகும்.

[குர் : 75; 16 - 19]

[நபியே! வணக்கத்திற்காக நீர் இரவில் ஓதுக்கும் நேரத்தில் பாதி [நேரம்], அதில் நீர் சிறிது குறைத்துக் கொண்டு; அல்லது, அதில் சிறிது கூட்டியும் கொள்ளலாம். அங்ஙனம் கூட்டிக் கொள்ளும் நேரத்தில்] இந்தக் குர்ஆனை நன்கு திருத்தமாக ஓதும்.

[குர் : 73; 4]

## மா மறையின் மகத்துவம்

(நந் நபியே!) யாதொரு மலையின் மீது நாம் இந்தக் குர்ஆனை இறக்கி வைத்தால், அது அல்லாஹ்வின் பயத்தால் நடுங்கி வெடித்துப் பிளந்து போனதை நிச்சயமாக நீர் கண்டிருப்பீர். மனிதர்கள் உற்றுணர்ந்து பார்க்கும் பொருட்டு இவ்வுதாரணங்களை நாம் கூறுகின்றோம்.

(குர் : 59; 21)

## மா மறைக்குரிய மரியாதை

(நபியே!) நாம் வேதங்கொடுத்தவர்களில் எவர்கள் அதை ஓதவேண்டிய கிரமப்படி ஓதி அறிந்து (ஒழுகு) கிறார்களோ அவர்கள் (கடைசி வேதமான) இதனையும் (அவசியம்) விசுவாசிப்பார்கள். ஆனால், (அவர்களில்) எவரேனும் இதனை நிராகரித்தால், அவர்கள் நிச்சய மாக நஷ்டமடைந்தவர்களே!

(குர் : 2; 121)

(மனிதர்களே !) திருக்குர்ஆன் ஓதப்பெற்றால், வாய் பொத்தி, செவிதாழ்த்தி அதனைக் கேளுங்கள்; (அதனால்) நீங்கள் (இறைவனின்) அருளையடையலாம்.

(குர் : 7; 204)

(உளூ என்னும் அங்க சுத்தி செய்து - சிறு தொடக்கு பெருந் தொடக்குகளை விட்டும் சுத்தமாக ஆகிக் கொண்ட) பரிசுத்தவான்களைத் தவிர, (அசுத்தவான்கள் குர்ஆன் என்னும் வேதமான) இதனைத் தொட (க்கூடக்) கூடாது.

(குர் : 56; 79)

## ஞான மறை

காலத்தால், கருத்து மாற்றத்தால், காலத்தைக் கப்பியுள்ள அழிவு சக்தியின் சீற்றத்தால் எல்லாம்

வெல்லவோ மெல்லவோ முடியாத ஞானக்களஞ்சியமான திருகுர்ஆன்;

வசன வளமுள்ள வாக்குகளாக மிளிர்வதோடு—

செய்யுள் தொடையழகு மிக்க பாக்களாகவும் பரிணமிப்பதால் அதனை 'மோனை மறை' என்று அழைப்பதும் மிக மிகப் பொருந்தவே செய்யும்.

இத்தகு மோனைமறை மகிமைகளை மனிதசக்திகள் அனைத்தும் ஒன்றிணைந்து முயன்றாலும் மட்டுப்படுத்திக் காட்ட முடியாதுதான்.

ஆனாலும்.

கருத்து வளமும், சொல்வளமும் குறையறப் பெற்றுள்ள நம்மின் கவிக்கோ பூசிரி (ரஹ்) அவர்கள் தமது திறமை முழுவதையும் ஒன்று திரட்டி. மோனைமறை மகிமைகளை தேனாகப் பாடுகின்றார்.

விருப்புடன் அவர்படைக்கும் அந்தத் தேன் விருந்தை கருத்தூன்றி பருகிக் களிப்போம் கவின்மிகு பேற்றினை பெற்றிடுவோம் வாரீர்.

دَعْنِيْ وَوَصْفِيَ اٰيَاتٍ لَّهٗ ظَهَرَتْ
ظُهُوْرَ نَارِ الْقِرٰى لَيْلًا عَلٰى عَلَمٍ ﴿٩٩﴾

**தஃனீ வவஸ்fிய ஆயாத்தி(ன்)**
**- ல்லஹு ழுஹறத்**
**ழுஹுற நாரில் கிரா லைலன் அலா -**
**- அலமி**

இரவு நேரத்தில் நீண்டுயர்ந்த மலை மீது விருந்துக் (அழைப்பிற்) கான தீ மூட்டம் ஒளிர் வருதைப்போல

[உலகின் கண் இன்றும் இலங்கிக் கொண்டிருக்கும் நபிகளார் - ஸல் - அவர்களின்] அற்புதங்களை [வகை வகையாய்] வர்ணிக்க என்னை (இஷ்டம் போல] விட்டு விடு.

இதனை -

இரவில்மலை மேல் விருந்தின் எரியெழுந்து -
தோன்றுதல் -

புரையில்நபிதோற்றுவித்த புதுமை சொல்ல -
- விட்டிடுவாய் !

என மறைக்காயர் பாடுகிறார்.

க - ரை : குன்றிலிட்ட தீபம் போல பெருமானார் அவர்களின் மூலம் விளைந்த புதுமைகள் பிரசித்தமானவை மறுக்கவொன்னா ஆதாரமுள்ளவை. ஆகவே தங்கு தடையின்றி அப்புதுமைகளை சொல்லிக் காட்டிட எம்மை விட்டுவிடு.

## உலமாக்களைச் சீண்டும் அதிமேதாவிகள் (?)

வி - ரை : பெருமானார் அவர்களின் மூலம் விளைந்த புதுமைகளை - முஃஜிஸாக்களை - சொல்லிக் காட்டினால் அப்படிச் சொல்லிக் காட்டும் உலமாக்களைப் பற்றி - ''நேரம் காலம் புரியாமல், இடம் - பொருள் - ஏவல் தெரியாமல் பொது இடங்களில் எல்லாம் இந்த முஃஜிசாக்களை சொல்லிக் காட்டுகின்றார்களே ! பத்தாம் பசலிகள்! பழமைவாதிகள்'' என்று முணு முணுப்பதோடு, அந்த உத்தம உலமாக்களிடம் ''இந்தாங்க ஹஜ்ரத் ! இப்படிப் பட்ட முஃஜிசாக்களையெல்லாம் மிஹ்ராபோடு வைத்துக் கொள்ளுங்கள். பொது மேடைகளில் அரசியலும் இஸ்லாமும்'' என்பது பற்றியோ, ''விஞ்ஞானமும் இஸ்லாமும்'' என்பது பற்றியோ இன்றைய காலக்கட்டத் திற்குத் தகுந்தாற் போல பேசத் தெரிந்தால் பேசுங்கள். இல்லாவிட்டால் கிராஅத், துஆ ஓதுவதோடு நின்று கொள்ளுங்கள்' என (அந்த ஆலிம் பெருந்தகைகளுக்கு) உபதேசம் செய்திடும் போக்கினை இன்று கண்டும், கேட்டும் வருகின்றோம், அல்லவா?

ஆலிம் பெருந்தகைகளுக்கு புத்தி சொல்லும் அந்த அதி மேதாவிகளிடம் ''பெரியீர்! உலமாக்களை ஏமப்பா தடுக்கின்றீர்; மடக்கின்றீர்?' எனக் கேட்டால்.

'மாற்று மத அன்பர்களும், பகுத்தறிவுப் பாசறையினரும் வந்து கூடக்கூடிய பொது மேடையில் ஹிந்து புராணங்களில் காணப்படுவதைப் போன்ற இந்த முஃஜிசாக்களைச் சொல்லப்பட்டால் சொற்பொழிவு கேட்க வந்துள்ள அந்த மாற்று மத 'அன்பர்கள் - பகுத்தறிவுக் கட்சியைச் சார்ந்தவர்கள் - நம் மார்க்கத்தை 'ப்பூ... இவ்வளவுதானா' மற்ற மதங்களும் இந்த இஸ்லாமும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகள் தானா?...'' என்று நையாண்டி செய்திட மாட்டார்களா? இதுவெல்லாம் கிணற்றுத் தவளைகளான இந்த ஆலிம்சாக்களுக்கு தெரியுமா? சொன்னால் புரியுமா? ஆகவேதான் அவர்களிடம், நயமாகப் பேசி அவைகளை - முஃஜிசாக்களை இங்கே சொல்ல வேண்டாம்' எனக் கேட்டுக் கொண்டோம் என மிகச் சாமர்த்தியமாகப் பதில் சொல்லுவார்கள்.

ஆனால், உண்மை நிலையென்ன மாற்றார்களும், 'பகுத்தறிவாளன்' என தன்னைச் சொல்லுவதில் பூரிப் படைகின்றார்களே அந்த நண்பர்களும் நமது நபிகளார் அவர்களின் முஃஜிசாக்களைக் கண்டனமா செய்கின்றார் கள்? இல்லை, இல்லவே இல்லை. மாறாக;

இன்றைய விஞ்ஞானத்தையும் நபிகளாரின் முஃஜிசாக் களையும் ஒப்புநோக்கி ''இன்றைய விஞ்ஞானம் நபிக

ளாரின் முஃஜிசாக்களில் இருந்துதான் பிறந்தது' என்று துணிந்து கூறுமளவிற்கு அந்த மாற்றுமத அன்பர்களும்' பகுத்தறிவாள நண்பர்களும் இன்றைக்கு பக்குவமடைந் துள்ளார்கள்.

அப்படியென்றால்; சமுதாயத்தில் பிரமுக அந்தஸ்துப் பெற்றுள்ள அந்த மேதாவிகள் உலமாக்களை ஏன் தடுக்க வேண்டுமெனச் சிந்திக்கும் போதுதான் அந்த அதி மேதாவி களின்(?) வண்டவாளம் புரியவரும். அவர்களது அந்த வண்டவாளமென்ன வென்றால்.

நபிகளாரின் வாழ்க்கையில் - வாய்மை நிறைந்த வாக்குகளில் - குறை காணும் - குறைமதி கொண்ட வஹ்ஹாபிகளுக்குத் துணை நிற்பவர்கள் அந்தப் பிரமுகர் கள். அப்படிப்பட்டவர்கள் தங்களின் அந்தரங்கத்தை வெளிக் காட்டிக் கொண்டால் சமுதாயம் அவர்களை இனம் கண்டு கொண்டு பிரமுக அந்தஸ்தில் இருந்த அவர்களை தூக்கி எறிந்து விடுமல்லவா? ஆகவே தங்களை நேரடி யாக காட்டிக் கொள்ள விரும்பாத அந்த வேசதாரிகள் மாற்றுமத அன்பர்களையும், பகுத்தறிவாள நண்பர்களை யும் தங்களின் வெளிவேஷத்திற்குத் திரைபாகக் காட்டி சமுதாயத்தின் கவனத்திலிருந்து தப்பித்துக் கொள்வதோடு உத்தம உலமாக்களை மட்டம் தட்டும் வேலையினையும் விறு விறுப்பாகவும் செய்து வருகின்றனர்; இன்று.

# உண்மையை குன்றேறி முழங்கிய ஆலிம் பெருந்தகை

அன்றும் முஃதஜிலா எனும் பிரிவார் சீர்திருத்தவாதிகள் எனும் போர்வையில் நபிகளார் அவர்களின் முஃஜிசாக்களை எதிர்த்துக் கொண்டிருந்தனர். அந்தக் கால கட்டத்தில்தான் இமாம் பூசிரி அவர்கள் 'புதுமைப் பூக்கள்' எனும் தலைப்பில் பெருமானார் அவர்களின் புது மெருகுடன் கடைபரப்புகின்றார் அப்போது அவரில் ஒளிந்து கொண்டிருந்த கள்ள மனம் குறுக்கிட்டு

என்ன புலவரே! இன்றைக்கு சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்றுள்ள பிரமுகர்கள் யார் தெரியுமா? முஃஜிசாக்களை யெல்லாம் மண் தோண்டிப் புதைக்க வேண்டும்' என்ற கொள்கை கொண்ட முஃதஜிலாக்கள் தான் சமுதாயத்தில் கொடிகட்டிப் பறக்கும் பிரமுகர்கள் என்பதை மறந்து விட்டீரா? நிலைமை இப்படி இருக்க மிகப் பெரிய முயற்சியுடன் யாத்துவரும் உம்மின் இந்த புர்தாவில் இந்த முஃஜிசாப் பகுதிகளெல்லாம் இடம் பெற்றால் இன்றைய சமுதாயத்தில் அது அரங்கேறுமா? கொஞ்சமேனும் சிந்தனையில்லாமல் உண்மையை சொல்லிட வேண்டுமென்ற ஆர்வத்தால் உம்மின் இந்த முயற்சியை வீணாக்கி விடாதே! காலப்போக்கை அனுசரித்து...மேல் மட்டத்திலுள்ளவர்களின் நோக்கை கவனத்தில் கொண்டு - நீயும் கொஞ்சம் பாலிசாக வாழப் பழகிக் கொள்ளும். இந்த முஃஜிசாக்களையெல்லாம்

மூட்டை கட்டி வைத்து விட்டு மற்றவைகளைப் பற்றி பாடும்'' என (அந்த கள்ள மனம் இமாம் பூசிரி அவர்களுக்கு) சபலத்தை ஏற்படுத்தியது.

அவருக்கு ஏற்பட்ட அந்த சபலத்தை எச்சில்-புத்தியை சம்மட்டி கொண்டு அடித்து சாகடிக்கும் முறையிலேயே இந்த 88-ஆம் கண்ணியை யாத்துப் பாடுகின்றார் அவர்

அதாவது;

எமது எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் மூலம் விளைந்த முஃஜிசாக்கள் கண் கட்டி வித்தை போன்ற மாயாஜாலங்களன்று! மாறாக குன்றிலிட்ட விளக்கு போன்றவைகளாகும். பொது விருந்திற்கு அடையாளமாக அரபிகள் தங்களின் அருகே உள்ள மலைக் குன்றில் தீபம் கொளுத்துவர். இதனைக் காணும் மற்றவர் ஆங்கே வந்து குழுமுவர். தீபம் கொழுந்து விட்டெரியும் அக்குன்றினருகே நிறுத்தப்பட்டுள்ள விருந்து படைப்போனின் பிரதிநிதியின் மூலம் 'இன்ன தெருவிலுள்ள இன்னார் மகன் இன்னான் வீட்டில் விருந்து 'படைக்கப்படுகின்றது' என்ற விபரத்தைத் தெரிந்து கொண்டு குறிப்பிட்ட அவ்வீட்டிற்குச் சென்று விருந்துண்டு மகிழ்வர் - அதுபோல தவ்ஹீது-ஏகத்துவ- விருந்திற்கு அகிலத்து மக்கள் அனைவரையும் அறைகூவி அழைக்கும் அடையாளமாக ஆதாரமாக - தத்துவம் பல நிறைந்த வித்தாரமாக நிகழ்ந்து கொண்டிருப்பவை அந்த முஃஜிசாக்கள். அத்தகு அற்புதமான ஆதாரங்களை சொல்லிக் காட்டுவதால் என்னுடைய இந்த

புர்தா காவியம் எடுபடாமல் போய் விடுமென்றால் அதைப் பற்றி எனக்கு இம்மியும் கவலையில்லை.

ஆனால், முஃஜிசாக்களைப் பற்றி முகம் சுழிக்கக் கூடிய இந்த முஃதஜிலாப் பிரிவாரின் கையில் என் புர்தா காவியத்தையோ அல்லது மற்றவற்றையோ உயர்த்தும் ஆற்றலை அல்லது தாழ்த்தும் ஆற்றலை கொடுக்கப் பட்டில்லை.

அன்றி; இந்த முஃதஜிலாக்களின் முறைப்பைப் பயந்து சொல்லித்தீர வேண்டிய உண்மைகளைச் சொல்லாமல் இரட்டிப்புச் செய்வது கொசுவிற்குப் பயந்து கொண்டு கோட்டைக் கொத்தளங்களைக் காலி செய்து விட்டுப் பரதேசம் போவதற்குச் சமம்' எனக் கருதுகின்றேன். எனவே இத்தகு சலனங்களை சல சலப்புகளை என்னில் உண்டாக்கி என்னை தர்மசங்கடத்திற்குள்ளாக்கி விட முடியாது உன்னால். ஆகவே; என்னில் ஒழிந்திருந்து சமயம் பார்த்துக் காலை வாரிவிட முயலும் கள்ளமனமே! உன் பாட்சா என்னிடம் பலிக்காது. ஆகவே வீண் முயற்சியில் ஈடுபடாதே! என்னைத் தடுக்காதே! என்னை என் போக்கில் - என் ஆசை தீர, நபிகளார் (ஸல்) அவர்களின் முஃஜிசாக்களை முத்தாரமாகத் தொடுக்க என்னை விட்டுவிடு, என்கின்றார் ஆலிம் பெருந்தகையான பூசிரி.

சுப்ஹானல்லாஹ்! என்ன அழகான கொள்கை முழக்கம் பார்த்தீர்களா!

فَالدُّرُّ يَزْدَادُ حُسْنًا وَهُوَ مُنْتَظِمٌ
وَلَيْسَ يَنْقُصُ قَدْرًا غَيْرَ مُنْتَظِمِ ﴿٨٩﴾

**ஃபத்துர்ருயஸ்தாது ஹுஸ் -**
**ன(ன்) வஹுவ முன்தழிமுன்**
**வலைஸயன் குஸு கத்ரன் கைர -**
**- முன்தழிமி**

மாலையாய்த் தொடுக்கப்பட்ட முத்துக்கள் தனித் தன்மை வாய்ந்து அழகாகத் தென்படும் [தான் என்றாலும்] அது தொடுக்கப்படாமல் [தனித் தனி முத்துக்களாக] இருந்திடும்போது மதிப்பில் குறைவதில்லை.

இதனை -

தாவடமாய்க்கோத்த முத்துத்தனியழகு -
- பூண்டிலங்கும்;
கோவையுறாக்காலும் அதுகுறைவதில்லை
- தன்மதிப்பே !

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : தனித் தனியே - ஒற்றையாக இருக்கும் போதே - நன் மதிப்பையும் - மவுசையும் - மரியாதையினையும் பெற்றிலங்கும் : முஃஜிசாக்களான அந்த முத்துக்களின்

பெருமை அதிகரிக்கும் பொருட்டே பல முஃஜிசாக்களை இணைத்து முஃஜிசா மாலையாக அவைகளைத் தொடுத்துள்ளேன்; நான்.

வி-ரை : கள்ள மனதின் சலனத்தால் சபலத்திற்குள்ளான கவிக்கோ பூசிரி தனது நல்ல மனதிற்கு ஒரு சமாதானத்தை இங்கே சொல்லிக் காட்டுகின்றார்.

## மக்கள் மன்றத்தின் மரியாதை

நபிகளார் (ஸல்) அவர்களின் மூலம் விளைந்த தனித்தனி முஃஜிசாக்களுக்கே மக்கள் மன்றத்தில் நன்மதிப்பும் - மவுசும் - மரியாதையும் இருந்து கொண்டிருக்கின்றது. இந்நிலையில் பல்வேறு முஃஜிசாக்களை எண்பித்துக் காட்டும் முஃஜிசா மாலையாக நான் இந்த புர்தாவிலுள்ள புதுமைப் பூக்கள் எனும் பகுதியை யாத்துள்ளேன். ஆகவே மக்கள் மன்றத்தில் இதற்கு மிகப்பெரிய வரவேற்பும் - கிராக்கியும் - ஏற்பட்டே தீரும். ஆகவே என் இன்பத்திலும் துன்பத்திலும் பங்கு கொள்ளும் எனது நல்ல மனமே அஞ்சற்க; என்கின்றார்

அவரின் நல்ல மனதிற்கு மட்டுமா இந்தச் சமாதானம்?

அல்ல, அல்ல.

கள்ள மனதின் சலனத்தால், சபலத்திற்குள்ளாகி நல்ல காரியங்களைச் செய்ய தயங்கிக் கொண்டுள்ளார்களே சில

அப்பாவிகள் அவர்கள் அனைவருக்குமே இது பொருந்தும் அல்லவா?

فَمَا تَطَاوَلُ آمَالُ الْمَدِيحِ إِلَى
مَا فِيهِ مِنْ كَرَمِ الْأَخْلَاقِ وَالشِّيَمِ ﴿٩٠﴾

ஃபமா தத்தாவலு ஆமாலியல் -
- மதீஹி இலா
மா ஃபீஹி மின் கராமில் அக்லாஃகி -
- வஷ்ஷியமி

[அதுபோல] நபிகளார் அவாகளில் [குடிகொண்டு] உள்ள நற்குணங்கள். நல்லியல்பு [மற்ற குணப் பண்புக]ளின் எல்லைக்கே சென்று புகழ்பாடிட சிந்தனையின் நீளம் போதவில்லையே !

இதனை -

நாயகர் தம் நற்குணங்கள் நல்லியல்பின்
எல்லைவரை
போய், அவரைப்போற்றுதற்குப் புலன் ஆய்வு
நீண்டிலதே!

என மறைக்காயர் பாடுகின்றார்.

## கள்ள மனத்திற்குச் சமாதானம்

க - ரை : பெருமானார் நற்குணங்களின் பெருமை களை - மவுசுகளை - கூறி முடிக்க எனக்கு ஆயுளும் போதாது. ஆய்வும் பத்தாது. ஆகவே அற்புதங்களில் சிலவற்றைக் கூறி நற்குணங்களைக் கூறமுடியாததால் ஏற்பட்ட ஏமாற்றத்தை ஈடு செய்து கொள்கின்றேன்.

வி - ரை : இந்தக் கண்ணியில் தன் கள்ள மனதால் ஏற்பட்டுள்ள சபலத்தைப் போக்கும் வண்ணம் தனது நல்ல மனதிற்கு மற்றுமொரு சமாதானத்தைச் சொல்லிக் காட்டுகின்றார் புலவர் பூசரி

அதாவது;

'புதுமைப் பூக்கள்' எனும் தலைப்பிற்கு முன்பு வரை 'பிறப்பின் சிறப்புப் பகுதியிலும் இன்னும் அதற்கு முண்ணுள்ள பகுதிகளிலும் நபிகள் நாதரின் அருங்குணச் சிறப்புக்களை அழகுபட எடுத்துரைத்தேன்; நான் ஆனாலும் அண்ணல் நபியுல்லா அவர்களின் அழகு குணங்கள் எனும் பெருங்கடலின் ஒரு சொட்டு நீரளவா வது அவை தேறுமா என்றால் நிச்சயம் தேறாது. ஆனாலும் என் புலனாய்விற்கு முடிந்தது அவ் வளவுதான். ஆனாலும் நபிகளார் அவர்களின் நற்குணங் களை இன்னும் கொஞ்சம் விரிவாகச் சொல்லிட முடிய வில்லையே என்ற ஏமாற்றம் என்னை வாட்டி வதைக்கத்தான் செய்கின்றது

அந்த ஏமாற்றத்தை ஈடு செய்திடும் முறையிலேயே இங்கே நபிகளாரின் முஃஜிசாக்கள் சிலவற்றை எண்பித்துக் காட்டிட முயன்றுள்ளேன். ஆகவே மக்கள் மன்றத்தில் என் இந்த கருத்துக்கள் ஏற்கப்படுவதும் புறக்கணிக்கப் படுவதும் ஒருபுறமிருக்க, இந்த முஃஜிசாக்களைச் சொல் லிக் காட்டுவதால் என் ஆன்மாவிற்கு திருப்தி கிடைக் கின்றது. இந்த அளவு நன்மையாவது இதனால் கிடைப் பதால் நான் துணிந்து அவைகளைக் கூறிட முடிவு கட்டிவிட்டேன். நல்ல மனமே! இதைப் பெற்றிடு, எனச் சமாதானம் கூறிடுகின்றார்.

இப்படி கூறுவதின் மூலம்,

நல்லவை செய்வதால் வெளிப்படையான பலன் கிட்டாவிடினும் மறைமுகமான பலன் நிச்சயம் கிட்டும் ஆகவே நல்லவைகளை உடனுக்குடன் செயல் மேற் கொள்ள தயங்கிடாதே! மயங்கிடாதே! என நமக்கு புத்தி புகட்டுகின்றார்.



اٰيَاتُ حَقٍّ مِّنَ الرَّحْمٰنِ مُحْدَثَةٌ
قَدِيْمَةٌ صِفَةُ الْمَوْصُوْفِ بِالْقِدَمِ (91)

**ஆயாத்து ஹக்கின்(ம்)மினர் -**
**ரஹ்மானி முஹ்தஸதுன்**
**கதீமதுன் ஸிஃபதுல் மௌஸூஃபி -**
**- பில் கிதமி**

ரஹ்மானாகிய வல்ல அல்லாஹ்வின் வசனங்கள் (குர்ஆன் ஆயத்துகள்) புதியன தான் (ஆனால்; அதன் கருத்துக்களோ பழையனவாம். (காரணம்) குர்ஆன் வசனங்கள்) 'பூர்வீகம்' என வர்ணனை பெற்ற அல்லாஹ்வின் வசனங்களாம்.

*அத்தன் ரஹ்மான் திருவாக்கமைப்புப்*
*புதிதென்றாலும்,*
*நித்தன் 'இயல்போற், கருத்து நின் பழமை*
*யானதுவே!*

என மறைக்காயர் மணமாகப் பாடுகின்றார்.

## டிரேட்மார்க் பற்றிய விளக்கம்

**க - ரை :** கிருபை மிக்க இறைவனின் வசனங்களான குர்ஆன் ஷரீபின் அமைப்பு - எழுத்தமைப்பும் புதிது, என்றாலும், அவனுடைய கருத்தமைப்பு பழமையானது.

வி - ரை : இனிப்பு என்றால் சப்புக்கொட்டாத நாவுமுண்டோ? ஆனால் அந்த இனிப்பைக் கண்ணால் கண்டவர் எவர்?

'ஏன் கண்டதில்லை இதோ இருக்கின்றதே' என சர்க்கரையைக் காட்டக் கூடும். ஆனால் சர்க்கரை இனிப்பை உள்ளடக்கிக் கொண்டுள்ள ஒரு பொருளே தவிர சர்க்கரையைத்தான் இனிப்பு என்று எவரும் கூறிட முடியாது.

சர்க்கரைதான் இனிப்பு என்றால் சர்க்கரையில் மட்டும்தான் இனிப்பு இருந்திடவேண்டும். மற்ற பொருள் களில் இனிப்பு இருந்திடக் கூடாது. ஏனெனில் ஒரு விலாசத்தில் ஒரு ஸ்தாபனம்தான் இருந்திட முடியும் - ஒரே விலாசமுள்ள ஒரு பெயரில் ஒரு நபர்தான் இருந் திடமுடியும் - 'டிரேட் மார்க்' என்கின்றார்களே அது இந்த அடிப்படையில்தான் உருவாக்கப்பட்டுள்ளது.

சங்கு மார்க்லுங்கிகளை அறியாதார் நம்மில் எவரும் இருந்திட முடியாது. அல்லவா?

அந்த சங்கு மார்க் டிரேட் மார்க்கில் குறிப்பிட்ட அந்த ஒரு ஸ்தாபனம்தான் இருக்கின்றது. வேறு எவராவது 'சங்கு மார்க்' என்ற விலாசத்தில் லுங்கிகள் தயாரிக்க வோ விநியோகிக்கவோ முடியுமா?

آيَاتُ حَقٍّ مِنَ الرَّحْمٰنِ مُحْدَثَةٌ
قَدِيْمَةٌ صِفَةُ الْمَوْصُوْفِ بِالْقِدَمِ ﴿٩١﴾

**ஆயாத்து ஹக்கின்(ம்) மினர் -**
**ரஹ்மானி முஹ்தஸதுன்**
**கதீமதுன் ஸிஃபதுல் மௌஸூஃபி -**
**- பில் கிதமி**

ரஹ்மானாகிய வல்ல அல்லாஹ்வின் வசனங்கள் (குர்ஆன் ஆயத்துகள்) புதியன தான் (ஆனால்; அதன் கருத்துக்களோ பழையனவாம். (காரணம்) குர்ஆன் வசனங்கள்) 'பூர்வீகம்' என வர்ணனை பெற்ற அல்லாஹ்வின் வசனங்களாம்.

*அத்தன்ரஹ்மான் திருவாக்கமைப்புப்*
*புதிதென்றாலும்,*
*நித்தன் 'இயல்போற், கருத்து நின் பழமை*
*யானதுவே!*

என மறைக்காயர் மணமாகப் பாடுகின்றார்.

## டிரேட்மார்க் பற்றிய விளக்கம்

க-ரை : கிருபை மிக்க இறைவனின் வசனங்களான குர்ஆன் ஷரீபின் அமைப்பு - எழுத்தமைப்பும் புதிது, என்றாலும், அவனுடைய கருத்தமைப்பு பழமையானது.

ஆனால் மற்ற பொருளின் துணையுடன் மற்ற பொருள் களின் உருவில் அது வெளிப்படும். இப்படி சுய உருவின்றி மற்ற பொருளின் உதவியால் வெளிப்படும் தன்மைக்கு அரபு இலக்கியத்தில் 'அர்மு' என்பர்.

இதுபோல்தான் இறைவனுடைய திருவசனங்களுக்கு - குர்ஆன் ஷரீபிற்கு சுய உருவம் கிடையவே கிடையாது-

அல்லாஹ்வின் வசனங்களுக்கு மட்டும் தான் 'உருவமில்லை' என்று சொல்வதாக நினைத்து விடாதீர்கள் மனிதர்களின் பேச்சுகளுக்கும் தான் உருவமில்லை. ஆனால் இங்கு கலாமுல்லா - அல்லாஹ்வின் வசனிப்பு - பற்றிய பிரச்சினைகளை மட்டுமே கருவாகக் கொண்டு உள்ளதால் அல்லாஹ்வின் வசனங்கள் பற்றி மட்டும் விமரிசிக்கப்படுகின்றது.

உருவமில்லா அல்லாஹ்வின் வசனங்களும் உருவற்றவை என நாம் புரிந்து கொண்டதால் உருவமுள்ள நாம் உருவமில்லா அவனது வசனங்களை எப்படி விளங்கிக் கொள்வது? என்று சிந்திக்கும் போதுதான் சில உண்மைகள் புரிய வருகின்றது.

## ஒளிந்து கொண்டுள்ள இரண்டு சக்திகள்

நாம் நம்மின் எண்ணக்குவியல்களை - பேச்சுக்களை மற்றவர்களுக்குப் புரிய வைப்பதற்கும் மற்றவர்களின்

எண்ணக் குவியல்களையும் பேச்சுக்களையும் நாம் புரிந்து கொள்ளுவதற்கும் எழுத்துக்களைத்தானே கருவியாகப் பயன்படுத்துகின்றோம். அதுபோல அல்லாஹ்வின் வசனங்களை நாம் புரிந்து கொள்வதற்கும் அந்த எழுத்துக்களையே கருவியாகப் பயன்படுத்திட வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. ஆகவே அல்லாஹ்வின் வசனங்களை எழுத்துருவில் வடித்துக் கொடுக்கப்பட்டுள்ளது, இதில்;

அதாவது இன்றைக்கு காகிதங்களில், கருப்பு (அல்லது வேறு நிற) மைகளால் எழுதப்பட்டுள்ள குர்ஆன் ஷரீப் இருக்கின்றதே அதில்;

இரண்டு சக்திகள் ஒளிந்து கொண்டிருக்கின்றன. (1) அல்லாஹ்வின் வசனங்கள் என்ற உருவமில்லா சக்தி (2) எழுத்து என்ற உருவமுள்ள சக்தி இந்த இரண்டில்; முதலாவதான அல்லாஹ்வின் வசனங்களை பழமையானது எனவும், இரண்டாவதான எழுத்துக்களை புதியது எனவும் சுன்னத் வல் ஜமாஅத் இயக்கம் கூறுகின்றது.

எப்படி?'' என்பீர்?

அல்லாஹ் பழமையானவன். அவனுக்கு ஆதியோ அந்தமோ இல்லை ஆதலால் அல்லாஹ்வின் வசனங்களும் பழமையானது இதற்கும் ஆதியோ அந்தமோ இல்லவே இல்லை. ஆனால் எழுத்துக்கள் இருக்கின்றனவே, மனிதனால் மனிதனுக்காக மட்டிலும் உருவாக்கப்பட்டது. அன்றி மனித இனம் அழியும்போது அந்த

எழுத்து முறைகளும் அழிந்துவிடும் தன்மை வாய்ந்தது. ஆதலால் எழுத்துக்களால் அமைக்கப்பட்ட இந்தக் காகிதக் குர்ஆன் அழிந்துவிடும் தன்மை வாய்ந்தது'' என்போம். என்ன சரிதானே?

இந்த ஆழமான கருத்தினைத்தான் அருட்கவி பூசிரீ (ரஹ்) அவர்கள் இங்கே 91 - ஆம் கண்ணியில்;

அந்தன் ரஹ்மான் திருவாக்கமைப்பு (அதாவது காகிதக் குர்ஆன்) புதிதென்றாலும், நித்தன் இயல்போற் கருத்து (அதாவது) அல்லாஹ்வின் வசனங்கள்) நீள் பழமையானவை. (என்றுரைக்கின்றார்.)

---

لَمْ تَقْتَرِنْ بِزَمَانٍ وَهِيَ تُخْبِرُنَا
عَنِ الْمَعَادِ وَعَنْ عَادٍ وَعَنْ إِرَمِ ﴿٩٢﴾

**லம் தக்தரின்(ன்) பிஜமா**
**-னின்(வ்)-வஹிய துக்பிருனா**
**அனில்மஆதிவ அன் ஆதின்(வ்) வ**
**அன் இரமீ**

அந்த (குர்ஆன் ஷரீபின்) வசனங்கள் காலங்களின் கோலங்களுக்கு கட்டுப்பட்டவையன்று. இன்னும் அவை மறுமை வாழ்க்கை பற்றியும் 'ஆது' வர்க்கத்தார் பற்றியும் 'இரம்'வாசிகள் பற்றியும் நமக்கு செய்தி சொல்லிக் கொண்டே இருக்கின்றன.

---

இதனை,

காலவரம்பின்றி, இறம், ஆதுபழங்காதையுடன்

மேலுலகின் வாழ்க்கைபற்றி விரித்தவைகள் கூறிடுமே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : பழங்குடிகளின் வரலாறுகளை வழங்குவதோடு, வரவுள்ள மறுமை நாளின் வாழ்க்கை நிலைகளையும் விரித்து - விவரித்து - அந்தக் கோன்மறையில் கூறப்பட்டுள்ளது.

வி - ரை : மோனை மறையாம் குர்ஆன் ஷரீபின் மகிமைகளை கூறிக் காண்பிக்க முன் வந்த கவிமணி பூசிரி அவர்கள் முதலாவதாக இதற்கு முந்திய 91 - வது கண்ணியில்

''அது ஆதியந்தமில்லாப் பெருவேதமாகத் திகழ்வது மிகப்பெரிய மகிமையாகும்'' என எண்பித்துக் காட்டிய பின் இங்கே 92 - வது கண்ணியில்) பழங்குடிகளின் வரலாறுகளை அம்மாமறை விவரிப்பதோடு இனி நிகழ இருக்கும் மறுமை நாளின் வாழ்க்கை முறைகளை முன்னறிவிப்புச் செய்யும் முன்மறையாகவும் அது திகழ்ந்தது; வரலாற்றுப் பெட்டகமாகவும், தத்துவக்களஞ்சியமாகவும் இலங்குகின்றது. இது அம்மாமறைக்குரிய இரண்டாவது மகிமையாகும்'' என்பதை எண்பித்துக் காட்டுகின்றார்; அவர்.

# பழந்தமிழினர் வரலாறு

இரண்டாம் ஆதம் என்ற சிறப்பினைப் பெற்ற ஹஜ்ரத் நூஹ் (அலை) அவர்களின் நான்காம் தலைமுறையி லுதித்த ஆது என்பார் 1200 - வயது வரை உலகில் வாழ்ந்த மாப்பெரிய மனிதராவார். ஆயிரம் மங்கையர்க்கு கணவனாகத் திகழ்ந்த அந்த ஆது. தனது அந்த 1000 மனைவியர்களின் மூலம் 4000 ஆண் மக்களைப் பெற் றெடுத்தார். இத்தகு ஆது என்பவரின் சந்ததிகள் பிற் காலத்தில் பல்கிப் பெருகி இருந்தனர். அந்தச் சந்ததிகள் நீண்ட ஆயுளுடனும் நிறைந்த சௌபாக்கியங்களுடனும் திகழ்ந்த தங்களின் பாட்டன் ஆதுவை சிறப்பிக்கும் பொருட்டு தங்களின் குலக்கோத்திரங்களை 'ஆது' வர்க்கம் எனப்பெருமையாகப் பிரஸ்த்தாபித்தார்கள். நாளடைவில் அது வரலாற்றுப் பெயராகவும் ஏற்கப்பட்டு விட்டது.

அன்றி; இந்த ஆது வர்க்கத்தார் ஒரு பனையளவு உயரமும் அதற்கு ஈடு கொடுக்கும்படியான அகலமும் கொண்ட பெரும் படைப்பாகத் திகழ்ந்தார்கள். உருவத்தை மட்டுமல்லாது அவர்களுக்கு சௌபாக்கியங்களும் குறை யறக் கொடுக்கப்பட்டிருந்தன.

மலைகளைக் குடைந்து அம்மலைப் பொந்துகளை தங்கம் வெள்ளிகளாலும், வைர வைடூரியங்களாலும், முத்துமணிக் கலசங்களாலும் அலங்கரித்து அந்த முத்துமணி மண்டபங்களையே அம்மக்கள் தங்களின் மனைகளாகக் கொண்டு வாழ்ந்தார்களாம்.

இவ்வளவு உயர்ந்த வசதி வாய்ப்புகள் கிடைக்கப் பெற்றிருந்த அந்த ஆது வர்க்கத்தார் இவை அனைத்தையும் ஈந்து அவர்களைப் பரிபாலித்து வரும் இறைவனை நினைத்திட அவனுக்கு நன்றிக் கடன்களைச் செய்திட மறந்து விட்டார்கள். ஆகவே அவர்களுக்கு இறைவனையும் இறைக் கருணைகளையும் நினைவுறுத்தும் பொருட்டு அந்த வர்க்கத்திலேயே உதித்த ஹூது (அலை) அவர்களை நபியாக அனுப்பப்பட்டது.

அவர், தன் சமூக மக்களுக்கு அல்லாஹ்வைப் பற்றியும் அவனது ஆற்றலைப் பற்றியும் எடுத்துக் கூறி அத்தோடு ''நாம் எவ்வளவுதான் செல்வ செல்வாக்குகளுடன் வாழ்ந்தாலும் என்றாவது ஒரு நாள் அவைகளையெல்லாம் இழந்துவிட்டு வெறும் சடலங்களாக மரணித்து விடுவோம். அங்கனம் மரணித்தபின் 'மண்ணறை வாழ்க்கை' ஒன்று இருக்கின்றது. அந்த மண்ணறை வாழ்க்கைக்குப்பின் 'மறுமை வாழ்க்கை' ஒன்று இருக்கின்றது மண்ணறைவாழக்கையிலும் இந்த செல்வ செல்வாக்குகள் நீடித்து மறுமை வாழ்க்கையிலும் அந்த நல்ல வாழ்க்கை தொடர வேண்டுமென்றால் அல்லாஹ்வை நினைவு கூறுங்கள். அவனுக்கு நன்றி செலுத்துங்கள்'' என்ற பொன்னான தத்துவங்களையெல்லாம் எடுத்துக் கூறிப் பார்த்தார்.

ஆனால் இத்தகு சத்தியங்களை எடுத்துக்கூறி நின்ற தத்துவ வித்தகர் ஹூது (அலை) அவர்களை 'வாழ்க்கையை அனுபவிக்கத் தெரியாத அபாக்கியவான்'' என்றும் கண்ணுக்கும் கருத்திற்கும் புலப்படாத கற்பனை வாழ்க்கையினை எடுத்துக் கூறி நிஜ வாழ்க்கையினை பாழ்படுத்த முற்படும் பத்தாம் பசலி'' என்றும் தூற்றிட முற்பட்டனரே

தவிர; உண்மை என ஒப்பவோ, ஒழுகவோ மறுத்தனர்

மறதியை நினைவுபடுத்தியும், மன்னவனாம் இறைவனை நினைவு கூற மறுத்துவிட்டதோடு அந்த மாறுபாட்டில் ஊன்றி நின்றபடியால் அலைக்கழிக்கும் பெரும் புயல் காற்றை அனுப்பி தொடர்ச்சியாக ஒருவாரம் அந்தப்பெரும் புயலை நீடிக்கச் செய்து அந்தப்பெரும் படைப்புக்களை வேரறுந்து மரங்களைப் போல வீழச் செய்து அழித்தொழித்தார் இறைவன்.

இப்படி ஆதுவர்க்கத்தாரை அழித்தொழிக்க புயல் அனுப்பப்பட்டதே அது எப்போது என்று தெரியுமா?

சபர் மாதம் கடைசிப் புதன் கிழமை தொடங்கிய அப் பெரும்புயல், மறு புதன்கிழமை வரை நீடித்தாக பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

## ஒடுக்கத்துப் புதன்

இந்த அடிப்படையில்தான் ஒடுக்கத்துப் புதன் ஏற் பட்டது. ஆனால் அந்த ஆது மக்களுக்கு சபர் மாதத்தில் அந்தக் கடைசிப்புதன் ஒடுக்கத்துப் புதனாகத் திகழ்ந் ததுவேயன்றி நமக்கல்ல. ஆனால் ''நம்மவர் இன்றும் கூட சபர்மாதத்தின் கடைசிப் புதனை ஒடுக்கத்துப் புதனாகக் கொண்டாடுகின்றார்களே என்றால்'' ''அது நம்மிலுள்ள அந்த அப்பாவிகளின் தலைவிதி என்போம்'' ஏனெனில் யானை தன் தலையில் தானே புழுதியை

வாரிக் கொட்டிக் கொள்வது போன்று சம்பந்தா சம்பந்த மில்லாமல் யாருக்கோ இறக்கப்பட்ட முஸ்பத்தை 'எனக்கு வந்தது' என வரவேற்கும் இத்தகு அப்பாவிகளைப்பற்றி நாம் வேறு என்ன சொல்ல முடியும்?

## பழங்குடிகள் - 2

ஹஜ்ரத் நூஹ் (அலை) அவர்களின் நான்காவது தலைமுறையில் உதித்த மற்றொருவரான 'இறம்' என்பாரின் வழித் தோன்றல்களுக்கு 'இறம் வர்க்கத்தார்' எனப் பெயர்.

இவர்களுக்கு ஹூது (அலை) அவர்கள்தான் வழி காட்டியாக - நபியாக - அனுப்பப்பட்டிருந்தார்கள்.

இறம் வர்க்கத்தினர் ஆது வர்க்கத்தாரைப் போல செல்வச் செருக்கில் மருண்டுவிடாமல் மனம்மாறி ஹூது (அலை) அவர்களைப் பின்பற்றி விசுவாசிகளாகத் திகழ்தனர். ஆகவே, ஆது வர்க்கத்தாரைப் போல இவர்கள் அழிக்கப்பட்டு விடாமல் பாதுகாப்புடன் வாழ்ந்து வந்தனர். ஆது வர்க்கம் அழிந்து விட்டதால் இந்த இறம் வர்க்கத்தாரின் செல்வாக்கும் - சொல்வாக்கும் - ஓங்கி வளரத் தொடங்கி நாளாவட்டத்தில் ஒரு மாபெரிய சமுதாயமாகப் பலுகி விட்டனர்.

செல்வாக்குப் பெருகப் பெருக செருக்கு இவர்களிலும் வலுப்பெறத் தொடங்கி கடைசியாக ஸாலிஹ் நபி (அலை)

அவர்களது காலத்தில் - அந்த கூட்ட கப்புகழ் ஸாலிஹ் பி - அவர்களை மறுதலித்தமையால் அக்கூட்டமும் அழிந்து பட்டது. இந்த வர்க்கத்திற்கு 'தமூது வர்க்கம்' என்றொரு மாற்றுப் பெயரும் உண்டு.

வரலாற்றுப் பெட்டகமாம் குர்ஆன் ஷரீபில் இந்த இரு பழங்குடியினர்களையும் பற்றி - விரிவாக - விவரமாகக் கூறப்பட்டுள்ள மாட்சியினைத்தான் நமது புரவலர் பூசிரி அவர்கள்;

"...இறம் ஆது பழங்காதையுடன்" என 92ம்-கண்ணியின் முதலீற்றில் சுட்டிக் காட்டுகின்றார், இதனையடுத்து இரண்டாம் ஈற்றில் மேலுலகின் வாழ்க்கை பற்றி விரித்தவைகள் கூறிடுமே' என்று கூறி மறுமை வாழ்க்கை முறைகளையும் மாமறையாம் குர்ஆனில் விவரிக்கப்படுகின்றது என்கின்றார். அம்மா மறையில் மறுமை பற்றி கூறப்பட்டுள்ள சுருக்கத்தை அடுத்துப் பார்ப்போம்.

## மாமறை கூறும் மறுமை வாழ்வு

ஒரு மனிதனின் ஆவி பிரிந்து ஆட்டம் முடிந்து விட்டால் அவனை மய்யித் என்போம். அந்த மய்யித்தை மண்ணறையில் - கப்ரில் - வைத்து மூடப்பட்டவுடன் 'ஃபத்தான்' என்ற பெயர் கொண்ட ஒரு வானவர் அங்கு தோன்றி அவனுக்கு மீண்டும் உயிர் கொடுத்து தலை தொடுத்து இடுப்பு வரை உள்ள பகுதிகள் மட்டும் இயங்கும் படி செய்துவிட்டு - அவ்வானவர் சென்றுவிடுவார்.

## கியாமத் எப்படித் தொடங்கும்?

இதனையடுத்து கியாமம் தொடங்கும். அது எப்படி என்பதனை அடுத்துப் பார்ப்போம்.

வல்லவனாம் அல்லாஹ் நிர்ணயித்துள்ள தவணை வந்தவுடன் ''இஸ்ராஃபீல்'' என்ற வானவர் 'ஸூர்' எனும் குழலினை ஊதுவார்.

அதன்பின் ? அதன்பின் என்ன? அவ்வளவு தான் அனைத்தும் பாழ். அண்ட சராசரங்கள் அனைத்தும், விண்டு - விரிந்து துகள் துகளாகி விடும், உயிரினங்கள் அனைத்துமே ஊணற்று உரமற்று இற்றுப்போய்விடும்.

அதன் பின் அல்லாஹ்வும், அனைத்து உயிர்களை அதுவரையிலும் கைப்பற்றி வந்த ''மலகல் மவ்த்து என்ற வானவரும் மட்டும் எஞ்சியிருப்பார்.

அப்போது இறைவன் அவரிடம் - மலகல் மவ்த்திடம் 'நீயும் உன்னை மாய்த்துக் கொள்ளும்' என்பான். அப்போது அவர் படும் அல்லல், அனுபவிக்கும் துன்பம் அப்பப்பா அதைச் சொல்லிக் காட்டிட வார்த்தைகளே இல்லை. அவ்வளவு துன்ப துயரங்களை அனுபவித்து அவரும் மாண்டுவிடுவார். கடைசியாக அல்லாஹ் ஒருவனே தன்னந் தனியாக இருப்பான்.

இப்படி உலகம் அழிந்து படும் நிலையினை மாமறையாம் குர்ஆன் ஷரீபில் பல இடங்களில் பல முறைகளில் - தெளிவாகவும் - துள்ளிதமாகவும் - அழுத்தந் திருத்தமாகவும் சொல்லிக் காட்டப்பட்டுள்ளது.

# மறுமையின் முதற்படி

அதன்பின் உடனடியாக 'முன்கர் - நகீர்' என்ற இரண்டு வானவர்கள் ஆங்கு தோன்றி "உன் இறைவன் யார்? உன் நபி யார்? நீ எந்த மார்க்கத்தைச் சார்ந்தவன்?" என்ற கேள்விகளைக் கேட்டு, அதற்கு அம்மனிதன் "என் இறைவன் அல்லாஹு தஆலாவாகும். எனது நபி முஹம்மது (ஸல்) அவர்களாகும். நான் இஸ்லாமிய மார்க்கத்தைச் சார்ந்தவன் என்ற பதிலைச் சொன்னால் சொர்க்க வாசலை அவனுக்காகத் திறந்து இறுதி நாள் வரை அதன் சுகந்தமான இன்பத்தில் மூழ்கும்படி செய்துவிட்டு அவ்விரு வானவர்களும் சென்று விடுவர். அஃதின்றி மாறுபட்ட பதிலைக் கூறினால் அல்லது பதிலேம் கூறாது பேந்த பேந்த விழித்தால் அவனை கொடுமையான முறையில் தண்டிப்பதோடு நரகத்தின் வாசலைத் திறந்து இறுதிநாள் வரை அதன் அதி பயங்கரமான துன்பங்களில் மூழ்கும்படி செய்துவிட்டுச் செல்லுவர். ஆனால்; அனைவராம் முறையான - முன் கூறிக் காண்பித்தது போன்ற - பதிலைச் சொல்லிட முடியுமா?

இது கியாமத்து நாளின் (மறுமை வாழ்வின்) முதற்படி. இந்த முதற்படியைச் சந்திக்காமல் எவரும் தப்பிவிட முடியவே முடியாது, தீயிட்டுக் கொளுத்தப்பட்டாலும் அல்லது வேறு எந்த முறையில் மண்ணறை வாழ்வு தொடங்கினாலும் இந்த முதற்படியைச் சந்தித்துத்தான் ஆக வேண்டுமென மா மறைபாம் குர்ஆன் இயம்புகின்றது.

இப்படி உலகம் அழிந்துபட்டபின் நாற்பது ஆண்டுகள் அனைத்துமே செப்புத்தரையாக கிடைந்தபின், 'இஸ்ராபீல்' என்ற வானவருக்கு உயிர் கொடுத்து மீண்டும் எழுப்பி 'ஸூர்' ஊதும்படி பணிப்பான். ஸூர் ஊதப்படும்.

அங்ஙனம் ஸூர் ஊதப்பட்டவுடன் அனைத்து மனிதர்களும் ஆதியோடு அந்தமாக - ஆதி மனிதர் ஆதம் அவர்களிலிருந்து கடைசி மனிதன் வரை-எழும்புவார்கள்.

## மனிதர்கள் எப்படி எழுப்பப்படுவர்

மனிதர்கள் எழும்பும் முறையை தத்துவக் களஞ்சியம் இமாம் கஸ்ஸாலி (ரஹ்) கீழ்வருமாறு விவரிக்கின்றார்கள்.

'ஸூர்' ஊதப்பட்டவுடன் அர்ஷின் (இறைச் சிம்மாசனம்) கீழ்ப் பகுதியிலிருந்து விந்துத் துளிகளைப் போன்று ஒருவகை மழை பொழியும். அந்த மழை நீருக்கு 'மாவுல் ஹயாத்' என்று பெயர்.

அந்த மழை நீரின் ஈரம் செப்புத்தரையாகவுள்ள பூமியின் கீழ் பனிரெண்டு முழம்வரை ஊடுருவும். அதனால்;

சாதாரணமான இக்காலை வரண்ட நிலையில் மழை பொழிந்தால் காளான்கள் பூமியைப் பொத்துக் கொண்டு முளைக்கின்றதே அதுபோல மாவுல் ஹயாத் மழையாக வருசித்ததும் மனிதக் காளான்கள் பூமியைப் பொத்துக் கொண்டு பிறந்த மேனியோடு முளைப்பார்கள்.

இதிலொரு விசித்திரமென்னவெனில்;

மனிதன் மரணித்து மண்ணில் அடக்கப்பட்டோ, அன்றி தீயில் எரிக்கப்பட்டோ, அன்றி வேறெந்த முறையிலோ அவனது சதை, ஊண் நரம்பு போன்ற அனைத்தும் அழிந்துபட்டாலும், மனிதனது முதுகுத் தண்டின் கீழ் பாகத்திலுள்ள 'கடுகு' போன்ற எலும்பு மட்டும் கடைசி வரை - அதாவது அனைத்தும் அழிக்கப்பட்டு நாற்பதாண்டுகள் பூமி செப்புத்தரையாகக் காட்சியளித்து, மாவுல் ஹயாத் மழையாகப் பொழியுமே அதுவரை - அந்த கடுகு போன்ற குறுக்கெலும்பு மட்டும் அழிவதோ - கறைவதோ - குறைவதோ - தேய்மான மேற்படுவதோ இல்லாமல் பாதுகாத்து வைக்கப்படும். மாவுல் ஹயாத் பூமியில் பொழிந்தவுடன் அந்தக் குறுக்கெலும்பை வித்தாகக் கொண்டே ஒவ்வொரு மனிதனும் எழும்புவான். அங்கனம் எழும்புவோரின் முதல் மனிதர் யார் தெரியுமா? அது வேறுயாருமல்ல நமது நபிகளார் (ஸல்) அவர்கள்தான்.

இதுவரை சொல்லப்பட்ட - உலகமனைத்தும் அழிந்து அதன்பின் மீண்டும் மனித இனம் ஆதியோடு அந்தமாக எழுப்பப்படும் வரையுள்ள - நிலைகள் அனைத்தையும் மாமறையாம் குர்ஆன் ஷரீபில் அணு அணுவாக - தெளிவாக -விவரிக்கப்படுகின்றது.

## மஹ்ஷர் வெளி

அதனையடுத்து மஹ்ஷர் வெளியில் அனைத்து மனிதர்களும் நிறுத்தப்படுவர். இந்த மஹ்ஷர் வெளி என்பது

எங்கே உள்ளது? அது தனியானதொரு உலகமா? வானில் உள்ளதா? என்றால் அது தனியானதொரு உலகமன்று. பூமியில் இப்போது ஷாம் நாடு இருக்கின்றதே அங்கே உள்ள பாலை வெளியில்தான் மஹ்ஷர் ஏற்படப்போகின்றது. அதிலொரு விபரீதம் என்னவென்றால்; பாலையாகவுள்ள அந்தப் பெருவெளி மஹ்ஷராக மாறும் போது செம்புத் தரையாக மாற்றப்பட்டு விடும். அதுமட்டுமன்று! உலக அழிவோடு அழிக்கப்பட்ட சூரியன் மீண்டும் படைக்கப் பட்டு ஒரு பனைமர உயரத்தில் - மிகச் சமீபத்தில் - ஒளிக்கும்படி அதை அமைக்கப் படும்.

அந்த நிலையினைக் கொஞ்சம் சிந்தனை செய்து பாருங்கள்.

இப்போது பல கோடி மைல்களுக்கு மேல் அமைக்கப் பட்டுள்ள சூரியனின் வெப்பத்தையே சில சமயம் நம்மால் தாங்கிக் கொள்ள முடிவதில்லை.

'சித்திரை மாதத்தில் தார் ரோட்டில் உச்சி வேளையில் நடந்து சென்றவன் வெப்பம் தாங்காமல் சுருண்டு விழுந்து செத்தான்' என்ற செய்தியை அடிக்கடி கண்டும் கேட்டும் வருகின்றோம் நாம். இப்போதே இப்படி என்றால்!

கீழே செப்புத்தரை, மேலே பனையளவி உயரத்தில் சூரியன் அமைந்து ஒளிரும் நிலை என்றால்...அப்பப்பா! கற்பனை செய்தாவது பார்க்க முடியுமா அந்தக் கோரக் காட்சியை.

ஆனால்; இஸ்லாமிய மார்க்கத்தில் கற்பனைக்கே எட்டாத அந்தக் கோரக் காட்சியைக் கூட தெளிவாகச் சித்தரித்துக் காட்டப்பட்டு உள்ளது.

எப்படி என்றா கேட்கின்றீர்? எண்ணிப் பார்க்க என் இதயம் கூசுகின்றது. எழுதிக் காட்ட என் கரங்கள் தடுமாறுகின்றது. ஏனென்றால் அப்போது என்நிலை எப்படியோ? (இறைவா! என்னை - அல்ல... அல்ல... எங்கள் அனைவரையுமே நீதானப்பா காப்பாற்றவேண்டும்) ஆனாலும் அதனை எழுதிக் காட்டிடுவது என் கடமை என்பதால் எழுதிட வேண்டியுள்ளது.

அப்போது; மனிதர்களின் மண்டை வெடித்து மண்டையினுள் இருக்கும் மூளையும் கொழுப்பும் கொதித்து - கொப்பளித்து, முகங்கள் வழியாகவும் பிடறிகள் வழியாகவும் உருகி ஓடுமாம். அது மட்டுமா? வெப்பத்தின் கடுமையால் நா வரண்டு 'ஒரு சொட்டு நீர் எங்கேனும் கிடைத்திடாதோ?' என மனிதர்கள் தகித்துத் தகித்துக் கொண்டிருக்கையில் சிலர் - சிலரென்ன மிகப்பலர் - உருகி ஓடும் அந்த மூளையையும் கொழுப்பையும் (ஆடு மாடுகளைப்போல) நாவால் நக்கி அதிலாவது தாகம் தீர்ந்திடாதா? என நினைப்பார்களாம் (நவூது பில்லாஹ்...)

## பட்டோலை வழங்கப்படுதல்!

அன்று, மஹ்ஷர் வெளியில் நிறுத்தாட்டப் பட்டுள்ளவர்களில் நல்லடியார்களுக்கு அவர்களது (வாழ்க்கை)

வரவு செலவுப் பட்டியல் அடங்கிய பட்டோலையை அவர்களின் வலக் கரங்களில், பொல்லா அடியார்களது குற்றப் பட்டியல் அடங்கிய பட்டோலையை அவர்களது இடக்கரங்களில் கொடுக்கப்பட்டு அந்த பட்டோலைகளின் அடிப்படையில் இரு அணிகளாக அவர்கள் நிறுத்தப் படுவர். அன்றி ஒவ்வொரு அணியிலும் ஒவ்வொருவரின் நன்மை தீமைகளுடைய கன இனத்தைப் பொறுத்து உட்பிரிவுகளும் அந்த அணிகளில் இருந்திடும்.

இதனையடுத்து;

ஏக தெய்வ நம்பிக்கை, தீர்க்கதரிசிகளான நபிமார் களைப் பின்பற்றுதல், குறிப்பாக இறுதி நபியான முஹம்மது (ஸல் - அம்) அவர்களைப் பின்பற்றுதல் என்ற அடிப்படையில் ஒவ்வொரு மனிதனுடைய நன்மையும் தீமையும் பரிசீலிக்கப்பட்டு பாரபட்சமற்ற - நேர்மையான நீதி விசாரணை நடத்தப்படும்.

நீதி விசாரணையின் போது ஒவ்வொரு மனித னுடைய வலத்தோளிலும் இடத்தோளிலும் சாட்டப்பட்டி ருந்த கிராமுன் காத்திபீன் என்ற இரு வானவர்களால் எடுக்கப்பட்ட நன்மை தீமை அம்சங்களை அச்சாணி யாகக் கொண்டு ஒவ்வொரு மனிதனுக்கும் அவனது கை, கால், கண் போன்ற உறுப்புக்களையே சாட்சி களாக விவரிக்கப்பட்டு தீர்ப்பு வழங்கப்படும்.

ஆகவே அந்த விசாரணையின் முடிவு :

ஏக தெய்வக் கோட்பாட்டினை மனமொழி மெய்யன்போடு ஏற்று தீர்க்கதரிசிகளை குறிப்பாக முஹம்மது நபி (ஸல்) அவர்களை சொல்லாலும், செயலாலும் தூண்டுதலாலும் முழுக்க முழுக்கப் பின்பற்றியொழுகிய மூமின்கள் - முஸ்லிம்கள் நிரந்தர சொர்க்கவாசிகள் எனவும் மேற்கண்ட நம்பிக்கையில் உடன்பட்டிருந்தாலும் செயலால் தீமை செய்து வாழ்ந்த - அல்லது கடமைகளை சரிவரவோ, முழுமையாகவோ பின்பற்றாமல் வாழ்ந்த முஸ்லிம்களை அவர் அவரின் செயலின் வலிமைக்கேற்ப நரகத்தில் தண்டனை அனுபவிக்கச் செய்தபின் சொர்க்க வாழ்க்கைக்கு அருகதையானவர்களாகவும்.

ஆனால் ஏக தெய்வக் கோட்பாட்டினை மனமொழி மெய்யன்பால் செயல்படுத்தாமலும் தீர்க்கதரிசிகளை குறிப்பாக முஹம்மது (ஸல் - அம்) அவர்களை அறவே புறக்கணித்து வாழ்ந்த காஃபிர்கள், சிலைத் தொழும்பர், நஸாராக்கள். எஹூதிகள் போன்ற உண்மை புரிந்தும் நன்மை பெறத் தவறியோர் ஆகிய மக்களை ஊழூழிகால நரகவாசிகள் எனவும் (மறுமை நாளின் நீதி விசாரணையின் முடிவு) அமைந்திருக்கும்.

## ரிஜான் திறவை

மீக்கூறிய வண்ணம் நீதி விசாரணை முடிவுற்றபின் ஒவ்வொரு மனிதனும் 'நரகத்திற்கும் அல்லது சொர்க்கத்திற்கும், அல்லது சிலகாலம் நரகம், அதன்பின் சொர்க்கத்திற்கும், என முடிவாகி விட்டாலும் சொர்க்கத்தில் ஆக

உயர்வும், ஆகத்தாழ்வு எனவும், நரகத்திலும் ஆகக்கடுமை, கடுமைக் குறைவு எனவும் பல படித்தரங்கள் இருப்பதால் யாரை எந்த வகுப்பிற்கு அனுப்புவது என்பதை - தன்னிச்சையாக 'உனக்கு முதல் வகுப்பு. உனக்கு இரண்டாம் வகுப்பு' என்ற முறையில் முடிவு செய்யப்பட மாட்டாது.

மாறாக;

ஒவ்வொருவரின் நன்மை தீமைகளின் வன்மைகளை நிறுவையின் மூலம் கண்டறிந்து நிறுவையின் மூலம் தெரிந்த உயர் தாழ்வின் அடிப்படையிலேயே சொர்க்கத்திலும் நரகத்திலும் அவர் அவர்களுக்கு படித்தரங்கள் (வகுப்புகள்) நிர்ணயிக்கப்படும். அங்கனம் நன்மை தீமைகளை நிறுத்தறிவிக்கும் நிறுவைக்கு 'மீஜான்' எனப் பெயர். அந்த மீஜானிற்கு ஒரு நாவும் இரு தட்டுகளும் உண்டு. ஒரு தட்டில் கடமைகள். நல்லியல்புகள் ஆகியனவற்றை படிக்கல்லாகவும், மறு தட்டில் மனிதனின் நடைமுறைகளை நிறுவைப்பொருளாகவும் போட்டு நிறுக்கப்படும். அந்த நிறுவையினை ஒவ்வொரு மனிதர்களும் கண்கூடாகக் கண்டு 'நிறுவை முறை மிக நியாயமானதே' என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ளும் முறையில் நிறுவை முறை பகிரங்கமானதாக இருக்கும். இப்படி நிறுக்கப்பட்டு அதனால் தெரியவரும் நன்மைகளின் வன்மைகளின் அடிப்படையிலும் தீமைகளின் வன்மைகளின் அடிப்படையிலும் சொர்க்கத்திலும் நரகத்திலும் வகுப்புக்கள் (படித்தரங்கள்) பிரித்துக் கொடுக்கப்படும்.

ஆகவே, உலகில் பஞ்சையாக - பராரியாக ஒதுக்கப்பட்டவனாக மிகவும் சஞ்சலப்பட்டவனாக வாழ்ந்த ஒரு

அடியான் - மீஜான் நிறுவையின் போது அவனது நன்மைகள் வன்மையுள்ளதாக - மிக கனமுள்ளதாக - இருந்து அவன் முதல் பட்டியலில் இடம் பெற்றால் அவன் ஏழை என்பதற்காக ஒதுக்கப்பட்டு விடாமல் அவனுக்கு சொர்க்கத்தில் முதல் வகுப்பு கொடுக்கப்படும். அதே நேரத்தில், உலகில், மிக உயர்ந்த அந்தஸ்தோடு - பட்டா பதவிகளோடு - வாழ்ந்த மனிதன் - அந்த மீஜான் நிறுவையின் போது அவனது நன்மை வன்மை குறைந்ததாக இருந்து, கடைசிப் பட்டியலில் அவன் இடம் பெற்றால் - அவனுக்கு சொர்க்கத்தில் ஆகக் கடைசி - தாழ்ந்த வகுப்புத்தான் கொடுக்கப்படுமேயன்றி அவன் உலகில் அந்தஸ்துடன் வாழ்ந்தவன் என்பதற்காக சொர்க்க வாழ்வில் முன்பின் அந்தஸ்து கொடுக்கப்பட மாட்டாது.

அதுபோலவேதான் நரகவாதிகளின் நிலையும்.

## ஸிராத்துல் முஸ்தகீம் பாலம்

மேற்கூறிய வண்ணம் மீஜான் நிறுவை முடிவுற்றபின், அனைவரும் ஸிராத்துல் முஸ்தகீம் பாலத்தினைக் கடந்திடும் கட்டம் நடைபெறும்.

ஸிராத்துல் முஸ்தகீம் பாலமென்பது நரகலோகத்தின் மீது - அதன் முதுகுப்புறத்தில் - அமைக்கப்பட்டுள்ள ஒரு வகைப் பாலமாகும்.

அது நன்றாகப் பதம் வைக்கப்பட்டுள்ள வாளின் வயிற்றை விட மிகக் கூர்மையானது.

மலிதலின் தலைமுடியைவிட மிக நேரியது.

அன்றி அந்தப் பாலத்தின் ஏறுகால் பத்தாயிரம் ஆண்டு தொலை தூரம். பாலத்தின் வயிறு பத்தாயிரம் ஆண்டு தொலை தூரம். இறங்குகால் பத்தாயிரமாண்டு தொலைதூரம் ஆக மொத்தம் முப்பதாயிரமாண்டு தொலை தூரமுடையது.

இத்தகு பாலத்தின் மறுகரையினை அடையுமுன்பே நரகவாதிகள் எனத் தீர்ப்பு வழங்கப்பட்டோர் நரகத்தை அடைந்து விடுவர். ஆனால் சொர்க்கத்தின் முதல் வகுப்பிற்கு அருகதை பெற்ற அருளாளர்கள் மின்னல் வேகத்தில் அப்பாலத்தினைக் கடந்து செல்லும் வாய்ப்பைப் பெறுவர். இரண்டாம் வகுப்பிற்கு அருகதை பெற்றோர் காற்று வேகத்திலும், மூன்றாம் வகுப்பிற்குரிய அருகதை பெற்றோர் பறவை வேகத்திலும், அதனையடுத்தோர் குதிரை வேகத்திலும், மனித ஓட்ட வேகத்தில் அதனையடுத்த வகுப்பாரும், பெருநடை வேகத்தில் அதனையடுத்த வகுப்பாரும், கடைசி வகுப்பார் குழந்தைகளைப் போல் தவழ்ந்தும் அப்பாலத்தினை கடந்து வெற்றி வாகை சூடுவர்.

## ஹவ்ழுல் கவ்ஃதர் என்ற சுனை நீர்

ஹவ்ழுல் கவ்ஃதர் சுனையில் நீர் அருந்தி தாகசாந்தி பெறுவதும் மறுமை நாளில் அடியார்க்குக் கிடைக்கும் பேறுகளில் குறிப்பிடத் தக்க ஒன்றாகும்.

ஒரு பனையளவு உயரத்தில் சூரியன் அமைந்து தகித்துக் கொண்டிருக்க, நிற்கும் மஹ்ஷர் வெளியோ செம்புத்தரையாக கனன்று கொண்டிருக்க அந்த சூழலில் அகப்பட்டவனுடைய தாகத்தின் மோகம் எப்படியிருக்கும்? இந்நிலையில் சுவையான குளிர்ந்த நீர் குடிக்கக்கிடைக்குமென்றால் அந்தத் தண்ணீரின் மதிப்புக்கு-மவுசிற்கு - ஈடு எல்லையுண்டோ?

ஆமாம், அத்தகு மவுசுடன் திகழும் தண்ணீரால் ஆன சுனைக்குத்தான் ஹவ்ழுல் கவ்ஃதர் எனப்பெயர். அது யாருக்கு? என்றால் இம்மையில் இறை நம்பிக்கையோடு இறுதித்தூதர் காட்டிய நெறியில் நடைபயின்று நற்குணக் குன்றுகளாகத் திகழ்ந்தார்களே அந்த நல்லடியார்களுக்கு மட்டிலுமே அந்தத் தண்ணீரைப் பருகிகளைப்பாறும் பேறு கிடைக்கப்பெறும்.

இப்படி நல்லடியார் அனைவருக்குமே தாக சாந்தியளிக்கும் அந்தச் சுனை ஆறுமாதத் தொலைதூரச் சுற்றளவு உடையதாகக் காட்சியளிக்கும்.

அன்றி; அச்சுனை நீரை எவ்வாறு பருகிடுவது? என்றால் அதற்கென்று ஒருவகைக் கோப்பைகளையும் இறைவன் தயார் செய்து வைத்துள்ளான். அப்படி எத்தனை கோப்பைகள்? என்றால் இன்று விண்ணில் இலங்கிடும் தாரகைகள் எத்தனையோ அந்த அளவு கோப்பைகள் ஆங்கு உள்ளன. இந்த ஹவ்ழுல் கவ்ஃதர் சுனைக்கு 'ஹவ்ழுல் மவ்ரூது' என்ற மாற்றுப் பெயரும் உண்டு.

மீக்கூறப்பட்டுள்ள -

மீஜான் நிறுவை, சிராதுல் முஸ்தகீம் பாலம், ஹவ்ளுல் கவ்ஃதர்சுனை ஆகியன பற்றியெல்லாம் மா மறையாம் குர்ஆன் ஷரீபில், புள்ளி விபரங்களோடு தெளிவாக - அழுத்தமாக - கூறிக்காண்பிக்கப்பட்டுள்ளன

## நிழல் தரும் கொடிகள்

மறுமை நாளில் மாண்புமிகு நல்லடியார்களுக்காக சிலகொடிகள் தயார் செய்து வைக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு நற்குணத்தின் பெயரிலும் ஒவ்வொரு கொடியுண்டு. அதில்,

பொறுமைக் கொடி, பொறுமையின் சிகரமாய்த் திகழ்ந்த நபி அய்யூபு (அலை) அவர்களின் கரத்தில் கொடுக்கப்பட்டு, பொறுமையிற் சிறந்த நல்லடியார்கள் அனைவரும் அந்தப் பொறுமைக் கொடியின் நிழலிலும்;

கற்புக்கொடி, கற்பு நிலைக்கு நிலைகளனாகத் திகழ்ந்த நபி யூசுஃப் (அலை) அவர்களின் கரத்தில் கொடுக்கப்பட்டு, கற்பில் கறைபடியாது நின்ற நல்லடியார்கள் அந்தக் கற்புக் கொடியின் நிழலிலும்;

அழுகைக் கொடி, இறையச்ச மேலீட்டால் இமைகள் ததும்பப்பறும்படி அழுது - இறையச்சத்தால் உயர்ந்த- நூஹ் (அலை) அவர்களின் கரத்தில் கொடுக்கபபட்டு, இறையச்ச

மேலீட்டால் குறை களையப்பட்ட நல்லடியார்கள் அனை வரும் அந்த அழுகைக் கொடி நிழலிலும்,

நன்றிக்கொடி, செழுமை நிலையிலும் செறுக்கு வசப் பட்டு, விடாமல் நன்றியுணர்வுடன் வாழ்ந்த சீமான் சுலைமான் நபி (அலை) அவர்களின் கரத்தால் கொடுக்கப் பட்டு நன்றி உணர்வு மேலீட்டால் நன்னிலை பெற்றுள்ள நல்லடியார்கள் அனைவரும் அந்த நன்றிக் கொடியின் நிழலிலும்:

கல்விக் கொடி, கல்வி கேள்வியில் தலை சிறந்து விளங்கிய நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் கரங்களில் கொடுக்கப்பட்டு, கல்வி கேள்வியால் கறைபடிந்த நிலை யினைக் கடந்து நிற்கும் நல்லடியார்கள் அனைவரும் அந்தக் கல்விக் கொடியின் நிழலினைப் பெற்றுக் களைப் பாறும் பேறு பெறுவர்.

இவைகளன்றி புகழ்கொடி என்னுமொரு கொடியுண்டு. இந்தக் கொடி, புகழின் உச்சாணியை வென்று நின்கும் முஹம்மது (ஸல்) அவர்களின் குடும்பத்தாரில் ஒருவர், அல்லது அவர்களது உம்மத்துகளில் முஅத்தினாகப் பணியாற்றிய ஒருவரின் கரத்தில் கொடுக்கப்பட்டு, புகழத் தக்க புண்ணிய நிலையினை அடைந்த அனைத்து நல்லடியார்களும் அந்தப் புகழ்க் கொடியின் நிழலின் ஒதுங்கி ஓய்வு பெறுவர்.

மறுமைநாளின் மாண்புயர் பேறுகளில் அர்ஷுடைய (இறையசச் சிம்மாசனத்துடைய) நிழல் கிடைக்கப் பெறுவதும், குறிப்பானதொரு அம்சமாகும். அந்த மிகப் பெரும் பாக்கியம் அல்லாஹ்வின் அன்பைக் குன்றாமல் குறையாமல் பெற்றிலங்கும் நல்லடியார் அனைவருக்கும் கிடைக்கப்பெறும்.

'மறுமையா' மவ்த்திற்கும் பிறகுதானே? அப்போது பார்த்துக் கொள்ளலாம்' என மத மதப்புடன் ஏளனம் செய்திடுவோர் நிறைந்துள்ள மனித சமுதாயத்தினூடே;

மீஜான் தராசா? அது எத்தனை டண் இரும்புகளினால் தயார் செய்யப்பட்டது?... சிராதுல் முஸ்தகீம் பாலமா? எத்தனை டண் சிமெண்டுகளால்' எத்தனை எஞ்ஜினியர்களின் ஆலோசனையுடன், எத்தனை ஆண்டுகளில் கட்டி முடிக்கப்பட்டது? கப்ரில் முன்கர் நகீர் வருவார்களாமே? என்னென்னமோ கேள்விகளெல்லாம் கேட்பார்களாமே? அப்படியென்றால் கபன் துணியிலேயே அந்தக் கேள்விகளுக்குரிய பதில்களையும் எழுதிடச் சொல்லி அங்கேயும் 'பிட்' அடித்துப் பதில் சொல்லிட வேண்டியதுதான்' 'ஏன், இப்படியும் செய்யலாமே' யாராவது மவ்த்தான போது, முன் கூட்டியே கப்ரில் மைக் செட்டப் செய்து அவரை முன்கர் நகீர் விசாரிப்பதை நாம் ஒட்டுக் கேட்டாலென்ன? இல்லாவிட்டால் டேப்ரிகார்டரை கப்ரில் மறைத்து வைத்திருந்து அந்த முன்கர் நகீர் போனபின் அதனைத் தோண்டி எடுத்து எல்லோ

ருக்குமே ஒலிபரப்பினால் இஸ்லாம் மிக வேகமாகப் பரவுமே! அப்படிச் செய்தாலென்ன?' இப்படியெல்லாம் ஏளனம் செய்திடும் இயல்பு படைத்தோர் நிறைந்துள்ள மனித சமுதாயத்தினூடே;

'மரணத்திற்குப்பின் பரலோக வாழ்க்கையுண்டு. அங்கே பருகலாம் - புசிக்கலாம் - வாழ்ந்திடலாம் - என்று கண்ணுக்கும், கருத்திற்கும் புரியாத மோட்ச வாழ்க்கையினைச் சொல்லிக் காட்டி, பாட்டாளிவர்க்கம் மென்மேலும் வஞ்சிக்கப்பட பணம் படைத்தவர்களின் கருவிகளாகப் பயன்படும் மூட முல்லாக்களே! மக்கள் சமுதாயத்தை இனியும் நீங்கள் ஏமாற்றிப் பிழைத்திட அனுமதியோம்' என ஆர்ப்பரிக்கும் கம்யூனிஸவாதிகள் கலந்துபோயுள்ள இந்த மனித சமுதாயத்தினூடே;

'மறுமையென்பதெல்லாம் வெறும் வெறுமை. கடவுளென்பது கற்பனை! மதம் மார்க்க மென்பதெல்லாம் வடிகட்டிய மடமை' என மாறுபாடும் ப(வ)குத்தறிவுப் பாசறைகள் மலிந்து போயுள்ள இந்த மனித சமுதாயத்தினூடே;

'இப்படி யெல்லாம் சொன்னால் எடுபடுமா? ஏசமாட்டார்களா? பேசமாட்டார்களா? ஏளனம் செய்திட மாட்டார்களா?' என்றெல்லாம் கொஞ்சம் கூட எண்ணிடாமல்;

மதியுடையார் போற்றட்டும். மாற்றுடையோர் - தூற்றட்டும்<br>
எதுவரினும் இறைநெறியை எடுத்துரைப்பதெமது - கடன்''<br>
என்ற கடமையுணர்வோடு - துணிவோடு - துடிப்போடு

மறுமை வாழ்வின் இடர்பாடுகளை, மண்ணறை வாழ்வின் இன்பங்களை துன்பங்களை, மஹ்ஷர் வெளியின் மாப் பெரிய அல்லல்களை, நீதி விசாரணையின் வர்ணனை களை, மீஜான் நிறுவையின் மாண்புகளை; சிராத்துல் முஸ்தகீம் பாலத்தின் சிறப்புக்களை - சிரமங்களை இப்படி யாக மறுமையிலேற்படும் ஒவ்வொரு கட்டங்களையும் ஒழிக்காமல், மறைக்காமல், கூட்டாமல், குறைக்காமல், தெளிவாகவும் - அடுக்காகவும் - அழுத்தந் திருத்தமாகவும் அழகு சொட்டும் அரபு மொழியில் அருள் சொட்டும் வார்த்தைகளால் எடுத்தியம்பும் ஒரே மறை - இறைமறை இறுதிமறை ஒன்று உண்டென்றால் அது குர்ஆனைத் தவிர வேறு எதுவாக இருந்திட முடியும்...?

இந்த அற்புதமான நிறையினைத்தான் அருட்கவி பூசிரி (ரஹ்) அவர்கள் தனது அற்புதக் காவியமான புர்தாப் பாமாலையின் 92 - ம் கண்ணியின் இரண்டாம் ஈற்றடியில்.

மேலுலகின் வாழ்க்கைபற்றி விரித்தவைகள் கூறிடுமே' என்றுணர்த்துகின்றார்.

ஒரே வரி! ஆனால் அதில் எத்தனையெத்தனை விளக்கங்கள் விபரங்கள்...? அப்பப்பா !மனிதர் பொல் லாதவர் போங்கள்.

دَامَتْ لَدَيْنَا فَفَاقَتْ كُلَّ مُعْجِزَةٍ
مِنَ النَّبِيِّينَ إِذْ جَاءَتْ وَلَمْ تَدُمِ ⑨٢

**தாமத் லதைனா ஃபஃபாகத் குல்ல**
**- முஃஜிஸதின்**

**மினன் னபிய்யீன இத் ஜாஅத் வலம்**
**- ததுமி**

அ[ந்த குர்ஆன் வசனங்களை] வை றமற் நபிமார் களின் மூலம் வெளிப்பட்ட அனைத்து அற்புதங்களையும் மிகைத்ததோடு நிலைத்தும் விட்டன. மற்றவர்களின் மூலம் வெளிப்பட்ட அற்புதங்கள் அனைத்தும் அல்லாஹ்வினால்தான் வெளியாயின. [ஆனாலும்] அவை [களில் எதுவும்] நிலைக்கவில்லை.

இதனை -

அற்புதங்கள்யாவினையும் அவைமிகைத்து -
நிற்பனவாம்
நிற்கவில்லைமுந்தைநபிநிகழ்த்தும் மற்றை -
யற்புதமே

என மறைக்காயர் மங்கலம்பொங்கப் பாடிக் காட்டுகின்றார்.

கருத்துரை : ஆதிபிதா ஆதம் (அலை) அவர்கள் தொடுத்து (இறுதிநபியாம் எம்மான் முஹம்மது நபி அவர்களுக்கு

முந்திய நபியான) ஈசா (அலை) அவர்கள் வரை வந்த அனைத்து நபிமார்களின் மூலமும், முஃஜிசாக்கள் வெளிப்பட்டன. ஆனால் அனைவரது முஃஜிசாக்களும் அவரவர்களோடு மறைந்து விட்டன. ஆனால் கடைசி நபியான முஹம்மது (ஸல்) அவர்களின் மூலம் வெளியான இந்த குர்ஆன் எனும் அற்புதம், மற்றைய நபிமார்களின் மூலம் வெளிப்பட்ட அனைத்து அற்புதங்களையும் மிகைப்பதாக இருப்பதோடு, எவரால் அது வெளிப்பட்டதோ அவரது மறைவிற்குப்பின்னும், இன்றளவும் - இனி உலகில் உயிர் உள்ளளவும் - நிலைத்து நின்று நேர்வழிக் காட்டியாய் ஜொலித்துக் கொண்டு இருக்கின்றது

மோனை மறையாம் குர்ஆன்ஷரீப், 'மகிமையால் மிகைத்தது' என்பதற்கு இதனைவிட வேறு என்ன சான்று வேண்டும்?

مُحْكَمَاتٌ فَمَا يَبْتَغِينَ مِنْ شُبَهٍ
لِذِي شِقَاقٍ وَّلَا يَبْتَغِينَ مِنْ حَكَمِ ﴿٨٢﴾

**முஹ்கமாதுன் ஃபமா யப்தகீன -**
**- மின் ஷுப்ஹதின்**
**லிதீ ஷிகாகின் (வ்)வலா யப்தகீன -**
**- மின் ஹகமி**

அ(ந்த வசனங்கள்)வை உறுதியான வசனங்களாகும். மாற்றாரின் ஐயப்பாடுகளுக்கு அதில் இம்மியும் இடமில்லவேயில்லை ஆதலால்,

(தனக்காக வக்காலத்து வாங்கிடும்) நீதிபதிகளை அவை தேடிக் கொண்டலையவுமில்லை.

இதனை

அவையுறுதிபூண்டெதிரி ஐயுறும்சொல் அற்றவை
நவையுறுதம்பக்கலுங்கோர் நடுவன் அவை -
- வேண்டடவே

என மறைக்காயர் பொடிவைத்துப் பாடுகின்றார்.

## மதிப்புரை தேவையற்ற மாமறை

க-ரை : குர்ஆனின் குரல் உறுதி செய்யப்பட்ட செப்பேடு. ஆகவே மாறுபட்ட கருத்துடையோர் இம்மியும் சந்தேகம் கொள்ளமுடியா வனப்புடன் அவை மிளிர்கின்றது. அன்றி, தன்னை அறிமுகம் செய்திட தனக்கு முன்னுரை மதிப்புரை வழங்கிட-சடேதார் அற்புதத் திருமறையே! எனப் பரிந்துரை செய்திட அதற்கு எவருமே வேண்டியதில்லை.

வி-ரை : மாமறையாம் குர்ஆனில் வரலாறுகள் கூறப் பட்டுள்ளன ஆனால், அந்த வரலாறு விருப்பு வெறுப்புகளின் அடிப்படையில் திரட்டப்பட்டதன்று. முழுக்க முழுக்க உண்மையிலேயே நடந்த வாழ்க்கை முறைகளே.

அதுபோல; உபதேசங்கள் அம்மாமறையினுள் மறு பகுதியாக மலர்ந்து மணம் பரப்பிக் கொண்டிருக்கின்றன. ஆனால் அந்த உபதேசங்கள் இரவல் வாங்கப்பட்டதோ அல்லது உள்நோக்கம் கொண்டதோ அல்லது ஒரு நாட்ட வருக்கு மட்டும் - ஒரு காலத்தவருக்கு மட்டும் - ஒரு குறிப் பிட்ட மொழியினருக்கு மட்டும்தான் பொருந்தக் கூடியது என்ற சுருங்கிய நிலையில் உள்ளதோ அல்ல. அன்றி 'இதனையும் செயல் மேற்கொள்ளலாம் அதனையும் செயல்

மேற்கொள்ளலாம் என்ற ஈரட்டிப்பான முறையில் உள்ளவை களுமன்று. அந்த அருள் மறையின் உபதேசங்கள். மாறாக, 'உபதேசமென்பது இதில் உள்ளவைகள்தாம்' என்ற உறுதிப்பாட்டின் அடிப்படையில் உள்ளவைகள்.

அதுபோல ;

சட்டங்களும் அம்மாமறையின் ஒரு பகுதியாக பரிண மிக்கின்றது. அந்தச் சட்டங்களும் 'இவர்களுக்குத்தான் பொருந்தும் அவர்களுக்கு அவ்வளவாக ஒத்து வராது' என்ற ரீதியிலான நாலாந்தரச்சட்ட திட்டங்களல்ல.

இப்படியாக குர்ஆன் ஷரீபில் உள்ள ஒவ்வொரு அம்சங்களும் இறுதியாக்கப்பட்டதாக - மறு சிந்தனைக்கு தேவையற்றதகவே அமைந்துள்ளது.

ஆகவே மாற்று மதத்தினரோ, அன்றி மாற்றுச் சிந்தனையுள்ளவரோ குர்ஆன் ஷரீபைப் பார்த்தால்- படித்தால் 'இதில் ஓட்டை - அதில் கோளாறு' என எதனையும் சுட்டிக் காட்டிட அதில் ஒன்றுமே இல்லை - இதுவரை அந்த அருள் மறையினைப் படித்த அனை வரும் 'மகுடியின் நாதத்தில் கட்டுண்ட கருநாகம்போல் அதன் அமைப்பில் - சொல்லழகில் - தங்களின் மனதைப் பறி கொடுத்து தேனுண்ட வண்டு போல' சொக்கிப்போய் அதற்கு புகழாரம் சூட்டிடத் தக்க சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டனரே தவிர, எவராலும் குறைகூற, 'இது இல்லை' 'இது மிகைப்பாக உள்ளது. அது தேவையை விடக் குறைவாக உள்ளது' என எடுத்துக் காட்டப்பட வில்லை. இனியும் எவராலும் அது முடியவே முடியாது.

மோனை மறைக்குரிய இந்த மா மகிமையினைத் தான் கவிக்கோ பூசிரி (ரஹ்) அவர்கள்;

''அவையுறுதி பூண்டெட்திரி ஐயுறும் சொல் அற்றவை' என்று கூறிக்காண்பிக்கின்றார்.

அன்றி;

புத்தகமென்றால் அதற்கு 'முகவுரை' என்றும், 'தகவுரை' என்றும் 'அணிந்துரை' என்றும், 'கனிந்துரை' என்றும், 'பதிப்புரை' என்றும், 'பரிந்துரை' என்றும் எத்தனை எத்தனையோ சிபாரிசுகள் விமரிசனங்கள் - விளம்பரங்கள் தேவைப்படுகின்றன. அல்லவா? ஆனால்; எம் இறை மறைக்கு அங்ஙனம் விமரிசனங்கள் எதுவும் தேவையா? இதற்கு பதில் கூறும் முகமாகத்தான் இரண்டாம் ஈற்றில்;

'நவையறுதம் பக்கலுக்கோர் நடுவன் அவை வேண்டவே' என இயம்புகின்றார்; அவர்.

---

مَا حُورِبَتْ قَطُّ إِلَّا عَادَ مِنْ حَرَبٍ
أَعْدَى الأَعَادِي إِلَيْهَا مُلْقِيَ السَّلَمِ ٩٥

**மாஹூரிபத்கத்துஇல் லா-ஆத-**
**மின் ஹரபின்**
**அஃதல்அஆதிஇலை ஹாமுல்கி-**
**ஸ்ஸலமி**

['குர்ஆனைப் பொய்யாக ஆக்கிவிட வேண்டும்' என வரிந்து கட்டிக்கொண்டு அந்த] திரு வசனங்களுடன் [பொருதி] வாதப்போர் நடாத்திய [எத்தனையெத்தனையோ] பகைவர்கள [கடைசியாகச்] சரணடைந்து தங்களது வாதங்களை திரும்பப் பெறாமல் இருந்ததுமில்லை.

இதனை —

திருவாக்குகொடுதருக்கம்' செய்பகைவர்
தோற்றங்குப்
பெருவாதப்போர்திரும்பப் பெற்றார் அல்லார்
இலரே

என மரைக்காயர் சவால் விடுகின்றார்.

க - ரை : குர்ஆனை வென்று காட்டிட வேண்டு மென வீராப்புப் பேசி, விவாத மன்றங்களில் குதித்த மாற்றார் - பகைவர் - அனைவரும் முடிவில் தங்களின் வீராப்பைத் தளர்த்தி - சரண் அடைந்து - தங்களின் மறுப்பையும் - வெறுப்பையும் வாபஸ் வாங்கிய வரலாற் றினைத்தான் 'குர்ஆன் விஷயத்தில்' காண முடிகின்றதே தவிர, அதற்கு மாற்றமான வரலாற்றினைக் கண்டிடவே முடியவில்லை.

## காதுகளை அடைத்துக் கொண்ட பேதமை

வி - ரை : குர்ஆன் ஷரீப் உலகின்கண் இறக்கி யருளப் பட்டவுடன் பலாப்பழத்தினை ஈ மொய்ப்பது போல மக்கள் கூட்டம் அவ்வருள் மறையினை மொய்க்கத் தொடங்கியது.

இதனைக் கண்ட எதிரிகளுக்கு எரிச்சலாக வும், அதே சமயத்தில் புரியாப் புதிராகவுமிருந்தது.

'நீங்கள் வணங்கும் குல தெய்வங்களை பழித்துரைக் கும் அதந்ப் புத்தகத்தினை கண்டு இவ்வளவு மரியாதை

செய்கின்றீர்களே உங்களுக்கு வெட்கமில்லையா? சூடு இல்லையா? சொரணை இல்லையா? என்றெல்லாம் வேகத்தைக் கிளப்பி விட்டுப் பார்த்தனர், பலனில்லை.

'பேய் பிசாசுகளின் பிதற்றல்களே அவை. அதனைச் செவியுற்றால் குடும்பத்தில் பேய் பிசாசு களின் சேஷ்டைகள் பற்றிக் கொள்ளும்' என பயமுறுத் திப் பார்த்தனர். பலன் கிட்டவில்லை. குர்ஆனை ஏற்று குர்ஆன் வழி நடை பயில முன் வராவிட்டாலும், வீடு களிலும், வீதிகளிலும் சந்து முனைகளிலும், சந்தை வெளிகளிலும் குர்ஆன் ஷரீபைப் பற்றிய மகிமை விவா திக்கப்படும், நிலை நாளுக்குநாள் வளர்ந்தோங்கியே வந்தது.

'இந்நிலையினை இனியும் நீடிக்க விடுவது நாட்டிற் கும் நமக்கும் பேராபத்தாக முடியும்' எனக் கருதிய எதிரி கள் - சமுதாயத்தை ஏய்த்து மேய்த்துவரும் சண்டாளர் கள், 'வஞ்சனை மந்திரச் சொல் அவைகள். செய்வினை சூழ் எந்திரச் சொல் அவைகள் - அதனை செவியேற் றால் குலதெய்வங்களின் கோபத்திற்கும் சாபத்திற்கும் இலக்காகும்படி நேரிடும்; ஆகவே குர்ஆன் ஓதப்படுவதை செவியேற்பது பாவம் - தோஷம்' என்றெல்லாம் பித்த லாட்டப் பிரச்சாரம் செய்து மக்கத்து வீதிகளில் நடமாடும் உள்ளூர் வெளியூர் மக்களனைவரும் தங்களது காதுகளில் பஞ்சை வைத்து அடைத்துக் கொள்ளச் செய்தும் பார்த் தனர்.

முடிந்ததா? பலித்ததா? பயனளித்ததா?......

இல்லை...... இல்லை... இல்லவே இல்லை! மாறாக காட்டரபி ஒருவர் காதுகளில் பஞ்சை வைத்து அடைக்கப்பட்ட நிலையில் பக்கத்துக் கடைத்தெருவில் பவனி வருகின்றார். அப்போது சரிவர அடைக்கப்படாத காரணத்தினாலோ என்னவோ, ஒரு காதிலுள்ளிருந்த பஞ்சு கீழே விழ்ந்து விடுகின்றது. அந்த நேரத்தில் எங்கிருந்தோ காற்றில் மிதந்து வருகின்றது ஓர் இன்னோசை. அதனைச் செவியேற்றவுடன் ஒருவித உணர்வு அவரை உந்தித் தள்ளுகின்றது. சப்தம் வந்த திசையில் அவரையும் மீறி அவரின் கால்கள் நடைபோடுகின்றன அங்கே ஒரு பரட்டைத் தலை மனிதர் குர்ஆன் பிரதிகளை வைத்து மெய்யினிக்க - கேட்போர் தம் மெய்சிலிர்க்க - ஓதிக்கொண்டிருக்கின்றார். அதனைக் கேட்ட காட்டரபி 'அன்பரே! இது எந்தக்கவிஞர் யாத்த கவிதை...?, எனக் கேட்கின்றார். 'இது கவிதையோ கற்பனையோ அன்று. இறையின் நற்கதி பெறுவான் வேண்டி, ஏக இறைவனாம் அல்லாஹ்வால் அருளப்படும் மறை' என்று விபரம் சொல்லப்படுகின்றது. ''அப்படியா! அற்புதமாக உள்ளதே! எங்கே இன்னும் கொஞ்சம் ஓதிக் காண்பியுங்கள்' எனக் கெஞ்சும் குரலில் கேட்டு நிற்கின்றார் அந்தக் கிராமத்து அரபி. ஆகவே மேலும் சில பகுதிகள் ஓதிக் காண்பிக்கப்படுகின்றது. என்ன ஆச்சரியம்! கொஞ்சப் பகுதிகளை மட்டுமே செவியேற்ற அவர் உடனடியாக அந்த பரட்டைத்தலையரின் கைபிடித்துக் கலிமாச் சொல்லி இஸ்லாமியத்தில் இணைந்து விடுகின்றார். இப்படியாக பல நிகழ்ச்சிகள் நடைபெற்றதால்,

'ஈதென்ன மந்திர சக்தியா? அல்லது தந்திர சக்தியா? அல்லது யந்திரத்தின் ஈர்ப்பு சக்தியா?' என்ற சிந்தனை எதிர் முகாமிலிருந்த சில நல்லிதயங்களின் உள்ளத்திலும் எழத் தொடங்கியது.

## குர்ஆனை எதிர் கொண்ட நல்ல உள்ளங்கள்

அத்தகு சிந்தனை வரப்பெற்றவர்களில் பலர் 'அதில் அப்படி என்ன தான் இருக்கின்றது. என்று பார்த்து விடுவோமே' என்ற எண்ணத்தோடு குர்ஆனை நேருக்கு நேர் சந்தித்தனர்.

சந்தித்தால் என்ன நடக்குமோ அது நடந்தது ஆமாம்; 'மருந்து, மாயம், வெறும் சாயம்' என்று தெளிதேனைப்பற்றி உபதேசிக்கப் பட்டவர், துணிந்து அந்தத் தெளிதேனில் ஒரு சொட்டை ருசி பார்த்து விட்டால் அப்புறம் உலகமே தடுத்தாலும் அந்தத் தேனின் தீஞ்சுவையை மறப்பாரா? அல்லது மறுப்பாரா? அதுபோல பரீட்சார்த்தமாக குர்ஆனைப் பதம் பார்க்க முன் வந்தவர்களெல்லாம் அதன் பிறகு குர்ஆன்பைத்தியம் பிடித்த பித்தர்களாய் - சித்தர்களாக மாறிடத் தலைப்பட்டனர்.

இந்நிலையில் :

"நபியே ! நீவிர் அம்மக்களுக்கு எடுத்தியம்பிடும் மனித சக்திகளனைத்தும் - மந்திர சக்திகளனைத்தும் - பூத சக்திகள் அனைத்தும் ஒன்றிணைந்து மாப்பெரும்

சக்தியாக உருப்பெற்றாலும் குர்ஆனுக்கு - அதனைப் போன்ற அனைத்து அம்சங்களும் நிரம்பப்பெற்ற - மாற்று குர்ஆனை உண்டாக்கிவிட முடியவே முடியாது''
(என்ற விபரத்தை)

என்ற வசனம் இறக்கியருளப்படுகின்றது.

எப்படியிருக்கும் அவர்களுக்கு? அவமான உணர்ச்சியால் கனன்று காணப்படுகின்றனர். ஆனால் அத்தோடு நின்றிருந்தாலாவது நிலைமை சுமாராக இருந்திருக்கும் அதனையடுத்து;

''நாம் நமது அடியார்பால் இறக்கியருளும் குர்ஆன் விசயத்தில் ஐயம் கொள்வீர்களாயின்; அதிலுள்ளதைப் போன்று ஒரு சிறிய அத்தியாயத்தை இயற்றிக் காட்டுங்கள் பார்க்கலாம். (உங்களால் மட்டும் அது முடியாது போய் விட்டால் நீங்கள் எவர், எவரையெல்லாம் எது எதனையெல்லாம் பெருசாக எடைப்போட்டு வைத்துள்ளீர்களோ அந்த உங்களின்) மேல் மட்டங்களையும் உங்களுடன் கூட்டுச்சேர்த்துக் கொண்டு கூட்டணியாக வேண்டுமென்றாலும் முயன்று பாருங்கள''! என்ற சவால் - அறைகூவல் - சேலஞ்சு - பிரகடனமாகின்றது.

குர்ஆனின் இந்த அறைகூவல் பிரகடனமானதுதான் தாமதம். இடறப்பட்ட சிங்கமென ஆர்பரித்தெழுந்து 'விடக்கூடாது. ஒரு கை பார்த்து விடவேண்டும்... எழுதவோ படிக்கவோ தெரியாத பாமரர்...... இடித்துரைக்குமளவு அவரை வளரவிட்டதே நமது குற்றம் தான்''......

என்று எதிர் முகாமிலுள்ளவார்கள் வரிந்துகட்டி கோதாவில் குதிக்க ஆரம்பித்தனர். ஆனால் கூட்டம் கூட்டமாகவும் தனித்தனியாகவும் குர்ஆனுடைய சவாலை ஏற்று சமராட முனவந்த அனைவருமே அந்த இலக்கியப் பெரும் போரில் நிரந்தரத் தோல்வியையே பரிசாகப் பெற்றனர்.

## இலக்கிய மாமுனி

கடைசியாக 'இலக்கிய மாமுனி' என அக்காலத்தின் அனைத்து அரபியர்களாலும் அங்கீகரிக்கப்பட்ட 'வலீது பின் முகீரா' என்ற கவியரசையே மோதவிட்டுப் பார்த்தனர்.

அவர் வந்தார். அவரிடம் திருமறையின் 16; 90 - ஆம் இறை வசனம் ஓதிக்காண்பிக்கப்படுகின்றது.

அந்த வசனத்தின் சொல் நயம், பொருள் பொலிவு, சுருங்கக்கூறி விளங்கவைக்கும் திறன், கூறியது கூறாமை, நடையழகு ஆகிய இலக்கண இலக்கியத்திற்குரிய அனைத்து அம்சங்களும் கன கச்சிதமாக அமைந்திருக்கும் பாங்கினைச் சுவைத்து ரசித்த கவியரசு வலீது பின் முகீரா மீண்டும் அந்த திருவசனத்தை ஓதிக்காட்டும்படி கேட்டுக் கொள்கின்றார். ஓதிக் காட்டப்படுகின்றது.

அதன்பின் அவர் கூறுகின்றார்: இறையின் மீதாணை ......, இதன் இனிமையே இனிமை, இறையின் மீதாணை

... இதன் பொருள் வலிமையே வலிமை. இதன் நுனி, கற்கண்டுச் சுவையென்றால் இதன் அடி, செங்கரும்பின் தனிச்சுவை. இது நிச்சயமாக மனித சக்தியால் இயற்றப்பட்டதன்று. இது மிகைக்குமே தவிர, ஒருக்காலமும் மிகைப்படாது'' (என்று)

## கவிக்குரிசில்

அது மட்டுமன்று! அதன்பின் அவ்வாண்டு நடந்த சதாவதானப் போட்டியில் கலந்து வெற்றிவாகை சூடி-'கவிக் குரிசில்' என்று சிறப்பிக்கப்பட்ட 'உனைஸ்' என்ற பெருங் கவியைக் களத்தில் இறக்கி விட்டுப்பார்த்தனர். அவரும் சில பரிச்சார்த்தங்களை நடத்தி விட்டு, நான் எத்தனை எத்தனையோ காவியங்களை கவிதை மணித்தொகுப்புகளை-கவியரங்கில் வெற்றி கண்ட நயம்மிகு கவிதைகளையெல்லாம் பார்த்திருக்கின்றேன் - படித்து, ரசித்து ருசித்திருக்கின்றேன். ஆனால் கடவுள் சத்தியமாகக் கூறுகின்றேன். இது (குர்ஆன்) போன்ற எதையும் இதுவரை கண்டுமில்லை கேட்டுமில்லை 'தெய்வ சத்தியம்' இது (-குர்ஆன்) கவிஞர்களின் கவிதையோ, வஞ்சனையாளர்களின் வஞ்சனைத் திரட்டுக்களோ, குறிகாரர்களின் பஞ்சாங்கமோ அல்லவே அல்ல! எனத் தனது தோல்வியினை வெற்றிகரமாக ஒப்புக் கொண்டார். உயர்ந்து நின்றார்.

இத்துடனாவது அந்த எதிரிகள் பணிந்தார்களா இல்லை. அதனையடுத்து, அக்காலத்தில் கவியரங்குகளுக்கெல்லாம் நடுவராக இருக்கத் தகுதிபெற்ற ஒருவராகத் திகழ்ந்த 'ஸம்மாவு பின் தஃலபா' என்பவரைப் பொருத விட்டு 'இவராவது நமது மானத்தைக் காப்பாற்ற மாட்டாரா' என்று எதிர்பார்த்தனர்.

அந்த 'ஸம்மாது பின் தஃலபா' என்ற மூதறிஞரிடம் ஒரு திருவாசனம் ஓதிக்காண்பிக்கப் படுகின்றது.

அவ்வளவுதான். அதே இடத்தில் தாரகை மந்திரமான தவ்ஹீது கலிமாவை மொழிந்து தீனுல் இஸ்லாத்தையே தழுவிக் கொள்கின்றார்; அவர்.

இது மட்டுமா? இன்னும் ஆயிரமாயிரம் தோல்விப் படலங்களை எம்மால் எண்பித்துக் காட்டிட இயலும். அந்த அளவு குர்ஆனின் சவாலை ஏற்று சந்திக்கு வந்தோரெல்லாம் சந்தி சிரிக்கும்படி சரிந்தார்களே தவிர, இன்றுவரை ஒருவரேனும் அந்தக் குர்அனிலுள்ள ஒரு திரு வசனத்தைப் போன்றுகூட இயற்றிக் காட்ட - இயற்றப்பட்டதை எடுத்துக் காட்ட - முடியவே இல்லை.

இப்போது மட்டுமென்ன? காரியம் முடிந்து விட வில்லை. குர்ஆனின் சவால் இன்றைக்கும் ஒலித்துக் கொண்டுதான் இருக்கின்றது. எங்கே பர்க்கலாம் எந்த ஆண்பிள்ளை சிங்கமாவது முன்வாருங்கள்? முடியுமா? முடியாது! முடியாது! முடியவே முடியாது!

இதனைத்தான் இயற்கவி பூசிரி (ரஹ்) அவர்கள் ''திருவாக்கோடு தருக்கம் செய்பகைவர் தோற்றங்குப் பெருவாதப்போர் திரும்பப் பெற்றார் அல்லார் இலரே!'' எனச் சுட்டுகின்றார். சுப்ஹானல்லாஹ்.........

رَدَّتْ بَلَاغَتُهَا دَعْوَى مُعَارِضِهَا

(٩٤) رَدَّ الْغَيُوْرِ يَدَى الْجَانِي عَنِ الْحَرَمِ

**ரத்தத் பலாகதுஹா தஃவா**

**- முஆரிழிஹா**

**ரத்தல் கய்யூரி யதல் ஜானி**

**- அனில் ஹரமி**

குலமகள், (தீயநோக்கோடு) தன்மீது படும் காமுகனின் கொடுங்கரத்தை, தட்டித் தனது கற்பைப் பாதுகாத்திடுவது போல; குர்ஆனின் வாக்கு நயம் (அதன் இலக்கண இலக்கியச் சிறப்பு) தன்னோடு தர்க்கம் செய்திட முன்வரும் பகைவர்களது எதிர் வாதங்களைத் தட்டி முறியடித்து விடுகின்றன.

இதனை -

மானிபெண்டிர்மேல்அயலான் வைத்தகையைத்
தட்டுதல்போல்,
மேனைமறைவாக்குநயம் முறிக்கும்எதிர்
வாதமெல்லாம்!

என மரைக்காயர் இடித்துறைக்கின்றார்.

வி - ரை : சுத்த சத்தியப் பத்தினிப் பெண்ணுடன் குர்ஆனை ஒப்பு நோக்குகின்றார் பூசிரி!

"என்ன, கோன் மறையான குர்ஆனுக்கு ஒப்பா? கூரக் கூடுமா? நினைத்தாவது பார்த்திட முடியுமா?" என ரண்டைக்கு வந்து விடாதீர்கள். முதல் தரமான பத்தினியின் பத்தினித் தன்மைக்கும், முதல்தர இலக்கியங்களில் முதிர்ச்சி பெற்ற இலக்கியமான குர்ஆனின் இலக்கிய நயத்திற்குமிடையே தான் ஒப்பு நோக்குதல்! ஆகவே நூல் கயிற்றில் நடை போடுவது போன்ற விஷப்பரிட்சையில் இறங்கியுள்ள அவரின் அறுகுமுறை எப்படி ஒளிர்கின்றது என்று படித்து ரசிப்போம் - ருசிப்போம்.

## பத்தினியும் - குர்ஆனும்

'தங்கத் தாம்பாளமோ - தந்தத்தில் பதித்த வைரமோ, என வானில் ஒளிரும் நிலவும்; 'அள்ளிச் சிதறிய முத்துக்களோ' என பரவி விரவி பளிச்சிடும் தாரகைகளும் கூட, தூங்கி வழியும் நடு நிசி நேரத்தில், தனக்கே உரிய படுக்கையறையில் அயர்ந்து உறங்கிக் கொண்டுள்ள பேதையை; கரண்டு வறண்டு விட்ட காரணமோ என்னவோ தாரகை போல பளிச்சிடும் விடி விளக்கு கூட அணைந்து, அதனால் அறை முழுவதும் கும்மிருள் பரவியுள்ள வேளையில் - ஓர் கரம் அவளது முழுநிலா முகத்தை - ரோஜா இதழை தொடுவது போல - அவ்வளவு இதமாக, இலேசாக - வருடுகின்றது என்றால், அக்கரம்

சொந்தப்பட்டவனின் கரமாக இருந்தால் - அயர்ந்து போயுள்ள அந்நிலையிலும் கூட - உடனடியாக சொந்தப் பட்டவனின் அந்தக் கரத்தை அள்ளி அணைத்துக் கொள்ளுவாள். இல்லை; அது, ஒரு காமப் பேயனின் கரம் அந்நியனின் கரம் என்றால் - மிக அயர்ந்த நிலையிலும் கூட - உடனடியாக - தீயினை மிதித்து விட்ட உணர்ச்சி யுடன் - அந்தக் கொடுங்கரத்தைப் படார் எனத் தட்டி விட்டுத் துள்ளி எழுந்து, தன்னை - தனது கற்பைப் பாது காத்திட படாத பாடு படுவாள் - ஓடுவாள் - ஒளிவாள் - குய்யோ முறையோ எனக் கதறுவாள். திருட்டுத்தனமாக கற்பைக் கொள்ளையிட வந்துள்ள கொடியவனாயிற்றே இப்படியொரு இடையூறு வருமென எதிர்பார்த்துக் கொடிய ஆயுதம் கூட அவன் கொண்டு வந்திருக்கக் கூடுமே; அல்லது 'காட்டிக் கொடுக்கப் படுகின்றோமே' என்ற உணர்ச்சியில் உந்தப்பட்டு - தற்காப்பிற்காக - கையில் கிடைப்பதைக் கொண்டு தாக்கிடக்கூடுமே, என்றெல்லாம் சிந்திக்க மாட்டாள் அவள். காரணம், தனது உயிரிலும் மேலான கற்பைக் காப்பாற்றுவதில் அவளுக்கு அவ்வளவு அவசரம் - நடுக்கம் - துடிப்பு.

இப்படி 'சின்ன மரணம்' என வர்ணிக்கப்படக் கூடிய உச்ச கட்டமான தூக்கத்திலும் கூட, ஸ்பரிஸ உணர்வா லேயே 'தன்னவன்' என்றும், 'மாற்றான்' என்றும் உணர்ந்து உவக்கவும், உதறவுமான நிலைக்கு வசப்படக் கூடிய பெண்மையினைத்தான் பத்தினித் தன்மையின் 'முதல் தரம்' என்று கொள்ளப்படுகின்றது. இத்தகு முதல் தரமான பத்தினிகளை மற்றவர்கள் 'பத்தினித் தெய்வம்'

என்றே கொண்டாடத் தலைப்பட்டு விடுவர். ஆனால் நாம் அங்ஙனம் கொண்டாட மாட்டோம் - கொண்டாடக் கூடாது, ஆனாலும் 'கற்புக்கரசி' என அத்தகு உத்தமமான பெண்களை உயர்த்துவோம். இங்கே பிரச்னை என்ன வென்றால்,

மீக்கூறிக் காண்பிக்கப்பட்டது போன்ற கற்புக்கரசி மாற்றானின் கை பட்டவுடன் - தனது கற்பிற்கு களங்கம் வந்துவிடக்கூடாது என்பதற்காக - எவ்வளவு வேகமாக அந்த அயலானின் கையைத் தட்டுகின்றாளோ, அதுபோல மோனை மறையாகிய குர்ஆன் ஷரீப் - தன்னின் இலக் கிய நயத்தைக் களங்கப்படுத்துவதற்காக - எதிர் முகாம் களிலிருந்து வரும் எதிர்வாதங்களை- உடனுக்குடன் தட்டி அதன் கூர்மைகளை மளுங்கச் செய்து, இன்றுவரை முதல் தரமான இலக்கியப் பத்தினியாக - கற்புக்கரசியாகத் திகழ்ந்து வருகின்றது. இனியும் இறுதிவரை அத்தகு முதல் தரத்தை முனைமளுங்காமல் பாதுகாத்தே வரும். என்று கூறிக் காண்பிக்கின்றார், கவிக் குரிசில் பூசிரி!

சுப்ஹானல்லாஹ்! எவ்வளவு உயர்ந்த 'ஒப்பு நோக்கு தல்' பார்த்தீர்களா? 'கம்பு நோகக் கூடாது - பாம்பும் சாகவேண்டும்' என்ற தத்துவத்தை எவ்வளவு நாசூக் காகச் செய்து காட்டியுள்ளார் அவர். அன்றி தீனுல் இஸ்லாத்தில் பெண்மைக்கு - கற்பிற்கு - எத்தகு முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது'. என்பதை எப்படி அழகாகச் சித்தரிக்கின்றார் அவர். மர்ஹபா-மர்ஹபா - மர்ஹபா!

لَهَا مَعَانٍ كَمَوْجِ الْبَحْرِ فِي مَدَدٍ
وَفَوْقَ جَوْهَرِهِ فِي الْحُسْنِ وَالْقِيَمِ ﴿٩٤﴾

லஹாமஆனின் கமவ்ஜில் பஹ்ரி -
ஃபீமததின்
வஃபவ்க ஜவ்ஹரிஹி ஃபில்ஹுஸ்னி
வல்கியமி

[அடுத்தடுத்து வந்து கொண்டே இருக்கும்] கடலின் பேரலைகளை போன்று [புதிய புதிய] பொருள் அவ்வசனங்களுக்கு ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்.

நடையழகில், நிலையான மதிப்பில் கடலின் முத்துக் களையும் அலை மிகைத்து நிற்கும்.

இதனை -

கடலின் அலைபோன்றதுவாம் கத்தன் மறை
வாக்கருத்தம்;
சுடருமுத்தின்மேன்மையதாம் சொல்லழகினால்,
மதிப்பால்.

என மரைக்காயர் பாடுகின்றார்.

வி - ரை : கடலின் அலைகளுக்கு ஓய்வு ஒழிச்சல் உண்டோ? கரைநோக்கி வந்த அலை, கடல் நோக்கி போகின்றது. மறுஅலை, கரை நோக்கி வருகின்றது. இது கடல் பிறந்த அன்று முதல் உலகம் அழிந்துபடும் வரை அன்றாட நிகழ்ச்சி. அதுபோல குர்ஆன் ஷரீபின் திரு வசனங்களுக்கு பொருத்தமான பல பொருள்கள்

வந்து போய்க் கொண்டே இருக்கும். ஆனால் அலைகளில், 'முன்னுக்குப்பின் முரண்' இருக்காது. அன்றி கடலின் ஆழத்திலிருந்து எடுக்கப்படும் முத்துக்கள் பல தரப்பட்டவையாக இருக்குமாகையால், அதன் வனப்பும் மதிப்பும் பல தரப்பட்டே இருக்கும். ஆனால் குர்ஆன் வசனங்களின் வனப்பும் மதிப்பும் அப்படியன்று அனைத்து வசனங்களும் அனைத்து அம்சங்களிலும் சம எடை. ஆகவே, அந்த ஆழ்கடல் முத்துக்களை விட இந்த ஆன்மீகக் கடலின் ஆணி முத்துக்கள் மேம்பட்டவை.

இதோ மெஞ்ஞானக் குர்ஆனுக்கு விஞ்ஞான விளக்கம் தந்துள்ள தலைவர் சிராஜுல் மில்லத் அல்ஹாஜ் A. K A. அப்துஸ்ஸமது M. A.,M. P. அவர்கள் வடித்துத் தரும் விளக்கத்தைப் படித்துப் பாருங்களேன்.

## நெருப்பின் நரம்புகள்

இறைவனுடைய ஆற்றல் அளப்பரியது. அவன் படைப்பினங்களைப் பற்றி அறிய, மனிதனுடைய அறியாமையும் இயலாமையும் வெளிப்பட்டுக் கொண்டே இருக்கின்றன!

இறைவன் மனிதனுக்கு தன்னுடைய ஆற்றலைப் புலப்படுத்தும் முறையில் எத்தனையோ நிகழ்ச்சிகளை உண்டாக்கிக் காட்டுகின்றான். இயற்கையில் உள்ள பரிணாமங்களைச் சுட்டியும் காட்டுகின்றான்.

இந்த உண்மையின் ஒளி மனிதனுக்கு அவ்வப்போது பளிச்சிடவே செய்கிறது. ஆனால் அந்த ஒளியின் வழியிலே தன் விழியைச் செலுத்துவதற்குப் பதிலாக அவனுடைய அகந்தையால் கண்ணை மூடிக்கொள்கிறான்!

ஏற்றி வைக்கப்பட்டுள்ள தீபத்திலிருந்து உமிழும் வெளிச்சம் அவனுக்கு விளக்கம் தந்திருக்க வேண்டும். ஆனால் அவனிடத்தில் ஏற்பட்டுள்ள ஆணவத்தால் அந்த வெளிச்சமே அவன் பார்வையைப் போக்கி விடக் கூடிய தன்மையில் அமைந்துவிட்ட பரிதாபமான வரலாற்றை திருக் குர்ஆன் அழகுபட சுட்டிக் காட்டி இருக்கிறது.

இவர்களுடைய உதாரணம் ஒருவ(ரைச் சூழ்ந்திருந்தோ)ரின் உதாரணத்தை ஒத்திருக்கின்றது. (அதாவது: அபாயகரமான காடடில் அகப்பட்டுக் கொண்டவர்களுக்கு வழி அறிவிக்கும் பொருட்டு) அவர் தீயைமூட்டி, (அதனால்) அவரைச் சூழவும் பிரகாசம் ஏற்பட்ட சமயத்தில், (அவர்களுடைய தீயச்செயலின் காரணமாக) அல்லாஹ், அவர்களுடைய (பார்வைப்) பிரகாசத்தைப் போக்கி, பார்க்க முடியாத காரிருளில் அவர்களை விட்டு விட்டான்.

(அத்துடன் இவர்கள்) செவிடர்களாகவும், ஊமையர்களாகவும், குருடர்களாகவும் ஆகி விட்டார்கள். ஆதலால் இவர்கள் (அபாயகரமான நிலையிலிருந்து மீளவே மாட்டார்கள்.

அல் குர்ஆன் (அத் : 2 வச : 17, 18)

ஒளி, பிரகாசம் தரக்கூடியது. ஆனால் அந்த பிரகாசமே கண்ணின் பிரகாசத்தைப் போக்கடிக்கிறது என்றால் அது எவ்வளவு வேதனை தரத்தக்க செய்தி!

அறிவு, உலகின் நிகழ்ச்சிகளுக்கெல்லாம் உரிய வெளிச்சத்தை - விளக்கத்தை இயற்கையாகவே தரக் கூடியது. என்றாலும் அறிவின் முன்னே, ஆணவம் தலை தூக்கும்போது அந்த அறிவே இருள் அடைந்து விடக் கூடிய உண்மையைத்தான் திருக்குர்ஆன் அழகிய உவமானத்துடன் சொல்லிக் காட்டுகிறது.

'அறிவும் இறைவனுடைய அருட்கொடைதான்' என்ற உள்ளுணர்வு மனிதனுக்கு எப்போதும் இருக்க வேண்டியது அவசியம். இந்த உள்ளுணர்வை 'தக்வா' (இறையச்சம்) என்றும் குறிப்பிடுவது உண்டு. ஆகவே தான் 'இறைவனுக்கு அஞ்சுவது' என்பது அறிவு ஞானத்தின் ஆரம்பமென சமயத் துறையிலே வற்புறுத்தப்பட்டிருக்கிறது.

மனிதன் இறைவனுடைய இயற்கை நிகழ்ச்சிகளைக் கொண்டு நல்லறிவு பெறத்தக்க முறையில் - அந்த நிகழ்ச்சி களை ஒரு தனி அழகுடன் - அவன் சொல்லிக் காட்டும் வசனங்கள் திருக்குர்ஆன் முழுவதும் பரவிக் கிடக்கின்றன.

அவன் சொல்கிறான்: (உங்களுக்குப்) பயத்தையும், நயத்தையும் தரக்கூடிய மின்னலை, அவனே உங்கள் முன் பிரகாசிக்கச் செய்கிறான். (மழையைச் சுமந்த) பளுவான மேகங்களையும் அவனே கிளப்புகிறான்.

இடியும் அவன் புகழ் பாடுகிறது. அவ்வாறே அவனுக்குப் பயந்து மற்ற மலக்குகளும் அவனைத் துதி செய்து புகழ்கின்றனர்.

அவனே இடிகளை விழச் செய்து அதைக் கொண்டு அவன் நாடியவர்களைத் தாக்குகின்றான்'

(அத் : 13 வச : 12, 13)

மின்னல் - மழை பொழியும் மேகம் - அதிர்ச்சி தரும் இடி, இந்த மூன்று நிகழ்ச்சிகளை அவன் சுட்டிக் காட்டும்போது நம்மைச் சுற்றிச் சூழ அன்றாடம் நிகழும் இந்த நிகழ்ச்சிகளைப் பற்றி மேலும் அறிந்து கொள்ள நம்முடைய அறிவாசை தூண்டிவிடப்படுகிறது.

மின் வெட்டுகிறது. அது நம் கண்ணைப் பறிப்பது போல் அச்ச உணர்ச்சி ஏற்படுகிறது. அதே நேரத்தில் மின் வெட்டுவது, பெய்ய இருக்கும் மழைக்கும் முகமுன் கூறுவது போல் அமைந்திருக்கிறது.

'ஆற்று வெள்ளம் நாளைவரத் தோற்றுதே குறி
மழையாள மின்னல், ஈழ மின்னல் சூழ மின்னுதே'

என்பது தமிழ்ப் பாடல்.
'மின்னுக்கு எல்லாம் பின்னுக்கு மழை'
என்பது பழைய தமிழ் மொழி.

மழை எப்பொழுதுமே உயிர்ப்பின் சின்னமாக கருதப் படுகிறது, வரண்டு மாண்டு இருக்கும் நிலத்தையும் மழை நீ உயிர்ப் பிப்பதைப் பார்க்கிறோம் அல்லவா?

ஆகவே தான், மின்னல் நமக்கு பயமும் தருகிறது. நயமும் தருகிறது என இறைவன் நயம்படக் கூறு கிறான்.

இடியும் மின்னலும் இரண்டாகப் பிரிக்க முடியாத அளவு நிகழ்பவை. மின் வெட்டுவது கணநேரம். அதா வது ஒரு வினாடியில் பத்து லட்சத்தில் ஒரு பகுதி நேரம். ஆனால் அதனோடு எழும் இடி முழக்கம் நம்மை அதிரச் செய்து விடுகிறது.

மனிதன் இந்த இடி முழக்கத்திற்கு எவ்வாறு அஞ்சு கிறான் என்பதை அவனைப் படைத்த இறைவன் சொல்லிக் காட்டுகிறான்.

'அடர்ந்த இருளும் இடியும் மின்னலும் உடைய மேகம் பொழியும் மழையில் அகப்பட்டுக் கொண்ட(வர் களின் உதாரணத்தை ஒத்திருக்கின்றது. அவ்வாறு அகப்பட்டுக் கொண்ட இவ)ர்கள், இடி முழக்கங்களால் மரணத்துக்கு பயந்து தங்களுடைய விரல்களைத் தங்களுடைய காதுகளில் நுழைத்து (அடைத்து)க் கொள்கின்றனர். ஆனால் அல்லாஹ், நிராகரிக்கும் இவர் களை (எப்பொழுதும்) சூழ்ந்துக் கொண்டிருக்கின்றான்.'

(அத் : 2வச : 19)

இறைவனால் உண்டாக்கப்படும் இடி முழக்கத்திற்கு மனிதன் அஞ்சுகிறான். ஆனால் அந்த இடி முழக்கத் திற்கு சொந்தக்காரனான அல்லாஹ்வுக்கு அஞ்ச மறுக் கிறான் - மறக்கிறான்.

என்னதான் காதிலே விரலை அடைத்துக் கொண்டு அவன் உயிரைப் பாதுகாக்க மனிதன் முயற்சித்தாலும் 'இறைவன் அவனை சூழ்ந்து கொண்டே இருக்கிறான்' என்று திருக் குர் ஆன் சொல்லும் போது மனிதனுடைய பாதுகாப்பற்ற தன்மை தெரிகிறது அல்லவா?

அதிலே இன்னொரு நகைச்சுவை; இறைவனைப் புகழ்ந்துபாட வேண்டிய மனிதன் தன் செயல்களால் இகழ்ந்து நிற்கிறான்!

இயற்கை இறைவனின் துதி பாடுகிறது.

'இடியும் அவன் புகழ் பாடுகிறது (அவ்வாறே) அவனுக்குப் பயந்து மற்ற மலக்குகளும் அவனைத் துதி செய்து புகழ்கின்றனர்' என்று திருக் குர்ஆன் கூறு கிறது.

ஆக அவனுக்கு எந்நேரமும் ஏவல் புரிந்தே நிற்கும் அமரர்களும் அவனைப் புகழ்ந்து துதிக்கிறார்கள்.

இடியும் அவன் புகழ் பாடி நிற்கிறது. இடி முழக்கம் மனித இதயத்திலே அச்சத்தை விளை விக்கிறது.

அந்த இடியும் இறைவனை அஞ்சுகிறது. ஆனால் இடியைக் கேட்டுத் துடிக்கும் மனிதன் இறைவனை அஞ்சவேண்டிய முறையிலே அஞ்ச மறக்கிறான் - மறுக் கிறான்.

மின்னல், இடி, மின்னொளி, இடி முழக்கம் என் றெல்லாம் கூறுகிறோமே - இது எப்படித் தான் உண்டா கிறது?

அமெரிக்காவில் உள்ள 'அரியோனா' பல்கலைக்கழகத்தின் பேராசிரியர் E. பிலிப் கிரிதர் [ PHILIP KRIDER ] அவர்களும் அவருடைய சக விஞ்ஞானிகளும் இது பற்றி பல்லாண்டுகளாக விரிவாக ஆராய்ந்து சில உண்மையை வெளிப்படுத்தி இருக்கிறார்கள்.

''இடி முழக்கங்களோடு புயலைப் பொதிந்த மேகங்களில் ஏற்படும் மாற்றங்களால் விளையும் மின்சார சக்தியினால் உண்டாகும் மின்னொளியே 'மின்னல்' என அறியப்படுகிறது'' என்பது அவர் தரும் விளக்கம்.

மனிதத் தோற்றத்திற்கு முன்னிருந்தே இந்த மின்னொளியின் தோற்றமும் இருந்திருக்கிறது. மனித வாழ்வோடு அதன் வாழ்வும் ஒட்டியே வந்திருக்கிறது.

இன்னும் சொல்வதானால், மனித வாழ்வுக்கு இன்றியமையாத நெருப்பை - மின் சக்தியை - தூண்டிவிட்டதே மின்னல்தான் என்பது அவர்கள் ஆராய்ச்சியின் விளைவு.

☐ உலகிலேயே, ஒவ்வொரு நொடியும் 1800 இடி முழக்கங்கள் நிகழ்ந்து கொண்டிருக்கின்றன என கணக்கிடப்பட்டிருக்கிறது.

☐ அதாவது, மேற்கண்ட வசனத்தை நீங்கள் படித்து முடிக்க மூன்று வினாடிகள் ஆகின்றன. இதே நேரத்தில் உலகின் பல்வேறு பகுதிகளில் 3,24,000 மின்னொளிகள், இடி முழக்கங்கள் - தோன்றி மறைகின்றன.

☐ இதை மேலும் விளக்கிச் சொல்வதானால், நாள் ஒன்றுக்கு 80 கோடியே 39 லட்சத்து இருபதனாயிரம் மின்னல் கீற்றுக்கள் ஒளி சிந்துகின்றன.

ஐக்கிய அமெரிக்காவிலுள்ள 'ஃபிளோரிடா' மாநிலத்தில் அதிகமாக மின்னல் வீச்சு இருக்கிறது.

ஆனால், அதைவிட தட்ப வெட்பம் மிகுந்த பூமத்திய ரேகைப் பகுதியான 'ஜாவா தீவில்' (இந்தோனேஷியாவில் உள்ளது) வருடத்தில் 300 நாட்கள் மின்னொளி வீசிக் கொண்டே இருக்கிறது!

கருக் கொண்ட - சூல் கொண்ட - மேகத்திரளை வானத்திலே காண்கின்றோம். கருமையாக நமக்குத் தோன்றும் அந்த மேகக் கூட்டங்களுக்குள்ளே, உலகையே திடுக்கிடச் செய்து அழிக்கும் அத்தனை பயங்கரங்களும் பொதிந்து இருக்கின்றன.

அதில் கீழிருந்து விரைவாக மேல்நோக்கிச் செல்லும் காற்றழுத்த மண்டலங்கள் உண்டு, உறைந்துபோன பனிக் கட்டிகள் - சமயங்களில் கல் மாரி பொழிகின்றனவே அத்தகைய பனிக்கட்டிகள்-நீர் தேக்கங்கள்-நீரை உறைய செய்யும் தட்ப வெட்பம் - இவையாவும் சேர்த்து - மிக வன்மை வாய்ந்த சக்தியை உண்டாக்குகின்றன.

பொதுவே 'பாஸிடிவ்' சக்தி மேல் பகுதியில் இருக்கிறது; 'நெகடிவ்' சக்தி அடிப்பகுதியில் காணப்படுகிறது.

இத்தகைய சக்திகள் ஒரே மேக மண்டலத்திற்குள்ளே தான் இருக்கும் என்பதில்லை. பல சந்தர்ப்பங்களில் அடுத்துள்ள மேக மண்டலத்தைத் தழுவியும் இந்த சக்திகள் அமைவதுண்டு.

'பாஸிடிவ் - நெகடிவ்' ஆகிய இருவேறு சக்திகள் பலங்கொண்டு ஒன்றை மற்றொன்று தழுவ முற்படும்போது, இடையே உள்ள காற்று மண்டலத்திலுள்ள பௌதீகப் பொருள்கள் வெடித்து, மிகப்பெரிய அளவில் தோன்றும் மின்சாரமே மின்னொளியாக தன் ஒளிக் கீற்றுகளை நீட்டுகிறது!

அப்போதுதான் 'மின்வெட்டுகிறது' என நாம் கூறுகின்றோம்.

கண்ணிமைக்கும் நேரத்திற்குள் இக்காட்சி நிகழ்வதால் அதை 'மின்வெட்டுகிறது' என நாம் குறிப்பிடுகிறோம்.

ஒரு விநாடியின் பத்து லட்சத்தில் ஒரு பகுதிக்கு, 'ஒரு மைக்ரோ செகண்ட் ( - Microsecond )' எனச் சொல்வது உண்டு. இந்த மைக்ரோ செகண்டிலும் பத்தில் ஒரு பகுதி நேரத்திற்கு ஒன்று வீதம் மின் வெட்டு நிகழ்ந்து வருவதாக பேராசிரியர் கிரிதர் குழுவினர் கூறுகிறார்கள்.

மின்னலின் ஒளி ரேகைகள் படருவதிலே பல நூற்றுக்கணக்கான வகைகள் உண்டு.

வானத்திலே ஒளியால் கீறியது போல் தோன்றுவதும் உண்டு. ஒரு ரேகையிலிருந்து பல பிரிவுகள் ஏற்பட்டு ஒவ்வொரு ரேகையும் வரைபடம் எழுதுவது போல் பரவுவதும் உண்டு.

ஒரே வரி வட்டத்தில் விட்டு விட்டு மின்னொளி பாய்ச்சுவது போன்ற தோற்றம் ஏற்படுவதும் உண்டு.

நெருப்பாலான பந்து போல பாய்ந்து செல்லும் மின்னலும் உண்டு.

வானத்தில் தோன்றி, பூமியில் தொடும் வகையில் உள்ள மின்னல்களே பெரும் பாலானவை.

ஒரு சில சந்தர்ப்பங்களில் பூமியிலிருந்து, வானை நோக்கி மின்னொளி பாய்ந்து செல்வதும் உண்டு.

மின்னல் தன் ஒளி ரேகைகள் எனும் ஏணிகளின் வழியாக படிப்படியாக - பூமியை நோக்கி வரும்போது, பூமியிலிருந்து வான்னோக்கி எழும் 'பாஸிடிவ்' சக்தி அதைச் சந்திக்க விரைந்து எழுந்து செல்கிறது. அம்மாதிரியான நேரங்களில், அந்த மின்னல்களின் மோதலால் சிந்தப்படும் ஒளிச் சிதறல்களையும் நாம் காண முடிகிறது.

வேறு சில சந்தர்ப்பங்களிள் பூமியிலிருந்து அடுத் தடுத்து எழுந்து வானை நோக்கிச் செல்லும் மின்னல் ஒளிகளை நாம் கணக்கிட முடியா அளவு விரைந்து செல்வது உண்டு.

'மின்வெட்டு நேரம்' என, நாம் துரிதமாகக் கருதும் நேரத்தைக் குறிப்பிடுகிறோம். அந்த நேரத்தைக் கூட இப்போது கணக்கிட்டு விட்டார்கள்.

சுமார் ஒரு அங்குலமே அகலமுள்ள - மின்னல் அமைத்துக் கொள்ளும் - விண்ணின் வாயு மண்டல ஏணி வழியாக, ஒரு வினாடிக்கு 96,000 கி. மைல் மின்னல் பிரயாணம் செய்கிறது.

அதாவது, வெளிச்சம் செல்லும் வேகத்தில் மூன்றில் ஒரு பங்கு வேகம்.

பழைய மைல் கணக்கில் சொல்வதானால் ஒரு விநாடிக்கு 60 ஆயிரம் மைல் பிரயாணம் செய்கிறது, மின்னொளி!

ஒளியின் வேகத்தை அறிந்தோம்.

அந்த உஷ்ணத்தின் அளவையும் தெரிய வேண்டு மல்லவா?

மின்னலின் உச்சக்கட்டத்தில் அதன் உஷ்ண அளவு 33000 சென்டி கிரேடு ஆகும்.

ஆனால் சூரியனின் மேல் மட்டத்தில் உள்ள உஷ்ண அளவு எவ்வளவு தெரியுமா? வெறும் 6600 சென்டிகிரேட் தான்.

ஆமாம் சூரியனது மேல்மட்டத்தை விட ஐந்து மடங்கு உஷ்ணம் மின்னலின் ஒளிக்கீற்றில் இருக்கிறது!

அதாவது, பெரிய அளவிலான மின்சார உற்பத்தி நிலையங்கள் - 10 நிலயங்களில் - உற்பத்தி செய்யப்படும் மின் அளவை விட அதிகமான மின்சக்தி ஒரு மின்னல் கீற்றில் இருக்கிறது !

சாதாரணமாக 100 சென்டிகிரேட் உஷ்ணத்தை நம் மால் தாளமுடியவில்லை. 33000 சென்டிகிரேட் மின்ன லின் உஷ்ணம் என்றால் நிதானித்துக் கொள்ளுங்கள்.

இருந்தவாறே இறந்து கிடக்க,
பொழுது விடிந்தது.'

இந்த வசனத்தைத் திரும்பத்திரும்பப் படித்துப் பாருங்கள்.

அவர்கள் இருந்தவாறே,
இறந்து கிடந்தார்கள்!
அவர்கள் வாழ்வு முடிந்தது!
அவர்கள் வாழ்வு முடிந்தவுடன்,
உலகம் முடியவில்லை
பொழுது விடிந்தது!
புலர்ந்த பொழுதுக்குப் பின்னரும்
உலகம், வாழ்ந்தது: வாழ்ந்து வருகிறது!

ஆனால், அழிந்த மக்களின் வாழ்க்கையிலிருந்து பெற வேண்டிய படிப்பினையை உலகம் பெற வேண்டாமா? அதைத்தான் திருக்குர்ஆன் கேட்கிறது!

இடி முழக்கம் - மின்னொளி பற்றிய 1984 மார்ச் மாத 'SPAN' என்ற ஆங்கில இதழில், பேராசிரியர் கிரிதர் குழுவினரின் ஆராய்ச்சிக் கருத்துக்களின் தொகுப்பு ஒரு கட்டுரையாக வெளிவந்திருக்கிறது.

அதில், மின்னல், இடி முழக்கத்தின் போது, மனிதர்கள் தங்களைக் காப்பாற்ற எப்படி நடந்து கொள்ள வேண்டுமென ஒரு குறிப்பு காணப்படுகிறது.

அது இது தான்:

The safest posture to assure out in the open is "a position in which you have got your knees and toes tucked together and are hunched over with a relatively small amount of yourself in contact with the ground"

இதை வரிக்கு வரி மொழி பெயர்ப்பதை விட, 'ஸுஜூது' செய்யுங்கள் என எழுதினால் முஸ்லீம்களுக்கு முழுப் பொருளும் புரியும் என நம்புகிறேன்.

இதைப்படித்த போது நான் ஆரம்பத்திலே குறிப் பிட்டுள்ள,

'இடியும் அவன் புகழ் பாடுகிறது' என்ற திருக் குர்ஆன் வசனம்தான் என் நினைவுக்கு வந்தது.

ஆமாம், 'இடியும் அல்லாஹ்வுக்கு அஞ்சி அவன் புகழ் பாடத் தலைப்படும் போது, அதைக் கண்டு அஞ்சும் மனிதன், தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, அல்லாஹ்வுக்கு அஞ்சி அவன் புகழ் பாடும் விதத்தில்

'ஸஜ்தா' செய்வதை விட மேலான மார்க்கம் எது?

அதைத்தானே, பேராசிரியர் E. ஃபிலிப் கிரிதரும் அவரைச் சார்ந்த விஞ்ஞானிகளும் இன்று சொல் கிறார்கள்.

ஆதார நூல் : மணிவிளக்கு பிப்ரவரி 1984 மாத இதழ்.

சுப்ஹானல்லாஹ்! அப்படி என்றால் குர்ஆன் வசனங்களின் அர்த்தங்களை மனித சக்தியால் மட்டிட முடியவா செய்யும்?

இதனைத்தான் 97-ம் கண்ணியில் கடலின் அலை போன்றதுவாம் கத்தன் மறைவாக்கருத்தம் - என்று எழில்பட இமாம் பூசிரி இயம்புகின்றார்.

فَمَا تُعَدُّ وَلَا تُحْصَى عَجَائِبُهَا
وَلَا تُسَامُ عَلَى الْإِكْثَارِ بِالسَّأَمِ (٩٨)

ஃபமாதுஅத்துவலா துஹ்ஸா -
- அஜாயிபுஹா
வலாதுஸாமுஅலல் இக்ஃதாரி -
- பிஸ்ஸஅமி

அன்றியும் [அல்லாஹ்வின் திரு வசனங்களான] அவற்றின் நேர்நிகரற்ற அற்புதங்கள் (மனிதக்) கணிப்புகளுக்கு அடங்காது.

இன்னும்; அவ்வசனங்களை திரும்பத் திரும்ப ஓதிடுவதாலும் அலுப்பு ஏற்படவே ஏற்படாது.

இதனை -

கத்தன்மறைஅற்புதங்கள் கணிப்புக் களவுக்கடங்கா
நித்தம்அதைஓதிவரும் நேயர்அடை யார்அலுப்பே
என மரைக்காயர் பாடுகின்றார்.

வி - ரை : ஆன்மீகக் கடலில் ஆணிமுத்தெடுக்க முற்பட்ட அருட்கவி, அள்ளி அள்ளி பார்க்கின்றார். அள்ளிய அவரின் கரம் அயர்ந்து வலிமெடுத்து விட்டனவே தவிர, அந்த ஆணிமுத்துக் குவியலில் அணுப்பிரமாணம் கூட குறைந்ததாகக் காணவில்லை. இதனையே 'கத்தன் மறை அற்புதங்கள் கணிப்புக்கடங்கா என்று சொல்லிக் காண்பித்து விட்டு அதன் பின்னே அளப்பெரும் பேருண்மையொன்றை அவிழ்த்து விடுகின்றார். அதாவது;

சுவைகூடிய நாவலென்றால் கூடிப்போனால் பத்து முறை வேண்டுமானால் படிக்கலாம். ஆனால் அதற்குமேல் ஒரே நாவலைப் படிக்க முடியுமா? சலிப்பும் அலுப்பும் ஏற்பட்டு விடுகின்றது. அல்லவா? ஆனால் கோன்மறை குர்ஆன் அப்படியா? ஓராயிரமென்ன, ஒரு லட்சமென்ன, ஒருகோடி முறை அதை ஓதினாலும் ஓதஓதச் சுவை கூடி கூடி இன்னும் கொஞ்சம் ஓதலாமே... இன்னும் கொஞ்சம் ஓதலாமே' என்ற ஆசை வருமே தவிர ''சேச்சே இதையே திரும்பத் திரும்ப படித்துக்கிட்டு' என்ற சலிப்போ அலுப்போ ஏற்படுவதே இல்லை. அல்லவா? இன்று மஸ்ஜிதுகளில் போய்ப் பாருங்களேன்; நாளொன்றுக்கு ஐந்து நேரத் தொழுகைகளில் குர்ஆனின் வசனங்களை ஓதுகின்றார்கள். அதிலொரு அதிசயமென்ன வென்றால் ஒரே அத்தியாயத்தை - சூரத்துல் ஃபாத்திஹாவை - மட்டிலுமே 46 முறை ஓதிட வேண்டியுள்ளது. அத்தோடு இணைப்பு சூராக்கள் வேறு ஓதியாக வேண்டும். ஒரு நாளைக்கா? அல்லது இரண்டு நாளைக்கா? ஒரு மாதமா? இரண்டு மாதங்களா? ஆயுள் முழுக்க இப்படி நாள் ஒன்றுக்கு குறைந்த அளவு 46 முறை என்றால்

பார்த்துக் கொள்ளுங்களேன். போதாக்குறைக்கு தொழுகை யல்லாத நேரங்களில், குறிப்பாக காலை மாலை வேளை களில் ஓதுகை - சரி அப்படித்தான் ஓதுகின்றார்களே எல்லா நேரங்களிலும் ஒரே பாவனையோடு ஓதுகின் றார்களா? காலைத் தொழுகையில் ஓதும்போது அழும் பாவனை, மதியத் தொழுகையில் ஓதும்போது உருகிடும் பாவனை. ஆனால் எவராவது முகம் சுளிப்பார்களா? 'ச்சு' கொட்டுவார்களா? இந்த உன்னத நிலையினைத்தான் சன்னதிக்கவி பூசிரி

நித்தம் அதை ஓதிவரும் நேயர் அடையார் அலுப்பே!

என எண்பித்துக் காட்டுகின்றார்.

---

قَرَّتْ بِهَا عَيْنُ قَارِيهَا فَقُلْتُ لَهُ
لَقَدْ ظَفِرْتَ بِحَبْلِ اللهِ فَاعْتَصِمِ ﴿٩٩﴾

கர்ரத் பிஹா அய்னு காரிஇஹா ஃப -
- குல்த்து லஹூ
லகத் ழஃபிர்த்த பிஹப்லில்லாஹி -
- ஃபஃதஸிமி

கோன்மறையாம் குர்ஆனை ஓதுபவனின் கண் கள் குளிர்ந்து மலர்ந்திடும். [அங்ஙனம் உணர்ச்சி வயப்படும்] அத்தகு பக்தனுக்கு' [அருளுக்குரிய அடி யானே] நீ அல்லாஹ்வின் கயிற்றை பற்றினதால் வெற்றிகொண்டாய். ஆனாலும் [இத்தோடு மகிழ்ந்து விடாமல் இன்னமும்] அதனை இருகப் பற்றிநில்' என நான் [புலவர் பூசிரி] உபதேசம் செய் திடுவேன்.

இதனை

மறையோதுவோன்விழிகள் மலர்ந்துகுளி ரும்அதற்கு
'இறைகயிற்றால்வெற்றிகண்டாய்! இறுகப்பிடி!'
என்றுரைப்பேன்

என்று மரைக்காயர் பாடுகின்றார்.

வி - ரை : குர்ஆன் உயிர்த்துடிப்புள்ளது. ஆகையால் அது, தன்னை அணுகுபவர்களை ஆத்ம விசாரணைக் குள்ளாக்குகின்றது. ஆதலால் அந்த அருள்மறையினை ஓதுவோர் மூலமொழியாம் அரபி அறியாத அன்னியர் களாக இருந்து அதனைக் கிளிப்பிள்ளை பாடமென ஓதினாலும் விசும்பலும், விழிநீர் உகுத்தலும் தன்னையறி யாமலேயே ஏற்பட்டு விடுகின்றது மிகப் பலருக்கு.

அங்ஙனம், விசும்பும் நிலை, விழிநீர் வடிக்கும் நிலை ஏற்படுவதையே 'மறையோதுவோன் விழிகள் மலர்ந்து குளிரும்' என்றோதுகின்றார்; இங்கே.

அந்த நிலை எவர் எவருக்கெல்லாம் ஏற்படுகின்றதோ அவர் இறையச்சம் வரப்பெற்றவராகின்றார். எவருக்கு இறையச்சம் வரத் தொடங்கி விடுகின்றதோ, அவர் மறுமைக்கும் இம்மைக்கும் உரிய நல்லடியார் என்பதில் யாது ஐயம்?

இதனையே; மறையோதும் உனக்கு விம்மல் விழிநீர் வடித்தல் ஏற்பட்டு விட்டால், வெற்றிப் பாதை புலப்படத் தொடங்கி விட்டது எனப் பொருள். ஆகவே மறையோதும் அந்தப் பழக்கத்தை விடாப்பிடியாகப் பிடி.

வெற்றிக்கலியை வெற்றி கொள்வாய். என சிபாரிசு செய்கின்றார் பூசிரி (ரஹ்)

إن تتلها خيفة من حر نار لظى
أطفأت حر لظى من وردها الشبم

**இன் தத்லுஹா கீஃபதன்(ம்) -**
**மின் ஹர்ரி நாரிலழா**
**அத்ஃபா அத்ஹர்ரலழா மின்(வ்)விர்தி**
**- ஹஷ்ஷபிமி**

கொடிய நரகின் வெம்மையைப் பயந்தவனாக நீ அதன் வசங்கனளை ஓதி வந்தால், அவை வெளிக் கிளம்பும் உதடுகளில் சுறக்கும் 'ஈரநைப்பு' கொண்டே துளிர்விட்டெரியும் நரகின் வெம்மையை உன்னால் அணைத்து விடமுடியும்.

**இதனை -**

விடுஞ்சுடர்த்தீசேர்நரகின் வெம்மையஞ்சி
- ஓதுவையேல்,
நெடுஞ்சுடர்த்தீவெப்பணைப்பாய்! நின்வாய்க்
- குளிர்ச்சியினால்

என மறைக்காயர் பாடுகின்றார்,

க - ரை : கற்பனைக் கெட்டாத கொடும் நோவினைகள் நிறைந்த நரக வாழ்க்கையினை நினைந்து - நெஞ்சம்

நெக்குருகி - அந்த அச்ச உணர்வோடு - குர்ஆன் ஷரீபை ஓதி வந்தால் ஓதுவோரின் வாய் ஒருவகைக் குளிர்ச்சி அடைகின்றது. அந்த வாய்க்குளிர்ச்சியே, நரக வெப்பங்களை அணைக்கும் குளிர் நீராய் மாறி, நரக வாழ்க்கையிலிருந்து அந்த அருள்மறை ஓதியவனுக்கு விடுதலை வழங்குகின்றது.

## வாயின் மேல்முரசு
## மந்திரம் பதிந்த நாடா

வி - ரை ; ஒரு மனிதனுக்குத் தவணை முடிந்து விட்டால் அவனிடம் மலக்கல் மவ்த்து (அலை) அவர்கள் வந்து, அவனது பாதத்திலிருந்து உச்சந்தலை வரையுள்ள ஒவ்வொரு உறுப்புக்களாகச் சோதித்து பார்த்து விட்டு ஏகனாம் இறைவனிடம் ''இறைவா! இவனது எந்த உறுப்புக்களிலும் இம்மியும் நன்மை இல்லை. இவன் விசயத்தில் நான் எப்படி நடந்து கொள்ளப் பணிக்கின்றாய்?'' எனக் கேட்பார். அதுபோது ''அவனது வாயினுள் உள்ள மேல் முரசங்களைப் பரிசீலித்துப்பாரும்'' என இறைவன் அவருக்குக் கட்டளையிடுவான். ஆகவே அவனது வாயின் மேல் முரசத்தைச் சோதித்துப் பார்த்து - அந்த முரசங்களில் 'லாயிலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹ்' என்ற கலிமாவின் ஒலி பதிந்திருப்பதாகக் கண்டு அதனை இறைவனிடம் முறையிடுவார், அப்போது தாரகை மந்திரமான தவ்ஹீது கலிமாவினை இவன் அதிகமதிகம் உச்சாடணம் செய்பவனாக வாழ்ந்தான். அதன் அறிகுறிகள்தான் இவனது வாயின்

மேல் முரசங்களில் பதிந்துள்ளது. அங்கனம் கலிமாவை அதிகம் திக்ரு செய்த பொருட்டால், இவனது பாவங்களை நான் மன்னித்து, இவனை எனது நல்லடியானாக ஏற்றுக் கொண்டேன் - ஆகவே இவனது ரூஹை (உயிரை) மூமினான நல்லடியானின் உயிரைக் கழட்டுவது போல இலேசாகக் கழட்டும்'' என மலகல் மவ்த்து (அலை) அவர்களுக்கு ஏகனாம் நம் இறைவன் கட்டளையிடுவான் என எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

நபிகளார் அவர்களின் அந்த முன்னறிவிப்பையே நமது பூசிரி அவர்கள் இவண் பிரதிபலிக்கின்றார்கள்.

அதாவது தவ்ஹீது கலிமாவினை மொழிந்து உச்சாடணம் - திக்ரு செய்து வரும் பழக்கத்தை நிரந்தரமாகக் கொண்ட அடியான் அந்த கலிமாவை திக்ரு - செய்த பொருட்டால் மட்டுமே நல்லடியானாக ஏற்கப்படும் பேறு பெறுவதைப் போல, குர்ஆன் ஷரீபை அனுதினமும் - காலை மாலை வேளைகளில் - ஓதுவதைப் பழக்கமாகக் கொண்ட அடியான், மற்ற நற்செயல்களில் ஃபகீராக இருந்து விட்டாலும், அந்த குர்ஆன் ஓதும் பழக்கத்தினால் மட்டிலுமே நல்லடியானாக ஏற்கப்பட முடியும், என இங்கே உணர்த்துகின்றார்.



كَأَنَّهَا الْحَوْضُ تَبْيَضُّ الْوُجُوهُ بِهِ
مِنَ الْعُصَاةِ وَقَدْ جَاءُوهُ كَالْحُمَمِ (١٠١)

**கஅன்னஹல் ஹவ்ழு தப்யழ்ழுல் -**
**- உ_ஜூஹு பிஹி**
**மினல்உ_ஸாத்தி வகத் ஜாஊஹு -**
**- கல்ஹுமமி**

அ(வ் வசனங்கள்)வை (ஹவ்ளுல் கௌதர்) தடாகத்தைப் போன்றதுவாம். பாவிகளின் (கறைபடிந்த) முகங்கள் அந்தத் தடாகத்தின் புனித நீரினால் [தும்பை மலர்போல] வெண்மை அடைந்திடும். ஆனால் அந்த முகங்களோ அந்தத் தடாகத்தை அணுகுவதற்குமுன் அடுப்புக்கரி போன்று இருந்திடும்.

இதனை -

மறையோ குளம்; தீயர் வதனம்அத னால் வெளுக்கும்
கறையால் அவர்அடுப்புக் கரிபோல் அதைச் சார்வார்

என மறைக்காயர் பாடிக்காட்டுகின்றார்.

கரு : குர்ஆன் ஷரீப் தன்னை ஓதுபவரை அவர் பாவக்கறைகளால் நிரம்பப்பெற்ற தீயோராக இருந்தாலும் பரிசுத்தவானாக மாற்றிவிடுகின்றது.

وَكَالصِّرَاطِ وَكَالْمِيزَانِ مُعْتَدِلَةٌ

فَالْقِسْطُ مِنْ غَيْرِهَا لِلنَّاسِ لَمْ يَقُمِ ⑩

வகஸ்ஸிராதிவகல் மீஜானி -
- முஃதிலதன்
ஃபல்கிஸ்த்துமின் ஙைரிஹா -
- ஃலின்னாசி லம்யாகுமி

இன்னும் அவ்வசனங்கள் நீதி நெறியில் 'தராசுமுனை' போலவும் [ஸிராத்துல் முஸ்தகீம்] பாலம் போலவுமாம். அவையல்லாத நீதி நெறி மாந்தரிடையே நிலைத்து நிற்காது.

இதனை

நிறைகோல்முனைபோலும், நேர்பாலம்
போலும்இறை
மறைநீதிமற்றயவை மாந்தரிடை நில்லாவே
என மரைக்காயர் பாடிக்காட்டுகின்றார்.

க - ரை : குர்ஆன் ஷரீபுடைய நீதிச் சட்டங்கள் எக்காலத்தவருக்கும், எந்நாட்டவருக்கும் பொருந்தக் கூடியவை. நேர்மையானவை. மறையல்லா மற்ற சட்டங்கள் நிலைத்து நீள் பயன் தரத் தக்கதன்று.

# மாற்றத்தை ஏற்காத ஷரீஅத் சட்டங்கள்

வி - ரை : கோன் மறையாம் குர்ஆன் ஷரீபில் அனைத்துப் பிரச்னைகளுக்கும் தீர்வுகள் சொல்லப் பட்டுள்ளன. அந்தத் தீர்வுகளையே 'ஷரீ அத் சட்டம்' என்றழைக்கப்படுகின்றது.

இந்த ஷரீஅத் சட்டத்தின் நேர்மையினை விவரிக்க - விளக்கிக் காட்ட - 'இதைப் போல, அல்லது அதைப் போல்' என இவ் வையகத்திலுள்ள ஏதனையும் சுட்டிக் காட்டிட முடியாது. காரணம், அனைத்தும் அழியக் கூடியவையாகவே உள்ளன.

ஆகவே மறுமை நாளில் சம்பவிக்கவுள்ள மீஜான் தராசையும், சிராதுல் முஸ்தகீம் பாலத்தையும் எடுத்துக் காட்டி, ஷரீஅத் சட்டங்கள் அவ்விரண்டையும் போன்றது எனச் சுட்டுகின்றார்.

கடுகளவு நன்மையாக இருப்பினும் அதனையும் மறைக்காமல்-இருட்டடிப்புச் செய்துவிடாமல்-பிரதிபலிக்கக் கூடியது மறுமை நாளின் மீஜான் எனும் -தராசு அன்றி 'இவர் உலகில் பாதுஷாவாக - பக்க பலம் நிரம்பிய வராக - வாழ்ந்த வராயிற்றே' என ஓரஞ் சாய்ந்திடாமல் எவராக இருந் தாலும் அவரின் கடுகளவு தீமையைக் கூட மறைத்தோ குறைத்தோ விடாமல் பகிரங்கப்படுத்தும் தன்மை வாய்ந்ததே அந்த மீஜான்.

அன்றி 'ஸிராத்துல் முஸ்தகீம்' பாலம் கூர்மை யிலேயே உச்சகட்டக் கூர்மை வாய்ந்த

வாளின் கூர்மையை விட மிகக் கூர்மையானது. மனித ரோமத்தை, நேர்மைக்கு - கோணல் இல்லாத் தன்மைக்கு உதாரணம் காட்டுவர். ஆனால் அந்த ரோமத்தைவிட அதி நேர்மை வாய்ந்தது அந்தப் பாலம். இப்படி நேர் மைக்கும் குற்றங் குறைகளை வெளிப்படுத்தும் தன்மைக் கும் பேரிலக்காகத் திகழும் மறுமைப் பாலத்தைப் போன்றது, மீஜானைப் போன்றது என குர்ஆன் ஷரீபின் ஷரீஅத் சட்டங்களை இனம் காட்டும் பூசிரி அவர்கள்;

இவ்வளவு உயர்ந்த அம்சங்களைக் கொண்டிருப்ப தால் அந்த ஷரீஅத் சட்டம் எல்லாக் காலத்திற்கும் எல்லா நாட்டிற்கும் பொருந்தி புகழ்பரப்பக் கூடியதாக மிளிர்கின்றது' என்ற பேருண்மையினை குறிப்பால் உணர்த்தி விட்டு,

ஆனால்,

மனித சக்திகளால் இயற்றப்பட்ட மற்ற நீதி நெறிகள் - அரசியல் சட்டங்கள், - கோர்ட் சட்டங்கள் அகிய அனைத் தும் குறிப்பிட்ட கால கட்டங்களுக்கு மட்டும், குறிப்பிட்ட நாட்டிற்கு மட்டும் பொருந்தக்கூடியதாக இருக்குமே தவிர, நிரந்தரமாக நிலைத்து நிற்கக் கூடியனவாக அவைகள் ஒருக்காலமும் இருந்திடாது - அமைந்திடாது என்பதை ஆணித் தரமாக எடுத்தோதுகின்றார்.

நமது இந்திய அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டும் - பழையதை செல்லாதவையாகப் பிரகடனப் படுத்தி விட்டு, புதிய அரசியல் சட்டத்தையே உரு

வாக்கிட வேண்டும். என்றெல்லாம் விவாதிக்கப்பட்டும் எழுதப்பட்டும் - வற்புறுத்தப்பட்டும் வரக்கூடிய இந்நாட்களில், பூசிரி அவர்களின் இந்தக் கருத்தை விளங்கிடுவது அவ்வளவு கடினமில்லை என்பேன்; அல்லவா?

لَا تَعْجَبَنْ لِحَسُوْدٍ رَاحَ يُنْكِرُهَا
تَجَاهُلًا وَهُوَ عَيْنُ الْحَاذِقِ الْفَهِمِ ﴿١٠٣﴾

**லா தஃஜபன்(ல்)ஹஸூது -**
**-ராஹின் யுன்கிருஹா**
**தஜாஹுலன் வஹுவ ஐனு-**
**-ல்ஹாதிகில் ஃபஹிமி**

பொறாமைக் குணம் படைத்தோர், அவ்வசனங்களை மறுத்து விமரிசிப்பதைக் கண்டு நீ, ஆச்சரியமடைந்திட வேண்டாம். அங்ஙனம் விமரிசிப்பவன் குர்ஆனின் கோன் நிலையை உணர்ந்தவன்தான். ஆனாலும் உணராதவன் போல அவன் நடிக்கின்றான்.

இதனை

மறையைப்பொறாமையுள்ளான் மறுத்தால்-
-வியப்புறற்க!
அறிஞனேஆவன்அவன் அறியானைப்-
-போல்நடிப்பான்

என மரைக்காயர் பாடிக் காட்டுகின்றார்.

**க - ரை : மாற்றார்,** அல்லது நம்மிலே உள்ள நம் **சமுதாயத்தின்** பெயரால் **வளர்ந்து** வாழும் சில **கோடாரிக் காம்புகள், குர்ஆன் ஷரீஅத்** சட்டங்களை '**பொருந்தாது** - மாற்ற வேண்டும் - திருத்த வேண்டும்' என்றெல்லாம் **அவ்வப்போது** குரல் கொடுப்பதை வகை வைக்காதே. ஏனெனில் 'ஷரீஅத் சட்டம்தான் மனித சமுதாயத்திற்கு நன்மை செய்திட வல்லது' என்ற பேருண்மையினைப் புரிந்து கொண்டே, பொறாமையால், சுயநலம் பாதிக்கப் படுவதால், அங்ஙனம் அபயக்குரல் கொடுக்கும் நடிகர்கள் அவர்கள். நடிகர்களால் எந்தக் காலத்திலாவது எதனையும் சாதிக்கவோ அன்றி பாதிக்கும்படி செய்திடவோ முடியவே முடியாது.

**ஷரீஅத் சட்டத்தில் குறை காண்பவர் தனது பலஹீனத்தையே வெளிப்படுத்துபவராவர்**

**வி - ரை : தனக்குப்** பிள்ளைப் பாக்கியம் கிடைக்கப் பெறாத மலடி, பிள்ளைச் செல்வம் வேண்டும் என்ற ஒரே காரணத்திற்காக இரண்டாம் தாரமாக நிகாஹ் முடிக்கப் பெற்ற அவளது சக்களத்திக்கு, அழகான ஆண் மகவு பிறந்திருப்பதைப் பார்த்துப் பொறுக்க முடியாமல்;

'பிள்ளை பிறந்த நேரம் விஷநேரமாமே? பெரிய உயிருக்கு பாதகம் சம்பவிக்குமாமே? பிள்ளையைப் பார்த்தீரா 'மச - மச' வென்று? அது முளிக்கிற முளியைப் பார்த்தால் தாக்குப் பிடிக்கு மென்றா தோன்றுகிறது?' என்றெல்லாம் புலம்புவதும் ... அதனால் தன்னை திருப்திப் படுத்திக் கொள்ள முயல்வதும் சகஜம்தானே.

அதுபோல,

உயிர்த்துடிப்புள்ள எதனையும் வழிகாட்டியாகப் பெற்றில்லா மாற்றார், அல்லது;

இருந்தாலும் 'பொருந்தாப் புலம்பலாகவும்' பொய்யும் புனைச் சுருளும் நிரம்பிய பொல்லாங்காகவும், இருந்திடுவ தால் இலங்கிட - துலங்கிட வில்லையே, என்ற ஏக்க உணர்வால் பொருமிக் கொண்டு இருக்கும் எதிரிகள்,

தங்களின் நலன்களை அரங்கேற்றவும், தான் தோன்றித் தனமான தத்துவங்களை பறக்க விடவும், தலைமைப் பதவியைப் பற்றிக்கொள்ளவும் முடியாமல் பரிதவிக்கும் பத்தாம் பசலிகளான வஹ்ஹாபிகள், ஷியாக் கள். காதியானிகள், காரிஜிய்யாக்கள், ஜமா அத்தே இஸ் லாமிகள் போன்ற பிரிவுகளைச் சேர்ந்த துரோகிகள்-விரோ திகள், ஆகியோர் குவலயம் அனைத்திற்குமே கோன் மறை யாகத் திகழும் மோனைமறையாம் குர்ஆன் ஷரீபையும் அம் மாமறை ஈன்றெடுத்துத் தந்த ஷரீஅத் சட்டங்களை யும் குறை கூறவும் கறை கற்பிக்கவும் — திரை போட வும் அவ்வப்போது முயன்று பார்ப்பது சகஜம்தான்.

அவர்கள் கூறும் குறை அவர்களின் மனக்குறையே தவிர, குர்ஆனிலோ அல்லது ஷரீஅத் சட்டத்திலோ உள்ள குறையன்று. கண்ணாடியில் முகம் பார்ப்பவன் 'ஈதென்ன முகம் கோணலாக உள்ளதே! கறை படிந் துள்ளதே!' என முக்கி முனங்கினால், அது யாரிடம் உள்ள குறை? கண்ணாடியின் குறையா? அல்லது

கண்ணாடி பார்ப்பவனின் முகக் குறையா? ஆகவே குர்ஆனை - ஷரீஅத் சட்டங்களை, எவராவது குறை கூறினால் அதுபற்றி ஆச்சரியப் படுவதற்கோ, ஆத்திரப் படுவதற்கோ, ஆயாசம் கொள்வதற்கோ இனியும் இட மில்லை, என நம்மை தேற்றுகின்றார் 108 - ஆம் கண்ணியில்.

---

قَدْ تُنْكِرُ الْعَيْنُ ضَوْءَ الشَّمْسِ مِنْ رَمَدٍ
وَيُنْكِرُ الْفَمُ طَعْمَ الْمَاءِ مِنْ سَقَمِ ﴿١٠٩﴾

**கத்துன் கிருல்அய்னுளவ்வு -**
**- அஷ்ஷம்ஸி மின் (ர்) ரமதின்**
**வயுன் கிருல்ஃப முதஃ -**
**-மல்மாஇ மின் ஸகமி**

நோய் பற்றிய கண்கள் கதிரவனின் பொன்னொளியை மறுக்கத்தான் செய்யும். நோய் பற்றிய நாவு தண்ணீரின் சுவையை மறுக்கத்தான் செய்யும்.

---

இதனை -

நோயுறுங்கண் சூரியற்குநுண்ணொளியே
இல்லைஎன்னும்
வாயிருசிநோயுறலால், மறுக்கும்நீர்க்
கில்லைஎன்றே

என மரைக்காயர் பாடுகின்றார்.

## புலம்பலோரைப் புல்லர்கள்

க - ரை : காமாலைக் கண்ணன், கதிரவனின் பொன்னொளியை குறைத்தே மதிப்பிடுவான். பித்தஜுரம் கண்ட நோயாளி, சுவையுள்ள நீரையும் 'கசக்கின்றது' என்றுதான் கூறுவான். அது போலவே பொறாமைப் பித்தம் தலைக்கேறியவர்கள், பொற்குடமாம் குர்ஆன் ஷரீபை - ஷரீஅத் சட்டங்களை 'பொருந்தாது பொருந் தாது' எனப் புலம்பிடத்தான் செய்வார்கள். ஆகவே புலம் பலோரைப் புல்லர்களின் தில்லு முல்லுப் பிரச்சாரங்களைப் பற்றி கவலை கொண்டிடத் தேவையில்லை.

'மோனைமறை மகிமை' எனும் தலைப்பில், இது வரை - தீன் சுடர் பரப்பிடும் வான் சுடராகிய - வான் மறையின் வான்புகழ் பற்றி, அது கூறி நிற்கும் முன் னோர்களின் வாழ்க்கை முன்னோடிகள் - மேலுலக வாழ்க்கை நிலைகள் பற்றி, வளமார் வாழ்க்கைத் திட்டங்கள் பற்றி, எழிலார்ந்த அதன் இலக்கிய நயம் பற்றியெல்லாம்; தொட்டாலும் கை மணக்கும் கவி வளத் தோடு, பாடிடுவோர் தம் வாயினிக்க - செவிமடுப்போர் தம் சிந்தை இனிக்க, இலக்கியச் சந்தையாகவே கடை பரப்பினார் கவிக்கோ பூசிரி. இதனையடுத்து 'விண்ணேற்ற பயணம்' எனும் தலைப்பில் மிஃராஜ் பயண மகிமைகளை கரை புரண்டோடச் செய்கிறார்.




புரவலர் போர்த்திய
பொன்னாடை
விண்ணேற்ற
பயணம்
ஏழாம் இழை





'மிஃராஜ்' என்பதற்கு 'விண்ணில் உயருதல்' என்பது பதப்பொருளாகும்.

ஆனால்; நமது நபிகளார் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள், மண்ணுலகிலிருந்து விண்ணுலகிற்கு உயர்ந்து ஆங்கே; அர்ஷு, குர்ஷு, முதலான அனைத்தையும் கடந்து சென்று, திசைகளே இல்லாத இடங்களே இல்லாத 'லா - மகான்' எனும் கற்பனைக்கெட்டாத கதியை அடைந்து, உருவோ மருவோ இம்மியுமில்லாத இடமோ திசையோ கொஞ்சமும் தேவைப்படாத ஏகனாம் வல்ல அல்லாஹ்வை நேர்முகமாக தரிசித்து, அவனுக்கு காணிக்கைகள் செலுத்தி, ஐங்காலத் தொழுகையைக் கடமையாகப் பெற்றுத் திரும்பிய வேந்தர் நபியுல்லா அவர்களின் விண்ணேற்றப் பயணத்தினை மட்டும் குறிப்பிடும் சொல்லாக, அந்த 'மிஃராஜ்' எனும் வார்த்தை மாற்றம் பெற்று விட்டது.

ஆகவே 'மிஃராஜ்' என்றால் இன்று வேந்தர் நபியின் விண்ணேற்றப் பயணத்தையே அது குறிக்கும்.

மிஃராஜில் 'ரூஹானிய்யத்தான 'மிஃராஜ்' என்றும் 'ஜிஸ்மானிய்யத்தான மிஃராஜ்' என்றும் இருவகை உண்டு.

# ரூஹானிய்யத்தான மிஃராஜ்

உடல் இல்லாமல், உயிர் மட்டும் அல்லாஹ்வை தரிசிக்கும் தரிசனத்திற்கு 'ரூஹானிய்யத்தான மிஃராஜ்.' என்று பெயர்.

இந்த வகை மிஃராஜை கனவு வகையில் சேர்ப்போரும் நம்மில் உண்டு, ஆனால் உண்மையில் அது கனவன்று, ஏனெனில் கனவிற்கும் இதற்கும் நிரம்ப வேறுபாடுண்டு.

இந்த ரூஹானிய்யத்தான மிஃராஜ் பொதுவான தொரு தரிசனமேயாகும். ஏனெனில் நமது நபிகளார் அல்லாத வேறு பல நபிமார்களுக்கும் இந்தவகை மிஃராஜ் ஏற்பட்டே உள்ளது.

'நபிமார்களுக்கு மட்டும் சொந்தமானது இது' என்றாவது சொல்லமுடியுமா, என்றால் அதற்கும் வழியில்லை

ஏனெனில்' சஹாபாக்கள், தாபிஈன்கள், இமாம்கள் அவ்லியாக்கள், போன்ற நபிப்பதவி யற்ற பல நல்லடியார்களுக்கும் இந்த ரூஹானிய்யத்தான மிஃராஜ் நிகழ்ந்துள்ளதற்கு எத்தனை யெத்தனையோ எடுத்துக்காட்டுகள் உண்டு;

**குதுபுல் அக்தாப் அவர்களுக்கு ஏற்பட்ட றூஹானிய்யாத்தான மிஃறாஜ்**

எடுத்துக்காட்டாக; குத்புல் அக்தாப் சய்யிதுனா முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (ரழி - அன்ஹு) அவர்களுக்கு ஏற்பட்ட றூஹானிய்யாத்தான மிஃறாஜின் மாட்சியை இங்கே காண்போம்.

ஹெளதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (கத்தஸல்லாஹு சிர்ரஹுல் அஜீஜ்) அறிவிக்கின்றார்கள்.

''நான் வல்லவனாம் அல்லாஹ்வைத் தவிர்த்துள்ள அனைத்தையும் வெறுத்தவனாகி, அல்லாஹ்வை மட்டுமே விரும்பியவனாக ஆனபோது, எனது ஏக எஜமானாகிய அல்லாஹ் ''ஹெளதுல் அஃலமே!'' என, என்னை விழித்தான். உடனடியாக 'இதோ ஆஜராகி விட்டேன் ஹெளதின் எஜமானனே'' என, நான் பதிலளித்தேன். அதனைத் தொடர்ந்து வல்ல அல்லாஹ் கூறினான்.

ஹெளதே ! 'நாஸூத்' நிலைக்கும், 'மலகூத்' எனும் நிலைக்கும் நடுவில் உள்ள படித்தரத்திற்கு 'ஷரீ அத்' எனப்பெயர்.

'மலகூத்' எனும் நிலைக்கும் 'ஜபரூத்' எனும் நிலைக்கும் நடுவில் உள்ள படித்தரத்திற்கு 'தரீகத்' எனப்பெயர்.

'ஜபரூத்' எனும் நிலைக்கும் 'லாஹூத்' எனும் நிலைக்கும் நடுவில் உள்ள படித்தரத்திற்கு 'ஹகீகத்' எனப் பெயர் - ஹௌதுல் அஃலமே! எனது சுடரை மானிடனில் வெளியாக்கியது போல எந்த வஸ்த்துவிலும் நான் வெளியாக்கியதில்லை.

ஃ ஃ ஃ ஃ

அதாவது ;

'நாஸூத்' என்பது மனிதன் தனது அகமியத்தை மறந்தநிலை.

'மலகூத்' என்பது வானவர்களாம் மலக்குகளைப் போல, ஏவல்படி முழுக்க ஒழுகும் நிலை. 'ஷரீஅத்' இந்த இரண்டிற்கும் இடைப்பட்ட வழியாகும். இத்தோடு தரீகத்தின் (யோக) அப்பியாசங்களைக் கைக்கொள்ளும் போது சக்திச் சுடர்கள் வெளியாகின்றன. 'ஜபரூத்' என்பது சக்தி நிலையாகும். இதனோடு 'ஹகீகத்' (ஞானத் தெளிவு) வெளியாகும்போது, தனது சிறுமையும் ஆண்டவனது பெருமையும் உள்ளத்தில் நன்கு வேரூன்றி விடுகின்றன. அப்போது சக்திச் சுடர்களை பக்திப் பரவசம் மிகைத்து விடுகின்றன. 'லாஹூத்' என்பது நான்... நான்... நான்'' என்பது முற்றாக அழிந்து அனைத்தும் ஆண்டவன் மயமாக மாறி விடும் பக்திப் பெருக்காகும்.

ஃ ஃ ஃ ஃ

'எஜமானே! உனக்கு உகந்த இடம் ஏதேனும் உண்டோ' என, நான் கேட்டேன். அதற்கு வல்லவனாம் அல்லாஹ் :

'ஹௌதே! இடத்திற்கு இடம் நான்தானே? ஆனா லும், இடம் வேண்டுமென நான் விரும்பின், மானிடனின் உள்ளத்தையே இடமாகக் கொள்வேன். ஹௌதே!... மனிதன் எனது மறை பொருள். நான் அவனது மறை பொருள் — என்றான்.

'நாயனே! உனக்குகந்த உணவு குடிப்பு ஏதேனு முண்டோ?' என, நான் வினவினேன். அதற்கு அந்த வல்லவன் :

'ஏழைகளின் உணவும் குடிப்புமே எனக்கு உகந்த வையாகும்' என்றான்.

'எஜமானே! அமரர்களான மலக்குகளை எது கொண்டு படைத்தனை...?' என்றேன், அதற்கு அந்த வல்லவன் :

'ஹௌதே! அமரர்களை மனிதனது ஒளிவால் படைத்தேன். மனிதனையோ எனது பேரொளிவால் படைத்தேன். ஹௌதே! மனிதனை எனக்கு அடிபணி யும்படி பணித்தேன், அண்ட கோடிகளையும் அவனுக் குக் கீழ்படியும்படியாக்கினேன். ஹௌதே! தேடுபவர் களின் தேட்டமாக இருப்பவன் நான். தேட்டமாகிய எனக்கு உகந்ததோ மனிதன்தான். மனிதன் தனது தேட்டமாகிய என்னை அடைந்து கொள்வதற்குரிய வாகனமாக அண்டகோடிகளை ஆக்கினேன் நான்' என அருளினான்.,

மீக்கூறிக் காண்பிக்கப்பட்ட குத்புல் அக்தாப் அவர்களுக்கு நிகழ்ந்த ரூஹானிய்யத்தான மிஃராஜ் பற்றிய விபரமாகும்.

குத்புல் அக்தாப் அவர்களுக்கு மட்டுமல்லாது இன்னும் பல இறை நேசர்களுக்கும் இத்தகு ரூஹானிய்யத்தான மிஃராஜ் ஏற்பட்டுள்ளதாக கூறப்பட்டு உள்ளது.

நமது நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு மட்டும் இந்த ரூஹானிய்யத்தான மிஃராஜ், முப்பத்தி மூன்று தடவைகள் ஏற்பட்டுள்ளதாக, வார்ஜிதம் செய்யப்பட்டுள்ளது. ஆகவே நல்லடியார் எல்லோருக்கும் இது பொதுவானதொரு தரிசனமேயாகும்.

உடல், உயிர் ஆகிய இரண்டும் சேர்ந்த முழுமனிதராக வானகம் உயர்ந்து வல்லவனாம் அல்லாஹ்வை நேர்முகமாகத் தரிசித்த உண்மை நிகழ்ச்சிக்கு ஜிஸ்மானிய்யத்தான மிஃராஜ்' என்று பெயர்.

இந்த வகை மிஃராஜ் உலகிலேயே நமது நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு மட்டுமே நிகழ்ந்தது முன் பின்னாக வேறு எவருக்குமே நிகழ்ந்ததில்லை. இனி மேல் வேறு எவருக்கும் அது நிகழப்போவதுமில்லை. ஆதலால் இந்த ஜிஸ்மானிய்யத்தான மிஃராஜ் நமது நபிகளாருக்கு மட்டும் சொந்தமான தரிசனமாகும்.

## மூமின்களின் மிஃராஜ்!

மீக்கூறிக் காண்பிக்கப்பட்ட இருவகை மிஃராஜல்லாத பிறிதொரு மிஃராஜும் உண்டு.

அது எது தெரியுமா? ஐங்காலத் தொழுகைதான்.

''தொழுகை உண்மை விசுவாசிகளின் மிஃராஜாக இருக்கும்'' எனும் நபிகளாரின் நல்வாக்கே இதற்குச் சான்றாகும்.

## காலம் கனிந்தது

முன்பெல்லாம இந்த மிஃராஜ் வைபவத்தைப் பற்றி நம்மிலே உள்ள மிகப்பலர், ஒருவகை வியப்புத் தெரிவித்து வந்த காலம் இருந்தது.

சமுதாயத்தின் உண்மைச் சேவகர்களான உலமாக்கள் மிஃராஜ் சம்பந்தமாக உரை நிகழ்த்தும் போதெல்லாம் 'சமுதாயத் தலைவர்கள்', என தம்பட்டமடித்துக் கொண்டிருந்த, சிலர் அந்த உத்தம உலமாக்களைப் பரிகாசம் செய்து வந்த பரிதாபகரமான பல நிகழ்ச்சிகளை நானே கூட நேரடியாக அனுபவித்துள்ளேன்.

இன்னும் சில மேதாவிகள் (?)

பள்ளிவாசலிற்குள் நீங்கள் எப்படி வேண்டுமானாலும் உளறிவிட்டுப் போங்கள். ஆனால் மீலாதுவிழா போன்ற பொது மேடைகளில், இது போன்ற கவைக்குதவாத கட்டுக் கதைகளையெல்லாம் தயவு செய்து அவிழ்த்து விடாதீர்கள். அதைத்தவிர வேறொன்றும் உங்களுக்குத் தெரியாது போனால், தயவு செய்து பொது மேடைகளில் வெறும் 'கிராஅத் - துஆ, ஓதுவதோடு நின்று கொள்ளுங்கள் - என சத்தியத்தை உரக்க ஒலித்துக் கொண்டிருந்த உத்தம உலமாக்களை உதாசீனம் செய்து வந்ததை நம் தமிழகம் அதற்குள் மறந்திருக்க முடியாது அல்லவா?

ஆனால்; காலம் கனிந்தது. உண்மை வென்றது. இன்றைக்கெல்லாம் உலமாக்களைவிட அவர்கள்தான் மிஃராஜினைப்பற்றி மணிக்கணக்கில் முழங்கி வரும் மாட்சியினைப் பார்க்கின்றோம்.

## விஞ்ஞானம் மெய்ப்பித்த மெய்ஞ்ஞானப் புதுமை

'ஆம்ஸ்ட்ராங்' நிலாவில் உலா வந்துவிட்டானே தெரியுமா? எங்கள் நபியுல்லாவின் வாழ்க்கை எல்லோருக்கும் எல்லாவற்றிற்குமே முன்மாதிரி ... முன்மாதிரி என்றீர்களே, இந்த ஆம்ஸ்ட்ராங்கிற்குமா முன்மாதிரி? என்ற கேள்வி உதயமானபோது, மிஃராஜ் நிகழ்ச்சிகளை முறையாகச் சொல்லிக் காட்டி "இதனைப்பற்றி என்ன கருதுகின்றீர்கள்" என மறு கேள்வி பிறந்தது. ஓ ... அப்படியா சேதி? அப்படியென்றால் அண்ணல் நபியுல்லாவினால் நிகழ்ந்த புதுமைகளை இந்த விஞ்ஞானப் புதுமைகளாலும் மிகைக்க முடியாது போலிருக்கின்றதே" என்ற சமாதானப் பெருமூச்சுகள் வெளிக்கிளம்பத் தொடங்கியது. அல்லவா?

## எதிரும் புதிரும்

அன்னை நல்லார் ஹஜ்ரத் ஆயிஷா சித்தீக்கா (ரலி-அன்ஹா) அவர்களுக்கு மார்க்கத்தில் மிக்க முக்கியத்துவம் உண்டுதான் அதுபோல;

ஹஜ்ரத் முஆவியா (ரலி - அன்ஹு) அவர்களுக்கும் மார்க்கத்தில் எதிர்ப்பு இல்லைதான்.

ஆனால், மிஃராஜ் நிகழ்ச்சி நடந்தேறியபோது அன்னை ஆயிஷா ஸித்தீக்கா (ரலி-அன்ஹா) அவர்கள், தன்னால் தின்ன, குடிக்க, தனது அவசியங்களை சுயம் நிறை வேற்றிக் கொள்ளத்தக்க பருவத்தைக்கூட அடையாத சிறுமியாக இருந்தார்கள். அது போலவே;

ஹஜ்ரத் முஆவியா (ரலி - அன்ஹு) அவர்கள் மிஃராஜ் நிகழ்ந்தபோது எதிர் அணியில் இருந்துவந்தார்.

ஆகவே; அவ்விருவருக்கும் மிஃராஜ் சம்பந்தமான நிகழ்ச்சிகளை விமரிசிக்கத்தக்க சூழல் அமைந்ததில்லை என்பது கண்கூடு. இருந்தும் கூட,

'மிஃராஜ் வைபவத்தின்போது ரசூலுல்லாஹ் (ஸல் - அம்) அவர்கள் இறைவனை நேருக்குநேர் பார்க்கவில்லை'

என இவ்விருவரும் அறிவிப்புச் செய்துள்ளார்கள் என்றால் அஃது அதிகப்பிரசங்கித்தனமான குறும்புமல்ல, ஏனெனில்;

இருவகை மிஃராஜ்களில் 'ரூஹானிய்யத்தான மிஃராஜ்' என்ற இரண்டாம் வகை மிஃராஜ் நமது நபியுல்லா அவர்களுக்கு முப்பத்து மூன்று தடவை நிகழ்ந்துள்ளது என்பதை நாம் இதற்கு முன் கண்டுள்ளோம். அல்லவா? மிஃராஜ் பற்றிய அவ்விருவரின் அந்த விமரிசனமும், ரூஹானிய்யத்தான மிஃராஜ் பற்றியது என விளக்கம் தரப்பட்டுள்ளது.

அந்த வகையில் அவ்விருவரின் அறிவிப்புக்களும் உண்மைதான்.

ஏனெனில் ரூஹானிய்யத்தான மிஃராஜின் போது நமது நபிகளார் வல்லவனாம் அல்லாஹ்வை நேருக்கு நேராகப் பார்த்தார்கள் என எவருமே வாதிக்கவில்லை.

அஃதன்றி;

'வல்ல அல்லாஹ் எந்த மனிதரிடத்தும் வஹியாக மல்லாது. அல்லது; திரைமறைப்புக் கொண்டல்லாது, அல்லது தூதர் அனுப்பியல்லாது பேசியதில்லை"

"அல்லாஹ்வை பார்வைகள் எத்தாது"

என்ற இவ்விரண்டு குர்ஆன் வசனங்களும் சாமான்ய மனிதர் பற்றியது. என்பதை விரிவுரை வல்லுனர்கள் பலர் சந்தேகத்திற்கிடமின்றி எடுத்துக் காட்டியுள்ளனர்.

இந்தப் பேருண்மைகளையெல்லாம் உய்த்துணர முடியாத சிலர், ஹஜ்ரத் ஆயிஷா ஸித்தீக்கா, ஹழ்ரத் முஆவியா (ரலி-அன்ஹுமா) ஆகிய இருவருடைய மிஃராஜ் பற்றிய அறிவிப்பையும்; மேற்கூறப்பட்டுள்ள இரு வசனங்களையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு "ஆஹா... ஓஹோ... தெரியுமா சேதி! திருத்தூதர் அவர்கள் அல்லாஹ்வை பார்க்கவே இல்லை" என அடம்பிடிக்கின்றனர்.

## இமாம்களின் எச்சரிக்கை

"உண்மைக்கு உறைவிடமாகத் திகழும் ஹாஷிம் கிளையினைச் சேர்ந்த நாங்கள் அறுதியிட்டு கூறுகின்றோம்;

‘‘முஹம்மத் (ஸல்-அம்) அவர்கள், தங்களது இரட்சகனான அல்லாஹ்வை புறக்கண்களால் இரு தடவை பார்த்தார்கள், அதில் யாதொரு சந்தேகமும் இல்லவே இல்லை’’

எனச் சவால்விடும் ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி - அன்ஹு) அவர்கள்;

‘ஹஜ்ரத் இப்ராஹீம் (அலை) கலீலுல்லாஹ்விற்குள்ள ‘கலீல்’ பதவியையும், ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்களுக்குள்ள ‘கலீம்’ பதவியையும், முஹம்மது (ஸல் - அம்) அவர்களுக்குள்ள ‘மிஃராஜ்’ பதவியையும் உங்களில் எவர் அதிசயிக்க முடியும்...?’

என, உணர்ச்சிததும்பக் கேட்ட போது அருகில் இருந்த உபையின் கஃபு (ரலி) அவர்கள்.

‘அல்லாஹு அக்பர்! ... அல்லாஹு அக்பர்...!! அல்லாஹு அக்பர்!!!’ என ஓங்காரக் குரலில் தக்பீர் முழங்கினார். அவரின் அந்த தக்பீர் முழக்கம் உஹது மலையில் பட்டு எதிரொலித்தது.

சுப்ஹானல்லாஹ்...!

ஹன்பலி வழித்துறையின் தலைவர் இமாம் அஹ்மது பின் ஹன்பல் (ரஹ்) அவர்கள்;

‘‘ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி) கூறியபடியே, நானும் அறுதியிட்டுக் கூறுகின்றேன். முஹம்மது (ஸல்-அம்) அவர்கள், தங்களது இரட்சகனான அல்லாஹ்வை, தங்களின்

புறக் கண்களால் பார்த்தார்கள் ... புறக்கண்களால் பார்த்தார்கள்...''

என, தனது மூச்சுத்திணரும் அளவு திரும்பத் திரும்ப உணர்ச்சி வயப்பட்ட நிலையில் கூறினார்கள்.

## சுன்னத் வல் ஜமாஅத்தின் உறுதியான கொள்கை

ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி-அன்ஹு) அவர்களின் அந்த அறிவிப்பை பழம்பெரும் சஹாபிகளான - ஹஜ்ரத் இப்னு மஸ்ஊது, ஹஜ்ரத் அபூஹுறைரா, ஹஜ்ரத் அபூதர் [ரிளுவானுல்லாஹி அலைஹிம்] போன்ற சுமார் முப்பத்து மூன்று சஹாபிகள் உறுதி செய்து, மறு ரிவாயத் செய்துள்ளார்கள்.

ஹதீதுக்கலை மேதைகளான - ஹஜ்ரத் ஹஸன் [ரலி-அன்ஹு] போன்ற பெரும் பெரும் மேதாவிகள் நபிளகாரின் நேரடியான இறை தரிசனத்தை சந்தேகத்திற்கு இம்மியும் இடமின்றி ஊர்ஜிதம் செய்துள்ளார்கள்.

ஹனபி, ஷாஃபிஈ, மாலிகி, ஹன்[ம்]பலி ஆகிய நான்கு மத்ஹபுகளையும், உள்ளடக்கிய நம் 'சுன்னத் வல் ஜமாஅத்' எனும் அமைப்பிற்கு உட்பட்ட அனைவருமே அதனை ஊர்ஜிதம் செய்துள்ளனர். இதுவன்றி;

நபிகளார் அவர்கள், அல்லாஹ்வை புறக் கண்களால் பார்த்தார்கள் என்பதை கடுகளவு ஐயம் கொண்டாலும் அவர் சுன்னத் வல் ஜமாஅத்தைச் சார்ந்தவராக இருந்திட

முடியவே முடியாது. என, நமது இமாம்கள் அனைவரும் ஒட்டு மொத்தமாக எச்சரித்து உள்ளனர்.

## ஏன் முடியாது?

சமீப காலத்தில் உலாவந்த அமெரிக்கா ரஷ்யா நாட்டவர்களின் விண்வெளிப்பயணங்கள் நபிகளாரின் மிஃராஜ் பயணத்தையும், இறை தரிசனத்தையும் உள்ளங் கை நெல்லிக்கனிபோல உண்மைப்படுத்தி விட்டன.

ஏனெனில்,

சர்வ சாதாரணமானவர்கள்.

ஆமாம் ... மிக மிகச் சர்வ சாதாரணமானவர்கள், மலம் மூத்திரம் கழித்தால், எங்ஙனம் முறையாகச் சுத்தம் செய்வது என்பதுகூட அறியாத அப்பாவிகள்!

அப்படிப்பட்ட அந்த அப்பாவிகளால் நிலாவில் உலா வந்திட முடிகின்றது - எனும் போது;

அண்டகோளங்கள் அனைத்தும் உருவாவதற்கு முழு முதற்காரணராகிய முத்துமுஹம்மது [ஸல்-அம்] அவர் களுக்கு-

ஏக[வல்லவனாம் அல்லாஹ்வின் அன்புக்குப் பாத்திர மான ஹபீபுல்லா அவர்களுக்கு -

அண்ட கோளங்கள் அனைத்துடைய ஆசை நாயகர்

அண்ணலெம் பெருமான் முஹம்மதெங்கள் நபிக ளாருக்கு விண்வெளிப் பயணம் ஏகிடவும், வல்லவனாம் அல்லாஹ்வை நேருக்கு நேராக தரிசிக்கவும் ஏன் முடியாது ...?

## யா, அல்லாஹ்!

இத்தகு பெரும் பெருமைக்கு உரித்தாய்த் திகழும் உத்தமத் திருநபிகளாரின் உண்மை உம்மத்துகளாக நம்மை திகழ்ந்திடச் செய்த, தயாபரனாகிய வல்ல அல்லாஹ்வை எந்த நாவால் புகழ்ந்திட முடியும்?

யா, அல்லாஹ்!

கண்ணியத்தின் பிறப்பிடமாம் காத்தமுந் நபி பொருட்டால்,

உனக்கும் அப்பெருந்தகைக்குமிடையே ஏற்பட்ட தனிமையின் போது - தகைமையின் போது நிலவிய நெருக் கத்தின் பொருட்டால் - வலுப்பத்தின் பொருட்டால்-ஏழை எளியவர்களான-ஏதுமே இயலாதவர்களான, எங்கள் அனை வரின் அனைத்துப் பாவங்களையும் மன்னித்தருளக் கடவாய்.

கிருபையாளனே!

எங்கள்பால் நின் கருணைப் பார்வையைச் சொரிந் தருளக்கடவாய்!

கருணைக்கெல்லாம் பெரும் கருணையே! கை ஏந்தப் படுவோரில் சிறந்த சீமானே!

நின் திருப்பொருத்தம் கொண்டு, நின் பேரறிவு கொண்டு, எந்த சக்தியாலும் தடைசெய்ய முடியாத நின் உத்தரவு கொண்டு, கதி ஏதுமற்ற எங்களுக்கு கதி தரும் நிழலாம் - காமில் நபியுல்லா அவர்களின் ஷஃபாஅத்தை பாக்கியமாக ஈந்தருளக்கடவாய்.

மிஃராஜ் நாயகராம் அந்த மெய்ஞ்ஞானத் திருத்தூதர் முஹம்மது [ஸல்-அம்] அவர்கள்பாலும்;

பக்திப் பொறை, தூய்மை, வன்மை படைத்தவர்களாம் அவர்தம் பந்து மித்திரர், உற்றார், தொடர்ந்தோர் அனைவர்பாலும் 'ஸலவாத்-சலாம்' எனும் நின் நிகரில்லாச் செல்வத்தை என்றென்றும் 'பொய்யா மாரியெனப்' பொழிந் தருளக்கடவாய்.

ஃ ஃ ஃ

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
யா ரப்பி ஸல்லி அலைஹி வ சல்லிம்.

ஃ ஃ ஃ

செவியேற்போர் அனைவரையும் மெய்சிலிர்க்க வைக்கும் மெய்யுடைப் பயணமான 'மிஃராஜ்' எனும் இந்த விண்வெளிப்பயணம், முஃஜிஜா வரிசையில் உள்ளதாக இருப்பினும், எண்ணி எண்ணி மகிழ்ந்திடத் தக்க தனித்தன்மை கொண்டதொரு முஃஜிஜாவாக இருப்பதால் "மோனை மறைக்கு தனித்தலைப்பு வழங்கியதைப் போன்று இதற்கும் தனித்தலைப்பு கொடுத்து விண்ணேற்றப் பயண

மகிமைகளை விண்டு காண்பிக்கின்றார், வியத்தகு கவி வேந்தர் பூசிரி [ரஹ்-அலைஹி] அவர்கள்.

தனக்கே உரித்தான தளிர் நடையில் சொல்வளமும் பொருள் வளமும் ஒன்றையொன்று போட்டி போடும் முறையில், தொடுத்துத் தரும் சொல்லாரங்களைச் சூட்டி மகிழ்வோம் வாருங்களேன்!

يَا خَيْرَ مَنْ يَمَّمَ الْعَافُونَ سَاحَتَهُ
سَعْيًا وَفَوْقَ مُتُونِ الْأَيْنُقِ الرُّسُمِ ١٠٥

**யா கைர மன் (ய்)யம்மமல்**
**- ஆஃபூன ஸாஹதஹூ**
**ஸஃயன் (வ்)வபவ்கமுதூ னில் ஐனு**
**- கிர் ருஸமி**

கால் நடையாகவும்; அடிச்சுவடுகள் பதியும் வண்ணம் செல்லத்தக்க ஒட்டகை [வாகனங்] களிலுமாக மனித சமுதாயம் - பாக்கியம் கருதி - எவர் எவரின் சமூகம் விரும்பி விரும்பிப் பயணம் செய்யுமோ அத்தகு புனிதர்களில் மிக்க மேலானவர்களே! [மேதகு முஹம்மது ரசூல் ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களே!]

இதனை

விரைவாய்நடந்தும்,ஒட் டைமேலும், நலம்வேண்டி
தரைவாழும் மாந்தர்செல் லத்தக்காருள் மேலவரே!

என மறைக்காயர் பாடிக்காட்டுகின்றார்

க-ரை : நலம் வேண்டி பாதசாரிகளாய், வாகனமேறிகளாய் மனிதர் செல்லத் தக்காருள் மேலானவரே மேதகு முஹம்மதுர் ரசூல் [ஸல்-அம்] அவர்களே!

வி-ரை : இஸ்லாமியத்தின் ஐந்தாவது கடமையான ஹஜ்ஜு வணக்கத்தில் 'புனித மதீனாவில் உள்ள நபிகளாரின் அடக்கஸ்தலமான புனித ரவ்லா ஷரீபைத் தரிசிப்பது' ஒரு உட்பிரிவன்று! ம தீ ன ா செல்லாமல் மக்காவிலேயே ஹஜ்ஜின் வணக்கங்கள் பூர்த்தி பெற்று விடுகின்றன. இருப்பினும், ஹஜ்ஜுச் செய்யச் செல்லும் எ வ ரு ம் மதீனா சென்று நபிகளாரின் அந்த ரவ்ழாவைத் தரிசிக்காமல் திரும்புவது கிடையாது! ஏன் தெரியுமா? மதீனாபுரி சென்று ரவ்ழாவைத் தரிசிப்பதால்தான் 'பிறப்பின் பயன்' சம்பூரணம் பெறுகின்றது. என்ற உணர்வு அவர்களிலே ஊண்டுதல் கொண்டு விட்டது. அது மட்டுமன்று; எந்தச் செல்வாக்கும் எடுபடாத அந்த நாளில்-மறுமை நாளில் - நாயகம் அவர்களின் 'ஷஃபாஅத்' கிடைக்க வேண்டின் வாழ்வில் ஒரு தடவையாவது அந்த நபிகளாரின் அடக்கத் தலத்தைத் தரிசித்து ஆகவேண்டும், அப்போதுதான் அந்த ஷஃபாஅத்திற்கு தகுதி பெறமுடியும் என்ற உணர்வு முஸ்லிம்களின் ரத்தத்தோடு ரத்தமாக கலந்து, காணப்படுகின்றது. அதுதான் உண்மை. ஆகவேதான் ஆண்டு தோறும் ஹஜ்ஜுச் செய்யச் செல்லும், உள் நாட்டவரும் வெளி நாட்டவரும் அங்கே, மதீனாபுரிக்கும் சென்று வருவதை தங்களின் தார்மீகக் கடமையாகக் கருதி சென்று வருகின்றனர். வென்று வருகின்றனர்.

உலகில் வேறு எவரின் மண்ணறைக்கும் மக்கள் இவ்வளவு முக்கியத்துவம் கொடுத்து - செல்வதாக காண முடியாது.

இந்த உன்னதமான காட்சியை கருவாகக் கொண்டு தான் நமது நபிதாசர் பூசிரி அவர்கள்;

''நலம் வேண்டி பாதசாரிகளாய் [உள் நாட்டவர்] வாகனமேரிகளாய் [வெளி நாட்டவர்] மனிதர் செல்லத் தக்காருள் மேலானவரே'' என விளித்து வியப்பைக் கொட்டுகின்றார்.

அன்றி!; இதுவரை படர்க்கைப் பாவில், நபிகளாரின் மகிமைகளை கடைவிரித்த புலவர் பெருமான், இந்த 105 - ஆவது கண்ணியிலிருந்து முன்னிலைப்பாவில் முஹம்மதரின் மகிமைகளைக் கூறிடத் தொடங்கியதன் மூலம், தனது புர்தா பனுவலுக்கு 'காவிய' முத்திரையைத் தட்டிக் கொள்கின்றார். மனுசன் படு கெட்டிக்காரர்...

وَمَنْ هُوَ الْآيَةُ الْكُبْرَى لِمُعْتَبِرٍ
وَمَنْ هُوَ النِّعْمَةُ الْعُظْمَى لِمُغْتَنِمِ ﴿١٠٩﴾

**வமன் ஹுவல் ஆயதுல் குப்ரா லி-**
**- முஃதபிரின்**
**வமன் ஹுவன் நிஃமதுல் உழ்மா லி**
**- முஃதனிமி**

ஆழ்ந்து சிந்திக்கும் சிந்தனைச் செல்வர்களுக்கு அரிய உதாரணக் களஞ்சியமே! மெய்தவத்தோர் கொள்ளை கொள்ளத் தக்க பெரும் பொக்கிஷமே! [-அண்ணலெங்கள் நாயகமே!]

இதனை -

உய்த்துணருவோர்க்கரும்பேர் உதாரணக்
- களஞ்சியமே

மெய்த்தவத்தோர்கொள்ளைகொள்ள மேவுசெல்வப் -
- பொக்கிஷமே!

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : ஆழ்ந்து சிந்திக்கும் பகுத்தறிவாளர்களுக்கு அரிய பெரிய உதாரணக் களஞ்சியமாய்த் திகழும் உத்தமத் திரு நபிகளாரே! உண்மையான பக்த சிகாமணிகளுக்கு கொள்ளைப் பொருளாய்த் திகழும் அனைத்துச் செல்வப் பொக்கிஷமே! அண்ணலெம் பெருமானே!

---

سَرَيْتَ مِنْ حَرَمٍ لَيْلًا إِلَىٰ حَرَمٍ
كَمَا سَرَى الْبَدْرُ فِي دَاجٍ مِنَ الظُّلَمِ ١٠٦

**ஸரைத்த மின் ஹரமின் லைலன் -**
**- இலா ஹரமின்**
**கமா ஸரல் பத்ரு ஃபீ தாஜின்(ம்)**
**- மினழ்ழுலமி**

(நீங்கள்) காரிருள்சூழ் நள்ளிரவில் - முழு மாமதி தவழ்ந்து செல்வது போன்று - தூயதலம் ஒன்றி [புனித மக்கமா நகரி]லிருந்து, வேறொரு புனிதத் தலத்தி [பைத்துல் முகத்திஸி]ற்குச் சென்றடைந்தீர்கள்.

---

இதனை -

காரிருள்சூழ்நள்ளிரவில் கலைமதியம் போவதுபோல்
ஓரிரவில்தூயதலம் ஒன்றிலிருந் தொன்று சென்றீர்
என மறைக்காயர் பாடிப் பரிலாமிக்கின்றார்.

ஹிஜ்ரத் நிகழுவதற்கு சுமார் எட்டு மாதங்களுக்கு முன் கி. பி. 621-ஆம் ஆண்டு (ரஜப் பிறை - 27) திங்கட்கிழமை இரவில், ஈருலக சர்தார் எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு ஜிஸ்மானிய்யத்தான மிஃராஜ் நிகழ்ந்தது.

## உம்முஹானி அம்மையார் வீட்டில்

மீக்கூறப்பட்ட இரவில், மக்கமா நகரில், தமது ஒன்று விட்ட சகோதரி - அலி (ரலி-அன்ஹு) அவர்களின் உடன் பிறந்த சகோதரி-உம்முஹானி பின் அபூதாலிப் அவர்களின் இல்லத்தில் நம் நபிகளார் ஒருக்கணித்துப் படுத்து இருக்கின்றார்கள்.

நபிகளாரின் அன்புத் துணைவியார்-அன்னை நல்லார் கதீஜா பிராட்டியாரும், கடைசிவரை நபிகளாரை அரவணைத்து எதிரிகளைத் திக்குமுக்காடச் செய்து கொண்டிருந்து பெருங்கிளார் அபூதாலிப் அவர்களும் மரணித்து விட்டிருந்த நேரமது.

ஆதலால், அவ்விருவரையடுத்து, ஓரளவு செல்வாக்குப் பெற்றிருந்த உம்முஹானி அம்மையார் (அந்த நேரத்தில் இஸ்லாத்தைத் தழுவவில்லை) தான், நமது நபிகளாருக்கு அடைக்கலமாக இருந்து வந்தார்கள்.

அதுபோது;

வானவர்கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்களும், மழைக்கு அதிபதியான மீகாயீல் (அலை) அவர்களும், காற்றுக்கு அதிபதியான இஸ்ராஃபீல் (அலை) அவர்களும் உயிர்களைக் கைப்பற்றும் அதிகாரம் பெற்றுள்ள ஹழ்ரத் இஜ்ராயீல் (அலை) அவர்களுக்கும் ஒவ்வொருவருக்கும் பின்னணியாக 1,7,0000 வானவர்கள் வீதம், புடை சூழ்ந்து, மக்கா வெளியில் அணி வகுத்து நிற்க, ஜிப்ரயீல் (அலை) அவர்கள் நபிகள் நாதரிடம் மிஃராஜ் அழைப்பைச் சமர்ப்பித்தார்கள்.

முன் அறிவிப்பேதுமின்றி, திடுகூறாகக் கிடைத்த இந்த அருள் அழைப்பு கண்டு, ஒருகணம் திகைத்தாலும் - தன்னைத் தானே அமைதி படுத்திக் கொண்டு - அகமும் முகமும் மலர - அழைப்பை ஏற்று பயணத்திற்கு சித்தமாகுகின்றனர் பைகம்பர் நபியுல்லா.

## ஆன்மீக ஆப்ரேசன்

புனித கஃபா ஷரீபில் உள்ள 'ஹதீம்' எனுமிடத்தில் வைத்து, நபிகளார் அவர்களின் இதயம் பிளக்கப்பட்டு, ஜம் ஜம் நீர் கொண்டு கழுவப் படுகின்றது. அங்ஙனம் கழுவப் பட்ட அதில், ஒரு தங்கத்தட்டிலிருந்த ஈமான் நிரப்பப்பட்டு மீண்டும் அதை இதயத்துள் வைத்து மூடப்படுகின்றது.

இப்படி 'ஸக்க ஸத்ரு' எனும் ஆன்மீக ஆப்ரேசன் நடந்தேறிய பின் தும்பை மலர் போன்ற வெண்ணிற

முடைய 'புராக்' எனும் வாகனத்தில் அண்ணலெம் பெருமான் அமர்த்தப்பட்டு ஜெருசலம் நகர்நேக் பயணம் தொடங்குகிறது.

## புனித நகர்களுக்கிடையில்...

புனித மக்கமா நகருக்கும் ஜெருசலத்திற்குமிடையில் மிஃராஜ் பயணம் தொடரும்போது நெஞ்சை நெகிழ வைத்திடும் நிகழ்ச்சிகள் பல காட்சிப் பொருளாகக் காட்டப்படுகின்றது. அவைகளில் நம்மின் சிந்தைக்கு விருந்தாக அமைந்திட்டதொரு நிகழ்ச்சியாவது;

நபிகளார் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் 'மூஸா வுடைய மக்களில் ஒரு பிரிவினர் இருக்கின்றனர். அவர் கள் (தாங்கள் சத்திய வழியில் செல்வதுடன், மற்ற மக்களுக்கும்) சத்திய வழியை அறிவித்து அதன்படி நீதமும் செய்கின்றனர். [குர் : 7; 159] என வல்லவன் பனூ இஸ்ரவேலர்களில் உள்ள சத்தியவான்களைப் பற்றி அறிவித்துள்ளானல்லவா? அந்த சத்தியவான்கள் எங்கே இருக்கின்றனர்? அவர்களைச் சந்திக்க என் மனம் நாடுகின்றது' என தங்களது இதய வேட்கையினை வெளியிட்டார்கள்.

அதற்கு ஜிப்ரயீல் (அலை) அவர்கள்.

'அல்லாஹ்வின் அன்பரே! நாம்தற்பொழுது இருக்கு மிடத்திற்கும் நீங்கள் குறிப்பிடும் அந்த சத்தியசீலர்கள்

வாழுமிடத்திற்கும் இடையில் ஆறரை ஆண்டு கால்நடைப் பயண தூரம் உள்ளது. ஆனால் தற்போது ஆங்கே தங்களை அழைத்துச் செல்ல எனக்கு அனுமதியில்லை. உங்களுக்கு விருப்பமிருந்தால் வல்லவனிடம் கேளுங்கள். அவன் தங்களின் விருப்பங்களை நிறைவேற்றிட எப்போதுமே சித்தமாகவுள்ளான்' என்றார்கள்.

அதன்படி அல்லாஹ்விடம் அண்ணலார் முறையீடு செய்கின்றார்கள். உடனுக்குடன் மாற்று அனுமதி வழங்கப்படுகின்றது. ஆதலால் பயணம் திசை திருப்பி விடப்படுகின்றது. ஆறரையாண்டுத் தொலைதூரம் உள்ள அந்நகரத்திற்கு சிலநொடித் துளிகளில் சென்று அடைகின்றனர்.

## நீங்கள் யார்?

அந்நகரில் சில மனிதர்கள் தென்படுகின்றனர். அவர்களைக் கண்டுகொண்ட நபிகளார், அவர்களுக்கு சலாம் கூறுகின்றனர். பதில் சலாம் சொன்ன அம்மனிதர்கள் நபிகளாரிடம் 'நீங்கள் புதியவர்களாக இருக்கிறீர்கள். உங்களது, முகமனும் எங்களுக்குப் புதியதாக - ஆனால் நாங்கள் எதிர்பார்க்கும் அந்த அரபு நபியின் முகமனைப் போன்றதாகவும் - இருக்கின்றதே? நீங்கள் யார்? எந்த நாட்டை சேர்ந்தவர்கள்?' எனக் கேட்கின்றனர். அதற்கு நபிகளார் 'அப்படியா?... அந்த உம்மி நபி நானே தான்' என்றார்கள். இதனைச் செவியேற்று சிந்தைமிக மகிழ்ந்த

அந்த மனிதர்கள் "எங்களின் மூஸா (அலை) அவர்களால் முன்னறிவிப்புச் செய்யப்பட்ட முஹம்மது நபி தாங்கள் தானா?" என மீண்டும் மகிழ்ச்சிப் பெருக்கோடு வின வினார்கள் அதற்கு நம் நபிகளார்;

'ஆமாம்... ஆமாம்... நானே, தான் அந்த முஹம்மது' என்றார்கள்.

'அப்படியென்றால் - உங்களில் எவர் அந்த அஹ் மதைச் சந்திக்கும் பாக்கியம் கிடைக்கப் பெறுகின்றீர் களோ அவர் முதன்முதலில் எனது முகமனை அந்த அருளாளருக்கு எத்தி வைத்திடக்கடவீர்' என நபி மூஸா (அலை) அவர்கள் எங்களுக்கு வஸிய்யத்துச் செய் துள்ளார்கள். இதோ, அவர்களின் முகமனை ஏற்றுக் கொள்ளுங்கள்.

வ அலைக்கும் வ அலா மூஸஸ் ஸலாம்.

## அவர் யார்?

இதோ தங்களுடன் இருக்கின்றாரே, அவர் யார்?

இவர் உங்களின் பார்வைக்குத் தெரிகின்றாரோ?

'ஆமாம் மிக மிக நன்றாகத் தெரிகின்றார்.

அப்படியா...? அல்ஹம்துலில்லாஹ், இவர் அந்த நாமூசுல் அக்பராவார் (ஜிப்ரயீல்)

இதனைக் கேட்டு இன்பம்மிக மேலிட்ட அம்மனிதர் கள் ஜிப்ரயீல் (அலை) அவர்களுக்கும் பிரத்தியேகமாக முகமன் கூறி, மரியாதை செய்கின்றனர்.

முகமன் மரியாதைகளெல்லாம் முடிந்தபின் இந்நகரில் தாம் கண்ட வியத்தகு காட்சிகளைக் குறித்து விபரம் கேட்டார்கள் நபியுல்லா.

## வீடுகளின் முன் மண்ணறை

இந்நகரில் ஒவ்வொரு வீடுகளின் முன் புறமும் மண்ணறைகளாகக் காணப்படுகின்றதே அது ஏன்?

மரணத்தின் நினைவு எங்களுக்கு இருந்து கொண்டே இருக்க வேண்டுமென்பதற்காக, எங்களில் மரணிப்பவர்களை எங்களது வீடுகளுக்கு முன் புறத்திலேயே நல்லடக்கம் செய்து கொள்வோம். தாங்கள் கண்டது அந்த மண்ணறைகளைத்தான்.

## வரிசை வரிசையாக வீடுகள்

உங்களின் வீடுகள் வரிசை வரிசையாகவும் ஒரே மாதிரியாகவும் காணப்படுகின்றதே அதில் ஏதேனும் அர்த்தமுண்டோ?

ஆமாம். எங்களில் ஏற்றத்தாழ்வுகள் ஏற்பட்டு விடக் கூடாது. ஒரு வீட்டிற்குக் கிடைத்திட வேண்டிய காற்றுச் செல்வதை, மற்றொரு வீடு தடுக்கும்படியாக அமைந்திடக் கூடாது. என்பதற்காக அங்ஙனம் வீடுகளை அமைத்துள்ளோம்.

## நீதிபதிகள் உண்டோ

உங்களில் அதிகாரிகள், நீதிபதிகள், தலைவர்கள் போன்ற நிர்வாகிகள் உண்டா?

அங்ஙனம் எந்த நிர்வாகியும் எங்களுக்கு இல்லை.

நாங்கள் தனிமனித சுதந்திரத்தைப் புறக்கணிப்பது கிடையாது. சுயகட்டுப்பாட்டோடு வாழப் பழகிக் கொண்டோம். கோள், குண்டனி பொய், புறம், பொறாமை சினம் போன்ற சின்னத் தனங்கள் எங்களில் மருந்திற்குக் கூட இல்லை. ஆகவே எங்களுக்கு அத்தகு நிர்வாக அமைப்புக்கள் ஏதும் இதுவரை தேவைப்படவில்லை.

## கடைத் தெருக்கள் இல்லையோ

இங்கே கடைத்தெருக்கள் சந்தை ஆகியன இருப்ப தாகத் தெரியவில்லையே ஏன்?

நாங்கள் அனைவருமே பாட்டாளிகள். எங்களில் சோம்பேறிகள் எவருமே இல்லை. நாங்கள் அனைவரும் கூட்டுப்பண்ணை முறையில் உழவடைசெய்து எங்களின் தேவைகள் அனைத்தையுமே சுயமாக உற்பத்தி செய்து கொள்கின்றோம்; கிடைக்கும் மகசூல்களை மொத்தமாக

ஒரு கிடங்கில் வைத்துச் சேமித்துக் கொள்கின்றோம். எங்கள் ஒவ்வொருவருக்கும் ஏற்படும் அன்றாடத் தேவை களை மட்டும் கிடங்கிற்குச் சென்று எடுத்து உபயோகித் துக் கொள்வோம். எங்களிலுள்ள கூன், குருடு, முடம் போன்ற உழைக்க முடியாதவர்களுக்கு தேவையான ரேஷன்களை குறையாமல் கொடுத்து அவர்களை அரவணைத்துக் கொள்கின்றோம். ஆகவே தான் கடை, தனித்தனி வியாபாரம், சந்தை போன்ற அமைப்புக்கள் எங்களுக்குத் தேவைப்படுவதில்லை.

## மரண வீட்டில் மகிழ்ச்சி!

உங்களில் எவரேனும் மரணித்து விட்டால் கொஞ்சமும் கலங்காது மகிழ்ச்சியுடனிருந்து நல்லடக்கம் செய்வீர்களாமே அது...?

அதுவா - எங்களில் எவரேனும் மரணித்தால் அவர் எந்த நிலையில் மரணிக்கின்றார் என்பது எங்களுக்கு மிக நன்றாகத் தெரிந்து விடும் எங்களில் உள்ள அனை வருமே அல்லாஹ்விற்குப் பொருத்தமான முறையிலேயே மரணிப்பது வழக்கம். ஒருவர் அல்லாஹ்விற்குப் பொருத்த மான முறையில் மரணித்து அழியாத மறுமை வாழ்க்கை யில் சொர்க்கவாதியாக அவர் மிளிரப் போவதைப் பார்க் கினும் மகிழ்வுதரும் சேதிவேறு என்ன இருந்திட முடியும்...? ஆகவேதான் மரண வீடுகளில் நாங்கள் மகிழ்ச்சியாகக் காணப்படுகின்றோம்.

# பிள்ளை பிறந்தால் சோகம்

பிள்ளை பிறந்த வீட்டில் சோகம் தாண்டவமாடக் கண்டேனே அது ஏன்?

பிறக்கும் குழந்தைகள் நாங்கள் கடைப்பிடித்து வரும் கட்டுப்பாடான - நேர்மையான அல்லாஹ்விற்குப் பொருத்தமான எங்களின் வாழ்க்கை முறைகளை மதித்து நடக்குமா? அல்லது இப்லீஸ் லஈனுக்கு வழிப்பட்டு கட்டுப்பாடுகள் உடைவதற்கு காரணமாக அது அமைந்திடுமா? என்பதை நாங்கள் அறியோம். ஒரு வேளை துஷ்டக் குழந்தையாக அது இருந்து விட்டால் அதனைப் பார்க்கிலும் எங்களுக்கு வேறு நஷ்டமும் துக்கமும் உண்டோ? ஆகவே நாங்கள் பிறந்த வீடுகளில் அழுது புலம்பி அல்லாஹ்விடம் அந்தக் குழந்தையின் மூலம் நலம் விளைவதையும் தீமை அழிவதையும் முறையீடு செய்து கொள்கின்றோம்.

அதுமட்டுமல்ல .

ஆண் குழந்தை பிறந்தால் குழந்தையின் தகப்பன் ஒரு மாதம் நோன்பு பிடிக்க வேண்டும். ஆனால் பிறந்த குழந்தை பெண்ணாக இருந்து விட்டாலோ அதன் தகப்பன் தொடர்ச்சியாக இரண்டு மாதம் நோன்பு பிடிக்க வேண்டும், இது எங்களில் உள்ள மிகக் கட்டாயமான பழக்கம். காரணம் ஆண்களைப் பார்க்கிலும் பெண்களில் இருந்துதான் குழப்பமும் குதர்க்கமும் முளைப்பது வழக்கம். ஆகவே அந்தக் குழப்பம் குதர்க்கமேதும் ஏற்படாது பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் மார்க்கத்திற்கும் அந்தக்

குழந்தைகளின் மூலம் முழுக்க முழுக்க நன்மையே சம்பவிக்கச் செய்திட வேண்டுமென அல்லாஹ்விடம் முறையீடு செய்வதற்கே அங்ஙனம் நோன்பு நோற்கின்றோம்.

## விபச்சாரமா? மனிதன் அப்படியும் செய்வானா?

விபச்சாரக் குற்றங்கள் உங்களில் ஏற்படுவதுண்டோ?

விபச்சாரமா...? மனிதன் விபச்சாரமும் செய்வானா? அங்ஙனம் செய்தால் வானம் இடிந்து அவனின் மீது விழுந்து விடாதோ? பூமி பிளந்து அம்மாபாவியை விழுங்கி விடாதோ?

## எப்படி சந்தேகிக்க முடியும்...?

நீங்கள் உங்களிலுள்ள மற்றவரைப் பற்றி சந்தேகிப்பதுண்டா?

இரணம் கொடுப்பது வல்ல அல்லாஹ் லாப நஷ்டங்களை விளைவிப்பவனும் அவனே. அப்படியிருக்க நாங்கள் எப்படி எங்களிலுள்ள மற்றவரைச் சந்தேகிக்க முடியும்?

## பாவம் செய்தாலல்லவோ நோய் நொடி ஏற்படும்

உங்களுக்கு நோய் நொடிகள் ஏற்படுவதுண்டா?

பாவம் செய்பவர்களுக்கல்லவா நோய் நொடி ஏற்படும். நாங்கள்தான் பாவத்தின் பக்கம் திரும்பிக்கூடப் பார்ப்பதில்லையே!

## வனவிலங்குகள் இம்சிக்குமா?

உங்களுக்கு வனவிலங்குகள் இம்சை கொடுப்பதுண்டா?

நாங்கள் எந்தப் பிராணியையும் இம்சிப்பதேயில்லை, நீதி தவறுவதுமில்லை. ஆகவே அவைகள் எங்களை இம்சிப்பதுமில்லை.

## இங்கே எப்படி வந்தீர்கள்?

அது சரி, ஜெருசலத்திலும் ஷாமிலும் வாழ்ந்து வந்த நீங்கள் மிக மிகத் தொலை தூரமான இங்கே எப்படி, ஏன் வந்தீர்கள்? எப்போது வந்தீர்கள்?

எங்களின் வழிகாட்டியான கலீமுல்லா மூஸா (அலை) அவர்கள் ஆணிக்கார ஃபிர் அவனிடமிருந்து எங்களவர்களுக்கு விடுதலை பெற்றுத் தந்தபின் 'ஷாம் நாட்டிலுள்ள

'அரீஹா' எனும் அழகு நகரில் எங்களவர்களைக் குடியமர்த்திவிட்டு மரணித்து விட்டார்கள்.

'அரீஹா' என்பது அழகனைத்தும் ஒருமித்து நிற்கும் எழில் நகரமாகும்.

ஏர்வளமும், கார் வளமும், நீர் வளமும், நில வளமும் இன்னமுமுள்ள அனைத்து வளங்களும் ஒருங்கே அமையப் பெற்ற அந்நகரைச் சுற்றிலும் ஆயிரங் கிராமங்களிருந்தன. ஒவ்வொரு கிராமத்திலும் ஆயிரம் தோட்டங்கள் இருந்தன. ஒவ்வொரு தோட்டங்களிலும் ஆயிரம் வகை மரஞ்செடி கொடிகள் பசுமைக்கு அழகு கூட்டிக் கொண்டிருந்தன.

## அழிம்பு மீறியது

இத்தகு சொகுசான சூழலில் குடியமர்த்தப் பட்ட எங்களவர்கள் அல்லாஹ்விற்கு ஆயிரமாயிரம் நன்றி செலுத்திக் கொண்டு - அமைதியாக வாழ்ந்திருக்க வேண்டும்

ஆனால்; அவர்களின் அழிம்பு மீறியது. ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி தலைகால் தெரியாமல் துள்ளாட்டம் போடத் தொடங்கி விட்டனர். எங்களில் உள்ள 11-வகுப்பைச் சார்ந்தவர்களும். இதனைக்கண்ட 12-வது வகுப்பாராகிய எங்களின் மூதாதையர் அவர்களை எச்சரித்தனர். தகாத காரியங்களைத் தவிர்த்துக் கொள்ளும்படி அறிவுறுத்திப் பார்த்தனர்.

## நேர்மையாளர்கள் வாழத் தெரியாதவர்களாம்

ஆனால் அக்கிரமத்தில் திளைத்திருந்த அவர்களோ எங்களின் அந்த மூதாதையர்களை 'வாழ்க்கையை அனுபவிக்கத் தெரியாத சோதாக்கள்' என்றும், 'கண்ணுக்கும் கருத்துக்கும் தெரியாத மறுமை வாழ்வை நம்பி கைக்குக் கிட்டிய இன்பங்களைக் கை நழுவவிடும் ஏமாளிகள் என்றும் பகுத்தறிவற்ற பத்தாம் பசலிகள்' என்றும் ஏசிப்பேசினரே தவிர சத்தியத்தை மதிக்க மறந்து விட்டனர். அல்ல...... அல்ல மறுத்து விட்டனர்.

ஆகவே; அந்த அக்கிரமக்காரர்கள் பால் இறங்கிடும் அல்லாஹ்வின் முனிவு தங்களையும் - பீடித்துவிடக் கூடாதே என அஞ்சிய எங்களின் மூதாதையர்கள் அனைத்து வசதி வாய்ப்புகளும் நிரம்பிய அந்த அரீஹாவைத் துறந்து ஜெருசலம் நகரில் குடியேறினர்.

ஆனாலும் அங்கும் அவர்களுக்கு அமைதி கொள்ள வில்லை.

ஆகவே வணக்க வழிபாடுகளோடும் ஒழுக்க சீலத் தோடும் வாழத்தகுந்த தூர நாடுகளில் தங்களைக் குடியமர்த்தி அருள்செய்திட வேண்டுமென அவர்கள் அல்லாஹ்விடம் கெஞ்சிக் கெஞ்சிப் பிரார்த்தித்த வண்ண மாக இருந்தனர்.

அருளாளர்களான அவர்களை வல்ல அல்லாஹ் அங்கீகாரம் செய்தான். ஆகவே.

ஜெருசலத்திலுள்ள 'பைத்துல் முகத்தஸ்' எனும் புனித ஆலயத்தில் ஒன்று திரண்டு அங்கே வலதுபக்க மூலையில் காணப்படும் சுரங்கப் பாதையில் இறங்கி பயணம் செய்து சுரங்கம் முடிவடையுமிடத்தில் கரையேறி அந்த இடத்திலேயே புது வாழ்வைத் தொடங்கும்படியாகவும் இல்ஹாம், மூலம் அறிவிப்புச் செய்தான்; வல்ல அல்லாஹ்.

## ஆறரையாண்டு சுரங்கப் பயணம்

அல்லாஹ்வின் ஆணைக்கிணங்க அந்தச் சுரங்கத்தில் இறங்கி நடந்து, நடந்து ஆறரையாண்டுகளுக்குப்பின் இப்போது நாங்கள் வாழும் இந்த இடத்தையடைந்து தங்களின் புதுவாழ்க்கையினைத் தொடங்கினர் எங்களின் அந்த மூதாதையினர். வல்ல அல்லாஹ், அவர்களுக்கு செய்த நேரடியான பேருபகாரங்களை இன்றைக்கு நினைத்தாலும் எங்களின் மெய்சிலிர்க்கின்றது.

## காலையில் ஒளி தோன்றும்

அதாவது ;

காலை உதயமானவுடன் அகல் விளக்கு போன்றதொரு ஒருவகைப் பேரொளி தோன்றி அது முன்னால் சென்று கொண்டேயிருக்கும் அதனைப் பின் தொடர்ந்து எங்களவர் பயணப்படுவர். மாலை நேரமானவுடன்

அல்லாஹ்வின் சமூகத்திலிருந்து ஒருவகை உணவு இறக்கிக் கொடுக்கப்படும். அதனை அவர்கள் களைப்பாற புசிப்பர்; புசித்து முடிந்தவுடன் அந்தப் பேரொளி மறைந்து விடும். ஆகவே அந்த இடத்திலேயே படுத்து மிக நன்றாக உறங்கி ஓய்வு கொள்வர். மறுநாள் காலையில் அதே பேரொளி தோன்றி வழி நடத்திச் செல்லும்.

இப்படியே சுரங்கப் பயண காலமான ஆறரை ஆண்டு காலமும் வல்ல அல்லாஹ் எங்களின் மூதாதையினருக்கு நேரடியாகப் பேருபகாரம் செய்தருளினான்.

இறைவனின் இத்தகு உபகாரங்களை நினைக்கும் போது எங்ஙனம் மெய்சிலிர்க்காதிருக்க முடியும்...?

## நினைந்து நினைந்து நெக்குருகிய நபிகளார்

அக்கிரமும், அத்துமீறல்களும் தனது சொந்த இன பந்துக்களில் தலை தூக்கியபோது துணிவோடு ஆனால் பணிவோடு எதிர்த்துப் போராடி 'நஹ்யுன் அனில் முன்கர்' (அக்கிரமங்களை எதிர்த்து சத்தியாகிரகம்) செய்து;

அக்கிரமம் தணியவே தணியாது எனக் கண்டபோது தங்களின் இச்சைகளையெல்லாம் அடக்கியொடுக்கி கொண்டு தங்களது சொந்த சொகுசுகளையெல்லாம் தூக்கி எறிந்துவிட்டு நாடு கடக்க முன்வந்த அந்த சத்திய சீலர்களின் தியாகத்தையும்-

அன்றிலிருந்து இன்றுவரை சத்தியத்திலேயே நிலைத்து நிற்கும் அவர்களது பரம்பரைச் சிறப்பையும் -

சத்தியப் போராட்டத்தின் போது எதிர்பட்ட சொல்லொண்ணா துன்புகளை - துயர்களை - கஷ்ட நஷ்டங்களையெல்லாம் சிரித்த முகத்தோடு தாங்கிக் கொண்ட அவர்களது மனதின் திண்மையையும், தப்லீக் முறைகளையும், நினைந்து நினைந்து நெஞ்சம் நெக்குருகி நின்ற நமது நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் ''அடுத்து உங்களது திட்டமென்ன?'' என இவர்களைப் பார்த்துக் கேட்டார்கள்.

## எதிர்பார்க்கப்பட்ட ஏந்தல் நபி

''ஆகிர் நபியவர்களே! நாங்கள் எங்களது மூதாதையரின் வழிகாட்டியான மூஸா (அலை) அவர்களது சுன்னத்து முறைகளையும்; அவருக்கு இறக்கிக் கொடுக்கப் பட்ட முதல் வேதமான 'தவ்ராத்'தின் கட்டளைகளையும் ஒரு குறிப்பிட்ட காலம் வரை ஏற்று நடக்கப் பணிக்கப் பட்டிருந்தோம்.

அந்த குறிப்பிட்ட காலம் முடியும்போது எங்களுக்குரிய புது வழிகாட்டுதல் எங்களைத் தேடி வரும் என உணர்த்தப் பட்டிருந்ததால் அதனை எதிர்பார்த்து தவ்ராத்தின் பாட்டையிலேயே வாழ்ந்து வருகின்றோம். இதுதான் எங்களது திட்டம்'' என அம்மக்கள் பதிலுரைத்தார்கள்.

## நபிகளாரின் கரம் பற்றினார்

இதனைக் கேட்டுப் புன்முறுவல் பூத்த பூமான் நபிகளார் ''ஓஹோ! இன்னமும் அந்தக் காலம் வர வில்லையா?'' என பொடி வைத்துப் பேசினார்கள்.

''ஏன் வரவில்லை ? இதோ அல்லாஹ்வின் அருளாக அருள் வடிவமாக தாங்கள் எழுந்தருளி விட்டீர்களே!'' என உணர்ச்சிப் பிழம்பாகக் கூறி நின்ற அந்த மக்கள் அண்ணலாரின் அருள் கரங்களைப் பற்றிப் பிடித்து ''அஷ்ஹது அன் லாயிலாஹ இல்லல்லாஹ் வஅஷ்ஹது அன்னக்க ரசூலுல்லாஹ்'' என தவ்ஹீது கலிமாவை மொழிந்தவர்களாக தீனுல் இஸ்லாத்தில் தங்களை ஒப் படைக்கின்றனர்.

அல்ஹம்து லில்லாஹ்!

இத்தகு நெஞ்சம் நெகிழத்தகு நிகழ்ச்சியை முடித்துக் கொண்டு அங்கிருந்து அண்ணல் நபிமணி (ஸல்) அவர் களும், வானவர்கோன் ஜிப்ரயீல் (அலை) அவர்களும் ஜெருசலம் நோக்கி பயணம் தொடர்கின்றனர்.

## பைத்துல் முகத்தஸில் நபிமார் சாட்சி

அங்கே பைத்துல் முகத்தஸில்;

ஆதிபிதா ஆதம் நபி முதற்கொண்டு ஈஸா ரூஹுல்லா ஈராக உள்ள 1,24,000 நபி இரசூல்மார்களும் ஒன்றிணைந்து நின்று;

அண்ட சராசரங்களனைத்தும் எவர் பொருட்டால் படைக்கப்பட்டு அலைவிண்டுவிடாமல் நின்றுவிடாமல் பாதுகாக்கப்பட்டு வருகின்றதோ அந்தக் காரண நபியுல்லாவை;

தங்களின் தீர்க்க தரிசனத்திற்குரிய தனிப் பெரும் தானைத் தலைவராகத் திகழும் தாஹா இரசூல் நபியை -

அருட் கடாச்சங்களனைத்திற்கும் முழு பொருளாகத் திகழும் அஹ்மது முஜ்தபா முஹம்மது முஸ்தபா (ஸல்-அம்) அவர்களை, வழிமேல் விழி வைத்து இதோ வந்து விடுவார்.. இதோ வந்து விடுவார் என எதிர் பார்த்து காத்திருக்கின்றனர்.

ஏக்கங்களனைத்தும் ஒட்டு மொத்தமாகத் திரண்டு நின்ற அந்த ஆர்ப்பரிப்பான வேளையில் நபியுல்லா ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் புனித பைத்துல் முகத்தஸினுள் நுழைகின்றார்களென்றால்... கேட்கவும் வேண்டுமா?

- தக்பீர் முழக்கம் விண்ணை அதிரடிக்கின்றது.
- வாழ்த்தொலிகள் மண்ணை மலரச் செய்கின்றது.
- வரவேற்பு மொழிகள் மண்ணையும் விண்ணையும் ஒளிரச் செய்கின்றது.

ஆமாம் ... ஆமாம் அப்போதுதான் பைத்துல் முகத்தஸினுள்ள அந்த மண்ணும் மலர்ச்சியை நுகர்கின்றது.

## வல்ல நாயனுக்கே நன்றி

வரவேற்பும் வாழ்த்துகளும் நிறைவுறும் போது இத்யாதி உயர்வான உயர்வுகளையும் ஈந்தருளிய வல்ல நாயனுக்கு நன்றியுபச்சாரம் தொழுகையின் வடிவில் தொடங்கு கின்றது.

ஆனால் தொழுகையை இமாமாக முன் நின்று நடத்துபவர் யார்?

அது வேறு எவராக இருந்திட முடியும்? நமது நபிகளார் தான்.

ஆமாம்-ஆமாம் அனைத்து நபிமார்களுக்குமே இமாமாக தலைவராக நின்று உம்மி நபியாகிய - அனாதை நபியாகிய -ஆகிர் நபியாகிய முஹம்மது ஸல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் இரண்டு ரகாஅத்துக்கள் தொழ வைக்கின்றார்கள். அனைத்து நபிமார்களும் 'மஃமூம்களாக' அன்னாரின் பின் நின்று தொழுகின்றார்கள்.

அத்தக் காட்சி கண் கொள்ளா மாட்சியன்றோ?

## இறைத் துதி சாற்றுதல்

அந்த அருள்மிகு மாட்சி முடிந்தபின் ஆதிபிதா ஆதம் நபி (அலை) அவர்கள் எழுந்து நின்று;

''தனது நேரடி மேற்பார்வையில் என்னைப் படைத்தும்; அவனது அமரர்களான மலக்குகளை எனக்கு மரியாதை

செய்யும்படி செய்தும்; உலகில் அனைத்துத் தீர்க்கதரி களையும் எனது பிதுர் வழிகளாக ஆக்கியருளிய வல்லவனாம் அல்லாஹ்விற்கே புகழான புகழனைத்தும் சொந்தம்''

என அல்லாஹ்விற்குப் புகழாரம் சூட்டிப் புகழ் பெறுகின்றார்கள்.

அதனையடுத்து; இரண்டாம் ஆதம் எனச் சிறப்பிக்கப் பட்ட நூஹு நபி (அலை) அவர்கள் எழுந்து நின்று;

''இறைவ, எம்பெரும! 'அக்கிரமக்காரர்களை அழித்து விடு' என்ற எனது வேண்டுதலை அங்கீகரித்து (அகிலம் சூழ் வெள்ளப் பிரளயத்தை உண்டாக்கி, அக்கிரமங்களை அழித்தொழித்தவனும், அப்போது என்னையும் என்னைச் சார்ந்த விசுவாசிகளையும் மூழ்கடித்து விடாமல்) மரக் கலத்தின் துணை கொண்டு ஈடேற்றம் பெறச் செய்த சீமானும், என்னை நபிப்பதவி கொண்டு மாண்பு பெறச் செய்த எம்மானுமாகிய அல்லாஹ் ஒருவனுக்கே புகழான புகழனைத்தும் சொந்தம்'' என அல்லாஹ்வைத் துதி பாடினார்கள்.

அதனையடுத்து; கலீலுல்லா' என்ற சிறப்பினைப் பெற்ற தியாகச் செம்மல் இப்ராஹீம் நபி (அலை) அவர்கள் எழுந்து நின்று;

''என்னைத் தனது கலீலாக ஆக்கிக் கொண்ட ஏகன் எனக்கு பிரமாண்டமான அரசை வழங்கிய வல்லவன் - 'ரிசாலத்' எனும் தீர்க்கதரிசனத்திற்கு என்னைத் தேர்வு செய்த தேவன் நெருப்புக் குண்டலத்திற்கு இரையாகாமல் என்னைப் பாதுகாத்து அந்த நெருப்புக்

குண்டத்தை 'இதம் தரும் குளிர்வனமாக' மாற்றிக் கொடுத்த மாப்பெரியவனுமான அல்லாஹ் ஒருவனுக்கே புகழான புகழனைத்தும் சொந்தம்''

என தோத்திரம் செய்தார்கள்.

அதன் பின் : 'கலீமுல்லா' எனச் சிறப்பிக்கப்பட்ட கண்ணியவான் மூஸா (அலை) அவர்கள் எழுந்து நின்று;

''என்னிடம் உரையாடல் நடாத்திச் சிறப்பித்த சீமான்-தனது தீர்க்கதரிசனத்திற்கு எளிமையான என்னைத் தேர்வு செய்த பூமான் - முதல் வேதமான தவ்ராத்தை என்பால் இறக்கி அருளிய கோமான் - தெய்வீகக் காதலை என் இதயத் தாமரைதனில் மலர்ந்தருளச் செய்த மாயோன் அல்லாஹ் ஒருவனுக்கே புகழான புகழனைத்தும் சொந்தம்''

என இறைப்புகழ் சாட்டினார்கள்.

அதனையடுத்து; அகிலமனைத்தையும் ஒரு குடையின் கீழ் ஆண்ட மாமன்னர் சுலைமான் நபி (அலை) அவர்கள் எழுந்து நின்று ;

''காற்று, மனிதஇனம், ஜின் இனம், ஈ, எறும்பு முதலான கோடான கோடி ஜீவராசிகளனைத்தையும் அடியேனின் ஆளுகைக்குட் படுத்திய ஆதி-பறவை போன்ற அனைத்துப் படைப்புக்களின் மொழிகளையும் அடியேனுக்குப் புரியச் செய்த திருவோதி - அகிலத்தில் எவருக்குமே கிடைத்திடாத அரியணையை அடியேனுக்கு வழங்கிய ஜோதி-அல்லாஹ் ஒருவனுக்கே புகழான புகழனைத்தும் சொந்தம்''

என புகழாரம் சூட்டினார்கள்.

அதனையடுத்து 'ரூஹுல்லா' என்ற சிறப்பினைப் பெற்ற ஈசாநபி [அலை] அவர்கள் எழுந்து நின்று:

''எனக்கு தவ்ராத்தின் தத்துவங்களைக் கற்றுத்தந்து 'இன்ஜீல்' எனும் மூன்றாவது வேதத்தை வழங்கிய வல்லான் - மரணித்து விட்ட பிரேதங்களை உயிர்பித்தெழ வைக்கும் [முஃஜிசா] அற்புதத்தையும், பிறவிக் குருடர்களையும், குஷ்டரோகிகளையும் தொட்ட மாத்திரத்தில் சுகம் கிடைத்திடச் செய்யும் அற்புதத்தையும் என்னில் வெளிப்படுத்திய நல்லான்-அல்லாஹ் ஒருவனுக்கே புகழான புகழனைத்தும் சொந்தம்''

என புகழாரம் சூடினார்கள்.

கடைசியாக, காமில் நபியுல்லாவாகிய நமது முஹம்மது (ஸல்-அல்) அவர்கள் எழுந்து நின்று;

''என்னை அகிலத்தின் அருளாக அனுப்பிய சீமான்-குர்ஆன் எனும் கோன்மறையை என்பால் இறக்கியருளிய கோமான் - எனது நெஞ்சினை விரிவாக்கியும்' என்மூலம் இஸ்லாம் மார்க்கத்தைச் சம்பூரணமாக்கியருளியும், எனது திக்ரு ஃபிக்ருகளை உடலுக்குடன் உயர்த்தி உறுதுணை செய்தும், அகிலத்தில் தோன்றிய அனைத்துச் சமூகங்களை விட எனது சமூகத்தை (உம்மத்தே முஹம்மதியாக்களை) சிறந்த சமூகமாக ஆக்கியருளியும், 'கருணையாளர் அன்பாளர்' என என்னைச் சிறப்பித்தும் பேரருள் புரிந்த பூமான் - அல்லாஹ் ஒருவனுக்கே புகழான புகழனைத்தும் சொந்தம்''

என புகழ் சாற்றினார்கள்.

## நம் நபிகளாருக்குத் தவிர அது வேறு எவருக்கு ஏற்படும்?

அன்பரீர்! இது வரை,

ஆதிபிதா ஆதம் நபி [அலை] அவர்கள் முதற்கொண்டு ஈசாருஹுல்லா [அலை] அவர்கள் ஈராகவுள்ள அனைத்து நபிமார்களும் தத்தமக்கு கிடைத்துள்ள மகத்துவங்களையும் மகா கீர்த்திகளையும் சொல்லிச் சொல்லி வல்லவனாம் அல்லாஹ்வைத் தோத்திரம் செய்த மகத்துவங்களைக் கண்டோம்.

ஆனால் அண்ணலெம் பெருமான் முஹம்மது [ஸல்-அம்] அவர்கள் மட்டும் தங்களின் உம்மத்தினரான நம்மை நினைவு கூர்ந்து - தோன்றிய அனைத்துச் சமுதாயத்தினைப் பார்க்கிலும் தங்களின் உம்மத்துக்களை தலைசிறந்த சமுதாயமாக ஆக்கப்பட்டுள்ளதை தமக்குக் கிடைத்த மிகப்பெரும் கீர்த்தியாகக் கருதி - அல்லாஹ்வைப் புகழுவதற்கு அதனையும் ஒரு காரணமாக எடுத்துக் காட்டியது இருக்கின்றதே அது, நமது நபிகளாருக்குத் தவிர வேறு எவருக்கு ஏற்பட முடியும்? ... வேறு எந்த நபியாவது தனது உம்மத்துக்களை அந்த நல்ல நேரத்தில் நினைவு கூர்ந்தனரா? இல்லையே!

[ ] அகிலத்தில் தோன்றிய அனைத்து நபிமார்களும் ஒரே இடத்தில்-ஒரே நேரத்தில்-ஒன்று கூடியுள்ள அருள்மயமானதோர் நிலை.

☐ நொடி நேரங்கூட வீணாக்க முடியாத அதிமுக்கியமான தொரு நேரம்.

☐ அகிலத்தில் முன்பின் எப்போதுமே இப்படியொரு வரலாறு ஏற்பட்டதில்லை என சொல்லிடத்தக்க மிக்க மகோன்னதமானதொரு சந்தர்ப்பம்

அல்லவா?

இத்தகு அற்புதமான நிலையில் கூட தங்களது உம்மத்துக்களான நம்மை மறந்து விடாமல் நினைவு கூர்ந்து நமக்கு தக்க மரியாதையினை தேடித்தந்த அந்த மனோபாவத்தினால் தான் மற்ற நபிமார்களுக்கில்லாத தனிப் பெறும் சிறப்பு நமது நபிகளாருக்குக் கிடைத்துள்ளது என்றால் எவரோ அதனை மறுத்துரைத்திட முடியும்!

நம் நபிகளாருக்கு மட்டுமே சொந்தமான இந்த மகத்துவத்தை ஆங்கே [பைத்துல் முகத்தசில்] விமரிசித்து நின்ற இப்ராஹீம் [அலை] அவர்கள்:

'நபிமார்களே! நபிமார்களே! நமக்கு எவருக்குமே கிட்டாத தனித்தன்மை எனது வழித் தோன்றலான இந்த முஹம்மதுக்கு மட்டும் ஏன் கிட்டியது என்பதனை இப் போதாவது உய்த்துணரும் காண்'

என இடித்துரைக்கின்றார்கள்.

இப்படி'

இறைப்புகழ் சாற்றலும், இறைப்புகழ் சாற்றுவதிலேயே தங்களின் தனிமுத்திரையைப் பதித்ததன் மூலம் நம் நபி

களாரின் தனிப்புகழ் ஓங்குதலுமான இந்த மகாத்மியம் நடந்து முடிந்ததோடு புனித பைத்துல் முகத்தஸ் வைப வங்கள் நிறைவு பெறுகின்றன.

நம் நபிகளாரும் ஜிப்ரயீல் [அலை] அவர்களும் ஆங்கி கிருந்து விண்ணுயருகின்றனர்.

அன்பரீர்! மூஸா [அலை] அவர்களின் உம்மத்தில் அன்றைக்கும் சத்தியவான்களாக வாழ்ந்து கொண்டிருந்த சத்திய சீலர்களை நம் நபிகளார் சந்தித்து தீனுல் இஸ் லாத்தில் சேர்த்துக் கொண்ட அருள்மயமான நிகழ்ச்சியும்;

பைத்துல் முகத்தசில் நபிமார்களுக்கெல்லாம் நடுநாயக மாக நம் நபிகளார் ஏற்றம் பெற்றிட்ட இந்த மாட்சிகளு மாகிய-கஃபாவிற்கும் பைத்துல் முகத்தஸிற்குமிடையில் நடந் தேறிய - இந்த நிகழ்சிகளைத்தான் கவிக்குரிசில் பூசிரி [ரஹ்] அவர்கள் இங்கே 107-ம் கண்ணியில்

காரிருள்சூழ்நல்லிரவில் கலைமதியம் போவதுபோல்
ஓரிரவில்தூயதலம் ஒன்றிலிருந் தொன்றுசென்றீர்.

என வினயமாகச் சொல்லிக் காட்டுகின்றார்.

எப்படி அவரின் சரித்திரக் குறிப்பு?

சுப்ஹானல்லாஹ்!

க-ரை : கரிய நல்லிரவில் முழுநிலா செல்வதுபோல நீவிர், ஒரு இரவின் ஒரு சில சிட்டிகைகளில் புனித மக்கா விலிருந்து புறப்பட்டு ஜெருசலம் நகரை அடைந்தீர்.

வி-ரை : பூசிரி கவிதையா பாடுன்றார் ... .... அல்ல, அல்ல. நபிகளாரிடம் நேருக்கு நேர் பேசுகின்றார். 105-லும், 106-லும் சிறப்பியல்புகளால் நபிகளகரை அழைத்து -அன்னாரின் கவனத்தை தம் பக்கம் ஈர்த்துக் கொண்ட பின்-இங்கே 107-ல் நபிகளார் [ஸல்-அம்]அவர்கள் மிஃராஜ் பயணத்தின் நிமித்தம் புனித மக்காவிலிருந்து புனித ஜெருசலத்திற்கு சென்றாரகளே, அந்த கவின்மிகு காட்சியை அனைவருக்குமே சொல்லிக் காண்பித்து அதன் மூலம் தனக்கு மிஃராஜ் நிகழ்ச்சியில் இருக்கும் உறுதியான நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்கின்றார். அது மட்டுமா? நபிகளார் மிஃராஜ் பயணம் மேற்கொண்ட நாள் - மிஃராஜ் பயணத்தின் போது மக்மாவிற்கும் ஜெருசலத்திற்குமிடையில் நிகழ்ந்த அற்புதங்கள், ஆகிய அனைத்தையுமே இந்தக் கண்ணியில் சொல்லிக் காண்பிக்கின்றார் அவர்.

'அப்படியொன்றும் தெரியவில்லையே ? ஏ மய்யா ரொம்ப பெரிசாக பிதற்றுகின்றீர்?...' என்று நீங்கள் முணு முணுத்து விடாதீர் எப்படி என்ற விபரத்தையும் காரண காரியத்தோடு கூறி விடுகின்றேன்.

'காரிருள் சூழ் நள்ளிரவு என்று அவர் கூறுவதை கொஞ்சம் கவனித்துப் பாருங்கள் : இதன் மூலம் 'மிஃராஜ் ரபீவுல் அவ்வல் பிறை 12 - ம் இரவில்தான்' என சிலர் கூறுவதை மறுத்து, ரஜப் பிறை 27-ம் இரவன்றுதான் நபிகளார் மிஃராஜ் சென்றார்கள்-என்பதை உணர்த்துகின்றார்.

ஏனெனில் பிறை 12-ல் காரிருள் சூழ் இரவு ஏற்பட வழியில்லை அல்லவா? அதனையடுத்து,

وَقَدَّمَتْكَ جَمِيعُ الْأَنْبِيَاءِ بِهَا

وَالرُّسْلِ تَقْدِيمَ مَخْدُومٍ عَلَى خَدَمِ (109)

**வகத்தமத்கஜமீ வுல்அன்பியாயி**

**- பிஹா**

**வர்ருஸ்லி தக்திமாக் தூமின் அலா**

**- கதமி**

அகிலத்தில் தோன்றிய மற்ற நபி, ரசூல்மார் அனைவரும் உங்களை-ஊழியர்கள் தங்களின் உளம் கவர்ந்த முதலாளியை வழியனுப்புவது போல - அந்த ஸ்தானத்திற்கு வழியனுப்பி வைத்தனர்.

இதனை -

நற்பதவியாம்அதற்குநபி யிரசூல்மார்கள் நும்மை

முற்படுத்தினார்பணியாள்மு தல்வரைமுன்

- போக்குதல்போல்

என மறைக்காயர் மணி மணியாகப் பாடுகின்றார்.

க-ரை : அருந்தவத் தலைவ! நீங்கள் அங்ஙனம் பைத்துல் முகத்தசில் இருந்து 'காபகௌஸைன்' எனும் அத் திருத்தானத்திறகு உயருகையில் பைத்துல் முகத்தசில் நுமக்காகக் கூடியிருந்த அனைத்து நபி, இரசூல்மார்களும் நும்மைம்மை வழியனுப்பி வைத்த அந்தக் காட்சி இருக்கின்றதே! அது, ஒரு நாட்டின் பிறதமர் வெளிநாடு செல்லுகையில் அவருக்குக் கீழ் பணிபுரியும் உயர் அதிகாரிகள் அணி வகுத்து நின்று மரியாதை செலுத்தி தங்கள் பிரதமரை வழியனுப்புவார்களே! அத்தகு காட்சியை மிஞ்சும் ஒப்புவமையற்ற மாட்சியாக அமைந்திருந்தது.

وَأَنْتَ تَخْتَرِقُ السَّبْعَ الطِّبَاقَ بِهِمْ
فِي مَوْكِبٍ كُنْتَ فِيهِ صَاحِبَ الْعَلَمِ ﴿١١٠﴾

**வஅன்த தஹ்தரிகுஸ் ஸப்அத்**
**- திபாக பிஹிம்**
**ஃபீ மவ்கிபின் குன்த ஃபீஹி ஸாஹிப**
**- ல்அலமி**

அல்லாஹ்வின் தூதே! தாங்கள் அந்த நபிமார்களின் இருப்பிடங்களைக் கடந்து - மலக்குகளின் மாபெரும் கூட்டம் புடைசூழ (வானின் ஏழு) அடுக்குகளையும் தாண்டிச் சென்றீர் (அந்நேரம்) நீங்கள் கொடிக்குச் சொந்தம்பெற்றீர்கள்.

இதனை -

ஏழடுக்கும்தாண்டிஉம்பர் இருங்குழுவி னோடுநபி
சூழல்கடந்துசென்றீர், துவசம்நும் கைப்பிடித்தே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : அகிலத்தின் அருட் பிழம்பே, அண்ணலே! அங்ஙனம் அணிவகுப்பு மரியாதைகளோடு வழியனுப்பி வைக்கப்பட்ட நீங்கள், நபிமார்களின் இருப்பிடங்களையும், மலக்குகளின் இருப்பிடங்களையும் கடந்து ஏழு வானங்களையும் கிழித்துக் கொண்டு சென்றபோது நீங்களே! எதிர்பார்க்கப்பட்ட விருந்தாளியாக மிளிர்ந்தீர்.

# வெண்தாடி வேந்தர்

புனித ஆலயமாம் பைத்துல் முகத்தஸிலிருந்து புறப்பட்ட பூமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களும் வானவர்கோமான் ஜிப்ரயீல் (அலை) அவர்களும் முதல் வானத்தை அடைகின்றனர்.

ஆங்கே - முதல் வானத்தில் வெள்ளுடை பூண்ட வெண்தாடி வேந்தர் ஒருவர் தங்கக் குரிசிலில் தகைமையோடு வீற்றிருக்கின்றார். அவர்தான் ஆதிபிதா ஆதம் (அலை) அவர்கள்.

இருவருக்குமிடையே - மரியாதைக்காக - அறிமுகம் செய்து வைக்கப்படுகின்றது. இருவரும் முகமன்களைப் பரிமாறிக் கொள்கின்றனர்.

பாவா ஆதம் (அலை) அவர்களின் வலப்பக்கத்தில் ஒரு நிலவாசலும், இடப்பக்கத்தில் ஒரு நிலவாசலும் காணப்படுகின்றது. வலப்பக்க நிலவாசலை ஏறிட்டு நோக்கிச் சிறிப்பதும், இடப்பக்க நிலவாசலை நோக்கி அழுவதுமாகக் காணப்பட்ட ஆதம் (அலை) அவர்களின் நிலை குறித்து நம் நபிகளார் விபரம் கேட்டபோது -

வலப்பக்கம் இருப்பது சொர்க்கத்தின் தலைவாசலாகும். அங்கே பார்க்கும்போது தனது பிச்சளங்கள் இந்த சொகுசான நல்வாழ்க்கையினை எய்தப்பெறப்போகின்றனர் என நினைக்க, அவருக்கு ஆனந்தம் பொங்குகின்றது. ஆகவே சிரிக்கின்றார். இடப்பக்கம் இருப்பது நரகத்தின் தலைவாசலாகும். அங்கே பார்க்கும்போது தனது பிச்சளங்களில் பலர் இந்த பாழ் நரகின் கீழ்த்தரமான வேதனை

களுக்கு உட்படப் போகின்றார்களே என நினைக்க அவருக்குத் தாங்க முடியாத விசனம் ஏற்படுகின்றது. ஆகவே அவர் அழுகின்றார் - என ஜிப்ராயீல் (அலை) அவர்கள் விபரம் கூறுகின்றார்கள்.

நமது நபிகளார் அவர்கள் நவிலுகின்றார்கள்;

முதல் வானத்தைக் கடந்து ஐநூறு ஆண்டுகால கால்நடைப் பயண தூரம் மேல் நோக்கிப் பறந்தோம். முதல் வானத்திற்கும் இரண்டாம் வானத்திற்கும் இடையே உள்ள நடுவழியில் ஒரு சாண் அளவு கூட சந்து இல்லாமல் மலக்கு கள் நிறைந்து காணப்படுகின்றனர். அவர்கள் அனைவரை யும் 'சஜ்தா' நிலையில் கண்டேன். அவர்களையெல்லாம் கடந்து இரண்டாம் வானத்தை அடைந்தோம்.

**மாணிக்க ஊஞ்சலில்...**

இரண்டாவது வானம் இரும்பு உலோகத்தால் படைக் கப்பட்டிருந்தது,

ஆங்கே அழகிய இரு வாலிபர்களைக் கண்டேன். அவ்விருவரும் பொன்நிற மாணிக்க ஊஞ்சலில் அமர்ந் திருந்தனர். அவர்கள் வேறு யாருமல்ல சகோதரர் ஈசா (அலை)வும் யஹ்யாவும் தான். அவர்களுக்கு முகமன் கூறினேன். வாழ்த்துக்களைப் பரிமாறிக் கொண்டோம்.

அங்கே மலக்குகளின் ஒரு கூட்டத்தைக் கண்டேன். அவர்களின் முகம் பசுவின் முகத்தைப் போல இருந்தது.

அவர்களின் நெற்றியில் வேலாயுதச் சின்னம் பொறிக்கப் பட்டிருந்தது. அவர்களது கைகளில் வேலாயுதம் மின்னிக் கொண்டிருந்தது. அவர்களைப் பற்றி ஜிப்ரயீலிடம் நான் விபரம் கேட்டபோது :

''இந்த மலக்குகள் நெருக்கடியான காலகட்டத்தில் உங்களுக்கு உதவுவதற்காகவே படைக்கப்பட்டுள்ள உதவிப்படைகளாகும்.

''சுப்ஹான தில் இஜ்ஜத்தி வல் ஜபரூத்''

என்ற தஸ்பீஹை அவர்கள் 'திக்ரு' செய்த வண்ணமிருப் பார்கள். உங்களுடைய உம்மத்துக்களில் எவராவது இந்த தஸ்பீஹை திக்ரு செய்து வருவார்களானால் அத்தகைய வர்களுக்கு அந்த திக்ருகளினால் அந்த மலக்குகளுக்குக் கிடைக்கும் அத்தனை வெகுமதிகளையும் பரிசாக வழங்கப் படும்'' என விபரம் கூறினார்.

⁂ ⁂ ⁂

குறிப்பு : மிஃராஜ் நிகச்சிக்குப்பின் 15 மாதங்கள் கழித்து ஹிஜ்ரி முதலாம் ஆண்டு ரமளான் பிறை 17-ல் நிகழ்ந்த பத்ருப் போரின்போதும்; அதனையடுத்து நிகழ்ந்த உஹதுப் போரின்போதும் இரண்டாம் வானத்தில் காணப்பட்ட இதே மலக்குகள் சஹாபாக்களுக்கு உதவியாக கலந்து கொண்டார்கள் என ரிவாயத் செய்யப்பட்டு உள்ளது.



# முழுமதி முகம்

நபிகளார் நவிலுகின்றார்கள் :

இரண்டாம் வானத்திலிருந்து புறப்பட்ட நாங்கள் மூன்றாவது வானத்தை அடைந்தோம்.

அது செம்பு உலோகத்தால் படைக்கப் பட்டிருந்தது.

ஆகவே : சகோதரர் யூசுப் நபி அவர்களைக் கண்டேன். இருவரும் வாழ்த்துக்களை பறிமாறிக் கொண்டோம். அவரின் முகம் முழுமதி போல இலங்கிக் கொண்டிருந்தது. அங்கே ஒரு மலக்கைப் பார்த்தேன். அவரின் பாதம் ஏழாவது பூமிக்குள் ஊடுறுவி இருந்தது. அவருக்குப் பின் அவரைப் போன்ற கோலம் கொண்ட 70,000 மலக்குகள் இருந்தனர். அவர்களனைவரும் :

''சுப்ஹானல் ஹய்யுல் கய்யூமுல்லதீ லாயமூத்து''

என்ற தஸ்பீஹை திக்ரு செய்த வண்ணமாக உள்ளனர்.

மனிதர்களில் எவராவது அந்த திக்ரை நிரந்தரமாக ஓதி வந்தால் அந்த அனைத்து மலக்குகளின் வெகுமதிகளையும் அங்ஙனம் ஓதிவரும் ஒவ்வொருவருக்கும் பரிசாகக் கொடுக்கப்படும்.



## தவ்ஹீதுக் கோபுரம்

மூன்றாவது வானத்திலிருந்து புறப்பட்டு நான்காவது வானத்தை அடைந்தோம்.

அது, தங்க உலோகத்தால் படைக்கப்பட்டிருந்தது.

ஆங்கேயொரு மாளிகை. அதன் கோபுரத்தில் 'லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி' என்ற தவ்ஹீது கலிமாவும், இஃது இத்ரீஸ் நபியின் மாளிகை எனவும் எழுதப்பட்டுருந்தது.

அந்த மாளிகையினுள் சகோதரர் இத்ரீஸ் நபியைச் சந்தித்து மரியாதைகளைப் பரிமாறிக் கொண்டோம். அதன் பின் ''அன்பரே! நீவிர் அனைவருக்கும் முதலில் சொர்க்கத்தினுள் மிகத் தந்திரமாக நுழைந்து விட்டீரே! மகா பாக்கியசாலிதான்'' என்றேன். அதற்கு அவர்: ''சங்கை மிகு சகோதரா! உண்மை அங்கனமன்று சொர்க்கத்தின் தலைவாசலில் ''முஹம்மதும் அவர் தம் உம்மத்துக்களும் நுழையும் முன்பாக இங்கே வேறு எவருமே நுழைந்திட முடியாது'' என எழுதி வைக்கப் பட்டுள்ளது. ஆகவே நான் இதுவரை சொர்க்கத்தினுள் நுழையவில்லை. ஆனாலும் சொர்க்கத்தின் வளாகத்தில் காலத்தை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருக்கின்றேன்'' எனக் கூறினார்.

அங்கே வதியும் மலக்குகள்:

''சுப்ஹானல் மலிக்குல் குத்தூஸ் ரப்புல் மலாயிக்கத்தி வர்ரூஹு'' என்ற தஸ்பீஹை திக்ருச் செய்த வண்ணமாக

உள்ளனர். மனிதர்களில் எவர் இந்த தஸ்பீஹை நிரந்தரமாக திக்ருச் செய்து வருகின்றார்களோ அவர்களுக்கு அந்த அனைத்து மலக்குகளின் வெகுமதிகளையும் பரிசாக வழங்கப்படும்.

## ஐந்தாம் வானில் நபி ஹாரூன்

நான்காம் வானிலிருந்து புறப்பட்டு ஐந்தாம் வானையடைந்தோம்.

அது பவளத்தால் படைக்கப்பட்டிருந்தது.

ஆங்கே சகோதரர் ஹாரூன் நபியைச் சந்தித்து வாழ்த்துக்களையும் முகமன்களையும் பரிமாறிக்கொண்டோம். அங்கே உள்ள மலக்குகள் :

''சுப்ஹான மன் ஜமஅ'பைனத் தலஜி வன் நார்''

என்ற தஸ்பீஹை ஓதிக்கொண்டிருக்கக் கண்டேன்.

## தலை செம்மட்டையானவர்

ஐம்தாம் வானிலிருந்து புறப்பட்டு ஆறாம் வானை அடைந்தோம்.

அது மாணிக்கக் கற்களால் படைக்கப்பட்டிருந்தது.

அங்கே சகோதரர் மூஸா அவர்களைச் சந்தித்து வாழ்த்துக்களையும் முகமன்களையும் பரிமாறிக் கொண்டோம்.

அவரது தலைமுடி செம்பட்டையாகக் காணப்பட்டது.

அவரது மேனி முழுவதும் ரோமங்கள் அடர்ந்திருந்தது.

அவர் என்னைப் பார்த்ததும் விம்மி விம்மி அழுதார். காரணம் அவர் என்னைவிட காலத்தால் எவ்வளவோ முந்தியவராக இருந்தும்கூட அவரது உம்மத்தினரைப் பார்க்கிலும் என்னுடைய உம்மத்துக்கள் மிகமிக அதிகமாக சொர்க்கப்பதியைப் பெற்றுப்ப உள்ளனரே என்ற ஆதங்கம்தான்.

அவரின் ஆதங்கம் போற்றுதலுக்குரியது.

ஆங்கே வதியும் மலக்குகள்.

"சுப்ஹானல் குத்தூஸு ரப்பு குல்லி ஷைஇன் வ காலிகி குல்லி ஷைஇன"

என்ற தஸ்பீஹை இடைவிடாது முழங்கிக் கொண்டிருந்தனர்.

## சொர்க்கத்தின் பாஸ்போர்ட்

நபிகளார் தொடர்ந்து நவிலுகின்றார்கள். ஆறாம் வானிலிருந்து புறப்பட்டு ஏழாம் வானை அடைந்தோம்.

அது வைடூரியங்களால் படைக்கப்பட்டிருந்தது.

ஆங்கே எனது பாட்டனார் இப்ராஹீம் கலீலுல்லாஹ் அவர்களை தரிசித்து மரியாதை செலுத்தினேன்.

அவர் என்னை மிக வாழ்த்தி 'மகனே! உனது உம்மத்தினருக்கு எனது முகமனை எத்திவைத்திடு. மூன்றாம் கலிமாவாகிறது மணமான மண்ணும் சுவையான சுனை நீரும் நிரம்பிய சொர்க்கத்தின் அனுமதிச் சீட்டாக உள்ளது என்பதனை அவர்களுக்கு ஞாபகப்படுத்தி விடு' எனக் கேட்டுக்கொண்டார்கள்.

## பார்வை ஒழுகிவிடும்

அங்கே ஒருவகைப் படைப்புக்களைப் பார்த்தேன் அவர்களைப் பற்றி விபரித்துக் கூறிட எனக்கு அனுமதி இல்லை. ஒருவருக்கு ஆயிரம் கண்கள் இருந்து அவைகளால் அம்மலக்குகளைப் அவர் பார்த்தாலும் அவரின் பார்வை ஒழுகிவிடும்

இத்தகு வியத்தகு படைப்புகளான அந்த மலக்குகளுக்கு சலாம் கூறினேன். அவர்கள்

'அருளுக்கரசே! அன்பின் பிரதிபலிப்பே!! நும் வருகை நல் வருகையாகட்டும்'

என என்னை வரவேற்று வாழ்த்தினர்.

அங்குள்ள மலக்குகள்;

'சுப்ஹான காலிகின் நூர்' - என்ற தஸ்பீஹை முழங்கிய வண்ணமுள்ளனர்.

  

## ஏழாம் வானிற்கும் சித்ரத்துல் முன்தஹாவிற்கும் இடையே...

நபிகளார் நவிலுகின்றார்கள் :

அதன்பின் ஏழாம் வானிலிருந்து சித்ரத்துல் முன்தஹாவிற்கு உயர்ந்தோம்.

அதனிடையே ;

சில நட்சத்திரங்கள் ஒளி வெள்ளத்தை உமிழ்ந்து கொண்டிருக்கின்றன - அவைகளின்மேல் தங்கப் பாளங்கள் சூழப்பட்டு (கவரிங் செய்யப்பட்டு) இருக்கின்றன. அத்தகு நட்சத்திரங்களில் ஒவ்வொன்றிற்குக் கீழும் ஐம்பது ஐம்பது மலக்குகள் நிறுத்தி வைக்கப்பட்டு உள்ளனர். அவர்கள் ஒவ்வொருவரும் என்னைப் பார்த்து :

- புகழேந்தியே! நுமக்கு நல்வாழ்த்துக்கள்.
- '<u>லாஇலாஹ இல்லல்லாஹு முஹம்மதுர் ரசூலுல்லாஹி</u>'

  எனும் தவ்ஹீது மந்திரத்தின் தவமணியே! நுமக்கு நல்வாழ்த்துக்கள்.
- சிலைகளை உடைத்தெரியும் சிகாமணியே! நுமக்கு நல்வாழ்த்துக்கள்.
- அருளாளனான அல்லாஹ்வை ஒருமைப்படுத்தும் ஒளிவிளக்கே! நுமக்கு நல்வாழ்த்துக்கள் என வாழ்த்தி வரவேற்றனர்.

## ரஃபாயீல் ஹுதா

அதனையடுத்தவொரு வானவரைப் பார்த்தேன். 'ரஃபாயீல் ஹுதா' என்பது அவரின் பெயராகும். அவரது தலைமையின் கீழ் 70,000 மலக்குகள் இருந்தனர். அவர்கள் அனைவரும் என்னைப் பார்த்து

- சமாதான திலகத்திற்கு நல்வாழ்த்துக்கள்.
- சமாதான திருத்தூதருக்கு நல்வாழ்த்துக்கள்.
- அவர் பொருட்டால் வானகமும் வையகமும் ஒளி பெற்றது.
- அவர் இரட்சகனின் சன்னிதானத்தில் கண்ணியம் பெற்றவர்.
- அவர் இன்றைய தினம் கண்ணியப்படுத்தப்படுகின்றார்.
- அவர் கணக்கற்ற கீர்த்திகளுக்குச் சொந்தம் பெறுகின்றார்.

என வாழ்த்தி வரவேற்றனர்.

## சம்லாயீல்

அதனையடுத்து 'சம்லாயீல்' என்ற வானவரைப் பார்த்தேன்.

அவரது தலையை, முத்துக்களும் பவளங்களும் பதிக்கப் பெற்ற வைரக்கிரீடம் அலங்கரித்துக் கொண்டிருந்தது. அதில் ஒரேயொரு முத்துமட்டுமே அகிலங்கள் அனைத்திற்கும் ஒளி கொடுக்கப் போதுமானது. ஒரேயொரு பவளம் மதிப்பால் அகிலமனைத்தையும் அடக்கிக் கொள்ளும்படியானது.

## ஒன்பது முழக்கிரீடம்

அதனையடுத்து மலக்குகளின் ஒரு கூட்டத்தைப் பார்த்தேன்.

அவர்களில் ஒவ்வொருவரின் தலையிலும் ஒவ்வொரு கிரீடம் காணப்பட்டது. அந்த ஒவ்வொரு கிரீடமும் ஜிப்ரயீலின் கை முழத்தால் ஒன்பது முழங்கள் இருக்கும். அந்த ஒவ்வொரு கிரீடத்திலும் நானூறு முத்துக்களும் நானூறு செம்பவளங்களும் பதிக்கப்பட்டுள்ளன.

## ஒளிரும் மலக்குகள்

அதனையடுத்து ஒரு மலக்கைப் பார்த்தேன்.

அவரின் வலப்புறத்திலும் இடப்புறத்திலும் அவர் போன்றே ஆயிரமாயிரம் மலக்குகள் காணப்பட்டனர். அவர்களது தலைகளில் ஒளிச் சுடர் ஒளிர்ந்து கொண்

டிருந்தது. அவர்கள் அனைவரும் ஆயத்துல் குர்ஸியை (குர்ஆன் ஷரீபில் இரண்டாவது அத்தியாயத்தில் உள்ள 255-வது வசனம்) ஓதிய வண்ணமிருந்தனர்.

ஆதலால் ஆயத்துல் குர்ஸியின் மகத்துவம் குறித்து ஜிபுரயீல் (அலை) அவர்களிடம் விபரம் கேட்டேன்.

## ஆயத்துல் குர்ஸியின் மகத்துவம்

ஜிப்ரயீல் சொன்னார் ;

வல்ல அல்லாஹ் ஆரம்பமாகப் பூமியை படைத்த போது அது நிலை கொள்ளாமல் அலைக்களித்தது. ஆகவே 70,000 மலக்குகளை அனுப்பி பூமியை அலைக் களியாமல் பிடித்துக் கொள்ளும்படி இறைவன் பணித் தான். அவர்கள் அனைவரும் தங்களது முழு சக்தியையும் உபயோகித்து முயன்று பார்த்தனர். ஆனால் அவர்களால் முடியாது போயிற்று. பூமி அலைக்களிந்து கொண்டே இருந்தது.

ஆகவே, மீண்டும் 70,000 மலக்குகளை அனுப்பி வைத்தான் இறைவன் அந்த 1,40,000 மலக்குகளாலும் முடியாது போயிற்று. ஆகவே மீண்டும் 70,000 மலக்கு களை அனுப்பினான் 2,10,000 மலக்குகள் ஒன்று சேர்ந்தபோதும் முடியவில்லை. பூமி அலைகளிந்து கொண்டே இருந்தது.

ஆகவே 'காஃப்' எனும் மலையையும் அதன் தொடர்களான 440 குட்டி மலைகளையும் படைத்து நங்கூரமிடச் செய்தான் இறைவன். அப்போதும் பூமி நிலைநின்றபாடில்லை.

கடைசியாக உலக உருண்டையின் மீது இந்த ஆயத்துல் குர்ஷியை எழுதும்படி செய்தான். அங்ஙனம் எழுதப்பட்டபின் பூமி நிலை கொண்டது.

அது மட்டுமன்று,

சூரிய சந்திரனைப் படைத்த இறைவன் அவைகளை நேமமாக இயங்கும்படி பணித்து 70,000 மலக்குகளை அனுப்பியபோது அவர்கள் அனைவராலும் முடியவே இல்லை. ஆகவே கடைசியில் சூரிய சந்திரனின் மீதும் அந்த ஆயத்துல் குர்ஸியை எழுதப்பட்டபின்பே அவை கிரமமாக இயங்கத் தொடங்கின.

ஆகவே அன்பரே !

உங்களது உம்மத்துக்களில் எவர் இந்த ஆயத்துல் குர்ஸியை நிரந்தரமாக ஓதி வருகின்றார்களோ அவர்களுக்கு இந்த பூமி, இதனைச் சுமந்து கொண்டுள்ள 2,10,000 மலக்குகள் அதுபோல சூரிய சந்திரன் அவ்விரண்டையும் இயக்கிக் கொண்டுள்ள 2,10,000 மலக்குகள் ஆகியோரை மிகைக்கும்படியான அளவு மிக மிக பிரமாண்டமான வெகுமதிகளை வல்ல அல்லாஹ் வழங்கிடச் சித்தமாக உள்ளான். என ஜிப்ரயீல் (அலை) விபரம் கூறினார்கள்.

அதனைத் தொடர்ந்து கருத்துத் தெரிவித்த நமது நபிகளார்.

ஷைத்தான்களுடைய சகல தீங்குகளை விட்டும் காக்கும் கேடயமாக இந்த ஆயத்துல் குர்ஸியை வல்ல அல்லாஹ் ஆக்கியுள்ளான் ஆகவே; அந்த ஆயத்தைப் பற்றிக் கொள்ளுங்கள் ஆதார நூல்: அராயீஷ்

## கஸ்தூரிக் கலவை

நபிகளார் நவிலுகின்றார்கள்.

மலக்குகளின் இந்தக் கண் கொள்ளாக் காட்சிகளை வழிநெடுகிலும் பார்த்துக் 'கொண்டே சென்ற நாங்கள் சித்ரத்துல்முன்தஹா' வை அடைந்தோம்.

'சித்ரத்துல் முன்தஹா' என்பது பிரமாண்டமானதொரு மரமாகும்.

அது கஸ்தூரிக் கலவையில் வேரூன்றியுள்ளது. அதற்கு 1,00,000 கிளைகள் இருக்கின்றன ஒரு கிளைக்கும் மறுகிளைக்குமிடையே 100 ஆண்டு கால கால்நடைப் பயண தூரமுள்ளது. ஒவ்வொரு கிளையிலும் 1,00,000 இலைகள் உள்ளன. ஒரேயொரு இலையின் கீழ் அகிலத்து மனிதர்கள் ஜின்களனைவரும். நிழல் பெற்றிட முடியும். அதன் ஒவ்வொரு இலையிலும் ஒவ்வொரு மலக்கு வீதம் சாட்டப்பட்டு உள்ளனர். ஒவ்வொருவரும் சந்திரனைப் போன்ற வதனம் கொண்டவர்கள். அவர்களின் தலைகளில் ஒளி சிந்தும் கிரீடம் சூட்டப்

பட்டிருந்தது. அவர்களது கைகளில் ஒளிக் கோடாரிகள் காணப்பட்டன. அவர்களின் நெற்றியில்;

'நாங்கள் சித்ரத்துல் முன்தஹாவின் நங்கூரங்கள் முடிவேயில்லாத முன்னவன் பரிசுத்த மானவன்' என எழுதப்பட்டிருந்தது.

அந்த அதிசய மரத்தின் வேரில் நான்கு நதிகள் ஒலித்தோடிக் கொண்டிருக்கின்றன.

ஒரு நதி தெளிந்த நீராறு
ஒரு நதி திறையாப் பாலாறு
ஒரு நதி தெவிட்டா மதுவாறு
ஒரு நதி தெளி தேனாறு

அந்த மரத்தின் தூரில் ஜிப்ரயீல் (அலை) அவர்களின் சிம்மாசனம் இருக்கின்றது.

## பாங்கொலித்த ஜிப்ரயீல்

நபிகளார் நவிலுகின்றார்கள்.

அந்த சிம்மாசனத்தை நாங்கள் அடைந்தவுடன் ஜிப்ரயீல் (அலை) பாங்கு சொன்னார்கள். வல்ல அல்லாஹ் அந்த பாங்கிற்கு பதில் சொன்னான் அதன் விபரமாவது.

ஜிப்ரயீல் : 'அல்லாஹு' அக்பர் ...அல்லாஹு' அக்பர்'

அல்லாஹ் : 'என தடிமை மெய்யுரைத்தார் நான் படைப்புக்களனைத்தை விட மிகப் பெரியவன் தான்'

ஜிப்ரயீல் : 'அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்'

அல்லாஹ் : 'எனதடிமை மெய்யுரைத்தார் நான் படைப்புகளனைத்தை விட மிகப் பெரியவன் தான்'

ஜிப்ரயீல் : அஷ்ஹது அன் (ல்) லாயிலாஹ இல்லல் லாஹ்...அஷ்ஹது அன் (ல்) லாயிலாஹ இல்லல்லாஹ்'

அல்லாஹ் : 'என்னைத் தவிர வேறு தெய்வம் இல்லவே இல்லை தான்,

ஜிப்ரயீல் : அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் ...அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்

அல்லாஹ் : எனதடிமை மெய்யுரைத்தார் முஹம்மது எனதடியார்தான். அவர் என் திருத்தூதர்தான். அவருக்கே நல் வாழ்த்துக்கள்.

ஜிப்ரயீல் : ஹய்ய அலஸ் ஸலாத்
ஹய்ய அலஸ் ஸலாத்

அல்லாஹ் : மெய்தான். எவர் தொழுகையை நிலை நாட்டினாரோ அவர் வெற்றி பெற்று விட்டார்... வெற்றி பெற்று விட்டார்.

ஜிப்ரயீல் : ஹய்ய அலல் ஃபலாஹ்
ஹய்ய அலல் ஃபலாஹ்

அல்லாஹ் : மெய்தான் ...மெய்தான். எவர் தொழுகையினை அச்சவுணர்வோடு நிறைவேற்றினாரோ அவ் விசுவாசி நிச்சயம் வெற்றி பெற்று விட்டார் நிச்சயம் வெற்றி பெற்று விட்டார்.

## வித்ருத் தொழுகை உருவாகியது

ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பாங்கு சொல்லவும், வல்ல அல்லாஹ் அதற்கு நேரடியாகப் பதில் சொல்லவுமான இந்த மாட்சி நிறைவு பெற்றவுடன், ஜிப்ரயீல் 'இகாமத்' சொல்ல அனைத்து மலக்குகளும் மஃமூம்களாகப் பின் தொடர, நமது நபியுல்லா முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் இமாமாக இருக்க, தொழுகை தொடங்குகிறது.

இரண்டே இரண்டு ரகாஅத் தொழுவது தான் திட்டம்

ஆனால்; இரண்டாவது ரகாஅத் இருப்பில் நபிகளார் இருக்கும் போது ஜிப்ரயீல் (ஜிப்ரயீலும் தொழுகையில் தான் இருக்கின்றார்) இந்த அருள் மயமான தொழுகையில் நமக்கென ஒரு பங்கு கிடைத்தால் நலமாக இருக்குமே' என நினைக்கின்றார்கள். அந்த நினைப்பு நமது நபிகளாருக்கு உணர்த்தப்படுகின்றது.

ஆகவே, ஜிப்ரயீல் (அலை) அவர்களின் ஆவலைப் பூர்த்தி செய்திடும் முகமாக, அப்படியே எழுந்து மூன்றாவது ரகாஅத் தொழுகின்றார்கள். மூன்றாவது ரகாஅத்தில் ருகூஃவிற்குப் போக இருக்கும் சமயத்தில் வல்ல அல்லாஹ் 'இந்தத் தொழுகைகள் அனைத்தும் நமக்காகத்தான். இருப்பினும் இந்த அருள்மயமான தொழுகையில் நமக்கென ஒரு சிறப்புத் தன்மை கிடைத்திடல் வேண்டுமே' என நினைக்கின்றான்.

அது நமது நபிகளாருக்கு உணர்த்தப் படுகின்றது. அப்போது;

'அல்லாஹ்வின் அவிழ்க்கையினை நிறைவேற்றிடல் வேண்டும். ஆனால் அஃது புது மாதிரியாக இருந்திட வேண்டும்.'

எனக் கருதிய நபிகளார் நின்ற நிலையிலேயே கைகளை கீழே தொங்கவிட்டு தக்பீர் சொல்லி - தக்பீர் தஹ்ரீமாவிற்கு கைகளை உயர்த்துவது போல உயர்த்தி-மீண்டும் கைகளைக் கட்டியபின் அந்த நிலையின் போது 'குனூத்' ஓதுகின்றார்கள்.

இந்தத் தொழுகையினையே இன்றைக்கு நாம் 'வித்ரு' என்ற பெயரில் தொழுதிட பணிக்கப் பட்டுள்ளோம்.

இப்படியாக அந்தத் தொழுகையினை நிறைவு செய்தபின் மலக்குகள் அனைவரும் நமது நபிகளாருக்கு அணிவகுப்பு மரியாதை செலுத்திச் சிறப்புப் பெறு கின்றனர்.

## ஹிஜாபுல் அக்பர்

அங்கே - சித்ரத்துல் முன்தஹாவில் இன்னமும் பல அற்புதங்களை - கண்கொள்ளாக் காட்சிகளை நமது நபி களார் கண்டுகளிக்கின்றார்கள்.

அதன்பின் இருவரும் ஆங்கிருந்து புறப்பட்டு சித்ரத் தின் கடைசி எல்லையான 'ஹிஜாபுல் அக்பர்' எனும் கதியை எய்துகின்றனர்.

## இதற்குமேல் நான் வந்தால்...

நமது நபிகளார் நவிலுகின்றார்கள் :

ஹிஜாபுல் அக்பரை அடைந்தபின் அது வரை வழி காட்டியாகவும் வழித்துணையாகவும் என்னுடன் வந்து கொண்டிருந்த ஹஜ்ரத் ஜிப்ரயீல் அவர்கள் அந்த இடத்தில் பின் வாங்கிக் கொண்டு என்னை மட்டிலும் தனியாக முன்னேறிப் போகும்படி சொன்னார்கள். அப்போது 'ஈதென்ன ஜிப்ரயீலே! நீவிர் என்னுடன் வராமல் பின் வாங்குகிறீர்.?, என்றேன் அதற்கு அவர்; 'அன்பரே' அல்லாஹ்வின் மீதாணை! நான் படைக்கப்பட்டதிலிருந்து இது நொடிவரை இந்த ஹிஜாபுல் அக்பரைக் கூட பார்த்ததகிடையாது. இன்று தங்களின் தகைமையால் இதனைப் பார்த்துப் பரவசமடைந்திடும் பாக்கியம் பெற்றேன் -

ஆனால் இதற்குமேல் நான் ஒரேயொரு எட்டு முன்னேறினாலும் நான் உடனே கரிந்து சாம்பலாகி விடுவேன். ஆதலால் தாங்கள் முன்னேறி செல்லுமின்! அஞ்சற்க! அல்லாஹ் உங்களுடன் இருக்கின்றான்.'

என ஜிப்ரயீல் சமாதானம் கூறினார்கள்.

## ஜிப்ரயீலின் ஆசையும் அண்ணலாரின் மெய்சிலிர்ப்பும்

நமது நபிகளார் நவிலுகின்றார்கள்.

அப்போது; உற்ற வழித்துணையே! உமக்கு அல்லாஹ்வின் சன்னிதானத்தில் சொந்த விண்ணப்பம் ஏதேனுமுண்டோ?'' என ஹஜ்ரத் ஜிப்ரயீலிடம் வின வினேன்.

இதற்கு அவர் 'ஆமாம் அன்பரே! அதாவது திடுக் கங்கள் நிறைந்த அந்தக் கியாமத்து நாளின்போது மயிரினும் நேரிய வாளினும் கூரிய அந்த ஸிராத்துல் முஸ்தகீம் பாலத்தினை கடந்து செல்லுவான் வேண்டி தங்களது உம்மத்துக்களனைவருக்காக எனது இறக்கை களை நான் விரிக்கவும், அந்த எனது இறக்கைகளின் மீது தங்களது கண்மணிகளால் உம்மத்தினர் மிதித்து நடந்து செல்லவுமான மகாபாக்கியம் எனக்குக் கிடைத் திட வேண்டுமென நான் நிதமும் ஏக்கமுற்றவனாக உள்ளேன். இந்த எனது வேணவாவினை நிறைவேற்றித் தந்தருளும்படி வல்லவனாம் அல்லாஹ்விடம் வரம் வாங்கித் தந்திட வேண்டும். இதுவே எனது ஜீவியத் தின் லட்சியம் என்றார்கள்.

எனது உம்மத்துக்கள் விசயத்தில் இந்த ஜிப்ரயீலுக்குத் தான் எத்துணை கரிசனம்? என நினைந்து நினைந்து நெஞ்சம் நெக்குருகி நின்றேன்.

''ஜிப்ரயீல்! உமக்கு வல்லவனின் இன்னருள் குன்றா மல் குறையாமல் உண்டாகட்டுமாக''

என எனது நாவுகள் என்னையுமறியாது துஆ செய்து.

## ஆசை வெல்லும்

நம் நபிகளார் இறைதரிசனத்தின் போது ஜிப்ரயீல் (அலை) அவர்களின் அந்த வேணவாவினை வல்லவனிடம் முறையிட்டு அதற்கான இசைவினையும் பெற்று விட்டார்கள்.

ஆகவே இன்ஷா அல்லாஹ் நமக்கெல்லாம் அத்தகு பெரும்பேறு நிச்சயமாக கிடைக்கிடப் போகின்றது.

யா அல்லாஹ்! எங்களை இம்மையின் பெரும்பேறாம் 'உம்மத்தே முஹம்மதிய்யா' என்ற சிறப்பிற்கு ஆளாக்கிய எம் பெருமை! உலகில் வாழும் காலமெல்லாம் எங்கள் அனைவரையுமே அந்த சிறப்பு முத்திரையுடனேயே வாழச் செய்து நாளை கியாமத்தின் போது - ஸிராத்துல் முஸ்தகிமில் கடந்து செல்ல வல்ல அந்த உச்சக்கட்ட சோதனையின் போது - ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்களின் இறக்கைகளில் அண்டிச் செல்ல வல்ல அந்த ஈடிணையற்ற பேற்றினை எங்கள் அனைவருக்கும் குறையாமல் ஈந்தருளக் கடவாய்!

ஆமீன்! ஆமீன்! யாரப்பல் ஆலமீன்!!

## பறக்கும் விரிப்பு

நமது நபிகளார் தொடர்ந்து நவிலுகின்றார்கள்.

ஹிஜாபுல் அக்பரின் அருகே தன்னந் தனியாக விடப் பட்டபோது பறக்கும் விரிப்பு எனக்கு வழங்கப்பட்டது.

அது பச்சைப்பட்டாலானது. சூரியனை மிகைக்கும் ஒளியையும், ஒலியை மிஞ்சும் வேகத்தையும் உடையது.

அதன் பெயர் 'ரஃப் ரஃப்' என்பதாகும்.

அதில் வாகனமேறிய நான் திசைகளைக் கடந்தேன்.

வழியில் ஹஜ்ரத் மீக்காயீல் ஹஜ்ரத் இஸ்ராஃபீல் ஹஜ்ரத் ரூஹ் [அலைஹிம்] ஆகிய வானவர்களைக் காணப் பெற்றேன்.

ஹஜ்ரத் இஜ்ராயீல் (அலை) அவர்களை நான்காம் வானத்தில் சந்தித்துவிட்டதாக வேறொரு ரிவாயத்தின்படி தெரிய வருகின்றது.

## அல்லாஹ்வின் அர்ஷு

இப்படியாக வல்லவனாம் அல்லாஹ்வின் அர்ஷை அடைகின்றேன்.

'அர்ஷு' என்பது அல்லாஹ் படைத்த படைப்புக்களில் மிகப்பெரிய கோளாகும். அதற்கு 380 கால்கள் இருக்கின்றன. ஒரு காலுக்கும் மறுகாலுக்குமிடையில் 500 ஆண்டுத் தொலைதூரமுண்டும்.

## நான்கு மலக்குகளின் பிரார்த்தனை

இத்தகு அர்ஷை நான்கே நான்கு வானவர்கள் சுமந்து கொண்டிருக்கின்றனர்.

ஒருவர் மனித உருவில் இருக்கின்றார் அவர் :

'இறைவா எம்பெருமா! ஆதமின் சந்ததிகள் பால் கிருபை செய்தருள். அவர்களை தண்டித்து விடாதே.

கோடைக்காலத்தின் வெம்மையினை விட்டும். மாரி காலத்தின் குளிரைவிட்டும் காப்புத் தந்தருள் உனதடிமை யான என்னை ஹஜ்ரத் முஹம்மது நபி [ஸல்-அம்] அவர்களின் ஷஃபாஅத்திற்கு அருகனாக்கிடு.''

எனது ஆச் செய்த வண்ணமாக உள்ளார்.

இரண்டாமவர் பறவை உருவில் காணப்பட்டார். அவர் -

''இறைவா, எம்பெரும! பறவை இனத்தின் பால் கிருபைசெய்தருள் அவைகளைத் தண்டித்து விடாதே - கோடை காலத்தின் வெம்மை, மாரி காலத்தின் குளிர் ஆகிய வெட்ப தட்பங்களுக்கு அவைகளின் காப்பு நீயே. உனது கொத்தடிமையான என்னை ஹஜ்ரத் முஹம்மது [ஸல்-அம்] அவர்களின் ஷஃபாஅத்திற்கு அருகனாக ஆக்கிடு.''

எனது ஆச் செய்த வண்ணமாக உள்ளார்.

மூன்றாமவர் சிங்கத்தின் உருவில் காணப்பட்டார் அவர்;

''இறைவா எம்பெரும! வன விலங்கினங்களின்பால் கிருபை கூர்ந்தருள். அவைகளை தண்டித்து விடாதே ... கோடை காலத்தின் வெம்மையிலிருந்து மாரிகாலத்தின் மாற்றங்களிலிருந்தும் அவைகளுக்குக் காப்புச் செய்தருள்

என்னை ஹஜ்ரத் முஹம்மது [ஸல்-அம்] அவர்களின் ஷஃபாஅத்திற்கு அருகனாக ஆக்கிடு''.

என துஆச் செய்த வண்ணமாக உள்ளார்.

நான்காமவர் காளை உருவில் காணப்படுகின்றார். அவர்;

''இறைவ, எம்பெரும! நாற்கால் மிருகங்களின்பால் கிருபை கூர்ந்தருள். அவைகளைப் பிடித்து விடாதே. கோடைகாலத்தின் வெப்பம், மாரி காலத்தின் மழை குளிருக்கு அவைகளின் காப்பு நீயே. உனது கொத்தடிமையாகிய என்னை ஹஜ்ரத் முஹம்மது நபி [ஸல்-அம்] அவர்களின் ஷஃபாஅத்திற்கு அருகனாக ஆக்கிடக் கடவாய்''

என துஆச் செய்த வண்ணமாக உள்ளனர்.

## காப கௌஸைன்

அர்ஷைக் கடந்து 'காபகௌஸைனை' அடைகின்றேன்.

ஆங்கே நான் குர்ஷின்மீது அமரவைக்கப்படுகின்றேன். அது என்னைச் சுமந்து இல்லிய்யீனை அடைகின்றது.

அப்போது இனம் தெரியாத அச்சம் என்னை ஆட்கொள்கின்றது. நாவு வரளுகின்றது. எங்கிருந்தோ மூன்று நீர்த்துளிகள் தெரித்து வந்து ஒரு துளி எனது திண்

தோள்களில் விழுந்தது உடன் என்னைப்பற்றிய அச்சம் நீங்கி சமாதானம் உண்டாகியது. மற்றொரு துளி எனது நாவின் மீது விழுந்தது. உடன் கட்டுக் கடங்காத வறட்சி மாறி ஈரம் சுரக்கின்றது மற்றொரு துளி எனது இதயத் தின் மீது விழுந்தது. உடன் வர்ணிக்க முடியாத புளா காங்கிதம் பொங்கத் தொடங்கியது

அஃதன்றி ஏழு பூமிகளின் திரைகள் அகன்று அதில் ஆச்சரியம் பல காணுகின்றேன்.

## இப்லீஸ் லஃனியின் இருப்பிடம்

இரண்டாம் பூமி காற்று மண்டலமாகக் காணப் பட்டது.

மூன்றாவது பூமியில் ஒருவகைப் படைப்புக்களைக் கண்ணுறுகின்றேன் அவர்களின் முகம் மனித முகங்களை யொத்தும் ஆனால் வாய் மட்டும் நாயின் வாயை ஒத் தும் கால்கள் பசுவின் கால்களையொத்தும் காணப் பட்டன. அவர்களது உடல் முழுவதிலும் குறும்பை ஆடுகளைப்போல ரோமம் அடர்த்தியாக இருந்தன. ‘இவர்கள் நொடிப் பொழுது கூட அல்லாஹ்விற்கு மாறு செய்திடவே மாட்டார்கள்’ என அறிவிக்கப்பட்டது.

நான்காவது பூமியில் நரகக் கங்குகளாக தகிக்க உள்ள ‘இப்ரீத்’ எனும் கற்களைக் கண்டேன்.

ஐந்தாவது பூமிக்குள் நரகில் பாவிகளைக் கொட்டி கொட்டி கோரம் செய்திட வல்ல படுபயங்கரமான தேள் களைக் கண்டேன்.

ஆறாவது பூமிக்குள் மரணித்துவிட்ட காஃபிர்களின் உயிர்கள் சேமித்து வைக்கப்பட்டிருக்கக் கண்டேன்.

ஏழாவது பூமிக்குள் இப்லீஸ்லஈனும் அவனது படை பட்டாளங்களும் குழுமியிருக்கக் கண்டேன்.

## உச்சகட்டம் நிசப்தம்

நமது நபிகளார் தொடர்ந்து நவிலுகின்றார்கள்:

பூமிகளின் அதியற்புதங்களைக் கண்டு அல்லாஹ் வின் வல்லபங்களை உய்த்துணர்ந்த பின் காபகௌசை னைக் கடந்து முன்னேறுகின்றேன்.

அங்கே இனம் தெரியாத பேரதிர்ச்சி என்னைப் பிடித்து உலுக்குகின்றது. காரணம் உச்சகட்டமான நிசப்தம் நிலவியதுதான். எந்த அளவிற்கெனில் வானம் பூமி அனைத்தின் இயக்கங்களும் நின்று விட்டதோ என்று கூட எனக்குத் தோன்றியது.

## முத்தே !! முஹம்மதே !
## முழு மாமணியே !!!

இத்தகு உச்சகட்ட நிசப்தத்தினால் எனது உணர்வு கள் செயலற்றுக் காணப்பட்டது.

அதுபோது;

'முஹம்மதே! முத்தே!! முழு மாமணியே!! இதோ வல்ல அல்லாஹ் நுங்களை வாழ்த்தி வரவேற்கின்றான் உற்றுக்கேளுமின். அந்த வல்லவனிடம் நீவிர் நும்மை முழுமையாக சரணாகதியடையச் செய்து பரம கதியைக் தக்க வைத்துக் கொள்ளுமின் கிடைப்பதற்கரிய சந்தர்ப் பம், அதனை முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளுமின்.

என ஒரு குரல் என்னை உணர்வடையச் செய்தது

அஃது ஜிப்ரயீலின் குரலாகும்.

## காணிக்கைப் பரிமாற்றம்

உணர்வு வரப் பெற்ற யான் உடன் சுதாரித்துக் கொண்டு -

அத்தஹிய்யாத்து லில்லாஹி

'காணிக்கைகளான காணிக்கைகள் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே சொந்தம் -

வஸ்ஸலவாத்து வத் தொய்யிபாத்து

உடலால் உண்டாகும் வணக்கங்ளனைத்தும் பொரு ளால் உண்டாகும் வணக்கங்களனைத்தும்......'

என வல்லவனுக்கு காணிக்கைமாலை சாத்றினேன்.

அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹந்நபிய்யு வரஹ்மதுல் லாஹி வ பரகாத்துஹூ"

'(முஹம்மதே! முத்துமாமாமணியே! சித்துகளனைத் திற்கும் சொந்தம் பெற்ற எனதரும் சொத்தே!) நும்மீது சாந்தி [பொழியட்டும் (எழில்) நபியே! (என் இனிய நபியே!). அல்லாஹ்வாகிய என்னின்) அருளும் அபிவிருத் தியும்......

என வல்லவன் வாழ்த்தி வரவேற்றான்.

இஃது எவருக்குமே கிடைத்திடாத அரும் பெரும் பேறுதான். ஆனால் எனக்கு மட்டும் அந்த ஒப்புவமை யில்லா வாழ்த்து கிடைத்து என்ன பயன்? ஆகவே -

<u>அஸ்ஸாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன்</u>

'(இறைவா எம்பெருமா! நின் சாந்தி எனக்கு மட்டு மெனில் அது எனக்கு ஏற்புடையதன்று. ஆதலால்] சாந்தி, என்பாலும் (எனது உம்மத்துக்களில் உள்ள] நல்லடியார் அனைவர்பாலும் உண்டாகக்கடவது.'

என விண்ணப்பித்து நின்றேன்.

எனது இந்த விண்ணப்பத்தின் நுட்பத்தைச் சுவைத் துச் சுகித்த ]ஜிப்ரயீல் சித்ரத்துல் முன்தஹாவில் இருந்த படி -

<u>அஷ்ஹது அன்லாயிலாஹ</u>

<u>இல்லல்லாஹு வ அஷ்ஹது</u>

<u>அன்ன முஹம்மதன்</u>

<u>அப்துஹு வரசூலுஹு</u>

'அல்லாஹ்வைத் தவிர்த்து வேறு கடவுளர் எவருமே இல்லை - எனவும்; நிச்சயமாக முஹம்மது அவனது அடிமையாகவும் திருத்தூதராகவும் இருக்கின்றார் எனவும் நான் மன மொழி மெய்யன்போடு விண்ணப்பிக்கின்றேன்' என குரல் கொடுத்தார்.

## அத்தஹிய்யாத்தின் தத்துவம்

அண்ணலெம் பெருமான் முஹம்மது (ஸல் - அம்) அவர்களை வல்லவன் வாழ்த்தி வரவேற்ற இந்த வாழ்த்தும்;

அண்ணலெம் பெருமான் தங்களது உம்மத்தினருக்கும் அந்த வாழ்த்தில் பாத்தியதை வேண்டிய இந்த விண்ணப்பமும்

ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ஏகத்துவத்தையும் தூதுவத்தையு மன மொழி மெய்யன்போடு விண்ணப்பித்த இந்த விண்ணப்பமும் என்னவென்று தெரிகின்றதா?

தொழுகையின் இருப்பில் நாமெல்லாம் ஓதிவருகின்றோமே அந்த அத்தஹிய்யாத்து தான்.

அதனை தொழுகையின் இருப்பில் ஓதப்படுவதை நமக்கு வாஜிபாக ஆக்கப்பட்டுள்ளதென்றால் 'தொழுகை மூமினீன்களின் மிஃராஜ் என்பதில் ஐயமேது -?

அல்ஹம்து லில்லாஹ்...

ஒரு அடியான் தொழுகையின் இருப்பின் போது 'அத்தஹிய்யாத்து லில்லாஹி' என ஓதினால் அவனை அல்லாஹ்வும் அண்டகோளங்களனைத்தும் வாழ்த்துகின்றார்கள்.

'வஸ் ஸலாத்து' என்பதை ஓதினால் அவனது தொழுகைக்கு வல்ல அல்லாஹ் அங்கீகார முத்திரை வழங்குகின்றான்.

'வத் தொய்யிபாத்து' என்பதனை ஓதிடும் போது அவனில் சம்பவிக்கும் ஷிர்க்கும் (இணைவைக்குதல்) பித்அத்து போன்ற அனைத்து பெரும்பாவங்களையும் மன்னிக்கப்படுகின்றது.

அஸ்ஸலாமு அலைக்க அய்யுஹன் நபிய்யு வ ரஹ்மத்துல்லாஹி வ பரகாத்துஹு என்பதனை ஓதிடுப் போது அவனுக்கு பத்து வகை நன்மைகள் வழங்கப் படுகின்றது. அவை அவனில் சம்பவிக்கும் பத்துவகை தீய குணங்களை விட்டும் அவனை ஈடேற்றும் சக்தி படைத்த தாம்.

அஸ்ஸலாமு அலைனா வ அலா இபாதில்லாஹிஸ் ஸாலிஹீன் என்பதனை ஓதிடும்போது அதனை அகிலத்தில் எத்தனை கோடி முஃமின்கள் (விசுவாசிகள்) ஓதுகின்றார்களோ அந்த எண்ணிக்கையளவு வெகுமதிகள் அதை ஓதுபவனுக்கு வழங்கப்படுகின்றது.

அஷ்ஹது அன்(ல்) லாயிலாஹ இல்லல்லாஹு வ அன்ன முஹம்மதன் அப்துஹு வ ரசூலுஹு என்பதனை

ஓதிடும்போது நரகவிடுதலைச் சீட்டு அவனுக்கு வழங்கப்படுகின்றது.

ஆதாரம் : உஸூனுல் மஜாலிஸ்

## அபூபக்கர் (ரலி) இங்கே எப்படி வந்தார்...?

நமது நபிகளார் தொடர்ந்து நவிலுகின்றார்கள் :

இப்படி காணிக்கை முகமன்களெல்லாம் முடிந்த பின் நான் ஒளி வெள்ளத்தில் மூழ்கினேன்.

எனக்கும் வல்லவனுக்கும் இடையில் இருந்த அனைத்துத் திரைகளும் முற்றாக நீங்கி விட்டன.

அப்போது இதயம் படபடத்தது. நடுநடுங்கியவாறு முன்னேறினேன் 'முஹம்மதே... கொஞ்சம் நில்லுங்கள். நுங்களின் இரட்சகன் தொழுது கொண்டிருக்கின்றான்' என ஒரு குரல் கேட்டு திடுக்குற்றேன்.

காரணம் அக்குரல் எனது அன்பர் அபூபக்கர் சித்தீக் அவர்களின் குரலாக எனக்குப் பட்டது.

அஃதன்றி ;

அல்லாஹ் தொழுகின்றான் என்றால், யாரைத் தொழுகின்றான்? அவனை அண்டங்களனைத்தும் தொழுது வணங்கிட கடமைப் பட்டிருக்கும் போது அவன் தொழுதிட வேண்டிய அவசியம் என்ன வந்தது?

என்ற புதிர் என்னைக் குழப்பியது.

குழப்பம் மிகுந்ததால் நடுக்கம் நின்று விட்டது.

கொஞ்ச நேரத்தில் -

படைப்பில் சிறந்தோய் ! நெருங்குமின்

புகழேந்தியே ! நெருங்குமின்

புகழின் புகழே ! நெருங்குமின்

என அழைப்பொலி கேட்டு புதுமை அனுபவித்த நான் அடிமேல் அடி வைத்து முன்னேறினேன்.

## வார்த்தைக் கெட்டாத நெருக்கம்

நபிகளார் தொடர்ந்து நவிலுகின்றார்கள் :

அல்லாஹ்விற்கும் எனக்குமிடையே ஏற்பட்ட அந்த நெருக்கம் எப்படிப்பட்டது என்பதனைச் சொல்ல வார்த்தைகளே இல்லை.

அந்த அளவு நெருங்கினோம்

அதுபோது,

வல்லமை பொருந்திய அல்லாஹ் எனது வலப்புறமும் இருக்கக் கண்டேன்-இடப்புறமும் இருக்கக் கண்டேன்-முன்புறமும் இருக்கக் கண்டேன் - பின்புறமும் இருக்கக் கண்டேன்-மேலேயும் கண்டேன்-கீழேயும் கண்டேன்.

[அஃதாவது முட்டைக்குள் மஞ்சள் கருவை வெள்ளைக்கரு சூழ்ந்திருப்பதைப் போன்று நமது நபிகளாரை வல்லவன் சூழ்ந்திருந்தானாம். அதன் பின் அவர் நெருங்கினார்-சூழ்கினார் அந்த நெருக்கம் - விரைந்தோடும் புள்ளிமானை வேகமாக எய்திடுவான் வேண்டி வளைக்கப் படும் வில்லின் இரு முனைகளும் சந்திக்குமளவு நெருங்கினார். அல்ல; அதனைவிட இன்னம் அதிகமாக நெருங்கினார்,' என திருமறை வர்ணித்துக் காட்டுவதைப்போல அந்த நெருக்கம் இருந்தது]

சுப்ஹானல்லாஹ்... சுப்ஹானல்லாஹ்... சுப்ஹானல்லாஹ்! ஜல்ல ஜலாலாஹ்! அம்ம நவாலாஹ்!

## வல்லவனும் வள்ளலும் உரையாடும் காட்சி

திசையே இல்லாத இடமேயில்லாத நிலையில் வல்ல அல்லாஹ்வை நேருக்கு நேராக தரிசித்து மகிழ்ந்து — மயங்கி நின்ற என்னிடம் -

'முஹம்மதே! நீ என் திருத்தூதர்'; என்றான் வல்லவன். உடனே நான்;

'இறைவா எம்பெருமா! நீ எனது எஜமானன்' என்றேன்.

'உன்னை வெளிப்படுத்துவதற்காகவே அண்டங்களனைத்தையும் படைத்தேன்' - அல்லாஹ்.

'என்னை முழுமையாக உன்னிடம் சரணாகதியடையச்செய்துள்ளேன்,' முஹம்மது (ஸல் - அம்) அவர்கள்.

'உனக்கு ஷஃபாஅத் உரிமை வழங்கி விட்டேன்' - அல்லாஹ்.

'அந்த உரிமம் கிடைக்கப் பெறாதவரை உன் பாதாரவிந்தங்களை விடவும் மாட்டேன்' - முஹம்மது (ஸல் - அம்) அவர்கள்

'இறைவா எம்பெருமா! உன்னில் மூழ்குவதற்குச் சற்றுமுன் எனது ஆருயிர் நண்பர் அபூபக்கரின் குரலோசையினைச் செவியுற்றேன். அந்தக்குரல் அல்லாஹ்வாகிய நீ தொழுது கொண்டிருப்பதாகச் சொல்லிடக் கேட்டேனே;, ஈதென்ன புதுமை?'

'என் இலட்சியமே, ஹபீபே! நான் யாரைத் தொழப் போகின்றேன்...? எனினும் என்னை நெருங்கிய உன்பால் நான் ஸலவாத்துச் சொன்னேன். அதுவே தொழுகை எனச் சித்தரித்துக் கூறப்பட்டது. நீ செவியுற்ற அந்தக் குரல் - அபூபக்கரின் குரல் - உண்மையில் அபூபக்கரின் குரலன்று. ஆனால் என்னை நீ அண்மிக்கும் போது உனக்கு திடுக்கமும் நடுக்கடும் ஏற்படாதிருக்கும் பொருட்டு அபூபக்கரின் குரலை நிகர்த்த குரலுடைய ஒரு மலக்கை படைத்து வைத்திருந்தேன். நீ ஆறுதல் அடைந்திட வேண்டுமென்பதே அதன் நோக்கம். அந்த மலக்கு தான் அங்கனம் குரல் கொடுத்தார்.

உலகத்தில் வாழ்வாங்கையும் மறுமையின் முழுப் பேற்றினையும் உமக்கீந்தேன். —

முஹம்மதே, அஹ்மதே! என் வல்லமையினைப் பார்த்ீரா —?

உன்னை உவ்வளவு பெரிய ஸ்தானத்திற்கு உயர்த்தியுள்ளேன் கண்டீரா? —

எத்தகு அந்தஸ்த்தோடு உன்னிடம் உரையாடு கின்றேன் உணர்ந்தீரா?

நான் நாடினால் உன்னின் இருப்பிடத்தில் வைத்தே உன்னிடம் உரையாடியிருக்க முடியும். இருப்பினும் இட மேயில்லாத திசையேது மில்லாத இந்த அந்தஸ்த்திற்கு உன்னை ஏன் உயர்த்தினேன் தெரியுமா?

எனது வல்லபங்களை, விண்மண் அனைத்திலு முள்ள ரகசியங்களை உமக்கு நேருக்கு நேர் காட்டிட வேணடும் என்பதற்காகவே அங்ஙனம் உயர்த்தினேன்.

'ஐயனே! மெய்யனே! அனைத்தையும் அடியார் களுக்கு எடுத்துரைப்பேன் நான்'.

நபிகளார் நவிலுகின்றார்கள்;

இப்படியாக வல்லவனிடம் வெளிப்படையான 12000 பேச்சுக்களையும் ரகசியமான 12000 பேச்சுக்களையும் பேசினேன். அனைத்தும் எனது உம்மத்துக்களின் முன் னேற்றம் ஈடேற்றம் சம்பந்தமான பேச்சுக்கள் தாம்.



# மிஃராஜ் அன்பளிப்பு

வல்லவனுக்கும் எனக்குமிடையேயான அந்த அருள் மிகு உரையாடல்கள் நிறைவு பெற்றபின் எனக்கும் எனது சமுதாயத்திற்கும் அன்பளிப்பாக ஐம்பது நேரத் தொழுகையினை ஈந்தான். அதனை எனக்குக் கிடைத்த பெரும் பாக்கியமாகக் கருதி ஏற்றுக் கொண்டு மீண்டேன். ஆனால் :

இடையில் என்னை வழிமறித்த சகோதரர் மூஸா (அலை) அவர்கள் எனது உம்மத்தினரின் இயலாமையை யும் மிகக் குறைந்த வயது கொடுக்கப்பட்டுள்ளதையும் சுட்டிக்காட்டி ஆகவே இந்த ஐம்பது நேரத் தொழுகை யினை குறைத்துக் கொண்டு வரும்படி ஆலோசனை கூறினார்.

ஆகவே மறையவனிடம் மீண்ட நான் ஐம்பதை நாற்பதாகக் குறைத்துத் திரும்பினேன்.

இப்படியாக குறைத்துக் குறைத்து ஐம்பது ஐந்தா கியது. ஆனாலும் எண்ணிக்கைதான் குறைக்கப்பட்ட தேயல்லாமல் பலாபலன் இம்மியும் குறைக்கப்படவில்லை. ஐந்து நேரத் தொழுகைக்கு ஐம்பது நேரத் தொழுகை யின் பலனை கொடுப்பதாக வல்லவனே என்னிடம் வாக்குக் கொடுத்துள்ளான்.



## சொர்க்க நகரச் சுற்றுலா

நபிகளார் தொடர்ந்து நவிலுகின்றார்கள்;

அதன் பின்னர் வல்லவனின் இசைவோடு ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் -

கற்பனைக்கும் எட்டாதசொர்க்கத்துச் சோலைகளைச் சுற்றிக் காண்பித்தார்கள் ஆங்கே எந்தக் கண்களாலும் காணமுடியாத கண்காட்சிகளைக் கண்டு களித்தேன். கற்பனைக்கெட்டாத நரகத்தினையும் சுற்றிக் காண்பிக்கப்பட்டது. ஆங்கே; நினைக்கவே கூசும் நடுக்கங்களையும் திடுக்கங்களையும் கண்டு சொல்லொண்ணாச் சோர்வுக்குள்ளானேன்.

அதன்பின் உயர்ந்ததுபோலவே படிப்படியாக இறங்கி பைத்துல் முகத்தஸ் அடைந்து ஆங்கிருந்து புறாக் வாகனத்தில் புனித மக்கமா நகரை ஏகினேன்.

## உடலின் வெப்பம்கூட ஆறவில்லை

நபிகளார் நவிலுகின்றார்கள் :

அங்கனம் மக்கமா நகரையடைந்த நான் உம்முஹானி அவர்களின் இல்லமேகி எனது படுக்கையினை அடைந்தேன். அப்போது நான் மிஃராஜ் பயணம் மேற்கொள்வதற்கு முன் படுத்திருந்ததால் அப்படுக்கையில் பதிந்திருந்த எனது உடல் வெப்பம் இன்னமும் கொஞ்சம் கூட தணியாதிருந்தது.

இன்னொரு ரிவாயத்தின்படி.

கதவின் நாதாங்கியின் ஆட்டம் ஓயுமுன்பே மிஃராஜ் பயணத்தை முடித்துக் கொண்டு திரும்பி விட்டேன்.

இப்படி,

நொடிப்பொழுதில் வானங்களைக் கடந்து அர்ஷு, குர்ஸு முதலான மனிதக் கற்பனையால் யூகித்துணர முடியாத பாகங்களையெல்லாம் கடந்து சென்று இடங்களே இல்லாத - திசைகளேயில்லாத 'லா மகானை' அடைந்து ஆங்கே உருவோ மருவோ யாதுமற்ற ஒப்புவமையே இல்லாத பரம்பொருளாம் அல்லாஹ்வை புறக் கண்களால் தரிசித்து அவனிடம உரையாடி கட்டளைக் கடமையாம் ஐங்காலத் தொழுகைகளைப் பரிசாகப் பெற்றும்; விண் மண் ரகசியங்களைகளையெல்லாம் உயர்த்துணர்ந்தும் மீண்ட மனிதப் புனிதரின் பெருமைகளை மகிமைகளை தகைமைகளை எவரால் தான் நாடிட, நண்ணிட இயலும்.

ஆகவே இந்த நாட, நண்ண முடியா மகிமைகளைத் தான் கவிக்குரிசில் பூசிரி அவர்கள் இந்த 110 - ம் கண்ணியில் சுட்டுகின்றார்.

சுப்ஹானல்லாஹ்.

வேறு எவரால் இத்தகு மகாத்மியங்களை இவ்வளவு சுருக்கத்தில் சுவையோடு சொல்லிக் காட்ட இயலும். புலவர் பூசிரியின் மகிமையே மகிமைதான். அல்ஹம்துலில்லாஹ்.

حَتّٰى اِذَا لَمْ تَدَعْ شَأْوًا لِّمُسْتَبِقٍ
مِنَ الدُّنُوِّ وَلَا مَرْقٰى لِمُسْتَنِمِ ⑪⑪⑪

**ஹத்தா இதாலம் ததஃ -**
**ஷஃவன்(ல்)லி முஸ்தபிகின்**
**மினத்துனுவ்வி வலா மர்கா லி**
**- முஸ்தனிமி**

அல்லாஹ்வின் சமூகம் அணுகிட முற்படுபவர்களுக்கு ஒரேயொரு பதவியைக்கூட நீங்கள் வைக்கவில்லை. கீர்த்தியை விரும்புவர்களுக்கு மிச்சமும் வைக்கவில்லை. அந்த அளவு [உயர்வின் எல்லைக்கே] உயர்ந்து விட்டீர்கள்.

இதனை

சாமீபம் சார்வார்க்கும் தம்உயர்வு வேண்டுநர்க்கும்,
பூமீதுநீர்அடையாப் புத்தெல்லை
தானம்இல்லை

என மறைக்காயர் இனிக்க இனிக்கப் பாடுகின்றார்.

க - ரை : இம்மை, அம்மைப் பெருந்தலைவ! இறை சன்னிதானம் நெருங்கிட விழைபவருக்கும், தன் கீர்த்தியை உயர்த்திட விரும்பும் வேறு எவருக்கும் ஒரு பதவியைக் கூட நீங்கள் விட்டு வைக்கவே இல்லை. அத்தகு முடிவான எல்லையை எட்டும் வரை அல்லாஹ்வின் சன்னிதானம் நெருங்கினீர்கள். ஆமாம், அந்த அளவு நெருங்கினீர்கள்.

خَفَضْتَ كُلَّ مَقَامٍ بِالْإِضَافَةِ إِذْ
نُودِيتَ بِالرَّفْعِ مِثْلَ الْمُفْرَدِ الْعَلَمِ (١١٢)

க:பழ்த்த குல்லமகா மின்பில் -
- இழா:பதிஇத்
நூதீத்த பிர்ர:பிஇமித்
- லல்முஃப்ர தில்அலமி.

உயர்தானத்திற்கு அழைக்கப்பட்ட நீங்கள் (உங்களின்) உயர்வினைக்கு ஒப்ப - கீர்த்தி மிக்கத் தனித் தலைவர் போல - ஒவ்வொரு படித்தரங் களையும் தாழ்த்தி (உயரச்) சென்றீர்கள்.

இதனை -

மேல்அழைக்கப்பட்டுமி,நும் வியன்பதவிக்
கேற்பஎல்லாம்
பாவினையும்கீழ் விடுத்(து) ஓர்பதிபோல்
உயர்ந்துசென்றீர்!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : தலைமைக்கு இலக்கணமே! மிஃராஜ் பயணத்தின் போது நீங்கள், பெருமை மிகுதானங்கள் அனைத்தையும் - ஆங்கே வரவேற்பு மொழிகட்கும், வாழ்த்துரைகட்கும் இலக்காகி - படிப்படியாகக் கடந்து சென்ற காட்சி ஒப்புயர்வற்ற பெருந்தலைவர் பெறும் மாட்சியாக மிளிர்ந்ததன்றோ!

كَيْمَا تَفُوْزَ بِوَصْلِ أَيِّ مُسْتَتِرٍ
عَنِ الْعُيُوْنِ وَسِرٍّ أَيِّ مُكْتَتِمِ ﴿١١٣﴾

**கைமா தஃபூஜுபிவஸ்லின் அய்யி -**
**முஸ்ததிரின்**
**அனில் உயூனிவஸிர்ரின் அய்யி -**
**முக்ததமி**

காண்பதற்கரிய தலங்களையும், அறிவதற்கரிய ரகசியங்களையும் வெற்றிகொள்வதற்காகவே நீங்கள் (உயரச் சென்றீர்) அந்த ரகசியங்கள் மிகப்பெரிய மர்மமேயாகும்.

இதனை -

காணற்கரியதலம் கண்டறிவ தற்கரிய
மாணப்பெருமருமம் வான் அடைந்து
வெற்றிகொண்டீர் !

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : காரணத் திருத்தூதே! காண்பதற்கு அருமையான - ஆனால் காணக்கிடைக்காத - வானங்களைக் கடந்து சென்று மிகப் பெரிய ஞான இரகசியங்களை கண்டும் கேட்டும் மீள்வதற்காக நீங்கள் மிஃராஜிற்கு அழைக்கப்பட்டீர். அதில் நீங்கள் முழுவெற்றியும் பெற்றுக் கொண்டீர்.

فَخَرْتَ كُلَّ فَخَارٍ غَيْرَ مُشْتَرَكٍ
وَحُزْتَ كُلَّ مَقَامٍ غَيْرَ مُزْدَحَمٍ ﴿١١٤﴾

:பதுர்த்ததுல்ல :பகா ரின்னைஙர-
முஷ்தரகின்
வஜு ஜ்ததுல்லமகா மின்னைஙர
- முஜ்தஹமின்

ஆதலாலேயே ஈடிணையில்லா மாண்புகளைச் சேகரித்துக் கொண்டீர்கள். போட்டிகள் ஏதுமின்றி பதவிகள் அனைத்தையும் தனதாக்கிக் கொண்டீர்கள்.

இதனை -

கூட்டில்லாமாண்பெவையும் கொண்டொருங்கே
சேகரித்தீர் !
போட்டியொன்றும்இல்லாமல் புகும்தலம்எல்
லாம்கண்டீர் !!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : மாண்பின் அதிபதியே! நீங்கள் கூட்டுறவு ஏதும் இல்லாமல் மகத்துவங்களைச் சொந்தமாக்கிக் கொண்டீர்கள்! அதுமட்டுமா? பூமானே! நீங்கள் போட்டியிட நாதியின்றி அனைத்தையும் நீங்களே சொந்தமானதாக ஆக்கிக் கொண்டீர்.

وَجَلَّ مِقْدَارُ مَا أُوْلِيتَ مِنْ رُتَبٍ
وَعَزَّ إِدْرَاكُ مَا أُوْلِيتَ مِنْ نِعَمِ (١١٧)

வஜல்லமிக்தாருமா வலீத்த
- மின் ருத்பின்
வஅஜ்ஜஇத்ராகுமா வல்லீத்த
- மின் னஇமின்

தங்களுக்கு அணிவிக்கப்பட்ட புகழாரம் மகத்தானது. தங்களுக்கு அளிக்கப்பட்ட செல்வாக்குகளில் எதனையும் மற்ற எவரும் பெற்றிட இயலவே இயலாது.

இதனை -

நீர்அருளப்பெற்றபுகழ் நிலைமிகவும் பெரிதாம்;
ஆரும்அடைதற் கரிதாம் அருட்செல்வம்
நீர் அடைந்தீர்!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : வான்புகழ் வள்ளலே! உங்களுக்குக் கொடுக்கப் பெற்ற புகழ், முடிவான புகழ். நீங்கள் பெற்ற அருட்செல்வங்களை வேறு எவருமே பெற்றிட இயலாது.

بُشْرَى لَنَا مَعْشَرَ الْإِسْلَامِ إِنَّ لَنَا
مِنَ الْعِنَايَةِ رُكْنًا غَيْرَ مُنْهَدِمِ ﴿١١٦﴾

**புஷ்ரா லனா மஃஷரல் இஸ்லாமி**
**- இன்னலனா**
**மினல் இனாயதி ருக்னன் கைர**
**- முன்ஹதிமி**

இஸ்லாமியர் (உடன் பிறப்புக்) களே! நம்ம வர்க்கே மங்களம்! (ஏன் தெரியுமா?) முறியாத் தூணாகிய (இஸ்லாம் எனும்) தூண் நம்மதுவே!

இதனை -

இசுலாம்மகாஜனங்காள்! எம்மவர்க்கே மங்களமாம்!
ஒசியாமதத்தூணாம் உயர்செல்வம் எம்மதுவே!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : மிஃராஜ் நாயகரைப் பின்பற்றி யொழுகும் முஸ்லிம்களே! மங்களம் உங்களுக்கே சொந்தமாகி விட்டது. ஏனெனில் கொள்கைச் சிறப்பால், நடைமுறைக் கட்டளைகளால் - என்றுமே முறிந்து போகாத - உறுதி மிக்க மார்க்கத்தை நீங்கள் கொண்டுள்ளீர்கள்.

வி - ரை : இதுவரை நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் பேசிக்கொண்டிருந்த நபிதாசர் பூசி (ரஹ்)

அவர்கள் இப்போது, இதனைப் படிக்கும் நம்மவர்களை முன்னிலைப்படுத்தி மங்களச் செய்தி கூறிடுகின்றார்.

ஆமாம் எவருக்குமே கிடைக்காத - கிடைக்க முடியாத அல்லாஹ்வின் நேரடி தரிசனத்தை மிஃராஜ் மூலம் கிடைக்கப் பெற்ற முஹம்மதுநபி (ஸல் - அம்) அவர்களின் தானைத் தலைமையைப் பெற்றுள்ள இஸ்லாமிய சமுதாயம் அல்லாஹ்வின் அங்கிகார முத்திரையைப் பெற்றுள்ள மார்க்கமாகும். இஸ்லாமியத்தைச் சார்ந்துள்ள இஸ்லாமிய சமுதாயம் - மங்களத்திற்கும் வாழ்த்து மொழிக்கும் நூற்றுக்கு நூறு உரித்தான சமுதாயம்தான் என்பதில் ஐயமேது? ஆனால் அந்த உணர்ச்சி நம்மவர்களிடம் மங்கிக் காணப்படுவதை எப்படியோ கண்டு கொண்ட நபிதாசர் இங்கே உணர்ச்சி வெள்ளங்களை திறந்து விட்டு முறுக்கேற்றுகின்றார். இந்தப் புது வெள்ளத்தினாலாவது புதுவேகம் பெறுமா சமுதாயம்? இப்படியொரு சந்தேகம் அவருக்கே ஏற்பட்டுவிட்டது போலும். ஆகவே 'இஸ்லாமிய சமுதாயத்திற்கே மங்களம் சொந்தமானது' என்ற அவரின் தத்துவத்தை நிலைநாட்டுவான் வேண்டி அதற்குரிய காரண காரியத்தை அடுத்து எடுத்தோதுகின்றார். அவர்.



لَمَّا دَعَى اللّٰهُ دَاعِيْنَا لِطَاعَتِهِ
بِأَكْرَمِ الرُّسُلِ كُنَّا أَكْرَمَ الْأُمَمِ (114)

லம்மா தஅல்லாஹு தாஈனா லி
- தாஅதிஹீ
பிஅக்ரமிர் ருஸுலி குன்னா அக்ர
- மல் உமமி

வல்லவனாம் அல்லாஹ்வை வழிப்படுவான் வேண்டி நம்மை அழைத்த நபிகள் நாதரை 'திருத்தூதர்களில் சிறந்தவர்' என அந்த வல்லவன் விழித்தபடியால் (அவரின் சமூகத்தவரான) நாம் [மற்ற சமூகத்தவர்] அனைவரையும்விட தலை சிறந்த சமூகத்தவராக ஆகிவிட்டோம்.

இதனை...

நமை இறைவன் பால் அழைத்தோர்;
'நபிமார்க்கு நாதர்' என
விமலன் அழைத்ததனால் மேல்இனத்தார்
ஆயினமே

என மாமணி மறைக்காயர் பாடிக்காட்டுகின்றார்.

க - ரை : தீனுல் இஸ்லாத்தில் சேர்த்திடும்படி நம்மை அழைத்த நபிகள் நாயகம் முஹம்மது (ஸல் - அம்) அவர்களை ஏக இறைவனாம் அல்லாஹ் 'நபிமார்களின் நாயகரே!' என அழைத்திருப்பதால், அத்தச் சிறப்பைப்

பெற்ற நபிகளாரின் உம்மத்துக்களாகிய நாமும் உலகில் தோன்றிய அனைத்துச் சமுதாயங்களைப் பார்க்கிலும் சிறந்தவர்களாக ஆகிவிட்டோம்.

வி - ரை : மிஃராஜ் தரிசனத்தின் போது வல்ல அல்லாஹ் நமது நபிகளாரை அழைக்கும் போது 'சைபிதுல் அன்பியா' என்று - அதாவது உலகத்தில் அனுப்பப்பட்ட அனைத்து நபிமார்களின் தலைவரே! என்று - குறிப்பிட்ட மாட்சியை புலவர் பெருமான் இங்கே நினைவு கூறுகின்றார். ஆமாம் இந்த தனிப்பெரும் சிறப்பு உலகில் வேறு எவருக்குக் கிடைத்திட முடியும்...... ஆகவே இத்தகு தனிச்சிறப்புப் பெற்ற தலைமையாளரின் வழித் தோன்றலான முஸ்லிம்கள் தனித்தன்மை கொண்டவர்கள் என்பதில் சந்தேகம் ஏற்பட்டிட வழி வகையுண்டா. ஆனால் ஏதோ ஒரு கவர்ச்சியில் மாட்டிக்கொண்டு, தனக்குள்ள தரத்தை - தனித் தன்மையை - மறந்து விட்டு, அழிந்து போய்விடக் கூடிய - அந்தக் கவர்ச்சி தனக்குக் கிடைக்கவில்லையே' என ஏங்கி ஏங்கி துவண்டு போய் கிடக்கும் தனது தங்க நிகர் சமுதாயத்தை எப்படியெல்லாம் தட்டியெழுப்புகின்றார் பாருங்கள்.

சுப்ஹானல்லாஹ்... உணர்ச்சிகளை தட்டியெழுப்பிடும் அந்த உத்தமக் கவியரசுக்கே மங்களம்.



★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# புரவலர் போர்த்திய பொன்னாடை

## எட்டாம் இழை

### திட்டமிட்டு திணிக்கப்பட்ட யுத்தங்களால் பெற்ற வீரமுத்திரைகள்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# 8

- ஆதிக்கப் போர்,
- சாதிக்கப் போர்,
- சோதிக்கப் போர்,
- வாதிக்கப் போர்,

## ஆதிக்கப் போர்

இவைகளில், தியாகச் சோலையின் வாடா மலர் இப்ராஹீம் (அலை), அவர்களின் மீது 'நம்ரூது' என்ற நாத்திகப் பேரரசன் தொடுத்த போர்,

ஆதிக்கப் போர்!

கண்ணியவான் மூஸா (அலை) அவர்களின் மீதும், அவர்தம் கூட்டத்தார் மீதும் வம்பனுக்கு வம்பனான 'ஃபிர்அவ்னு' தொடுத்த போர் ஆதிக்கப்போர்.

யூத வகுப்பார் மீது பெலிஸ்த்தரின் பெருந் தலைவன் 'ஜாலூத்' தொடுத்த போர். ஆதிக்கப் போர்!

மனிதப் புனிதர் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் மீதும் அஹிம்சையின் சின்னங்களான அவர்தம் சஹாபாக்களின் மீதும் அரக்கன் அபூஜஹில் திணித்த போர், ஆதிக்கப் போர்!

இன்றைக்கு, வல்லரசுகளின் கைப்பாவைகளாகிவிட்ட சில கையாலாகாத நாடுகள் ஆங்காங்கே, அவ்வப்போது உலகின் அமைதிக்குச் சவாலாக - கிளப்பி விட்டுக் கொண்டிருக்கும் போர்களும் ஆதிக்கப்போர்தான்.

சுருங்கக் கூறின், மண்ணுக்காக பெண்ணுக்காக பொன்னுக்காக நடாத்தப்பட்ட, நடாத்தப்படுகின்ற போர்கள் அனைத்துமே ஆதிக்கப் போர்தான். ஆகவே உலகில் இதுவரை நடந்து முடிந்துள்ள போர்களில் 100-க்கு 75 போர்கள் இந்த ஆதிக்கப் போர் வகையினைச் சார்ந்ததுதான், எனத் துணிந்து கூறலாம்.

இப்படி, போர் வரலாற்றில் முக்கால் பகுதியை அடைந்து நிற்கும் இந்த ஆதிக்கப் போர் இதுவரை சுமாராக எத்தனை நடந்து முடிந்திருக்கும்? இந்தப் போர்களினால் மனித சமுதாயத்திற்கு லாபமா? நட்டமா? என நாம் சிந்திக்கப் புகும்போது அதிர்ச்சி தரும் பல உண்மைகள் நமக்குத் தெரிய வருகின்றன.

## மிஸ்டர் ஜே. ஜே. பேபலின் விமர்சனம்

'சுவிட்சர்லாந்து' நாட்டின் விஞ்ஞானியான ஜே. ஜே. பேபல் என்பார் இந்த ஆதிக்கப் போர் சம்பந்தமான சில புள்ளி விபரங்களை கீழ்வரும் முறையில் கூறிக் காட்டுகின்றார்;

'கடந்த 5500 ஆண்டுகளில், பெரியதும், சிறியதுமாக இவ்வுலகில் மொத்தம் 14, 500 போர்கள் நடை

பெற்றுள்ளன. அந்த யுத்தங்களால் 364 கோடிப் பேர் உயிரிழந்துள்ளனர்; அதாவது, இது ஏறக்குறைய இன்றைய உலகின் மக்கட் தொகைக்குச் சமம். இந்த யுத்தங்களால் ஏற்பட்ட பொருட் சேதமோ 500 டிரில்லியன் [1 டிரில்லியன் லட்சம் கோடி சுவிஸ் நாட்டு பிராங்குகளுக்குச் சமம்.]

இதில், முதலாவது உலக யுத்தத்தில் மடிந்த 1 கோடிப் பேர்களும், இரண்டாவது உலக யுத்தத்தில் உயிரிழந்த 5 கோடிப் பேர்களும் அடங்குவர்'

[தினமணி : 8-4-1976].

உயிர் சேதங்களையும், பொருட் சேதங்களையும் இப்படி கணக்கிலடங்காவண்ணம் ஏற்படுத்தியுள்ள இத்தகு கோரமான ஆதிக்கப் போரின் ஆதிக்கம் முடிவுக்கு வந்து விட்டதுவா? என்றால் அதுதான் இல்லை. இதுவரை நடந்து முடிந்துள்ள அனைத்து யுத்தங்களுமே ஆதிக்கப் போரின் முன்னுரை : இனி நடக்கப் போவது தான் அதன் விசயதானம்' என்று எண்ணிடுமளவிற்கு ஆதிக்கப் போரின் கொக்கரிப்பு கொடிகட்டிப் பறந்து கொண்டிருக்கின்றது. எப்படி? என்பீர். இதோ அதனை யும் அந்த ஜே. ஜே. பேபல் என்பவரே விளக்குகின்றார் பாருங்கள்.

" ... 5500 ஆண்டுகளில் நாம் இழந்த (உயிர்ச்சேதத் தின், பொருட்சேதத்தின்) அளவுக்கு இனி (அடுத்து நிகழ உள்ள) ஒரே யுத்தத்தில் இழக்க நேரலாம்.

இப்போதைய ஆயுதப் போட்டிகளால் ஏற்படும் விளைவுதான் என்ன?

1960-ஆம் ஆண்டுத் தொடக்க காலத்தில் ஆயுதப் போட்டிக்கு உடனடியாக முடிவு கட்டவில்லையெனில் அடுத்த 25-ஆண்டுகளில் 3,000 கோடி டாலர்களுக்கு குறையாமல் செலவிடப்படும் என்று கணக்கிடப்பட்டது இது உலகம் முழுவதிலும் இதுகாறும் மனித உழைப்பின் மூலம் தோற்றுவிக்கப்பட்டுள்ள செல்வவளத்திற்கு ஏறக் குறைய சமமான தொகையாகும்.

அதைவிட ஆயுதங்களுக்காகச் செலவிடப்படும் தொகை அதிகரித்துவரும் விதம் பயங்கரமாக உள்ளது. வட அட்லாண்டிக் ராணுவ ஒப்பந்த நாடுகளின் கூட்டணி மட்டுமே 1949-க்கும் 74-க்கும் இடைப்பட்ட 25-ஆண்டு களில் 18.200 கோடி டாலர்களைச் செலவழித்துள்ளது. சராசரியாக இது ஆண்டொன்றிற்கு 720 கோடி டாலர்களா கின்றது. 1974-இல் மட்டுமே 1,350 கோடியும் 1975-இல் 1,490 கோடியும் செலவிடப்பட்டுள்ளது'...

## ஹென்றி எல்.எக்கின்ஸின் விமர்சனம்

இந்த சந்தர்ப்பத்தில் அமெரிக்க வைஸ் அட்மிரல்களில் ஒருவரான 'ஹென்றி எல். எக்கின்ஸ்' என்பார் செய்துள்ள சுவையானதொரு கணக்கீட்டைக் கூறிக் காண்பிப்பது பொருத்தமானதாக இருக்கும்.

'2000-ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த ரோமபுரிச் சக்கரவர்த்தியான ஜூலியஸ் சீசர் சராசரியாக ஒரு

எதிரியைக் கொல்லுவதற்கு 75 சென்டுகள் செலவழித்தாராம். கி. பி. 1800-இல் நெப்போலியன் அதே காரியத்திற்காக ஏறக்குறைய 3,000 டாலர்கள் செலவழித்தாராம். முதலாவது உலக யுத்தத்தின் போது இறந்துப்பட்ட ஒவ்வொரு எதிரிக்கும் அமெரிக்க 21,000 டாலர்களைச் செலவழித்தது; இரண்டாவது உலக யுத்தத்தின்போது இந்தத் தொகை 2,00,000 டாலர்களாயிற்று. [அப்படி என்றால்] இனி ஏற்படக்கூடிய யுத்தத்தில் அது எவ்வளவாக இருக்கும் என்பதை நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள்.

இரண்டாவது உலக யுத்தத்தில் ஒரு அமெரிககப் போர் விமானத்தின் விலை 53,000 டாலர்களாக இருந்தது. இப்போது அதன் உற்பத்திச் செலவு 1 கோடியே 20 லட்சம் டாலர்கள் ஆகும். குண்டு வீசும் விமானம் ஒன்றின் விலை அன்று 2 லட்சத்து 10 ஆயிரம் டாலர்கள்; இன்று 3 கோடி டாலர்கள்; அணு ஆயுத சாதனங்களின் விலையோ மிக மிக அதிகம். உதாரணமாக ஒவ்வொரு அமெரிக்க அணுவிசை 'போலாரிஸ்' நீர் மூழ்கியின் உற்பத்திச் செலவு 24 கோடியே 40 லட்சம் டாலர்கள். ஒரே ஒரு 'டிரிண்ட்' வகை நீர்மூழ்கியின் விலை 150 கோடி டாலர்கள். இதிலிருந்து நமக்கு அவற்றின் விலை பற்றிய ஒரு கருத்து ஏற்படுகின்றது.''

அன்பரீர்! பார்த்தீரா பட்டியலை. அப்படியென்றால் இன்றைய ஆதிக்கப்போரின் குமுறலை 'விசயதானம்' என்று சொல்வது பொருத்தம் தானே?



## ஆதிக்கப்போரின் அடிச்சுவடுகள்

இன்றைக்கு வல்லரசுகள் நிலாவில் உலா வரக்கூடிய அளவிற்கு, செவ்வாயில் வென்றிட முடியுமா? என முயன்று பார்க்கும் அளவிற்கு விஞ்ஞானத்தில் முன்னேறி இருக்கின்றனவே அது என்ன தெரியுமா? அதுவும் ஒருவகை ஆதிக்கப் போர்தான்.

அது மட்டுமன்று; இன்று ஊருக்கு ஊர் சமூகத்திற்கு சமூகம், கோஷ்டிக்குக் கோஷ்டி, வீட்டுக்கு வீடு என்ற முறையில் ஆங்காங்கே ஒரு குட்டி ஆதிக்கப் போர் நடந்து வருவதை எவர்தான் மறுக்க முடியும்...'?

'மாமியார் உலக்கையால் அடித்துக் கொலை, மருமகள் கைது' என்றும், 'அண்ணன் கொலை! தம்பியை போலீஸ் தேடுகின்றது' என்றும், பள்ளிவாசல் முன் கோஷ்டிக் கலவரம் இருதரப்புத் தலைவர்களும் கைது' என்றும், அவ்வப்போது தினத்தாள்களில் செய்தி வருகின்றதே. அது எதைக் காட்டுகின்றது? கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். இவைகள் எல்லாம் ஆதிக்கப் போரின் அடிச்சுவடுகள். அல்லவா?

## இரத்தத்துடன் கலந்த வியாதி

இதுவரை விண்டு காண்பிக்கப்பட்ட விபரங்களின் மூலம் என்ன விளங்குகிறது?

'ஆதிக்கப் போர் உணர்வு' மனிதனுடைய இரத்தத்தோடு கலந்துவிட்ட ஒரு வியாதியாகும். இதனால் தான்

அன்று மலக்குகளிடம் வல்ல அல்லாஹ் மனிதர்களைக் குறித்து; '...நிச்சயமாக நான் பூமியில் ஒரு பிரதிநிதியை உண்டாக்கப் போகின்றேன்' என்ற போது, 'அந்நிலத்தில் விஷமம் செய்கிறவரையும் இரத்தங்களை ஒட்டுபவரையும் நீ உண்டாக்கப் போகிறாயா?...' (குர்ஆன் 1 - 31) என்று அம்மலக்குகள் வல்லவனாம் அல்லாஹ்விடம் வினவினர்.

ஆகவே ஆதிக்கப் போரென்பது மனித சமுதாயம் இருக்கும் வரை தொடரும் ஒரு நீண்ட தொடர் கதையாகும்.

## ஒரே மார்க்கம்

இந்த ஆதிக்கப் போரைத் தவிர்ப்பதற்கு வழியே இல்லையா? விலை மதிக்க முடியாத மனித உயிர்களும், அவனது வியர்வைகளால் உருவாக்கப்பட்ட பொருட்களும் இப்படி ஆதிக்கப்போர் அரக்கனின் கோரத் தாண்டவத்திற்குப் பலியாகிக் கொண்டுதான் இருக்க வேண்டுமா? என்றால், 'இஸ்லாம்' என்ற ஒன்று தான் அதற்குரிய மாற்று என்பேன் நான். ஏனெனில் மலக்குகளின் அந்த ஆட்சேபனைக்கு வல்ல அல்லாஹ் "நீங்கள் அறிந்து கொள்ளாதவற்றை நான் நிச்சயமாக அறிவேன்" என்று கூறி அவ்வானவர்களின் ஆட்சேபனையை மறுதளித்து விட்டு மனிதனை தனது பிரதிநிதியாக இவ்வுலகில் படைத்திருக்கின்றான், அல்லவா? அதன் பொருள் என்ன தெரியுமா? ஆதிக்க உணர்வு எனும்

விஷமம் மனிதனது இரத்தத்தோடு இரத்தமாகக் கலந்திருந்தாலும் அவர்களில் சிலர் 'இஸ்லாமியம்' எனும் கேடயத்தால் தன்னுள் கலந்து விட்ட அந்த விஷமத்தை வேர் பிடுங்காகப் பிடுங்கி எறிந்து விட்டு என்னுடைய (அல்லாஹ்வுடைய) உண்மையான பிரதிநிதிகளாக மிளிர்வார்கள் என்பதை வானவர்களே! நீங்கள் அறியமாட்டீர்கள், ஆனால் நிச்சயமாக நான் அறிவேன்' என்பது தான்

வல்ல அல்லாஹ் தன்னுடைய சுத்த சத்திய மார்க்கத்திற்கு 'சாந்தி - சமாதானம்' என்ற பொருளையுடைய 'இஸ்லாம்' என்ற பெயரை சூட்டியது இதற்காகத்தான் போலும்.

'ஆதிக்கப்பேரரை அடியோடு ஒழிப்பதற்குரிய மார்க்கம் 'இஸ்லாம்' ஒன்றுதான், என்பதை இன்னும் தெளிவாகப் புரிந்திட இஸ்லாத்தின் கடைசி நபியான முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் மணிமொழிகளை சற்று உன்னிப்பாகக் கவனியுங்கள். உள்ளங்கை நெல்லிக்கனி போல விசயம் தெளிவாகப் புரியும்.

## இருவருமே நரகவாதி

முதலாவது கலீபா அபூபக்கர் (ரலி - அன்ஹு) நபிகளார் நவின்றதாக அறிவிக்கின்றார்கள்;

'இரு முஸ்லிம்கள் ஆயுதங்களோடு மோதி ஒருவன் மற்றொருவனைக் கொலை செய்து விட்டால், கொலையுண்டவனும் கொலை செய்தவனின் உயிர்மேல் பேராசை

கொண்டிருந்தானே... அதற்காக' என்றார்கள். இந்த மணிமொழி புகாரி ஷரீப், முஸ்லிம் ஆகிய இருஹதீஸ் கிரந்தங்களிலும் காணப்படுகின்றது.

அன்பரீர்! மனிதர்களில் ஊன்றியுள்ள ஆதிக்க உணர்வை இஸ்லாம் எவ்வளவு வன்மையாக கண்டிக்கின்றது. என்பதைப் பார்த்தீரா!

## ஆதிக்க உணர்வின் ஜீவன்

நபிகளார் நவின்றதாக அபூஹுறைறா (ரலி) அறிவிக்கின்றார்கள்.

'பொறாமையை பற்றி உங்களை எச்சரிக்கின்றேன் ஏனெனில் பொறாமைக் குணம் விறகை நெருப்பு கரித்து விடுவதைப் போன்று நற்செய்கைகளைக் கரித்து விடுகின்றது.

நூல்: அபூதாவூது இப்னுமாஜா.

பொறாமைதானே ஆதிக்க உணர்வின் ஜீவன்' ஆகவே நபிகளார் அதனை இப்படி எச்சரித்துள்ளார்கள்.

## முஸ்லிம் என்பவர் யார்?

நபிகளார் (ஸல்) அவர்களிடம் 'முஸ்லிம் என்பவன் யார்? என வினவப்பட்ட போது 'ஜங்காலம் தொழுபவன். என்றோ 'நோன்பு நோற்பவன். என்றோ 'ஜகாத் கொடுப்பவன் என்றோ 'ஹஜ்ஜுச் செய்பவன்' என்றோ

பதில் கூறுவார்கள் என எதிர்ப்பார்க்கப்பட்டது. ஆனால் நபிகளார் (ஸல்) அவர்கள் 'எவரின் நாவினாலும் கரங்களாலும் மற்றவருக்கு சாந்தி ஏற்படுகின்றதோ அவரே, முஸ்லிம்' எனவும் 'தியாகி' என்பவன் யார்?' என வினவப்பட்ட போது ''அல்லாஹ் தடுத்தவைகளை எவர் மனவில் நிகழாவண்ணம் தடுத்துக் கொள்கின்றாரோ அவரே தியாகி' எனவும் பதில் சொன்னார்கள். இந்த மணிமொழியை 'அப்துல்லாஹிப்னுஉமர்' (ரலி - அன்ஹு) அறிவிப்பதாக 'புஹாரி ஷரீப்' என்ற முதன்மை வாய்ந்த கிரந்தத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

அன்பரீர்! சற்று உற்றுப் பாருங்கள்' சுப்ஹானல்லாஹ்! என்ன அற்புதமான மணிமொழிகள்? ஆதிக்கம் வெளிப்படும் தலைவாசல்களில் நாவும் கரமும் இரு முக்கிய வாசல்களாகுமன்றோ! ஆகவே அந்த இரண்டிலிருந்தும் சாந்தி - சமாதானம் வெளிப்பட்டால்தான் ஒருவன் முஸ்லிமாகத் திகழ முடியும், என இலக்கணம் கூறப்பட்டுள்ள தென்றால் ஆதிக்கத்தினை வெட்டி வீழ்த்தும் கோடாரி - எது?...... எது?...... தயவு செய்து சீர்தூக்கிப் பாருங்கள்.

## தியாகம் என்றால் என்ன

அன்றி தியாகத்திற்கு இலக்கணம் வாளெடுத்துப் போரிடுவதன்று! தோள்கொடுத்துக் காப்பதன்று! தொடைதட்டி நிற்பதன்று. ஆனால் அல்லாஹ்வால் தடுக்கப்பட்டுள்ளவற்றை; அதாவது, மற்றவரின் உரிமை

யில் தலையீடு செய்யாதே' என்பதை; மற்றவரின் உயிரை - உடமைகளைத் துச்சமாக மதியாதே' என்பதை; பெண்களின் கற்பைச் சூரையாடாதே' என்பதை; மனிதர்களிடையே பேதம் கற்பிக்காதே' என்பதை : 'திருடாதே' என்பதை; இன்னும் இது போன்ற 'மனிதாபிமானத்திற்கு ஊறு விளைவிக்கும் எதனையும் 'செய்யாதே' என்பவைகளை யெல்லாம் பேணி அவைகளை விட்டும் தவிழ்ந்து வாழ்வதுதான் தியாகம் என்றும் நபிகளார் தியாகத்திற்கு இலக்கணம் வகுத்துத் தந்துள்ளார்கள் என்றால் ஆதிக்க உணர்வைக் கெல்லி எரியும் சக்தி எது?...... எது?... எது?...... தயவு செய்து சீர்தூக்கிப் பாருங்கள்.

இது மட்டுமா ?

"மற்றவர்களின் மீது போரைத் திணிப்பவன் நம்மைச் சேர்ந்தவனல்லன்' [அறிவிப்பவர் இப்னு உமர். பதிவு; புகாரி ஷரீப், முஸ்லிம்] என நமது நபிகளார் (ஸல் எச்சரித்து உள்ளார்கள் என்றால் ஆதிக்கத்தைக் குழி தோண்டிப் புதைப்பது இஸ்லாம்தான் என்பதற்கு இதை விட வேறு என்ன சான்று வேண்டிக் கிடக்கின்றது

## மதிக்கப் பழக வேண்டும்

"ஒரு வீட்டான் தனது வீட்டில் உள்ளவர்களை மதித்து நடக்கட்டும். தனது அண்டை வீட்டானை மதித்து நடக்கட்டும். தனது அண்டைத் தெருவானை

மதித்து நடக்கட்டும் அண்டை வீட்டாரை மதித்து நடக்கட்டும். அண்டை நாட்டாரை மதித்து நடக்கட்டும்'' என நபிகளார் (ஸல்) அவர்கள் கட்டளை பிறப்பித்துள்ளார்கள் என்றால் இதற்கு மேல் வேறு என்ன தேவை?

செய்ய முடியாததைச் சொன்னதில்லை, சொன்னதைச் செய்யாமல் இருந்ததுமில்லை. என்பதற்கு நூற்றுக்கு நூறு உதாரண புருஷராகத் திகழ்ந்த நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் மீக்கூறப்படும் அம் மணிமொழிகளை கூறியதோடு இருந்து விட்டார்கள்-அதன்படி ஒழுகவில்லை என எவராலும் நிருபிக்கவாவது முடியுமா?

ஆகவேதான் அறுதியிட்டுக் கூறுகின்றேன். ஆதிக்கப் போர் குமுறலை விட்டும் பாதுகாக்கப்பட்டு அமைதி நிலவுவதற்கு ஓரேவழி 'இஸ்லாம் தான்' என்று, இப்போது புரிந்திருக்குமே?

## சாதிக்கப் போர்

தான் கொண்டுள்ள கொள்கையை - லட்சியத்தை - கருத்தை - பிறரிடம் திணிக்க முயல்வதற்கு 'சாதிக்கப் போர்' என்று பெயர். இதில் நியாயம் கூட இருக்கலாம். உதாரணமாக;

நம் நாட்டில் தெருவுக்கொரு கட்சி, வீட்டுக்கொரு கட்சி என கட்சிகள் மலிந்து கிடப்பது கண்கூடு. 'இந்த கட்சிகள் ஒவ்வொன்றும், தம்தன் கொள்கையை நாட்டு

மக்களிடம் எடுத்துக் கூறி தன்கட்சி கொண்டுள்ள கொள்கையே நியாயமானது என வாதிப்பதும் மாற்றுக் கட்சி கொள்கை தவறானது என விமர்சிப்பதும் தவறன்று ஆனால் மாற்றுக் கட்சித் தலைவர்களை விமர்சிப்பதும் தனது கட்சியை வளர்ப்பதற்காக கட்சி மாறல்களை, ஊக்குவிப்பதும், தான் செய்யாத சாதனைகளை அல்லது தன்னால் முடியாததை செய்ததாக அல்லது செய்யப் போவதாகச் சொல்லி ஜனங்களை ஏமாற்றி அவர்களின் ஏமாற்றத்தை தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்வதும், தேர்தல் காலங்களில் காட்ட வேண்டியதைக் காட்டிப் பெற வேண்டியதைப் பெற முயல்வதும், தனது கொள்கைகளைப் பிறரின் மீது திணிக்க முயல்வதும் போன்ற இந்த பித்தலாட்ட நடவடிக்கைகளுக்கே 'சாதிக்கப்போர்' என்று பெயர்.

## இஸ்லாத்தில் நிர்பந்தம் கூடாது

இஸ்லாத்தில் இதற்கு இடமே இல்லை என துணிந்து கூறுவேன். ஏனென்றால் 'மார்க்கத்தில் நிர்பந்தம் இல்லை'' என திருகுர்ஆன் ஷரீப் அறை கூவிக் கொண்டிருக்கின்றது. அன்றி;

''இஸ்லாமியத்தின் கொள்கையே நியாயமானது, மற்ற மதக் கொள்கைகளால் மனித சமுதாயத்திற்கு இம்மியும் நன்மை கிடையாது! என்பதை பகுத்தறிவிற்கு ஒப்பும் வழிவகைகளில்-இதமான, அன்பான, நாகரீகமான பேச்சுக்

களால் உலகில் பிரச்சாரம் செய்து மார்க்கத்தைப் பரப்பிட முயல்வதுதான் இஸ்லாமியத்தின் அணுகுமுறை, மூஸாநபி ஹாரூன் (அலைஹிமா) இருவரையும் ஃபிர் அவனிடம் சென்று இஸ்லாமியத்தை எடுத்துக் காட்டும்படி பணித்த இறைவன்; அவனிடம் இஸ்லாமியத்தை எடுத்துரைக்கும் போது-அந்த பேச்சு-எப்படி அமைந்திருக்க வேண்டு மென்பதை "கூலா லஹு கவ்லன் லய்யினன்"- அவனிடம் மிருதுவான நாகரீகமான-வார்த்தையால் உரையாடுங்கள்" எனப் பணித்திருப்பது இந்த அடிப்படையில்தான்.

## மாற்று மதத்தினரை அவமரியாதை செய்யக் கூடாது

'மாற்று மதத் தெய்வங்களை அவமரியாதையாக விமரிசிக்கக் கூடாது; அவர்களின் கொள்கைகளை கேவலமாக விமரிசிக்கவும் கூடாது; கோவில், சர்ச்சு போன்ற மாற்று மத வணக்கத்தலங்களை அவமதிக்கவும் கூடாது; மாற்று மதத்தில் உள்ளவர்களை விலை பேசவும் கூடாது. மார்க்கத்தில் இல்லாததை இருப்பதாகவோ. இருப்பதை இல்லையென்றோ கூறி மனிதர்களை ஏமாற்ற முயலவும் கூடாது!' என்பது இஸ்லாமியத்தின் கண்டிப்பான உத்திரவுகளாகும்.

இஸ்லாமியத்தைப் பரப்பிடும் முகமாக நபி (ஸல்) அவர்கள் அன்றைய அரசர்களுக்கெல்லாம் 'தபால் மூல அழைப்பை' விடுத்தார்கள். அந்த அழைப்பு மடல் களெல்லாம் மீக்கூறிக் காண்பிக்கப்பட்ட பிரச்சார உபாயங் களைத் தழுவியதாகவே இருந்தன.

அன்றி;

முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் வளர்ப்புத் தந்தையும், அன்னாருக்கு உயிருக்கு உயிரானவருமான 'அபூதாலிப்' என்பார் கடைசி வரையிலும் காபிராக-இஸ்லாத்தை தழுவாதவராகவே இருந்து மரணித்தார்; அவரை இஸ்லாத்தைத் தழுவ வைத்திட வேண்டுமென்பதற்காக நபிகளார் மிக முயற்சியும் செய்தார்கள். ஆனால் அன்னாரின் மீது இஸ்லாத்தைத் திணிக்க எவ்விதத்திலும் ஏற்பாடு செய்யவே இல்லை என்பது கண்கூடு. ஆனாலும் அந்த அபூதாலிப் இஸ்லாத்தை தழுவாமல் மரணித்தது குறித்து நபிகளார் மிக விசனம் கொண்டார்கள்; அப்போது "நபியே! நீ நினைத்த மக்களையெல்லாம் நேர்வழியில் சேர்த்திட உம்மால் முடியாது" என இறைவன் குர்ஆன் ஷரீப் மூலம் நபிகளாரை அறிவுறுத்தி விட்டான். இதை ஒரு எச்சரிக்கை என்று கூடச் சொல்லலாம் இதன் பொருள் என்ன தெரியுமா? நபியே! பிரச்சாரம் செய்வதுதான் உமது வேலையே தவிர அவர் வரவேண்டும். இவர் வர வேண்டும் என்பதற்காகத் தனி முயற்சி செய்து அதற்காக காலத்தையும் நேரத்தையும் வீணாக்குவது உமக்கு அழகன்று "என்பதுதான்.

அன்பரீர்! நபிகளாருக்கு ஏற்பட்ட அந்த எச்சரிக்கை அதன்பின் இஸ்லாமியத்தின் தத்துவமாகவே ஆக்கப்பட்டு விட்டது.

ஆகவே தான் சாதிக்கப் போர் முறைக்கு இஸ்லாமியத்தில் இடமே இல்லை, எனக் கூறினேன். அதனை

நீங்களும் சரி காண்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு நிரம்ப உண்டு.

## சோதிக்கப் போர்

இரண்டு மனிதர்களில் எவர் வல்லவர் என்பதைச் சோதிக்க நடக்கும் போராட்டத்திற்காகு ''சோதிக்கப் போர்'' எனப் பெயர்.

இன்றைக்கு உலகில் பிரபலம் அடைந்துள்ள குத்துச் சண்டை, மல்யுத்தம், காரத்தே ஹாக்கி, கால்பந்து, ஓட்டப்பந்தயம் ஆகிய வீர விளையாட்டுகள் இதில் அடங்கும்.

## முற்கால விளையாட்டுகள்

இந்தப் போரை இஸ்லாம் அனுமதிக்கின்றதா இல்லையா என்பதைப் புரிந்து கொள்ள இதை 'முற்கால முறை-தற்கால முறை' என இரண்டு வகையாகப் பிரித்துக் காண்பது அவசியமாகின்றது.

உடல் ஆரோக்கியத்தை வளர்த்தல், பயிற்சி செய்தல் போன்ற நன்னோக்குடன் அந்த விளையாட்டு முறை முற்காலங்களில் நடாத்தப்பட்டு வந்தன. ஆகவே சோதிக்கப் போரின் இந்த முற்கால முறையை இஸ்லா வரவேற்கின்றது. ஏனெனில்;

பெருமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் சிலம்பம், வாள்வீச்சு, வேல்வீச்சு, மல்யுத்தம் போன்ற விளை யாட்டுகளை அனுமதித்து வந்துள்ளார்கள்.

ஒரு முறை இளம் சஹாபாக்கள் அத்தகு வீர விளை யாட்டுக்கள் விளையாடியபோது பெருமான் அவர்கள் அதனை ரசித்துப் பார்த்ததோடு தனது அன்புத் துணைவி அன்னை ஆயிஷா சித்தீக்கா (ரலி-அன்ஹா) அவர்களை அழைத்து தனது வலக்கையின் இடைவெளிச்சந்தின் மூலம் அந்த விளையாட்டைப் பார்த்து ரசிக்கும்படி அம்மையா ரைப் பணித்தாக ஒரு செவிவழிச் செய்தியின் மூலம் நமக்கு தகவல் கிடைத்துள்ளது.

## தற்கால விளையாட்டுகள்

பந்தயத்தின் அடிப்படையிலும் ‘ஒருவரையொருவர் மிகைப் பதன் மூலம் தனது தற்புகழ்ச்சியை, தக்க வைத்துக் கொள்வதற்காகவும் தொழில் முறையிலும் இன்றைய உலகம் அந்த வீர விளையாட்டுக்களை நடாத்துவது கண்கூடு. சமீபத்தில் நடந்து முடிந்த ஒலிம்பிக் விளையாட்டுப் போட்டிக்காக பன்னூரு கோடி ரூபாய்கள் செலவழிக்கப் பட்டதும், அதில் ஒரு சில நாடுகளைக் கலந்து கொள்ளாமல் தடுக்க முனைந்ததால் பல வேண்டாத-விபரீத-கருத்துக் கள் உருவானதும் நாம் அனுபவத்தில் கண்ட உண்மை. இதனையே சோதிக்கப் போரின் தற்கால முறை எனக் குறிப்பிட்டேன்.

ஆகவே இந்த தற்கால சோதிக்கப் போரை இஸ்லாம் விரும்பவில்லை.

ஏனெனில், இந்த 'தற்கால முறை' ஆதிக்க உணர்வு களுக்கு தூபமிடுவதாக உள்ளது. இதனால்தான் உலக வீரர் ஜனாப் முஹம்மது அலி கிளே, குத்துச் சண்டை உலகி லிருந்து தன்னை விரைவாக விடுவித்துக் கொள்ள முயன்று வருகின்றார். ஆனால் அவரின் உணர்ச்சியைப் புரிந்து கொள்ள முடியாத இந்த உலகம் அவரின் விடுவித்துக் கொள்ளும் எண்ணத்திற்கு நோக்கம் கற்பிக்கத் தயாராக உள்ளது.

தீய உணர்வுகளுக்கு மதிப்பளித்து அந்த உணர் விலேயே மனிதனை நிலைத்து நிற்கச் செய்ய பகீரதப் பிரயத்தனமெடுத்துக் கொள்ளும் இந்த உலகம் என்னே உலகம்?

## வாதிக்கப் போர்

இரு கருத்துக்கள். அவ்விரண்டில் எது மனித முன் னேற்றத்திற்கு உகந்தது என்பதை விவாதித்து முடி வெடுக்கும் வாத பிரதிவாதப் போருக்கே வாதிக்கப் போர் என்று பெயர். ஒரு மனிதனை குற்றவாளியா' அல்லது அவன் நிரபராதியா? என்பதை நிரூபிக்க இருதரப்பு வக்கீல் களாலும் நடாத்தப்படும் வாதப் பிரதிவாதங்களுக்கும் இது பொருந்தும். இரு கருத்துக்களில் எது சிறந்தது என்பதைக்

கண்டறிய நடாத்தப்படும் பட்டி மன்றங்களுக்கும் இது பொருந்தும். பல்வேறுபட்ட திட்டங்களில் எது நாட்டு மக்களுக்கு உகந்தது என்பதை முடிவெடுக்க சட்டசபை, பாராளுமன்றங்களில் நடாத்தப்படும் ஆளும் கட்சி, எதிர் கட்சிகளின் விவாதங்களுக்கும் இது பொருந்தும். உலக நாடுகளின் நலன்களுக்காக அமைக்கப்பட்டுள்ள ஐக்கிய நாடு சபையின் விவாதங்களுக்கும் இது பொருந்தும்.

ஆகவே இஸ்லாம் இந்தப் போர் முறையை வாழ்த்தி வரவேற்கின்றது எனத் துணிந்து கூறலாம் ஏனெனில்,

இந்தப் போர் முறையை உலகிற்கு அறிமுகப் படுத்தியதே இஸ்லாமிய மார்க்கம்தான். இஸ்லாமிய மார்க்கத்தில் ஹனபி, ஷாஃபிஈ, மாலிகி, ஹன்பலி ஆகிய நாற்பெரும் வழிமுறைகள் ஏற்பட்டிருப்பதும் இந்த அடிப் படையில்தான். 'தலைவர்களின் கருத்து வேறுபாடு சமுதாயத்திற்குக் கிடைத்த அருட்கொடையாகும்' என்ற மணிமொழி இந்த 'வாதிக்கப்போர்' முறையை ஊக்குவிக்கும் நோக்கம் கொண்டதுதான். ஆனால்,

இஸ்லாம் இந்தப்போர் முறைக்கு ஒரு இலக்கணத்தையே உருவாக்கித் தந்துள்ளது.

## முநாழரா பற்றிய விளக்கம்

'சத்தியத்தைக் கண்டறிய வேண்டும்' என்ற உயர்ந்த உணர்ச்சியோடு வாதப்பிரதி வாதங்கள் நடத்தப்படுமானால் அதற்கு 'முநாழரா' என்று பெயர். இந்த வாதப் பிரதி வாதங்களில் பங்கு பெறுபவர் இறையச்சம் கொண்ட

வர்களாகவும், கல்வியறிவில் சமமான அந்தஸ்தையுடைய வர்களாகவும் கசப்பான உண்மைகளையும் ஜீரணிக்கும் மனப்பக்குவம் உள்ளவர்களாகவும் இருப்பதுடன் வாதப் பிரதிவாதங்களுக்கு இரு சாரராலும் சகல விதத்திலும் மதிக்கப் படக் கூடிய ஒருவர் நடுவராக ஆக்கப்பட வேண்டும். இரு சாராரும் அந்த ஒருவருக்கு எல்லா வகையிலும் முழுக்க முழுக்கக் கட்டுப்படும் மனப் பக்குவம் படைத்தவர்களாக இருப்பதவசியம் என அதற்கு நிபந்தனை விதித்துள்ளது இஸ்லாமிய சன்மார்க்கம்.

## முஜாதலா பற்றிய விளக்கம்

'தான் சொல்லும் வாதத்தை எப்படியாவது நிலை நாட்டியே ஆக வேண்டும்' என்ற தாழ்ந்த உணர்ச்சியோடு வாதப் பிரதி வாதங்கள் நடத்தப்படுமானால் அதற்கு முஜாதலா' என்று பெயர். ஒரு குற்றவாளி ஒரு வக்கீலை அணுகுகின்றான். அவன் உண்மையில் குற்றமிழைத்த வன் தான் என்பதை அந்த வக்கீல் உணரவும் செய் கின்றார். இருந்தும் தனக்கிருக்கும் வாதத் திறமையால் குற்றமிழைத்த அந்த குற்றவாளியையும் நிரபராதி என நிரூபிக்க வாதாடுகின்றார் அந்த வக்கீல் என்றால் அந்த வாதாட்டத்திற்கே 'முஜாதலா' என்று பெயர். இந்த வாதாட்டம் சூதாட்டத்தைப் பார்க்கிலும் கொடியது என இஸ்லாம் கருதுகின்றது. ஏனெனில் இத்தகு தாழ்ந்த எண்ணம் கொண்ட வக்கீல்கள் நாட்டில் பெருத்து விட்ட தால் நீதி அணு அணுவாகச் செத்துக் கொண்டிருப் பதைப் பார்க்கின்றோமே.

## முகாபரா பற்றிய விளக்கம்

தான் சொல்லும் வாதம்நியாயமானதா அல்லது அநியாயமானதா என்பதைப் பற்றியெல்லாம் கவலைப் படாமல் தான் சொல்லும் வாதமே வெற்றிபெற வேண்டும் அதன்மூலம் தனது புகழை, பெருமையை நிலைநாட்டிட வேண்டும் என்ற உணர்ச்சியில் - நீதிபதியின் முடிவைக் கூட அலட்சியம் செய்யும் முறையில்-வாதப் பிரதி வாதங்கள் நடத்தப்படுமானால் அதற்கு 'முகாபரா' என்று பெயர். 'இந்த வாது வாதநோயைவிடக் கொடுமை யானது' என இஸ்லாம் கருதுகின்றது. ஏனெனில் முஜாதலா முறைவாதுகளால் செத்துக் கொண்டிருக்கும் நீதிக்கு இந்த முகாபரா வாத முறை சமாதியே கட்டிக் கொண்டிருக்கின்றது.

ஆகவே வாதப்போர் முறையை இஸ்லாம் வாழ்த்தி வரவேற்றாலும் அது முதல் ரகமான 'முநாழரா' என்ற ரகத்திற்கு உட்பட்டதாக இருக்க வேண்டும்.

## தற்காப்புப் போர்

அன்பரீர்! இதுவரை போரின் வகைகள் குறித்தும், அவைகள் சம்பந்தமாக இஸ்லாம் கொண்டுள்ள மனநிலை குறித்தும் தெரிந்து கொண்டோம் நாம். இல்லையா? ஆனால் 'தற்காப்புப் போர்' என்று போர் முறையில் மற்

றொரு இனமும் உண்டு, அது போர் இனமாக இருந்தாலும் போர் வகையைச் சார்ந்ததன்று ஏனெனில்;

திணிக்கப்பட்ட போரை முடிந்த அளவு தடுக்கவும், அப்படித் தடுப்பதின் மூலம் போர் திணிக்கப்பட்ட பேர்கள் தங்களது நிலையினைத் தற்காத்துக் கொள்ளவுமான ஒரு உத்தி தான் அது. இதனை 'உரிமைப்போர்' என்றும் 'தர்மயுத்தம்' என்றும்; 'அகிம்சைப் போராட்டம்' என்றும் அறவழிப் போராட்டம்; என்றும்' சத்தியாக்கிரகம்' என்றும் பலப்படக் கூறிக் கொள்ளலாம்.

இஸ்லாமியத்தில் இந்த போர் 'முறைக்கே ஜிஹாத்' -மதப்போர் என்று சொல்லப்படுகின்றது.

## அறவழிப் போராட்டங்கள்

நமது பாரதத் திருநாட்டின் பால் வெள்ளையர்களால் தி ணி க் க ப் ப ட் ட அடிமைத்தளையை அறுத்தெறிவான் வேண்டி காந்தியடிகள் மேற்கொண்ட சுதேசி இயக்கம்' உப்புச் சத்தியாக்கிரகம் 'வெள்ளையனே வெளியேறு' போன்ற அறவழிப் போராட்டங்கள் தற்காப்புப் போரில் அடங்கும்.

சிதம்பரனார் செய்த கப்பல் போக்குவரத்துப் போராட்டமும் தற்காப்புப் போரில் அடங்கும்.

கிலாபத் இயக்கம் கண்ட சிங்கங்களான அலி சகோதர களின் சுயாட்சிப் போராட்டமும் தற்காப்புப் போரில் அடங்கும்.

கேரளத்துக் கேசரிகளான மாப்பிள்ளா முஸ்லிம்கள் நடாத்திய சிப்பாய்க் கலகமும் தற்காப்புப் போரில் அடங்கும்

தீரர் திப்பு (ரஹ்-அன்ஹு) அவர்களின் வீர மரணமும் தற்காப்புப் போரில் அடங்கும்

இன்ன பிற சுதந்திரப் போராட்டங்கள், நிறபேதப் போராட்டங்கள், மொழி ஆதிக்கப் போராட்டங்கள் பொரு ளாதாரப் புரட்சிகள் எல்லாம் அதில் அடங்கும்.

ஓரிறைத் தத்துவத்தைக் கெல்லி எறிவதற்காகத் திணிக்கப்படும் யுத்தங்களை எதிர்கொள்வதற்கே 'ஜிஹாத்' எனும் பெயர் பொருந்தும். என்றாலும் ஓரிறைத் தத்து வத்தைப் பாதுகாத்திட்டாலே மீக்கூறபபட்ட அனைத்து உரிமைகளும், சுதந்திரங்களும், ஒன்றே குலம் என்ற நல்லறமும் இனமொழி, நிறபேதமற்ற சமத்துவமும் மனித சமுதாயத்திற்கு கிடைத்து விடும் என்பதையும் புரிந்திட வேண்டும்.

ஆகவே, இனிய இஸ்லாமியம் இந்த ஜிஹாத் முறைப் போரை மட்டிலும்-வேறு வழியில்லாத கடைசி கட்டமாக- வருத்தத்தோடு அனுமதிக்கின்றது.

## நபிகளார் எதிர்கொண்ட யுத்தங்கள்

இஸ்லாமியத்தின் ஈடு இணையற்ற வழிகாட்டியான ஏந்தல் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்களும் அவர்தம் உத்தமத் தோழர்களும் தங்களது வாழ்வில் 27 பெரிய யுத்தங்களையும் 37 சிறிய சண்டைகளையும் எதிர்கொள்ள நேரிட்டதென்றால் அது இந்த அடிப்படையில் தான்.

கி. பி. 610-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 6-ஆம் நாளன்று நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு நபிப்பட்டம் வழங்கப்பட்டது. கி பி 622 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 22-ம் நாளன்று நபிகளார் அவர்கள் மக்கா விலிருந்து மதீனா நகருக்கு அகதியாக (ஹிஜ்ரத்) சென்றார்கள். ஆகவே ஹிஜ்ரத்திற்கும் நபிப்பதவி அருளப்பட்டதற்கும் இடைப்பட்ட காலங்கள் 12 ஆண்டுகளும் 2 மாதமும் 21 நாட்களும் ஆகும். இந்த இடைக்காலத்தில் மக்காவில் வாழ்ந்து கொண்டிருந்த நபிகளாரும் அவர் தம் உத்தமத் தோழர்களும் இஸ்லாமியத்தைப் பிரச்சாரம் செய்தற்காக அல்லது இஸ்லாமியத்தை ஏற்றதற்காக நினைத்தாலே நெஞ்சம் வெடித்துச் சிதறிடும் அளவு கொடுமை செய்யப்பட்டார்கள்.

## அவிழ்த்து விடப்பட்ட அடக்குமுறைகள்

❑ ஒரு தடவை நபிகளார் அவர்கள் கஃபாவின் முற்றத்தில் இருந்து கொண்டிருக்கையில் ஆங்கு வந்த ‘அக்பத் பின் அபீமுஈத்’ என்ற முரடன் நபிகளாரின்

கழுத்தில் தனது துண்டைப் போட்டு முறுக்கினான் அதனால் நபிகளாரின் கண்கள் நட்டுக் கொண்டு மரண அவஸ்தையை அடைந்தார்கள். அந்த நேரம் அங்கு தற்செயலாக வந்த அபூபக்கர் (ரலி - அன்ஹு) அவர்கள் அவனது கோரப்பிடியிலிருந்து நபிகளாரை விடுவித்தார்கள்.

□ மற்றொரு முறை, நபிகளார் கஃபாவில் தொழுது கொண்டு இருக்கும் போது சில முரடர்கள் ஒட்டகையின் ஓதப்பி நிறைந்த குடலை எடுத்து வந்து - நபிகளார் சஜ்தாவில் இருக்கும் நேரத்தில் - அன்னாரின் பிடறியில் அந்தக் குடலை மாலையாகப் போட்டு விடுகின்றனர். ஏறக்குறைய இரண்டு ஆள் சுமையளவு இருக்கும் அந்தக் குடல் தனது பிடறியில் போடப்பட்டதால் சஜ்தாவிலிருந்து எழுந்திருக்க முடியாமல் நபிகளார் திணறுகின்றார்கள். அழுகி நாற்றமெடுத்த அந்த மலக்குடலில் இருந்த துர்நாற்றமுள்ள ஊன் நபிகளாரின் தலையிலும் முகத்திலும் வடிந்து குடலைக் குமட்டும் வருத்தத்தை உருவாக்கி விட்டதால் பெரும் துன்பத்தை அண்ணலார் அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் மனிதாபிமானத்திற்கு அப்பாற்பட்ட இந்த இழி செயலை ஆங்கு கூடியிருந்து வேடிக்கைப் பார்த்து கொண்டு நின்ற மக்கத்துப் பிரமுகர்கள் (?) அனைவருமே - 'இந்த பகட்டுக்காரனுக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும், என்று கூறி கை கொட்டிச் சிரித்தார்களே தவிர, அச்செயலை தடுக்க அல்லது தூதர் நபியுல்லா படும் துன்பத்தை தவிர்க்க அவர்களில் எவருமே முன் வந்தார்களில்லை.

## யாசிர் குடும்பத்தினர் அனுபவித்த வன்கொடுமைகள்

□ இஸ்லாமியத்தின் 31-வது உருப்பாக இணைந்த யாசிர் (ரலி-அன்ஹு) அவர்களின் ஏழைக் குடும்பம்- இஸ்லாமியத்தைத் தழுவிய ஒரே காரணத்திற்காக பூண்டோடு அழித்தொழிக்கப்பட்டது. அக்குடும்பம் சாதாரணமாகக் கொல்லப்பட்டிருந்தால்கூட அதுபற்றி மன்னிக்கலாம் மறக்கலாம். ஆனால் உலகத்து இதயங்களெல்லாம். இன்றைக்கும்-அந்தக் கோரமான கொலை நிகழ்ச்சியை எண்ணி, எண்ணி குலை நடுக்கம் கொள்ளும் விதமாக அந்தக் குடும்பத்தார் கொடுமையாகக் கொல்லப்பட்டார்கள்.

ஆமாம்; குடும்பத் தலைவர் யாசிர் (ரலி-அன்ஹு) அவர்களை அனல் பறக்கும் சுடு மணலில் மல்லாத்திப் படுக்க வைத்து அவரின் உறம் வாய்ந்த நெஞ்சின் மீது பெரும் பாறைக்கல்லொன்று - சுமையாக-வைக்கப்பட்டது. கீழே முதுகை-மணலின் வெப்பம் தாக்க, மேலே நெஞ்சை பாறையின் அழுத்தமும், வெப்பமும் கடுமையாகத் தாக்க, தாங்க முடியாத வருத்தத்தை உண்டாக்கப்பட்டது. ஆனால், உள்ளத்தின் ஒளியாக நிலைத்துவிட்ட இஸ்லாமியத்தை இந்த உடல் வருத்தங்களால் மங்கச் செய்திட முடியுமா? 'அல்லாஹு அக்பர்... அல்லாஹு அக்பர்... அல்லாஹு அக்பர்...' இந்த வருத்தங்களையெல்லாம்விட அல்லாஹ்வே மிகப் பெரியவன்-என்ற இலட்சிய கீதமே யாசிரின் நாவுகளில் ஒலிக்கின்றது. எவ்வளவு இருமாப்பு இருந்தால் எங்கள் முன்னிலையில்-தண்டனை அனுபவிக்கும் வேளை

யில் - எதற்காக இவனை இத்தண்டனைக்கு உள்ளாக்கினோமோ அதே குற்றத்தைச் செய்வான். இவன்?' என்ற பொறுபொறுப்பு எதிரிகளை சீண்டுகின்றது. ஆகவே தண்டனை இன்னும் கடுமையாக்கப்படுகின்றது. அப்போதும் அதே தர்பீர் முழக்கம்- 'இவனை இப்படியெல்லாம் செய்தால் வழிக்கு வரமாட்டான். இந்த மண்ணுக்கு ஒரு பாடமாக இவனை ஆக்கவேண்டும். அதன் மூலம் இஸ்லாம்... முஹம்மது...என்று நினைக்கவே எவனும் அஞ்ச வேண்டும்' என்ற எதிரிகளின் எண்ணம் செயலாக மாறுகின்றது.

சுமை வைக்கப்பட்டுச் சுடுமணலில் கிடத்தப்பட்டிருந்த யாசிர் (ரலி-அன்ஹு) அவர்களின் வலக்கால் மூர்க்கமானதொரு ஒட்டகையின் வாலிலும் கால்களிலும் பிணைத்துக் கட்டப்பட்டு, அது போல அன்னாரின் இடக்காலும் மற்றொரு மூர்க்கமான ஒட்டகையில் கட்டப்பட்டு இரு ஒட்டகைகளும் எதிரும் புதிருமாக வெருட்டப்படுகின்றது. நிலை என்னவாகும்...? அந்த மனிதப் புனிதரின் உடல் இரு கூருகளாகப் பிய்த்து நார் நாராகக் கிழிக்கப்பட்டு வீர மரணம் எய்துகின்றார் அவர். இன்னா லில்லாஹ்...

செய்தி கேட்டுத் தூண்டிலில் அகப்பட்ட மீனைப் போல துடிதுடித்த யாசிரின் துணைவி சுமைய்யா (ரலி-அன்ஹா) சின்னா பின்னப்படுத்தப்பட்டு அலங்கோலமாக அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கிடக்கும் தனது கணவரின் உடல் சிதறல்களைக் காண ஓடோடி வந்தார்- கண்டார் அந்தக் கண்டராவிக் காட்சியை. பெண் புலியல்லவா? பித்தம் தலைக்கேறியது 'அட சண்டாள

களே ! ஈவு இரக்கம்-மனிதாபிமானம் என்பதெல்லாம் உங்களுக்கு கிடையவே கிடையாதா?'' கொன்றது தான் கொன்றீர்கள் கொஞ்சம் இதமான முறையில் கொன்றிருக்கக் கூடாதா ?' எனப் பொறிந்து தள்ளுகின்றது அந்த பெண்ணுள்ளம், அல்ல அல்ல...பொன்னுள்ளம்.

ஒரு ஏழைப் பெண்-கந்தலை உடுத்தி, மெலிந்து, ஏழ்மையின் சின்னமாகத் திகழ்பவள், நாலுபேர் முன்னிலையில் நடு முச்சந்தியில் இப்படிச் சுடு சொற்களால் ஏசிப் பேசினால்-ஆணவத்தின் உச்சாணியில் அமர்ந்து கொக்கரித்துக் கொண்டு இருந்த அபூஜஹ்லுக்குப் பொறுத்துக் கொள்ள முடியுமா ? 'பிடி அந்தப் பிச்சைக்காரியை' என்றான் ''என்னையா, உன்னால பிடிக்க முடியுமா'' என்று சவால் விடும் முறையில் அந்தப் பேதைப் பெண்-பாய்ந்து வரும் வேங்கையை கண்டு பாய்ந்தோடும் புள்ளி மானைப் போன்று-வெருண்டோடுகின்றாள். 'உன்னால் என்னிடமிருந்து தப்பித்து விடவா முடியும்?' எனும் தோரணையில் தனது கரத்திலிருந்த அம்பை அப்பெண் மணியை குறி வைத்து எய்கின்றான் அபூஜஹில். ஐயஹோ ! என்னவென்று சொல்ல? சண்டாளன் அபுஜஹில் எய்திட்ட கொடுமை தோய்ந்த அம்பு-முகத்தைப் பார்த்தாலாவது இரக்கம் பிறந்திடாதா ? என எண்ணி பின்னோக்கி நடந்து கொண்டிருந்த-சுமைய்யா (ரலி-அன்ஹா) அவர்களின் மர்மஸ்தானத்தில் பாய்ந்து ஊடுருவி; அடிபட்ட புலியென சாய்ந்து-துடி துடித்து மாண்டார் அவ்வமையார் !

கணவனையும் மனைவியையும் கொன்று அவர்களின் பச்சை இரத்தங்களைக் குடித்த பின்னராவது அந்த அபூ

ஜுஹில் கூட்டத்தாரின் கடுகடுப்புக் குறைத்திருந்தால் கூட கொஞ்சம் பரவாயில்லை எனக் கூறலாம். ஆனால் அந்த அரக்கமனம் படைத்த அயோக்கியர்களின் கழுகுப் பார்வை யாசிர் சுமையா தம்பதிகளின் ஒரே வாரிசான அம்மார் (ரலி-அன்ஹு) அவர்களையும் விட்டு வைக்கவில்லை.

''உன்னுடைய அப்பனும் ஆத்தாளும் அவர்களின் அர்த்தமற்ற பிடிவாதத்தால் எங்களின் கௌரவத்திற்கு இரையாகி விட்டார்கள் வாழ்க்கையின் நுனியைத் தொட்டுக் கொண்டிருக்கும் நீ என்ன சொல்லுகின்றாய்'' என்ற போது 'புலி எட்டடி பாய்ந்தால் குட்டி பதினாறடி பாயும் என்பதைக் கேள்விப்பட்டதில்லையா? என் இரத்தத்தோடு இரத்தமாக சதையோடு சதையாகக் கலந்துவிட்ட இஸ்லாமியத்தை உங்களின் இந்த உயிர் போக்கும் செய்கைகளால் அகற்ற முடியாது ஆட்டமுடியாது' என் வீர முழக்கம் செய்தார் அம்மார்.

அப்படியா செய்தி அப்படியென்றால் உன் உயிர் எங்களுக்குத் தேவையில்லை ஆனால் நாங்கள் கொடுக்கும் தொடர் தண்டனையை அணு அணுவாகச் சுவைத்துச் சுகி' எனும் தோரணையில் வாலிபர் அம்மாரை சுடுமணலில் கிடத்தி அவரின் உறுதிமிக்க நெஞ்சில் பெரும்பாறையைச் சுமையாக ஏற்றியதோடு அந்தக் கொள்கைக்குன்றின் முகத்தில் போவோரும் வருவோரும் காரி உமிழும்படி செய்து மகிழ்ந்தனர்; ஒரு நாள் இருநாளல்ல ! பல நாள்.

ஒரு நாள் மாலை வேளையில் - அன்றைய தண்டனையை வழக்கம் போல அனுபவித்து விட்டு - அண்ணலாரிடம் வருகை தந்த அம்மார் அண்ணலாரைப் பார்த்தவுடன் கோவெனக் கதறி அழுகின்றார். இதனைக் கண்ட நபிகளார் - 'என்ன' அம்மாரே! வீர முத்திரை பெற்றதற்காகவா அழுகின்றீர்?' என்ற போது - 'இல்லை எம்மானே! இல்லை! ஆனால் இன்று நான் மிகப்பெரிய கொடுமையொன்றைச் செய்து விட்டேன்-' என்றார். என்ன...? நீவிர் கொடுமை செய்தீரா? உண்மையாகவா?' என்றபோது - ஆமாம் அண்ணலே! வழக்கம் போல் இன்றும் அவர்கள் என்னை வேதனை செய்த போது உன்னுடைய நபி முஹம்மதை ஒரே ஒருமுறை நீ உன் நாவினால் திட்டினால் இன்று உனக்கு கொஞ்சம் ஓய்வு கிடைக்கும், என்றார்கள். முதுகுப் பகுதியும் நெஞ்சும் வெந்து ரணமாகப் போயுள்ள எனக்கு அவர்கள் கொடுக்கும் அந்தக் கொஞ்ச நேர ஓய்வு பெரிதாகப்பட்டது. அதனால் இதோ இந்த நாவால் உயிரினும் மேலான உங்களைத்திட்டி விட்டேன் நாயகமே! திட்டி விட்டேன்' எனச் சொல்லிக் கொண்டே விம்மிவிம்மி விழிரத்தம் வடிக்கின்றார். இதனைக் கேட்ட நபிகளார் 'அம்மாரே! உறுதியின் இருப்பிடமே! உனக்கு வேதனை குறையுமென்றால் அதற்காக ஒரு முறையல்ல ஓராயிரம் முறை வேண்டுமென்றாலும் என்னை நீ திட்டிக் கொள்ளும். அதனால் குற்றமேதுமில்லை' என அன்பொழுகச் சொன்னார்கள் அண்ணலார்.

எங்கேயாவது எதற்காகவாவது எவராவது இப்படி கர்ண கடூரமாகச் சித்திரவதை செய்யப்பட்டுக் கொல்லப் பட்டதாக வரலாறு காட்ட முடியுமா? இது மட்டுமா?

## வீராங்கனை

□ லுபையா (ரலி - அன்ஹா) என்பார் இஸ்லாமி யத்தை ஏற்றதோர் அடிமைப் பெண்.

அந்த வீராங்கனையினை அப்போது இஸ்லாமி யத்தைத் தழுவாதிருந்த 'உமர்' தனது சவுக்குத் தூள் தூளாகப் பிய்ந்து போகும் வரை அடித்து அதன் பின்னும் இரண்டாவது சவுக்கால் - தொடர்ந்து - சொடுக் கிச் சொடுக்கி அடித்தார். அடித்தார்...தனக்கு களைப்பு ஏற்படும்வரை அடித்தார். அதன்பின் 'எனது கரம்' ஓய்ந்து விட்டதால்தான் இப்போது உன்னை விடுகின் றேன்' எனக் கூறி அடியை நிறுத்தினார் உமர். அப்போது அந்த வீராங்கனை 'நீங்கள் இஸ்லாத்தைத் தழுவாமல் மரணித்தால் உங்களை இறைவன் இதனை விடக் கொடுமையாக அடிப்பான் அவனுக்குக் களைப்பு என்பதே ஏற்படாது' எனக் கூறினாளாம்.

## முதல் ஹிஜ்ரத்

□ மக்கத்து மாக்களின் மிருகத்தனமான சித்திர வதைகளைத் தாங்கிக் கொள்ள முடியாமையால் கி. பி. 615 - ஆம் ஆண்டில் நான்கு பெண்களும் 12 - ஆண்களும் கொண்ட ஒரு இஸ்லாமியக் குழு மக்காவைத் துறந்து அபி சீனியா நாட்டிற்கு அகதிகளாக சென்று அங்கே தஞ்சம் புகுந்தனர். அவர்களில் மூன்றாவது கலீபா - சீமான் உதுமான் இப்னு அப்பான் (ரலி - அன்ஹு) அவர்களும் அவரின் வாழ்க்கைத் துணைவியாரும், நபிகளாரின் அன்புமகளுமான ருக்கையா (ரலி - அன்ஹா) அவர்களும் குறிப்பிடத் தக்கவர்களாகும்.

## சமூகக் கட்டுப் பாடு

□ கி. பி. 617 - ஆண்டு இஸ்லாத்தைத் தழுவிய - இஸ்லாத்தைப் பிரச்சாரம் செய்கின்ற - ஒரே குற்றத்திற்காக நபிகளாரின் மீதும் முஸ்லிம்களின் மீதும் அவர்களுக்கு அனுசரணையாக இருந்த சிலரின் மீதும் சமூகக் கட்டுப்பாட்டைப் பிரயோகிக்கப்பட்டது.

அதன்படி, மக்காவிலுள்ள யாரும் முஸ்லிம்களுக்கும், முஸ்லிம்களை ஆதரிப்பவர்களுக்கும் எந்தவித உதவியும் செய்யக்கூடாது - கொள்வினை கொடுப்பினை எதுவுமே வைத்துக் கொள்ளக்கூடாது - பேசக்கூடாது - சந்திக்கவும் கூடக் கூடாது, என உறுதியான உத்திரவு பிறப்பிக்கப்பட்டது.

இந்த சமூகக் கட்டுப்பாடு ஏறக்குறைய மூன்றாண்டுகள் நீடித்தது. நபிகளார் (ஸல்) அவர்கள் தங்களிடமிருந்த அனைத்துப் பொருட்களையும் இஸ்லாமியர்களுக்காகவும் அவர்களை ஆதரிப்பவர்களுக்காகவும் செலவழித்தார்கள். அவர்களன்றி, நபிகளாரின் அன்பு மனைவியார்-அன்னை நல்லார்-சீமாட்டி கதீஜாப் பிராட்டி (ரலி-அன்ஹா) அவர்களும் நபிகளாரின் வளர்ப்புத் தந்தை அபூதாலிப் அவர்களும் தங்களுக்குச் சொந்தமான அனைத்துச் செல்வங்களையும் சமூகக் கட்டுப் பாட்டிற்குள்ளாகிய அந்த அப்பாவிகளுக்காக செலவழித்தார்கள் தான், எப்படியிருந்தாலும்-எவ்வளவு செலவளித்தாலும் 'சமூகக் கட்டுப்பாடு' என்ற கொடுமையான ஆயுதம் உபயோகிக்கப்பட்டால் அதன் விளைவு எப்படியிருக்கும்? குறித்த நேரத்தில் குறித்த பண்டம் கிடைப்பதில்லை. அதனால் தாகத்தால் வாடினர். பசியால் வதங்கினர் உடுத்த உடுமானம் கிடைக்காமல் திண்டாடினர்; சில சமயங்களில் அடுப்புத் தீ கூட கிடைக்காமல் புழுங்கினர்.

அந்த கொள்கை மறவர்கள் சமூகக் கட்டுப்பாட்டினால் அனுபவிக்கும் இந்த சொல்லொண்ணாக் கொடுமைகளைப்

பார்த்துப் பார்த்து, கைகொட்டிச் சிரித்துத் துள்ளாட்ட போட்டனர் அந்த துரோகிகள்.

இப்படியெல்லாம் கொடுமைப்படுத்தப்பட்ட அந்த கொள்கைக் குன்றுகள் அப்போதெல்லாம் கொதித்தெழுவ தென்றால் குறைந்தது நாளொரு தலையாவது உருண் டிருக்கும். ஆனால் செய்தார்களா, அந்த சாந்த சொரூபிகள்? அன்றி, காலம் வரும் காத்திருப்போம் என்றாவது கருவி இருப்பார்களா? இல்லை... இல்லை... இல்லவே இல்லை.

ஏன் தெரியுமா? அவர்கள் இன்றில்லா விட்டாலும் என்றாவது ஒருநாள் உண்மையை உணருவார்கள்; அவர்கள் இல்லா விட்டாலும் அவர்களின் வாரிசுகளாவது உண்மையை உணருவார்கள் சத்தியத்தின் பக்கம் திரும்புவார்கள் - திருந்துவார்கள் என்ற உயர்ந்த நோக்கம் தான் அந்த அருள் வழித்தோழர்களை அமைதிப்படுத்தியது. 'இஸ்லாத்தின் மறு பெயர் பொறுமை' என அவர்கள் கருதினார்கள் ஆகவே 'இவர்கள் கோழையினும் கோழையோ' என மற்றவர் எண்ணிடும் அளவுக்கு அந்த அனைத்துக் கொடுமைகளையும் தாங்கிக் கொண்டு அமைதி காத்தார்கள்.

இதனை எவரேனும் மறுக்க - மறைக்க முடியுமோ?

## கொடுமையின் மறு உருவம்

'கொடுமையின் மறுபெயர் அன்றைய மக்கத்துக் குறைஷிகள்' என்பதோ?... அடக்கு முறையின் ஆணி வேர் அன்றைய மக்கத்து மனிதர்கள் தானோ? சித்திர

வதையின் மறு உரு மக்கத்துக் காபிர்கள் தானோ? என எண்ணிடத் தோன்றும் அளவிற்கு மக்கத்து மனிதர்களால் அடக்குமுறைக்கு உள்ளாக்கப்பட்டு ஆமைகளாய் - ஊமைகளாய் வாழ்ந்து வந்த அந்த அருளாளர்கள் கொடுமைக் கொடி உச்சத்தை அடைந்துவிட்ட காரணத்தால் தாங்கள் பிறந்த மண், தங்களுக்கேசொந்தமான பொன் பொருள் அத்தனையையும் துறந்து விட்டு - அன்னக் காவடிகளாக 6 - 6 622ம் நாளன்று மக்காவிலிருந்து வெளியேறி மதீனா மாநகரில் தஞ்சம் (ஹிஜ்ரத்) புகுந்தார்கள்.

ஆனாலும், இதயமே இல்லாத அந்த மக்கத்து மாக்கள் மதீனாவிலாவது அந்த அகதிகளை நிம்மதியாக வாழவிட்டார்களா?

இல்லையே! ஆதிக்கப் பேயின் கடிவாளங்களான மக்கத்துக் காபிர்கள் அகதிகளை அரவணைத்த மதீனா புரியின் மீதும் போர்க் கொடி உயர்த்தி விட்டார்கள்.

## இஸ்லாம் வாளால் பரப்பப்பட்டது என்போர் கவனத்திற்கு

நற்சிந்தனையுள்ள நண்பர்களே! விருப்பு வெறுப்பிற்கு அப்பால் நின்று நடுநிலையுடன் சிந்திக்கும் திறன் படைத்தவர்களே! உலகின் ஒரு கோடியில் அடக்கு முறை அவிழ்த்துவிடப் பட்டால் மறு கோடியில் இருந்து கொண்டே பேனா முனையால் போர் முரசு கொட்டிக் கொண்டிருக்கும் நல் அறிஞர்களே! இன்றையக் காலத்

தில் அன்றைய இஸ்லாமியர் மீது, திணிக்கப்பட்டதைப் போன்று உச்சக்கட்டமான அடக்கு முறை எவர் மீதா வது அவிழ்த்து விடப்பட்டால் நீங்கள் என்ன செய்வீர் கள்? அத்தகு அடக்கு முறைக்குப் பலியாகியவர்கள் அடக்கு முறைக்காரர்களை எதிர்த்துநின்று போராடி னால் அந்தப் போராட்டத்தை நீங்கள் 'அறப்போர் என வர்ணிப்பீர்களா? அல்லது ஆதிக்கப் போர் என கூக்குரல் இடுவீர்களா?

இன்றைய பங்களாதேஷ் அன்றைய வங்கமாக இருந்தபோது - வங்கத்துச் சிங்கங்கள் அடக்குமுறைக்கு உள்ளாக்கப்பட்ட போது - நாமெல்லாம் என்ன செய் தோம்? வேடிக்கை பார்த்துக் கொண்டா இருந்தோம்?

வடவியட்னாம் தென்வியட்னாம் விசயத்தில் 'இது அவர்களது உள்நாட்டுப் பிரச்சினை' என ஒதுங்கியிருந் ததா இந்த உலகம்? 'வல்லரசுகளின் வல்லவன் நானே! நல்லவன் நானே!' என ஆர்ப்பரித்த அமெரிக்காவை இந்த வியட்னாம் பிரச்சனைக்காக எப்படி எப்படியெல் லாம் கண்டித்தது இந்த உலகம்?

வடகொரியா தென்கொரியா விசயத்தில் ஆதிக்கத் திற்குத் துணை நின்றவர்களை தூசிக்கவில்லையா இந்த உலகம்?

இப்படியெல்லாம் அடக்குமுறையாளர்களை கண்டிக்க வும், முடிந்தால் தண்டிக்கவும் செய்து வரும் இந்த உலகம் அன்று அளப்பெரும் அடக்குமுறைக்கு ஆளான

முஸ்லிம்கள் அடக்கு முறையாளர்களை எதிர்த்துப் போ ராடியதை மட்டும் வேறுவிதமாக விமரிசிப்பதேன்?

அடக்குமுறையை அனுமதிக்க மறுக்கும் முகமாக - ஏறக்குறைய 12 ஆண்டுகால அடக்கு முறை வாழ்வை அனுபவித்தபின் - சில பல போராட்டங்களில் ஈடுபட்ட தற்காக 'இஸ்லாம் வாளால் பரப்பப்பட்டது' எனச்சாடி அஹிம்சா வாதிகளான முஸ்லிம்களைப் பழித்து வரு வதேன்? உலகமே! உலகாளும் உரிமைக் குரலே! அகிலமே! அகிலம் தழுவிய அஹிம்சை உணர்வே! நீ பதில் சொல்.

மீக் கூறப்பட்ட புள்ளி விபரங்களை மட்டும் கவனித் துக் கொண்டு பதில் கூறிட வேண்டாம். அன்றைய ஆரம்பகால முஸ்லிம்களின் மீது தொடுக்கப்பட்ட யுத்தங் கள் அனைத்துமே வலிந்து திணிக்கப்பட்ட யுத்தங்கள் தான் என்பதற்கு இன்னும் சில தடயங்களையும் சொல் லிக் காண்பிக்கின்றேன். அதனையும் பதமாகப் படித் துணர்ந்த பின் பதில் சொன்னால் போதுமானது.

## திணிக்கப்பட்ட யுத்தங்கள்

நபிகளார் (ஸல்) அவர்களால் புனருத்தாரணம் செய் யப்பட்ட இஸ்லாமியம், முதல் முதலாகச் சந்தித்த போர் பத்ருப் போர் தான். அந்தப் போர் கி. பி. 624 - ஆம்

ஆண்டு ஜனவரி மாதத்தில் நடந்துள்ளது. முஸ்லிம்கள் அகதிகளாக ஹிஜ்ரத் செய்த நாள் கி. பி 622 - ஆம் ஆண்டு ஜூன் மாதம் 6 - ம் நாளாகும். ஆகவே இந்த ஹிஜ்ரத்திற்கும் பத்ருப்போர் நடந்த நாளிற்கும் இடையில் எவ்வளவு இடைவெளி தெரியுமா? சுமார் 1½ ஆண்டுகள் தான்.

நசுக்கப்பட்டு, அகதிகளாக அந்நிய நகருக்குள் தஞ்சம் புகுந்த ஒரு சமுதாயம் - உடுத்திய ஆடைகளோடு மட்டும் அகதிகளாகச் சென்ற ஒரு பட்டினிப் பட்டாளம் இரண்டு ஆண்டு காலத்தில் ஒரு யுத்தத்தைப் பிரகடனம் செய்ய முடியுமா? அப்படியே முஸ்லிம்கள் தான் போர் தொடுத்தார்கள் என வைத்துக் கொண்டாலும்;

பத்ருப் போர் நடந்த நாள், ரமளான் மாதம் 17 ம் நாள் என்பதை மாற்று அணியில் உள்ள வரலாற்று ஆசிரியர்களும் ஏற்றுக்கொண்டுள்ளார்கள் ரமளான் மாதத்தில் முஸ்லிம்கள் கடும் உண்ணா நோன்பு இருப்பார்கள் என்பது உலகறிந்த உண்மை. ஆகவே, பசித்திருந்து - தனித்திருந்து - விழித்திருந்து நோன்புநோற்கும் அந்த அந்த நாட்களிலா அவர்கள் போர்ப் பிரகடனம் செய்திருப்பார்கள்? அன்றி;

போர் நடந்த இடம் மதீனாவிற்கு தென்கிழக்கில் சுமார் 80 மைல் தூரத்தில் உள்ள 'பத்ரு' என்ற ஒரு ஓடையாகும். ஆனால் எதிரிகள் மக்காவிலிருந்து சுமார் 320 மைல்களைக் கடந்து வந்து, பத்ரு என்ற இடத்தில் வைத்து முஸ்லிம்களிடம் பொருதியுள்ளார்கள். அப்படியென்றால் 240 மைல்களைக் கடந்து வந்தவர்

கள் போர் பிரகடனம் செய்தவர்களா? அல்லது 80 மைல்களைக் கடந்து - வந்தவர்கள் போர் பிரகடனம் செய்தவர்களா?

எதிரிப் படைகளின் எண்ணிக்கை சுமார் 1000 வீரர்களாகும். அவர்களில் இரும்புக்கவசம் அணிந்தவர்கள் 600 பேர்கள் 100 பேர் குதிரைப் படை வீரர்கள் அவர்களுடன் சவாரிக்காகவும் - உணவு உபயோகத்திற் காகவும் 800 ஒட்டகைகள் கொண்டு வரப்பட்டிருந்தன போர்க்களத்தில் படைவீரர்களை உற்சாகப் படுத்துவதற். காக அழகிய - இனிய குரல் படைத்த - நடன மாதுகள் பலர் அவர்களுடன் வந்திருந்தனர். அன்றி அவர்கள் அனைவருடைய செலவுகளுக்கு வேண்டிய 20,000 தீனார்களை அவர்களில் சீமான்களான 12 பேர் மட்டும் பொறுப் பேற்று ரொக்கமாகக் கொடுத்திருந்தனர்.

ஆனால்; இவர்களுடன் பொருதிய முஸ்லிம் படை வீரர்கள் எத்தனை பேர் தெரியுமா? வெறும் 313 பேர்கள் தான். அவர்களிடமிருந்த ஒட்டகைகள் வெறும் 80 தான். ஐந்தே ஐந்து குதிரைகள்தான் அவர்கள் கைவசமிருந் தது. ஒரே ஒரு உருக்குச் சட்டை. எட்டே எட்டு அம்பு கள். இவை என் சுயமாகக் கூறிக் காட்டும் புள்ளி விபரங்கள் அல்ல. (Veil) வீல் என்ற மேனாட்டு வரலாற்று வல்லுனரும், (Perceval) பெர்ஸிவல் என்ற வரலாற்று மேதையும் மிஸ்டர் கர்ஜுவியூத் என்ற வரலாற்று ஆய்வாளரும் ஒப்புக்கொண்டதொரு வரலாற்று உண்மைகளாகும்.

மேற்கூறப்பட்டபடி அனைத்து வல்லமைகளாலும் 'சுமார் மூன்றுமடங்கு' மிகைத்திருந்த எதிரிப் படை

களிடமா அனைத்திலும் கால்பங்கை விட குறைந்த நிலையில் உள்ளவர்கள் வாலாட்டி இருக்க முடியும்?

□ பத்ருப் போருக்குப்பின் சுமார் ஓராண்டு கழித்து கி. பி. 625 - ம் ஆண்டு ஜனவரி மாதத்தில் உஹதுப் போர் நடந்துள்ளது.

இது மதீனாவிற்கு தென்மேற்கில் சுமார் மூன்று மைல் தூரத்தில் உள்ள உஹது மலைச் சாரலில் நடந்தேறியது. ஆகவே இப்போரிலும் எதிரிகள் சுமார் 300க்கும் மேற்பட்ட மைல்களைக் கடந்து வந்துள்ளார்கள். அங்கனம் வந்த எதிரிப் படைகளின் எண்ணிக்கை சுமார் 3000 பேர்களாகும். அவர்களில் 800 வீரர்கள் இரும்புக் கவசம் அணிந்தவர்கள். 200 குதிரை வீரர்கள் அந்த படை வீரர்களுக்கு ஆடிப்பாடி ஆனந்த மூட்டுவதற்காக வந்த பெண்களின் எண்ணிக்கை 18

ஆனால் முஸ்லிம் படைவீரர்கள் வெறும் 700 பேர்கள் தான். அவர்களிடம் அப்போதிருந்தது இரண்டே இரண்டு குதிரைகள்தான். நபிகளாருக்குரியது ஒன்று மற்றொன்று அபீபுர்தா என்ற வீரருக்குரியது.

இப்படிப்பட்ட முஸ்லிம் வீரர்களா போர்ப்பரணி பாடியிருக்க முடியும் ?

□ இதனையடுத்து நடந்த பெரிய யுத்தம் கந்தக் (அகழ்) போராகும், இது கி. பி. 627-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் நடந்தேறியுள்ளது.

இந்தப் போரில் கலந்து கொண்ட இஸ்லாமிய வீரர்கள் 3000 பேர்கள்தான். ஆனால் எதிரிப்படைகள் பத்தாயிரத்திற்கும் மேற்பட்டவர்களாகும். அன்றி 'இந்த யுத்தமாவது முஸ்லிம்களால் தொடுக்கப்பட்டது' என்று சொல்ல வழி

யுள்ளதா என்றால் அதற்கு இம்மியும் வழியில்லவே இல்லை. காரணம் 300க்கும் மேற்பட்ட மைல்களைக் கடந்து, படை திரட்டி வந்து முஸ்லிம்கள் வாழ்ந்து கொண்டிருந்த மதீனாவை ஏறக்குறைய 15 நாட்கள் முற்றுவிட்டுக் காத்திருந்தவர்கள் எதிரிகள்தான்.

இப்படியாக; பெருமான் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் தங்களது வாழ்க்கையில் 27 பெரிய யுத்தங்களை யும், 37 சிறிய சண்டைகளையும் சந்தித்துள்ளார்கள் என்றால் அனைத்து யுத்தங்களும் திணிக்கப்பட்ட யுத்தங் களே தவிர தொடுத்த யுத்தங்களல்ல.

நூல் : முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (அரபி)

## நபிகளார் தன் கரத்தால் எத்தனை பேரைக் கொன்றார்கள்?

இத்தனை சண்டைக் களங்களை தமது தலைமையில்- அல்லது 'உத்திரவுப்படி-சந்தித்துள்ள நபிகளார், தமது கரத்தால் எவரையாவது கொன்றுள்ளார்களா? என்றால் நபிகளாரின் வாழ்க்கை முழுவதிலும் ஒரே ஒரு எதிரியை மட்டும் சந்தர்ப்ப வசத்தால் கொன்ற ஒரே ஒரு செய்தி யினைத் தான் நம்மால் காண முடிக்கின்றது.

அதாவது ;

பத்ருப் போரின்போது கைது செய்யப்பட்டு அதன்பின் நபிகளார் (ஸல்) அவர்களால் மன்னிப்புக் கொடுக்கப்பட்ட 'உபை இப்னு கலப், என்ற எதிரி 'முஹம்மதே! என்னிடம் முதல் தரமான குதிரை ஒன்றுள்ளது. அதை இன்னமும் நன்றாக வளர்த்து அதில் சவாரியாகி வந்து

உம்மைக் கொல்லாமல் விடேன்'' என சவால் விட்டுச் சென்றான். அதன்பின் நடந்த உஹதுப் போரில் மிக்க வெறி உணர்வோடு எதிரிப் படையுடன் வந்திருந்த அவன் நபிகளாரை நோக்கி 'பொய்யனே! புரட்டனே!! இன்று என் கொடுவாளுக்கு இரையாகாமல் நீ தப்ப முடியாது' எனக் கர்ஜித்துக் கொண்டு தனது குதிரையில் முன்னேறி வந்தான்; அடிபட்ட புலியெனச் சீறிப்பாய்ந்துவரும் உபை இப்னு கலபைக் கண்ட அண்ணல் நபியுல்லா அவர்கள் தமதருகே நின்ற தமது மெய்க்காப்பாளர் ஜுபைரிடமிருந்த ஒரு குத்தீட்டியைப் பிடுங்கி அவன்மீது வீசி எறிய, அது அவனது உடலில் ஒரு சிறிய சிறாய்ப்புக்காயத்தை மட்டுமே உண்டு பண்ணியது. ஆனால் மிக இலேசானா அந்தக் காயத்தால் அவன் பட்ட வேதனை சொல்லுந்தரமாக இல்லை. அலறினான்-அழுது புரண்டான் - தூண்டிலில் அகப்பட் மீன் போல துடித்துத் துவண்டான். அது கண்ட அவனது நண்பர்கள் 'சீ... கோழையே! இச் சிறு கீறலுக்கா இத்தனை அளவு அலட்டிக் கொள்கின்றாய்? என்று கேலி செய்தார்கள். அப்போழுது 'நான் படும் வேதனையில் ஒரு சிறு அளவு நீங்கள் அனுபவிக்க நேர்ந்தாலும் நீங்கள் அனைவருமே செத்து மடிந்து விடுவீர்கள், முஹம்மது என்மீது காறி உமிழ்ந்திருந்தால் கூட என்னால் தாங்க முடியாது போலுள்ளது. என்று கூறினான். அந்தப் போரில் முழுத்தோல்வியினைத் தழுவி அவர்கள் (எதிரிகள்) மக்கா திரும்புகையில் அந்த வேதனையின் பொருட்டால் இடைவழியிலேயே அந்த இப்னு கலப் செத்து மடிந்தான்.

இந்த ஒரே ஒரு நிகழ்ச்சியினைத் தவிர நபி (ஸல்) அவர்களால் வெட்டுண்டு வேறு எவரும் மாண்டுள்ளதாக வரலாறுகளில் காணவே இல்லை.

நூல் :ஸீரத்துல் ஹலபிய்யா

விருப்பு வெறுப்பின்றி சிந்திக்கும் திறன் படைத்தவர்களே ! இப்பொழுது சொல்லுங்கள். இஸ்லாம் வாளால் பரப்பப் பட்டதா ? இஸ்லாமியர்கள் இரத்தவெறி பிடித்து அலைந்துள்ளார்களா? திட்டமிட்டுத் திணிக்கப்பட்ட அடக்குமுறைகளை - யுத்தங்களைச் - சந்தித்தது தவறா? ஏன் மௌனம் சாதிக்கின்றீர்கள்? ஆமாம்; நீங்கள் மௌனம் சாதிக்கத்தான் செய்வீர்கள். ஏனென்றால் இஸ்லாமியத்தைப்பழித்துரைக்க நீங்கள் பயன்படுத்தி வரும் ஒரே ஆயுதம் 'இஸ்லாம் வாளால் பரப்பப் பட்டது' என்பது தானே? ஆகவே இன்னம் இதைவிட ஆயிரமாயிரம் புள்ளி விபரங்களை அள்ளிக் கொட்டினாலும் அந்தப் பல்லவியை நீங்கள் மறக்கவே மாட்டீர்கள் இதயத்தில் இரும்புத்திரை போடப் பட்டுள்ள உங்களுக்கு-செவிப் புலன்கள் இருந்தும் கேளாக் காதினர்களாக வாழும் உங்களுக்கு-கண்ணொளி இருந்தும் கருத்தொளியில்லாத உங்களுக்கு ஓங்கி ஓங்கி உரைத்தாலும் உண்மை புலப்படாதுதான். ஆனால் அடுத்து-சமீபத்தில்-ஒரு காலம் நிச்சயம் வரத்தான் போகின்றது. அப்போது பிரிக்கப்பட்ட தாயைத் தேடி ஓடி வரும் பிள்ளைகளைப் போல உலகம் இஸ்லாமியத்தின் பால் ஓடோடி வரத்தான் போகின்றது. அப்போது உங்களின் இந்த ஏகாதிபத்திய சால வித்தைகளால் எதுவுமே செய்திட முடியாமல் நீங்களும் உண்மையை ஒப்பத்தான் போகின்றீர்கள். நாங்கள் அதுவரை பொறுத்துக் கொள்கின்றோம்.

# வீரமுத்திரைகள்

ஆரம்ப கட்டங்களில் அடக்குமுறை எவ்வளவு வானளாவப் பறந்தாலும் அதன் முடிவு படுதோல்வியாகத் தான் இருக்கும். இதற்கு வரலாற்று நெடுகிலும் பற்பல தடயங்கள் காணப்படுகின்றன. ஆனால் அடக்குமுறைக்கு ஆளாகிக் கொண்டிருக்கும் அப்பாவிகள் அஹிம்சாவாதிகள் கிளர்ந்தெழுந்து விட்டார்களென்றால் 'சாது மிரண்டால் காடுகொள்ளாது, என்பதற்கொப்ப அந்தக் கிளர்ச்சியின் முடிவு இமாலய வெற்றியாகவே மலரும். இதற்கு அக்கால முஸ்லிம்கள் பெற்றுள்ள வீர முத்திரைகளே சரியான சான்றுகள்.

❑ ஆமாம், எதிரிகளால் முழு ஆர்பரிப்புடன் தொடுக்கப்பட்ட பத்ருப் போரில் பதினான்கு முஸ்லிம்கள்தான் வீர மரணமடைய நேரிட்டது. ஆனால் எதிரிகளில் 70 பேர் கொல்லப்பட்டனர். இதில் ஒரு சிறப்பு என்ன வென்றால் கொல்லப்பட்ட 70 பேர்களில் உத்பா, ஷைபா, அபூஜஹ்ல், அபுல் பக்தரீ, ஜம்அதுப்னுல் அஸ்வத், ஆஸிப்னு ஹிஷாம் முனப்பஹுப்னுல் ஹஜ்ஜாஜ் ஆகியவர்கள் எதிரிகளின் தலைவர்கள் - மூர்க்கமானவர்கள் - செல்வாக்கும், சொல்வாக்கும் ஒருங்கே அமையப் பெற்ற பெரிய தனக்காரர்கள் என்பது இங்கு கவனிக்கத் தக்கது.

❑ அன்றி நபிகளாரின் சிறிய தந்தையும் கீர்த்தி மிக்க தலக்கர்த்தருமான அப்பாஸ், (இவர் பிற் காலத்தில் இஸ்லாத்தைத் தழுவி விட்டார்) பெரிய தந்தை

அபூதாலிப் அவர்களின் மகனும் அலி (ரலி-அன்ஹு) அவர்களின் சகோதரருமான அக்கீல், நபிகளாரின் சொந்த மருமகன் அபுல்ஆஸ், பெரிய தந்தை அல்ஹாரிது என் பாரின் மகன் நெளபல் ஆகிய நால்வர் உட்பட எழுபத்து நான்கு எதிரிகள் முஸ்லிம்களால் சிறைப் பிடிக்கப் பட்டனர்.

□ 'சொர்க்கத்திற்குச் சொந்தக்காரர்' என நபிகளார் அவர்களால் நன்மாறாயம் கூறப்பட்ட பத்து உத்தமர் களில் ஒருவரான ஹஜ்ரத் அபூ உபைதத்தப்னுல் ஜர் ராஹ் (ரலி) என்ற நபித்தோழர் பத்ருப் போரில் அடக்கு முறையாளர்களின் அடிவருடியாக வாழ்ந்து கொண்டி ருந்த தமது தகப்பன் ஜர்ராஹை எதிர்த்துப் போராடி அவரை அந்த இடத்திலேயே கொன்று குவித்தார்.

□ நபிகளார் அமைத்துக் கொடுத்த நல்லாட்சியின் முதல் கலீபா (ஜனாதிபதி) வும் நபிகளாரின் வலக்கரமாகத் திகழ்ந்தவருமான ஹஜ்ரத் அபூபக்கர் (ரலி - அன்ஹு) அவர்கள் பத்ருப் போரில் எதிரிகளின் அணியிலிருந்த தனது மகன் அப்துர்ரஹ்மானைப் பொருதி ஓடோட விரட்டியடித்தார்.

□ அப்துல்லாஹிப்னு மஸ்ஊது ரலி (அன்ஹு) என்பார் நபித் தோழர்களில் நடு நாயகமாகத் திகழ்பவர். அவர் ஆரம்ப காலத்தில் ஒரு நாள் மக்காவில் கஃபா ஆலயத்தின் ஒரு மூலையில் அமர்ந்து திருமறையாகிய குர்ஆன் ஷரீபை இறைந்து ஓதிக்கொண்டிருந்தார். இதனைப் பார்த்த சண்டாளன் அபூஜஹில் அந்தப் புனிதரை

குர்ஆனை ஓதிய ஒரே குற்றத்தி (?) ற்காக அவரது கன்னத்தில் பலம்கொண்ட மட்டும் ஓங்கி அறைந்து விட்டான் அதனால் அன்னாரின் காதுகளிரண்டும் பிளந்து அன்றிருந்து அவரின் காதுகள் செவிடாகி விட்டது. இப்படி அபூஜஹிலால் கொடுமைப்படுத்தப் பட்ட அந்த அப்துல்லா ஹிப்னு மஸ்ஊது (ரலி - அன்ஹு) பத்ரு தினத்தன்று களத்தில் குற்றுயிராக முணங்கிக் கொண்டு கிடந்த அபூஜஹிலைக் கொன்று அவனது தலையைத் துண்டித்து அவனது காதின் ஒருபக்கமிருந்து மறு காதின் பக்கம் ஊடுறுவும் முறையில் ஓட்டையிட்டு அதில் ஒரு கயிற்றை நுழைத்து கட்டித் தூக்கிக்கொண்டு வந்து நபிகளாரிடம் காட்டி அதற்காக தனிப் பரிசைப் பெற்றுக்கொண்டார்.

☐ பத்ரை அடுத்து எதிரிகளால் திணிக்கப்பட்ட பெரும் போர் உஹத் யுத்தமாகும்.

☐ இந்த யுத்தத்தில் 'நஸீபா' என்ற உம்மு அம்மாறதுல் மாஜினிய்யா (ரலி - அன்ஹா) என்ற வீராங்கணை சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றார்.

இந்த வீராங்கணையைக் குறித்து நபிகளார் (ஸல்) அவர்கள்; உஹது சண்டையின் போது வலப்புறத்திலும் இடப்புறத்திலும், முன்புறத்திலும் பின்புறத்திலும் சுழன்று சுழன்று அவள் (நஸீபா) போரிடுவதை என்னால் கவனிக்காமல் இருக்க முடியவில்லை எனக் கூறினார்கள். இந்தப் போரில் அந்த மாது பனிரெண்டு வீரவடுக்களைப் பெற்றிருந்ததாக அறிவிக்கப்படுகின்றது.

❑ 'அன்றி; 'அத்பதிப்னு அபீ வகாஸ்' என்ற கொடியவனால் எறியப்பட்ட ஒரு கல் நபிகளார் (ஸல்) அவர்களின் முகிழ் எலும்பில் பதிந்ததோடு உச்சி மண்டையிலும் குமிழ்பதிந்தது. அதனால் அண்ணலின் முகத்தில் இரத்தம் தோய்ந்து நின்றது. அபூ உபைதா ஆமிரிப்னுல்ஜர்றாஹ் (ரலி - அன்ஹு) நபிகளாரின் எலும்பிலும் உச்சி மண்டையிலும் பதிந்து நின்ற வளையங்களை தனது முன் பற்களால் கடித்து எடுத்து எறிந்து விட்டார்.

❑ இப்னுகும்ஆ எனும் கொடியோன் நபிகளார் (ஸல்) அவர்களின் மீது பாய்த்து தாக்கியதால் நபிகளார் பள்ளத்தில் விழ்ந்து விட்டார்கள்.

❑ அன்றி; இச்சண்டையில் வீரமரண மெய்திய முஸ்லிம்களின் சடலங்களை - காதுகளையும், மூக்குகளையும், ஆண் குறிகளையும் - அறுத்தெறிந்து சின்னா பின்னஞ் செய்வதின் மூலம் எதிரிகள் தங்கள் ஆத்திர உணர்வுகளுக்கு உணவளித்துக் கொண்டனர்.

❑ அபூசுப்யானின் மனைவியும் அமீர் முஆவியா அவர்களின் தாயுமான ஹிந்தா என்பாள் அப்போது இஸ்லாத்தை ஏற்காது இருந்தாள். அதுமட்டுமல்ல! எதிரிப் படைகளுக்கு ஆக்ரோச மூட்டும் பணியிலும், முடுக்கி விடும் பணியிலும் மிக உற்சாகமாகக் கலந்து கொண்டவள் அவள்.

❑ சின்னா பின்னஞ் செய்யப்பட்ட முஸ்லிம்களின் காதுகளையும், மூக்குகளையும், ஆண் குறிகளையும்

மொத்தம் சேர்த்து மாலையாகத் தொடுத்து ஜுபைர் என்பாரின் அடிமை வஹ்ஷிக்கு அம் மாலையை அணி வித்து தன்னுடைய படைகளினூடே அவ்வடிமையை ஊர்வலமாக அழைத்து வந்து தன் படை வீரர்களுக்கு உற்சாகமூட்டினாளாம் அந்த ஹிந்தா. அது மட்டுமன்று நபிகளாரின் சிறிய தந்தை ஹம்ஜா (ரலி - அன்ஹு) அவர்களைக் கொள்வதற்கென்றே அந்த வஹ்ஷியைத் தயார் செய்து கொண்டுவந்து அந்தப் போர்க்களத்தில் ஹம்ஜா (ரலி - அன்ஹு) அவர்களைக் கொன்று குவித்த தோடு நில்லாமல் அவ் வீரப்பெரியவரின் காதுகளையும், மூக்கையும், ஆண் குறியையும் அறுத்தெறிந்தாள். அது மட்டுமல்ல அன்னாரின் நெஞ்சைப் பிளந்து ஈரக்குலை யைப் பிடுங்கி தனது வாயில் வைத்து நற நற எனக் கடித்துத் துப்பினாளாம் வெறி உணர்வு கொண்டிருந்த அந்தக் காதகி.

❒ இந்தப் போரில் ஸஃதிப்னு அபீவகாஸ் (ரலி-அன்ஹு) அவர்கள் ஒருவர் மட்டும் ஓராயிரம் அம்பு களை எய்தார்களாம். அவர் ஒவ்வொரு அம்பையும் எய்யும் போதெல்லாம் ''என் தாயும் தந்தையும் உமக்குத் தத்த மாகுக! அடுத்தும் எய்வீராக'' என நபிகளார் அந்தத் தோழரை உற்சாகமூட்டினார்கள். ஸஃதிப்னு அபீவகாஸ் (ரலி-அன்ஹு) அவர்களைத் தவிர்த்து வேறு எவருக்கும் நபிகளார் தமது தாய் தகப்பனை அர்ப்பணம் கூறவில்லை என அலி (ரலி-அன்ஹு) அவர்கள் அறைகின்றார்கள்.

இப்படி திணிக்கப்பட்ட போர்களில் எந்தப் போரிலும் எதிரிகளுக்கு வெற்றி கிட்டவில்லை என்பதோடு முஸ்லிம்கள் பெற்ற வீரமுத்திரைகள்-விழுப் புண்கள்-தியாகத் தழும்புகள்

ஏராளம் ஏராளம். அத்தகு வீரமுத்திரைகளில் இன்றைய உலகத்தை வாய்ப்பிளக்க வைத்திடும் தீரமுத்திரை மக்கா வெற்றியாகும்.

ஆமாம்; கி.பி. 630 ஜனவரி மாதம் - மக்காவைத் துறந்து மதீனாபுரிக்கு அகதிகளாகச் சென்றபின் எட்டு ஆண்டுகள் கழித்து - ரமழான் மாதத்தில் 'மக்கா வெற்றி ஏற்பட்டது.

'மக்கா வெற்றி' எனும் வரலாற்றுச் சிறப்பு மிக்க நிகழ்ச்சி நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் சீரிய தலைமையின் கீழ் ஏறக்குறைய பத்தாயிரத்திற்கும் மேற்பட்ட தியாக சீலர்கள் புனித மக்காவின் மீது படையெடுத்து அந்நகரைக் கைப்பற்றிய மகிழ்ச்சி தரும் சம்பவத்தைக் குறிக்கும் துணிகர நடவடிக்கையாகும்.

இதனை மேலோட்டமாகப் பார்த்தால் முஸ்லிம்களின் மீது கூறப்படும் 'இஸ்லாம் வாளால் பரப்பப்பட்டது' எனும் குற்றச்சாட்டு உண்மைதானே' என்று கூட எண்ணத் தோன்றும். ஆனால் அதனுள் ஒளிந்து கொண்டிருக்கும் வரலாற்று உண்மையை உள்ளே நுழைந்து பார்ப்பவர் எவரும் அங்ஙனம் கூறிடத் துணியமாட்டார்.

அதாவது;

கி.பி. 628-ம் ஆண்டு பிப்ரவரிமாதத்தில் முஸ்லிம்களுக்கும் மக்கத்துக் காபிர்களுக்குமிடையில் ஒரு உடன்படிக்கை ஏற்பட்டது. அதற்கே 'ஹுதைபிய்யா உடன்பாடு' எனப் பெயர் அந்த உடன்பாட்டில் உள்ள முக்கிய நிபந்தனைகளில் மக்காவிலும் அதன் சுற்றுவட்டாரங்களிலும் வாழும் முஸ்லிம்களை, அல்லது முஸலிம்களின் ஆதரவாளர்கள்-அபிமானிகள் ஆகியோரை மக்கா காஃபிர்

கள் எம்முறையிலும் அடர்ந்தேறக் கூடாது' என்பது ஒரு நிபந்தனையாம்.

ஆனால் மக்கத்து முரடர்கள் உடன்படிக்கையின் நிபந்தனைகளைப் படிப்படியாக மீறத் தலைப்பட்டனர். மக்கா நகரிலும், அதன் சுற்று வட்டாரங்களிலும் மிகச் சிறுபான்மையினராக வாழ்ந்த முஸ்லிம்களின் அபிமானிகளான 'குஜாஆ' கோத்திரத்து மக்களை மிக வஞ்சித்து அவர்கள் வாழ்ந்த 'வத்தீர்' எனும் கிராமத்தைக் கொள்ளையடித்ததோடு ஏறக்குறைய இருபதிற்கும் மேற்பட்ட குஜாஆ மக்களை கொன்று குவித்து விட்டனர்.

ஆகவே; மக்கத்து மக்களின் கொட்டத்தை அடியோடு ஒழித்துக் கட்ட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டதால் தான் நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் புனித மக்காவின் மீது படையெடுக்க நேரிட்டது.

கி. பி. 628, ரமளான்பிறை 10-ல் புனித மதீனாபுரியை விட்டுக் கிளம்பிய அப்புனிதப் படை வீரர்கள் ரமளான் மாதம் 24-ஆம் நாள் புனித மக்கா நகருக்குள் இரண்டு பகுதிகளாகப் பிரிந்து, ஒரு பகுதியினர் நபிகளார் (ஸல்) அவர்களின் தலைமையில் 'தனிய்யத்துல் உல்யா' வழியாகவும், இரண்டாம் பகுதியினர் காலித் பின் வலீத் (ரலி - அன்ஹு) அவர்களின் தலைமையில் 'தனிய்யத்துஸ் ஸுப்லா' வழியாகவும் நுழைகின்றனர்.

அப்போது நபிகளார் அனைத்து படைவீரர்களுக்கும் இட்ட கட்டளை இன்றும் சீர்தூக்கி சிந்தித்துணரத் தக்கவை. அவையாவன :

□ மக்கா நகரில் உள்ள எதிரிகள் தங்களின் வீட்டினுள் நுழைந்து கதவை தாளிட்டுக் கொண்டால் அவர்கள் அடைக்கலம் பெற்றவர்கள். ஆகவே அவர்களை எவரும் எதுவும் செய்து விடாதீர்கள்.

□ அபூசுப்யான் எதிரிகளின் தலைவராக இருந்தாலும் கண்ணியமிகுந்தவர். ஆகவே அவர் வீட்டில் எவர் எவர் அடைக்கலம் புகுந்தனரோ அவர்களையும் எதுவும் செய்ய வேண்டாம்.

□ அபூசுப்யானிப்னு ஹர்பு, ஹ க் மு ப் னு கி ஜா ம், புலைலுபின் வரகாவு, ஆகியோரின் வீடுகளில் அடைக்கலம் புகுந்திருப்பவர்களையும் எதுவும் செய்ய வேண்டாம்.

□ புனித கஃபாவினுள் அடைக்கலம் புகுந்தவர்களையும் நம்மிலுள்ள எவரும் எதுவும் செய்திடக்கூடாது. ஓடுபவர்களை வெருட்டக் கூடாது. முதியவர்கள் சிறுவர்கள் பெண்கள் இப்படிப்பட்டவர்களையும் எதுவும் செய்திடக் கூடாது. எவராவது எதிர்த்து உங்களைத் தாக்கினால் அதன் பின்பே நீங்கள் பதிலடி கொடுக்க வேண்டும்

இப்படிப்பட்ட கண்டிப்பான கட்டளையை தனது வீரர்களுக்கு தாக்கீது செய்து அதன்பின் இரு பிரிவினர்களாக மக்காவினுள் நுழைந்தார்கள்.

ஒரு காலத்தில் நபிகளாரையும், அவர் தம் நற்றவத் தோழர்களையும் ஓட, ஓட வெருட்டிய மக்கா இன்றைக்கு மூச்சுக்காட்ட வேண்டுமே.

ஆமாம்! எதிர்ப்பதற்கு நாதியின்றி, ஏனென்று கேட்க எவருமின்றி தக்பீர் முழக்கத்தோடு மக்கா நகருக்குள் நுழைந்தார்கள் நபிகளார் (ஸல்-அம்).

இது இஸ்லாத்திற்கு, இஸ்லாமிய சமுதாயத்திற்கு, அஹிம்சைக்கு, அறவழிக்குக் கிடைத்த ஈடு இணையற்ற வீரமுத்திரையன்றோ!

நபிமணியைப் பாடும் கவிமணி-கலைமாமணி-இமாம் பூசிரி (ரஹ்) அவர்கள் *'ஜிஹாத்'* எனும் இந்த எட்டாம் தலைப்பில்,

நபிகளார், தம்மீது திணிக்கப்பட்ட யுத்தங்களில் பெற்ற இந்த வீரமுத்திரைகளையே முத்தாரமாகத் தொடுக்கின்றார். கோழையையும் குதித்தெழத் தூண்டும் அந்தப் போர் பரணியை நாமும் படிப்போம் புதுத்துடிப்புப் பெறுவோம்.



رَاعَتْ قُلُوبَ الْعِدٰى أَنْبَاءُ بَعْثَتِهِ
كَنَبْأَةٍ أَجْفَلَتْ غُفْلًا مِنَ الْغَنَمِ ﴿١١٨﴾

**ராஅத்குலூபல்இதா அன்பாஉ**
**- பிஃதத்திஹி**
**கநப்அதின் அஜ்ஃபலத் ஙுஃபிலன்**
**மினல்ஃகனமி**

பித்து இல்லாமையால் தன்னை மறந்து சொரணையற்று நிற்கும் ஆடு, வனவிலங்குகளின் கர்ஜனை கேட்டு திடுக்கமுற்று செய்வதறியாது நிற்பதுபோல நபிகள் பெருமான் (ஸல்-அம்) அவர்களின் தூதொலி பகைவர்தம் இதயங்களை உலுக்கிக் குலுக்கியது.

இதனை

ஆடுபுலிகர்ச்சனையால் அதிர்ச்சியுரல் போல்நாதர்
ஈடில்லாத்தாலொலியால் இகலோர் நடுங்கினரே!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : பித்தில்லாத ஆடுகள் - மான், மறைகள்-மதி மயங்கி இருந்திடும் வேளைகளில் புலி, சிங்கம் கர்ச்சித்தால் அது கேட்டு அவை அதிர்ச்சியடைந்து நிலைகுலைவது போல, நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் ஏகத்துவப் பிரச்சாரம் கேட்டு மடைமையால் மதிமயங்கி நின்ற மக்கா வாசிகள் (காபிர்கள்) - அதிர்ச்சியடைந்து நிலை குலைத்தனர்.

வி-ரை : ஆடு, மான் மறை ஆகியவை ஓரே குணா திசயம் படைத்தவை. அவைகளுக்கு பித்து ரோசம்.சூடு சொரணை.வீரம்-காரம் என்பதெல்லாம் கிஞ்சிற்றுமில்லை. இப்படிப்பட்ட அப்பிராணிகள் காடுகளில் புல் மேய்ந்து கொண்டிருக்கும் வேளைகளில்; புலி சிங்கம் போன்ற வீர முள்ளமிருகங்கள் பசி கிளம்பியவுடன் கர்ச்ஜித்தால் அந்த கர்ஜசனை கேட்டு அதிர்ச்சியும் பீதியும் அடைந்த அந்த ஆடு, மான், மறைகள் நிலைகுலைந்து அங்குமிங்கும் ஓடிக் களைப்புற்று கடைசியில் எதற்காகப் பயந்ததோ அதே சிங்கம், புலி போன்ற மிருகங்களின் முன்னிலைக்கே சென்று விடுமாம் ஏற்கனவே ஓடிக்களைத்ததாலும், தன்னை ஆவலுடன் எதிர்நோக்கியுள்ள புலியினைப் பார்த்ததாலும் மேலும் பீதியடைந்து செய்வதறியாது விழுந்துகொள்ளுமாம் அந்தப் பாவப்பட்ட பிராணிகள். இது போல், அண்ணல் நபியுல்லா அவர்களின் தூதொலி எனும் ஓரிறைப் பிரச்சாரத்தைச் செவியுற்ற மக்காவாசிகள் அதிர்ச்சி யடைந்து 'இவர் இப்புதிய பிரச்சாரத்தால் தம்மை அடக்கி ஆளத் திட்டம் தீட்டுகின்றார்' எனப் பயந்து வில்லையும் வேலையும் எடுத்து அந்த அண்ணலின் முன் பாயத் தொடங்கி அதனால் அவர்கள் அழிந்து விட்டனர் - பாவம் அவர்கள்.

புலவர் பூசிரி அவர்கள் இக்கண்ணியில், புலி சிங்கத்தின் கர்ஜனையை நபிகளாரின் எதற்கும் அஞ்சாத பிரச்சாரத்திற்கும்; ஆடு, மான் மறையை மக்கத்து காபிர் களின் பித்துக் கெட்ட மடமைக்கும் உவமை கூறி உண்மையை விளக்குகின்றார்.

مَا زَالَ يَلْقَاهُمُ فِي كُلِّ مُعْتَرَكٍ
حَتَّى حَكَوْا بِالْقَنَا لَحْمًا عَلَى وَضَمِ (١١٩)

**மாஜாலயல்காஹும் ஃபீகுல்லி**
**- முஃதரிகின்**
**ஹத்தாஹகவ்பில்கனா லஹ்மன்**
**- அலா வளமி**

போர்முனைகள் தோறும் அப்பகைவர்களை பெருமானார் பொருதியே வந்தமையால் குத்தீட்டி கொண்டு குத்தப்பட்ட அப்பகைக் கூட்டம் மரக் கட்டையில் வைத்து கண்ட துண்டமாக வெட்டப் பட்ட கைமாவுக்கு ஒப்பாயினர்.

*இதனை -*

*படுகளங்கள்தோறும்நபி பகைவர்எதிர் -*
*- தோன்றி வந்தார்*
*கடைசியில்அப்பகைவர் கண்டதுண்டம் ஆயினரே*
*என மறைக்காயர் பாடுகின்றார்.*

**க-ரை : எதிரிகளால் திணிக்கப்பட்ட அனைத்துப் போர்களிலும் அண்ணல் நபியுல்லா நேர்முக மாகக் கலந்து கொண்டார்கள் [அதனால்] அண்ணலைப் பார்த்தவுடன் அவ்வெதிரிகள் செய்வதறியாது தவித்து மதிமயங்கி நின்றதால் இஸ்லாமிய வீரர்கள் அவர்களை கண்டதுண்டம் செய்தனர்.**

வி-றை நபிகளார் [ஸல்] அவர்கள் அநேகமாக தொடுக்கப்பட்ட அனைத்து யுத்தங்களிலுமே பங்கு பெற்று வந்துள்ளார்கள். ஆகவே; 'விட்டேனா பார்' என வீரமுழக்கமிட்டு, தோள்தட்டி, தொடை தட்டி வெளியேறிய எதிரிப் படைகள், படைக்களத்தில் நபிகளாரை கண்ட உடன் - சிங்கத்தின் கர்ஜனைகேட்டு அங்குமிங்கும் ஓடும் மான் மறை கடைசியில் அந்த சிங்கத்தின் குகை வாசலிற்கே வந்து விட்டதால் செய்வதறியாது தவித்து துவண்டு அந்த சிங்கத்திற்கு இறையாகி விடுவதைப் போல் அதிர்ச்சியின் உச்ச கட்டத்தை அடைந்து செய்வதறியாது சோர்ந்து விடுவார். அதனால் இஸ்லாமிய வீரர்கள் (சஹாபாக்கள்) அவ்வெதிரிகளை தம் இஷ்டம் போல கண்டதுண்டம் செய்வர்.

சுப்ஹானல்லாஹ்! நபிகளாரின் தோற்றம் எதிரிகளை எப்படி துவளச் செய்தது என்பதனை எவ்வளவு அழகாக - ஆழமாக படம் பிடித்துக் காட்டுகின்றார் பார்த்தீர்களா?



وَدُّاالْفِرَارَ فَكَادُوْا يُغْبَطُوْنَ بِهٖ
أَشْلَاءَ شَالَتْ مَعَ الْعِقْبَانِ وَالرَّخَمِ ﴿١٢٠﴾

**வத்துல்ஃபிராரஃபகா துயஃமரித்**
**- தூன பிஹி**
**அஷ்லா அஷாலத்மஅல் இக்பானி**
**- வர்ரஹமி**

புறமுதுகு காட்டி ஓடத் தலைப்பட்ட அப்பகைவர் காக்கை கழுகுகளினால் (ராஞ்சப் பட்டு) உயர்த்தப்படும் தசைத் துண்டங்கள் போல ஆகிவிடக் கோருவர்.

இதனை —

ஓடவிரும்பும்பகைவர் உயர்கழுகு காக்கையின்வாய்க்
கூடும்தசைத்துண்டாகக் கோருவர்தம்
வெந்துயரால்

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : முஸ்லிம் வீரர்களின் கடுமையான தாக்குதலைத் தாக்குப்பிடித்து நிற்க முடியாத எதிரிகள் ‘காகம் கழுகுக்கு இரையாகி அழிதல் நலம்’ எனக் கருதும் அளவிற்கு பீதி மேலிட்டனர்.

வி-ரை : இந்த எட்டாம் தலைப்பில் ஏற்கனவே நீங்கள் கண்ட ‘உபையுப்னு கலப்’ என்ற எதிரி-பத்ருப்

போரில் முஸ்லிம்களால் சிறை பிடிக்கப்பட்டு அதன்பின் விடுதலையாகித் திரும்பும் போது; 'என்னிடமுள்ள ஆற்றல்மிகு குதிரையை இன்னும் நல்ல முறையில் தயார் படுத்தி அதன் மீதமர்ந்து வந்து உங்கள் முஹம்மதுவைக் கொன்று தீர்ப்பேன் நான்' எனச் சவால் விட்டுச் சென்றவன் - உஹுத் போர்க்களத்தில் உத்தமத் திரு நபி (ஸல்) அவர்களைக் குறி வைத்து முன்னேறிய போது நபிகள் நாதரால் குத்தீட்டிகொண்டு எறியப்பட்டு அதனால் சிறு சிறாய்ப்புக் காயத்திற்கு உள்ளாகியபோது அவன் என்ன பாடுபட்டான்? அவனது சஹாக்கள் 'சீ இதற்கா நீ இப்படி அலட்டிக் கொள்கின்றாய்' என்றபோது, 'முஹம்மது காரி உமிழ்ந்திருந்தால் கூட அதனையும் என்னால் தாங்கிக் கொள்ள இயலாது போலும்...' என அந்த உபை கூறிடவில்லையா? இப்படியே தான் ஒவ்வொரு எதிரியும் எண்ணத் தலைப்பட்டனர். அதனைத்தான் பூசிரி (ரஹ்) அவர்கள் இங்கே - 'உயர, உயரப் பறக்கும் காக்கை கழுகுகளுக்கு இரையாகித் தொலைந்திருந்தால் கூட நலமே' என அவர்கள் கருதியதாகச் சித்தரிக்கின்றார். இது மட்டுமா? எதிரிகளின் மனநிலை இன்னும் எப்படி எப்படியெல்லாம் பீதி உணர்வால் தத்தளித்தது என்பதனை அடுத்துக் கூறுகின்றார் பாருங்களேன்.

تَمْضِي اللَّيَالِي وَلَا يَدْرُونَ عِدَّتَهَا
مَالَمْ تَكُنْ مِنْ لَيَالِي الْأَشْهُرِ الْحُرُمِ ﴿١٢١﴾

**தம்ளில்லயாலிவலா யத்ருன-**
**- இத்தத்ஹா**
**மாலம்தகுன்(ம்)மின்(ல்)லயா**
**- லில்அஷ்ஹு ரில்ஹுருமி**

இரவுகள் சென்று கொண்டேதான் இருக்கும் ஆனாலும் சங்கைமிகு ரஜப், துல்கஅதா, துல்ஹஜ்ஜு முஹர்ரம் ஆகிய மாதங்களின் இரவுகள் தோன்றா தவரை அவ்விரவுகளின் எண்ணங்களை அவர் அறியார்.

இதனை

'சங்கை மிகும் மாசம், எனும் தமர்ஓய்வுக் காலம்வரை
கங்குல்கழியும்; அவற்றின்கணக்கைஅறி-
-யார்அவரே !

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : போர் ஓய்வுக் காலங்களாக கடைப் பிடிக்கப் பட்ட மாதங்கள் வரும் வரை அந்த மக்கத்து எதிரிகள் ஒரு நாளும் நிம்மதியாகத் தூங்கினாரில்லை-நாட்களின் கணக் கையும் அறிந்தனரில்லல. பாவம் அவர்கள் !

வி-ரை : நபிகளாருக்கு முன்புபே - அறியாமைக் காலத்திலேயே அந்த அரபிகள் (1) ரஜப்,

(2) துல்கஃதா (அம்மா பிறை) (3) துல்ஹஜ் (ஹஜ்ஜுப் பிறை) 4) முஹர்ரம் (பத்து நோன்புப் பிறை) ஆகிய நான்கு மாதங்களையும் போர் ஓய்வு காலங்களாகக் கடைப்பிடித்து வந்தனர். ஒன்றுக்குமில்லா சிறு, சிறு பிரச்சனைகளுக் கெல்லாம் பரம்பரை பரம்பரையாகப் போரிட்டு மடிந்து கொண்டிருந்த அவர்கள், அந்தப் போர் ஓய்வுக்காலங்களில் மட்டும் போர்ச் சாதனங்களை மூட்டைகட்டி வைத்து விட்டு அமைதியாக கிடப்பர் இது அறியாமைக் காலத்துப் பழக்கமாக இருந்திட்டாலும் மக்களின் மனநிலையை மாற்று வதற்கு-போர் வெறியைக் குறைப்பதற்கு-உதவும்படியான நல்ல பழக்கமாகப் பட்டதால் நபிகளார் (ஸல்) அவர்களும் அந்தப் பழக்கத்தைக் கடைப் பிடித்து வந்தார்கள்; இறுதி வரை ஆகவே; முஸ்லீம்களின் கர்ண கடூரமான தாக்குல் களால் நடுங்கிப் போயிருந்த மக்கத்து மாக்கள் அந்தப் போர் ஓய்வு மாதங்கள் வரும் வரை-நாட்களின் கணக்கைக் கூட அறியாதவர்களாக-இரவுகளில் நிம்மதியான தூக்கம் அற்றவர்களாக-நேரா நேரம் நிம்மதியாக உணவு உட் கொள்ள முடியாதவர்களாக-வாழ்ந்து வந்தனராம்.

சுப்ஹானல்லாஹ்! மக்கத்து மாக்களின் பீதி உணர்வை எவ்வளவு ஆழமாக விளக்குகின்றார் பார்த்தீர்களா? பூசிரி யல்லாத வேறு எவருக்கும் இவ்வளவு ஆழமாக விளக்கி காட்டும் ஆற்றல் வருமா ?

كَأَنَّمَا الدِّيْنُ ضَيْفٌ حَلَّ سَاحَتَهُمْ
بِكُلِّ قَرْمٍ إِلَى لَحْمِ الْعِدَى قَرِمِ ﴿٢٢﴾

**கஅன்னமத் தீனுளைபுன்**
**- ஹல்லஸாஹ தஹும் பி**
**குல்லிகர்மின் இலாலஹ்மில்**
**- இதாகரிமி**

பகைவர் தம் தசைகளைக் கிழித்தெறிய பேராவம் கொண்டு நிற்கும் ஒவ்வொரு இஸ்லாமிய வீரருடனும் (இஸ்லாமியமும்) விருந்தாளி போல (இணைந்து) அப் பகைவர்தம் முற்றவெளியில் இறக்குமதியானது.

இதனை,

எதிரிதசைபீறவிழை இகல்வீரரோடிசுலாம்
முதிர்விருந்து போல், பகைவர் முன்றலிடம்
சேர்ந்ததுவே !

என மறைக்காயர் பாடுகின்றார்-

க-ரை : எதிரிகளின் தசைகளை கிழித்தெறியும் வன்மை கொண்ட வீர நெஞ்சினர்களின் கண்ணியம் பொருந்திய உயர் இஸ்லாம் விருந்தாளியைப் போன்று பகைவர்களது விட்டு முற்றங்களில் இறங்கி நின்றது.

வி-ரை : 'ஒரு நாட்டுப் படை வீரன் எதிரி நாட்டுப் படைவீரனின்பால் எந்த அளவு கடுமை கொண்டிருக்க

வேண்டும் என்பதற்கு இங்கே இலக்கணம் வகுத்துக் காட்டுகின்றார். அணல் கவி பூசிரி. அதாவது :

எதிரிப் படைவீரனைச் சந்திக்கும் போது பாசம், பரிவு, மொழி, இன, கோத்திர உணர்வுகளுக்கு உண்மை வீரனின் உள்ளம் ஒருக்காலமும் ஆட்படக் கூடாது. அங்ஙனம் இருந்தாதான் அவ்வீரன் போர் முனையில் தீரத்துடன் போராட முடியும். ஆகவே அன்பையும், அஹிம்சையையும், அறத்தையும் தனதாகக் கொண்டிலங்கும் உயர் இஸ்லாம் போர்க்களத்தில் புகும் போர் வீரனுக்கு 'பகைப்படையினரிடத்து கடுமை காட்டிட வேண்டும்' என்ற போர் நியதியையும் போதிக்கத் தவறியதில்லை.

இதனைத்தான்;

எதிரிகளின் தசைகளைக் கிழித்தெறியும் வீர நெஞ்சினர்களின் கண்ணியம் பொருந்திய உயர் இஸ்லாம் என்றுரைத்தார் அவர்.

'பகைப் படைகளிடம் கடுமை காட்டிட வேண்டும், என களம் புகும் போர் வீரனுக்கு இஸ்லாம் போதித்தாலும் முஸ்லீம் படைகளிடம் பொருதும் பகைவர்களை அம்மார்க்கம் என்றைக்குமே பகைத்துக் கொண்டதும் கிடையாது. அப்பகைவர்களின் வீடுதேடிச் சென்று 'அன்பனே! நண்பனே! உன்னை ஈடேற்றும் நன்மார்க்கம் நானே! உன் அறியாமைத் திரையை அகற்றி உண்மை ஒளியை ஏற்றிட்டுப்பார். என்பால் வந்துவிடு' என அம்மார்க்கம் பகைவர்களையும் அழைத்துக் கொண்டேதான் இருந்தது; என்பதனையே 'விருந்தாளியைப் போன்று பகைவர்களது

வீட்டு முற்றங்களில் இறங்கி நின்றது' எனக் கோடிட்டுக் காட்டுகின்றார்.

சுப்ஹானல்லாஹ் ! இஸ்லாத்தின் முதிர்ச்சியை என்ன அழகாகப் படம் பிடித்துக் காண்பிக்கின்றார் மனுசன் மர்ஹபா...மர்ஹபா...

يَجُرُّ بَحْرَ خَمِيسٍ فَوْقَ سَابِحَةٍ
يَرْمِي بِمَوْجٍ مِنَ الأَبْطَالِ مُلْتَطِمِ ⑬

**யஜுர்ருபஹ்ரகமீ ஸின் :பவ்க**
**- ஸாபிஹத்தின்**
**யர்மீபிமஜ்வ் (ம்) மினல்**
**- அப்தாலி முல்தத்திமி**

விரைவாக நீந்தும் குதிரைகளின் மீது அடுத்தடுத்து மோதிடும் பேரலைகள் போல (உள்ள) ஐந்தணிப் படைகள்எனும் கடலை இஸ்லாமியம் போருக்கு இழுத்தது.

இதனை

விரைவாகநீந்துபரிமேல்தொடர்ந்து மோதும், அலை பொரு வைந் தணிக் கடலைப் போர்க் இஸ்லாம் சர்த்துவே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : அலைகடலில் நீந்திச் செல்லும் குதிரை மேல் அலைகள் அடுத்தடுத்து மோதுவது போல ஐந்தணிப் படைகளாகிய பகைவர்களை அம்மார்க்கம் இழுத்துக் கொண்டு சென்று தோல்விப் படுகுழியில் தள்ளியது.

வி-ரை : படைவீரர்களை ஐந்தாகப் பகுத்து, அவ்வைந்து பிரிவும் முறையே முன்னணி, நடுவணி, வலது சாரி, இடதுசாரி, பின்னணி என ஐம்பெயர்களால் அழைக்கப்படுவர். அன்றி அனைத்து வாய்ப்பு வசதிகளும் பெற்றுள்ள பெரும், பெரும் நாடுகளில் ரத, கஜ, துரக பதாதி என நான்கு வகைப்படைகள் இருப்பதுண்டு. அந்நான்கில் ஒவ்வொன்றிலும் மீக் கூறப்பட்ட ஐந்தணிகள் இருந்திடும்.

இந்த முற்காலத்துப் போர் முறைகளை நினைவு கூர்ந்து; அந்த அத்துணை படை வசதிகளும் மக்கத்து காஃபிர்கள் பெற்றிருந்ததாக எண்பித்துக் காட்டி; இப்படி வகை வகையாக தொகை, தொகையாக படை வசதிகள் பெற்றிருந்த எதிரிகளை படை கலத்தில், தொடை பலத்தில், தோல் பலத்தில், வாள் பலத்தில், பண பலத்தில் என அனைத்துப் பலங்களிலும் குறைந்து இருந்த இஸ்லாமியர்கள் தோற்கடித்து வியத்தகு முறையில் வெற்றி வாகை சூடினர் - என - இயம்புகின்றார். சுயகவி பூசிரி,

இதனையே; இஸ்லாமியத்தை அலைகடலில் நீந்திச் செல்லும் குதிரையாகவும் எதிரிகளின் படைபலத்தையும் அடுத்தடுத்து எதிர்ப்படும் அலைகளாகவும் உவமை கூறிக் காண்பிக்கின்றார் அவர்.

مِنْ كُلِّ مُنْتَدِبٍ لِلّٰهِ مُحْتَسِبٍ
يَسْطُو بِمُسْتَأْصِلٍ لِلْكُفْرِ مُصْطَلِمِ ﴿١٢٤﴾

**மின் குல்லிமுன் ததிபின் லில்லாஹி**
**- முஹ்தஸிபின்**
**யஸ்த்தூ பிமுஸ்தஃஸிலி(ன்)**
**- லில்குஃப்ரி முஸ்தலிமி**

(ஏன் தெரியுமா? முஸ்லிம் வீரர்கள்) அல்லாஹ்வின் அழைப்பிற்கு (முழுமையாகத்) தலைசாய்ப்பவர்கள்! நற்கூலி (ஒன்றை மட்டும்) யை நல்லாதரவு வைக்கும் இயல்பு கொண்டவர்கள்! ''குப்ரை'' வேரறுக்க ஆயுதம் ஏந்துபவர்கள்.

*இதனை -*

*அல்லாஹ்வை நம்பி அவன் அழைப்புக்கடி*
*- பணிந்தோர்,*
*பொல்லாக்குபிர்களையும் போர்க்கலத்தால்*
*- தாக்கினரே*

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : வெற்றி, தோல்வி, லாபம், நஷ்டம் நோய் பற்றுதல் - நோய் தீங்குதல் போன்ற அனைத்து அசைவுகளும், இயக்கங்களும்; அல்லாஹ்வின் வல்லபத்தால்தான் நடந்தேறுகின்றது' என தவக்குதல் (இறுதி நம்பிக்கை) கொண்டு, நேரான பாதையின்காண், வாழும்கண்' என்ற

அவனது அழைப்பிற்கு முழுக்க முழுக்க அடிபணிந்து வாழ்ந்து, ஆன்மீக ஆற்றலை வளர்த்துக் கொண்ட உத்தம சஹாபாக்கள் கேடுகளில் மிக உயர்ந்த கேடான குஃப்ரை வாள், வேல், அம்பு, ஈட்டி, போன்ற புற ஆயுதங்களால் தாக்கித் தகர்த்தனர்.

வி-ரை : ஐந்தணிப் படைகள் கொண்ட மக்கத்துக் காஃபிர்களை அனைத்துத் துறைகளிலும் பின் தள்ளப் பட்டிருந்த முஸ்லீம் வீரர்கள் வெற்றி கொண்டார்கள் என்றீரே அது எப்படி ஐயா சாலும்? அள்ளி முடிந்த வன் என்றா எம்மை நினைத்துக் கொண்டீர்? சொன்னா லும் பொருந்தச் சொல்லல் வேண்டாமா?' என எவரோ கேட்டு விட்டனர் போலும்.

ஆகவே அதற்கு விளக்கம் தரும் முறையில் இந்த 124 - ம் கண்ணியை வடித்துக் கொடுக்கின்றார் பூசிரி.

இஸ்லாமிய வீரர்கள் அனைத்திலும் குறைந்தவர் கள்தான். ஆனாலும் அந்த அஞ்சா நெஞ்சர்களிடம் எல்லாவற்றுக்கும் மேலான இறை நம்பிக்கை குடி கொண்டிருந்தது. அது அர்த்தமற்ற வெறும் நம்பிக்கை யன்று. அவனது அழைப்பு எனும் ஏவல் விலக்கல் களுக்கு தங்களை முழுக்க முழுக்க அர்ப்பணிக்கும் அர்த்த முள்ள நம்பிக்கை.

'எவர் இறைவனை (முழுமையாக) நம்பி அவனிடம் பொறுப்புக்களை ஒப்படைத்து விடுகின்றார்களோ அவர் களுக்கு அவனே போதுமானவன்' என இறைமறை சாற்றுகின்றது.

ஆகவே வெற்றியைக் கொடுபபவனும் தோல்வியைக் கொடுப்பவனுமான அந்த பரம்பொருளிடம் அந்த முஸ்லீம்கள் தங்களின் வாழ்க்கையை முழுமையாக ஒப்படைத்து விட்டிருந்ததாலேயே வியப்பைத்தரும். அந்த வெற்றிக் கனிகள் அவர்களுக்கு மிக எளிதாகக் கிட்டியது என்ற பதிலை - விளக்கத்தை - இந்த 124 - ம் கண்ணியில் முதலீற்றில்.

''அல்லாஹ்வை நம்பி அவன் அழைப்புக்கடிபணிந்தோர்'' எனக் கூறிக்காட்டினார்.

''மக்கத்துக் காஃபிர்களும் அல்லாஹ்வின் அடியார்கள் தாமே 'இவ்வுலகில் நல்லோர் பொல்லோர் அனைவருக்கும் ஒன்றுபோல அருள் பாலிப்பவன்' எனச் சிறப்பிக்கப் படும் அந்த அல்லாஹ், முஸ்லீம்களுக்கு மட்டும் வெற்றியைச் சொந்தமாக்கிவிட்டு மக்கத்து காஃபிர்களை தோல்வியிலேயே துவள வைத்தான் என்றால் அது எப்படி ஐயா பொருந்தும்'' என அந்த வம்பன் இமாம் பூசிரியிடம் மறு கேள்வி கேட்டு விட்டான் போலும்.

ஆகவே;

'மக்கத்துக் காஃபிர்கள் மனிதர்களாக-இருந்திருந்தால் அவர்களுக்கு வல்ல அல்லாஹ் தோல்வியை அடுத்தடுத்துக் கொடுத்திருக்க மாட்டான்தான். ஆனால் அவர்களிடம் மனிதத் தன்மை அற்று 'குஃப்ரு' எனும் பெரும் கேடு அல்லவா அவர்களை மூடியிருந்தது. அதாவது; நடமாடும் குஃப்ருகளாக அவர்கள் வாழ்ந்தார்களே, ஆகவே முஸ்லீம்களைக் கொண்டு மக்கத்தில் நடமாடிக்

கொண்டிருந்த குஃப்ருகளை-பசுத்தோல் போர்த்திய குஃப்ருகளைத்தான் அந்த நாயகன் தோற்கடித்தான். ஆகவே அல்லாஹ்வின் இந்தச் செயல் அவனுக்குரிய 'ரஹ்மான்' (இம்மையில் நல்லோர் பொல்லோர் அனைவருக்கும் ஒன்று போல் கிருபை செய்பவன்) என்ற சிறப்பிற்கு எவ்வகையிலும் முரண்படாது' என்பதை 'பொல்லாக் காபிர்களையும் போர்க் கலத்தால் தாக்கினரே' என இரண்டாம் ஈற்றில் கூறிக் காண்பிக்கின்றார்.

பூசிரி (ரஹ்) அவர்களிடம் கேள்வி கேட்டு அவரை எவரால் தான் மடக்க-முடக்க-முடியும்?

---

حَتَّى غَدَتْ مِلَّةُ الْإِسْلَامِ وَهْيَ بِهِمْ
مِنْ بَعْدِ غُرْبَتِهَا مَوْصُولَةَ الرَّحِمِ ﴿١٢٥﴾

**ஹத்தா ஙதத் மில்லத்துல்**
**இஸ்லாமி வஹிய பிஹிம்**
**மின் பஃதி ஙுர்பத்திஹா மவ்ஸூலத்தர்**
**ரஹிமி**

ஆதலால் உற்ற துணை ஏதும் இல்லாதிருந்த இஸ்லாமியம் அவர் (சஹாபாக்கள்) தம் தியாகத்தால் (சுற்றம் சூழம் பெருகியது போன்ற) வலிமை பெற்று ஓங்கியது காண்.

இதனை

உற்றதுணை அற்றிருந்த உண்மை
இசுலாம்மார்க்கம்
சுற்றத்துணைபோல் இவர்தம்துணை
வலிபெற்றோங்கியதே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : தகுந்த துணையற்றிருந்த உண்மை எனும் இஸ்லாமியம் நபித்தோழர்களான. சஹாபாக்களின் உறவு கிடைக்கப் பெற்றதால் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக ஓங்கி உயர்ந்து-வளர்ந்தது.

வி-ரை : ஈசாரூஹுல்லா (அலை) அவர்களுக்கும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்குமிடையில் உள்ள இடைவெளிக் காலம் சுமார் 550 ஆண்டுகளாகும். இந்த 550 ஆண்டுகளும் தீர்க்கதரிசிகளின் தொடர்பு நபிமார்களின் வருகை அற்றிருந்த காலம், ஆகவே இக்காலங்களுக்கு வரலாற்றில் பித்ரத்துடைய காலம் என்பர். இதனையே இங்கு ''தகுந்த துணையற்றிருந்த...'' என புலவர் பெருமான் கோடிட்டுக் காட்டுகின்றார்.

'உண்மை' என்றால் என்ன? இதற்கு எவராவது பொருள் கூறிட முடியுமா?

''ஆமாம் எனக்கு முடியும்' என்ற தோரணையில் உண்மை என்பதற்கும் பொருள் கூறிக் காண்பிக்கின்றார் அவர்; அதாவது;

'அல்லாஹ்' என்பது உண்மை, அவன் ஒருவன், உருவமோ, உவமையோ, உறுதுணையோ, அற்றவன் அவன் என்பது உண்மை. 'மறுமை' என்பது உண்மை இவ்விரண்டையும் உறுதிப்படுத்தி மக்களுக்கு உணர்த்திக் கொண்டு இருக்கும் 'இசுலாம் மார்க்கம்' என்பதும் உண்மை என்பதை விளக்கும் பொருட்டே ''உண்மை எனும் இசுலாம் மார்க்கம்'' என்றுரைக்கின்றார்.

தாய் தகப்பனற்றிருக்கும் அனாதையை தனதாக்கிக் கொண்டு, அதை சீராட்டிப் பாராட்டிப் படிக்க வைத்து, நானிலத்தில் நானுமொரு மனிதன் என அவ்வனாதையைத் தலை நிமிர்ந்து நடக்கச் செய்கின்றார் கொடையுள்ளம் கொண்டதொரு சீமான்! என்றால், அந்த அனாதைக்கு உற்ற துணை உறவு எல்லாம் அந்தச் சீமான் தானே! அந்த அனாதை ஒரு பட்டதாரியாக-ஒழுக்க சீலமுள்ளவனாக உயர்வதற்கு வலிமை கொடுத்தது அந்தச் சீமான் தானே! அது போல ஈசா ரூஹுல்லா அவர்களுக்குப் பின் 'எனது மார்க்கம்' என்று அரவணைத்துக் கொள்வதற்கு எந்த நாதியுமற்று அனாதையாக இருந்த இஸ்லாமியத்தை 'எங்களது மார்க்கம்' என ஏற்றுக் கொண்டு அதற்காக உயிர், பொருள் ஆவி அனைத்தையும் தத்தம் செய்து அதற்கு வலிமை கொடுத்தார்கள். நபித் தோழர்களான சஹாபாக்கள் அவர்கள் வலிமை கொடுத்தால்தான் இன்று 'பாலைகளில்-பனிபடர்ந்த காடுகளில்' என அங்கிங்கெனாதபடி எங்கும் புகழ்' ஓங்கி வளர்ந்திருக்கின்றது அது. அல்லவா? இதனைத்தான்; நபித்தோழர்களான

சஹாபாக்களின் உறவு கிடைக்கப் பெற்றதால் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக ஓங்கி வளர்ந்தது' எனச் சுட்டுகின்றார்.

---

مَكْفُولَةً أَبَدًا مِنْهُمْ بِخَيْرِ أَبٍ
وَخَيْرِ بَعْلٍ فَلَمْ تَيْتَمْ وَلَمْ تَئِمِ ٤٣

**மக்பூலதுன் அபதம் (ஸ்) மின்ஹும்**
**பிகைரி அபின்**
**வகைரி ப:லின் ஃபலம் தைதம் வலம்**
**தயிமி**

பெருமைமிகு தகப்பன், பொறுப்புமிகு கணவன் ஆகிய பொறுப்பாளர்களால் (இஸ்லாமியம்) காப்புப் பெறும். ஆதலால் (இனி) அம்மார்க்கம் அனாதையோ, கைம்பெண்ணோ அல்ல.

---

இதனை

தாதைபதி பிணைக்காவல்பூண்டது;
கேடுறும் அனாதையன்று; கீழ்மைக்கைம்
பெண்ணும்அன்றே'

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: இஸ்லாமியம் தகப்பனற்ற அனாதையோ, கணவனற்ற கைம்பெண்ணோ மாதிரி கேட்பாரற்ற மார்க்க

மன்றி, பெருமையும் பேராண்மையுமிக்க தகப்பனாகவும், வேலி போன்ற காவலராக-கணவராகவும் அதற்கு முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்கள இருந்து வருகின்றார்கள்.

வி-ரை: இதற்கு முன்னுள்ள கண்ணியில் இஸ்லாமியத்தை உற்ற துணையற்றிருந்தது, எனக்கூறிய புலவர் பெருமான் இன்றைய இஸ்லாமியத்தின் எழிலை வலிமையை - எண்பித்துக் காட்டுகின்றார் இங்கே.

ஆமாம் அனாதையை ஆதரிக்க ஆளின்றேல் கேடுக்கு மேல் கேடு அவ்வனாதையைப் பற்றி எவ்வித முன்னேற்றமும் இல்லாது போய்விடும். அதுபோல் கைம்பெண்ணை குடும்பத்தில் ஏற்படும் கேடுகளுக்கெல்லாம் காரணமாக ஆக்கியும், மங்கள காரியங்களில் பின் தள்ளியும் சமுதாயம் அவளைக் கீழ்மைப் படுத்தி அணுஅணுவாகச் சித்திரைவதைப் படச் செய்து கடைசியில் (சில சமயம்) அவச் சாவிற்குக் கூட அவளை ஆளாக்கிவிடும். அல்லவா? அதுபோல அனாதைச் சமுதாயமாக விதவைச் சமுதாயமாக ஆக்கப்பட்டு அதனால் ஈனமாக மறைந்து பட்ட எத்தனை எத்தனையோ சமுதாயங்களை மார்க்கங்களை-வரலாற்றில்-கண்டுள்ளோம் நாம்.

அன்றி; தகப்பன் போல, கணவன் போல ஆதரிக்கப் பட்ட எத்தனையோ சமுதாயங்கள் ஆதரித்தவர்கள் பெருமையும், பேராண்மையும் இல்லாதவர்களாக இருந்தமையால் கேடுகளின் உறைவிடமாகப் போய்விட்ட சமுதாயங்களாக அவை இருப்பதை இன்றைக்கும் கண்டு வருகின்றோம்.

ஆனால்; உயர் இஸ்லாமியத்திற்கு பெருமையும், பேராண்மையுமிக்க எம்பிரான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களும் உத்தம சஹாபாக்களும் தகப்பன்களாகவும் கணவனாகவும் பொறுப்பேற்றுக் கொண்டுள்ளதால் ஈனமான

முடிவோ, அல்லது கேடுகள் உருவாகிவிடும் சாக்கடையாகவோ அம்மார்க்கம் ஆகிவிடாமல் தூய்மையுடன் பாதுகாக்கப்பட்டு வருகின்றது. அல்லவா ?

இதனையே இங்கே சுட்டுகின்றார்.

இப்படிச் சுட்டிக் காண்பிப்பதன் மூலம்

சோர்வடைந்து. சோம்பி - கூம்பி - கூனிக் குறுகிப் போய்க் கிடக்கும் எனதருமைச் சமுதாயமே! உனக்குப் போஷகராகவும், நல் ஆதரவாகவும், உற்ற துணையாகவும் இருந்து வரும் மேலாளர் பெருமைக்கும், கீர்த்திக்கும் பேராண்மைக்கும் ஒட்டுமொத்தமான சொந்தக்காரர் அன்றோ! ஆகவே; எழுமின், பீடு நடைபோடுமின், கீழ்மை விடுமின்' என சமுதாயத்தைத் தட்டி எழுப்புகின்றார். அவர்.

هُمُ الْجِبَالُ فَسَلْ عَنْهُمْ مُصَادِمَهُمْ
مَاذَا رَأَى مِنْهُمُ فِي كُلِّ مُصْطَدَمِ (124)

**ஹுமுல் ஜிபாலு ஃபஸல் அன்ஹும்**
**- முஸாதிமஹும்**
**மாதாரஆ மின்ஹும் ஃபீ குல்லி**
**- முஸ்ததிமி**

அந்த சஹாபாக் (நபித்தோழர்)கள் மாமலைகள் அவர்களோடு பொருதி(ப் புறமுதுகு காட்டி)ய பகைவர்களை நீ கேட்டுப்பார்! ஒவ்வொரு போர் முனைகளிலும் அவர்கள் சந்தித்த சோதனைக் காட்சிகளை!

இதனை -

அன்னார்மலைபோன்றார், அவரோடு
- போர்புரிந்த
ஒன்னாரைக்கேட்டுணர்வாய் உயுத்தகளக்
- காட்சியினை !

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : நபிகள் நாதர் (ஸல்-அம்) அவர்களும், அவர் தம் தோழர்களும் கொள்கைப் பிடிப்பில் - உறுதியில்- மலையைப் போன்றோர் என்பதை போர்க்களங்களில் புறமுதுகு காட்டிய அன்னாரின் பகைவர்களே உணர்ந்து ஒப்பியுள்ளார்கள்.

வி-ரை : இதற்கு முந்திய 126-ம் கண்ணியில், 'இஸ்லாமியத்திற்கு நபிகளாரும், சஹாபாக்களும் தாய், தகப்பனைப் போன்றும் உற்ற கணவனைப்போன்றும்' காவலர்களாக உள்ளனர் என்று கூறிய புலவர் பெருமான் இங்கே அவர்களின் பிடிப்பை - தீனுக்காக எதனையும், எப்போதும் தாங்கிக் கொண்டு இருந்த மனப் பாங்கைச் சித்தரித்துக் காட்டுகின்றார்.

அவர்களின் கொள்கைப் பிடிப்பிற்கு மலையை உவமை கூறியதால் ஆயிரமாயிரம் அர்த்தங்களை அதன் மூலம் உணர்த்துகின்றார்;

மலையில் மழை பொழிகின்றது; அம் மழைத் துளிகள் சிற்றாறுகளாக ஓடி, நீர் தேக்கங்களாகப் பெருகி, காடு கழனிகளில் பாய்ந்து, உணவு வகைகளை உற்பத்தி செய்யவும், மின்சாரங்களை உருவாக்க உதவி ஒளிவகைகளை இன்னபிற ஆக்க வேலைகளை இயக்கவும் உதவுவது கண்கூடு. அன்றி,

தன்னுள் பொழிந்த மழைத் துளிகளை தன்மீது முளைத்து நின்று கொண்டிருக்கும் தாவர வர்க்கங்களுக்கும், வன விலங்குகளுக்கும் உணவாக, உரமாக ஆக்கிக் கொடுத்து வனச் செல்வங்கள் வளர அம்மலை உதவுவதும் கண்கூடு,

இப்படியாக மலை உறுதியாக இருப்பதோடு இயற்கைச் செல்வங்கள், செயற்கைச் செல்வங்கள் ஆகியன உருவாகப் பயன்படுவதைப் போல சஹாபாக்களின் வாழ்க்கையும் அமைந்து மிளிர்வதை இங்கே புலவர் பெருமான் நமக்கு உணர்த்தும் பொருட்டே மலையை உவமை கூறினார் போலும்,

இவ்வாறு மலை போன்று உரமும் உறுதியும் மிக்க அவர்களின் வீரத்தினைப் பற்றியும், பேராண்மை பற்றியும், இஸ்லாமியத்தை அவர்கள் பாதுகாத்த பாதுகாப்பு முறைகளைக் குறித்தும், தான் சொல்லுவது அவ்வளவு மகிமைக்குரியதல்ல என்று கருதினாரோ என்னவோ அல்லது தான் கூறிவந்த சிறப்பியல்களைக் குறித்து எதிரிலிருந்த நண்பன் கிண்டலாகக் கூறி ஏளனமாக எடுத்துக் கொண்டானோ என்னவோ தெரியவில்லை - 'என்னை நம்பாவிட்டால் போ அப்பனே!' அவர்களோடு போர்க் களத்தில் பொருதி நின்ற எதிரிகளையே கேட்டுப் பார் ! அவர்கள் உனக்கு அண்ணல் நபிகளாரின், அருமை சஹாபாக்களின்-வீரதீரங்கள் பற்றியும், மலைகள் போன்ற அவர்களின் உறுதி, உதவும் பண்புகள் குறித்தும் கதை கதையாய்ச் சொல்லுவார்கள் என்கிறார் கவிதையின் இரண்டாம் அடியில்.

وَسَلْ حُنَيْنًا وَسَلْ بَدْرًا وَسَلْ اُحُدًا

فُصُوْلَ حَتْفٍ لَّهُمْ اَدْهٰى مِنَ الْوَخَمِ ﴿١٢٨﴾

**வஸல்ஹுˇனைன (ன்) வஸல்**
**- பத்ர (ன்) வ்வஸல்உ_ஹுˇதன்**
**ஃபுசூலஹத்ஃபி (ன்) ல் லஹுˇம்**
**- அத்ஹாமினல் வகமி**

பகைவர்களுக்கு ஈடுசெய்ய முடியாத நாசத்தை விளைவித்த ஹுˇனைன் போர் முனையைக்கேள்; பத்ரு போர் முனையைக்கேள்; உஹுத் போர் முனையைக் கேள்; அப்போர் முனைகளெல்லாம் (அப்பகைவர்களுக்கு) வாந்தி, பேதி நோயைவிட கேடுமிக்கதாக இருந்தன.

இதனை -

கூடார்க்குக்கேடிழைத்த ஹுˇனைன்,

-பத்ருஹுˇதினைக்கேள்;

கேடார் கழிச்சலினும் கெடுதி மிக்க போர் அவையே! என மறைக்காயர் பாடுகின்றார்.

க-றை பகைவர்களுக்கு கடும் கேடினை - உயிர், பொருள், மானச் சேதங்களை-விளைவித்த ஹுˇனைன், பத்ரு, உஹுத் போர் முனைகளைக் கேட்டுப்பார்! காலரா; பிளேக் போன்ற கொள்ளை நோய்களை விடக் கொடூரமான சேதங்களை அப்போர்க்களங்கள் அவர்களுக்கு விளை வித்தன.

வி-ரை : மக்கா வெற்றிக்குப்பின் சுமார் ஒரு மாதத்திற்குள் (கி. பி. 630 பிப்ரவரி முதல் வாரம்) திரு மக்காவிற்கும் தாயிபிற்கும் இடையில் உள்ள 'துல்மஜாஸ்' பகுதியில்-ஹுனைன் பள்ளத்தாக்கில்-முஸ்லிம்களுக்கும் காஃபிர்களுக்கும் இடையில் ஒரு மாபெரும் போர் நடந்தது. அதன் விபரமாவது :

தாயிப் நகரிலும் அதன் சுற்று வட்டாரங்களிலும் வாழ்ந்து கொண்டிருந்த ஹவாஜின், தகீப், பனூநஸ்ரு, பனூசஃதுபின் பக்கர், பனூஜுஷம் ஆகிய கோத்திரத்து மக்களுக்கு முஸ்லிம்களுக்குக் கிடைத்த மக்கா வெற்றி பெரும் பொறாமையைக் கிளறிவிட்டது.

''மக்காவாசிகள் ரத்தபாசத்திற்கு அடிபணிந்து விட்டனர்'' என்பது இவர்களின் எண்ணம். அத்தோடு தங்களிடமுள்ள வாள், வேல், வில் வித்தைகளால் முஸ்லிம்களைச் சிதறடித்துவிட முடியும் என மிக நம்பினர். அன்றி 'தலைநகர்' போன்று திகழும் மக்காவைக் கைப்பற்றிக் கொண்ட முஸ்லிம்கள் அதனையடுத்து தங்களையும் மோதிப் பார்க்கத் திட்டமிடுவர் என்பது அவர்களது யூகம்.

ஆகவே முஸ்லிம்கள் வெற்றிக் களிப்பில் மூழ்கி இருக்கும் இந்த நேரத்திலேயே அவர்களின் மீது போர் தொடுத்து அவர்களைத் திக்குமுக்காடச் செய்திட வேண்டுமென்ற தந்திர உணர்வோடு ஏறக்குறைய 30,000 போர் வீரர்களுடன் மக்காவின் மீது போரைத் திணித்தனர்.

இவர்களின் இந்தப் படையெடுப்பு திடுகூறானதாக இருந்திட்டாலும் அதனையும் எதிர் கொண்டு தீரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டதால் 12,000 வீரர்களோடு ஹுனைன் பள்ளத்தாக்கில் அக்காஃபிர்களுட முஸ்லிம்கள் பொருதினர்,

போர் மிக உக்கிரமமாக நடந்தது. ஆரம்ப கட்டகங்களில் முஸ்லிம்களுக்கு பதற்றத்தைத் தரக்கூடிய அளவிலேயே எதிரிகளின் தாக்குதல் கொடி கட்டிப் பறந்தது. சில நேரங்களில் உறுதிக்கு எடுத்துக்காட்டான இஸ்லாமியர் சிதறி ஓடும் படி கூட நேரிட்டது.

ஆனால், 'அல்லாஹ்' எனும் அதி அற்புதமான தார்மீகப் பலத்தை தன்னகத்தே கொண்ட அண்ணல் நபி மணி (ஸல்) அவர்களும், 'அல்லாஹ் - அஹ்மது' என்ற இரு கரைக்குள் தங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டுள்ள முன்னணியான உத்தம சஹாபாக்களும் முறித்து நின்று 'போனால் உயிர் வந்தால் வெற்றி' என்ற உறுதியோடு முன்னேறினர். இழந்து கொண்டு வந்த உறுதி துளிர்க்கத் தொடங்கியது தீப்பொறி பறக்கும் உத்வேகம் இஸ்லாமியர்களின் ரத்த நாளங்களில் ஓடியாடத் தொடங்கியது. அந்த நேரத்தில் 'அல்ஆன ஹமலல் வத்தீஷ்' (இப்பொழுது தான் அடுப்பு சூடேறி இருக்கின்றது) என நபிகளார் முழங்கினர். இதே போர்பரணி - அனைத்து வீரர்களின் உதடுகளிலும் ஒலித்தது. இதனைக் கேட்டபின் சிதறி ஓடிய இஸ்லாமியப் பட்டாளம் தாய்ப் பசுவிடம் அவிழ்த்து விடப்பட்ட கன்று துள்ளிக் குதித்து ஓடுவதைப் போல களம் நோக்கி மீண்டனர்.

இஸ்லாமியர்களின் இந்த புது உற்சாகத்தையும், உத்வேகத்தையும் கண்டு திகைத்து — தேனீயைப் போல சுழன்று சுழன்று கொட்டி, சுழற் காற்றைப்போல மடக்கி மடக்கித்தாக்கும் அவர்களின் கர்ணகடூரமான தாக்கு தலுக்கு ஈடுகொடுக்க முடியாமல் திண்டாடி - திக்கு முக்காடி - 'எங்கு செல்கின்றோம்' என்பதைக் கூட அறி யாமல் பஞ்சு பஞ்சாகச் சிதறி அங்கு மிங்கும் ஓடி ஒழிந் தனர் எதிரிகள். இதுபோல;

இஸ்லாமியத்தின் முதல் போரான பத்ரு முனையில் கலந்து கொண்ட இஸ்லாமியவீரர்கள் வெறும் 313 பேர் கள்தான். ஆனால் எதிரிகளோ ஓராயிரத்திற்கு மேற் பட்டோராவர். இவ்வளவு அதிகமான எதிரிகளை சொற் பத்திலும் மிகச் சொற்பமான இஸ்லாமிய வீரர்கள் சுமார் இரண்டு மணி நேரத்திற்குள் தூள்பரத்திக் காட்டினர் — திறமை மிக்க வேடன், கூட்டம் கூட்டமாக மேய்ந்து கொண்டிருக்கும் வேட்டைப் பொருட்களில் குறித்த மான்களை - கொழுத்த மான்களை - வேட்டையாடிக் குவிப்பதைப் போன்று - அக்களத்தில் அபூஜஹில், உத்பா, ஷைபா போன்ற எதிர் முகாமிலுள்ள அனைத்துப் பெரும் புள்ளிகளையும் கொன்று குவித்து வரலாறு படைத்தனர். இதுபோல உஹதுக் களத்தில் வெறும் 700 வீரர்கள் 3000 க்கும் மேற்பட்ட பெரும் படையுடன் வந்திருந்த எதிரிகளைப் பந்தாடி வெருட்டினர்.

இதனைத்தான்; 'பகைவர்களுக்குக் கடும் கேடினை - உயிர், பொருள், மானச் சேதங்களை, விளைவித்த ஹுனைன், பத்ரு, உஹத் முனைகளைக் கேட்டுப்பார்' என்றுரைக்கின்றார்.

இப்படி திட்டமிட்டுத் திணித்த அனைத்துப் போர் களிலும் தங்களுக்கு படுதோல்வியே பரிசாகக் கிடைத்த

தால் போர் என்று கேட்டாலே அதிர்ச்சியுறும் நிலை யினை மக்கத்து காஃபிர்கள் அடைந்தனர் இந்த அவர் களின் மனநிலையினைத்தான்

'காலரா' பிலேக் போன்ற கொள்ளை நோய்களை விடக் கொடூரமான சேதங்களை அப்போர்க் களங்கள் அவர்களுக்கு விளைவித்தன' என சுட்டுகின்றார்.

ٱلْمُصْدِرِي ٱلْبِيضِ حُمْرًا بَعْدَ مَا وَرَدَتْ
مِنَ ٱلْعِدَى كُلَّ مُسْوَدٍّ مِنَ ٱللِّمَمِ ١٢٩

**அல்முஸ்திரில்பீளி ஹும்ரன்**
**- பஃதமா வரதத்**
**மினல்இதா குல்லமுஸ்வத்தி(ன்)**
**- மினல் லமமி**

(இஸ்லாமிய வீரத்திலகங்கள்) பளபளக்கும் வாட்களை - பிடரிவரை கருகரென வளர்ந்துள்ள கருரோமங்கள் கொண்ட எதிரிகளின் மீது - பாய்ச்சியபின் செந்நிறமாய் மீட்பவர்களாம்.

இதனை —

எம்வீரர் வெண்ணிறவாள் இருட்கார் பயிர்பிடர்சேர்
அம்மருவார் மேனிபுகுந்தடர் சிவப்பாய்
மீண்டனவே

என மறைக்காயர் பாடுகின்றார்

க - ரை : எம் இஸ்லாமிய வீரர்களது பளபளக்கும் வெண்ணிற வாளாயுதங்கள். பிடரிகளை மறைக்கும் வண்ணமாக கருகரென வளர்ந்துள்ள கருரோமங்கள் கொண்ட எதிரிகளின் கழுத்துக்களில் பாய்ந்து சிவப்பாக மீண்டன.

வி - ரை : எதிரிகள் கழிச்சல் நோயினை விட மிகக் கொடியது எனப் பயந்து நடுங்கிக் கொண்டிருந்த ஹுனைன், பத்ரு, உஹது முனைகளைக் கேட்டால். அவை; இஸ்லாமிய வீரர்களது பள பளக்கும் வாட்கள் வாலிபவயதையுடைய எதிரிகளின் கழுத்துகளில் பாய்ந்து அவை சிவப்பாக மீண்ட வீர வரலாறுகளைச் சொல்லும்.

وَالْكَاتِبِينَ بِسُمْرِ الْخَطِّ مَا تَرَكَتْ
أَقْلَامُهُمْ حَرْفَ جِسْمٍ غَيْرَ مُنْعَجِمِ (٢٠)

**வல்காதிபீனா பிஸும்ரில் கத்தி**
**- மா தரகத்**
**அக்லாமுஹும் ஹர்ஃப ஜிஸ்மின்**
**- ஙைர முன்அஜிமி**

இன்னம் (அந்த வீரத் திலகங்கள்) 'கத்'து எனும் ஈட்டிகொண்டு எழுதுபவராம் அவர்களின் எழுதுகோலின் புள்ளிகுத்தாத இடமேதும் (பகைவர் தம்) உடம்பில் மிச்சமிருக்கவில்லை;

இதனை —

எத்தம்போர்வீரர் 'கத்' தின் ஈட்டியெழுத்தாளர்
இந்தக்கோல் புள்ளிகுத்தாஇடம் உடம்பில்
ஒன்றில்லையே;

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : எங்களின் இஸ்லாமிய வீரர்கள் 'கத்து' என்ற ஈட்டி கொண்டு மரண சாசனம் எழுதும் எழுத்தாளர்களாவர். அந்த ஈட்டி முனையால் புள்ளி குத்தாத இடம் எதிரிகளின் உடலில் எஞ்சி இருக்கவில்லை.

வி - ரை : பாரசீக வளைகுடாவில் உள்ள 'கத்' என்றதொரு துறைமுகத்தில் இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு வந்த - கல் மூங்கிலால் செய்யப்பட்ட - ஈட்டியையே புலவர் பெருமான் இங்கே 'கத்தின் ஈட்டி' எனக் குறிப்பிடுவதாக புர்தா ஷரீபின் ஆங்கில விரிவுரையாளர் Red House என்பவர் குறிப்பிடுகின்றார்.

ஆனால்; ஆயுதங்களை இறக்குமதி செய்யுமளவிற்கு அன்றைய முஸ்லிம்கள் வசதி பெற்றிருந்தனரா? பத்ரிலும், உஹதிலும் கூர்மையற்ற வாட்களையும், முனையொடிந்த ஈட்டிகளையும் முஸ்லிம்கள் உபயோகித்ததாக உள்ள வரலாறு புலவர் பெருமானின் இக்கூற்றால் முரண்படுகின்றதே என்றெல்லாம் சிந்திக்கத் தேவையன்று. இஸ்லாமியர்களின் வீர தீரங்களை உலகிற்குப் பறைசாற்றுவதொன்றே இங்கே அவரின் நோக்கமாகும்.

شَاكِي السِّلَاحِ لَهُمْ سِيمَا تُمَيِّزُهُمْ
وَالْوَرْدُ يَمْتَازُ بِالسِّيمَا مِنَ السَّلَمِ ٣

ஷாகிஸ்ஸிலாஹி லஹும்
- ஸீமா துமய்யிஜுஹும்
வல்வர்துயம்தாஜுபிஸ்ஸீ
- மா மினஸ்ஸலமி

ரோஜாப்பூ கரிவேலம்பூவை வேறுபடுத்துதல் போல, ஆயுதம் பூண்ட அந்த சஹாபாக்களை பகுத்துணரும் அடையாளம் அவர்களில் பளிச்சிட்டுக் கொண்டிருந்தது.

இதனை -

வேலம்பூமுட்செவ்வந்தி வேற்றுமைபோல
உள்ள குறி
மூலம் அறிவாய் அவரை; முழங்குகலம்
பூண்டிருப்பார்

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : போர்வீரர் என்ற முறையில் எதிரிகளும், இஸ்லாமியர்களும் ஆயுதபாணிகளாக இருப்பினும். கரிவேல் மலருக்கு ரோஜா மலருக்குமிடையில் வெளிப்படையான வேறுபாடுகள் இருப்பது போல எதிரிகளுக்கும் இஸ்லாமியர்களுக்கும் இடையில் வெளிக்கோலங்களிலேயே மிகுந்த வேறு பாடுகள் இருந்து கொண்டிருந்தன.

வி - ரை : போர் முனையில் எதிரிகளும், இஸ்லாமிய மரவர்களும் ஆயுதந்தரித்து இவர் எந்தப் படையைச் சார்ந்தவர்? என கண்டு கொள்ள முடியாது என்றிருந்தாலும் இஸ்லாமிய வீரர்களின் நெற்றியில் இலங்கிக் கொண்டிருக்கும் சஜ்தாவினுடைய அடையாளங்களும், அவர்களது முகங்களில் மின்னிக் கொண்டிருக்கும் ஈமானின் பிரகாசமும் சஹாபாக்களை இனம் பிரித்துக் காட்டும் அடையாளமாகப் பரிணமித்தன.

---

تُهْدِي إِلَيْكَ رِيَاحُ النَّصْرِ نَشْرَهُمُ
فَتَحْسَبُ الزَّهْرَ فِي الْأَكْمَامِ كُلَّ كَمِي ۝٤٣

**துஹ்தீஇலைக்கரியா ஹுன் நஸ்ரி**
**நஷ்ரஹுமூ**
**ஃபதஹ்ஸபுஜ்ஜஹ்ர ஃபில்**
**- அக்மாமி குல்லகமி**

**அல்லாஹ்வின் உதவி எனும் தென்றல் அந்த தியாக மலர்களின் வாசனையை உனக்கு எத்தி வைக்கும். அவ் வீரர் ஒவ்வொருவரையும் கட்டவிழா மொக்கினுள் உள்ள பூக்கள் என நீ கருதிடுக.**

இதனை -

உதவியெனும்காற்றவனின் உயர்மணம்உன்பால்

- சேர்க்கும்

இதழ்அரும்புட் பூவனையாரென்றவரை நீ மதிப்பாய்

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : மல்லிகை, மொக்காகக் கண்மூடிக் கொண்டிருந்தாலும் அது தன் நறுமணத்தை நாட்டவர்க்கு உணர்த்துதல் போல அல்லாஹ்வின் பேரருள் என்ற தென்றல் அந்த ஸஹாபாக்களின் புகழ் மணத்தை அகிலத்திற்கு உணர்த்திக் கொண்டே இருக்கின்றது.

---

كَأَنَّهُمْ فِي ظُهُورِ الْخَيْلِ نَبْتُ رُبًا
مِنْ شِدَّةِ الْحَزْمِ لَا مِنْ شِدَّةِ الْحُزُمِ (١٢٢)

க அன்னஹும் ஃபீ ளுஹூரில் ஃகைலி

- நப்து ருபன்

மின் ஷித்ததில் ஹஸ்மிலா மின்

- ஷித்ததில் ஹுஸுமி

குன்றில் முளைவிட்டுள்ள புற்பூண்டுகளைப் போல அவ்வீரர்கள் தங்களின் குதிரைகளின் முதுகுகளில் வீற்றிருப்பார்; (அங்ஙனம் அவர்கள் வீற்றிருப்பது) சுய வீரத்தின் மிகுதியினால்தானே தவிர சேனத்தின் உறுதியினால் அல்ல.

இதனை -

குன்றின்மரங்களைப்போல் குதிரையின் மேல்
- வீற்றிருப்பார்
ஒன்றும்சுயத்தினால்; உறுசேணத்தால் அலவே,
என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : மலைக் குன்றுகளில் முளைத்து நிற்கும் மரம்' செடி கொடிகளைப் போன்று அந்த சஹாபாக்கள் குதிரைகளின் முதுகின்மேல் நிமிர்ந்து - வீர உணர்வோடு - அமர்ந்திருந்தார்களென்றால், அது அவர்களுக்கிருந்த வீர உணர்வாலன்றி குதிரைகளில் போடப்பட்டிருந்த சேணங்களின் உறுதியினாலன்று.

---

طَارَتْ قُلُوبُ الْعِدَى مِنْ بَأْسِهِمْ فَرَقًا
فَمَا تُفَرِّقُ بَيْنَ الْبَهْمِ وَالْبُهَمِ (١٣٢)

தாரத்குலூபுல்இதா மின் பஃஸிஹிம்
- ஃபரகன்
ஃபமா துஃப்ரிகு பைனல்பஹ்மி
- வல் புஹ்மி

அவ்வீரர்களின் போர்க்கடுமையால் எதிரிகளின் இதயங்கள் பயந்து நடுங்கின. எந்த அளவுக்கு எனில்; அந்த வீரர்களது ஆட்டுக்குட்டிகளுக்கும் அவ்வீரர்களுக்கும் (இடையே அந்தப் பகைவர்களால்) வேறுபாடு காண முடியவில்லை.

இதனை -

போர்கொடுமையாற்பகைவர் புன்னெஞ்சதிர்ந்
- தமையால்
பார்க்கும் அவர்க்காடுகளும் படைவீரர்போன்றனவே!
என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : இஸ்லாமியர்களது கடுமையான தாக்குதலால் எதிரிகளின் இதயங்கள் அச்சத்தால் அதிர்ந்து கொண்டே இருந்தன. ஆதலால் இஸ்லாமிய வீரர்களின் ஆட்டுக் குட்டிகளைக் கண்டால் கூட அப்பகைவர்களுக்கு நடுக்கம் ஏற்படத் தொடங்கியது.

---

وَمَنْ يَّكُنْ بِرَسُوْلِ اللهِ نُصْرَتُهٗ
اِنْ تَلْقَهُ الْاُسُدُ فِيْٓ اٰجَامِهَا تَجِمِ ١٢٥

**வமய்(ன்ய) குன் பிரசூ லில்லாஹி**
**- நுஸ்ரதுஹூ**
**இன் தல்கஹுல் உஸுதுஃபீ ஆஜாமி**
**- ஹாதஜ்மி**

அல்லாஹவுடைய தூதரின் துணை எவர் எவருக்கெல்லாம் கிட்டுகின்றதோ அவர் அவரை எல்லாம் சிங்கம் தனது குகையிலேயே சந்திப்பினும் கூட (அந்தச் சிங்கம்தான்) பயந்து ஓடும்.

---

இதனை -

அல்லாஹ்வின் தூதரினால் அருந்துணை பெற்று
- உள்ளோர்க்குப்
பொல்லாத சிங்கமும்தன் புதரிடத்தும் அஞ்சிடுமே!
என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : அல்லாஹ்வின் அருட் பெருந்தூதரின் பேருதவி பெற்றுத் திகழ்ந்தவரை சிங்கம் தன் குகையில் சந்தித்தாலும் அஞ்சி அவருக்கு வழிப்படுமே.

வி-ரை : நபிகளாரின் ஊழியராக இருக்கும்போது கிடைக்கப்பெற்ற ஹஜ்ரத் சபீனா (ரலி-அன்ஹு) அவர்கள். உரோமாபுரியில் நடைபெற்றதொரு போரில் பகைவர்களால் சிறை பிடிக்கப்பட்டு அதன்பின் அவர்களிடமிருந்து மிகச்சாமார்த்தியமாகத் தப்பி காடு 'வனாந்திரமென காடு முரடான பாதைகள் வழியாக ஓடி வந்து கொண்டிருக்கையில் வேங்கைப் புலியொன்றிடம் வசமாக மாட்டிக் கொண்டார்.

ஆனால் காட்டு ராஜாவான அவ்வேங்கையைக் கண்டு அஞ்சி - நடுங்கி - செய்வதறியாது அதனிடம் மாட்டிக் கொண்டாரா, அந் நபித் தோழர் - ?

இல்லை...இல்லவே இல்லை. மாறாக அவ்வேங்கையை நோக்கி ''அபுல் ஹாரிதே! (வீரத்தின் தந்தையே!) தான் அல்லாஹ்வின் அருட் பெருந்தூதரான முஹம்மது நபி (ஸல் - அம்) அவர்களின் ஊழியன் நான். முஸ்லிம் வீரர்கள் தங்கியுள்ள இடத்திற்குப் போய்க் கொண்டு இருக்கின்றேன் என்றார்; அவர்.

இதனைச் செவியுற்ற அவ்வேங்கை அவரின் முன் வழிகாட்டியாகச் செல்ல, அதனைப் பின் துடர்ந்து சென்று இஸ்லாமிய வீரர்களது அணி தங்கியுள்ள இடத்தை அடைந்து அவர்களோடு இணைந்து கொண்டார். வழிகாட்டியாக அவருடன் வந்த அந்த வேங்கை ஹஜ்ரத் ஸபீனா (ரலி - அன்ஹு) அவர்கள் தனது படைவீரர் களுடன் சேர்ந்து கொண்டார் என்பதை அறிந்து கொண்ட பின் அங்கிருந்து காட்டிற்குச் சென்றது.

நூல் : மிஷ்காத்துல் - மஸாபீஹ்.

மற்றொரு சமயம்

ஹஜ்ரத் உமர் ஃபாரூக் (ரலி-அன்ஹு) அவர்களின் அருந்தவப் புதல்வர் ஹஜ்ரத் அப்துல்லாஹ் (ரலி-அன்ஹு) அவர்கள் பயணம் செய்து கொண்டிருக்கும் போது ஒரு காட்டுப் பாட்டையில் ஒரு பெரும் வணிகக் கூட்டம் (கிட்டத்தட்ட ஒருவார காலம்) தங்கியிருப்பதைக் கண்டு, அவர்களிடம் விபரம் விசாரித்த போது; அந்தக் காட்டுப் பகுதியில் ஒரு சிங்கம் உலவிக் கொண்டிருப்பதால் எப் பக்கமும் போக முடியாமல் (முற்றுகையிடப் பட்டதுபோல) அவ்வணிகக் குழு தவித்துக் கொண்டிருப்பதாகக் கூறினர். இதைக்கேட்ட அப்துல்லாஹ் (ரலி-அன்ஹு) அவர்கள் காட்டிற்குள் சென்று கொஞ்ச நேரத்திற்குப்பின் அந்தச் சிங்கத்தைக் காதை பிடித்து இழுத்துக் கொண்டு அங்கு வந்தார்.

இக்காட்சியைக் கண்ட வியாபாரிகள் தங்களது பொருட்களை போட்டது போட்ட இடங்களில் விட்டு விட்டு அங்குமிங்கும் அலறிப் புடைத்து ஓடிட ஆயத்தமாகினர்.

ஆனால் அப்துல்லா ஹிப்னு உமர் (ரலி-அன்ஹு) அவர்கள். அவர்களை அழைத்துச் சமாதானம் கூறிவிட்டு ''ஏ வீரத்தின் ராஜாவே! நீ இவர்களை ஏன் தடுத்து நிறுத்தியுள்ளாய்? அல்லாஹ் ஏவல் இவர்கள்பால் உனக்கு இல்லாவிட்டால் நீ இங்கிருந்து கண்காணா இடத்திற்கு ஓடிச்சென்று விடு'' - எனப்பணித்தார்கள்.

சுப்ஹானல்லாஹ் என்ன ஆச்சர்யம். வேடனைக் கண்ட புள்ளிமானைப் போல அச் சிங்கம் அங்கிருந்து ஓடி மறைந்தது.

நூல் : ஷரஹ்ஸுன்னா

இவை மட்டுமன்று, இன்னும் இதுபோன்ற உண்மை நிகழ்ச்சிகள் பல உள. ஆகவே புலவர் பெருமான் இங்கே சுட்டுவது கவிக் கோவைக்காகவோ, கற்பனை வளத்தை வெளிப்படுத்தவோ, மிகைப்படுத்தவோ அன்று.



وَلَنْ تَرَىٰ مِنْ وَلِيٍّ غَيْرِ مُنْتَصِرٍ
بِهِ وَلَا مِنْ عَدُوٍّ غَيْرِ مُنْقَصِمٍ

**வலன் தராமி(ன்)வ்வலிய்யின்**
**- ஙைற முன்தஸிரின்**
**பிஹீவலாமின் அதுவ்வின் ஙைற**
**- முன்கஸிமி**

நபிகள் பெருமான் அவர்களின் துணை பெற்றிடாத எந்த இறை நேசரையும்; அவர்களினால் தோல்வி அடையாத எந்தப் பகைவரையும் நீ அகிலத்தில்) காணவே முடியாது.

இதனை

அன்னார்இடத்துதவி அடையாதநேசரையும்
ஒன்னாருள்தோல்வியுறா ஒருவரையும் நீகாணாய் !

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: அவ்லிய்யாக்கள் எனும் எந்த இறை நேசரும் எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் உதவி எனும் அருட்கடாச்சம் பெறாதவரை அவ்லியாவாக முடியாது. அதுபோல, அன்னாரிடம் தோல்வியுறாத எந்தப் பகைவரையும் பாரில் காணவும் முடியாது.

أحلّ أمّته في حرز ملّته ۞ كاللّيث حلّ مع الأشبال في أجم (١٣٧)

**அஹல்ல உம்மத்தஹு ஃபீ ஹிர்ஜி**
**மில்லத்தி ஹி**
**கல்லைதி ஹல்லம அல்அஷ்பாலி ஃபீ**
**-அஜமீ**

சிங்கம் குகையினுள் தனது குட்டிகளுடன் சேர்ந்திருந்து பாதுகாப்பு நல்குவதை போல நபிகள் பெருமான் அவர்கள் தங்களது சமுதாயத்தினரை தமது மார்க்கம் எனும் கோட்டையில் பாதுகாத்திடல் வேண்டி இறங்கியுள்ளார்கள்.

இதனை

அரிமாதன்குட்டிகளை அடர்புதருட் சேர்ப்பதுபோல
பெருமான் (ஏ)மைஇசுலாம் பெருங்கோட்டை
சேர்த்(த)னரே !

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: சிங்கம் தன் குட்டிகளை தனது குகைக்குள் வைத்துப் பாதுகாப்பதைப் போல பெருமான் நபிகளார் தனது சமுதாயத்தை இஸ்லாம் எனும் பெருங்கோட்டைக் குள் வைத்துப் பாதுகாத்து வருகின்றார்கள்.

வி-ரை : சிங்கம் தனது குகைக்குள் தனது குட்டிகளை வைத்து விட்டு எவ்வித பயமோ சலனங்களோ இல்லாமல்

இரை தேடச் சென்று விடுமாம். காரணம் 'சிங்கத்தின் குகை' என்ற முத்திரை ஒன்றே எதிரிகளுக்கு அச்சத்தைக் கொடுத்துவிடும் என்பதால்.

அதுபோல 'இஸ்லாம்' என்ற கோட்டைக்குள் எனது சமுதாயத்தைச் சேர்த்து விட்டதால் அண்ணல் நபிமணி (ஸல்) அவர்கள் மரணம் எனும் விதியைத் தழுவிக் கொண்டு விட்டார்கள். ஆகவே இஸ்லாமிய நெறி, ஒழுக்கங்களைக் கைக்கொண்டு இஸ்லாமிய வட்டத்தை விட்டும் அகலாதிருந்தால் முஸ்லிம்களை எந்தச் சக்திகளாலும் எப்போதும், எங்கேயும் ஒன்றுமே செய்துவிட முடியாது.

كم جدلت كلمات الله من جدل
فيه وكم خصم البرهان من خصم

கம் ஜத்தலத் கலிமாத்துல்லாஹி
- மின் ஜதலின்

ஃபீஹி வகம் கஸமல் புர்ஹானு
- மின் கஸமி

நபிகள் பெருமான் சம்பந்தமாக குதர்க்கவாதம் புரிந்த எத்தனை எத்தனையோ நபர்களை அல்லாஹ் வின் திருவாக்காம் குர்ஆன் (அடித்து) வீழ்த்தி விட்டது. இன்னும் எத்தனை எத்தனை வீண் வாதிகளை உடைக்க முடியாத ஆதாரங்களால், அம்மாமறை வெற்றி கொண்டு விட்டது.

இதனை-

கோதில்மறை வீழ்த்திவிட்ட-
குதர்க்கிகள் எத்தனையோ
வாதித்துத் தோற்றோழி வீண் வாதிகளும்
எத்தனையோ

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : பரிசுத்தத் திருமறையாம் குர்ஆன் ஷரீபு குதர்க்கம் பேசித் திரிந்த எத்தனையோ பதர்களை மண் கவ்வச் செய்து விட்டது, அன்றி; வாது புரிந்த எத்தனை எத்தனையோ வாதிகளை உடைக்க முடியாத ஆதாரங் களால் அது வென்று வீழ்த்தி விட்டது.

வி-ரை : இதுவரை ஆதிக்கப் போரில் இஸ்லாமியர்கள் சந்தித்த யுத்தங்களைப் பற்றிக் கூறிவந்த புலவர் பெருமான் இங்கு வாதிக்கப் போரில் இஸ்லாமியம் சந்திக்க நேர்ந்த வாதிகள்-குதர்க்க வாதிகளைப் பற்றியும் அதனால் அது அடைந்த வியத்தகு வெற்றிகள் பற்றியும் கூறிக் காண்பிக் கின்றார்.

வாதிக்கப்போர் எனும்போது அங்கே பொருதும் இலக்காக அமைவது குறை நிறைக்கு அப்பாற்பட்ட கோதில் மறையாம் குர்ஆன் ஷரீபாகத்தான் இருந்திட முடியும், அன்றி இந்த வகைப்போரை துவக்கியதும் இஸ்லாமியம் தான் என்பதை நாம் பெருமையுடன் ஒப்புக் கொள்வோம்.

ஆமாம்! குர்ஆன் ஷரீபை, காபிர்கள் 'பொய் புனைச் சுருள்-மந்திரம் சோதிடர்களின் சொக்கு வார்த்தை' என இட்டுக் கட்டிய போது,

''எமது அடியார் பால் நாம் அருளியுள்ளதி (குர்ஆனி)ல் நீங்கள் ஐயம் கொண்டால் அதனைப் போன்ற ஒரு அத்தியாயத்தை இயற்றிக் காண்பியுங்கள் (இம்முயற்சியில்) அல்லாஹ்வைத் தவிர உள்ள (ஏனைய சக்திகள்) சாட்சிக் காரர்களையும் (உங்களுக்கு உறுதுணையாக) சேர்த்துக் கொள்ளுங்கள் (2:23) என சவால் விட்டு வாதிக்கப் போரைத் தொடக்கி வைத்ததே இஸ்லாம்தான்.

இந்தச் சவாலை ஏற்றவரில் 'முஸைலமதுல் கத்தாப்' என்பவர், ஸூரதுன் நாஜிஆத்துக்கு பதிலாக சில உளரலை இயற்றி ''பார்தனையா? நான் பாடி விட்டேன்'' என்றார்.

ஆனால்; இதனைச் செவியுற்ற எதிர் முகாமிலிருந்த இலக்கிய கர்த்தாக்கள் அனைவருமே ''ஏமய்யா உளருகின்றீர்? எச்சிறப்புமே இல்லாத இச்சாக்கடை மொழி, அனைத்திலும் மிகைத்து நிற்கும் குர்ஆனுக்குப் போட்டியாக எப்படி மிளிர்ந்திடமுடியும்'' என நிராகரித்து விட்டனர், ''அலம்தரகைப பஃஅல ரப்புகபி ஆதின்'' என்ற வசனத்திற்கு நிகர் என மடத்தனமாக எண்ணிக் கொண்டு, மேலும் சில உளரல்களை இயற்றிக் காண்பித்தான் முஸைலமா.

ஆனால் இதனைக் கண்ணுற்ற எதிர் முகாமிலிருந்த அறிஞர் பெருமக்கள் ''கூலாங்கற்களை மாணிக்கக் கல்; என்றால் குருடன் கூட ஏற்க மறுப்பானே'' எனக்கூறி முறையற்றவைகளை இட்டுக் கட்டுவதில் முனைந்து நின்ற அந்த முஸைலாவை கத்தாப்-பொய்யன்-எனப் புனைப் பெயரிட்டு மண் கவ்வச் செய்தனர்,

அபுல்ஹிகம் (அறிவின் தந்தை) எனச் சிறப்பிக்கப்பட்ட அபூஜஹில் 'அல் காரிஅத்து' என்று தொடங்கும் அத்தியாயத்திற்கு நிகரான அத்தியாயத்தை உருவாக்குவதாக நினைத்துக் கொண்டு, சில குப்பைகளை இயற்றி-அர்த்த மற்ற, இலக்கியவளமோ இலக்கணச் சிறப்போ, எதுகை மோனைத் தொடையழகோ இல்லாத வார்த்தைக் குவியலை-சாணக் குவியல் போல-காட்டியதின் மூலம் அபூஜஹில் மடமையின் தந்தை என நிரந்தரமாகக் கேவலப் படுத்தப்பட்டான்.

இப்படி குர்ஆனின் சவாலை ஏற்பதாகக் கருதிக் கொண்டு உயிரற்ற வசனங்களை உருவாக்கிக் காண்பித்துக் குதர்க்கவாதம் செய்ய முனைந்தால் அவர்கள் அவர்களவர் களாலேயே அசிங்கப்படுத்தப்பட்ட இந்த உண்மை நிலைகளையே.

பரிசுத்த திருமறையாம் குர்ஆன் ஷரீப், குதர்க்கம் பேசித் திரிந்த எத்தனையெத்தனையோ பதர்களை மண் கவ்வச் செய்து விட்டது, என புலவர் பெருமான் பூசிரி (ரஹ்) அவர்கள் கோடிட்டுக் காட்டினார்.

அன்றி: குர்ஆனின் சவாலை நியாய உணர்வோடு ஏற்று வாது பரிய முன் வந்த பல நல்லறிஞர்கள் கடைசி யில் தங்களின் தோல்வியை வெற்றிகரமாக ஒப்புக் கொண்டு குர்ஆன் ஒரு 'கோதில்மறைதான்' என்பதை உலகிற்கு அறிவித்தனர்.

'உத்பா பின் ரபீஆ' என்பவர் அக்காலை வாழ்ந்த மூதறிஞருள் ஒருவர். அவர் குர்ஆனோடு வாது புரியும்

முகமாக கோமான் நபிகளாரின் முன் தோன்றி குர்ஆனின் வசனங்களை ஓதச் சொல்லிச் செவிமடுத்தபின்.

அல்லாஹ்வின் மீதாணை! நான் எத்தனையோ செய்யுட்களை - வசனங்களை - காவியங்களை பார்த்து படித்து உணர்ந்துள்ளேன். ஆனால் இது போன்றதொரு வசனங்களை நான் இதற்கு முன் எப்போதும் செவி யேற்றதே இல்லை என்றார்.

இலக்கியச் செம்மல் என அக்கால அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட வலீது பின் முகைரா என்பவர் குர்ஆனின் ஒரு வசனத்தைச் செவிமடுத்தார் :

"அல்லாஹ்வின் மீதாணை! இதற்கென்று தனிச் சுவையுண்டு. இதில் தனிக் கவர்ச்சி மிளிர்கின்றது. இதன் நுனி இனிய பலா, இதன் அடிதேன் உலா. இது மனித சக்தியால் உருவானதன்று இது என்றைக்குமே மிகைத்து நிற்கும். ஒருக்காலமும் மிகைக்கப்படாது" என்று உரைத்தார்.

அக்காலை நடந்த கவிதை மன்றத்தில் ஒரே நேரத்தில் 12 கவிஞர்களைத் தோற்கடித்து சதாவதானி யாகத் திகழ்ந்த உனைஸ் என்பவர் -பிரசித்திபெற்ற நபித் தோழரான அபூதர் (ரலி-அன்ஹு) அவர்களின் இளைய சகோதரர் மக்கமாநகர் வந்து மன்னர் நபியுல்லாஹ்வைச் சந்தித்து மறையின் உரைகளைச் செவிமடுத்தபின் தன்னகம் சென்று தனது அண்ணன் அபூதர்ரிடம்;

''மக்காவில் முஹம்மது எனும் தேற்றவாளர் தோன்றி யுள்ளதைக் கேள்விப்பட்டு அங்கு சென்று விசாரித்தேன். அப்போது மக்கத்து மக்கள் அவரைப்பற்றி கவிஞர், சோதிடர், மந்திரவாதி, வஞ்சகர் எனத் தூற்றினர். உண்மையைத் தெரிந்து கொள்ள முஹம்மதையே நேர்முகமாகப் பேட்டி கண்டேன். ஆனால் அவர் பொய்யரோ, புரோகிதரோ அல்ல. அவர் தனக்கு இறக்கப்படுவதாகச் சொன்ன வசனங்களை ஓதிக்காண்பித்தார். அது கற்பனைக்கவியமோ, வஞ்சகம் நிறைந்த சூனியமந்திரங்களோ மனித நாவுகளில் உருவாகும் சாதாரண வசனங்களோ அல்ல என்பதைச் சந்தேகத்திற்கு இடமின்றி அறிந்து வந்துள்ளேன்'' என்றார்.

திருமறையின் மற்றுமொரு வசனத்தைச் செவியேற்றார். அக்கால இலக்கிய மன்றங்கள், பட்டிமன்றங்கள், அனைத்திற்கும் நடுவராக அறிவிக்கப்பட்டுச் சிறந்த எம்மாதுபின் தஃலபா என்ற பேரறிஞர். அந்த நொடியிலேயே அதன் நயத்தில் சொக்கி கலிமா மொழிந்து இஸ்லாமியத்தைத் தழுவி விட்டார்.

அபூ உபைதா என்ற வணிகர் அறிவிக்கின்றார்:

''நான் வணிகத் தலத்திலிருந்து, கொடுத்து வாங்கிக் கொண்டு இருந்தேன். அப்போது என்னுடன் ஒரு கிராமத்து மனிதர் பேரம் பேசிக் கொண்டிருந்தார். அந் நேரத்தில் எங்கிருந்தோ ஒரு இனிமைமிக்க திருக் குர்ஆன் வசனம் காற்றில் மிதந்து வந்தது. அதைச் செவியேற்றது தான் தாமதம். உடனடியாக நிலத்தில் அவர் நெற்றி பதித்து சஜ்தா செய்தார். 'ஏமைய்யா! சும்மா நின்றிருக்கும்போதே

இப்படி அடித்து விழுந்து முட்டி மோதிக் கொள்கின்றீர் - என்றேன் நான் அதற்கவர். ‘‘நான் ஒன்றும் பைத்தியமோ, வலிப்பு நோய் உள்ளவனோ அல்ல. இப்போது நம் செவிகளில் பட்டதே அந்த வசனத்தின் நயம் என்னைச் சொக்கவைத்து விட்டது. ஆகவே இவ்வளவு உயர்ந்த நயம்கொண்ட அந்த வசனத்திற்கு மரியாதை செய்யும் பொருட்டே அங்கனம் செய்தேன்’ - என்று

மற்றொரு கிராமத்து அரபியர் மற்றுமொரு குர்ஆனின் திருவசனத்தைச் செவிமடுத்து விட்டு ‘படைப்பினங்களால் இதுபோன்ற வசனத்தை இயற்றிட முடியாது’ என நான் விண்ணப்பிக்கின்றேன்...என்றார்.

இப்படி; நியாய உணர்வுடன் திருமறையின் திருவசனங்களை நெருங்கியவர்களெல்லாம் - அத்துடன் வாது செய்தவர்களெல்லாம் - வெளிப்படுத்திய - திருமறையின் தெய்வீகத்தை உறுதி செய்துள்ள இந்த நன்னிலைகளையே நமது புலவர் பெருமான் பூசிரி (ரஹ்) அவர்கள் இங்கே - 138 ம் கண்ணியின் இரண்டாம் ஈற்றில்;

‘வாது புரிந்த எத்தனையெத்தனையோ வாதிகளை உடைக்க முடியாத ஆதாரங்களால் அது வென்று வீழ்த்தி விட்டது’ - என எண்பித்துக் காட்டுகின்றார்.

كَفَاكَ بِالْعِلْمِ فِي الْأُمِّيِّ مُعْجِزَةً
فِي الْجَاهِلِيَّةِ وَالتَّأْدِيبِ فِي الْيُتُمِ (١٣٩)

கஃபாக்கபில் இல்மி ஃபில் உம்மிய்யி
- முஃஜிஸதன்
ஃபில்ஜாஹிலிய்யத்திவத் தஃதீபி
- ஃபில்யுதுமி

அறியாமைக் காலத்தில் எழுதப்படிக்கத் தெரியாத ஒருவரில் வியத்தகு அறிவு ஒளிர்ந்ததும்; அனாதை நிலையில் நல்லொழுக்கம் ஒளிர்ந்ததுமே (ரசிகனே!) உனக்கு அவர் 'உத்தமத்திரு நபி' என்பதற்கு போதுமான (ஆதாரமாக இருக்கின்ற)து.

இதனை

கற்றறியார் அஞ்ஞானக் காலத்தில் ஞானியராய்ப்
பெற்றவர் இலாதொழுக்கம் பொறும்புதுமை-
-போதுமன்றோ?

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : எந்த ஆசிரியரிடமும் எழுதவோ, படிக்கவோ கற்றறியாத பெருமான் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள்; நேர் நிகரற்ற மெஞ்ஞானியாகவும், சிறு வயதிலேயே பெற்றோரை இழந்து, அனாதையாக இருந்தும், மாசு மருவற்ற நல்லொழுக்க சீலராகவும் விளங்கிய உண்மை ஒன்றே அன்னார் இறைவனின் திருத்தூர் என்பதற்குப் போதுமான அத்தாட்சியாகும்.

வி - ரை : இதுவரை இஸ்லாமியர்கள் எதிர் கொண்ட தற்காப்புப் போரைப் பற்றியும், இஸ்லாம் எதிரிகளின் மீது திணித்த வாதிக்கப் போர் பற்றியும் அவ்விரண்டிலும் அவர்களுக்குக் கிடைத்த ஈடு இணையற்ற வெற்றிகளைப் பற்றியும் இனிக்க, இனிக்கக் கூறிக் காண்பித்த புலவர் பெருமான் பூசிரி அவர்கள், இந்த எட்டாம் தலைப்பின் கடைசிக் கண்ணியாக இதனைப் பாடிக் காண்பித்து; இஸ்லாத்திற்குப் பெருமை, 'எம்மான் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் இறைவனின் திருத்தூதர் தான்,' என்பதற்கு எடுத்துக் காட்டு, தற்காப்புப் போர்களிலோ அல்லது வாதிக்கப் போர்களிலோ அது பெற்ற அந்த வெற்றிகளன்று; தாயின் வயிற்றில் ஆறு மாதக் கர்ப்பமாக இருக்கும்போதே தகப்பனை இழந்தும் ஆறாம் வயதில் பெற்றெடுத்த அன்னை ஆமீனாவை இழந்தும் முழு அனாதையாகத் திகழ்ந்த எங்களின் ஏந்தல் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் 'இதோ' எனச் சுட்டிக் காண்பிக்க எந்தக் குறையோ மாசுமருவோ அற்ற தூயவராக - ஒழுக்க சீலராக - வாழ்ந்துள்ள பரிசுத்தமான வாழ்க்கையும்;

எழுதவோ, எழுத்தைப் பார்த்துப் படிக்கவோ கற்றறியாத அந்த அண்ணல் இன்றைக்கு மட்டுமன்று, என்றைக்குமே எவராலும் மிகைக்க முடியாத அளவு மெஞ்ஞானத்தைப் பெற்ற மெஞ்ஞானியாக விளங்கும் வியத்தகு நிலையும்தான் இஸ்லாமியத்திற்குரிய பெருமையாக - நபிகளார், நாயனின் நற்றவத்தூதர்தான் என்பதற்குரிய எடுத்துக்காட்டாகத் - திகழ்கின்றது என்பதைப் பாருக்கு உணர்த்துகின்றார்.

அதன் மூலம்; ஆதிக்கப் போரை, சாதிப்பதற்குரிய கருவியாக, நினைந்து நினைந்து நெஞ்சம் மகிழ்வதற் குரிய பெருமையாக இஸ்லாம் என்றும் நாடியது கிடை யவே கிடையாது என நியாய உணர்வு உடையோர்க் குப் புகட்டுகின்றார்.



★★★★★★★★★★★★★:★★★★★★★★★★★★

# புரவலர்
# போர்த்திய பொன்னாடை

## ஒன்பதாம் இழை




★★★★★★★★★★★★:★★★★★★★★★★★★★

# 9

மரண தண்டனை ஊர்ஜிதம் செய்யப்பட்ட கொலைக் கைதியொருவன் ஜனாதிபதிக்குக் கருணைமனுச் செய்கின்றான். நாட்டின் தலைக் குடிமகனாகவுள்ள அவர், அவனது மனுவைப் பரிசீலித்து அவனது பரம்பரைச் சிறப்பைக் கருதி, அல்லது நாட்டிற்கு அவன் அல்லது அவனது மூதாதையர் செய்துள்ள தியாகம் அல்லது சேவையைக் கருதி, அல்லது அவனது பெண்டு பிள்ளைகளின் திக்கற்ற நிலையைக் கருதி, அல்லது அவனது அறிவுக் கூர்மையை, கல்வி அறிவை, தொழில் நுணுக்கத்தைக் கருதி-அவசியம் என அவருக்குப்பட்டால்-அவனது மனுவை அங்கீகரித்து அவனுக்கு மன்னிப்பு வழங்குவது நாட்டுப் பழக்கமாக இருந்து வருவதைக் கண்டும் கேட்டும் வருகின்றோம்.

## விளையாட்டுத் திறமைக்காக மதிப்பு எண்கள்

படிப்பில் மிக மட்டி - படுசுட்டி. இருந்தும் அம்மாணவனுக்கு, அவனது விளையாட்டுத் திறமையைக் கருதி, ஒழுக்கத்தைக் கருதி, இன்னும், இதுபோன்ற ஏதாவது ஒரு சிறப்பைக் கருதி, அவனுக்கு உரிய மதிப்பெண்கள்

வழங்கி, மேல் வகுப்பிற்கு அவன் அனுப்பப்படும் நடைமுறையை நம்மில் சிலர் அனுபவித்தும் இருக்கக்கூடும்.

நான் பள்ளியில் பயின்று கொண்டிருந்த காலை, அப்போது என் வகுப்புத் தோழன் ஒருவன், ஆசிரியரைக் கொதிக்கச் செய்திட வல்லதொரு குறும்பு செய்து விட்டான்-கையும் களவுமாகப் பிடிக்கப்பட்டு, குற்றத்தைத் தானே ஒப்புக்கொள்ளவும் செய்தான் அவன். ஆசிரியரோ மிகக் கோபமுள்ள இயல் கொண்டவர் - கண்டிப்பானவர். தண்டிக்க ஆரம்பித்து விட்டால் தீப்பொறி பறக்கும். ஆகவே நாங்களனைவரும் 'பையன் வசமாக மாட்டிக் கொண்டான். நல்லதொரு வேடிக்கை நடக்கப் போகின்றது'-என்ற உற்சாகம் அடைந்தாலும், கிடைக்கப் போகும் தண்டனையின் கடுமையை நினைத்தபோது எங்களையே வெடவெடக்க வைத்தது. குற்றவாளியோ சிறுநீர் கழித்து விட்டான். ஆனால்...ஆசிரியர் ''இனி இப்படியெல்லாம் குறும்பு செய்யாதே!'' என்ற எச்சரிக்கையுடன் அவனை மன்னித்து விட்டு விட்டார். எங்களுக்கெல்லாம் ஆசிரியரின் இந்த நடவடிக்கைப் பெருத்த ஏமாற்றத்தைத் தந்ததோடு இன்று வரை புரியாத புதிராகவும் இருந்து வருகின்றது.

ஒருவேளை, குற்றவாளியின் - சிறுநீர் கழிக்குமளவு-உச்சக்கட்டப் பயமே அவனுக்குரிய தண்டனை என அவர் கருதியிருப்பாரோ...?

என்ன இது? சம்பந்தா சம்பந்தமில்லாமல் எது எதையோ கிறுக்கித் தள்ளுகின்றார் இவர்? என எண்ணுவீர் தெரியும் எனக்கு. உண்மையில் தலைப்பிற்கும் இவைகளுக்

கும் சம்பந்தமோ, தொடர்போ இல்லைதான். ஆனால் தலைப்பின் கருவை விளங்கிக் கொள்ள ஓரளவு உதவிடக் கூடும் என்பதால் ஆரம்பத்திலேயே இவைகளைக் கூறிடலானேன். இதோ சம்பந்தத்தைத் தொடர்கின்றேன்.

## நற்செயல்களால் மாத்திரம் மறுமையில் வெற்றி பெற்றிட முடியுமா?

ஏகனாம் இறைவன் கோதில் மறையாம் தனது குர்ஆன் ஷரீபில், மறுமை விசாரணையின் போது மனிதர்களுக்கு வழங்கப்படவுள்ள கடுகளவுகூட முன்பின் இல்லாத தனது நியாயத் தீர்ப்பின் நடுநிலை குறித்து பின் வருமாறு விமரிசிக்கின்றான். அதாவது:

ஆகவே எவர் அணுவளவு நன்மை செய்துள்ளாரோ அவர் அதனையும் அங்கு கண்டு கொள்வார். எவர் அணுவளவு தீமை செய்துள்ளாரோ அதனையும் அவர் கண்டு கொள்வார். (குர்: 99; 7-8)

இப்படிக் கொஞ்சம் கூட ஏற்ற தாழ்வில்லாமல்-சரிக்குச் சரியாக - நிறைக்கு நிறையாக - படிக்குப்படியாக - மனிதர்களின் நன்மை தீமைகள் கணக்கிடப்பட்டு தீர்ப்பு வழங்கப் பட இருக்கும் போது எந்த மனிதனாவது தனது நற் செய்கையினால் மட்டும் மறுமையில் ஈடேற்றம் பெற்றிட முடியுமோ? தயவு செய்து கொஞ்சம் சிந்தியுங்கள்...

ஒரு மனிதன்; தனக்குப் பிராயம் வந்த காலம் தொடுத்து தனது பிராப்தம் முடியும் வரை, ஒரு நொடிப்

பொழுதைக்கூட வீணடிக்காமல் - இரவு பகல் எல்லா நேரங்களிலும்-வணக்க வழிபாடுகளிலேயே கழிக்கின்றான்-நற்செயல்களிலேயே திளைத்திருக்கின்றான் - நல்லவைகளையே சிந்திக்கின்றான்-நல்லதை மட்டும் பார்க்கவும், கேட்கவுமாக வாழுகின்றான்-நன்மைக்கன்றி வேறு எதற்கும் எப்போதும் அவன் நடந்ததே இல்லை- என வைத்துக் கொள்ளுங்கள். இத்தகு மனிதனின் அமல்கள் (நன்மைகள்) எவ்வளவு பெரியதாக இருக்கும் என உங்களின் மனக் கண்களால் அளவிட்டுக் கொள்ளுங்கள்.

இந்த உயர்ந்த உத்தமனின் நற்செய்கைகள் அனைத்தையும் - கியாமத் நாளன்று-ஒரு தட்டிலும், இறைவன் அவனுக்கீந்துள்ள அருட்கடாட்சங்களில் 'கண்' என்ற ஒரே ஒரு செல்வத்தை மட்டிலும், அல்லது செவிப்புலனை மட்டிலும், அல்லது மூச்சிழுக்கும் திறனை மட்டிலும் மறு தட்டிலும் வைத்து நிறுக்கப்பட்டால் எதன் நிறை கூடுதலா இருக்கும்...? கொஞ்சம் சீர்தூக்கிப் பாருங்களேன் !

ஆகவேதான், 'ஞானச் சுடர்' மஸ்தான் அப்பா அவர்கள் :

''தலை கீழாக கால் மேலாக நின்று ஒரு நூறாயிரம் ஆண்டுகள் அழுது புலம்பினாலும் ஆவதென்ன என் கண்ணே ரஹ்மானே !'' எனக் கேள்விக்கணை எழுப்பி, மனிதன் தனது நற்செய்கையால் மட்டும் ஈடேற்றம் பெற்றுய்ய முடியாது என்பதை உணர்த்துகின்றார்.

ஆகவே அமல் (நற்செய்கை) என்ற மூலதனத்தோடு இறையருள் (ரஹ்மத்) என்ற கடாட்சமும் எவர் எவருக்குக்

கிட்டுகின்றதோ அவர்கள்தான் அங்கே - மறுமையில்- ஈடேற்றம் பெற்றுக் கொள்ள முடியும் எனப் புலனாகிறது.

பெருத்த மூலதனம் மாத்திரம் இருப்பதால் வியாபாரத்தில் வெற்றி பெறமுடியாது என்பதும், அனைத்து வேலைப்பாடுகளும் முழுமை பெற்றுள்ள பல்பில் மின்சாரம் பாயாவிடில் பவர்-ஒளி-கிட்டாது போய்விடும் என்பதுமெல்லாம் சொல்லியா தெரிய வேண்டும்?

இப்படி பல்பிற்கு பவர் கொடுத்து மார்க்கெட்டில் அதற்குப் பவரை உண்டாக்கித்தரும் மின்சாரத்தை போன்று நாளை மறுமையில் மனிதர்களின் அமல்களுக்கு உயிர் கொடுத்து அவர்களை அம்மையில் விலையுள்ள மனிதர்களாக ஆக்கவல்ல இந்த ரஹ்மத்தைத்தான்-அருட்கடாட்சத்தைத்தான் 'ஷஃபாஅத் (மன்றாட்டம்)' - என்று சொல்லப்படுகின்றது.

கவிமணி பூசிரி அவர்கள் இங்கே 140 - ம் கண்ணி முதல் 151 - ஆம் கண்ணி வரையுள்ள 11 கண்ணிகளில் தனது வாலிபத்தை காலியாகப் பயன்படுத்தி விட்டதாகவும், கவித்திறனை விழலுக்கிரைத்த நீராகப் பாழ்படுத்தி விட்டதாகவும், இறைவன் தனக்கீந்த பாக்கியங்களுக்கு நன்றி கொன்றவராக வாழ்ந்து விட்டதாகவும் பிரஸ்தாபித்து, அழுது புலம்பி, இந்நிலையில் 'ஷஃபாஅத்' எனும் கடாட்சம் தனக்கு கிட்டாது போய்விட்டால், தான் மறுமையில் தள்ளுபடி செய்யப்பட்ட பாவியாகப் போய்விடும்படி ஆகுமே எனப் பரிதவித்து; ஆகவே உடலிற்கு உயிர்போலவும், கண் போலவும், கை போலவும் திகழக்கூடிய அந்த ஷஃபாஅத்தை தனக்குத் தந்தருள வேண்டும் என மனுச் செய்கின்றார்.

அங்ஙனம் ஷஃபாஅத் வேண்டி அவர் மன்றாடுவதன் மூலம் நமக்கெல்லாம்-நபிகளார் தம் உம்மத்திற்கெல்லாம் ஷஃபாஅத்தின் அருமையை - பெருமையை உணர்த்துகின்றார்.

அதற்குமுன்,

மறுமையில் ஷஃபாஅத் செய்யத் தகுதி பெற்றவர்கள் யார், யார்? அங்ஙனம் தகுதி பெற்றவர்களில் நமது நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுடைய ஷஃபாஅத்தின் தனித்தன்மை யாது? அன்னாரின் ஷஃபாஅத் யார் யாருக்கு எப்படி எப்படிப்பட்ட ஈடேற்றதை ஈட்டித் தரும் என்பன போன்ற விபரங்களை மட்டிலும் தெரிந்து கொள்வோம்.

## ஷஃபாஅத் செய்ய தகுதி பெற்றவர்கள்

செல்வமோ, செல்வாக்கோ சொல்வாக்கோ பயன் படாத அந்த கியாமத்து நாளில்;

'நபிமார்கள், உலமாக்கள், ஷுஹதாக்கள் ஆகிய மூன்று வகையினர் ஷஃபாஅத் செய்யத் தகுதி பெற்றவர்கள்' என்பதாக ஈருலக சர்தார் எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.

தகுதியுடையோர் மூன்று வகையினர் எனப் பொதுப் படையாக அறிவிக்கப்பட்டிருந்தாலும் மற்றவர்களின் ஷஃபாஅத்துகள் (மன்றாட்டங்கள்) எல்லையிடப்பட்டதாக

வும், நிபந்தனைகளுக்கு உட்பட்டதாகவுமே இருக்கும். ஆனால் நமது நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் ஷஃபாஅத் ஒன்றுதான் எல்லையோ நிபந்தனையோ இடப்படாத-யார் யாருக்கு எப்படி எப்படிப்பட்ட ஈடேற்றத்தைப்பெற்றுத்தர நபிகளார் எண்ணுகின்றார்களோ அவர் அவர்களுக்கெல்லாம் அப்படி அப்படிப்பட்ட ஈடேற்றங்களை ஈட்டிக் கொடுப்பதாக அமைந்திருக்கும்.

## ஒன்பது வகையான ஷஃபாஅத்

'சிலாஹுல் அர்வாஹ்' எனும் நூலில் நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு ஒன்பது வகை ஷஃபாஅத் உரிமை இருப்பதாக எண்பித்துக் காட்டப்பட்டுள்ளது.

## முதல் வகை ஷஃபாஅத்

கியாமத் நாள் விசாரணையின்போது, ஆதம் (அலைஹி) அவர்களிலிருந்து நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் வரையிலுமுள்ள அனைத்து நபிமார்களும் அவரவர் உம்மத்துகளோடு எழுப்பப்பட்டு, ஆதி புருடனிலிருந்து அகிலத்தின் ஆகக்கடைசியாக உள்ள மனிதர் வரையுள்ள மனிதவர்க்கம் முழுவதுமே ஒரே நாளில், ஒரே திடலில் நிறுத்தப்பட்டு விசாரிக்கப்பட இருப்பதால், விசாரணையில் எந்த உம்மத்தினருக்கு முதலிடம் என்ற

தர்மசங்கடமானதாரு நிலை உருவாகும். அப்போது நமது நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் அல்லாஹ் வின் சமூகத்தில் மன்றாடி (-ஷஃபாஅத் செய்து) தங்களின் உம்மத்தினருக்கே அனைத்திலும் 'முதலிடம்' பெற்றுத் தருவார்கள். இதற்கு 'ஷஃபாஅத்துல் ஆம்மா' எனப் பெயர்.

## இரண்டாம் வகை ஷ:பாஅத்

கியாமத் விசாசரணையின் போது உம்மத்தே முஹம்ம தியாக்களில் பலரின் பாவச் செயல் ஊர்ஜிதம் செய்யப் பட்டு அதனால் அவர்களை கொடிய நரகத்திற்கு கொண்டு செல்லப்பட இருக்கும் வேளையில் நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் குறுக்கிட்டு, தங்களது உம்மத் தினருக்காக அல்லாஹ்விடம் மன்றாடுவார்கள். ஆகவே கிருபைமிக்க ரஹ்மான் நபிகளாரின் அந்த (ஷஃபாத் தை-) மன்றாட்டத்தை அங்கீகரித்து தனது தீர்ப்பை அவர் களின் விஷயத்தில் தளர்த்தி நரகத்திற்குள் தள்ளப் பட இருந்த அம்மக்களுக்கு அதிலிருந்து ஈடேற்றம் வழங்குவான்.

## மூன்றாம் வகை ஷ:பாஅத்

பெரும் பாவங்களின் விளைவால் முஸ்லிம்களில் பலர் நரகில் தள்ளப்பட்டு கொடிய தண்டனையை அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். குறிப்பிட்ட அளவு தண்டனை முடிந்த

பின் நபிகளார் இவர்களுக்காக வல்ல அல்லாஹ்விடம் மன்றாடுவார்கள் அதன் பயனாக இவர்கள் விடுதலை பெறுவார்கள்

## நான்காம் வகை ஷ∴பாஅத்

பல நல் விசுவாசிகள்-முடிந்த அளவு அல்லாஹ்வைப் பயந்து வாழ்ந்து, முடிந்த அளவு நற்செய்கை புரிந்தவர்களான உத்தமர்களை விசாரணையே நடத்த வேண்டாம் என வல்ல அல்லாஹ்விடம் மன்றாடிட-அந்த மன்றாட்டம் ஒப்புக்கொள்ளப்பட்டு, அந்த நல்விசுவாசிகள் எள்ளளவு விசாரணையுமின்றி சொர்க்கபதி சேருவார்கள்.

## ஐந்தாம் வகை ஷஃபாஅத்

சொர்க்கத்தில் ஏழு வகுப்புக்கள் உண்டும் என குர்ஆன் ஷரீபும், ஹதீதும் அறிவிக்கின்றன அல்லவா? இந்த ஏழு வகுப்புக்களில் மனிதர்கள் அவர் அவரின் நற்செய்கைக் கேற்ப மேல் வகுப்புக்களிலும், கீழ் வகுப்புக்களிலும் நடு வகுப்புக்களிலுமாக நுழைய வைக்கப்படுவார்கள். அப்போது நபிகளார் (ஸல்) அவர்கள் குறுக்கிட்டு வல்ல அல்லாஹ்விடம் சிலரை கீழ் வகுப்பிலிருந்து நடு வகுப்பிற்கும், மற்றும் சிலரை நடு வகுப்பிலிருந்து மேல் வகுப்பிற்கும் மாற்றும்படி விண்ணப்பிப்பார்கள். நபிகள் நாதர் (ஸல் - அம்) அவர்களின் இந்த மன்றாட்டத்திற்கிணங்க, அவர் அவர்களுக்கு வகுப்புக்கள் மாற்றிக் கொடுக்கப்படும்.

## ஆறாம் வகை ஷஃபாஅத்

நபிகளார் நாதர் (ஸல் - அம்) அவர்களின் வளர்ப்புத் தந்தையும், இஸ்லாமியத்தின் ஆரம்ப காலங்களில் எதிரிகளுக்குப் பெரும் தடைக்கல்லாகவும் இஸ்லாமியர்களுக்குப் படிக்கல்லாகவும் திகழ்ந்த பெருந்தகையாளரும், ஹஜ்ரத்அலி (ரலி-அன்ஹு) அவர்களின் சொந்தத் தந்தையுமான தாலிப் அவர்களுக்குரிய தண்டனையைத் தளர்த்திக் கொடுக்கும்படி (கியாமத்து நாளில்) நபிகளார் மன்றாடுவார்கள். அதற்கிணங்க அவருக்கு இலேசு கொடுக்கப்படும்

## ஏழாம் வகை ஷஃபாஅத்

வாழ் நாளில் மதீனாபுரியிலுள்ள பெருமானாரின் புனித ரவ்ழாஷரீபிற்குச் சென்று ஜியாரத்துச் செய்த பாக்கியவான்களுக்காக கியாமத்தில் விசேஷமாக நபிகளார் ஷஃபாஅத் செய்வார்கள். இந்த மன்றாட்டமும் அங்கீகரிக்கப்படும்.

## எட்டாம் வகை ஷஃபாஅத்

வாழ் நாளில் சிறு சிறு தவறுகளை - இதனாலெல்லாம் என்ன வந்துவிடப் போகின்றது, என்ற அலட்சிய மன பாவத்தோடு - செயல் மேற்கொண்டு வாழ்ந்தமைக்காகத் தண்டிக்கப்பட்டு நரகில் வேதனை அனுபவித்துக் கொண்டிருக்கும் ‌உம்மத்தே முஹம்மதியாக்களுக்காக

நபிகளார் ஷஃபாஅத் செய்வார்கள். இதுவும் அங்கீகரிக்கப்பட்டு சம்பந்தப்பட்டவர்கள் விடுதலை செய்யப்படுவார்கள்.

## ஒன்பதாம் வகை ஷஃபாஅத்

பருவம் அடையாத சிறுவயதில் பனிரெண்டு வயதிற்குக் குறைந்த ஆண் குழந்தைகளும், ஒன்பது வயதிற்குக் குறைந்த பெண் குழந்தைகளும் - மரணித்துவிட்ட முஸ்லி) மான குழந்தைகளின் அர்வாஹுகள் (உயிர்கள்) அல்லாஹ்வின் அர்ஷிற்குத் தாழாலே உள்ள சிஜ்ஜீன் எனுமிடத்தில் உரிகளில் தொங்கவிடப்பட்டுப் பாதுகாக்கப்படுகின்றன. இவர்களுக்கு கியாமத்தில் விசாரணை என்பது ஏற்படாது. இவர்கள் மார்க்கக் கடமைகள் விதியாவதற்கு முன்பே மரணித்து விட்டதால் இவர்கள் குற்றமற்றவர் பட்டியலிலேயே இடம் பெற்றுள்ளார்கள்...... ஆனாலும் கியாமத்து நாளன்று நபிகளார் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் இவர்களுக்காக ஷஃபாஅத் செய்தபின்பே அவர்கள் சொர்க்கத்திற்கு மாற்றப்படுவார்கள்.

நபிகள் நாதர் முஹம்மது (ஸல் - அம்) அவர்களுக்குரிய இந்த ஒன்பது ஷஃபாஅத்துக்களில் ஏதாவதொரு ஷஃபாஅத்திற்கு எவர் எவர் அருகதையுள்ளவர்களாக இருக்கின்றார்களோ அவர் அவர்களே ஆதரவற்ற அந்த கியாமத்து நாளில் அரவணைப்பைப் பெற்றுய்ய முடியும்.

கிருபைக் கடலான காருண்ய மூர்த்தியே! கருணை வள்ளலே!! எங்களின் ரஹ்மானே!!! பவக்கடலில் மூழ்கி தவத்தை மறந்துத் - தத்தளித்துக் கொண்டுள்ள எங்களை. வக்கற்றவர்களின் திக்காகவும் திகழ்ந்திடும் எங்கள் வள்ளல் திரு நபி (ஸல் - அம்) அவர்களின் ஷஃபாஅத் எனும்

நல்லாதரவைப் பெறுவதற்கு அருகதையுள்ள அடியார்களாக வாழ வைத்து அங்ஙனமே மரணிக்கவும் செய்தருள்வாயாக ஆமீன்! ஆலமீன்! யாரப்பல் ஆல்மீன்!

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
யாறப்பி ஸல்லி அலைஹி வசல்லிம்

خَدَمْتُهُ بِمَدِيحٍ أَسْتَقِيلُ بِهِ
ذُنُوبَ عُمْرٍ مَضَى فِي الشِّعْرِ وَالْخَدَمِ (١٤٠)

கதிம்த்துஹூ பிமதீ ஹின் அஸ்த
- கீலுபிஹி

துனூப உம்ரின்(ம்) மழா
- ஃபிஷ்ஷிஃரி வல்கதமி

நபிகள் பெருமானுக்கு 'புகழாரம்'' தொடுப்பதன் மூலம் (குற்றறேவல் செய்து இதற்கு முன் தகுதியற்றவர்களைப் பாடியும் மன்னர்களின் கடைக்கண் பார்வை கிட்டுவதற்காக அவர்களுக்கு குற்றேவல் செய்தும்) கழிந்து போன எனது வாழ்நாட்களின் பாவக்கறைகளைத் துடைக்க முயலுகின்றேன்.

இதனை -

பாடிப் புகழ்ந்துபிறர் பணிபுரிந்த முற்பவங்கள்
ஓடப்புகழ்மாலை உயர்நபிக்குச் சூட்டுவனே

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : தகுதியற்றோரைத் தூக்கியும் தகுதியுள்ளோரைத் தாக்கியும் நான் பாடியதால் ஏற்பட்ட என் முன்னாள் குற்றங்களை தகுதியான தகுதிகள் அனைத்தும் கொண்ட தாஹா நபி (ஸல்) அவர்களின் உண்மையான உயர்வைப் பாடிப் பணிசெய்வதன் மூலம் துடைக்க எத்தனிக்கிறேன் நான்.

வி-ரை : புலவர் பெருமான் பூசிரி தனது கடந்த காலத்தை நினைவு கூறுகின்றார் இங்கே.

வியத்தகு புலமை பெற்றிருந்த அவர் தனது புலமையை பொன்னும், மணியும் சம்பாதிக்கும் சாதாரணக் கார்யத்திற்காக - அரசர்களையும், செல்வந்தர்களையும் புகழ்ந்து பாடுவதில் வீணடிப்பவராக இருந்தாராம் அவர். நான் சொல்லவில்லை அப்படி அவரே ஒப்புகின்றார் இங்கே!

## புலமையின் பயன் என்ன?

பொன்னையும், மண்ணையும், மணியையும் சம்பாதிக்க புலமையா வேண்டும்? அரிச்சுவடி கூடத் தெரியாத சாதாரன வணிகனால் அது முடியுமே?

ஆனால் - அல்லாஹ்வின் அருளால் கிடைக்கப்படக் கூடிய- மனித முயற்சியினால் மட்டும் பெற முடியாத புலமை கிடைக்கப்பெற்றவர் அதை எப்படிப் பயன்படுத்திட வேண்டும்?...

இலக்கியத்தைப் படைக்க - இலக்கணங்களை உருவாக்க - சமுதாயத்திற்கு உணர்ச்சிகளை, உண்மைகளை விண்டுகாட்டிட - அறியாமையை அகற்றிட ஆகிய இப்படிப்பட்ட உடிர்ந்த லட்சியங்களுக்கல்லவா புலமை செலவழிக்கப்பட வேண்டும்.

ஆனால் புலவர்களில் பலர் இந்த லட்சியத்திலிருந்து எப்படியோ சருகி, செல்வம் இருக்கின்றது என்பதற்காக செல்லரித்தவனைக் கூட 'நல்லவன்- வல்லவன்' எனப் போற்றிட முன்வந்தவர்களைப் பார்க்கின்றோம் நாம்.

ஆகவே தான் சமுதாயத்தின் மணிமகுடமாக மதிக்கப்பட வேண்டிய புலவர்கள் - அறிஞர்கள் - ஆலிம்கள் :

''போற்றினும் போற்றுவர்

பொருள் கொடாவிடில் தூற்றினும் தூற்றுவர்

சொன்ன சொல்லை மாற்றினும் மாற்றுவர்

வன்குணாளர் கூற்றினும் பாவலர் கொடியவரே''

என - சமுதாயத்தின் ஏவலர்களைப்போல், ஏன் அதனிலும் கீழாக வர்ணிக்கப்பட வேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது.

இதனை - மனம் மாறிய மற்றுமோர் புலவர் :

கல்லாத ஒருவனை நான் 'கற்றாய்' என்றேன்-
காடாளும் - அவனை நான் 'நாடாள் வாய்' என்றேன்
பொல்லாத ஒருவனை நான் 'நல்லாய் என்றேன்
இல்லாது சொன்னேன் உனக்கில்லை என்றான்
யானும் என் குற்றத்தாலேகினேன் -

என்று புண்பட்டுப் பாடுகின்றார்.

நமது புலவர் பெருமானும் தனது வாலிபத்தை வாலிபத்தில் உருவான இளமைப் புலமையை எல்லாம் தகுதியில்லாதவர்களை தூக்கவும், தகுதியுள்ளவர்களைத் தாக்கவுமான தரம் குறைந்த அந்த வேலையைச் செய்து விட்டதாக உணர்ந்து புலம்புகின்றார். எப்போது தெரியுமா? 'பச்சைவாதம்' எனும் கிடிக்கிப் பிடியில் அகப்பட்டப் பிறகு

## கால்ச் சுவடுகளைத் திரும்பிப் பார்!

ஆனால்; அவர் தெய்வீகப் புலவராக இருந்தமையால் பிடி இருகும் முன்னரே சுதாரித்துக் கொண்டார். சோதனை வந்துற்றவுடன் சோர்ந்துபோய் சுயமிழந்து, சூடிழந்து, சொரணையிழந்து போய்விடுகின்றார்களே நம்மிலே மிகப்பலர், அப்படியில்லாமல் 'நமக்கேன் இது வந்துற்றது? எனச் சிந்தித்த அவர், தனது கால்ச் சுவடுகளைத் திரும்பிப் பார்த்தார். அங்கே தனக்கென ஒரு தனி முத்திரை இல்லாமலிருப்பதை உணர்ந்தார். அப்படி

பாடுவதின் மூலம் அந்தத் தவற்றினை களைய விரும்புகின்றேன்' எனச் சொல்வதாகவும் இங்கே பொருள் கொள்ள வழியுண்டு.

اِذْ قَلَّدَانِيَ مَا تُخْشٰى عَوَاقِبُهٗ
كَاَنَّنِيْ بِهِمَا هَدْيٌ مِّنَ النَّعَمِ ﴿١٢١﴾

**இத்கல்லதானியம்மா துக்ஷா -**
**- அவாகிபுஹூ**
**க அன்னனிபிஹிமா ஹத்யுன் -**
**- மினன்னஅமீ**

ஏனெனில்: அந்த [வீணர்களைப் புகழ் பாடுவதும், மன்னர்களுக்கு குற்றவேல் செய்வதுமான] இரண்டுமே, அஞ்சப் படுவதற்குரிய இறுதி முடிவை என் கழுத்தில் மாலையாகச் சூட்டி விட்டன. ஆதலால் அவ்விரு வேண்டாச் செயலின் காரணமாக பலிகொடுக்க நேர்ந்து விடப்படும் கால்நடை போன்று ஆகிவிட்டேன்.

இதனை :

கிலிகொடுக்கும்மாலை அந்தக்கெடுபவங்கள் என்
- கழுத்தில்

பலிகொடுக்கும்கால்நடைமேற் குறிபோற் -
- போட்டனவே

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : பலி கொடுக்கப்படுவதற்காக நேர்ந்து விடப் பட்டுள்ள ஆடு, மாடு, ஒட்டகை போன்ற கால்நடை களுக்கு அதன் கழுத்துக்களில் 'இது பலிப் பிராணி' என்பதை உணர்த்தும் அடையாளமிடப்படுவதைப் போல், நான் செய்து விட்ட அத் தீமைகள் என் கழுத்தில் தொங்கிக் கொண்டிருப்பதால் கிலி பிடித்து உழலுகுன்றேன் நான்.

வி-ரை : முற்காலங்களில் கஃபா ஷரீபிற்காக ஆடு, மாடு, ஒட்டகை போன்ற கால்நடைகளை பலிப் பிராணி களாக நேர்ந்து விடுவது பழக்கம்.

அங்ஙனம் நேர்ந்துவிடப்பட்ட கால்நடைகளின் கழுத் தில் அது நேர்த்திக்கடன் பிராணி என்பதைக் காட்டும் வண்ணம் தோல், அல்லது மரநார் ஆகியவற்றை மாலை யாகச் சூட்டப் பட்டிருக்கும்.

இதனை இங்கே; நினைவு கூறும் நமது புலவர் பெருமான் -

அந்தப் பலீ பிராணிகளுக்குத் தன்னை ஒப்பீடு கின்றார்.

அதாவது ;

'கால்நடைகளின் கழுத்துக்களில் தொங்க விடப் பட்டுள்ள அடையாளம், அது பலி பிராணி என இனம் காட்டுவது போல் நான் முன்வாழ்க்கையில் செய்து

இதனை -

அந்தநிலைக்கண் இளமைக் கடிபணிந்தேன்-
- வெம்பவமும்
சிந்தைத்துயரும்அன்றிச் சேர்த்தபலன்-
- ஒன்றில்லை

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : தகுதியற்றவர்களைத் துதி பாடி அவர்களுக்கு தொண்டூழியம் புரிந்து வந்த அக்காலை, நான் வாலிப முறுக்குடன் இருந்தமையால் அப்பருவத்தின் சேஷ்டை களுக்கு-அறிவீனங்களுக்கு அடிபணிய நேர்ந்து அங்ஙனம் குற்றமிழைத்து விட்டேன். அப்போது அங்ஙனம் செய்ததால் நான் சம்பாதித்த சொத்துக்கள் என்ன தெரியுமா? மனதை அலைக்கழிக்கும் நிம்மதியின்மையும், பாவச் சுமையையும் தான்.

## வாலிபச் சேஷ்டைகள்

வி - ரை : வாலிபப் பருவத்தின் சேஷ்டைகளையும் அதனால் விளையும் ஈடு செய்ய முடியாத நஷ்டங்களை யும் இங்கே எண்பித்துக் காட்டுகின்றார்.

வாலிபத்தின் சேஷ்டைகள் தான் என்ன?

பெண், பொன், புகழ், மண், மனை ஆகியவற்றில் அளவு கடந்த ஆசை, அதனால் விளையும் அளவுக்கதி கமான உலகப் பற்று, அதனால் ஹராம் ஹலால் என்ப

வைகளை வகை வைக்காமல் 'எப்படியும் முன்னேற வேண்டும்' என்ற வேகம் அந்த வேகத்தால் விளையும் லாப நட்டங்களை சட்டை செய்யாத அசட்டுத்தனம் என அடுக்கிக் கொண்டே போகலாம். ஆக இதனையே 'வாலிபத்தின் சேஷ்டை' எனப்படுகின்றது. இதனை 'பருவக் கோளாறு' என்று கூறுவோருமுண்டு.

## வாலிபர்களுக்கு உபதேசம்

'இளம் கன்று பயமறியாது' என்பார்களே அதுபோல இரத்த முறுக்கால், கறித் திமிறினால், நரம்பு உறுதியினாலெல்லாம் ஏற்படும் இந்தப் பருவக்கோளாறுகளிலிருந்து தப்பித்து - காளை வயதில் - கடமையைச் சரிவரச் செய்யத் துணிகின்றார்களே. அத்தகு உத்தம வாலிபர்களை நபிகளார் மிகப் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள். 'அவர்களின் செய்கைகளுக்கு இரட்டிப்புக் கூலி கொடுக்கப்படும்' என ஊக்கம் கொடுத்துள்ளார்கள்.

ஆனால்; அங்கனம் தனக்கேற்படும் பருவக் கோளாறுகளில் சிக்கி, சீர்கெட்டு, மார்க்கக் கடமைகளை - ஒழுக்கங்களையெல்லாம் மறந்து வாழ்ந்து, ஆடாத ஆட்டமெல்லாம் வாலிபன் ஆடிமுடிக்கின்றானென்றால் அவனை அதுவரை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த இறைவன், அவனிடமிருந்து 'பாவமன்னிப்புக் கோருதலை' எதிர்பார்க்கின்றானாம். இறைவனது எதிர்பார்த்தலுக்கு

ஏற்ப அந்த வாலிபன் அவரிடம் பாவமன்னிப்புக் கோரும் முகமாக விண்ணோக்கிக் கையை உயர்த்தி விட்டால் வானவர்களை அழைத்து 'பார்த்தீரா வானவர்களே! எனது கலீபாவின் நிரபராதித் தன்மையை' எனக் கூறி - ஒரு தாய், தவறி ஓடிவிட்ட தன் மகனைத் திரும்பக் கண்ட மகிழ்ச்சியோடு - அவனது இறைஞ்சுதலை ஏற்றுக் கொள்ளுகின்றானாம் கிருபை மிக்க ரஹ்மான். இப்படிக் கூறுவது நானல்ல. அப்படியென்றால் இஸ்லாம் வாலிபர்களுக்கு எவ்வளவு உயர்ந்த இடம் தருகின்றது என்பதை இதிலிருந்து நம்மால் புரிந்துகொள்ள முடிகின்றது. அப்படித் தானே?

நபிகளாரின் இந்த அறிவுறுத்தலை அடிப்படையாகக் கொண்டுதான் நமது புலவர் பெருமானும் தன் குற்றங்களை ஒப்புக் கொள்கின்றார். எப்படியெனில்;

'நான் பருவக்கோளாறுகளினால் ஏற்பட்ட பேராசையின் காரணமாக பொன்னையும், பொருளையும், புகழையும் குவிக்கவேண்டும் என்ற மடமையான ஆவலினால் புகழக்கூடாத புழுக்கைகளை எல்லாம் புகழ்ந்துபாடி குற்றமிழைத்து விட்டேன்' என்று.

'இப்படி பொன் போன்ற பருவத்தை வீணடித்து நீவிர் சேர்த்த பொன்னும், மணியும், மனையும் என்ன வாயிற்று?' என நாம் அவரைக் கேட்பதற்கு முன் அவரே முன் மொழிகின்றார் : 'நான் அங்கனம் சம்பாதித்த பொன்னும், பொருளும் பாவமூட்டைகளையும், நிம்மதியின்மையயும்தான் எனக்குப் பரிசாகத் தந்தன' என்று.

அப்படிக் கூறுவதன் மூலம்;

'ஓ - உலகத்து வாலிபர்களே! உங்களுடன் இப்போது கூடிக் குலாவும் வாலிபம், முன்பு என்னிடமும் கூடிக் குலாவினவள் தான். நான் அப்போது, 'அவள் என்னுடன் நிரந்தரமாக இருந்திடுவாள்' என நம்பி - அவளுக்காக வரம்புமீறி - எது எதையோ செய்தேன், ஆனால் அங்கனம் கூடாச் செயல்களையெல்லாம் செய்தும் கூட என்னிட மிருந்து இரத்தம் வற்றியவுடன் என்னை 'அம்போ' என விட்டு விட்டு உங்களிடம் ஓடி வந்து விட்டாள். இப்போது நான் அவளை இழந்து விட்டு - ஆனால் அவள் பொருட்டால் செய்த கூடாக் காரியங்களுக்காக பாவ மூட்டைகளைச் சுமந்து நிம்மதியில்லாமல் உழன்று கொண்டிருக்கின்றேன். ஆனால் என்னோடு இது போய் விடவில்லை. என்னைப் போல உங்களையும் தவிக்க விட்டு விட்டு இன்றைக்கில்லாவிட்டாலும் உங்கள் இரத்தம் குறைந்த அன்றைக்கு நிச்சயம் ஓடி விடுவாள். ஜாக்கிர தையாக வாழுங்கள்' என அவர் எச்சரிக்கவும் செய் கின்றார்.



فَيَا خَسَارَةَ نَفْسِي فِي تِجَارَتِهَا
لَمْ تَشْتَرِ الدِّينَ بِالدُّنْيَا وَلَمْ تَسُمِ (١٤)

ஃபயாகஸாரத்தநஃப் - ஸீஃபீதிஜாரத்திஹா
லம்தஷ்தரித்தீனபித் - துன்யாவலம்தஸுமி

ஆன்மா செய்த வாணிபத்தில் அஃதடைந்த நட்டமென்னே! இம்மை வாழ்விற்கு பயன் கொடுத் திடும் வண்ணம் மார்க்கத்தை கொள் முதலாகக் கொள்ளவில்லையே!

இதனை -

ஆன்மாசெய்வாணிபத்தில் அஃதடைந்த
நட்டம்என்னே!
மேன்மார்க்கம்கொள்ளவில்லை;
மேதினிவாழ்வுக் கீடாய்
என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : அழுகு பொருளான 'இம்மை இன்பம்' எனும் சரக்கை கொள்முதல் செய்துள்ள மனிதன் அதற்கீடாக - பழகப்பழக, நாள்பட நாள்பட - மெருகு கூடி, மதிப்புக் கூடும் மார்க்க ஒழுக்கங்களை கொள்முதல் செய்யத் தவறி ஈடு செய்ய முடியாத மாபெரும் நஷ்டத்திற்குள்ளாகி விடுகின்றான்.

வி - ரை : புலவர் பெருமான் இங்கே, இம்மை இன்பங்களையும், மார்க்க ஒழுக்கங்களையும் வியாபாரப் பொருளாகச் சித்தரித்து அவ்விரண்டில் மார்க்க ஒழுக்கங்களைக் காணவும், இம்மை இன்பத்தைத்தான் மனிதன் அதிக மதிகமாக கொள்முதல் செய்து வருவதாகக் கூறிக் காண்பிக்கின்றார்.

## அழுகு பொருட்கள்

வியாபாரம் செய்வது எதற்கு? இலாபம் பெற்றுய்ய வேண்டும் என்பதற்குத்தானே?

ஆனால், ஒரு வணிகன் இலட்சக்கணக்கான ரூபாய்களை முடக்கி, தேவைக்கு அதிகமாக — விலைபோகும் அளவைப் பார்க்கிலும் அதிகமாக - அழுகு பொருட்களை மட்டும் வாங்கிச் சேகரித்தால் அவனது நிலை என்னவாகும்.

காய், கறி பழம் போன்றவை மனிதனுக்குத் தேவை தான். அதற்காக, அவனது கடையில் விற்கும் அளவைப் பார்க்கிலும் மிக அதிகமாக அவைகளை ஸ்டாக் செய்தால் குறிப்பிட்ட நாட்கள் சென்றவுடன் அவைகள் அழுகிக் கொழ கொழத்துப் போய் கடைசியில் அவைகளைக் குப்பையில் அல்லவா கொட்டும்படி ஆகும்!

## ஆயுள் எனும் முதலீடு

அதே நேரத்தில்; அவன். தங்கம், வெள்ளி போன்ற பொருட்களில் எவ்வளவு பெரிய முதலீட்டை முடக்கி

எவ்வளவு அதிகமாக அதை ஸ்டாக் செய்தாலும் அதனால் அவ்வணிகளுக்கு லாபத்தைத் தவிர நட்டமொன்றும் ஏற்பட வழியில்லை அல்லவா? இதுபோல, 'ஆயுள்' முதலீட்டால் உலகம் எனும் சந்தையில் கொள் முதல் செய்துவரும் மனிதன் உலக இன்பம்' எனும் அழுகு பொருட்களை மட்டும் முழுக்க, முழுக்கக் கொள்முதல் செய்பவனாக இருக்கின்றான் - என எடுத்துக்காட்டி;

ஆனால் இம்மனிதன் இந்தப் போக்கிலேயே வாழ்ந்தால் 'மறுமை ஈடேற்றம் எனும் இலாபத்தைப் பெற முடியாது போய் ஈடு இணையற்ற முறையில் அவன் திவாலாக ஆகும்படி ஆகிவிடும் - என அவர் தன்னை, அல்ல, அல்ல நம்மை எச்சரிக்கின்றார்.

ஆகவே 'மார்க்க ஒழுக்கம்' எனும் நிரந்தர மார்க்கெட் உள்ள சரக்கை, 'உலக இன்பம்' எனும் அழுகு பொருளைப் பார்க்கினும் அதிகமாக இக்லாவிட்டாலும் அதற்கு ஈடாகவாவது கொள்முதல் செய்து கொள்ளும்படி அறிவுரை பகர்கின்றார்.

وَمَنْ يَبِعْ آجِلًا مِنْهُ بِعَاجِلِهِ
يَبِنْ لَهُ الْغَبْنُ فِي بَيْعٍ وَفِي سَلَمِ (١٤٤)

வமன் யபிஃ ஆஜிலன் மின்ஹு
- பிஆஜிலிஹி
யபின் லஹுல்கப்னு ஃபீ பைஇன் வஃபீ
- ஸலமி

(அற்பத்திலும் அற்பமான) இம்மை வாழ்க்கையை வாங்கிக் கொண்டு அம்மை (மறுமை) வாழ்க்கையை விற்று விட்டவனுக்கு வணிகத்திலும் ஒப்பந்தத்திலும் நட்டமோ நட்டம்தான்.

இதனை -

இம்மைக்கீடாம்மறுமையெழில் வாழ்வை
- விற்பவன்றன்

செம்மையில்லா வாணிபமும்செய்பொருந்தும்
- நட்டமதாம்

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: 'மறுமை ஈடேற்றம்' எனும் சரக்கிற்குப் பகரமாக 'இம்மை வாழ்வு' எனும் கட்டுப்பாட்டுக்குள்ளான (போதை) சரக்கை கொள்முதல் செய்பவனின் வணிகமும் ஒப்பந்தமும் நேர்மையற்றது. நிரப்ப முடியாத கேட்டினை விளைவிக்கும் நஷ்டத்தைத் தரவல்லது.

## நல்ல நோட்டும் கள்ள நோட்டும்

வி-ரை: நல்ல நோட்டுக்களைக் கொடுத்து கள்ள நோட்டை வாங்குபவர்களின் நிலையைக் கண்கூடாகப் பார்த்துக் கொண்டு தானே உள்ளோம். அதுபோல 'மறுமை ஈடேற்றம்' எனும் நல்ல நோட்டைக் கொடுத்து விட்டு இம்மை இன்பம் எனும் கள்ள நோட்டை வாங்கிட வேண்டாம் என எச்சரிக்கின்றார்.



إِنْ آتِ ذَنْبًا فَمَا عَهْدِي بِمُنْتَقِضٍ
مِنَ النَّبِيِّ وَلَا حَبْلِي بِمُنْصَرِمِ ﴿١٤٥﴾

**இன் ஆத்திதன்பன்: பமா அஹ்திதீ**
**- மூன் தகிழின்**
**மினன் நபிய்யிவலா ஹப்லீ**
**- மூன் ஸரிமீ**

நான் பாவம் செய்திருப்பினும் நபிகளார் (ஸல்) அவர்களிடத்தில் நான் கொண்டுள்ள நம்பிக்கை சோர்ந்துவிடவுமில்லை; எனது தாம்புக் கயிறு இற்றுப் போகவுமில்லை.

*இதனை -*

*நான்பாவஞ்செய்திடினும், நபியிடத்துக்*
- கொள்ளுறுதி
*தான்சோர்ந்துடையவில்லை; தாம்பும்இற்றுப்*
- போகவில்லை

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : நானும் பாவியாகத்தான் - குற்றவாளியாகத் தான் - இருக்கின்றேன், என்றாலும் கரை சேர்க்கும் காருண்ய மூர்த்தியான காமில் நபியுல்லா (ஸல்) அவர்களின் மீது நான் கொண்டுள்ள உறுதி - நெற்கதிர்களை மிதித்து போரடிப்பதற்காகப் பயன்படுத்தும் மாடுகளின் கழுத்துக் களைப் பிணைந்துள்ள கயிற்றினைப் போன்று - இற்றுப்

போகாமலிருப்பதால் நான் மனம் சோர்ந்து-அவநம்பிக்கை யடைந்து விட்டுப் போகவில்லை.

வி-ரை : இம்மை மறுமை வியாபாரங்களைப் பற்றி தத்துவ உபதேசம் புரிந்த புலவர் பெருமானுக்கு, மன உறுத்தல் ஏற்பட்டு விட்டது போலும்,

## நம்பிக்கை தரும் தும்பிக்கை

'ஏமய்யா ! ஊருக்கு உபதேசம் செய்திடும் உன் சொந்த வியாபாரம் எப்படி? அதனை நீவிர் உற்றுப் பார்க்கவில்லையா...? என எவரேனும் நம்மைப் பார்த்துக் கேட்டு விட்டால் என்ன செய்வது?' - என அவரின் குற்ற மனம் குறுகுறுத்து விட்டது போலும். ஆகவே

நானும் நஷ்ட வியாபாரம் செய்துள்ளவன் தான் ஆனால் எனது நஷ்டத்தைத் தேற்றிக் கொள்ள எனக்கு வழிவகை யுள்ளது. என்ன தெரியுமா?

நாளைக் கியாமத்து நாளையில் தண்டனை ஊர்ஜிதம் செய்யப்பட்ட குற்றவாளி - பாவி-களை தனது தார்மீகமான ஷஃபாஅத்தால் என் தானைத் தலைவர் தாஹா நபி (ஸல் - அம்) அவர்கள் ஈடேற்றம் பெறச் செய்வார்களே ! அப்போது, பாவியான என்னையும் அக் கூட்டத்திலே இணைத்துக் கொள்வார்கள் - என்ற நம்பிக்கை தான் அந்த வழிவகை.

பெருமானின் ஷஃபாஅத்தில் அவ்வளவு அபாரமான நம்பிக்கை எனக்கிருப்பதால் நான் நஷ்ட வியாபாரம் செய்து திவாலாகி இருப்பினும் கைசேதம் கொள்ளவில்லை.

ஆகவே அன்பு ரசிகனே ! வாசகனே !

நீயும் அண்ணலாரின் அந்த ஷஃபாஅத்தில் நம்பிக்கை வைத்து உறுதிகொள். அந்த நம்பிக்கைக் கயிறுதான் உன்னையும் என்மையும் கரைசேர்க்கும் தும்பிக்கை' - என நமக்கெல்லாம் புத்திமதி கூறுகின்றார்.

---

فَإِنَّ لِي ذِمَّةً مِّنْهُ بِتَسْمِيَتِي
مُحَمَّدًا وَهُوَ أَوْفَى الْخَلْقِ بِالذِّمَمِ ﴿١٣٦﴾

**ஃபஇன்ன லீ திம்மத(ன்)ம்**
**- மின்ஹு பி தஸ்மியதீ**
**முஹம்மத(ன்)வ் வஹுவ அவ்**
**- ஃபல்கல்கி பித்திமமி**

ஏனெனில் 'முஹம்மது' எனும் புனிதப் பெயரை நான் பூண்டுள்ளதால் அந்த நன் நபிகளார்பால் எனக்கு 'ஜாமீன்' கொடுத்திடும் பொறுப்பு உள்ளது அவர்களோ ஜாமீன் நிறைவேற்றித் தருவதில் படைப்புக்களிலேயே தலை சிறந்தோராம்.

இதனை

என்பேர்முஹம்மதுவா யிருத்தலினால்,
- என்பொறுப்பு
மன்பாரோர்யாவரினும் மாண்பொறுப்புள்
- ளார்க்குளதே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : ஏனெனில் எனக்கு 'முஹம்மது' என திரு நாமம் சூட்டப்பட்டுள்ளதால் உலகோர் யாவரிலும் 'ஜாமீன்' கொடுக்க மிகத் தகுதி வாய்ந்த முஹம்மது (ஸல் - அம்) அவர்களின்பால் எனக்கு கியாமத்தில் - 'ஜாமீன்' கொடுக்கும் பொறுப்பு உள்ளது.

வி-ரை : 'முஹம்மது' எனும் பெயருக்குள்ள சிறப்பை புலவர் பெருமான் இங்கே எண்பித்துக் காட்டுகின்றார்.

## 'முஹம்மது' எனும் பெயருக்குள்ள மாண்பு

'முஹம்மது' எனும் பெயர் எவருக்குச் சூட்டப் பட்டுள்ளதோ அவரின் உடலை நரக நெருப்பின் மீது ஹராமாக்கப்பட்டுள்ளது'- என்று நமது நபிகளார் (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.



பெருமானின் ஷஃபாஅத்தில் அவ்வளவு அபாரமான நம்பிக்கை எனக்கிருப்பதால் நான் நஷ்ட வியாபாரம் செய்து திவாலாகி இருப்பினும் கைசேதம் கொள்ளவில்லை.

ஆகவே அன்பு ரசிகனே! வாசகனே!

நீயும் அண்ணலாரின் அந்த ஷஃபாஅத்தில் நம்பிக்கை வைத்து உறுதிகொள். அந்த நம்பிக்கைக் கயிறுதான் உன்னையும் என்மையும் கரைசேர்க்கும் தும்பிக்கை' - என நமக்கெல்லாம் புத்திமதி கூறுகின்றார்-

---

فَإِنَّ لِي ذِمَّةً مِنْهُ بِتَسْمِيَتِي
مُحَمَّدًا وَهُوَ أَوْفَى الْخَلْقِ بِالذِّمَمِ ١٤٦

**ஃப இன்னலி திம்மதந்(ன்)ம்**

**- மின்ஹு பி தஸ்மியதி**

**முஹம்மத(ன்)வ்வஹுவ அவ்**

**- ஃபல்கல்கி பித்திமமி**

ஏனெனில் 'முஹம்மது' எனும் புனிதப் பெயரை நான் பூண்டுள்ளதால் அந்த நன் நபிகளார்பால் எனக்கு 'ஜாமீன்' கொடுத்திடும் பொறுப்பு உள்ளது அவர்களோ ஜாமீன் நிறைவேற்றித் தருவதில் படைப்புக்களிலேயே தலை சிறந்தோராம்.

இதனை

என்பேர்முஹம்மதுவா யிருத்தலினால்,
- என்பொறுப்பு
மன்பாரோர்யாவரினும் மாண்பொறுப்புள்
- ளார்க்குளதே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : ஏனெனில் எனக்கு 'முஹம்மது' என திரு நாமம் சூட்டப்பட்டுள்ளதால் உலகோர் யாவரிலும் 'ஜாமீன்' கொடுக்க மிகத் தகுதி வாய்ந்த முஹம்மது (ஸல் - அம்) அவர்களின்பால் எனக்கு கியாமத்தில் - 'ஜாமீன்' கொடுக்கும் பொறுப்பு உள்ளது.

வி-ரை : 'முஹம்மது' எனும் பெயருக்குள்ள சிறப்பை புலவர் பெருமான் இங்கே எண்பித்துக் காட்டுகின்றார்.

## 'முஹம்மது' எனும் பெயருக்குள்ள மாண்பு

'முஹம்மது' எனும் பெயர் எவருக்குச் சூட்டப் பட்டுள்ளதோ அவரின் உடலை நரக நெருப்பின் மீது ஹராமாக்கப்பட்டுள்ளது'- என்று நமது நபிகளார் (ஸல்) அவர்கள் நவின்றுள்ளார்கள்.



## ஆண் மகவு பிறப்பதற்கு அழகிய ஆலோசனை!

ஒருவரின் மனைவி கர்ப்பமுற்றிருந்த காலை அவர் தனக்குப் பிறக்கப் போகும் குழந்தைக்கு 'முஹம்மது' எனப் பெயர் சூட்டுவதாக நிய்யத் செய்து கொண்டால் வல்ல அல்லாஹ் அந்தக் கற்பத்திலுள்ள சிசுவை ஆண் குழந்தையாகவே பிறக்கச் செய்வான்' என நபிகளார் கூறியுள்ளதாக இப்னு ஜரீஹ் (ரலி - அன்ஹு) அறிவிக்க அதனை இப்னு அபீ மலீக்கா (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

ஒருமுறை அப்துல் ஜலீல் என்பாரின் மகள் ஜலீலா (ரலி - அன்ஹா) என்பவர் நபிகளாரிடம் வந்து 'யா ரசூலல்லாஹ்! எனக்கு இதுவரை ஆண்குழந்தை பாக்கியமே இல்லாதிருந்து வருகின்றது' என்றபோது-

'நீ அடுத்துப் பிறக்கவுள்ள குழந்தைக்கு 'முஹம்மது' எனப்பெயர் சூட்டுவதாக நிய்யத் செய்து கொள்' என நபிகளார் அந்தப்பெண் மணிக்குப் புத்தி கூறினார்கள். அவரும் அங்கனமே நேர்ச்சை செய்து கொண்டார். சுப்ஹானல்லாஹ்! என்ன ஆச்சரியம்!

அதன் பின் அந்த ஜலீலாவிற்கு ஆண் குழந்தையே பிறந்தது.

ஒரு பெண் கர்ப்பமுற்றிருக்கும்போது - மூன்று மாதத்திற்கு மிகாதிருக்கும் வேளையில் அவளது கணவன் - அவள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கும்போது அவளது அடிவயிற்றில் தனது வலது கையின் ஆள்காட்டி விரலால்

'முஹம்மது' என்று எழுதினால் அக்கருவில் உருவாகும் குழந்தை (இன்ஷா அல்லாஹ்) ஆண் குழந்தையாகப் பிறக்கும் என்ற இந்த விபரத்தை உத்தமபாளையம் பன்னூல் ஆசிரியரும் - விலாயத் பெற்றுச்சிறந்த ஆலிம் பெருந்தகையுமான அல்லாமா எஸ். எஸ். முஹம்மது அப்துல்காதிர் ஹஜ்ரத் (ரஹ் - அன்ஹு) அவர்கள் சொல்லிட நான் செவியேற்றுள்ளேன்.

## முஹம்மதுவிற்கு முன்னுரிமை கொடுங்கள்

'உங்களில் எவருக்கேனும் 'முஹம்மது, எனப் பெயரிடப் பட்டிருக்குமானால் அங்கனம் பெயர் கொண்டுள்ள மனிதரை (அந்தப் பெயருக்காக) மரியாதையுடன் நடத் துங்கள், சபைகளில் அவருக்கு முதலிடம் கொடுங்கள். அவரை எதற்காகவும் கோபித்து அவரிடம் கடுகடுப்பைக் காட்டாதீர்கள்' என நமது நபிகளார் அறிவுறுத்தி யுள்ளார்கள.

ஒரு கூட்டம் ஒரு முக்கியமான காரியம் சம்பந்தமாக ஆழ்ந்த ஆலோசனை நடத்துகின்றது. அக்கூட்டத்தில் 'முஹம்மது' என்ற திருநாமம் உள்ள ஒருவரும் இருக்கின் றார்-என்றால், அந்த ஆலோசனை வெற்றி தரும் செயலாக -அந்த முஹம்மது என்ற பெயரின் பரக்கத்தால் - பரிணமிக் காமல் போகாது' என நபிகளார் நவின்றுள்ளார்கள்.



## வறுமை ஏற்படாமலிருக்க

'பரகத்' எனும் நூலில் காணப்படுகின்றது-

எந்த வீட்டில் முஹம்மது எனும் திருநாமம் கொண்ட மனிதர் இருக்கின்றாரோ அந்த வீட்டில் வறுமை ஏற்படவே ஏற்படாது' என நபிகளார் நவின்றுள்ளார்கள்.

'எந்த இல்லில் 'முஹம்மது' என்ற பெயர் கொண்ட மனிதர் இருக்கின்றாறோ அது பாக்கியம் நிறைந்த வீடாகத் திகழும்' - என எம்மான் முஹம்மது (ஸல் - அம்) நவின்றதாக 'பரகத்' எனும் அந் நூலில் எண்பித்துக் காட்டப்படுகின்றது.

(நூல்: நுஜ்ஹதுல் மஜாலிஸ்)

இந்த ஹதீஸ்களெல்லம் பொருள் உள்ளவை என்பதை புலவர் பெருமான் இங்கே ஊர்ஜிதம் செய்கின்றார்

## முஹம்மது எனும் பெயரால் ஈடேற்றம் பெற்றிட முடியும்!

அஃதாவது;

நான் பாவியாக இருந்தாலும் அடியார்களைக் கரை சேர்க்கும் அருளாளர் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் மீது நான் கொண்டுள்ள உறுதி இற்றுப் போகாமலிருப்பதால் நான் மனம் தளர்ந்து போகவில்லை' என இதற்கு முன்னுள்ள கண்ணியில் கூறினாரல்லவா? அப்படிப்பட்ட நம்பிக்கை எந்த ஆதாரத்தால் தனக்கு ஏற்பட்டது' என்பதை இங்கு சுட்டுகின்றார்.

அஃதாவது;

என்னுடைய நற்செய்கையினால், நான் ஓதி வரும் ஸலவாத்துக்கள் ஒப்புக்கொள்ளப் பட்டதனால், நான் வணங்கிய வணக்கங்களினால் - ஆக இவை போன்ற என் சுய முயற்சியினாலெல்லாம் ஈடேற்றம் பெற்றுவிட முடியும் என்று நான் கருதவில்லை. ஆனால் என்னுடைய இயற் பெயர்-இடப்பட்ட பெயர் - 'ஷர்புத்தீன் முஹம்மது' என்பதாகும். என்னுடை இந்தப் பெயரில் இணைந்துள்ள அந்த 'முஹம்மது' என்பதன் பொருட்டால்தான் எனக்கு நிச்சயம் ஈடேற்றம் கிடைக்கும். நாளைக் கியாமத்தில் நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் எனது அந்தப் பெயரைக் கேட்டாவது எனக்கு நிச்சயம் ஷஃபாஅத் செய்வார்கள் என நம்புகின்றேன்- எனக் கோடிட்டுக்காட்டுகின்றார்.

சுப்ஹானல்லாஹ்! என்னே நம்பிக்கை, என்னே எளிமை, என்னே அடக்கம். இமாம் பூசிரிக்கு நம்மின் நல்வாழ்த்துக்கள்.

அங்கனம் அவர் கூறுவதன் மூலம்;

என் அன்புச் சமுதாயமே! நீ இம்மையில் அருளும், பொருளும் பெற்று வாழ்ந்திட, அம்மையில் அண்ணலாரின் ஷஃபாஅத்திற்கு அருகதையாகிட வேறு எதையும் நம்பிக் கொண்டிருக்க வேண்டாம். உனக்கு உன் வழித்தோன்றல்களுக்கு 'முஹம்மது, எனும்பரகத்துப் பொருந்திய பெயர் சூட்டிக்கொள். மற்றது கைகொடுத்தாலும் கொடுக்கா விட்டாலும் அந்தப் பெயரின் பொருட்டினாலாவது அரவணைப்புப் பெற்றுய்ய வாய்ப்புண்டு'' என பரிந்துரை வழங்குகின்றார்.

## விரிவுரையாளர் முக்கியக் குறிப்பு

நான் எனது பெயரை **N. S. N. அப்துல் காதிர்'** என்றுதான் போட்டு வருகின்றேன். என் கையெழுத்தும் அப்படியே. எனது மக்களுக்கு 'A' மஹ்மூதாஃபாத்திமா' என்றே கொடிவழியை இதுவரை ஆக்கி வந்துள்ளேன்.

ஆனால், எனது பள்ளிக்கூட பதிவுத்தாளில் (ரிகார்டு சீட்டில்) N. S. நைனார் முஹம்மது மகன் 'முஹம்மது அப்துல் காதிர்' என்று உள்ளது. அன்றி;

எனது தகப்பனார் அவர்கள் எழுதி வைத்துள்ள குடும்பத்தின் பிறப்பு இறப்புப் புத்தகத்திலும் - என் பிறப்பை - நான் குழந்தையாக இருக்கும் போது பெயர் சூட்டியவுடன் - பிள்ளைக்கு 'முஹம்மது அப்துல் காதிர்' எனப் பெயர் சூட்டப் பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. அன்றி;

நான் பள்ளிப் பருவமாக இருந்த போது 'முஹம்மது அப்துல் காதிர்' என்றே எழுதியும் வந்துள்ளேன். ஆனால் கொஞ்சம் அறியும் பருவம் வந்துற்ற காலை (பருவம் அறியும் பருவமாக இருந்திட்டாலும் என்னைப் பொருத்தவரை அது துரதிஷ்ட காலம் தான் போலும்) இவ்வளவு நீளமான பெயர் எதற்கு என்றெண்ணி நானாக முஹம்மதுவை நீக்கி வெறும் 'அப்துல் காதிர்' என ஆக்கிக் கொண்டேன்.

ஆனால் பூசிரி (ரஹ்) அவர்களின் இந்தப் பரிந்துரையின் பொருளை விளங்கிய இன்று (22-11-76 மதியம் சுமார் 12 மணி) நாம் நமக்குக் கிடைத்திருந்த எவ்வளவு பெரிய பாக்கியத்தை நழுவ விட்டிருக்கின்றோம்... என உணர்ந்து எனது தவறைத் திருத்தி இன்றிருந்து என்னை முஹம்மது அப்துல் காதிராக ஆககிக் கொண்டேன்.

إِنْ لَمْ يَكُنْ فِي مَعَادِي آخِذًا بِيَدِي
فَضْلًا وَإِلَّا فَقُلْ يَا زَلَّةَ الْقَدَمِ (152)

**இ(ல்)ஸ் லம் யகுன் ஃபீ மஆதீ ஆகி**
**- தன் பியதீ**
**பழ்லன் வ இல்லா ஃபகுல் -**
**- யா ஜல்லல் தல்கதமி**

(எந்த ஆதரவுமற்ற) மறுமை நாளின் போது அந்த நபிகள் பெருமான் எனது கரங்களைப் பற்றி என்னைக் காப்பாற்றா விட்டால் 'பாதம் தவறிய பாவியே, என நீ என்னைச் சாற்று.

இதனை

மறுமைநாள்என்கரத்தை மாநபிகோன்
பற்றாக்கால்
'சிறுமையோய்!கால்சறுக்கும் தீயோய்!' என
- அழைப்பாய்
என மஹறக்காயர் பாடுகின்றார்.

க - ரை : ஆகவே, நாதி ஏதுமற்ற கியாமத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் என் கரம் பிடித்துக் காப்பாற்றா விட்டால் 'தவறியவனே! கேவலப்பட்டவனே! என என்னை அழைத்துக் கொள்.

வி - ரை : 'முஹம்மது' எனும் பெயர் தனக்குச் சூட்டப்பட்டுள்ளதால் நிச்சயம் மஹ்ஷரில் நபிகளாரின்

ஷஃபாஅத் தனக்குக் கிடைக்கும் எனக் கூறிய புலவர் பெருமான் தனது கூற்றை ஊர்ஜிதப்படுத்துவதற்காக இங்கே சவால் விடுகின்றார்.

குத்துச் சண்டை வீரர் ஜனாப் முஹம்மது அலி அவர்கள் ஒவ்வொரு சண்டையின் போதும் சவால் விடுவதைக் கேட்டு பழகியவர்கள் நாம், அதுபோல;

'இச் சண்டையில் நான் வெற்றி பெறாவிட்டால் சவால் விடப்படுவதை உணர்ந்துள்ளவர்கள் நாம்.

இந்தச் சவால்களுக்கெல்லாம் என்ன பொருள்?

நிச்சயம் - நூற்றுக்கு நூறு - வெற்றி பெற்றிடுவேன் என்பது தானே! அதுபோல நமது புலவர் பெருமான் இங்கே சவால் விடுவதன் மூலம் தனக்கு மறுமை வெற்றி உறுதியிலும் உறுதி எனக் கூறுகின்றார்.

அவருக்கு மட்டுமா?

அண்ணலாரின ஏதாவதொரு கிளையைப் பற்றிக் கொண்டவர்களுக்கெல்லாம் வெற்றி உறுதிதான். அங்கனம் பற்றி நிற்பவர்கள் புலவரைப் போலவே சவால் விடலாம்.

ஆனால் நான்?

யா அல்லாஹ்! எங்களின் ஏகபோகத் தலைவர் தாஹா நபி (ஸல்) அவர்களின் சுன்னத்துக்களில் ஏதாவதொரு முனையை இறுகப் பற்றி அதன் மூலம் அன்னாரின் ஷஃபாஅத்திற்கு அருகனாக என்னை - எம்மை ஆக்கியருள்வாயாக ஆமீன்! ஆமீன்!! யாரப்பல் ஆலமீன்!!!

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்

ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்

ஸல்லல்லாஹு அலா முஹம்மத்

யாரப்பி ஸல்லி அலைஹி வ சல்லிம்

حَاشَاهُ أَنْ يُحْرَمَ الرَّاجِي مَكَارِمَهُ
أَوْ يَرْجِعَ الْجَارُ مِنْهُ غَيْرَ مُحْتَرَمِ ١٤٨

**ஹாஷாஹு அ(ய்)ன் யுஹ்ரிமர் ராஜி**
**- மகாரிமஹு**
**அவ்யர்ஜிஅல்ஜாருமின்ஹு ஙைர**
**- முஹ்தரமி**

நபிகள் பெருமானாரின் ஈகையை நம்பியவன் துர்பாக்கியவனாக ஆகினான் என்பதோ; அவர்களின் அரவணைப்பைப் பெற்றவன் பெற்ற பின்னர் இழிவடைந்தான் என்பதோ எக்காலத்திலும் (எவர்க்கும்) நிகழ்ந்ததே இல்லை.

இதனை -

அவர்ஈகைநம்பியொன்றும் அடையாதர் ஈங்கிலரே!
எவரும்அவரையண்டிஇழி வடைந்து மீண்டிலரே!
என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : அண்ணல் நபியுல்லா (ஸல்) அவர்களை நம்பினோர் கைவிடப்பட்டதே இல்லை. அன்னாரின் அரவணைப்பை நாடி அண்டினோர் எவரும் வீழ்ச்சி அடைந்ததுமில்லை.

வி-ரை : அண்ணல் நபியுல்லா (ஸல்) அவர்களின் நெருக்கத்தைப் பெருவதினால் ஏற்படும் பலா பலன்களைக் கூறிக் காண்பிக்கின்றார்-

## நபிகளாரை நம்பினோர் கைவிடப் படார்!

மண்ணை நம்பினால் மோசம் போக நேரிடும்.
பொன்னை நம்பினால் மோசம் போக நேரிடும்.
பெண்ணை நம்பினால் மோசம் போக நேரிடும்.

ஆனால், மண், பொன், பெண் ஆகிய அனைத்திற்கும் அசலாகவும், ஆதாரமாகவும் இருப்பவரும்; அவைகளைப் படைத்து, பாதுகாத்து, பராமரித்தாளும் பரம் பொருளான வல்ல அல்லாஹ்வின் அன்பராகவும், நண்பராகவும் இருப்பவருமான அண்ணல் நபியுல்லா அவர்களை நம்பினால் எவரும் மோசம் போக நேரவே நேராது ன்கின்றார்.

குதுபுல் அக்தாப் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (குத்திஸ ஸிர்ரஹு) அவர்களிலிருந்து நாகை கொண்டிலங்கும் நாதர் ஷாஹுல் ஹமீது நாயகம் (ரஹ்-அன்ஹு) அவர்கள் வரையுள்ள மெய்ஞ்ஞான திலகங்களை ஏறிட்டுப் பாருங்கள்.

உம்மத்தே முஹம்மதிய்யாவில் முதல் மனிதராக இருந்த நபியுல்லா (ஸல்) அவர்களுக்கு அடுத்த அந்தஸ்தைப் பெற்றிலங்கும். ஸய்யிதினா அபூபக்கர் (ரலி-அன்ஹு) அவர்களிலிருந்து கல்வியின் தலைவாசல் எனச் சிறப்பிக்கப் பட்டுள்ள அலி (ரலி-அன்ஹு) வரையுள்ள குலஃபாயே ராஷிதீன்களை எடுத்துக் கொள்ளுங்கள்.

ஹனபி மத்ஹபின் தானைத் தலைவராம் அபூஹனீஃபதுன் நுஃமான் (ரஹ்-அன்ஹு) அவர்களிலிருந்து ஹன்பலி மத்ஹபின் தானைத் தலைவர் அஹ்மதிப்னுஹன்பல் (ரஹ்-அன்ஹு) வரையிலுள்ள இமாம்களை எடுத்துக் கொள்ளுங்கள். இவர்களெல்லாம் யார்? இவர்களுக்கு அத்தகு அந்தஸ்துக்கள் எதற்காக, எப்படி ஏற்பட்டது?

அண்ணல் நபியுல்லா (ஸல்) அவர்களின் ஈகையை நம்பினதாலன்றோ!

அண்ணலாரையண்டிய எவராவது, எப்போதாவது, எந்தத் துறையிலாவது பின்தங்கி, தோல்வி கண்டு வீழ்ந்துள்ளதாக ஒரே ஒரு சிறு வரலாற்றைக் கூட காட்ட முடியுமா?

தத்துவத் துறையில் புகுந்த இமாம் கஜ்ஜாலி (ரஹ்-அன்ஹு) இன்றும் அத்துறையின் தவப்புதல்வராகத் திகழ்ந்து கொண்டுள்ளாரே அது எதனால்?

அரசியல் துறையில் புகுந்த உமர் பின் அப்துல் அஜீஸ் (ரஹ்-அன்ஹு) அன்றும் இன்றும் ஆளுநர்களின் முன் மாதிரியாகத் திகழ்ந்து கொண்டுள்ளாரே அது எதனால்?

பொருளாதாரத் துறையில் புகுந்த இமாம் அபூயூசுஃப் (ரஹ்-அன்ஹி) அன்றும் இன்றும் பொருளியல் நிபுணர்களின் கருத்தைக் கவர்ந்து கொண்டுள்ளாரே அது எதனால்?

இன்று குத்துச் சண்டைத் துறையில் புகுந்த முஹம்மது அலி அத்துறையில் உள்ள அனைவரின் கருத்தையும் கவனத்தையும் ஈர்த்துக் கொண்டுள்ளாரே அது எதனால்?

ஆமாம் திரிகரண சுத்தியோடுள்ள எந்த முஸ்லிமும் அவன் புகுந்த துறையில் பரிணமிக்காமல் இருந்ததாக வரலாறு கிடையவே கிடையாது.

இதனைத்தான் -

'எவரும் அவரையண்டி இழிவடைந்து மீண்டிலரே' என்கின்றார் நமது புலவர் பெருமான், அங்ஙனம் கூறிய அவர்; அதனால்தான் முழுமையாக நம்பி என்னை அந்த அருளுக்கரசரிடம் ஒப்படைத்து விட்டேன் என்றுணர்த்து கின்றார். நாம் என்ன செய்யப் போகின்றோம்?



وَمُنْذُ أَلْزَمْتُ أَفْكَارِي مَدَائِحَهُ
وَجَدْتُهُ لِخَلَاصِي خَيْرَ مُلْتَزِمِ ١٢٩

**வமுன்து அல்ஜமத்து அஃப் காரிம**
**- தாயிஹஹூ**
**வஜத்துஹூலிகலா ஸீகைர**
**- முல்தஜிமி**

நபிகள் பெருமான் அவர்களது புகழை எனது நெஞ்சகத்தில் இருத்திய காலம் தொடுத்து எனது விமோசனத்திற்கு பிணை ஏற்றவர்களில் அந்த நபிகளார் ஒருவரையே சிறந்தவராக நான் கண்டு உணர்ந்துள்ளேன்.

இதனை -

நாதர்புகழ்நெஞ்சகத்தில் நான்இருந்தும் நாள்முதலாய்,
ஓதும்ஒழிவுக்கவரே உயர்ந்தபிணை என்-
- றுணர்ந்தேன்.

என மரைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : இந்த உண்மையை நான் எப்போது கண்டேன் தெரியுமா? நபிகள் நாத (ஸல்-அம்) அவர்களின் திருப்புகழான இந்த புர்தா காவியத்தை என் நெஞ்சத்தில் உருவாக்கிய கால முதல்தான் குர்ஆன் ஷரீபில் சொல்லப் படும் கடைசி விமோசனத்திற்கு அண்ணல் நபியுல்லா அவர்களே சிறந்த பிணை என்பதை உணர்ந்தேன்.

وَلَنْ يَفُوتَ الْغِنَى مِنْهُ يَدًا تَرِبَتْ
إِنَّ الْحَيَا يُنْبِتُ الْأَزْهَارَ فِي الْأَكَمِ ﴿١٥٠﴾

**வல(ய்)ன் யஃபூத்தல் ஃகினா**
**-மின்ஹு யதன் தரிபத்**
**இன்னல்ஹயா யுன்(ம்)பிதுல்**
**- அஸ்ஹார ஃபில்அகமி**

நபிகள் பெருமான் அவர்களின் பொருட்டால் சீமான் தனத்தை வேண்டி விரும்புபவர்களின் விருப்பம் நிறைவேறாமல் இருந்தது இல்லை. (எப்படி? என்றால்) மழை, மேட்டு பாகங்களில் கூட புற் பூண்டுகளை முளைக்கச் செய்து விடுதல் போலாம்.

இதனை —

அவர்செல்வம்வேண்டு நர்கை யடையாமற் போவதில்லை:
புவியில்மழைகுன்றிடத்தும் புற்பூண் டெழுப்பிடுமே.

என மறைக்காயர் பாடுகின்றார்.

## நபிகளாரின் பொருட்டால் இம்மைச் செல்வங்களையும் குவிக்கலாம்

க-ரை : அண்ணல் நபியுல்லா (ஸல்-அம்) அவர்கள் பொருட்டால் செல்வம், செல்வாக்கு வேண்டுவோர் எவரும் கொடுக்கப்படாமல் போவதில்லை. எப்படியெனில் வான்

மழை பூமியில் உள்ள சமதளம், பள்ளம், மேட்டுப் பாங்கான பூமி ஆகிய அனைத்திற்கும் பொதுவானதாகப் பயன்படு வதே போலவாம்

வி-ரை : இதுவரை மறுமைப் பயன்களை (ஷஃபா அத்தைப்) பற்றிக் கூறிக் காண்பித்த புலவர் பெருமான் இங்கே உலகப் பயன்களைப் பற்றிக் கூறுகின்றார்.

மறுமைப் பயன்களென்பது உலகில் மூமின்களாக வாழ்ந்தவர்க்கு மட்டும் சொந்தமானது. ஆனால் உலகப் பயன்கள் மனிதனாகப் பிறந்த அனைவருக்குமே பொதுவானது. ஆகவே உலகில் மூமின், காஃபிர், கிருத்துவர், யூதர் எனப்படும் எந்த வகுப்பைச் சார்ந்த மனிதராக இருந்தாலும். அவர் எம்பெருமான் பொருட்டால் எதனையாவது வேண்டினால் அது அவருக்கு நிச்சயம் கிடைக்கவே செய்யும் என்கின்றார்.

இதற்கு வரலாற்றில் பல எடுத்துக் காட்டுகள் மலிந்து கிடக்கின்றன.

பெருமானாரின் பொருட்டால் பிள்ளை வரம் கேட்ட ஒரு முஷ்ரிகிற்கு அழகிய மழலைச் செல்வம் கிடைக்கப் பெற்ற விந்தையும்.

பெருமான் முஹம்மது (ஸல்அம்) அவர்களின் பொருட் டால் நோய் சுகம் கிடைக்க வேண்டும்-என வேண்டிய ஒரு யூத வகுப்பைச் சேர்ந்த வாலிபருக்கு பிடித்திருந்த கொடு நோய் சூரியனைக் கண்ட பனியைப் போன்று அகன்று முழுச் சுகம் கிடைக்கப் பெற்ற காரணமும்.

இனம், மத, மொழி நிற வேறுபாடுகளற்று மனிதர்களுக்கு மன்னர் நபியுல்லா பொருட்டால் விளைந்த செல்வ செல்வாக்குகள் பற்றிய தகவல்களும் அனந்தம் உண்டு

## வான்மறையின் பொது உடைமை

இந்த உண்மை நிகழ்ச்சிகளை இங்கே விண்டுகாண்பிக்கும் நமது புலவர் பெருமான் அண்ணலாரின் இந்தப் பாகுபாடற்ற மகிமைக்கு அல்லாஹ்வின் மற்றொரு ரஹ்மத்தான வான் மழையை உவமை காட்டி தன் கூற்றுக்கு உரமிடுகின்றார்.

வானம் பொழியும் போது இது விளைநிலம் தரிசு நிலம், இது எப்பயனுமற்ற கற்குன்று இது மேடு எனப்பாகுபாடு காட்டிடாமல் பொதுவாக தன் துளிகளைத் தெளித்து விடுவதும், அதனால் மனிதனுக்குப் பயன்தராத சிறு, சிறு மலை மேடுகளில் கூட புற்பூண்டுகள் முளைத்துப் பூத்துக் காய்த்து கனிகள் கூட தருவதை நாம் அனுபவித்தும் வருகின்றோமல்லவா ?

இந்த பொருள் வளம் நிரம்பிய உவமையினைக் கூறிய தன் மூலம்;

உலகமே ! உலகம் தழுவிய மனித சமுதாயமே ! நாங்கள் கொண்டாடும் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் எங்களுக்கு மட்டும் சொந்தச் சொத்தன்று, உங்களுக்கும் எங்களுக்கும் பொதுவான பொதுமை மலர்-

புதுமை மலர்-புனித மலர்-அவர்.' என அறைகூவுகின்றார். செவிமடுக்குமா உலகம்...?




---

وَلَمْ أُرِدْ زَهْرَةَ الدُّنْيَا الَّتِي اقْتَطَفَتْ
يَدَا زُهَيْرٍ بِمَا أَثْنَى عَلَى هَرَمِ (١٥١)

வலம் உரித் ஜுஹ்ரத
- துன்யல்லதிக் ததஃபத்
யதா ஜுஹைரின் பிமா
- அத்னா அலா ஹரமி

ஆகவே; ''ஹரம்'; எனும் மா மன்னனை புகழ்பாடியதால் ''ஜுஹைர்'' எனும் பெரும் புலவன் தனது கரங்களால் நிறைத்துக்கொண்ட இம்மை இன்பங்களை நான் விரும்பவில்லை.

---

இதனை

ஹரமைப்புகழ்ந்தஜுஹைர்க் கவிஞர்கரம்பறித்த
உரிமைப்பொருளாம்உலகின்உயர்வதனை
வேண்டிலனே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : 'ஹரம்' எனும் அரசனைப் புகழ்ந்து பாடி அதனால் அம் மன்னவனிடம் ஏராளமான இனாம்களைப் பெற்று கோடீசுவர பிரபுவாக ஆன 'ஜுஹைர்' என்ற புலவனைப்போல, நான் நபிகளாரைப் புகழ்ந்து ஸ்தோத்திரம் செய்வதால் இவ்வுலகப் பொன் பொருளைக் கருதவில்லை.

வி-ரை : இஸ்லாமியத்தின் ஆரம்ப நாட்களில் நபிகளாரை நையாண்டி செய்தும் பழித்தும் அத்தோடு எதிரிகளுக்கு ரோச உணர்வைக் கிளறி விட்டு பகைமைப் பயிருக்கு உரமிடும் வகையிலும் பாக்கள் பாடி, அதனால்' 'கண்ட இடத்தில் கண்டதுண்டமாக வெட்டி வீழ்த்துங் கள்' என நபிகளார் (ஸல்) அவர்களால் கட்டளையிடப் பட்டவரும், பிற்காலத்தில் உண்மையை உணர்ந்து, தவறைத் திருத்தி இஸ்லாமியத்தில் இணைந்து அதன் பின் 'கலையழகும் கருத்தழகும் ஒருங்கே அமையப் பெற்ற 'பானத் ஸுஆத்' என்ற காவியம் பாடி அதில் பெருமானாரின் பெரும் புகழை அரும்பச் செய்ததால் நபி களாரிடம் பரிசுகள் பெற்று, பாராட்டும் கிடைக்கப் பெற்ற வருமான அருளிசைப் புலவர் கஃபு (ரலி) அவர்களின் தந்தைதான் இங்கே நமது புலவர் பெருமான் குறிப்பிடும் ஜுஹைர் என்ற மகாகவி.

இவரின் வசைபாடலைச் சகிக்கமுடியாத நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் 'நாயனே! இவரு (ஜுஹைரு) டைய ஷைத்தானிய்யத்தான நாவுகளை விட்டும் என்னைப் பாதுகாத்தருள்வாயாக' என பிரார்த்தித்துப்' பத் துஆவேசெய்து விட்டார்கள். அதன்பின் அவருக்கு கவித்திறன் உரியப்பட்டுப் போய்விட்டது.

இந்த 'ஜுஹைர்' என்ற கவிஞர் இளமைக்காலத்தில் 'ஹரம்' என்ற சிற்றரசனின் சமஸ்தானப் புலவராக நியமனம் பெற்றிருந்தார். அப்போது அவ்வரசனை அளவுக்கதிகமாக முகஸ்துதிபாடி அதனால் அவனிடம் கணக்கற்ற பொன் பொருளை இனாம் பெற்று பெரும் கோடீசுவர பிரபுவாகத் திகழ்ந்தவர்.

அவரின் இந்த நிலையை இங்கே நினைவு கூறும் தம் புலவர் பூசிரி (ரஹ்) அவர்கள்;

அண்ணலாரின் பொருட்டால் உலகச் செல்வங்களை வேண்டினாலும் கிடைக்கப்பெறும் என்பது உண்மைதான் நான் நபிகளாரைப்பாடி நெருக்கம் பெற்றுள்ளதால் நானும் (அங்கனம் பாடியதற்குப் பிரதி பலனாக) அண்ணலாரின் பொருட்டால் உலகச் செல்வங்களை விரும்பினால், அந்த ஜுஹைர், ஹரம் அரசனிடம் பெற்றதைவிடப் பன்மடங்கு அதிகமாக பெற்றுக் கொள்ள முடியும் தான். ஆனாலும் நான் நபிகளாரைப் பாடியது அங்கனம் உலகச் செல்வங்களைப் பெறுவதற்காக அன்று. என்று கூறி தனது கற்பை - பத்தினித் தனத்தைப் பறைச்சாற்றுகின்றார்; அவர்.

பூசிரியின் தூய்மையே தூய்மை! சுப்ஹானல்லாஹ்...

இதுவரை;

தன் சுயக்குற்றங்களை கொஞ்சமும் கூசாமல் பெருந்தன்மையோடு ஒப்புக் கொண்டும்.

'அந்தக் குற்றங்களை ஆற்றிக் கொள்ள நபிகளார் (ஸல்) அவர்களைத் தவிர- அவர்களின் ஷஃபா அத்தைத் தவிர - வேறு எந்தப் போக்கோ புகலோ தனக்கில்லை. என்பதை உணர்ந்து உறுதியிட்டு உ அங்கலாய்த்தும்,

'தன் நற்செய்கைகளுக்காகவோ, நபிகளாரை புகழ்ந்து பாடியதற்காகவோ, வணக்க வழிபாடுகளுக்காகவோ இல்லாவிடினும் 'முஹம்மது' என தனக்கிடப்பட்டுள்ள பெயரின் பொருட்டாலாவது தனக்கு நபிகளாரின் ஷஃபா அத் கிடைப்பது உறுதி என அறுதியிட்டுக்கூறிய தன் மூலம் 'முஹம்மது' எனும் பெயருக்குள்ள மகிமைகளை எடுத்துரைத்தும்.

கடைசியாக கவியுலகில் தான் கற்பு நிறைந்தவர்' என்பதை எடுத்துக்காட்டி அதன் மூலம் ஒவ்வொரு மனிதனுக்கும் நற்செய்கை புரியும்போது எத்தகு தூய்மையான எண்ணம் ஊசலாடிட வேண்டும் என்பதை எண்பித்துக் காட்டியும் ஷஃபீவுல் முத்னிபீனாகிய ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களின் ஷஃபாஅத்தின் மங்காத - பொங்காத - மகிமைகளைக் கடை விரித்த கவிமணி பூசிரி (ரஹ்) அவர்கள் அடுத்து துஆவின் தொன்மைகளை விவரிக்கின்றார்.



# புரவலர்

# போர்த்திய பொன்னாடை

## பத்தாம் இழை



# 10

'கேட்பது' எழுவாய் என்றால் கிடைப்பதைப்' 'பயனிலை' எனலாம்.

கேட்பது;

உரிமையாகவும் இருக்கலாம் -

ஊதியமாகவும் இருக்கலாம் -

நன்கொடையாகவும் இருக்கலாம் -

இனாமாகவும் இருக்கலாம்

மன்னிப்பாகவும் இருக்கலாம் -

பிச்சையாகவும் இருக்கலாம் -

பிரார்த்தனையாகவும் இருக்கலாம் -

இவைகளில் ;

உரிமையைக் கேட்டால் அதற்கு 'பாத்தியதை' என்று பெயர்.

ஊதியத்தைக் கேட்டால் அதற்கு 'கோரிக்கை' என்று பெயர்.

நன்கொடை கேட்டால் அதற்கு 'வேண்டுகோள்' என்று பெயர்.

இனாம் கேட்டால் அதற்கு 'விண்ணப்பம்' என்று பெயர்.

பிச்சை கேட்டால் அதற்கு 'யாசகம்' என்று பெயர்.

பிரார்த்தனை கேட்டால் அதற்கு 'இறைஞ்சுதல்' என்று பெயர்.

இவைகளில் ;

மனிதன் மனிதனிடம் உரிமையைக் கேட்கப் போராடலாம் - ஊதியத்தைக் கோரிப் பெறலாம் - நன்கொடை வேண்டிப் பெறலாம் இனாம் கூடக் கேட்டுப் பெறலாம்.

## மனிதன் மனிதனிடம் பிரார்த்திப்பதாகுமா?

மனிதன் மனிதனிடம் மன்னிப்புக் கேட்கும் நிலையில் வாழக் கூடாது. மனிதன் மனிதனிடம் பிச்சைக் கேட்டுக் கையேந்துவது இகழ்ச்சியாகும். மனிதன் மனிதனிடம் பிரார்த்தனை செய்வதோ கூடாத ஒன்றாகும்.

இது போல;

மனிதன் இறைவனிடம் உரிமையைக் கேட்பதும், ஊதியத்தைக் கோருவதும் பொருத்தமற்ற செயலாகும். ஏனெனில் இறைவன் எவரின் உரிமையையும் பறிப்பதும் இல்லை, இறைவனிட்ட பணியை எவரும் சம்பூரணமாகச் செய்து முடிப்பதுமில்லை.

ஆனால் ;

மனிதன் இறைவனிடம் நன்கொடை வேண்டிட வேண்டும். அப்போது அருளை (ரஹ்மத்தை) வேண்டுதல் என அதற்குப் பொருள் விரியும்:

# துஆ அவசியந்தானா?

'துஆ வணக்கத்தின் 'மூளையாகும்' என நபிகள் நாயகம் (ஸல்-அம்) அவர்கள் அறிவுறுத்தியுள்ளார்கள்.

மனிதன் அன்றிலிருந்து இன்றுவரை அனைத்துப்படைப்பிலும் சிறந்தவனாகவே இருந்துவந்துள்ளான். இன்று விண்வெளியில் சஞ்சாரம் செய்யுமளவிற்கு வளர்ந்து விட்டதால் அவன் மிகச் சிறந்த படைப்பாக உயர்ந்து நிற்கின்றான்-என்றால் அதற்கெல்லாம் காரணம் அவனின் மண்டையில் படைக்கப்பட்டுள்ள 'மூளை' தான் என்பதை எவர் மறுத்திட முடியும்?

அப்படியென்றால் 'மூளை' எனும் அந்த அமைப்பிற்குரிய மதிப்பு எத்தகையது என்பதை கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். அதே நேரத்தில் 'துஆ' வணக்கத்தின் 'மூளை' என கூறப்பட்டுள்ளதென்றால் 'துஆ' இல்லாமல் வணக்கத்திற்கு மதிப்பு ஏற்பட முடியுமா என்பதையும் சிந்தியுங்கள்.

மூளைக்கோளாறு ஏற்பட்டுவிட்ட மனிதனை 'கிறுக்கன்'- என்றும் 'அரை - குறைகள்' என்றும் ஏளனமாய் ஒதுக்கித் தள்ளுவதை ஆங்காங்கே பார்த்து இருப்பீர்கள். அனைவருக்கும் சம அந்தஸ்தை வலியுறுத்தக் கூடிய நமது மார்க்கம் கூட மூளைக் கோளாறு ஏற்பட்டவனை 'கைர முகல்லஃப்' என ஒதுக்கிவிடுவதை கேள்விப்பட்டும் இருப்பீர்கள். அப்படியென்றால் ஏனைய அம்சங்களும் பெற்றிருந்தாலும் கூட அவன் மூளை சம்பூரணத்தை பெறாத காரணத்தால் 'மனிதன்' என்ற அந்தஸ்தையே இழந்துவிடு

கின்றான் அல்லவா? அதுபோல செம்மையாக-சரிவர-செயன் மேற்கொள்ளப்பட்ட வணக்கம்-தொழுகை அல்லது நோன்பு அல்லது ஹஜ்ஜு-துஆ இல்லாவிட்டால் 'வணக்கம், என்ற அந்தஸ்தையே இழந்துவிடும் என்பதைத்தான் துஆ வணக்கத்தின் மூளையாகும்' என்ற அந்த ஹதீஸ் விண்டு காண்பிக்கின்றது.

அப்படியென்றால் துஆ அவசியம்தானா அல்லவா என்பதை நீங்களே முடிவு செய்யுங்கள்.

## துஆ பற்றிய திருவசனங்கள்

கீழ்வரும் திருமறையின் திருவசனங்கள் 'துஆ' எவ்வளவு அவசியம் என்பதையும் துஆவைப் புறக்கணிப்பதால் விழையும் தீதையும் எண்பித்துக் காட்டுகின்றன.

ஃ என்னிடம் (இறைவனிடம் துஆ) கேட்பதை விட்டும் பெருமையடித்தார்களே அவர்கள் மேலைக்குக் கேவலமான நரகில் புகுதுவார்கள்.

▢ நபியே! நீங்கள் சொல்லிவிடுங்கள்; நீங்கள் (துஆ) கேட்காவிட்டால் என்னுடைய இரட்சகனிடம் உங்களுக்கு எவ்வித மரியாதையும் கிடைக்காது (என்று)

ஃஅல்லாஹ்விற்கு அழகிய திரு நாமங்களுண்டும். - அவைகளைக் கொண்டு அல்லாஹ்விடம் (துஆ) கேளுங்கள்.

★ அவனது அருட்கடாட்சங்களில் நின்றும் (துஆ) கேளுங்கள்.

☐ இறைவன் எவருக்கு நல்வாழ்க்கையைக் கொடுக்க நாடுகின்றானோ அவருக்கே துஆவின் தலைவாசலைத் திறந்து விடுகின்றான்.

மனிதனுக்கு - ஆஸ்த்திகனுக்கு - துஆ அவசியத்திலும் - அவசியம் என்பதை கீழ்வரும் நபி மொழிகள் வலியுறுத்திக் கூறுகின்றன.

## துஆ பற்றிய ஹதீஸ்கள்

★ அல்லாஹ்வின் சன்னிதானத்தில் துஆவை விடச் சிறந்த வணக்கம் வேறெதுவுமே இல்லை.

☐ துஆ விசுவாசியின் ஆயுதமாகவும், மார்க்கத்தின் தூணாகவும் இருக்கின்றது.

## தொழுகையே துஆதான்

அன்பரீர்! பார்த்தீரா துஆ எவ்வளவு இன்னும் அவசியம் என்பதனை? இவை மட்டுமன்று; இன்னும் பாருங்களேன்.

'தொழுகை' என்பதற்கு அரபியில் 'ஸலாத்' எனப்படும். அந்த 'ஸலாத்' என்பதின் மூலப் பொருள் என்ன தெரியுமா? 'துஆ' என்பதுதான். அன்றி தொழு

கையின் நிலையில் ஓதப்படும் அல்ஹம்து சூராவின் பிற்பகுதி துஆவாக இருப்பது கண்கூடு, மேலும் ருகூஃவி லிருந்து 'ஸமிஅல்லாஹு லிமன் ஹமிதா' என்று கூறி எழுந்தவுடன் 'அல்லாஹும்ம ரப்பனா வலக்கல் ஹம்து' எனச் சொல்லுகிறோமே அதுவும் ஒரு துஆ தானே. மேலும், கடைசி இருப்பில் அத்தஹிய்யாத்திற்குப் பின் தருதே இப்ராஹீம், ஓதுகின்றோம். அதன்பின் தாய் தகப்பனுக்காகவும், மற்ற மூமின்கள் அனை வருக்காகவும் இறைஞ்சுகின்றோமே அவைகளெல்லாம் துஆதான் என் பதை எவர்தான் மறுக்க மறைக்க முடியும்? ஆகவே தொழுகை துஆவாகவே மிளிர்ந்து கொண்டு இருக்கும் போது துஆவின் முக்கியத்துவத்திற்கு இதை விட வேறு என்ன சான்று வேண்டும்?

ஆதம் நபி (அலை) அவர்களிலிருந்து நமது நபி களார் வரையுள்ள அனைத்து நபிமார்களின் வரலாறு களையும் கொஞ்சம் துருவிப்பாருங்களேன். அவ்வரலாறு களிலெல்லாம் துஆ முழு நிலவெனப் பளிச்சிட்டு இலங்கு வதைத்தான் நம்மால் காணமுடியும். நபிமார்களையடுத்து ஸஹாபாக்கள், தாபிஈன்கள், தபவு தாபிஈன்கள் இமாம் கள். அவ்லியாக்கள், ஷுஹதாக்கள், ஸாலிஹீன்கள் என ஒவ்வொரு படித்தரமாகப் புகுந்து பார்த்தால் அவர்க ளெல்லாம் துஆவிற்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுத் துள்ளார்கள் என்பதை நம்மால் புரிந்து கொள்ள முடி கின்றது.



# வறட்டு வேதாந்திகள்

பிற்காலங்களில் முளைத்த சில அரைவேக்காடுகள்.

'இறைவன் ஏற்கனவே - இவன் இன்ன நாளில், இன்ன இடத்தில், இன்னார் வயிற்றில், இப்படி இப்படிப் பிறப்பான். இப்படி, இப்படி வளர்வான். இன்னின்னதை அனுபவிப்பான் - என ஒவ்வொரு மனிதனுக்கும் களாவை (தலை விதியை) நிர்ணயித்து விட்டானே. அப்படியிருக்க துஆ கேட்பதால் ஆவதென்ன, அழிவதென்ன? என வறட்டு வேதாந்தம் பேசி குட்டையைக் குழப்பிடுவதைப் பார்க்க நேரிடுகின்றது.

இந்த வறட்டு வேதாந்திகளிடம்;

ஆமாம் வாஸ்தவம்தான் ஏற்கெனவே அல்லாஹ் மனிதனுக்கு விதியை நிர்ணயம் செய்து விட்டான் தான். அதில் இம்மியும் ஐயமே இல்லை. ஆனால் அங்கனம் விதியை நிர்ணயித்ததோடு அல்லாஹ்வின் வேலை முடிந்து விட்டதா? இனி அதில் அவ்வல்லவனுக்குத் தலையீடு இல்லையா? விதியை மாற்றவோ தேவைப் பட்டால் விதித்த விதியில் கூடுதல் குறைவு செய்யவோ அந்த வல்லவனுக்கு உரிமை இல்லையா? அல்லது ஆற்றல் இல்லையா? அப்படியென்றால் விதியை விதித்த அல்லாஹ் பெரியவனா? அல்லது அந்த விதி பெரியதா?' - என்றெல்லாம் நாம் கேட்கத் தலைப்பட்டால் அந்த அரைவேக்காடுகள் ஓடி ஒழிந்து கொள்கின்றனர். ஆகவே நுனிப்புல் மேயும் அந்த வெள்ளாடுகளை நாம் கவனிக்க வேண்டியதில்லை. ஆனால் உடலுக்கு உயிர் அவசியமாவதைப் போன்று வணக்கத்திற்கு துஆ அவசி

யத்திலும் அவசியம் என்பதை நாம் விளங்கி வைக்கக் கடமைப்பட்டு உள்ளோம்.

## துஆவின் அனுகுமுறை

'துஆ அவசியத்திலும் அவசியமானதொரு சிறப்பு வணக்கம் - என்றீர்கள். ஏற்றுக் கொள்கின்றோம். மறுக்க வில்லை. ஆனால் நாங்கள் தொழுது, அதன் பின் அழுது அழுது துஆ கேட்டுப் பார்த்து விட்டோம். எங்களின் அந்த துஆவினால் எத்தப் பயனும் ஏற்பட்டதாகத் தெரிய வில்லையே - என நம்மில் பலர் கேட்பது என் செவியில் உறைக்கத்தான் செய்கின்றது. அவர்களுக்குச் சொல் கின்றேன்.

உலகக் காரியமானாலும், மறுமைக் காரியமானாலும் அது அதற்கென்று சில அனுகு முறைகள் வகுத்தனிக் கப்பட்டுள்ளன. அந்த அந்த அனுகு முறைகளை அவ் வப்போது பேணினால்தான் ஈடுபாடு கொள்ளும் காரியத் தில் சித்தி பெற்றிட முடியும். உதாரணமாக;

போலீஸ் நிலையத்தில் ஒரு ரிப்போர்ட்டுச் சமர்ப் பிக்க வேண்டுமென்றால், அதில்;

ரிப்போர்ட்டுச் செய்பவரின் முழு முகவரி, குற்றம் சாட்டப்படுபவரின் முழு முகவரி ஆகியவற்றை குறிப்ப தோடு; சாட்சியங்கள், தடயங்கள் ஆகியவற்றையும் பதிவு செய்து அந்த ரிப்போர்ட்டில் குறித்த தொகை

யுள்ள ஸ்டாம்பும் ஒட்டப் படவேண்டும். அங்கன மிருந்தால்தான் அந்த ரிப்போர்ட் அங்கீகரிக்கப்படும் அல்லவா? அதுபோல,

தாசில்தார், கலெக்டர் போன்றோரிடம் ஏதாவதொரு மனுக் கொடுக்கப்பட வேண்டுமென்றாலும் முறைப்படி அதில் அந்தந்தத் தகுதிக்கு ஏற்றாற்போல் ஸ்டாம்பு ஒட்டப்பட வேண்டும். அதுபோல,

நிலச் சொந்தக்காரர்கள் 'நம்மிடம்தான் நிலமிருக் கின்றது' - என மந்தகாசமாக இருந்து விட்டால் தானியங் கள் வீட்டில் வந்து குவிந்து விடாது. உரிய காலத்தில் உழுது, பயிரிட்டு, உரமிட்டுப் பேணி வளர்த்தால்தான் அறுவடை காலத்தில் மூட்டை மூட்டையாக நெல்மணி களை வீட்டில் சேர்க்க முடியும். அல்லவா?

## துஆ கேட்பதின் ஒழுக்கம்

இதுபோல அல்லாஹ்விடம் துஆ கேட்பதற்கும் சில விதிமுறைகள், நிபந்தனைகள் இருக்கின்றன. அந்த விதிமுறைகளையும் நிபந்தனைகளையும் பேணி ஒழுகி னால்தான் கேட்கப்படும் துஆக்களுக்கு சித்தி கிட்ட முடியும். அந்த - துஆவுடைய விதிமுறைகளாவது:

(அ) துஆ செய்பவர் கிப்லாவை முன்னோக்கி மண்டி யிட்டு அமர்ந்திருக்க வேண்டும்.

(ஆ) இரண்டு கைகளையும் புஜம் அல்லது நெஞ்சுக்கு

நேராக உயர்த்தி இருக்க வேண்டும். உயர்த்தப்பட்ட கைகளுக்கிடையில் கொஞ்சம் இடைவெளி இருக்க வேண்டும்.

(இ) துஆவில் அல்லாஹ்வின் 'அஸ்மாவுல் ஹுஸ்னா' எனப்படும் 99 - திருநாமங்களில் ஏதாவதொன்றைக் கொண்டு புகழ்ந்தேற்ற வேண்டும். உதாரணமாக அல்லாஹும்ம லக்கல் ஹம்து வலக்கஷ்ஷுக்ரு யா ரஹ்மான் யா ரஹீம் என்பது போலவாம்.

(ஈ) நபிகளார் (ஸல்) அவர்களுக்கும் கிளைஞர்கள், தோழர், பெரியோர்கள் பாலும் ஸலாத் சலாம் சாற்ற வேண்டும். உதாரணமாக ; அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின், வ அலா ஆலி முஹம்மதின் வ பாரிக் வசல்லிம் அலைஹிம்' என்பது போலவாம்.

## தௌபா செய்வதன் ஒழுக்கம்

தவ்பாச் செய்ய வேண்டும். தவ்பாவின் (பாவ மன்னிப்புக் கோருதலின்) முறைகளாவது ;

(1) தான் செய்துவிட்ட குற்றம் குறைகள் பாவச் செயல்களை நினைந்து வெட்கித் தலை குனிந்து வேதனைப் படுதல்.

(2) 'இனி மவ்த்துவரை அத்தகு பாவங்களைச் செய்யேன் என்பதை நாவினால் விண்ணப்பித்து இஸ்திஃபார் ஓதுதல்

(4) பொய், புறம், கோள், குண்டனி பொய்ச் சத்தியம்—சாட்சியம், அசிங்கமான ஏச்சுப்பேச்சுக்கள், மற்றவர் மனதைப் புண்படுத்தும் குத்தல் பேச்சுக் கள், கேலி கிண்டல் பேச்சுக்கள் ஆகியவற்றை விட்டும் நாவைப் பரிசுத்தப்படுத்துதல்.

(5) பொறாமை, பெருமை, அகங்காரம், கோப தாபம் குல இனமொழிப் பெருமை, மற்ற மனிதர்களை தன்னை விடத் தாழ்வாகக் கருதும் மனப்பான்மை பகைமை ஆகிய இழி குணங்களை விட்டும் உள்ளத்தைப் பரிசுத்தமாக்குதல்.

(6) வட்டி (கொடுக்கல், வாங்கல், எழுதுதல், சாட்சி யாக இருத்தல், தரகு செய்தல்) மோசம், நாசம் போன்ற முறைகேடான பொருட்களால் உருவாகும் உணவு வகை களை, உடைகளை முற்றாகத் தவிர்த்துக் கொள்ளுதல்.

(7) நல்லவர்கள், நாணயமிக்கவர்கள், வல்லவர்கள், அறிஞர் (உலமாப்) பெருமக்கள், ஆகியோரிடம் நட்புக் கொண்டு எல்லா நேரங்களிலும் எல்லா காரியங்களிலும் அவர்களுடன் கலந்துறவாடுவதைப் பழக்கமாக்கிக் கொள்ளுதல்.

(8) பொல்லார் புறம்பர் போன்ற துஷ்டர்களுடைய சகவாசத்தை முற்றாக முறித்துக் கொள்ளுதல்.

இந்த எட்டையும் கட்டாயமாகப் பேணி அல்லாஹும்ம ரப்பனா ழலம்னா அன்ஃபுஸனா வ இன்லம் தஹ்ஃபிர்லனா வ தர்ஹம்னா ல நகூனன்ன மினல் காஸிரீன், போன்ற வற்றால் இறைவனிடம் கெஞ்சி மன்றாடுவதற்குப் பெயர் தான் தவ்பாவாகும்.

தாய் தகப்பனுக்காகவும், ஆசிரியருக்காகவும் மற்றுமுள்ள மூமின்கள் அனைவருக்காகவும் பிழை பொறுக்கத் தேடுதல் உதாரணமாக: அல்லாஹும்ம ஃஹ்ஃபிர் லீ வலி வாலிதைய்ய வலி உஸ்தாதி வலி ஜமீஇல் மூமினீன வல் மூமினாத் வல் முஸ்லிமீன வல் முஸ்லிமாத் அல் அஹ்யாயி மின்ஹும் வல் அம்வாத் இன்னக்க முஜீபுத் தஃவாத் பிரஹ்மதிக்க யா அர்ஹமர் ராஹ்ஹிமீன்.

தன் இம்மை மறுமைத் தேவைகளை- நபிகள் நாதர் (ஸல்-அம்) அவர்களை மற்றுமுள்ள சஹாபாக்கள், இமாம்கள், உலமாக்கள்; அவ்லியாக்கள், போன்ற பெரியோர்களை பொருட்டாக்கி (வசீலாவாக்கி) வல்ல அல்லாஹ்விடம் வேண்டுதல்.

சலவாத் சலாம் கூறியும், ஹம்தலாக் கூறியும் துஆவை முடிக்குதல் உதாரணமாக: ஸல்லல்லாஹு தஆலா வ ஸல்லம அலா கைரி கலக்கிஹி ஸய்யிதினா முஹம்மதின் வ அலா ஆலிஹி வ ஸஹ்பிஹி அஜ்மஈன். சுப்ஹானறப்பிக்க றப்பில் இஜ்ஜத்தி அம்மா யஸிஃபூன் வஸலாமுன் அலல் முர்ஸலீன் வல்ஹம்து லில்லாஹி றப்பில் ஆலமீன்-என்பது போலவாம்.

## அங்கீகரிக்கப்படும் துஆ பற்றி

* இப்னு அதாவுல்லா (ரஹ்-அன்ஹு) எனும் பெரியார் சொல்லுகின்றார்கள். துஆவிற்கு திரிகரணசுத்தி பயபக்தி, வெட்க உணர்வு 'இறைவன் அங்கீகரிப்பான்'

என்ற நன்னம்பிக்கை ஆகிய நான்கும் நிபந்தனைகளாகும்.

வாய்மையும், ஹலாலான (முறையான சம்பாத்தித்தால் கிடைத்த) தூய்மையான உணவு உடுக்கைகளும், துஆவின் இரு இறக்கைகளாகும்.

பின்னிரவு போன்ற தனிமை துஆவிற்குரிய நேரமாகும் -

முன்னும் பின்னும் ஸலவாத் சலாம் இணைக்கப்பட்ட எந்த துஆவும் தட்டப்படுவதில்லை' என மார்க்கம் கூறுவதால் ஸலவாத்தும் சலாமும் துஆவின் காரணங்களாகும்.

ஆகவே எவரின் துஆ நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு இருக்கின்றதோ அது ஆற்றல் மிக்கதாகவும்; எவரின் துஆ இறக்கைகளுடன் கூடியதாக இருக்கின்றதோ அது வானின் பால் உயரக் கூடியதாகவும்; எவரின் துஆ உரிய நேரத்திற்கு நேர்பட்டதாக இருக்கின்றதோ அது வெற்றி தரக் கூடியதாகவும் எவரின் துஆ காரண காரியங்களுடன் காணப்படுகின்றதோ அது அங்கீகார முத்திரை பெறக்கூடியதாகவும் மிளிரும் என இப்னு அதாவுல்லா கூறியுள்ளார்கள்

★ நபிகளார் (ஸல்) அவர்கள் அறிவுறுத்தியதாக அபூஹுறைறா (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

பாவச் செயல்களால் மாசுபடுத்தப்படாமலிருக்கும் காலமெல்லாம் - இரத்த பந்துக்களை துண்டித்து வாழாமலிருக்கும் காலமெல்லாம் - அங்கலாய்ப்புச் செய்யாமலி

ருக்கும் காலமெல்லாம் அடியானின் துஆ அங்கீகரிக்கப் படாமல் இருப்பதில்லை என்றபோது - 'அங்கலாய்ப்பு என்றால் என்ன எம்பெருமானே! என்று விளக்கம் கேட்கப்பட்டது. அதற்கு - அழுது அழுது, தொழுது தொழுதெல்லாம் துஆ கேட்டு பார்த்து விட்டேன். ஆனால் ஆயபலன் ஒன்றுமில்லையே, - என - அலுத்துக் கொள்வதாகும் என்று விளக்கம் தந்தார்கள் நபியுல்லா.

★ ஜாபிர் பின் அப்துல்லா (ரலி ... அன்ஹுமா) அவர்கள் நபிகளார் நவின்றதாக அறிவிக்கின்றார்கள்.

ஒவ்வொரு நாள் இரவிலும் ஒரு குறிப்பான நேரமுண்டு (ஆனால்) அந்நேரத்திற்கு எவரும் நேர்படுவதில்லை. அங்ஙனமிருக்கையில் இம்மை அம்மை பாக்கியங்களை அவர்களுக்கு எங்ஙனம் அல்லாஹ் வழங்குவான்...?

## ஹராமான உணவு துஆவை வெறுமையாக்கிவிடும்

☐ ஒருநாள் மூஸா (அலை) அவர்கள் ஒரு மனிதனைக் கடந்து சென்றார்கள். அப்போது அம்மனிதன் கல்லுங் கரைந்திடும் வண்ணமாக உளமுருகி துஆ செய்து கொண்டிருந்தான். ஆகவே அவன்பால் அனுதாபம் கொண்ட மூஸா (அலை) அவர்கள் - இரட்சகனே! உன்னுடைய இந்த அடியானுக்கு நீ பதில் சொல்லிட வேண்டுமே! என - இறைவனிடம் அம்மனிதனுக்காக சிபாரிஷ் செய்தார்கள். அப்போது இறைவன் - அன்பு நபியே! அம்மனிதன் உள்ளம் இளகும் வண்ணம் அழுகின்

றான்தான். வான முகட்டைத் தொட்டுவிடும் வண்ணம் கையேந்தியுள்ளான்தான். ஆனாலும் நான் அவனது துஆவை அங்கீகரிக்கப் போவதில்லை. ஏன் தெரியுமா? அவனது வயிற்றை ஹராமான உணவு நிரப்பிக் கொண்டு உள்ளது. அவனது மேனி முழுவதும் ஹராமான சதையும் ரத்தமும் நிரம்பிப் போயுள்ளது. அவன் குடிகொண்டுள்ள வீடும் ஹராமான பொருட்களைக் கொண்டு நிர்மானிக்கப் பட்டுள்ளது. அங்ஙனமிருக்கையில் நான் எப்படி இவனை ஒப்பமுடியும் - என்பதாக இறைவன் அறிவித்து விட்டான்.

இதை வரலாற்று வல்லுனர் வஹப் பின் முனப்பஹ் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

## உலோபித்தனம் துஆவை வெறுமையாக்கி விடும்

☐ மற்றொரு முறை நபி மூஸா (அலை) அவர்களிடம் ஒரு நல்லடியார் வந்து - 'நபிகளே! நான் பல்லாண்டுகளாக பலமுறை வல்ல நாயனிடம் பிரார்த்தனை செய்து வருகின்றேன். ஆனால் என்னின் பிரார்த்தனை ஒப்புக் கொள்ளப்படவே இல்லை ...'' - என - முறையிட்டார். உடன் மூஸா நபியவர்கள் வல்ல அல்லாஹ்விடம் தொடர்பு கொண்டு 'யா அல்லாஹ்! இவர் மிகச் சுத்தமான நல்லடியார். ஆதலால் இவரின் பிரார்த்தனையை ஏற்றருள்'' என - சிபாரிஷ் செய்தார்கள். அப்போது இறைவன்- ''அம்மனிதன் சுத்தமான நல்லடியான் தான். ஆனால் அவன் கஞ்சனாக இருக்கின்றானே! துஆ கேட்கும்போது

எனக்கு .. என தனக்கு மட்டும் சுயநலமாக துஆ செய்கின்றான்''-எனக் கூறினான். இதை அம்மனிதரிடம் எடுத்துக் காட்டிய மூஸா நபியவர்கள் - துஆ செய்யும்போது பெற்றோர்களையும் உஸ்தாதுகளையும், சுற்றத்தார்களையும் மறக்காமல் உங்களின் துஆவில் சேர்த்து கொள்ளுங்கள். ஏனெனில் அங்கனம் பொது நலத்தோடு இணைந்த துஆக்கள்தான் வானில் உயரும் ஆற்றலை பெற்றவை- என அனைவரையும் அறிவுறுத்தினார்கள்.

## உள்ளத்தை ஒப்படைத்துவிட வேண்டும்

மற்றொரு முறை அழுது புலம்பி இறைஞ்சும் ஒரு ஆட்டு இடையனை - நல்லடியாரைக் கண்டு மனமிளகி-

''இறைவா கொடுக்கும் வல்லபம் எனக்கு இருந்திருந்தால் இந்த அடியானின் - இடையனின் - இறைஞ்சுதலை ஏற்று, வேண்டியதைக் கொடுத்து அவனைத் திருப்திபடுத்தி இருப்பேன் நான்' என வல்ல அல்லாஹ்விடம் முறையீடு செய்தார்கள். அதற்கு இறைவன் ''மூஸாவே! நான் உம்மைவிட அதிக இரக்க சுபாவம் படைத்தவன்... என்றாலும் அந்த இடையன் துஆ செய்கின்றான். ஆனால் அவனுடைய உள்ளம் இங்கே இல்லை .. ஆட்டுக் கும்பலில் லயித்து நிற்கின்றது. உள்ளத்தைச் சரணடையச் செய்யாமல் வெறும் வாயளவில் கேட்கும் துஆவை நான் வகை வைப்பதில்லை''- என்று மூஸா (அலை) அவர்களுக்குப் பதில் சொல்லி, துஆ கேட்கும்போது 'ஹுளூருல் கல்பு' வேண்டும் என்பதை - உணர்த்தினான் இறைவன்.

# உள்ளம் மரணித்தவர்களின் துஆ ஒப்புக் கொள்ளப்பட மாட்டாது

□ மகான் இப்றாஹீம் பின் அத்ஹம் (ரஹ்-அன்ஹு) அவர்கள் பஸரா நகரின் கடை வீதியில் சென்று கொண்டிருந்த சமயத்தில் சில மனிதர்கள் அப்பெருந் தகையைச் சூழ்ந்து கொண்டு – இஸ்ஹாக்கின் தந்தையே! 'கேளுங்கள் தருகின்றேன்'' என வல்ல அல்லாஹ் தனது திருமறையாம் குர்ஆனில் கூறியுள்ளான். ஆனால் நாங்கள் ஆண்டாண்டுகளாக அழுது புலம்பி அல்லாஹ்விடம் துஆக் கள் கேட்டுக் கேட்டு அயர்ந்துவிட்டோம். ஆனால் எங்களின் எந்த துஆவும் ஏற்றுக்கொள்ளப்பட்டதாகத் தெரியவில்லை. காரணம் யாது?' – என விளக்கம் கேட் டார்கள்.

அதற்கு இப்ராஹீம் பின் அத்ஹம் அவர்கள்,

நீங்கள் பத்துக் காரியங்களில் உங்களின் உள்ளங்களை மவ்த்தாக்கி விட்டீர்கள்–

அல்லாஹ்வை நம்பி (ஈமான் கொண்டு) உள்ளதாகச் சொல்லிக் கொள்கின்றீர்கள். ஆனால் நீங்கள் அறிந்து வைத்துள்ள அளவிற்குக் கூட அவனுக்கு மரியாதை செய்வதில்லை

நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களை நேசிப்ப தாகச் சொல்லிக் கொள்கின்றீர்கள். ஆனால் அன்னாரின் சுன்னத்துக்களை நீங்கள் பேணி வாழுவதில்லை

வாழ்க்கைத் தத்துவமான குர்ஆன் ஷரீபை (கிளிப் பிள்ளையைப் போல) ஓதுகின்றீர்கள். ஆனால் அதன் அடிப்படையில் நீங்கள் ஒழுகுவதில்லை.

அல்லாஹ் வழங்கியுள்ள கணக்கற்ற பாக்கியங்களை அனுபவித்துக் கொண்டுள்ளீர்கள். ஆனால் நீங்கள் வல்ல அல்லாஹ்விற்குக் கொஞ்சம்கூட நன்றி செய்வதில்லை.

ஷைத்தான் இப்லீஸ் பெரிய பகைவன் எனச் சொல்லிக் கொண்டு நடைமுறையில் அவனையே பின் பற்றிக் கொண்டுள்ளீர்கள் -

சொர்க்கம் உண்டு என நம்பியுள்ளீர்கள் : அதை அடைவதற்கு எவ்வித முயற்சியையும் செய்வதில்லை.

நரகம் உண்டு என நம்பியுள்ளீர்கள் ஆனால் அதை விட்டும் தப்பித்துக் கொள்ள எந்த ஆயத்தமும் நீங்கள் செய்யவில்லை.

மவ்த்தாகப் போவது உறுதி என்பதைக் கண்கூடாகக் கண்டு கொண்டிருக்கின்றீர்கள். ஆனால் அப்பெரும் பயணத்திற்காக நீங்கள் எவ்விதக் கட்டமுதையும் இன்னமும் தயார் செய்து கொள்ளவில்லை -

காலையில் கண்விழித்தெழும்போதே மற்றவர்களின் குற்றம் குறைகளைத் துழாவுவதிலேயே கவனம் செலுத்துகின்றீர்களே தவிர ஒரு நாள் ஒரு பொழுதேனும் உங்களில் உள்ள குறைகளை உற்றுப் பார்ப்பதில்லை.

ஜனாசாக்களை - பிரேதங்களை - உங்கள் கரங்களால் நல்லடக்கம் செய்கின்றீர்கள் ஆனால் அதைக் கொண்டு நீங்கள் படிப்பினை பெறுவதே இல்லை.

இதனாலெல்லாம் உங்களின் இதயம் செத்துப் போய் விட்டது செத்துப் போன இதயத்தின் துஆக்களை ஹயாத்

னாத அல்லாஹ் எப்படி ஏற்றுக் கொள்வான் ... ... ? என இப்ராஹீம் பின் அத்ஹம் ( ரஹ் - அன்ஹு ) அவர்கள் அம்மக்களை இடித்துரைத்தார்கள்.

அன்பர்களே! நண்பர்களே! இதுவரை துஆவின் அணுகு முறைகள் குறித்தும், அங்கீகரிக்கப்படும் துஆக் களின் நிலை குறித்தும், துஆக்களுக்கு உயிரில்லாமல் போவதேன் என்பது குறித்தும் சுடச்சுட, சுவையோடு சுறுசுறுப்போடும் பல நிகழ்ச்சிகள், ஹதீதுகளின் மாறலாக உணர்ந்தோம் நாம், அல்லவா?

அடுத்து அணுகு முறைகள் தவறாமல் கேட்கப்பட்ட துஆக்களினால் விளைந்த மகத்துவங்கள் சிலதைப் படிப்போம்.

## துஆவின் மகத்துவங்கள்

□ ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் இறையன்பர் - இனிய நண்பர் - இப்ராஹீம்நபி (அலை) அவர்களும் அவர் தம் அருமந்தப் புதல்வர் - தியாகச் செம்மல் இஸ்மாயீல் (அலை) அவர்களும் இறைவனின் கட்டளைக் கிணங்க கஃபா ஆலயத்தைப் புனருத்தாரனம் செய்து முடித்த பின் அருள் பொருந்திய அந்த ஆலயத்தில் நின்று;

'இறைவா! கடமையை முடித்துவிட்டோம். பாலைப் பெருவழியான இந்த மண்ணில் செழுமையை ஏற்படுத்தி - இங்கே இல்லாமையை இல்லாமலாக்கி - பாலைகளில்

பனி படர்ந்த சோலைகளில், தீவுகளில் தீபகற்பங்களில் என அகிலம் முழுவதில் இருந்தும் அலை அலையாய் மக்கள் வெள்ளங்களை இங்கே வருகைதரச் செய்தருளக் கடவாய்' - என - அன்று துஆ செய்தார்கள்.

ஏறக்குறைய ஐயாயிரம் ஆண்டுகளுக்குப் பின் இன்றைக்கும் அருளாளர்களின் அந்த துஆவிற்கு பதில் கிடைத்துக் கொண்டிருப்பதை நாம் உணர்ந்து வருகின்றோம். கண்கூடாகக் கண்டு வருகின்றோம்.

அப்படியென்றால் திரிகரண சுத்தியோடு உள்ளத்தின் ஆழத்திலிருந்து வெளிப்படும் துஆவிற்கு எந்த அளவு உயர்ந்த சக்தி இருக்கின்றது என்பதைக் கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்.

## துஆவிற்கு வஸீலா அவசியம்

□ ஹஜ்ரத் உமரிப்னு கத்தாப் (ரலி-அன்ஹு) அவர்களின் ஆட்சியின் போது ஒரு முறை மழையின்மையால் கடும் வறட்சி எற்பட்டிருந்தது. ஆகவே, ஆங்காங்கே மழை துஆக்கள் பரவலாக நடத்தப்பட்டன ஆனாலும் பொய்த்திருந்த வானம் பொழிய மறுத்தே வந்தது நிலமை கடுமையாகி வருவதைக் கண்ட 'கஹ்புல் அக்பார் (ரலி-அன்ஹு) எனும் பெரியார், கலீபா அவர்களை அணுகி, ''அமீருல் மூமினின் அவர்களே! முற்காலங்களில் இப்படி வறட்சி ஏற்பட்டால் - அன்றைய யூதர்கள் அக்காலத்தில் உள்ள நபிமார்களின் உறவினர்களை வஸீலாவாக (பொருப்பாக)க் காட்டி அவர் அவர்களின் பொருட்டால் மழையை

இறக்கியருளும்படி துஆ செய்வதும் - அங்கனம் நபிமார் களின் உறவினர்களை பொருட்டாக்கி மழை வருசிக்கத் தேடும்போதெல்லாம் - மழை பெய்ய தொடங்குவதும் பழக்க மாக இருந்து வந்துள்ளது. ஆகவே இப்போது நாமும் அந்த யுக்தியைக் கையாண்டு பார்க்கலாம் என கருதுகின்றேன்'' என தனது ஆலோசனையைச் சொன்னார்கள்.

கலீபா அவர்களுக்கு அதில் பொருள் இருப்பதாகப் பட்டதால் அந்த ஆலோசனையை ஏற்றுக் கொண்டு அங்ஙனம் செய்திட இசைவு தெரிவித்தர்கள். ஆகவே ஆவன செய்யப்பட்டு நமது நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் உறவினர்களில் - அன்றைய நேரத்தில் முதியவராகவும் பக்தியில் முதிர்ந்தவராகவும் திகழ்ந்த - நபிகளாரின் பெரிய தகப்பனார் அப்பாஸ் (ரலி-அன்ஹு) அவர்களை அணுகி அந்த ஆலோசனையை அன்னாரிடம் சமர்ப்பித்து அவரே வசீலாக இருக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்பட்டது.

அப்பாஸ் (ரலி-அன்ஹு) அவர்களும் அதற்குச் சம்மதம் தெரிவித்துவிட்டார்கள்.

அறிவிப்புச் செய்யப்பட்டு குறித்த நாளில் குறித்த நேரத்தில், குறித்த இடத்தில் அனைவரும் ஒன்று சேர்ந் தனர்.

அப்போது கலீபா ஹஜ்ரத் உமர் பாரூக் (ரலி-அன்ஹு) அவர்கள் :

சுவிரக்கமுள்ள இறைவா ! இவர்கள் உன் அடிமைகள் இதோ இப்பெரியார் உமது நேசரும் தாசருமான முஹம்மது

(ஸல்-அம்) அவர்களின் பெரிய தகப்பனார். ஆளுகை உன் கைவசமே உள்ளது. நபிகளில் சிறந்த முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் பெரிய தந்தையான பெரியார் அப்பாஸ் (ரலி-அன்ஹு) அவர்களின் பொருட்டால்...உன் கருணையில் நல் ஆதரவு வைத்தவர்களாக இங்கே நாங்கள் ஒன்று கூடியுள்ளோம். ஆதலால், அருளாளனே! அடியார்க்கு இரங்குபவனே. நாடு செழிக்கவும் நல்லடியார் தழைக்கவும் மழை மாரியைப் பொழியச் செய்தருளக்கடவாய் எங்களை விரக்தியடைந்தவர்களாக ஆக்காதிருப்பாய்......',

என (கலீஃபா அவர்கள்) துஆ செய்தார்கள்.

அதன்பின் :

'ஈவிரக்கமுள்ள எங்களின் இறைவா! பாவச் செயல் மலிந்தே தவிர சோதனை இறங்குவதில்லை... மன்னிப்புக் கோரியே தவிர மீட்சி கிடைப்பதுமில்லை. இதோ இவை பாவக்கறைகள் படிந்த கரங்கள் பரிசுத்தமான உன்பால் ஏந்தப்பட்டுள்ளன... மன்னிப்பு ஈந்து எங்களின் பாவக்கறைகளைத் தூய்மையாக்கியருள்... அடியேன் நின் அன்பரான முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் பெரிய தந்தை என்பதால் இவர்கள் என் பொருட்டால் உன்னை முன்னோக்கியுள்ளார்கள்... ஆதலால் அருளாளனே! மழைமேகங்கள் கூடி பொழியச் செய்தருள். எங்களை விரக்தியடைந்தவர்களாக— ஏமாந்தவர்களாக — ஆக்காதிருப்பாய் - கிருபையாளனே'... என அப்பாஸ் (ரலி-அன்ஹு) அவர்கள் துஆச் செய்தார்.

சுப்ஹானல்லாஹ் ...என்ன ஆச்சரியம்! வெருச்சோடி வெள்ளை வெயில் கொளுத்திக் கொண்டிருந்த வானில் கரு

மேகக் கூட்டங்கள் சூழ்ந்தது. சற்று நேரத்திற்குள்... ஏந்தப் பட்ட கைகள் மடக்கப்படுவதற்கு முன்பாகவே...... மழை கொட்டு கொட்டெனக் கொட்டத் தொடங்கியது. அதனால் தெருக்களில் மேடுகளெல்லாம் பள்ளமாகவும் பள்ளங்களெல் லாம் மேடாகவும் மாறிப்போய்விட்டது. அத்த அளவு கன மழை கொட்டியது என இப்னு அப்பாஸ் (ரலி-அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

இவை மட்டுமன்று இவைகளைவிட இன்னும் சுவை கூடிய. கேட்கப் புதுமை நிரம்பிய-நூதனமான ஆயிர மாயிரம் நிகழ்ச்சிக் கோவைகளை துஆவின் மகத்துவத்தை விளக்குவதற்கு எடுத்துக் காட்டிட இயலும். ஆனாலும் அம் முயற்சி இங்கே தேவைதானா? பானை சோற்றுக்கு ஒரு சோற்றைப் பதம் பார்த்தல் போதுமே, என்பதால் இத்தோடு நிறுத்திக் கொள்கின்றேன்.

ஆனால் அனுகுமுறை ஒழுக்கங்களைப் பேணி செய்யப் படும் துஆக்களுக்கு நிச்சயம் கைமேல் பலன் கிடைக்கும் என்பதை மீண்டுமொரு முறை நினைவு படுத்திக் கொள் கின்றேன் :

## துஆவின் வகைகள்

முடிக்குமுன் "துஆவின் அனுகுமுறை" என்ற துணைத் தலைப்பிற்குள் சொல்லியிருக்க வேண்டிய ஒன்று விட்டுப்போய் விட்டது. அதனையும் நாம் தெரிந்து

வைத்துக்கொள்வது நலமாக இருக்கும்...என்பதால் இங்கே அதனையும் கூறிவிடுகின்றேன். அதாவது;

துஆவில் (1) துஆ ரஃபத் (2) துஆ ரஹ்மத் (3) துஆ தளர்ருவு (4) துஆ குஃப்யத் என நான்கு வகைப் படும்.

துஆ ரஃமத் என்பது—மனதில் துளிர்த்துள்ள நியாய மான ஆசைகளை நிறைவேற்றித் தரும்படி கேட்பது. இது தான் பெரும்பாலும் நடைமுறையில் இருந்து வருகின்றது. இந்த துஆவைக் கேட்கும்போது வழக்கப்படி புஜத்திற்கு அல்லது நெஞ்சுக்கு நேராக கைகளை உயர்த்திக் கொள்ள வேண்டும்.

துஆரஹ்மத் என்பது-இனம் தெரியாத திடுக்கம்,அல்லது பயங்கரம் ஏற்பட்டால் அதை நீக்கி நிம்மதி தரும்படி வேண்டிச் செய்யப்படும் துஆவாகும் இந்த வகை துஆச் செய்யும்போது கைகளை வானத்தை நோக்கி உயர்த்தி ஆனால் கைகளின் முதுகை முகத்தளவிலும் உள்ளங்கை யைத் தரையைப் பார்க்குமுறையிலும் - புறட்டி வைத்துக் கொள்ள வேண்டும்.

துஆ தளர்ருவு என்பது-நியாயமான ஆசாபாசங்களை வேண்டியும் அல்லது சொர்க்கத்தை வேண்டியும் நரகத் தை விட்டும் தன்னைப் பாதுகாக்கக் கோரியும் அல்லாமல் தனது அடிமைத் தனத்தை நிலை நாட்டும் முறையில் கேட்கப்படும் துஆவாகும். இதுவே துஆக்களில் மிக்க விஷேசமானதுமாகும்.

துஆ குஃப்யத் என்பது -மனதுக்குள் மட்டும் ஊசலாட விடப்படும் இரகசிய துஆவாகும். இம்முறை துஆவிற்கு கையை உயர்த்த தேவையில்லை.

அன்பரீர்! நமது புலவர் பெருமான் பூசிரி (ரஹ்) அவர்கள் ஆரம்ப நாட்களில் துஆ போன்ற சிறப்பு வணக்கங்களில் கொஞ்சம் கவனம் செலுத்தாது இருந்து விட்டாலும் கடைசி நாட்களில் துஆ போன்ற எந்த சுன்னத்தான காரியங்களையும் கொஞ்சம் கூட விட்டுவிடாமல் முழுமையாகச் செயல்படுத்தத் தொடங்கி அதில் தனிச் சுவையும் முழுச்சுகமும் கண்டு பழக்கப்பட்டு விட்டவர் ஆகவே;

## பத்தாம் கண்டத்தின் முடிவுரை

ஆசை அலைகளில் அண்ணலாரின் மீது தனக்கு ஏற்பட்ட புதுமோகத்தை காதல் ரசனை சொட்டச் சொட்டச் சொல்லிக்காட்டி ; அலை பாயும் மனதில் கண்ணுக்குத் தெரியும் இம்மை இன்பமா, அல்லது கருத்துச் சோலை தனில் பூத்துக் குலுங்கும் பேரின்பமா? இரண்டில் எதைத் தேர்வு செய்வது? என்பது புரியாமல் அங்குமிங்கும் அலை பாய்ந்து திரியும் மனித மனதை பேரின்பரசனையில் நிலை கொள்ளச் செய்திடவல்ல வழிமுறைகளை தனக்கும் இந்த தரணிக்குமாக போதித்து; இவ்வளவு, அவ்வளவு என எல்லை கண்டு கொள்ள முடியாத பூமான் நபிகளாரின் புகழாரச் சமுத்திரத்தில் முக்கவைத்து: பிறப்பின் சிறப்பு என்ற வெண்முத்துக்களையும் புதுமைப் பூக்கள் எனும்

என்றெல்லாம் சொல்லப்பட்டிருப்பதை நாமும் படித்து உணர்ந்துள்ளோம். அத்தோடின்றி, கியாமத்து நாளன்று வல்ல அல்லாஹ் முன்பின் எப்போதுமே இல்லாத அள விற்கு மிக உச்சகட்டமான அளவு கோபம் கொண்ட வனாக வெளிப்படுவான்' என நமது நபிகளார் (ஸல்) அவர்கள் அறிவித்து உள்ளார்கள்.

சாதாரணமாக;

புயல், பூகம்பம், பெருமழை போன்ற இயற்கைச் சீற்றங்கள் ஏற்பட்டு விட்டாலே அதனைத் தாங்கிக் கொள்ளவும் தடுத்துக் கொள்ளவும் முடியாமலிருந்து கொண்டிருக்கின்ற மனித சக்தியால் அல்லாஹ்வின் உச்ச கட்ட கோபத்தை எங்கனம் தாங்கிக் கொள்ள முடியப் போகின்றது. அதை தடுக்க எந்த வகை உபாயங்களா லும் முடியுமா?

இதனைக் கொஞ்சம் யோசித்துப் பார்த்த புலவர் பெருமானுக்கு இனம்புரியாத திடுக்கமும் நடுக்கமும் ஏற் பட்டு விடுகின்றது. ஆகவே அல்லாஹ்வின் சீற்றத்தை தடுத்து நிறுத்தவல்ல உபாயம் எது என்று சிந்திக்கின்றார், அவர். ஒன்றுமே புலப்படவில்லை அவருக்கு.

கடைசியாக அவருக்கு ஒரு நினைவு வருகின்றது. ஆம் அதுதான் சிறந்த - முறையான - பயன் தரக்கூடிய உபாயம்' - என அவருக்குப் படுகின்றது.

உடனே, நபிகளாரிடம் தொடர்பு கொண்டு,

'படைப்பினங்களில் தனிச்சிறப்புப் பெற்ற தாஹா

பிகளாரே!' 'உலக அழிவு' எனும் கியாமத் நிலை உருவாகும் போது - வல்ல அல்லாஹ் உச்ச கட்டச் சீற்றத்தில் இருந்திடும் வேளையில் 'உம்மதீ .. உம்மதீ...' என ஓடோடி வந்து வாரியெடுத்து முத்தமாரி பொழிந்து அணைத்துக் கொள்ளும் துணிவு, அதிகாரம், உங்களுக்கு மட்டும்தானே இருக்கின்றது. ஆகவே அந்த அதிபயங்கர வேளையில் என்னையும் இறுகப்பற்றி அபயம் தந்தாக வேண்டும்' என முறையீடு செய்யும் போதே; அவருக்கு நாம் எந்த வகையில் நபிகளாரின் உம்மத்தாக திகழ்ந்திட அருகதை இருக்கின்றது?' - என்ற மன உறுத்தல் ஏற்பட்டதால் 'என் அருகதையின்மையை கண்டு என்னை நீங்களும் புறக்கணித்து விட்டால் எனக்கு வேறு தஞ்சம் எவர் உளார்?, என நபிகளார் (ஸல்) அவர்களிடமே உரிமையோடு கேட்டு கெஞ்சுகின்றார் - கதறுகின்றார்.

---

وَلَنْ يَضِيقَ رَسُولَ اللهِ جَاهُكَ بِي
إِذَا الْكَرِيمُ تَجَلَّى بِاسْمِ مُنْتَقِمِ (١٥٣)

**வல(ய்)ன் யழீக்க ரஸூ லல்லாஹி**
**- ஜாஹுக்கபீ**
**இதல்கரீமு தஜல்லா பிஸ்மி**
**- முன்தகிமி**

அல்லாஹ்வின் அருமைத் தூதே! கருணை மிக்க இறைவன் 'பழிவாங்கியாக' வெளியாகும் அந்நாளில் தங்களின் தகைமைசால் பேருபகாரம் எனக்களித்தால் தங்களின் பெருமை குறைந்தா போய் விடும்......?

இதனை -

'பழிவாங்கியாய்க்கருணைப் பரமன்

வெளியாம் போது!

அழியாதநும்பெருமை அடியேனால் குன்றிடுமோ

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : கருணை வள்ளலான நபிகள் நாதரே! வல்ல ரஹ்மானாகிய அல்லாஹ் 'பழிவாங்கி' எனும் தன் மையில் வெளிப்படும் தருவாயில் - குன்றாத - குறையாத நுங்களின் பெருமைக் கரங்களைக் கொடுத்து எம்மைக் காப்பாற்றினால் நுங்களின் பெருமை குறைந்தாபோய் விடும்? - அல்லவே!

வி - ரை : வல்ல அல்லாஹ்விற்கு 99 - காரணப் பெயர்கள் உள்ளதை நாம் அறிவோம்.

அவைகளில் 'முன்தகிம்' என்பதும் ஒன்று. அதன் பொருள் 'பழிவாங்குபவன்' என்பதாம். அதாவது; அடி யான் அக்கிரமத்தின் உச்ச கட்டத்தை அடையும் போது 'பழிவாங்கி' எனும் தன்மையை வெளிப்படுத்துவான். இறைவன். அந்த வல்லவன் அந்தத் தன்மையில் இயங் கிடத் தொடங்கினால் அதன் கடுமையைச் சொல்ல வார்த்தைகளே இல்லை. அந்த அளவு அதிபயங்கரமாக இருக்கும்.



## பழிவாங்கும் பரமனால் பழி வாங்கப்பட்டவர்கள்

ஆது, தமூது கூட்டத்தார் அக்கிரமத்தின் உச்சாணிக் கேறி தலைகால் தெரியாமல் ஆட்டம் போட்டனர். ஆகவே 'பழிவாங்கி' எனும் தன்மையில் வெளிப்பட்ட இறைவன் அவர்களின் சுவடுகூட இல்லாது அவர்களை அழித்தொழித்து விட்டான்.

'காரூன்' செல்வ செறுக்கின் உச்ச கட்டத்தை அடைந்தான். ஆகவே, அவனில் பழிவாங்கியாக வெளிப்பட்ட இறைவன்' 'இவனை விழுங்கு' என பூமிக்குக் கட்டளையிட்டான். ஆகவே இன்றும் நாளையும் - அங்குல - அங்குலமாக பூமியால் விழுங்கப்பட்டு வருகின்றான். அந்த காரூன்.

பதவிப் பெருமையின் உச்சாணிக்கிளையில் அமர்ந்து 'தானே பெரிய கடவுள்' என்றான் ஃபிர் அவ்னு ஆகவே கடலில் அமிழ்த்தி அவனை பழிவாங்கினான் அல்லாஹ்.

## நபிகளார் பிறப்பெடுத்த பின்னர் பரமனின் கொடுங்கரம் நீளவில்லை

ஆனால்; கருணை வள்ளலான நமது நபிகளார் (ஸல்) அவர்கள் இம்மண்ணில் பிறந்த பிறகு இன்று வரை இறைவன் 'பழிவாங்கி' எனும் கொடுங்கரத்தை எவர் மீதும் நீட்ட வில்லை. கியாமத்வரை அங்கனம் பழிவாங்கியாக பொங்கியெழவும் மாட்டான்.

ஏன் தெரியுமா?

முஹம்மத் (ஸல் - அம்) எனும் ரஹ்மத் மழை அல்லாஹ்வின் பழிவாங்குதல் எனும், பூகம்பத்தை குளிரச் செய்து விடுவதால்.

அப்படியென்றால், நபிகளாரின் காலம் தொட்டு இது வரை எத்தனையோ பேர் அழிவுக் கிலக்காகி உள்ளனரே பூகம்பங்களும், புயற் சேதங்களும் எத்தனையெத்தனையோ ஏற்பட்டுள்ளனவே அவைகளெல்லாம். அல்லாஹ்வினால் ஏற்படவில்லை என்கின்றீரா?' என எகிறிக் குதிக்கக் கூடும் சிலர்.

ஆனால் நான் அந்தக் கருத்தில் கூறிட வில்லை. ஆவதனைத்தும் அல்லாஹ்வினால்தான். அதிலே எவ்வித ஐயமும் இல்லவே இல்லை. ஆனால் நபிகளாருக்குப்பின் இன்றுவரை நிகழ்ந்துள்ள அழிமானங்கள், புயல் பூகம்பச் சேதாரங்கள், சோதனைகள், வேதனைகள் அனைத்தும் அல்லாஹ்வின் 'பழிவாங்கி' என்ற தன்மையினால் ஏற்பட்டதன்று. மாறாக அவனது கண்டிக்கும் தன்மையினால், புத்திபுகட்டும் தன்மையினால்தான் அவைகள், நிகழ்ந்தன என்பதுவே நான் சொல்லியதின் சாரமாகும்.

## பழிவாங்குதலும் கண்டிப்பும் ஒன்றாகுமா?

அதாவது ;

குற்றவாளி இரண்டாண்டுகள், மூன்றாண்டுகள் என தண்டிக்கப்பட்டு சிறை [தண்டனை அனுபவிப்பதை 'நீதியின் கண்டிப்பு' என்று தான் கொள்ள முடியுமே தவிர, பழிவாங்கும் நடவடிக்கையாக அதைக் கருத முடியாது.

தகப்பன் தன் மகனை அடிக்கின்றான் என்றால் 'கண்டிக்கின்றான்' என்போமே தவிர 'பாவி பழிவாங்கு கின்றானே' எனச் சொல்லோம்.

ஆசிரியர் மாணவனை பெஞ்சுமேல் ஏறி நிற்கச் சொன்னால் அது கண்டிப்பே தவிர, பழிவாங்கும் செய லன்று.

ஆனால், துரோகி நாடு கடத்தப்படுகின்றான் என்றால் அது பழிவாங்கும் செயல்.

கொலைஞனை தூக்கிலிடப்படுகின்றதென்றால் அது பழிவாங்கும் செயல்.

துரோகச் செயல் எதிலும் ஈடுபடாத எதிர்க்கட்சித் தலைவர்கள் சிறைப்பிடிக்கப்பட்டு உள்ளே முடக்கி வைக்கப்பட்டால் அது பழிவாங்கும் நடவடிக்கை.

இவை போல,

நபிகளார் (ஸல்) அவர்களுக்குப்பின் இன்றுவரை ஏற்பட்டுள்ள அழிமானங்கள், புயல் பூகம்பச் சேதங்கள், வெள்ளச் சேதங்கள் போன்ற சோதனைகளும் இறைவனால் கொடுக்கப்பட்ட கண்டிப்பு தண்டனை தானே தவிர பழிவாங்கும் செயலன்று

ஆது தமூது வர்க்கம் இறைவனால் பழி வாங்கப் பட்டது. அதனால் அந்த வர்க்கம் வேரோடு - வேரடி மண்ணோடு - அழிந்து பட்டது. ஆனால் இந்த ஆது தமூது வர்க்கத்தாரைப் போல நபிகளாருக்குப் பின்னுள்ள எவரும் அங்கனம் சுவடே இல்லாமல் அழித்தொழிக்கப் பட்டுள்ளனரா, காட்ட முடியுமா, வரலாற்றில்? நீட்ட முடியுமா ஒரு விரலையாவது?

இப்போது புரிந்திருக்குமே! அல்ஹம்து லில்லாஹ்...

இதோ மீண்டும் சொல்லுகின்றேன்; முஹம்மது (ஸல் - அம்) எனும் ரஹ்மத் மழை அல்லாஹ்வின் 'பழி வாங்குதல்' எனும் பூகம்பத்தைக் குளிரச் செய்து வருவதால் அன்னாரின் பிறப்பிற்குப்பின் இன்றுவரை இறைவன் பழிவாங்கும் தன்மையை வெளிப்படுத்தவில்லை. இனியும் கியாமத் நாள் வரை அந்தத் தன்மையை வெளிப்படுத்த மாட்டான்.

## அல்லாஹ் பழிவாங்கும் தன்மையை வெளிப்படுத்தும் போது

ஆனால் கியாமத் நாளன்று 'மாலிக்' எனும் தன்மையில் வல்ல ரஹ்மான் வெளிப்படுவதால் 'முன்தகிம்' எனும் பழிவாங்கும் தன்மையும் வெளிப்பட்டே தீரும்.

இதனைத்தான், நமது புலவர் பெருமான் அவர்கள்.

'கியாமத்தில் பழுவாங்கியாய்க் கருணைப் பரமன் வெளிப்படும்போது' எனச் சுட்டுகின்றார்.

சாதாரணமான இந்த உலகில் மனிதன் மனிதனைப் பழிவாங்கிட முயலும் போது பழிக்கு உள்ளாக நேரிடும் மனிதன் நலிந்து, நசிந்து செய்வதறியாது தவிக்கின்றான். அனுபவத்தில் பலரைப் பார்க்கின்றோம்.

செல்வமோ செல்வாக்கோ பயன்படாத கியாமத் நாளில் 'மாலிகி யவ்மித்தீனாகிய' வல்ல அல்லாஹ் பழிவாங்க நாடிவிட்டால் (நஊது பில்லாஹ்) அப்பப்பா! அந்தக் கொடுமையை வர்ணிக்க வார்த்தைகளேது ...?

ஆகவேதான் நமது புலவர் பெருமான்;

நமது அண்ணல் நபியுல்லா (ஸல்) அவர்களிடம்:-

'அப்படி வல்ல அல்லாஹ் கியாமத்தில் பழிவாங்கியாக வெளிப்படும் அந்த வெம்மையின் போது 'அண்ணலே! அருளே! பொருளே! புகழே! நீங்கள் நுங்கள் 'ஷஃபா அத்' எனும் தஞ்சமீந்து இந்த ஏழையை ஆதரியுங்கள். அங்கனம் ஆதரிக்காமல் நீங்களும் என்னைக் கை விட்டு விட்டால் எம்மை அணைக்க யாரால் முடியும்?

எனக் கெஞ்சுகின்றார்.

எம்மானே! கோமானே! சீமானே! ஏந்தல் நபியுல்லா (ஸல்) அவர்களே! பூவோடு சேர்ந்த நாறும் மணம் பெறுவது போல பூசிரி அவர்களின் இந்த விண்ணப்பத் தோடு சேர்ந்து மணம்பெற ஆசைப்படுகின்றேன். ஆகவே என்னையும் அல்ல ... அல்ல ... எங்களையும் கொஞ்சம் ஏறிட்டு பாருங்களேன்.

ஸல்லல்லாஹு அலா முஹம்மது

ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்

ஸல்லல்லாஹு அலா முஹம்மது

ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்

ஸல்லல்லாஹு அலா முஹம்மது

யா ரப்பி ஸல்லி அலைஹி வ சல்லிம்

---

فَإِنَّ مِنْ جُوْدِكَ الدُّنْيَا وَضَرَّتَهَا
وَمِنْ عُلُوْمِكَ عِلْمُ اللَّوْحِ وَالْقَلَمِ (١٥٩)

**ஃப இன்ன மின் ஜூதிக்கத் துன்யா வ ளர்ரதஹா -**
**வமின் உலூமிக இல்முல் லவ்ஹி வல்கலமி**

ஏனெனில்; இம்மையும் அதன சக்களத்தியான மறுமையும் உங்களின் சன்மானங்கள் தானே! அஃதன்றி லவ்ஹு எனும் பலகையும் கலம் எனும் எழுதுகோலும் உங்கள் ஞானத்தின் பிரதிபலிப்புத்தானே!

இதனை -

இம்மைமறுமைநும்தம் இருங்கொடையால்
- வந்தவையே!

செம்மையிலௌஹு கலம் சேர்அறிவும் நீர் அறிவீர்!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : (நபிகள் நாதரே!) இவ்வுலக வாழ்வும் மறு உலக வாழ்வும் உங்களின் மேன்மை மிக்க மகத்துவத்தால் தான் கிடைக்கப் பெற முடியும்-லௌஹு கலம் பற்றிய ரகசியங்கள் உங்களுக்கு மாத்திரமன்றோ தெரிந்த ஒன்று. எந்நேரம் எவருக்கு என்ன சம்பவிக்கும் என்பது உங்களுக்கன்றோ தெரிந்த ரகசியம். எங்களுக்கு அங்ஙனம் எப்போது என்ன நேர்ந்தாலும் உங்களின் 'தஞ்சம் கொடுத்தல்' எனும் கரத்தால் எங்களைக் காப்பாற்றுங்களேன்! வேறு கதி எங்களுக்கில்லையே!

يَا نَفْسِ لَا تَقْنَطِي مِنْ زَلَّةٍ عَظُمَتْ
إِنَّ الْكَبَائِرَ فِي الْغُفْرَانِ كَاللَّمَمِ (١٠٨)

**யா நஃப்ஸி லா தக்னதீ மின் ஜல்லதி**
**- தின் அழுமத்**
**இன்னல் கபாயிர ஃபில் ஃகுஃப்ரானி**
**- கல்லமமி**

சறுக்கி விழும் மனமே! கருணைமிக்க இறைவனது கருணை நமக்கு எங்கே கிட்டப் போகின்றது - என நீ விரக்தி கொள்ள வேண்டாம் மன்னிப்பதில் பெரும் பாவங்கள் சிறிய பாவங்களைப் போன்றதே...

இதனை -

சறுக்கிவிழுந்தநெஞ்சே தனியன் அருள் நம்பிநிற்பாய்

பொறுக்கில்பெரும்பவமும் சிறுபிழைகள்
-போல்வனவே !

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை : வேண்டாம்...வேண்டாம் என்றபோது அதை லட்சியம் செய்யாமல் 'இனிமை இனிமை ..' என நம்பி பாவச் செயல்களில் அடர்ந்தேறியதன் மூலம், நற்பாதையை விட்டும் வழுக்கி விழுந்து தாழ்ந்துவிட்ட என் மனமே ! மாட்டிக் கொண்டோம் நாம். இனியெங்கே மீட்சி' என பயந்து தன்னந் தனியோனான அல்லாஹ்வின் அருளை விட்டும் விரக்தி அடைந்து விடாமல் - அவன் அடியாரை அரவணைக்கும் அருளாளன். நம்மையும் அரவணைக்கத் தவறமாட்டான்-என நம்பி நிற்பாய். ஏனெனில் அவன் பார்த்து மன்னிக்க நாடிவிட்டால் பெரும் பெரும், பாவங்களும் சிறு பாவங்களைப் போல தூசியாக மாறிவிடும்.

வி-ரை : துஆவிற்கு 'அல்லாஹ் மன்னிக்கும் இயல்பு கொண்டவன். நம்மையும் மன்னிப்பான்'- என நல்ஆதரவு கொள்வதும் ஒரு நிபந்தனையல்லவா? ஆகவே துஆவை ஆரம்பிக்குமுன் அந்த நிபந்தனையை இங்கேயும் அடுத்த கண்ணியிலும் நினைவு கூறுகின்றார் புலவர் பெருமான்.



لَعَلَّ رَحْمَةَ رَبِّي حِينَ يَقْسِمُهَا
تَأْتِي عَلَى حَسَبِ الْعِصْيَانِ فِي الْقِسَمِ (١٥٦)

ல அல்லரஹ்மத்துறப்பி ஹீன
- யக்ஸிமுஹா
தஃத்தீ அலா ஹஸபில் இஸ்யானி
- ஃபில்கிஸமி

எனது இறைவன் தன் இன்னருளை பகிர்ந்து கொடுக்கும் போது பாவங்களுக்குத் தக்கபடியான ஈவு எனக்குக் கிட்டிடக்கூடும்.

இதனை -

அருளைப்பகிர்ந்திறையோன்! அளிக்குங்கால்-
! -என்பவத்தின்
இருளுக்கிசைந்ததொரு ஈவெனக்குக்
கிட்டிடுமே

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: கியாமத் நாளன்று மனிதருள் பலருக்கு கிருபைமிக்க அல்லாஹ் தன் ‘ரஹ்மத்’ எனும் பேரருளில் ஒரு சிறிய அளவைப்பகிர்ந்தளிப்பான். அங்கனம் பகிர்ந்தளிக்கப்படுவோருள் நானும் இருந்திடக்கூடும். ஆகவே என் பாவச்சுமைகளுக்குச் சமமாக எனக்குக் கிட்டும் அந்தப் பங்கு இருந்திடவும் கூடும். (ஆகவே மனமே நீ விரக்தி கொள்ள வேண்டாம்)

يَا رَبِّ فَاجْعَلْ رَجَائِي غَيْرَ مُنْعَكِسٍ
لَدَيْكَ وَاجْعَلْ حِسَابِي غَيْرَ مُنْخَرِمِ ﴿١٥٤﴾

**யா றப்பிஃபஜ்அல்றஜாஈ ஙைற**
**- முன்அகிஸின்**
**லதைக்க வஜ்அல்ஹிஸா**
**- பீஙைற முன்ஹரிமி**

இறைவா, எம்பெருமா! உன்னை நம்பி வாழும் என்னை ஒரு போதும் கைவிட்டுவிடாமல் காப்பாற்றிடுவாயாக! (உன் பாலுள்ள எனது நல்ஆதரவை முறித்து விடாமல்) பாதுகாத்திடுவாயாக.

இதனை -

உன்னைநம்பிவாழும் என்னை ஒருபோதும்
கைவிடற்க!
இறைவா!உன்பாற்கொள் எண்ணம்
முறித்திடற்க!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க - ரை : என்னிறைவா! நான் உன்னை நம்பி நல் ஆதரவு கொண்டு இறைஞ்சுதற் கொப்ப என்னை ஒரு போதும் கை விட்டு விடாதே! உன் அருளின் மீது வைத்துள்ள ஆதரவையும் முறித்துவிடாதே! கருணைக் கரம் நீட்டி என்னைக் காப்பாற்றிடக் கடவாய்! (ஆமீன்... ஆமீன்... யாரப்பல் ஆலமீன்).

وَالْطُفْ بِعَبْدِكَ فِي الدَّارَيْنِ اِنَّ لَهُ
صَبْرًا مَتَى تَدْعُهُ الْاَهْوَالُ يَنْهَزِمِ (١٥٢)

**வல்துஃப்பி அப்திக்க:பித்**
**- தாரைனி இன்னலஹு**
**ஸப்ரன் மதா தத்உ_ஹுல்**
**- அஹ்வாலு யன்ஹஜிமி**

(இறைவா, எம்பெருமா!) நின் அடிமைக்கு ஈருலகிலும் இரக்கம் காட்டியருள்! (ஏனெனில்) பொறுமை அற்பமே உள்ளது. திடுக்கம் அணுகிடும் போதே நடுக்கம் கொண்டு ஓடுபவனாக உள்ளேன்.

இதனை-

நின்னடிமைக்கீருலகும் நீள்இரக்கம்' காட்டிடுவாய்
துன்னுபொறைஅற்பம்உள்ளேன்! துயர்தாங்கும்
ஆற்றல்இல்லேன்

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: கிருபைக் கடலான எஜமானே நல் ஆதரவே உன்னை மட்டுமே நம்பியுள்ள உன் அடிமையான - புழுக்கையான - எனக்கு ஈருலகிலும் ஈடிணையற்ற இரக்கம் காட்டி ஆதரித்திடுவாயாக! ஏனெனில் தாங்கும் சக்தி அற்றவனாகவும் சகிப்புத்தன்மையற்றவனாகவும் நான் உள்ளேன். இப்படிப்பட்ட என்னால் உன் தண்டனையின் கடுமையைத் தாங்கிட முடியாது எஜமானே!

وَأْذَنْ لِسُحْبِ صَلٰوةٍ مِّنْكَ دَآئِمَةً
عَلَى النَّبِيِّ بِمُنْهَلٍ وَّمُنْسَجِمِ (١٥٩)

**வஃதன் லிஸுஹ்பி ஸலாதின் மின்க,**
**-தாயிமத்தன்**
**அலந்நபிய்யி பிமுன்**
**-ஹல்லின்(வ்) வ முன்ஸஜிமி**

இன்னும்; உந்தன் ஸலாம் எனும் சாந்தி' முகில் எம் ஏந்தலர் நபிகளார்பால் நிரந்தரமாக பொழிந்திடக் கருணை செய்தருள்வாயாக!

இதனை

உன்றன் கருணை முகில் உனதுநபி நாதரின்மேல்
என்னுங் கருணைமழை இனிது பெய்யச்-
-செய்தருள்வாய்!

என மறைக்காயர் பாடுகின்றார்

க-ரை (அடியார்க்கருளும் அன்பனே!) எடுக்க, எடுக்க வற்றாத உந்தன் ஸலவாத் எனும் சாந்தி மேகத்தை உந்தன் நபிகள் நாதர் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் மேல் கருணை மழையாய் என்றும் இனிதாய்ப் பெய்யச் செய் தருள்வாய்.

வி-ரை; துஆவின் அணுகு முறைகளை முழுமையாக விளங்கி வைத்துள்ள நமது புலவர் பெருமான் நடை முறையில் இங்கே அமுலுக்கு கொண்டு வருகின்றார். அதாவது;

துஆவை ஆரம்பம் செய்யும் போது அல்லாஹ்வைப் புகழ்வது கொண்டு தொடங்க வேண்டும் என்பது துஆவு டைய நிபந்தனைகளில் ஒன்றல்லவா? அதற்கொப்ப 155-ம் கண்ணியில் 'அல்லாஹ்வின் அருளின் முன் பெரிய சிறிய பாவங்கள் அனைத்துமே சமமானவைதான்'-என்றும் 156-ம் கண்ணியில் 'மன்னிப்புச் செய்யும் விசயத்தில் அல்லாஹ்வின் பேரருள் பாவிகளுக்குப் பகிர்ந்தளிக்கப்படும் போது - எனக்கும் கொஞ்சம் கிடைக்கும்' என நம்பிக்கை தெரிவித்தும் - 157-ம் கண்ணியில் அல்லாஹ்வின் விசால மான ஆதரவை விமரிசித்தும் 158-ம் கண்ணியில் 'அல்லாஹ் வின் ஈவிரக்கம் எனும் அரவணைப்பு அடியானுக்குக் தவறினால் அதன் விளைவு சொல்லும்படியாக இருக்காது'- என்று கூறியும் இதுவரை அல்லாஹ்வைப் புகழ்ந்த புலவர் பூசிரி தனது துஆவின் இரண்டாவது கட்டமாக இங்கே நபிகளார் (ஸல்-அம்) அவர்கள்பால் ஸலவாத் சொல்லி தனது துஆவிற்கு பரண் அமைக்கின்றார்.



مَا رَنَّحَتْ عَذَبَاتِ الْبَانِ رِيحُ صَبَا
وَأَطْرَبَ الْعِيسَ حَادِي الْعِيسِ بِالنَّغَمِ (١٦٠)

**மாரன்னஹத்அதபாத்**
**-தில்பானி ரீஹு ஸபா**
**வ அத்ரபல்ஈஸஹா தில்ஈஸி**
**-பிந் நஹமி**

தென்றல் வீசும் காலமெல்லாம்; ஒட்டகைப் பாகன் ஒட்டகைகளுக்காக கானம் பாடும் காலமெல்லாம் (எங்கள் நபிகளார் முஹம்மது ஸல்-அவர்கள்பால்) ஸலாவத் எனும் சாந்தியைக் கருணாமாரி பொழிந்திடக் கருணை செய்தருள்வாயாக !

இதனை -

காற்றசைக்கும் காலமெல்லாம் கானம்இசைத்
தொட்டகையைத்
தேற்றியுந்தும் காலமெல்லாம் சேர்க்கருணை
மாரிபெய்வாய்!

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை; கண்ணியமிக்கோனே! காருண்யமூர்த்தியே! கருணைக் கடலின் ஊற்றே!!! அங்ஙனம் எங்கள் அண்ணலாரின் மீது நீ பொழியும் கருணை மழையின் தொடர்ச்சி, எதுவரை நீடிக்க வேண்டுமெனில் உலகில் தென்றல்

இருக்கும்வரை, அது மரம் செடி கொடிகளை அசைக்கும் காலம்வரை - கடுகிப் பயணமாகும் ஒட்டகைக்கு பயணக் களைப்பு ஏற்படாமல் இருப்பதற்காக இசைக்கப்படும் பாட்டின் இனிய ஓசை ஒலித்துக் கொண்டிருக்கும் காலம் வரை-ஸலவாத் எனும் தொடர் கருணையை எங்களின் ஈருலக நீதர் நபிகள்நாதர் (ஸல்.அம்) அவர்களின் பால் பொழிந்து கொண்டே இருந்திடக் கடவாய்.



وَالْآلِ وَالصَّحْبِ ثُمَّ التَّابِعِيْنَ لَهُمْ
أَهْلِ التُّقٰى وَالنُّقٰى وَالْحِلْمِ وَالْكَرَمِ ١٤٢

**வல்-ஆலிவஸ்ஸஹ்பி தும்**
**மத்தாபிஈன லஹும்**
**அஹ்லித் துகாவந்துகா**
**வல்ஹில்மி வல்கரமி**

நபிகள் பெருமானின் நற்றவக் கிளையினர் தோளொட்டி நின்ற தோழர்கள், பின் தொடர்ந்தோர் அனைவர் மீதும் ஸலாவத்' எனும் சாந்தியைக் கருணாமாரியாகப் பொழிந்தருளக்கடவாய் அவர்களோ பக்தி, பொறை தூய்மை, வண்மை படைத்த அருங்குணக் குன்றுகளாவர்.

இதனை-

பக்திபொறைதூய்மைவண்மை -

-படைத்தவர்களாம் நயினார்

மித்திரர்உற்றார்தொடர்ந்தோர் மீதும் அருள்மாரிப்

பெய்வாய்

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை; பக்திக்குரிய பரம்பொருளே! பொறுமை, தூய்மை, ஈகை ஆகிய நற்குணங்களுக்கதிபதியே! சுற்றம், உற்றம் அற்ற தன்னந்தனியோனே! பக்திக்கு எடுத்துக் காட்டாய், தூய்மைக்கு இலக்காய், ஈகைக்கு இலக்கணமாய், பொறுமைப் பெட்டகமாய்த் திகழும்-எங்கள் நாயகம் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் உற்றார் உறவினர், பந்துமித்திரர் தோழர்களான சஹாபாக்கள் நல்வழித் தொடர்களான தாபிஈன்கள் ஆகிய அனைத்து வழிமுறையினருக்கும் உந்தன் ஸலவாத் எனும் கருணையையும் சலாம் எனும் ஈடேற்றத்தினையும் விஸ்தரித்து அருள்மாரியாய் பொழிந்தருளக்கடவாய்.

வி-ரை உலகத் தூதர் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் பால் ஸலவாத் சொல்லியபின் இங்கே 'ஆலுன் நபி' எனும் அறவழித் தொடர்கள் பாலும், வியத்தகு விண்மீன்களான சஹாபா பெருமக்கள் பாலும் நல்லறத்தைத் தொடர்ந்தோர் களான தாபிஈன்கள் பாலும் அல்லாஹ்வின் அருள்மாரியை வேண்டிக் கையேந்துகின்றார் சொல்மாரிக்குச் சொந்தக் காரரான புலவர் பெருமான் பூசிரி.

# ஆலூந் நபி
# எழுவர் அறவழிச் சுடர்கள்

நானிலத்தின் நாயகம் நபிகளின் நாயகமான முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கு பெண் மக்கள் நால்வர் ஆண் மக்கள் மூவர் ஆக மொத்தம் ஏழு பிள்ளைச் செல்வங்கள் பிறந்தனர். அவர்களில்;

(1) காசிம் (2) ஹஜ்றத் ஜைனப் (3) ஹஜ்றத் ருகைய்யா (4) ஹஜ்றத் பாத்திமா (5) ஹஜ்றத் உம்முகுல்தூம் (6) அப்துல்லா (ரலியல்லாஹு அன்ஹும்) ஆகிய அறுவரும் அன்னை கதீஜா (ரலி-அன்ஹா) அவர்களின் மணி வயிற்றில் உதித்த நல்முத்துக்களாவர். இப்ராஹீம் என்ற ஆண் குழந்தை மட்டும் மாரியத்துல் கிப்திய்யா (ரலி-அன்ஹா) அவர்களின் வயிற்றில் உதித்த ஒற்றை முத்தாகும்

இந்த ஏழு பிள்ளைச் செல்வங்களில்;

காசிம், அப்துல்லா, இப்ராஹீம் ஆகிய மூன்று ஆண் மக்களுமே அல்லாஹ்வின் விருப்பப்படி பால்குடிப் பருவத்திலேயே மரணித்து விட்டனர்.

ஹஜ்றத் ஜைனப் (ரலி-அன்ஹா) ஹஜ்றத் ருகைய்யா (ரலி - அன்ஹா) உம்முகுல்தூம் (ரலி - அன்ஹா) ஆகிய மூன்று பெண்மக்களும் நிகாஹ் செய்து கொடுக்கப்பட்டுப் பெருவாழ்வு வாழ்ந்த பின்னரே மவ்தானார்கள் என்றாலும் அம்மூவருக்கும் வாரிசு ஏற்படவில்லை. ஆனால்;

ஹஜ்ரத் பீவி ஃபாத்திமா (ரலி - அன்ஹா) அவர்களுக்கு ஹஸன், ஹுசைன் (ரலி ... அன்ஹுமா) என்ற

இரு ஆண் குழந்தைகள் பிறந்து அவ்விரு கண்மணிகள் மூலமாகவே நபிகளார் (ஸல் - அம்) அவர்களின் வாரிசுச் சுடர் உலகில் பிரகாசிக்கத் தொடங்கியது.

மேற்கூறிக் காண்பிக்கப்பட்ட ஏழு பிள்ளைக் கனிய முதுகளையும், இமாம் ஹஸன், ஹுஸைன் (ரலி...அன்ஹுமா) ஆகிய இருவரையும்' அவ்விரு கண்மணிகளின் சந்ததியில் வழி வழியாகத் தோன்றி, இன்று உலகின் பல பாகங்களிலும் ஒளிர்ந்து கொண்டுள்ள அறவழிச் சுடர்களை யும், இனி கியாமத் வரை அந்த அறவழிச் சுடர்களின் கதிர்களாகத் தோன்றவுள்ள வழித் தோன்றல்கள் அனை வரையும்தான் ஆலுந் நபி என அதாவது 'நபிகளாரின் பந்து மித்திரர்' என அழைக்கப்படுகின்றது.

## அறவழிச் சுடர்களுக்கு மரியாதை ஏன்?

சாதாரணமாக சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டு 'தியாகி' என்ற சிறப்பிற்கு உரித்தானவர்களின் பரம் பரையினருக்கு சில கௌரவங்கள் நமது நாட்டில் கொடுக்கப்படுவதைக் கண்டும் கேட்டும் வருகின்றோம்.

நந் தமிழ் நாட்டின் ஒரு குறிப்பிட்ட பகுதியை ஆட்சி செய்து குறுநில அரசராக விளங்கிய வீரபாண்டிய கட்ட பொம்மு என்பவன் சுதந்திரத்திற்காகப் போராடி அதற் காகவே அரசையும் உயிரையும் தியாகம் செய்தான் என்பது வரலாறு. அத்தகு தியாகத்திற்கு மரியாதை செய்யும்பொருட்டு அந்த வீரபாண்டியனின் பரம்பரையில்

தோன்றியவர்களுக்கு இன்று - சில நூற்றாண்டுகளுக்குப் பின் - தனிப் பட்ட சில சிறப்புக்கள் அரசாலேயே செய்யப்பட்டதை நாமும் சேர்ந்து வரவேற்றோம்.

நம் நாட்டில் மட்டுமல்ல, உலகமு முவதிலுமே அந்தந்த நாடுகளில் தத் தமது நாட்டிற்காக உழைத்த தியாக சீலர்கள், தொழில் மேதைகள், நுண்கலை ஆய்வாளர்கள், அறிஞர்கள், கவிஞர்கள் போன்ற அறிவு மேதைகள் போன்றோருக்கும் அவர் அவரின் வாரிசுகளுக்கும் - வாழையடி வாழையாகவந்து கொண்டிருக்கும் அவர்களின் வழித்தோன்றல்களுக்கும் மரியாதை செய்திடும் நல்ல பழக்கம் ஏதாவதொரு உருவில் நடத்தப்பட்டுக் கொண்டு வருவதை நாம் பார்த்து வருகின்றோம்.

இப்படி ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்காக தேவைப்படும் தியாகத்தில் அல்லது சேவையில் லட்சத்தில் ஒருபகுதியை - செய்தமைக்காக அங்கனம் செய்தவருடைய வாரிசுகள் பொது மரியாதை செய்து சீராட்டப்படும் போது-

இந்த முழு உலக முன்னேற்றத்திற்காக - உலகத்து மாந்தர் அனைவருமே மணம் பெற்று வாழ வேண்டும் என்பதற்காக - ஒரு குறிப்பிட்ட காலத்தவர்க்கு மட்டுமின்றி, உலகம் உள்ளவும், உலகில் உயிரினம் உள்ளளவும் வரக்கூடிய அனைத்து மக்களும் உயர்ந்து வாழ வேண்டும் என்பதற்காக முழு தியாகத்தையும் செய்து முடிந்த அரும் பெரும் தியாகி முஹம்மது (ஸல்-அம்) அவர்களுக்கும் அன்னாரின் சுத்தமான வழித் தோன்றல்களுக்கும் 'இந்த

உலகம் எவ்வளவு கடமைப்பட்டிருக்கின்றது? என்பதை ஒரு கணம் சிந்தித்துப் பார்த்தால் 1400 ஆண்டுகளுக்கு முன் தோன்றி மறைந்த முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் அறவழிச் சுடர்களுக்கு மரியாதை செய்வதேன்' என்ற கேள்விக்கு மிகச் சரியான பதில் கிடைக்கும்.

ஆகவேதான் இஸ்லாமியப் பேரிலக்கியமான இந்த புர்தா பனுவலில் நபிகளார் (ஸல் - அம்) அவர்களின் நல்வழித் தொடர்களான ஆலுந்நபி'களுக்கு தனித்தன்மை கற்பித்து - குறைந்த அளவு அவர் அவர் துஆச் செய்யும் போதெல்லாம் மறக்காமல் ஆலுந்நபி களான நபிகளாரின் அந்த வழித் தோன்றல்களுக்காகவும் இறையருளை வேண்டும்படி நமதுபுலவர் பெருமான் பூசிரி அவர்கள் தனது உருக்கமான துஆவில் - இங்கே 161 ம் கண்ணியில் - ஆலுந் நபிகளுக்கும்

'பக்தி பொறை தூய்மை வண்மை படைத்தவர்களாம் நபினார் மித்திரர் .. மீதும் அருள்மாரி பெய்வாய் - என்பதாக இறைஞ்சி நம்மைத் தூண்டுகின்றார்.

---

## வியத்தகு விளக்கங்கள்

---

நபிகளார் முஹம்மது (ஸல் - அம்) அவர்களை வாழ்க் கையில் நொடி நேரமாவது நிஜக்கண்களால் காணும் பேறுபெற்ற அனைத்து முஸ்லிம்களுக்கும் 'சஹாபாக்கள் என சிறப்புப் பெயர் வழங்கப்பட்டுள்ளது மார்க்கத்தில்

அங்ஙனம் ஸஹாபாக்கள் என்ற சிறப்பிற்கு உரித்தானவர்களின் எண்ணிக்கை சுமார் 1,24,000 பேர்களென 'இப்னு ஸலாஹ்' (ரஹ் - அன்ஹு) என்ற வரலாற்று ஆய்வாளர் அறிவிக்கின்றார்.

ஸஹாபாக்கள் எனும் தமது நற்றவத்தோழர்களைச் செம்மை பொருந்திய பெருமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் பூரிப்போடு உவந்தேற்றிப் போற்றியுள்ளார்கள்.

அந்தப் புகழாரங்களில் சில:

□ என் தோழர்கள் விண்ணில் மின்னும் விண்மீன்களைப் போன்றவர்களாவர். அவர்களில் எவரைப் பின்தொடர்ந்தாலும் நீங்கள் நேர்வழி பெற்றுக் கொள்ள முடியும்.

□ அல்லாஹ்...அல்லாஹ்...எனது ஸஹாபாக்களை என்ன வென்றுரைப்பது? எவர் எனது ஸஹாபாக்களை நேசிக்கின்றாரோ அவர் என்னையே நேசித்தவராவார். எவர் அவர்களை வெறுக்கின்றாரோ அவர் என்னையும் வெறுத்தவராவார். எவர் சொல்லால் செயலால் அந்த உத்தமர்களை நோவினை செய்கின்றாரோ அவர் என்னை நோவினை செய்தவராவார். எவர் என்னை நோவினை செய்கின்றாரோ அவர் வல்ல அல்லாஹ்வையும் நோவினை செய்தவராவார். எவர் அல்லாஹ்வை நோவினை செய்கின்றாரோ அவர் தன்னைத்தானே நரகில் தள்ளிக் கொண்டவராவார். (நவூது பில்லாஹ்-)

☐ வல்ல அல்லாஹ் தனது அடியார்களில் ஒருவரின் மீது மற்ற அனைத்து அடியார்களின் அனைத்துப் பாவச் சுமைகளையும் சுமத்துவதாக வைத்துக் கொண்டால்; அது, எனது சஹாபிகளில் ஒரே ஒரு சஹாபியை வெறுப்பதினால் ஏற்படும் பாவச் சுமையை விடப்பெரியதன்று.

## விண்மீன்களில் விழுக்கடைகள்

நபிகளார் (ஸல்) அவர்களை நிஜர்கண்களால் காணும் பேறு பெற்றதால் 'சஹாபி' எனும் பெறர்க்கரிய பேறு பெற்று அதன்பின் எச்சில் புத்தியால் மதம் மாறி மீண்டும் நபி களாரின் மறைவுக்குப் பின் இஸ்லாத்திற்கு அவர் மீண் டால் அத்தகையவர்க்கு 'சஹாபி' என்ற அடைமொழி பொருந்துமா? என்ற வினாவை எழுப்பி அதற்கு மார்க் கத்தில் பதில் இருக்கின்றதா எனப்பார்த்தால் 'சஹாபி' என்ற அடைமொழி அத்தகு கட்சி மாறி மீண்டவர் களுக்கும் பொருந்தும் என்ற நல்ல பதில் நமக்குக் கிடைக்கின்றது.

இதோ அந்த விந்தைமிகு விழுக்காட்டு மனிதர் களைப் பற்றி சில எடுத்துக் காட்டுகள்.

☐ துலைஹா (ரலி - அன்ஹு) எனும் சஹாபி சிலரின் ஆசைவார்த்தைகளை நம்பி மதம்மாறி முர்த்தத் தால் விட்டவர்.

இந்த துலைஹாவைத் திருத்தும் நற்பணியில் ஈடு பட்ட 'ழிரார்பின் அஜ்வர்' (ரலி - அன்ஹு) எனும் சஹாபி

அம்முயற்சியாலேயே வீரமரணம் எய்தும்படி நேரிட்டு விட்டது. நபிகளார் (ஸல் - அம்) அவர்களின் மறைவுக்குப்பின் ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி - அன்ஹு) அவர்களது ஆட்சியின் போது மதம் மாறிய துலைஹாவை 'துரோகி' எனப் பிரகடணப் படுத்தி அவரைக் கைது செய்வதற்காக காலித் பின் வலீத் (ரலி - அன்ஹு) அவர்களின் தலைமையில் ஒரு குழு கூட நியமிக்க பட்டது. ஆனால் அப்போது அவர் தலைமறைவாகி ,ஷாம்' நாட்டிற்குத் தப்பி ஓடி விட்டார். ஆனால் ஹஜ்ரத் உமர் பாரூக் (ரலி - அன்ஹு) அவர்களின் ஆட்சியின் போது மனம் தெளிந்து திருந்திய துலைஹா இஸ்லாமியத்திற்கு மீண்டுவிட்டார். கலீபா உமர் (ரலி - அன்ஹு) அவர்களும் மன்னித்து துலைஹாவை மீண்டும் ஏற்றுக் கொண்டு அவர் மீதிருந்த துரோகப் பிரகடணத்தை ரத்துச் செய்தார்கள்.

இதுபோல,

அப்துல்லாஹிப்னு அபூஷரஹ் என்பவரும் கிளை விட்டுக் கிளைதாவியதொரு கட்சி மாறி தான்.

இவர் கொஞ்சம் புத்திக் கூர்மையும் தூர நோக்கும் படைத்தவராக இருந்தும், தனக்கிருக்கும் புத்திக் கூர்மையை ஜீரணிக்கவல்ல ஆற்றல் பெற்றவராக இல்லாத காரணத்தால் முஸ்லிமாக இருந்து கொண்டே 'எனக்கும் வஹி அறிவிக்கப்படுகின்றது. ஆகவே நானும் நபிதான் எனப் பிதற்றத் தொடங்கி விட்டார். அப்துல்லாஹிப்னு அபூஷரஹின் இந்த தலைக் கனத்தின் காரணமாக இஸ்லா

யப் பேரியக்கத்திலிருந்து அவர் 'சஸ்பெண்டு' செய்து வைக்கப்பட்டு நாளடைவில் முழுமையாக நீக்கப்பட்டார்.

ஆனால் மக்கா வெற்றிக்குப் பின் மனம் திருந்தி-தவறை உணர்ந்து-தன் செய்கைக்கு வருத்தம் தெரிவித்த தால் அவரை மீண்டும் இஸ்லாமியத்தில் சேர்த்துக் கொள் ளப்பட்டது.

ஆகவே துலைஹா (ரலி-அன்ஹு) அப்துல்லா ஹிப்னு அபூஷரஹ் (ரலி-அன்ஹு) ஆகிய இந்த இருவரும் கட்சி மாறிகளாக - விழுக்கடைகளாக - ஆனாலும் பிற்காலத்தில் மீண்டும் இஸ்லாமியத்தில் இணைந்து அதன்பின் தூய்மை யோடும் வாய்மையோடும் கடைசிவரை வாழ்ந்த காரணத் தால் 'சஹாபி' என்ற அந்தஸ்தை அவ்விழிவருக்கும் கடுகளவு கூட குறைவின்றி கொடுக்கப்படவேண்டும்.

## சந்தனக் கடையில் இருந்து சாக்கடைக்குப் போய்விட்ட அபாக்கியவான்

'உக்காஷா' என்பவரும் நபிகளாரின் காலத்தில் அன் னாரின் சன்னிதானத்திலே தவ்ஹீதை ஏற்று முஸ்லிமாக வாழ்ந்தவர்தான். ஆனால் எச்சில் புத்தியின் காரணமாக மதம் மாறி-மூர்த்தத்தாக ஆகி-சந்தனக் கடையில் இருந்து விட்டு சாக்கடை அள்ளப்போய் விட்டார். போனவர் திரும்பவே இல்லை. பாவம் அவர்.

ஆகவே இந்த அபாக்கியவானை 'சஹாபி' என்று சொல்லக்கூடாது.

## சமுதாயம் நன்றிக்குப் பொருளாக விளங்கிட

சஹாபி' என்றால் யார்? என்பதனையும்; சஹாபாக்களை நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் எந்த அளவு ஏற்றிப் போற்றிப் புகழ்ந்துள்ளார்கள்-என்பதனையும் மேலே கண்டோம். இப்போது சமுதாயம் சஹாபாக்களை எந்தெந்த முறையில் கௌரவிக்கக் கடமைப்பட்டுள்ளது என்ற விபரத்தை ஆய்வோம்.

இந்த உலகத்துச் செல்வங்கள் அனைத்தையும் ஒரு தட்டிலும் சஹாபா பெருமக்களின். தியாக சீலத்தை மறு தட்டிலுமாக வைத்து எடை போடப்பட்டால் எது எடை கூடியதாக இருக்கும்? என ஒரு வினாவை எழுப்பி, அதன் அடிப்படையில் ஆய்ந்தறிந்தால் சஹாபாக்களின் தியாகம் தான் எடை கூடியதாகவும் எங்கும், எதிலும் முன்மாதிரியாகவும் இருந்திடுவதை நம்மால் காணமுடியும்.

இத்தகு உயர்ந்த தியாகத்திற்கு நம்மால் எப்படி உரிய மரியாதை செய்திட முடியும்...?

இன்றைய சமுதாயமக்கள் அனைவரும் தங்களின் உடல், பொருள், ஆவி அனைத்தையுமே கொட்டிக் கொடுத்தாலும் அது அவர்கள் தியாகத்திற்கு ஈடாக முடியுமா?

அகிலத்தில் உள்ள அனைத்து மரங்களையும் பேனா வாக்கி, கடல் நீர் அனைத்தையும் மையாக வடித்து, தயாராகும் அனைத்து காகிதங்களிலும் எழுதி முடித்தாலும் அம்பெருந்தகைகளின் தியாக சீலங்கள் முற்றுப் பெறுமா?- என்றால் முடியாது? முடியாது...முடியவே முடியாது'- என்பேன் நான்.

ஏன் தெரியுமா?

அவர்களின் தியாகம் சுயநலமோ, சூதுவாதோ இம்மியும் கலக்காத மிகத் தூய்மையானதாகும்.

பொதுமைப் பூங்காவில் துளிர்விட்டுச் செடியாகி, மரமாகி பூத்துக் காய்த்துக் குலுங்கிய தியாகச் சோலையின் வாடாமலர்கள் அந்த சஹாபாக்கள்.

பகுத்தறிவுப் பாசறையில் பிறந்து, சுயமரியாதை வித்தையில் தேர்ந்து, மனிதாபிமானத்தை அடகு வைத்திட வல்ல மூடப்பழக்க வழக்கங்களையும், மோடத்தனமான நம்பிக்கைகளையும் வேரறுத்த வீரபுருசர்கள் அந்த சஹாபாக்கள்.

அறிவிற்கு, அன்பிற்கு, அரசியல் தெளிவிற்கு பொருளியல்-அருளியல்-ஆன்மீகத் தத்துவங்களுக்கு- சகோதரத்துவ-சமத்துவ நலன்களுக்கெல்லாம் முழுமையான முன்னோடிகள்-அந்த சஹாபாக்கள்.

அந்த சஹாபா பெருமக்கள் இல்லை என்றால்-

இன்றைக்கு, வானோக்கி உயர்ந்து நிற்கும் குத்பு மினார்களை பார்க்க முடியாது. விண்முட்டி ஒலிக்கும் பாங் கொலிகளைக் கேட்க முடியாது. இன்னுமொன்று. மறை யொன்று, மாநபி வகுத்தளித்த வாழ்க்கை முறையொன்று எனும் ஒருமைப்பாட்டுச் சித்தாந்தத்தைச் சுவைத்தின் புற்றிருக்க முடியவே முடியாது.

ஆகவே,

படைப்பினில் உயர்ந்தோர் நாங்கள்

பாருலகைப் பேருலகாக்கும்

சிற்பிகள் நாங்கள். ஆதலால்-

கல்லுக்கும் முல்லுக்கும் குடியல்லோம்.

அல்லாஹ் ஒருவனைத் தவிர்த்து

வேறு எவர்க்கும் எதற்காகவும்,

எப்போதும் தலைவணங்கோம்

-என நாம் நெஞ்சுயர்த்தி நிமிர்ந்துநிற்கக் காரணமாய் இருந்த அந்த உத்தம சஹாபாக்களின் திருநாமங்களை செவியேற்ற வுடன் 'ரலியல்லாஹு அன்ஹு' என வாயாரப் போற்றிப் புகழ்ந்திடவும், அழியாப் பெருஞ்செல்வமான நம்மின் துஆக்களில் அவர்களைப் பொருட்டாக ஆக்கவும் பணிக்கப் பட்டு உள்ளோம் நாம்.

இத்தகு தியாக சீலர்களுக்காக நாம் இதனைக் கூடச் செய்யாவிட்டால் நாம் எப்படி நன்றியுள்ள ஜென்மங்களாகத் திகழமுடியும்....?

இதனால்தான் நன்றிக்குப் உதாரண புருஷரான நமது புலவர் பெருமான் பூசிரி(ரஹ்) அவர்கள் தமது தகைமைமிகு துஆவில்,

தொடர்ந்தோர் மீதும்
அருள்மாரி பெய்வாய்!

-எனக்கூறி உத்தம சஹாபாக்கள் அனைவருக்கும் அல்லாஹ்வின் அருள்மாரியை வேண்டி நிற்கின்றார்.

## நல்லறத்தை தொடர்ந்தோர்

சஹாபாப் பெருமக்களில் ஒருவரையேனும் வாழ்க்கையில் நொடி நேரமாவது நிஜக்கண்களால் காணும் பேறு பெற்ற அனைத்து முஸ்லிம்களுக்கும் 'தாபிஈன்' என்று பெயர்.

பூமாலை-

இது மணமக்களின் கழுத்துக்களிலும், மரியாதைக் குரியவர்கள், தலைவர்கள், ஆகிய மேன்மக்களின் கழுத்துக் களிலும்தான் தவழும். அது போல சஹாபாக்களை நிஜக் கண்களால் காணும் பாக்கியம் பெற்றவர்கள் என்றால் அவர்கள் முழுமையாக இல்லாவிட்டால் முக்கால் அளவாவது தியாகத்திலும் வணக்க வழிப்பாடுகளிலும்; பக்திப் பரவசத்திலும் ஈடு கொடுக்கத் தக்கவர்களாக இருந்திருப் பார்கள் என்பது கண்கூடு.

ஆகவே அவர்களுக்கும் ஒவ்வொரு இஸ்லாமியரும் கடமைப்பட்டுள்ளோம்

இந்த அடிப்படையிலேயே,

''பக்தி பொறை தூய்மை வண்மை படைந்தவர்களாம் நயினார்.

மித்திரர் உற்றார் தொடர்ந்தோர் மீதும் அருள்மாரிப் பொழிவாய்''.

என பூசிரி அவர்கள் தாபிஈன்களுக்கும் அல்லாஹ்வின் அருள்மாரியை வேண்டுகின்றார்.

இதில் ஒரு சிறப்பு என்னவென்றால்;

இந்த ஒரே கண்ணியில் வியத்தகு இத்தனை விபரங்களை எண்பித்துக் காட்டுகின்றார் என்றால் இது பூசிரி ஒருவருக்கு மட்டுமே கைவந்த கலை அல்லவா?

ثُمَّ الرِّضَا عَنْ أَبِي بَكْرٍ وَعَنْ عُمَرٍ
وَعَنْ عَلِيٍّ وَعَنْ عُثْمَانَ ذِي الْكَرَمِ (١٦١)

தும்மர் ரிழா அன் அபீ பக்ரின்வ
- அன் உமரின்
வ அன் அலிய்யின்வ அன்
- உத்மான தில்கரமி

இன்னம்; அன்பர் அபூபக்கர், உத்தமர் உமர்; உன்னதர் உதுமான் நல்லறிஞர் அலி (ரலி-அன்ஹும்) ஆகியோரையும் பொருந்திக் கொள்வாயாக.

**இதனை -**
*சங்கை சித்தீக், உமறு, ஷஹீதுதுமா னோடலிக்கும்*
*எங்கும்பரந்துநிற்கும் இறைபொருத்தம் உண்டாக!*
*என மறைக்காயர் பாடுகின்றார்.*

**க-ரை :** ஆளும் பெரியோனே, அல்லாஹ்வே! மெய்யுடைப் பயணமான மிஃராஜ் பயணம் தன்னை மெய்ப்பித்த காரணத்தால் 'மெய்ப்பித்தவர்' (சித்தீக்) என்ற சிறப்பிற்கு உரித்தான 'முதல் கலீபா' ஸய்யிதுனா அபூபக்கர் (ரலி) ; நீர் கலந்த பாலில் நீர் நீக்கி பாலை மட்டும் பிரித்தருந்தும் அன்னப் பறவைப்போல, அநீதியை விட்டும் நீதியை பிரித்து அறிவித்ததால் 'ஃபாருக்' என்ற சிறப்பிற்கு உரித்தான 'இரண்டாம் கலீபா' உமர் (ரலி) நபிகளார் (ஸல்) அவர்களின் குமாரத்திகளான ருகையா, உம்முகுல்தூம் (ரலி - அன் ஹுமா) ஆகிய இருவரையும் ஒருவர் பின் ஒருவராக மணந்த காரணத்தால் ஈரொளி நாதர் (துன் னூரைன்) என்ற சிறப்பிற்கு உரித்தான மூன்றாம் கலீபா உத்மானுல் கனி (ரலி) : 'நான் அறிவென்னும் நகரம், அலி அதன் தலைவாசல்' எனச் சிறப்பிக்கப்பட்ட நான்காம் கலீபா அலி (ரலி) ஆகிய நான்கு கலீபாக்களுக்கும் உந்தன் ஸலவாத் எனும் கருணையையும், சலாம் எனும் ஈடேற்றத்தையும் என்றென்றும் ஈந்தருளக் கடவாய்;

**வி - ரை :** சஹாபாக்களையும், ஆலுன் நபிகளையும் தாபிஈன்களையும் போற்றிப் புகழ்ந்து அவர்களுக்கு அல்லாஹ்வின் அருளை வேண்டி நின்ற நமது புலவர் பெருமான், 'குலஃபாவுர் ராஷிதீன்' எனப்படும் நான்கு கலீபாக்களுக்கு குறிப்பான முறையில் அல்லாஹ்வின் பேரருளை இங்கே வேண்டுகின்றார்.

## விண் மீன்களில் பொன் மீன்கள்

★ வேதில் மறையாம் குர்ஆன் ஷரீபின் 95 - வது அத்தியாயத்திலுள்ள முதல் மூன்று வசனங்களுக்கும் கீழ் காணும் முறையில் ஹஜ்ரத் இப்னு அப்பாஸ் (ரலி அன்ஹு) அவர்கள் பொருள் சொல்லி உள்ளதாக 'தாவூஸ் எனும் திருமறை விரிவுரையாளர் அறிவிக்கின்றார்.

வத்தீனி: ஹஜ்ரத் அபூபக்கர் அவர்களின் மீது சத்தியமாக

வஜ் ஜைத்தூனி : ஹஜ்ரத் உமர் அவர்களின் மீது சத்தியமாக.

வ தூரி ஸீனீன : ஹஜ்ரத் உத்மான் அவர்களின் மீது சத்தியமாக

வஹாதல் பலதில் அமீன் : ஹஜ்ரத் அலி அவர்களின் மீது சத்தியமாக!

ஃ ஃ ஃ

★ ஹஜ்ரத் உபையிப்னு கஃபு (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள்.

'நான் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் திருச் சன்னதியில் 'அஸ்ர்' எனும் அத்தியாயத்தை ஓதிக்காட்டி நபிகளாரே! இதன் விரிவுரையை எனக்குச் சொல்லிக் கொடுத்திடக் கடவீர்- எனவேண்டி நின்றேன் அப்போது அண்ணலெம் பெருமான்;

வல் அஸ்ரி; பகலின் கடைசி நேரத்தின் மீது சத்தியமாக.

இன்னல் இன்ஸான லஃபீ குஸ்ரின் : நிச்சயமாக அபூ ஜஹில் நஷ்டமடைந்து விட்டான்.

இல்லல்லதீன ஆமனூ : உறுதியான இறை நம்பிக்கை கொண்ட அபூபக்கரைத் தவிரவும்.

வ அமிலுஸ் ஸாலிஹாத்தி : சன்மார்க்கத்திற்கு இணக்க மான நற் கருமங்களைப் புரிந்து வரும் உமரைத் தவிரவும்.

வதவாஸெள பில் ஹக்கி : உண்மையை எடுத்துரைக் கும் உத்மான் அவர்களைத் தவிரவும்,

வ தவாஸெள பிஸ் ஸப்ரி: பொறுமையை எடுத்துக் காட்டும் அலியைத் தவிரவும் என, அந்த அத்தியாயத்தின் பொருள் விரியும் - என்று நபிகளார் நவின்றார்கள்.

★ இப்னு அபீ நும்ரத் (ரஹ்-அன்ஹு) எனும் ஹதீதுக் கலை விற்பன்னர் தமது புஹாரி ஷரீபின் விரிவுரை யில் குறிப்பிட்டுள்ளார்;

நபிகளார் நவின்றார்கள் : நான் கொடையின் பட்டணம் அபூபக்கர் அதன் தலைவாசல் நான். வீரத்தின் பட்டணம் உமர் அதன் தலைவாசல் நான். வெட்க உணர்வின் புட்டணம் உத்மான் அதன் தலைவாசல் நான். அறிவின் பட்டணம். அலி அதன் தலைவாசல் நான் என்பதாக.

★ மற்றொரு ஹதீதில் காணப்படுகின்றது.

கலீலுல்லா இப்ராஹீம் (அலை) அவர்களைப் பார்க்க விளைவோர் அபூபக்கர் அவர்களைப் பார்த்துக் கொள்

ளட்டும். ஹஜரத் நூஹ் (அலை) அவர்களைப் பார்க்க விளைவோர் உமர் அவர்களைப் பார்த்துக் கொள்ளட்டும் கலீமுல்லா மூஸா (அலை) அவர்களைப் பார்க்க விளைவோர் உதுமான் அவர்களைப் பார்த்துக் கொள்ளட்டும். ஹாரூன் நபியவர்களைப் பார்க்க விளைவோர் அலி அவர்களைப் பார்த்ததுத் திருப்தி கொளளட்டும்,

★ நபிகளார் நவின்றுள்ளார்கள் :

அபூபக்கர் என் கண்களைப் போன்றவர். உமர் என் நாவைப் போன்றவர். உதுமான் என் கரங்களைப் போன்றவர். அலி என் உடலில் ஒட்டியுள்ள உயிரைப் போன்றவர். எனவும்,

★ அபூபக்கர் தொழுகையின் தக்பீர் தஹ்ரீமாவை போன்றவர். உமர் தொழுகையின் கிரா அத்தைப் போன்றவர். உதுமான் தொழுகையின் ருகூவைப் போன்றவர். அலி சஜ்தாவைப் போன்வவர். எனவும் உவமை காட்டியுள்ளார்கள்.

★ ஒரு மனிதர் நபிகளாரிடம் வந்து அல்லாஹ்வின் திருத்தூதே! பெண்களில் சிறந்தவர் யார் என்றபோது ''ஆயிஷா நாயகி'' என்றார்கள் 'ஆண்களில் சிறந்தோர் யார்' என்றபோது - 'ஆயிஷாவின் தந்தை அபூபக்கர்' அவர் கியாமத்து நாளன்று தூய கற்பூரக் குதிரையில் வருவார்' என்றார்கள். ''உமரைப் பற்றி என்ன சொல்லுகின்றீர்கள்?''- என்றபோது- 'அவர் கியாமத்து நாளன்று மணமிக்க கஸ்தூரி குதிரையில் வருவார்' என்றார்கள்.

'உதுமானைப் பற்றி...?' என்றபோது அவர் அந்நாளில் வெள்ளைக் கற்பூரக் குதிரையில் வருவார் என்றும், அலிஅவர் களைப் பற்றிக் கேட்கப் பட்டபோது. 'அவர் என் தம்பி, அவர் கியாமத்தில் சொர்க்கத்து ஒட்டகையில் வருவார்' என்றும் கூறினார்கள்.

★ இமாம் ஷாஃபிஈ (ரஹ்-அன்ஹு) அவர்கள் கீழ் வரும் ஹதீதை அறிவிக்கின்றார்கள் :

'நானும் (-நபிகளார்) அபூபக்கரும், உமரும் உதுமானும், அலியும் ஆதம் (அலை) அவர்களை படைப்பதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அர்ஷுடைய வலப்பக் கத்தில் ஒளியாக இலங்கிக் கொண்டிருந்தோம்''

இப்னு அப்பாஸ் (ரலி - அன்ஹு) அறிவிக்கின்றார்கள்

நபிகளார் (ஸல்-அம்) அவர்களிடம் 'லிவாவுல் ஹம்து' எனும் கொடியைப் பற்றி விபரம் கேட்கப்பட்ட போது-

'அது மூன்று குஞ்சங்களைக் கொண்டதொரு கொடி ஒவ்வொரு குஞ்சமும் வானம் பூமியளவு பெரியது. முதல் குஞ்சத்தில், பிஸ்மில்லாஹ்வும் அல்ஹம்து சூராவும்; இரண்டாம் குஞ்சத்தில் தவ்ஹீது கலிமாவும்; மூன்றாவது குஞ்சத்தில் அபூபக்கர் ஸித்தீக், உமருல்ஃபாருக், உதுமான் துன்நூரைன், அலிய்யுல் முர்தழா, எனவும் பொறிக்கப் பட்டுள்ளன' என விபரம் கூறினார்கள் நபியுல்லா.

★ நஸஃபீ (ரஹ்-அன்ஹு) கூறுகின்றார்கள்.

சொர்க்கத்தில் நான்கு ஆறுகள் உள்ளன- அந்நான்கு ஆறுகளும் நான்கு கலீபாக்களுக்கு உவமையாக இருக்கின்றன.

நீராறு, அபூபக்கர் அவர்களுக்கு உவமை. எப்படியெனில், தண்ணீர் பூமியைச் செழிக்க வைப்பது போல அபூபக்கர் அவர்களை நேசிக்கும் இதயங்கள் செழிப்பை அடைகின்றது.

பாலாறு, உமர் அவர்களுக்கு உவமை. எப்படியெனில் சிறு குழந்தைகள் பாலைக் குடித்து வளர்ச்சியைப் பெறுவது போல உமர் அவர்களின் பால் நேசம் கொள்வதால் மார்க்கம் வலிமை பெற்று வளருகின்றது.

மதுவாறு, உதுமான் அவர்களுக்கு உவமை. எப்படியெனில், மது குடிகாரர்களுக்குப் போதையை ஏற்றுவதே போல உதுமான் அவர்களை நேசம் கொள்வதால் அங்கனம் நேசிப்பவர்களுக்கு திக்ரு எனும் மெய்ஞானப் போதை ஏறுகின்றது.

தேனாறு, அலி அவர்களுக்கு உவமை. எப்படியெனில் தேன் நோயாளிகளுக்கு அரு மருந்தாகப் பயன்படுதல் போல அலி (ரலி) அவர்கள்பால் நேசம் கொள்வதால் மனித உள்ளத்தில் ஏற்படும் பத்தாம்பசலித் தன்மை, ஐந்தாம் (முனாபிக்) படைத்தன்மை ஆகிய கரும்புள்ளிகளை நீக்கும் அரு மருந்தாக அது திகழும்'

☐ நபிகள் நாயகம் முஹம்மது (ஸல் - அம்) அவர்கள் நவின்றதாக அனஸ் (ரலி - அன்ஹு) அறிவிப்புச் செய்கின்றார்கள்.

கியாமத் நாளன்று அபூபக்கர் ஸித்தீக் (ரலி - அன்ஹு) அவர்கள் அழைத்து வரப்பட்டு சொர்க்கத்திற்கு அனுப்பப் படுவார்கள். அப்போது அப்பெருந்தகை "எனது நேசர்களும் என்னுடன் அனுப்பப்படுதல் வேண்டுமே!" என முறையிடு வார்கள். ஆகவே எவர் எவர் அன்னாரை மனமொழி மெய்யன்புடன் நேசித்து வாழ்ந்தார்களோ அவர் அனை வருமே அன்னாருடன் சொர்க்கத்திற்கு அனுப்பப்படுவர் அதுபோல;

உமர் பாரூக் (ரலி - அன்ஹு) அவர்கள் சொர்க்கத்திற்கு அனுப்பப்படும் போதும் அப்பெருந்தகை "எனது நேசர்கள் என்னுடன் அனுப்பப்படுதல் வேண்டுமே" என முறையீடு செய்வதால், எவர் எவர் அன்னாரை மனமொழி மெய்யன் புடன் நேசித்து வாழ்ந்தார்களோ அவர்கள் அனைவரும் அன்னாருடன் சொர்க்கபதிக்கு அனுப் ப டு வா ர் க ள். அதுபோல;

உதுமான் துன்நூரைன் (ரலி - அன்ஹு) அவர்கள் அனுப்பப்படும்போது அப்பெருந்தகையும் "எனது நேசர்கள் என்னுடன் சொர்க்கபதிக்கு அனுப்பப்படுதல் வேண்டுமே!" என முறையீடு செய்வதால் எவர் எவர் அன்னாரை நேசித்து வாழ்ந்தார்களோ அவர் அனை வ ரு ம் அன்னாருடன் சொர்க்கபதிக்கு அனுப்பப்படுவார்கள். அதுபோல;

அலி (ரலி - அன்ஹு) அவர்கள் [சொர்க்கத்திற்குள் அனுப்பப்படும்போது அப்பெருந்தகையும் அங்கனம் முறை யீடு செய்வதால், எவர்எவர் அன்னாரை நேசித்து வாழ்ந்தார் களோ அவர் அனைவரும் அன்னாருடன் சேர்த்து சொர்க்கபதிக்கு அனுப்பப்படுவார்கள்.

☐ ஜ"ஹரில்பாயிஹ்' எனும் நூலில் எச்சரிக்கப்பட்டுள்ளது:

ஒருவர் அபூபக்கர் உமர், உதுமான் (ரிளுவானுல்லாஹி அலைஹிம்) ஆகிய மூவரை நேசித்தால் அவர் அலி (ரலி-அன்ஹு) அவர்களையும் நேசித்தவராகவே கருதப்படுவார். ஆகவே அம்மனிதர் முப்பெரும் கலீபாக்களில் எவருடனாவது சொர்க்க பதி அடைந்திடுவார். ஆனால் ஒருவர் அலி (ரலி-அன்ஹு) அவர்களை மட்டும் நேசித்து மற்ற மூன்று கலீபாக்களின் பேரிலும் அதிருப்தி கொண்டவராக இருந்தால், அத்தகு மனிதருக்கு சொர்க்கத்தில் இம்மி கூட பாத்தியதை இல்லவே இல்லை.

'விண்மீன்கள்' என எம்பெருமான் முஹம்மது (ஸல்-அம்) அவர்களால் வர்ணிக்கப்பட்ட உத்தம சஹாபாக்களில் மீக் கூறப்பட்டபடி குலபாயே ராஷிதீன்கள் 'பொன்மீன்களாகவும்' 'சொர்க்கவாதிகள்' என முன்னறிவிப்புச் செய்யப்பட்ட பொறுக்குமணிகள் பத்துப் பேர்களில் முதன்மை பெற்றவர்களாகத் திகழ்வதாலும், தான் அந் நான்கு நன்மணிகளுக்கு இங்கே 162-ம் கண்ணியில் குறிப்பாக இறைப் பொருத்தத்தை வேண்டி அதன் மூலம் அவர் (பூசிரி) இறை நெருக்கம் பெற்றுப் பரிணமிப்பதோடு நமக்கும் ஜாடை காட்டுகின்றார்.



سَعْدٍ سَعِيدٍ زُبَيْرٍ طَلْحَةٍ وَأَبِي
عُبَيْدَةٍ وَابْنِ عَوْفٍ عَاشِرِ الْكِرَامِ

**ஸஃதின் ஸஈதின் ஜுபைா**
**- ரின் தல்ஹ தின்வஅரீ**
**உபைதத்தின் வப்னிஅவ்**
**- :பின் ஆஷி ரில்கராமி**

மேன்மையின் இருப்பிடங்களான சஃது, ஸயீது ஜுபைர், தல்ஹா, அபூஉபைதா, அப்துர்ரஹ்மான் பின் ஔஃப் ஆகிய (ரிலுவானுல்லாஹி அலைஹிம்) வர்களையும் (இறைவா, எமபெருமா!) பொருந்திக் கொள்வாயாக.

இதனை —

தல்ஹா, அபூ உபைதா, சஈது, சஃதுஜுபைர்
அல்லால், பின் ஔபினுக்கும் அவன் இணக்கம் -
- உண்டாக

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை தியாகத்திற்கும், தீதகற்றும் திருப்பணிகளில் தூய்மையோடு ஈடுபாடு கொள்ளும் திருத்தொண்டர்கட்கும் உரிய விலை கொடுக்க தகுதிபெற்ற எங்கள் எஜமானே! எங்கும் நிறைந்த எங்கள் ரஹ்மானே!! சொர்க்கவாதிகள்'

என முன்னறிவிப்புச் செய்யப்பட்டுள்ள பொருந்த மணி களில் -பாக்கியுள்ள தல்ஹா அபூஉபைதா, சஈது, ஜுபைர், அப்துர் ரஹ்மானிப்னு ஔப் (ரில்வானுல்லாஹி அலைஹிம்) ஆகிய சஹாபா பெருமக்களுக்கும் நின் இணக்கம் எனும் கொடை நிழலை ஈந்தருளக் கடவாயாக.

## பொருந்த மணிகள்

வி-ரை : குலபாயே ராஷிதீன் எனும் கீர்த்திமிக்க கலீ பாக்களுக்கு இறை பொருந்தத்தை வேண்டி நின்ற புலவர் பெருமான், இங்கே அவர்களை அடுத்த அஷரத்துல் முபஷ்ஷராக்களில் அறுவருக்கு வல்ல அல்லாஹ் வின் பொருத்தத்தை வேண்டுகின்றார்.

ஹஜ்ரத் ஆயிஷா (ரலி - அன்ஹா) அவர்கள் நபிகளார் முன்னறிவிப்புச் செய்ததாக - அறிவிக்கின்றார்கள்

உன் தந்தை அபூபக்கர் சொர்க்கவாதி. அவரின் சொர்க்கத்து நண்பர் இப்றாஹீம் நபி (அலை) அவர் களாகும். உமரிப்னு கத்தாபும் சொர்க்கவாதி அவரின் சொர்க்கத்துக் கூட்டாளி நூஹ் நபி (அலை) அவர்களாகும் உதுமான் பின் அப்பானும் சொர்க்கவாதி. அவரின் சொர்க் கத்துக் கூட்டாளி நான் (முஹம்மது) ஆகும். அலி யிப்னு அபூதாலிபும் சொர்க்கவாதி அவரின் சொர்க்கத்து கூட்டாளி தாவூது நபி (அலை) அவர்களாகும், ஜுபைரும் சொர்க்கவாதி அவரின் சொர்க்கத்துக்குக் கூட்டாளி இஸ் மாயீல் நபி (அலை) அவர்களாகும். சஃதுபின் அபீ

வகாஷு ம் சொர்க்கவாதி. அவரின் சொர்க்கத்துக் கூட்டாளி சுலைமான் நபி (அலை) அவர்களாகும். சயீதுபின் ஜைதும் சொர்க்கவாதி அவரின் சொர்க்கத்துக் கூட்டாளி மூஸா (அலை) அவர்களாகும். அப்துர் ரஹ்மான் பின் ஒளபும் சொர்க்கவாதி. அவரின் சொர்க்கத்துக் கூட்டாளி மர்யம் (அலை) அவர்களின் அன்பு மகனார் ஈஸா (அலை) அவர்களாகும். அபூ உபைதாபின் ஜர்ராஹு ம் சொர்க்க வாதி. அவரின் சொர்க்கத்துக் கூட்டாளி இத்ரீஸ் (அலை) அவர்களாகும். என நபிகளார் பத்து முத்துக்களையும் பொறுக்கு மணிகளாக அறிவிப்புச் செய்தார்கள்.

## இனிமையின் இலக்கணம் தல்ஹா (ரலி அன்ஹு)

சொர்க்கவாதி' என முன்னறிவிப்புச் செய்யப் பட்டுள்ள தல்ஹா (ரலி) அவர்களின் சார்புப் பெயர் 'அபூ முஹம்மது' என்பதாகும் அவர் நானூறாயிரம் பொற் காசுகளுக்குச் சொந்தம் பெற்றிருந்ததொரு சீமான் இஸ்லாத்தைத் தழுவியபின் ஒரு நூறு அடிமைகளை விலைக்கு வாங்கி அந்த நொடியிலேயே அவர்களுக்குச் சுதந்திரமும் வழங்கியதோடு அவர்கள் அனைவருக்குமே தன் சொந்தப்பொறுப்பில் திருமணமும் செய்து வைத்தார். அன்றி தீனின் வளர்ச்சிக்காக தன்னுடைய செல்வம் முழுவதையும் வாரி வாரி வழங்கி கடைசியில் தனக் கென்று ஒன்றுமே இல்லாது போய், அதனால் வறுமை நோயால் வாட்டம் பெற்றார். இவர் மக்கமா நகரை அடுத்துள்ளதொரு குக்கிராமத்தைத் தாயகமாகக் கொண்

டவர் இவர் இஸ்லாமியத்தைத் தழுவிய நிகழ்ச்சியே ஒரு விந்தையாகும். அதை அவர் தன் வாயாலேயே சொல்லு கின்றார். பாருங்களேன்.

நான் எனது கிராமத்தின் கடைவீதியில் நடந்து கொண்டிருந்தேன். அப்போது எனக்கு எதிர்ப்பட்ட ஒரு பாதிரியார் ''அஹ்மது வெளிப் பட்டு விட்டாரா?'' என என்னிடம் கேட்டார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. ஆகவே ''எந்த அஹ்மத்?'' என - அவரிடம் எதிர் கேள்வி கேட்டேன். அதற்கவர் - ''அப்துல் முத்தலிபின் பேரர் அவர். இது (மக்கமா நகரம்) அவரின் தாயகம். பூமியின் கண் அனுப்பப்பட்ட நபிமார்களில் அவரே கடைசியானவர் அவர் மண்வளம் பொருந்திய நகருக்கு (மதீனாபுரிக்கு) ஹிஜ்ரத் செய்வார். அவரைப் பின்பற்றி வாழ்ந்து கொள்ளும் படி உனக்கு உணர்த்துகின்றேன்'' என்றார் அந்தப் பாதிரி. அவரின் உபதேசம் எனது உள்ளத்தில் உணர்வைத் தூண்டி யது. ஆகவே உடனடியாக மக்கமா நகருக்குப் புறப்பட்டுச் சென்றேன், நான் ஆங்கே, முஹம்மது தன்னை நபி என வாதிக்கின்றார். அப்துல் கஃபா (-அபூபக்கர்) அவரை உண்மை கொண்டு முஹம்மதைத் தொடர்ந்து விட்டார். என்ற பேச்சு சந்து முனைகளில் எல்லாம் பேசப்படு வதை செவியேற்றேன். ஆகவே அப்துல் கஃபாவை சந்தித்து. 'முஹம்மதை நீவிர் ஏற்றுக் கொண்டீராமே! என்றேன். அதற்கு அவர் புன்முறுவலுடன் 'ஆம்' என்றார் அவரிடம் பாதிரியார் எனக்குச் சொல்லிய உபதேசங் களைச் சொல்லிக் காண்பித்தேன். அப்போது - அப்துல் கஃபா - 'அன்பரே! முஹம்மதை நீயும் ஏற்றுக் கொள்ளும் ஏனெனில் அவர் காட்டும் பாதையே சத்தியப் பாதை'

என்றார். உடனே நான் கலிமாவை மொழிந்து முஸ்லி மாக மாறினேன்.

இப்படி 'சத்தியம்' எனப்பட்டவுடன் தேடி வந்து இஸ்லாமியத்தை தழுவிய சீமான் அபூமுஹம்மத் (ரலி-அன்ஹு) அவர்கள் - யுத்த களங்களுக்குச் சென்று திரும்பும் இஸ்லாமிய வீரர்கள் ஓய்வு பெறுவதற்காகவும் - தாகம் தீருவதற்காகவும் சுற்றிலும் நீரோடையும், ஆழ்கிணறும் கொண்ட தமது விலையுயர்ந்த தோட்டத்தை - வக்ஃபுச் செய்தார்.

இப்படி கொண்ட கொள்கைக்காக, தன் கொள்கையில் தோளோடு தோள் நின்றிடும் தன் சகாக்களுக்காக மனிதாபிமானத்திற்காக தனது திரண்ட பொருட்செல்வம் முழுவதையுமே கொட்டிக் கொடுத்திட்ட தியாக சீலரை இஸ்லாமியத்தில் தவிர வேறெங்கு காண முடியும்?

அன்றி; தல்ஹா (ரலி-அன்ஹு) அவர்கள், தீட்சண்யமான பேச்சுக்களால் இஸ்லாமியத்தின் இனிமையை, வலிமையை, கூர்மையை மக்களுக்கு எடுத்தோதி செவிமடுப்போரையெல்லாம் மெய்மறக்கச் செய்திடும் பேராற்றல் பெற்றவராக இருந்ததமையால் 'நாவலர்' என்றும்; பகைவர்களிடத்தும் அன்பாக நடந்து கொண்ட காரணத்தால்-'இனிமையாளர்' என்றும்; பின்னிரவில் தனித்திருந்து

தவமிருப்பவராக இருந்திட்டாலும் காலை நேரங்களில் தன் உலகக் காரியங்களிலும் சுறுசுறுப்புடன் ஈடுபடும் இயல்பு படைத்தவராக இருந்தமையால் - 'உழைப்பாளி' என்றும் நபிகளார் (ஸல்-அம்) அவர்களால் போற்றப்பட்டார்கள்.

இப்படியெல்லாம் சகல துறைகளிலும் இஸ்லாமியத்திற்கு படிக்கல்லாகவும், ஏணியாகவும், பச்சைக் கொடியாகவும் திகழ்ந்தமையால் ''அபா முஹம்மதே! உம்மின் முன் பின் பாவங்கள் அனைத்தும் பொறுக்கப்பட்டு சொர்க்கவாதிகளின் பட்டியலில் உன்னைப்பதிவு செய்யப்பட்டுவிட்டது'' என நமது ஈருலகத் தலைவர் எம்மான் முஹம்மது (ஸல்-அம்) அவர்கள் தல்ஹா (ரலி அன்ஹு) அவர்களுக்கு நன்மாறாயம் சொல்லி 'சொர்க்கவாதி' எனும் தியாக முத்திரை குத்தியுள்ளார்கள்.

## மெய்க்காப்பாளர் ஜுபைர் (ரலி அன்ஹு)

'அபூ அப்தில்லா' எனும் சார்புப் பெயர் கொண்ட ஜுபைர் (ரலி) அவர்கள் நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் அத்தை சஃபிய்யா அவர்களின் மகன். ஆதலால் நபிகளாருக்கு அவர் 'மச்சான்' முறை கொண்டவர். இவர் தனது 16-ம் வயதிலேயே இஸ்லாமியத்தைத் தழுவி விட்டார். அன்றிருந்து

நமது நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் மெய்காப்பாளராக தன்னைத் தானே ஆக்கிக் கொண்டார். இஸ்லாத்திற்காக முதன் முதலில் வாளெடுத்துத் தோள் கொடுத்த பெருமை இவருக்கே உண்டு. ஒரு முறை நபிகளார் (ஸல்) அவர்கள் பகைவர்களின் பச்சைப்பிள்ளை விளையாட்டால்-கல்லடிப்பட்டு தெருவில் மயங்கி விழுந்துவிட்டார்கள் அப்போது அஞ்சா நெஞ்சர் ஜுபைர் (ரலி-அன்ஹு) அவர்கள்தான், உடனடியாக நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் முகத்தில் தண்ணீர் தெளித்து மயக்கத்தை தெளிய வைத்தார். மயக்கம் தெளிந்தவுடன் நமது நபிகளார் 'இதோ- ஜிப்ரயீல் அவர் உனக்கு (எனக்காக நீ எடுத்துக் கொண்ட சிறத்தைக்கு நன்றியாக) சலாம் சொல்லுகின்றார். நான் (நபிகளார்) கியாமத்து நாளில் உன் அருகில் இருந்து நீ அந்நாளின் அமளிகளால் மயங்கிடும் போது உன் மயக்கத்தை தெளிய வைப்பேன் நீ சொர்க்கவாதி!' என நன்மாறாயம் கூறினார்கள்.

இவர் தனது 66ம் வயதில் ஹிஜ்ரி 33-ம் ஆண்டில் வீர மரணமடைந்தார்.

## வள்ளல் அப்துர் ரஹ்மானிப்னு ஔப் (ரலி-அன்ஹு)

'எவர் எவரெல்லாம் பத்ருப் போரில் பங்கு கொள்கின்றாரோ அவருக்கெல்லாம் தலைக்கு நானூறு பொற்காசுகள் வீதம் அன்பளிப்பேன்' எனக் கூறி இஸ்லாமியத்தின் முதன் முதல் போருக்கு சஹாபாயே பெருமக்களைத் தயா செய்வதில் பெருங் பங்கெடுத்துக் கொண்ட பெருந்தகை அப்துர் ரஹ்மமானிப்னு ஒளப் (ரலி) அவர்கள்; களம் கண்டு வெற்றிக் கனியைத் தட்டிப் பறித்துத் திரும்பிய பத்ரு வீரர்கள் ஒவ்வொருவருக்கும் 400/பொற்காசுகள் வீதம் வாக்களித்தப்படி - தன் சொந்தச் சொத்திலிருந்து ஏறக் குறைய 1,25, 200 ஆயிரம் பொற்காசுகளை அன்பளிப்புச் செய்தார். அவர், அதனால் அன்னாருக்கு தலையில் கட்டுவதற்கு ஒரு தலைப்பாகைத் துணிகூட இல்லாமல் மீபாய் விட்டது.

இப்படி தன் சொத்து, பத்து அனைத்தையும் மியம்' எனும் பெரும் பயன்தரும் மாப் பெரிய மரத்தை வளர்ப் தபற்காகக் கொட்டிக் குவித்த அப்துர் ரஹ்மான் பின் ஒளப் (ரலி-அன்ஹு) அவர்கள், அன்றைய பஜ்ரை பெருமான் அவர்களின் பின்னிருந்து தொழுது முடித்தார். சலாம் கொடுத்து தொழுகைகையை முடித்தவுடன் பெருமான் அவர்களின் சன்னிதானத்தில் வானவர் கோன் ஜிப்ரயில் (அலை) அவர்கள் தோன்றி:

'முஹம்மதே! நிச்சயமாக வல்ல அல்லாஹ் அன்பர் அப்துர் ரஹ்மான் பின் ஒளப் அவர்களுக்கு 'சலாம்' கூறினான். அதை அவருக்கு எத்தி வைத்திடுங்கள், அன்றி

கொண்ட பெருமான் முஹம்மது (ஸல் அம்) அவர்கள் சஃதே நீவிர் தீனின் தளபதி' என அவரைச் சிறப்பித்து நீவிரும் சொர்க்கவாசி, என முன்னறிவிப்புச் செய்தார்கள்.

இவர் 250 ஹதீதுகளை ரிவாயத் செய்துள்ளார்.

## தந்தைக்காக தவம்கேட்ட சயீது (ரலி - அன்ஹு)

'அபுல் அஃவார்' என்ற சார்புப் பெயருக்குச் சொந்தக்காரரான சஃது (ரலி) அவர்களின் தந்தை ஜைது என்பார் பெருமான் அவர்களின் பிரச்சாரத்திற்கு முன்பே ஏக தெய்வத் தத்துவத்தில் திளைத்திருந்தவர்-தன் மகனையும் அந்தத் தத்துவச் சோலையின் வாடாமலராக மிளிரச் செய்தவர். ஆனால் நபிகளாரின் அன்பழைப்பிற்கு முன்பே இயற்கை யழைப்பை ஏற்றுக் கொண்டுவிட்டார் அவர்.

ஆனால் நபிகளாரின் அன்பழைப்பு கேட்டு அக மகிழ்வோடு தீனை ஏற்றுக் கொண்ட மகன் சயீது (ரலி) 'தனது தந்தை ஏக தெய்வத்தில் திளைத்தவராக இருந்தும் கூட நபிகளார் (ஸல்) அவர்களின் பிரச்சார காலம் வரை உயிருடன் இருந்து முஸ்லிமாக ஆகும் பேறு பெற்றாரில்லையே' என மிக சஞ்சலம் கொண்டவராகவே வாழ்ந்து வந்தார். ஆகவே ஒரு நாள் தனது தந்தையைப் பற்றி தாஹா நபிகளாரிடம் எடுத்துக் கூறி அவருக்கு கியாமத்தில் ஈடேற்றம் கிடைத்திட பிரார்த்திக்கும்படி மிகவும் கெஞ்சி வேண்டிக் கொண்டார்,

இதனைச் செவியேற்ற நபிகளார் (ஸல்) அவர்கள் - வானகத்துச் சமிக்ஞை கிடைக்கப் பெற்று -சயீதே! அச்சம் விடுமின். கியாமத்து நாளன்று உனது தந்தை தனித்தன்மை பெற்று ஈடேறுவார். அவர் மட்டுமன்று. பெற்றெடுத்த தந்தைக்காக இவ்வளவு கவலை கொண்டமைக்காக உன்னை 'சொர்க்கவாதி' என இறைவன் அறிவிக்கின் றான். என முன்னறிவிப்புச் செய்தார்கள்.

சுப்ஹானல்லாஹ்... தந்தைக்காக கவலை கொள் வதற்கு இவ்வளவு பெரிய சிறப்பா?...

இவர் 48- ஹதீதுகளை ரிவாயத் செய்துள்ளார்கள்.

## கொள்கைக்காக தந்தையைக் கொன்ற கொள்கைக்குன்று அபூ உபைதா (ரலி-அன்ஹு)

பத்ருக் களத்தில் அடிபட்ட புலியெனச் சீறிப்பாய்ந்து அருளாளர்களான சஹாபாக்களை திணரடித்துக் கொண் டிருந்த திறமைமிக்க வீரர் ஜர்ராஹை அப்போது அவருக்கு எதிர் அணியில் - இஸ்லாமிய அணியில் - பங்கெடுத்து நின்ற அவரின் மகன் அபூ உபைதா (ரலி-அன்ஹு) ''தோழர்களே! வழிவிடுங்கள் வாள் வீச்சில் தன்னிகரற்றுத் திகழும் என் தகப்பனை என்னால் தான் சந்திக்க முடியும்' என கர்ஜித்து தனது தகப்பனையே நேருக்கு நேர் பொருதிய திட நெஞ்சர் அபூ உபைதா - அவருடன் - தந்தையுடன் -

கோரமாகப் போராடி கடைசியில் தன் கரத்தாலேயே தனது தகப்பனைக்கண்டதுண்டமாக வெட்டி வீழ்த்தினார்.

மாஷா அல்லா..மாஷா அல்லா...மாஷா அல்லா.

'கொண்ட கொள்கைக்கு முன் தகப்பன் எதிர்ப்பட்டாலும், தனையானே எதிர்பட்டாலும் அவர்கள் தூள் தூள் தான்' என்ற வீரகாவியத்தின் இலக்கணமாகத் திகழ்ந்த அபூ உபைதாவைப் பாராட்டி ''நீ இங்கு மட்டுமன்று அங்கும் என் பாராட்டிற்கு உரியவரே! நீர் சொர்க்கவாதி'' என நமது பெருமான் முஹம்மது (ஸல்) அவர்கள் முன்னறிவிப்புச் செய்தார்கள்.

இந்த உரமிக்க உத்தமர், ஹஸரத் உமர்பாரூக் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் 58-ம் வயதில் கொள்ளை நோயால் பீடிக்கப்பட்டு அந்நோயால் வீரமரணம் எய்தினார்.

ரிளுவானுல்லாஹி தஆலா அலா அஷரத்தில் முபஷ்ஷரா இலா யவ்மித்தீன்

இஸ்லாமியத்தின் வளர்த்திற்கு, வனப்பிற்கு, வளர்ச்சிக்கு தங்களின் பெரும் பொருளையும் அரும் பொருளையும் பாசநேசங்களையும் கொட்டிக் கொடுத்ததன் மூலம் 'சொர்க்கவாதிகள்' என்ற கிடைக்கப்பெற முடியாத பெரும்பேற்றினை பெற்றுக்கொண்ட பாக்கியவான்களுக்கு அல்லாஹ்வின் இணக்கத்தை - பொருத்தத்தை வேண்டி; அதன் பொருட்டால் தன்னின் துஆவிற்கு பொலிவையும் வலிவையும் ஏற்றிக் கொண்டபின் தனது கோரிக்கையை தக்கோனிடம் சமர்பிக்கின்றார், பின்வரும் முறையில்.

يَارَبِّ بِالْمُصْطَفٰى بَلِّغْ مَقَاصِدَنَا
وَاسْمَحْ لَنَا مَا مَضٰى يَا وَاسِعَ الْكَرَمِ (١٦٢)

**யா றப்பி பில்முஸ்தஃபா பல்லிஃ**
**மகாஸிதனா**
**வஸ்மஹ்லனா மாமழா யா-வாஸி**
**அல்கரமி**

இறைவா எம்பெரும! (எங்களின் நபிகளார் முஹம்மது) முஸ்தபா (ஸல்-அம்) அவர்களது பெரும் பொருட்டால் எம் நன் நோக்கங்கள் அனைத்தையும் சித்தியடையச் செய்திடுவாய்! வள்ளற்றன்மையில் விசாலம் படைத்த பெரியோய்! சென்ற பாவங்களைப் பாராமுகமாக (மன்னித்து) விட்டருள்வாயாக!

இதனை -
இறைவா! நீ தேர்ந்தெடுத்த எம்பெருமான் தம் பொருட்டால்,
மறைவாய்வனத்திடையாம் வைத்துள்ளநன் நாட்டம் எல்லாம்
நிறைவேற்றி யீந்தநள்வாய் நிதமும்வரையா தளிப்போய்
கறையாம்கருத்தபாவம் கணிக்காது விட்டருளே'

என மறைக்காயர் பாடுகின்றார்.

க-ரை: அண்ட சராசரங்களனைத்தையும் படைத்து அவை விண்டு விடாமல், நின்று விடாமல் பாதுகாத்துப்

பராமரித்தருளும் எம் இறைவா! அன்பின் இலக்கணமாய் - பண்பின் சிகரமாய் - பாருலகில் அனுப்பப்பட்ட இறைத் தூதின் முத்திரையாய் - உன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட உத்தமர் முஹம்மதுர் ரசூல் (ஸல்) அவர்களின் பெரும் பொருட்டால் எம் உள்ளத் தடாகத்தின் ஆழத்தில் மறைந்து - மொக்காகக் குவிந்து - நிற்கும் இம்மைக்கும் அம்மைக்கும் கை கொடுத்திடும் - நல்ல நாட்டங்கள் அனைத்தையும் குறையற நிறைவேற்றித் தந்து காத் தருளக் கடவாய்! அளவில்லாமல் அடியார்க்கு அள்ளி அள்ளி வழங்கும் விசால குணம் குடி கொண்ட வள்ளலே! வல்லமையே!! நல்லமையே!!! நாங்கள் முன் செய்த பாவச் சுமைகள் அனைத்தையும் கணக்கில் வரவு வைக்காது விட்டு உனது ஹபீப் முஹம்மது (ஸல்) அவர்களின் அரும் பொருட்டால் எங்களை காத்தருளக் கடவாய்.

வி - ரை : மனிதன்...... பாவம் அவன்!

'வஹியின் முன்னறிவிப்பு' என்றும், பின்னிப் பிணைந் திருந்த அநீதியையும்; நீதி யையும் பிறித்தறிவித்த நெறி யாளர் என்றும் சிறப்பிக்கப்பட்டு 'சொர்க்கவாதி' என முன்னறிவிப்புச் செய்யப்பட்ட ஹஜ்ரத் உமர் பாருக் (ரலி-அன்ஹு) அவர்கள் 'நான் புற்பூண்டாகப் பிறந்திருக் கக் கூடாதா... கால்' நடைகளுக்கு உணவாகப் பயன்பட்டி ருப் பேனே! மண்ணாக விடப்பட்டிருக்கக் கூடாதா...... விளையும் நிலமாகப் பயன்பட்டிருப்பேனே! நீராக விடப் பட்டி ருக்கக் கூடாதா..... தாகம் தணிக்கப் பயன்பட்டிருப் பேனே! என் தாய் என்னைப் பிரசவிக்காமலிருந்தால்

எத்தொல்லைக்கும் ஆளாகாமல் இருந்திருப்பேனே!' - என புலம்பித் தவிக்கின்றார்களென்றால் -

மெய்நிலைகண்ட மெஞ்ஞானிகளெல்லாம் 'நான் ஏன் பிறந்தேனோ' என பிதற்றி உள்ளார்களென்றால் -

'அருளொளி நாதர்களெல்லாம்' என்னைப் பீடித்த பீடையே - என அறற்றியுள்ளார்களென்றால் -

சளனத்திற்கும் சாக்கடைக்குமிடையில் சல்லாபமடித்துக் கொண்டிருக்கும் நாம், எம்மாத்திரம்? அற்பத்தையும் சொற்பத்தையும் தேடித் தேடி ஓடிக்கொண்டிருக்கும் குறைமதி படைத்த நம்மால், என்ன முடியும்? எழில் மிகு வெறும் ஓவியத்தை ஏறிட்டுப் பார்த்து - சப்புக் கொட்டி - 'கடைக் கண் காட்டிட மாட்டாளா? - என பைத்தியகாரத் தனமாக ஏங்கித் தவித்துக் கொண்டுள்ள - சொறட்டைச் சுபாவமுள்ள - என் நிலைதான் என்ன...? ஆனால்;

இவைதானே மனிதனின் இலட்சியமாக - முயற்சியாக - முதிர்சியாக இருந்து கொண்டுள்ளது ஆகவே அவன் மிக மிகப் பாவப்பட்டவன்தான்!

ஆகவே இழிவுப் படுகுழியின் அடித்தளத்தில் வீழ்த்தப்பட்டு தத்தளித்துக் கொண்டுள்ள மனித சமுதாயம் நிரந்தர அழிவிலிருந்து தப்பித்துக் கரை சேர வேண்டின் 'பிடிகயிறு' ஒன்று வேண்டும். அதுவும் அக்கயிறு அறாக் கயிராக இருந்திடல் வேண்டும். அத்தகு கயிறு எங்கே உளது...?

அது வேகறங்கே இருக்க முடியும்? அகதிகளை அரவணைக்கும் இயற்கை சுபாவம் சூடிகொண்ட மா மதீனா புரியில் தான்-பொன் மண்களால் போர்த்தப்பட்டு - 'பொன் இங்கே... மண் இங்கே.. பொருள் இங்கே..... அருள் இங்கே...... ஒளி இங்கே..... ஒலி இங்கே...— உயர் கதி தரும் நிழல் இங்கே..— நிகழ்ச்சி நிரல் இங்கே.. நீ தேடும் நிம்மதி இங்கே...... நன் மதி இங்கே... மோட்சம் இங்கே... அருட்கடாச்சம் இங்கே... இங்கே... இங்கே...' என உலகை அறைகூவி அழைத்துக் கொண்டிருக்கும் முஹம்மது (ஸல்) அவர்கள் தான் அந்த அறாக்கயிறு

ஆகவேதான்:

அந்த அறாக்கயிற்றை இருகப் பற்றிப் பிடித்துக் கொண்ட அருட்கவி பூசிரி (ரஹ்) அவர்கள்,

இறைவா! நீ தேர்ந்தெடுத்த அறாக் கயிற்றின் பொருட்டால் - முஹம்மது (ஸல்) அவர்களின் தயவால் எங்கள் உள்ளத்தின் ஆழத்தில் துளிர்விடும் நல்லெண்ணங்களை பூத்துக் காய்த்துக் - கனிதரும் பலமுதிர்ச்சோலையாகப் பரிணமிக்கச் செய்! மேலும் எங்களின் இயலாமையால் - பலஹீனத்தால் - நாங்கள் செய்துவிட்ட பாவங்களை கணிக்காமல் விட்டுவிடு, என துஆவை முடித்து நம்மையெல்லாம் துவள வைத்துள்ளார்.






بعون اللّٰہ الوہّاب

صلّی اللّٰہ علٰی محمّدٍ

صلّی اللّٰہ علیہ وسلّم




# புரவலர் போர்த்திய

# பொன்னாடை

(புர்தா ஷரீ:பின் தமிழ் விரிவுரைப் பேரிலக்கியம்)

BY :-

பன்னூலாசிரியர் : மௌலவீ,
N.S.N. முஹம்மது அப்துல் காதிர் பாக்கவி,
உத்தமபாளையம் கூடலூர்.

மக்கா நூலகம்
822, அண்ணா சாலை, சென்னை - 600 002.

# பொன்னுடைக் கண்ணாடி

ஆதார நூல்கள்
சமர்ப்பணம்
பதிப்புரை
தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர்
மு. கருணாநிதி அவர்களின்
கனிப்புரை:
சமுதாயத் தலைவர் சிராஜுல்மில்லத்
அல்ஹாஜ் A. K. A. அப்துஸ்ஸமது M. A. M. P.
அவர்களின் மதிப்புரை
பன்னூலாசிரியர் மௌலானா நாகூர்
S. அப்துல் வஹ்ஹாப் ஆலிம் பாக்கவி
அவர்களின் ஆசியுரை
மின்னிடும் பொன்முகம்
(ஆசிரியர் உரை)
புர்தா மின்னியது புலவரும் மின்னினார்.
(புர்தா உருவாகிய வரலாறு)
கவலல் போக்கும் அருள்மா மருந்து
புர்தா ஷரீபினால் ஏற்பட்ட புதுமைகள்)
புர்தா ஷரீப் ஓதும் முறை.
மௌலாய வைத்தின் பொருளாக்கம் 1-18

திட்டமிட்டுத் திணிக்கப்பட்ட யுத்தங்களால் பெற்ற வீர முத்திரைகள். எட்டாம் இழை 815—917



மன்னர் நபியுல்லா (ஸல்-அம்) அவர்களின் மன்றாட்ட (ஷபாஅத்) மகிமை 9-ம் இழை 918 - 970





துஆ - பிரார்த்தனை - அதன்
அவசியம் அணுகுமுறை பத்தாம் இழை 971 - 1056








1. பாஜூரி (புர்தா ஷரீபின் அரபி விரிவுரை)
2. புஹாரி ஷரீப் ஹதீது தொகுப்பு
3. முஸ்லிம் ஷரீப் ,, ,,
4. மிஷ்காத்துல் மஸாபீஹ் ,, ,,
5. ஹயாத்துல் ஹைவான் (அரபி மிருகவியல் நூல்)
6. முஹம்மதுர் ரஸூலுல்லாஹ்
(பேராசிரியர் முஹம்மது ரிளா எழுதிய அரபி வரலாற்று நூல்)
7. பிக்ஹுல் அக்பர் (அரபி கொள்கை விளக்க ஹனபி நூல்)
8. நுஜ்ஹத்துல் மஜாலிஸ் (அரபி ஆயாத் அஹாதீது நிகழ்ச்சிக் கோவை)
9. ஜவாஜிர் (அரபுத் தமிழ் விரிவுரை)
10. நெஞ்சில் நிறைந்த நபிமணி
11. கஸீதத்துல் புர்தா
(கூத்தாநல்லூர் ஈது மீலாதுந்நபி சபை சார்பில் வெளியான புர்தா தர்ஜுமா)
13. கஸீதத்துல் புர்தா மாலை
(மதுரை மரைக்காயரின் தமிழ் செய்யுட்கள்)
14. தர்ஜுமத்துல் குர்ஆன் - அல்லாமா ஆ. கா அப்துல் ஹமீது பாக்கவி (ரஹ்)
15 முஹ்னி (மாப்பிள்ளை லெப்பை ஆலிம் (ரஹ்...) அவர்களால் எழுதப்பட்ட அரபுத் தமிழ் நூல்



# சமர்ப்பணம்



ஈருலகப் பெருந்தலைவர் - ஏக இறைவனது இறுதிப் பெருந்தூதர் முத்து முஹம்மது நபி (ஸல் - அம்) அவர்களது கங்கு கரையேதுமற்ற புகழ் மாக் கடலில் முத்துக் குளித்து புகழ் மாமணிகளை கண்டெடுத்து; அந்த மா மணிகளால் பொன்னாரத்தை மிஞ்சும் புகழாரமான - புர்தா ஷரீஃப்' பாரகாவியத்தின் தமிழ் விரிவுரைப் பேரிலக்கியமான - இந்த நான்காவது பதிப்பின் நன்மைகளை;

★ ஆதி மனிதர் ஆதம் நபி (அலைஹி...) தொடுத்து இந்த நொடிவரை பிறந்து வளர்ந்து வாழ்ந்து மறைந்த நல்லடியார் அனைவருக்கும் பொதுவாகவும் :

★ மக்கா நூலக நிறுவனர் மௌலானா அல்ஹாஜ் M. K. முஹம்மது சுலைமான் பாக்கவி ஹஜ்ரத் கிப்லா அவர்களின் பேர் மிகு பெற்றோர்களான கமால் ராவுத்தர் ஹலீமா சஃதிய்யா தம்பதிகளுக்கும் -

★ சென்னையின் இருதயமான அண்ணாசாலையின் மணி மகுடமாகத் திகழும் மக்காப் பள்ளிவாசல் நிர்வாகத் தலைவராக இருந்து சீர்மிகு சேவை செய்து மறைந்த சென்னை இப்ராஹீம் சுலைமான் சேட் சாஹிப் அவர் களுக்கும்.

★ கீழக்கரையின் சீலமிகு செல்வர் தைக்கா வாப்பா என்ற மௌலானா அல்ஹாஜ் முஹம்மது அப்துல் காதிர் ஜமாலி அவர்களது அன்புத் துணை நல்லாருக்கும்.

★ ஈரோடு தாவூதிய்யா அரபிக் கல்லூரி நிர்வாகத் தலைவராக - ஈரோடு திருநகர் ஜும்ஆ பள்ளிவாசல் நிர் மானத் தலைவராக - இன்னம் பல சமுதாய நிறுவனங் களின் தலைவராகவும் பொறுப்பேற்று மிகச் சிறப்பான சமுதாயச் சேவை செய்து வந்தவரும் உலமாப் பெரு மக்களின் உற்ற நண்பருமான – 'ஹாஜியானா' என்ற அல்ஹாஜ் E. K. H. M. அஹ்மது இப்ராஹீம் அவர்களுக்கும்

★ உத்தமபாளையம் வள்ளல் பெருந்தகை கருத்தராவுத்தர் அவர்களது மகனார் சுல்தான் முஹ்யித்தீன் அவர்களுக்கும்

★ மதுரை மாவட்ட முஸ்லிம் லீக் தலைவர் அல்ஹாஜ் S. கமாலுத்தீன் சாஹிப் அவர்களது அருமைத் துணைவி யாருக்கும்

★ எனது ஆசிரியப் பெருந்தகையும் - மாநில ஜமாஅத் துல் உலமா சபைத் தலைவராக இருந்து சிறந்த சேவை செய்தவரும்- நீடூர் மிஸ்பாஹுல் ஹுதா அரபிக் கல்லூரியின்

முதல்வராக இருந்து முதல்வர்களுக்கெல்லாம் முன்னோடியாகத் திகழ்ந்தவரும் - தமிழக இஸ்லாமிய மேடைகளில் சமுதாயக் கொள்கைகளை சிங்கமென கர்ஜித்து வந்த ஆலிம் பெருந்தகையுமான மௌலானா அல்ஹாஜ் S. R. ஷம்சுல் ஹுதா ஹஜ்ரத் கிப்லா அவர்களுக்கும்

★ கீழக்கரை ஸதக் டிரஸ்ட் நிறுவனரும் சேர்மனுமாக இருந்து உலகியல் மார்க்கவியல் கலை கலாட்சார வளர்ச்சிக்கு அருந்தொண்டாற்றி மறைந்த அல்ஹாஜ் S M. அஹ்மது ஜலால்காக்கா அவர்களுக்கும்;

★ சீதக்காதி அறக்கட்டளையின் நிர்வாக இயக்குனர் பேராசிரியர் கேப்டன் அமீர்அலி M.A. அவர்களின் அன்புத் துணை நல்லாருக்கும்.

★ எனது ஆசிரியப் பெருந்தகையும் அரபி இலக்கணத்தில் தன்னிகரற்ற ஞானம் பெற்று 'தமிழக ஸீபவைஹி' எனச் சிறப்பிக்கப்பட்டவரும் தமிழகத்திலுள்ள பல அரபிக் கல்லூரிகளில் தலைமைப் பேராசிரியராகவும் முதல்வராகவும் சிறப்புறச் சேவை செய்தவருமான கம்பம் ( - உடன்குடி) மௌலானா அல்ஹாஜ் அப்துல் கனி ஹஜ்ரத் கிப்லா அவர்களுக்கும்;

★ பன்னூலாசிரியர் கம்பம் மௌலானா மக்தூம் ஷாஹ் பாக்கவி ஹஜ்ரத் அவர்களுக்கும்

★ மாநில ஜாமஅத்துல் உலமா சபை நிறுவனர்களில் ஒருவரும் அச்சபையின் நீண்டகாலப் பொதுச் செயலாளராகவும் கடைசி கட்டத்தில் தலைவராகவும் பதவி வகித்தவரும்

'ரஹ்மத்' மாத இதழின் ஆசிரியரும் எனது ஆசிரியப் பெருந்தகையுமான மௌலானா அல்ஹாஜ் B A. கலீலுர் ரஹ்மான் ரியாஜீ, ஹஜ்ரத் கிப்லா அவர்களுக்கும்;

★ பல அரபி காலேஜுகளில் தலைமைப் பேராசிரியராகவும் முதல்வராகவும் சேவையாற்றியவரும் எனது ஆசிரியப் பெருந்தகையுமான புதுக்கோட்டை புத்தாம்பூர் மௌலானா அப்துல் ஜப்பார் ஹஜ்ரத் கிப்லா அவர்களுக்கும்;

★ ராஜகிரி காஸிமிய்யா அரபி காலேஜின் முதல்வராக நீண்டகாலம் சேவையாற்றிய சித்தையன் கோட்டை மௌலானா S.S. அப்துல்காதர் பாக்கவி ஹஜ்ரத் அவர்களுக்கும்;

★ மதுரை மாவட்ட ஜமாஅத்துல் உலமா சபைச் செயலாளராகச் சேவை செய்த பெரியகுளம் ஹாபிஜ் அப்துர் ரஹ்மான் பையாஜி அவர்களுக்கும்.

★ சிரிக்கச் சிரிக்கப் பேசி சிந்திக்கவைக்கும் நாவன்மை பெற்றிருந்த தாஜுல் பயான் அய்யம்பேட்டை மௌலானா அல்ஹாஜ் A.K.M. ஜியாவுத்தீன் பாஜில் மன்பஈ அவர்களுக்கும்;

★ மற்றும் சக்கிமங்களம் மௌலானா அப்துல் ஹமீது மிஸ்பாஹி பொதக்குடி மத்ரஸா நாஜிராக இருந்த ஜியாவுத்தீன் ஹஜ்ரத் ஆகியோருக்கும்.

★ சமுதாயச் செயல் வீரர்களின் செம்மேறு மதுரை மாவட்ட முஸ்லிம் லீக் செயலாளர்—பெரியகுளம் இஸ்லாமிய நற்பணிச் சங்க நிறுவனத் தலைவர் R.M. முஸ்தபா அவர்களுக்கும்.

★ 'நெஞ்சில் நிறைந்த நபிமணி' எனும் காவியம் பாடிய ஆலிம் கவிஞர் மாதிஹுர் ரசூல் காயிதே மில்லத் மாவட்டம் கீரனூர் ஸதக்கத்துல்லாஹ் என்ற மௌலானா அல்ஹாஜ் சிராஜ் பாஜில் பாக்கவி ஹஜ்ரத் அவர்களுக்கும்;

★ 'நல்லூர் செல்வன்' என்று அறிமுகமாகி 'சிராஜ்' எனும் அருமையான மாத இதழை விளைவித்து எழுத்துலகிலும் பேச்சுலகிலும் சாதனை படைத்த எனது அன்பு நண்பர் S.U அப்துல்ஹை அவர்களுக்கும்;

★ எனது ஆசிரியப் பெருந்தகை கம்பம் மௌலானா அல்ஹாஜ் P-A. பீர் முஹம்மது ஹஜ்ரத் கிப்லா அவர்களின் அன்புத் துணை நல்லார் ரஹீமா உம்மா அவர்களுக்கும்;

சமீபகாலத்தில் பாபரி மஸ்ஜிது பிரச்சனையில் பீகார் பகல்பூரிலும் மற்றும் நாட்டின் பல பகுதிகளிலும் மனிதாபிமானமற்ற வகுப்பு வெறியர்களால் படுகொலை செய்யப்பட்டு வீரமரணமடைந்த முஸ்லிம்களுக்கும்;

பலஸ்தீனத்தில் நியாயத்திற்காகப் போராடி வீரமரணமடைந்த தியாகச் சீலர்களுக்கும்;

மற்றும் உலகின் பல பாகங்களிலும் சமுதாயமான மரியாதைகளைக் காப்பாற்றுவதற்காக உயிர் பொருள் ஆவியனைத்தையும் அர்ப்பணித்து வீரமரணமடைந்துள்ள நல்லடியார்கள் அனைவருக்கும்

மற்றும் எனது தம்பி மௌலவி ***N.S.N.*** அப்துஸ் ஸலாம் அவர்களின் அன்பு மகன்—எனது கண்மணி-நதியுஸ் ஸலாமிற்கும்

எனது அருமைத் தந்தை மௌலவி *N.S.* நைனார் முஹம்மது ஆலிம்; எனது அருமைத் தாயார் முஹம்மது ஃபாத்திமா உம்மா எனது பெரிய அம்மா ஊர்குருவியம்மா என்ற உஸ்ஸியம்மா ஆகியோர்களுக்கும் குறிப்பாகவும் சமர்ப்பணம் செய்கின்றோம்.

யா அல்லாஹ்! இந்தப் பேரிலக்கியத்தை எழுதியதால்-வெளியிட்டதால்-படித்துப் பயன் பெறுவதால் ஏற்படும் சகல நன்மைகளையும் அவர்கள் அனைவருக்கும் ஈந்து - அவர்களது சகல பாவங்களையும் பொறுத்து அவர்களது மண்ணறைகளை சுவர்க்கத்துப் பூங்காவாக ஒளிரச் செய்தருள்வாயாக.

ஆமீன்... ஆமீன்... யா ரப்பல் ஆலமீன்



# பதிப்புரை

அன்பு உடன் பிறப்புக்களே!

அஸ்ஸலாமு அலைக்கும் வரஹ்...

உலக மொழிகளில் நம் தாய்த் தமிழ், மூத்த மொழி சுத்த சத்திய தீனுல் இஸ்லாத்திற்கும் தமிழுக்கும் பூர்வீகம் தொட்டே இரத்த பந்தம் இருந்து வந்துள்ளது.

ஈருலகப் பெருந்தலைவர் முஹம்மது நபி (ஸல்-அம்) அவர்கள் மூலம் சம்பூரணமாக்கப்பட்ட இஸ்லாமிய சன் மார்க்கம் நபிகளார் அவர்களை அடுத்த கால கட்டங் களிலேயே நம் தமிழகத்திலும் நறுமணம் பரப்பத் தொடங்கி விட்டது. என்பதற்கு சரித்திரச் சான்றுகளுண்டு.

இருப்பினும்:

மிக இளைய மொழியான உர்துவில் இன்றைக்கு இஸ் லாமிய கலாஞானங்களில் தொண்ணூறு சதமான ஞானங் கள் வெளிவந்து விட்டன தமிழின் கிளை மொழியான மலையாளத்தில் ஏறக்குறைய நாற்பது சதமான இஸ்லாமிய ஞானம் வெளி வந்து விட்டது

ஆனால்

மூத்த மொழியான நம் தாய்த் திரு மொழியில் எந்த அளவு இஸ்லாமிய ஞானம் வெளிவந்துள்ளது என்பதைச்

சிந்தித்தால் உள்ளம் வேதனையால் வெம்பும் அளவகாத் தான் இருக்கின்றது.

இதனால் நம் தமிழ் முஸ்லிம்களிடையே மார்க்க ஞானம் தானும் மங்கிக் கொண்டே வருகின்றது.

இது மிகப்பெரிய நஷ்டமன்றோ!
இத்தகு சிந்தனையால் உள்ளம் நொந்து கொண்டிருந்த எமக்கு 'நம்மால் ஆனதை ஏதாகிலும் செய்தாக வேண்டுமே' என்ற உறுத்தல் பெருத்துக் கொண்டே வந்தது.

அதன் விளைவால்தான் சமுதாயக் கொள்கையின் 'போர்வாள்' என அன்பர்களால் ஒப்புக் கொள்ளப்பட்டுள்ள 'மக்காச்சுடர்' மாதந்தோறும் சுடர் பரப்பத் தொடங்கியது.

அல்ஹம்து லில்லாஹ்! இன்று தமிழ் இஸ்லாமிய உலகில் மக்காச்சுடர் தனக்கென புதுப்பாணியை வகுத்துக் கொண்டு பயன்தரும் பட்டொளியாக பவனி வந்து கொண்டிருக்கின்றது.

ஆனாலும் இத்துடன் எம்மின் உள்ளத்து உறுத்தல் அடங்கிய பாடில்லை.

ஆகவே, புத்தக வடிவில் இஸ்லாமிய ஞானக் கடலில் புதிய புதிய துறைகளை அறிமுகப்படுத்த வேண்டுமென்ற உந்துதல் ஏற்பட்டமையால் 'மக்கா நூலகம்' என்ற புத்தக வெளியீட்டு அமைப்பு உருவாயிற்று.

அது போது 'மக்கா நூலகம்' என்ற நூலகத்தின் முதல் மலராக எதை வெளியிடுவது? என்ற சிந்தனையில் ஆழ்ந்திருக்கும் போது இதோ இப்போது உங்களது பொற்கரங்களில் தவழ்ந்து கொண்டிருக்கும் 'புரவலர் போர்த்திய பொன்னாடை' எனது பார்வையில் பட்டது.

அந்நூல் இதற்கு முன்னர் மூன்று பதிப்புகள் வெளிவந்த நூல்தான்.

இருப்பினும் ஹழ்ரத் நபிகளார் அவர்களது பெரும் புகழ் பாடும் பல்லாயிரம் காவியங்களில் இன்றும் முன் வரிசையில் இருந்து வரும் கஸீதத்துல் புர்தா ஷரீபின் தமிழ் விரிவுரைப் பேரிலக்கியம் அது.

படித்த பட்டதாரிகள் முதற்கொண்டு ஆலிம் பெருந்தகைகள் வரையுள்ள சமுதாய மக்கள் அனைவராலும் பெரிதும் விரும்பி திரும்பத் திரும்ப படிக்கப்பட்டு வரும் பல்சுவை அகவல். அது.

மார்க்கத்தின் சகல ஞானங்களும் கலந்து போயுள்ள ஒரு நூறு புத்தகங்களைப் படித்தாலும் பெற்றுக்கொள்ள முடியாத கலா ஞானத் திரட்டு அது.

எல்லாவற்றிற்கும் மேலாக படிப்பதால் பதிப்பதால் எல்லாம் நபிகள் நாயகப் பிரியம் பீறீட்டெழச் செய்யும் ஒரு வகை சக்தி அதில் ஒளிந்து கொண்டிருக்கின்றது.

ஆகவே முதல் வெளியீடாக இதனையே ஆக்குவதால் மக்கா நூலகம் மக்கள் நூலகமாக பரிணாமம் பெற்றிட முடியும் என்ற எண்ணம் எமக்கு ஏற்பட்டதால் இதனை எமது முதல் வெளியீடாக வெளியிட முன்வந்து பல மாதங்கள் முயன்று—இன்று எல்லா அழகும் ஒருங்கே அமையப் பெற்ற அருள் ஞானக் கருவூலமாக ஆக்கி - சமுதாயத்தின் முன் வைத்துளளேன்.

அல்ஹம்து லில்லாஹ்

புர்தா பனுவலின் தமிழ் அகவலான இந்தப் பேரிலக்கியத்தின் பொருட்டால் வல்ல அல்லாஹ் எமது மார்க்கச் சேவையை வளர்ந்தோங்கச் செய்தருள்வானாக.

வ ஆகிறு தஃவானா அனில் ஹம்துலில்லாஹி ரப்பில் ஆல்மீன்

வஸ்ஸலாம்

**M. K. முஹம்மது சுலைமான் பாக்கவி**

13-3-1990

## தமிழக முதல்வர்

## மாண்புமிகு டாக்டர் கலைஞர்

# மு. கருணாநிதி அவர்கள்



மனமுவந்தளித்த

# கணிப்புரை

'இஸ்லாம் எங்கள்வழி இன்பத் தமிழ் எங்கள் மொழி, என்று முழக்கித் தாய் தமிழுக்கு இலக்கிய அணிகள் சூட்டி அழகுபடுத்தியுள்ள இஸ்லாமியப் பெருமக்கள் அநேகர்-உமறுப் புலவர், கவியரசு காசீம், கவிமணி சிராஜ் பாக்கவி, பாவலர் செய்குத் தம்பி, கவி, கா. மு. ஷெரிப், அப்துல் சாதிக் ஆலிம் போறன்வர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி மௌலவி அன்பர் முகமது அப்துல் காதிர் அவர்கள் இஸ்லாத்தின் புகழ்கூறும் இனிய இலக்கியம் ஒன்றைத் தமிழில் தருவதற்குப் பெரும்முயற்சி எடுத்துள்ளதின் விளைவுதான் இந்நூல்.

சுமார் 700 ஆண்டுகளுக்கு முன்பு, இஸ்லாத்தின் பெருங்கவிஞராக விளங்கிய இமாம் சர்புதீன் முஹம்மது பூசிரி அவர்கள் அரபு மொழியில் முஹம்மது நபி (ஸல்) அவர்களின் புகழ்பாடி இயற்றிய புர்தாவின் முழுப் பொருளையும் தமிழில் வடித்துக் கொடுக்க இந்நூல் ஆசிரியர் எடுத்துக் கொண்டுள்ள முயற்சி தெளிவாகத் தெரிகிறது.

அரபு மொழி வார்த்தைகளின் பொருட்களை அப்படியே தமிழில் தருவது அவ்வளவு சுலபமல்ல. ஆனாலும் ஆசிரியரின் தமிழறிவும், தமிழறிந்த இஸ்லாமியப் பெருமக்களுடன் அவருக்குள்ள தொடர்பும் தனது அரிய முயற்சியை எளிதாக்கியி ருப்பதாக நூலாசிரியர் குறிப்பிடுகிறார்.

இந்நூல் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களின் மாப்புகழைக் கூறும் போற்றத்தகு அகவல் மட்டுமல்ல, நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தமது வாழ்நாளில் சந்தித்த வஞ்சகங்கள்-சந்தித்த துரோகிகள் கூட்டம் -ஏற்ற இன்னல்கள்-அத்தனையும் மிகத்தெளிவாக இந்நூலில் அழகுத் தமிழில் சொல்லப்படுகிறது.

கல்லையும் மண்ணையும், பொன்முலாம் பூசிய தகடுகளையும், கடவுளர்களாகக் கொண்டாடிக் கருத்தழிந்து கிடந்த அரபு மக்களிடம் ''ஒன்றே குலம்; ஒருவனே தேவன்'' என்ற கொள்கையைப் பரப்பி மாபெரும் வெற்றிகண்ட புனிதர் முகம்மது நபி (ஸல்-அம்) அவர்களின் வாழ்க்கையில் நேர்ந்த சம்பவங்கள் அனைத்தையும் வரிசையாகத் தெரிந்து கொள்ள விரும்புவோர் அனைவர்க்கும் விருந்தாக அமையக் கூடியது இந்நூல்.

நபிகள் நாயகத்தின் புகழ் மட்டுமல்ல, அவருடைய புகழை-உழைப்பின் பயனை - நேர்மையை-மக்கள் சமூகம் முழுமைக்குமாக அவர் அருட்திறத்தால் காண்பித்த வழியை-மறைப்பதற்கு முயன்ற மனிதர் களின் பெயர் வரிசை கூட இந்நூலில் விரவிக் கிடக்கிறது.

நம்மாது மார்க்க முதல்வர் நபிகள் நாயகத்தின் பேரில் அவருடைய தோழர்கள் கொண்டிருந்த பற்று-பாசம்-அன்பு ஆகியவைகளை விட, அவர்கள் தமது தலைவர்பால் வைத்திருந்த உறுதி-நம்பிக்கை ஆகியவைகளைப் பற்றி இந்நூலில் படிக்கும்போது மெய்சிலிர்க்கிறது. இஸ்லாத்துக்கு உயிர்ச்சத்து எது வென்றால், இஸ்லாத்தைப் பரப்புவதற்கு முன் வந்த பெருமக்களுக்கு தங்கள் வழிகாட்டி நபிகள் நாயகம் (ஸல்-அம்) அவர்கள் பேரில் இருந்த உறுதியான நம்பிக்கைதான் என்பது இந்நூலைப் படிப்போர்க்குத் தெளிவாக விளங்கும்.

பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற தமிழ் இலக்கியங்களின் மூலம் தமிழர்களின் அரசியல்-பண்பாடு-வளமை-வீரம் ஆகியவைகளைத் தெரிந்து கொள்வதைப்போல, முகம்மது பூசிரி அவர்கள் அரபு மொழியில் யாத்த புர்தாவின் மூலம், நபிகள் நாயகத்தின் வரலாற்றை அறிய முடிகிறது.

இந்த அரிய சேவையை அழகு தமிழில் பொருள் சொல்லி, நம் மொழிக்கு மேலும் ஒரு அணி சேர்த்துள்ள மௌலவி, அன்பர் முகம்மது அப்துல் காதிர் அவர்களுக்கு தமிழ் இலக்கிய உலகம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறது.

(ஒப்பம்) மு. கருணாநிதி



'சிராஜுல் மில்லத்'

அல்ஹாஜ் A.K.A. அப்துஸ்ஸமது M.A., M.P. அவர்கள்

## மனமுவந்தளித்த மதிப்புரை

புகழ் என்ற சொல்லுக்கே உரித்தானவர்களாய்ப் பிறந்து வாழ்ந்து சிறந்தவர்கள் பூமான் நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்கள்.

அந்தப் புகழுக்குரிய திரு நாமத்தைப் பொறித்தவர்கள்-அதைப் புகழ்ந்தவர்கள் - அனைவருமே புகழுக்குரியவர்களாக வரலாற்றில் பதியப்பட்டுள்ள சிறப்பினையும் பார்க்கிறோம்.

நாயகத் திருமேனியின் நட்பினைப் பெற்றவர்கள், நடமாட்டத்தைக் கண்டவர்கள், வாய் உரை கேட்டவர்கள், வாழ்க்கை முறை கொண்டவர்கள், அவர்களோடு உரையாடியவர்கள், அவர்களைப் பற்றி உரைக்க கேட்டவர்கள் ஆகியோரின் ஏறத்தாழ ஆறு லட்சம் பேருடைய பெயர்கள் வரலாற்றில் பதியப் பட்டிருக்கின்றன.

அண்ணலாரைக் கண்ணால் காணவிடினும் அவர்களுடைய கன்னல்மொழிக் கருத்துக்களை இன்னல் பலவற்றிற்கிடையேயும்-இதயத்தே ஏற்றிச் சிறந்தவர்களும் வரலாற்றில் இடம்பெற்றிருக்கிறார்கள்.

பெருமானாரின் வழிமுறைகளைப் பின்பற்றி நாமும் பெருமை பெற்று, பெருமானாருக்கும் புகழ் சேர்த்தவர்கள் உண்டு. பெருமானாரைப் பற்றிப் பேசி

அவர்களின் புகழ் பரப்பியவர்கல் உண்டு. பெருமானா ரைப் பற்றிப் பாடிப் புகழ் சேர்த்துக் கொண்டவர்கள் எண்ணற்றோராவர்.

பேசும் மொழிகளினெல்லாம் அவர்கள் புகழ் பாடப் பற்டிருக்கிறது. எழுதும் மொழிகளிலெல்லாம் அவர்கள் வாழ்க்கை வரையப்பட்டிருக்கிறது.
எழுத்தே இல்லாத மொழிகளில் கூட அவர்களு டைய ஏற்றம் போற்றப்பட்டிருக்கிறது.

அண்ணலவர்கள் நாவசைத்துப் பேசிய அரபு மொழியில் ஆயிரமாயிரம் கவிஞர்கள் புகழுக்குரிய பெரு மானாரின் புகழ் பாடியிருக்கிறார்கள். அவற்றில் இலக்கண அமைதியும் இலக்கியச் சிறப்பும் இதயத் தைக் கவரும் கருத்துக்களும் பொதிந்த கவிதை களின் தொகுப்பாக ''கஸீதத்துல் புர்தா'' என்ற காவியம் விளங்கி வருகிறது.

எகிப்து நாட்டைச் சேர்ந்த இமாம் ஷர்புத் முஹம்மது அல்பூசிரி என்ற மாமேதையால் ஆக்கப் பட்டது புர்தா. மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்த சந்தர்ப் பத்கில் பெருமானார் மீது மனமுருகிப் பாடிய இந்தப் பாடல்களை பெருமானார் அவர்களே பாராட்டி அல்பூசிரி அவர்களுக்குப் பரிவட்டம் சூட்டி கவுர வித்ததாகச் சொல்லப்படுவதுண்டு. பெருமானாரின் ஆத்மீக தரிசனத்திற்குப் பிறகு அல்பூசிரியின் நோய் நீங்கி நலம் பெற்றதாக வரலாறு உண்டு.

புர்தா என்றால் சீராடை என்றொரு பொருளுண்டு. அதேபோல் புர்உத்தா என்றால் பிணி நீங்கல் எனப்

பொருளும் கொள்ளலாம். இவ்வாறு இப் பாமலையின் பெயர், வரலாற்று நிகழ்ச்சியின் வெளியீடாகவும் அமைந்திருக்கிறது எனலாம்.

ஏறத்தாழ 700 ஆண்டுகளுககு முன் அமைக்கப் பட்ட இக்கவிதை நூலுக்கு முன்னரும் பின்னரும் அரபி மொழியில் பல காவியங்கள் படைக்கப்பட்டிருந் தாலும் புர்தாவைப் போல் உலகெங்கும் உள்ள முஸ்லிம் சமுதாய மக்களால் பக்திப் பரவசதுடன் அடிக்கடி ஓதப்படும் காவியத்தைக் காண்பதரிது.

உலகின் பல்வேறு மொழிகளிலும் மொழி பெயர்க் கப்பட்டுள்ள இப்பாமாலை நம் தமிழ் மொழியிலும் பல முறை மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது.

மதுரைக் கவிஞரேறு மர்ஹூம் மா. கா. மு. காதர் முஹ்யித்தின் மரைக்காயர் அவர்கள் புர்தாவைத் தமிழ்க் கவிதைகளாகவே வடித்து இருக்கிறார்கள். அதன் பின்னர் பேராசிரியர் பசுலு முஹ்யித்தீன் அவர்களும் கவிதையிலேயே மொழி பெயர்ப்பும் தந்து சிறிய விளக்கவுரையும் எழுதி இருக்கிறார்கள்.

ஏற்கனவே, புர்தாவுக்கு மொழி பெயர்ப்பு, கருத் துரை, கவிதை உரை என பல வெளி வந்திருப்பினும் விளக்கமான விரிவுரையுடனும், அதன்மொழி பெயர்ப்பை மூலத்துடன் வெளியிடும் பெருமையை உத்தமபாளையத்தைச் சேர்ந்த கூடலூர் மௌலவி என். எஸ். என். முஹம்மது அப்துல் காதர் பாகவி பெற்றிருக்கிறார்.

புர்தாவுக்கு ஒப்புக் கொள்ளப்பட்ட விரிவுரைகளாக இருக்கும் அரபி, பார்சி, உர்து ஆங்கிலம் ஆகியவற்றிலுள்ள நூற்களை ஆதாரமாகக் கொண்டு மிகச் சிறப்பான முறையில் ''புரவலர் போர்த்திய பொன்னாடை'' என்ற அழகிய தலைப்புத் தந்து வெளியீட்டிருக்கிறார்' முன்னுரையிலும் விளக்கவுரையிலும் அவர் எடுத்தாண்டிருக்கும் உதாரணங்கள் சுவையானவையாக இருக்கின்றன.

மௌலவி அப்துல் காதிர் சாஹிப் அவர்களின் தமிழ்நடை இனிமையாகவும் சரளமாகவும் இருக்கின்றது. ஆழிய தத்துவங்களை உள்ளடக்கிய அரபு மொழியிலுள்ள அமர காவியமாக புர்தா இருந்தாலும் மௌலவி சாஹிப் தந்துள்ள விரிவான விளக்கவுரை தடையின்றி படித்துச் சுவைத்து மகிழ்த்தக்க முறையில் அமைந்து இருக்கிறது.

இன்பத் தமிழை இஸ்லாமிய மொழிகளில் ஒன்றாக ஆக்க வேண்டும் என்று பாடுபடும் பேரியக்கத்திற்கு ''புரவலர் போர்த்திய பொன்னாடை'' என்ற இந் நூலை ஒரு நல்லவரவாகக் கருதுகிறேன்.

மௌலவி சாஹிப் அவர்களின் அரிய முயற்சிக்கு சமுதாயத்தின் சார்பாகப் பாராட்டைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பெரும் பொருள் செலவில் மெத்தச் சிரமத்துடன் அழகான முறையில் வெளியிடப்பட்டுள்ள இந்நன் நூலை சமுதாயப் பெருமக்கள் அதிக அளவில் வாங்கி ஆதரிப்பதன் மூலம் இத்தகு நூற்கள் மேலும் எழுதி வெளியிடுவதற்குரிய ஊக்கத்தை மௌலவி அப்துல் காதிர் சாஹிப் அவர்களுக்குத் தரவேண்டுமென விரும்புகிறேன்.

எல்லா நல்ல காரியங்களுக்கும் அல்லாஹ் அருள்வானாக, வஸ்ஸலாம்.

அன்பன்

(ஒப்பம்) ஆ. க. அ. அப்துல்ஸமது

## எஸ். அப்துல் வஹ்ஹாப் பாகவி ஆசியுரை

இமாம் ஷர்ஃபுத்தீன் பூசிரி (ரஹ்) அவர்கள் இயற்றிய களீதத்துல் புர்தா' எனப்படும் காவியம் பக்தி மார்க்கத்தில் ஈடுபாடு கொண்ட எல்லோருக்கும் மிகப் பரிச்சயமான ஒன்றும் உலகத்தின் எல்லாப் பகுதிகளிலும் மிகுந்த மரியாதையுடனும் கண்ணியத்துடனும் ஓதப்பட்டு வருகிற இந்நூல் பெருமானாரின் சிறப்புக்கு மட்டுமன்றி, மிக நுட்பமான வாழ்க்கைத் தத்துவங்களுக்கும் விளக்கம் கொடுக்கிறது.

'புரவலர் போர்த்திய பொன்னாடை' என்ற இந்த நூலில் மௌலவீ N. S. N. முஹம்மது அப்துல் காதிர் பாகவி அவர்கள் புர்தா ஷரீபின் கவிதைகளுக்குத் தெளிவாக மொழிபெயர்ப்பும் விரிவுரையும் கொடுத்திருக்கின்றார்கள். மௌலவீ சாஹிப் அவர்கள் இந்த நூலைத் தயாரிக்கும் வழியில் பெரிதும் சிரமம் எடுத்திருக்கின்றார்கள் என்பது நூலைப் புரட்டிப் பார்க்கும்போது தெளிவாகிறது

இமாம் பூஸரி அவர்கள் பெருமானார் பற்றி எழுதிய களீதாக்கள் அனைத்திலும் புர்தா ஷரீப் தனிச் சிறப்புடையது. அதனைத் தமிழறிந்த அனைவரும் படித்துப் பயனடைய வேண்டும் என்ற நோக்கத்தை மனத்தில் கொண்ட மௌலவி சாஹிப் அவர்கள் தாம் மேற்கொண்ட பணியில் தனிவெற்றி அடைந்து விட்டார்கள் என்பது என் கருத்து

அவர்களின் முயற்சியைப் பெரும் பயனுள்ளதாக ஆக்க வேண்டும் என்று எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்

நாகூர்
15-5-84

(ஒப்பம்)
எஸ். அப்துல் வஹ்ஹாப்

# மின்னிடும்




## ஆசிரியர் உரை

அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய வல்ல அல்லாஹ்வின் அருள் திருநாமத்தால்...

அகிலத்திற்கோர் அருட்பிழம்பாய் அவனியின் கண் பிறந்து சிறந்த அண்ணலெங்கள் கோமான் அஹ்மது முஜ்தபா முஹம்மது முஸ்தபா நபி (ஸல் - அம்) அவர்களுக்கும் - நபிகளாரின் நற்றவக் கிளைஞர்கள் - நபிகளாருடன் உரையாடி, உறவாடி, உடல் பொருள் ஆவியனைத்தையும் அர்ப்பணித்து மார்க்கத்தின் கலை கலாட்சார உயர்விற்காக தங்களது செங்குருதிகளை உரமாக வழங்கிய உத்தம சஹாபாக்கள் - தாபிஈன்கள் - தபஅத்தாபிஈன்கள் தஃப்ஸீர் கலை வல்லுனர்கள் - ஹதீதுக்கலை வல்லுனர்கள் - நான்கு மத்ஹபுகளின் இமாம்கள் - இறைநேசர்களான அவ்லியாக்கள் - உலமாக்கள் - உஸ்தாதுமார்கள் குறிப்பாகவும் சிறப்பாகவும் புர்தாஷரீப் புனைந்த ஆஷிகே ரசூல் ஷர்ஃபுத் தீன் முஹம்மதுல் பூஸிரி, வித்ரிய்யா யாத்தளித்த மாதிஹுர் ரசூல் அஷ் ஷைகு ஸதக்கத்துல்லா அப்பா (ரஹ் - அன்ஹுமா) உள்ளிட்ட அனைத்து

மூமீன் முஸ்லிம்களுக்கும் வல்ல அல்லாஹ்வின் ஸலவாத் என்ற சாந்திவும் சலாம் என்ற ஈடேற்றமும் என்றென்றும் குன்றாமல் குறையாமல் நின்று நிலவட்டுமாக என மன மொழி மெய்யன்புடன் இறைஞ்சுகின்றேன்.

அரைக்க அரைக்க மணம் கமழும் சந்தனத்தைப் போல்- செதுக்கச் செதுக்க பளபளக்கும் வைரத்தைப் போல_ ருசிக்க ருசிக்க சுவை கூடிக் கூடி வரும் தெளி தேனைப் போல பதிப்புக்குப் பதிப்பு சுவையும் - சொக்க வைக்கும் சுகந்தமும் - சிந்தைக்கு விருந்தாக புதுப் புதுப் பொருள் வளமும்கூடிக் கொண்டே வரும் இந்த புரவலர் போர்த்திய பொன்னாடையை' நெய்த அடியேனுக்கும் வெளியிடும் மக்கா நூலக நிறுவனர் மௌலானா அல்ஹாஜ் **M. K. முஹம்மது சுலைமான் பாக்கவி** ஹஜ்ரத் கிப்லா அவர்களுக்கும் - அவர்களது குடும்பத்தா ருக்கும் - ரசித்து ரசித்துப் படிக்கும் வாசக அன்பர்களான உங்கள் அனைவருக்கும் வல்ல அல்லாஹ் ஹிதாயத் எனும் தேர்வழியின் தலைவாசலை முழுசாகத் திறந்து விட்டு - வாழ் நாளெல்லாம் உண்மையான மூமீன்களாக - முஸ்லிம் களாக வாழவும், உண்மை மூமீன்களாக மரணிக்கவும் நல்லருளை பாலிப்பானாக.

அன்பு வாசகப் பெருமக்களே!

அடியேன் அனைத்திலும் அடிமட்டத்திலிருப்பவன்.

இப்படிப்பட்ட இந்த எளியோனால் தமிழுலகம் அனைத்துமே 'அற்புதம்...... அற்புதம்' என ஏகமனதுடன் போற்றிடும் படியான இந்த பாரகாவியத்தை எழுதிட

முடித்திருக்கின்றதென்றால் அது எதனால் என்று ஆய்ந்து ஆய்ந்து பார்க்கின்றேன். இந்த நொடிவரை அதற்கு பதிலேதும் கிடைக்கவே இல்லை.

அசிங்கமான துளி நீரினால் மனிதனைப் படைக்கும் பேராற்றல் பெற்ற வல்ல அல்லாஹ் எதுவும் தெரியாத என்மூலம் இந்த பாரகாவியத்தை உருப் பெறச் செய்தது ஆச்சர்யமில்லைதான்

அத்தகு வித்தகனை வாயார மனமார புகழ்ந்தேற்று கின்றேன். அல்ஹம்துலில்லாஹ்!

தனது ஹபீபுக்குச் சவாரியாகப் பயன் பட்டதால் புராக் வாகனத்திற்கும், நீள் நதியைப் பிளக்கப் பயன் பட்டதால் அஸா கோலுக்கும், குகைவாசிகளுக்குக் காவல் காத்ததால் அந்த நாய்க்கும் சிறப்புத் தந்த வல்ல அல்லாஹ் இந்தப் பாரகாவியத்தை புனைந்ததால் பாவி களில் பெரும் பாவியாகிய எனக்கு ஈருலக நற்பேறுகளை வழங்கி அருள் பாலிப்பானாக

விலை மலிவான சின்னச் சின்னப் புத்தகங்களை சமுதாயச் சந்தையில் விற்பதே கசப்பான முயற்சியாக இருக்கும் இக்காலை அளவிலும் விலையிலும் கூடிய பொன்னாடை நூல் நான்காவது பதிப்பாக வெளிவருகின்ற தென்றால் இதுவும் வல்ல அல்லாஹ்வின் தனிப் பெருங் கிருபைதான்.

அதிலும் குறிப்பாக

இன்றைய தமிழகத்தில் தலைசிறந்த ஆலிம் பெருந் தகைகளில் குறிப்பிடத் தகுந்தவராகவும், அரபி, உர்து,

பார்சி, ஆங்கிலம், மலேசியன், தமிழ் போன்ற பன்மொழிகளில் புலமை மிகுந்த பேரறிஞராகவும், தஃஸீர் பயானாற்றுவதிலும், மேடைச் சொற்பொழிவிலும் தன்னிகரற்றுத் திகழ்பவரும், மார்க்க கலாஞான வல்லுனரும் சொன்னபடி வாழ்ந்து வாழ்ந்தபடி சொல்லும் நற்செயற்கையாளருமான மக்காப் பள்ளிவாசல் இமாம் - மக்காச் சுடர் ஆசிரியர் மௌலானா அல்ஹாஜ் M.K. முஹம்மது சுலைமான் பாக்கவி ஹஜ்ரத் கிப்லா அவர்கள் தமது சொந்த வெளியீட்டகமான மக்கா நூலகத்தின் மூலம் இந்த நான்காவது பதிப்பை வெளியிடுகின்றார்களென்றால் அதுவே அடியேனுக்கு வழங்கப்படும் நற்சான்றாக நான் கருதுகின்றேன். அல்ஹம்து லில்லாஹ்.

பொன்னாடையின் சுவைபற்றி நானே கூறுவது அவ்வளவு நல்ல மரபல்ல. ஆகவே பொன்னாடையை வாங்கி போர்த்திப் பாருங்கள் அதுபோது அதனால் உங்களுக்கு ஏற்படும் கம்பீரம் - கவர்ச்சி - இறைக்கருணை - இறைத்தூதர் அவர்களின் பென்னம் பெரிய பெருமை ஆகியவற்றை நீங்களே அனுபவிக்கும்போது அகமும் முகமும் மலர்ந்து பேரானந்தத்தின் உச்சாணிக்கே இன்ஷா அல்லாஹ் நீங்கள் நிச்சயம் சென்று விடுவீர்கள்.

அதுபோது அடியேனின் ஈருலக் நற்பேறுகளுக்காகவும் அடியேனது குடும்பத்தார் அனைவரது ஈருலக நற்பேறுகளுக்காகவும், மக்கா நூலக நிறுவனர் -அவரது குடும்பத்தாரின் ஈருலக நற்பேறுகளுக்காகவும் துஆ செய்ய மறந்து விடாதீர்கள்.

மற்றபடி;

இதனை எழுத தூண்டுகோளாக இருந்த மதுரை குர்ஆனின் குரல் ஸ்தாபனத்தார்களுக்கும், இரண்டாவது பதிபாக இதை வெளியிட்ட புர்தா பப்ளிக்கேஷன் நிறுவனத் தாருக்கும், மூன்றாவது பதிப்பாக பதிப்பித்து வெளியிட்ட பெரியகுளம் தண்டுபாளையத்தில் இயங்கும் இஸ்லாமிய நற்பணி மன்றத்தினருக்கும் இந்த நான்காவது பதிப்பை வெளியிடும் சென்னை மக்கா நூலகத்தாருக்கும் எனது மனமார்ந்த நன்றியை காணிக்கையாக்குகின்றேன்.

அதுவன்றி;

பொன்னாடையின் இரண்டாவது பதிப்பிற்கு கவின்மிகு கனிப்புரை வழங்கிய தமிழகத்தின் இன்றைய முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களுக்கும்;

மதிப்புரை வழங்கி என்னை மகிழ்வித்த சமுதாயத்தின் தானைத் தலைவர் சிராஜுல் மில்லத் அல்ஹாஜ் A. K. A. அப்துஸ் ஸமது M.A; M.P. அவர்களுக்கும்;

ஆசியுரை வழங்கி என்னை அகமகிழ்வித்த பன்னூலாசிரியர் நாகூர் மௌலானா S. அப்துல் வஹ்ஹாப் ஹஜ்ரத் கிப்லா அவர்களுக்கும்,

பெரும் பொருட் செலவைப் பொருட்படுத்தாமல் - நாயக இஷ்க்குப் பெருக்குடன் - இந்த நான்காவது பதிப்பை - கலையழகு வேலைப்பாடுகளுடன் - மிகச் சிறப்பாக அச்சிட்டு வெளியிடும் சென்னை மக்கா நூலகத்தாருக்கும்

ஒரு இலக்கியம் வெளிவருவதற்கு உதவுகின்றோம், என்ற உள்ளுணர்வுடன் இதை அச்சிட்டுத் தந்த மக்காச் சுடர் பிரிண்டிங் பிரஸ் **மானேஜர் C. R. ரஹ்மான் பாஷா** மற்றும் கம்பாஸிட்டர்கள், உள்ளிட்ட ஊழியர்கள் அனைவருக்கும்;

சென்னையின் இதயமான அண்ணாச் சாலைக்கு மணிமகுடமாகத் திகழ்ந்து வரும் மக்காப்பள்ளிவாசலில் இந்த நான்காவது பதிப்பை வெளியிட அன்புடனும் ஆர்வப் பெருக்குடனும் அனுமதி வழங்கிய மக்காப்பள்ளி வாசல் நிர்வாகத்திற்கும்

முன்பதிவு செய்து ஊக்குவித்த வாசகப் பெருமக்களுக்கும்

இன்னம் சொல்லால், செயலாலெல்லாம் ஒத்துழைப்பு வழங்கி ஊக்குவித்த நண்பர்களுக்கும் மன மொழி மெய்யன்புடன் நன்றி கூறி அவர்கள் அனைவருக்காகவும் வல்ல அல்லாஹ்விடன் இரு கரமேந்தி இறைஞ்சுகின்றேன்.

**வஸ்ஸலாம்**

(ஒப்பம்) N. S. N. முஹம்மது அப்துல் காதிர் பாக்கவி
13-3-1990

குறை நிறைக்கு தொடர்பு கொள்ளுங்கள் :-
14 / 2 குருசாமி தெரு எல்லீஸ்ரோடு சென்னை - 2




வள்ளல் திருநபியின் வாழ்வதனைக் கற்போரின்
உள்ளம் இனிக்கும். உயிரினிக்கும். விள்ளும் நூல்
பாவினிக்கும். ஆய்வோர்தம் அறிவினிக்கும்
பாடிடுவோர் நாவினிக்கும் என்றிடுவேன் நான்.

எனச் சாற்றுகின்றார்; ஆலிம் கவிஞர் 'ஸிராஜ் பாகவி.
(ரஹ்-அலைஹி) அவர்கள்

இந்தப் பேருண்மையினை முன்பே புரிந்து வைத்திருந்த புலவர் பெருமக்கள், ஒருவரையொருவர் போட்டிபோட்டுக் கொண்டு; புவனம் சிறக்க வந்த புரவலர் பெருமானை-புத்துலகம் சமைத்த பெம்மானை-முஹம்மது நபி (ஸல்) அவர்களைப் பலபடப் புகழ்ந்து-பாக்கள் புனைந்து-பெறற்கரிய பேற்றினைப் பெற்றுப் பேரும் புகழும் படைத்தார்கள்.

மாநபி புகழ்பாடும் அந்தக் காவியங்கள் மாநிலந்தனில் மங்காப்புகழுடன் திகழ்ந்து

இலக்கிய வானின் ஒளிச்சுடர்களாக
பாலும் தெளிதேனும்; பாகும் தோற்றுவிடும்
பா மாலைகளாக
பொன்மாலைகளை மிஞ்சிடும் சொன்மாலைச்
சரங்களாக

பளிச்சிட்டு - பளிசு பெற்றுப் - பரிணமித்து வருவதைப் படித்தும், படிக்கக் கேட்டும் பரவசமடைந்து வருகின்றோம் நாம்.

## வசைபாடிய வாய் இசைபாடியது

ஒரு காலத்தில் உத்தமத்திருநபி (ஸல்) அவர்களை வசைமாரி பொழிந்து அதன் மூலம் வாகை சூட்டிக் கொள்ள நினைத்துத் தோற்றுவிட்ட 'கஃபுப்னு ஜுஹைர்' என்னும் பெரும் புலவர்,

காலத்தின் கோலத்தால் திசைமாறி-திரு நபி (ஸல்-அம்) அவர்களின் திருத்தொண்டர்களில் ஒருவராக-சத்திய சஹாபாக்களில் ஒருவராக-தன்னை மாற்றிக் கொண்டபின் வசைபாடிய அதே வாயால் நபிகளாரின் வருசையை இசைபாடி 'பானத் ஸுஆத்' எனும் நறுமணப்பாக்களை யாத்தளித்ததின் மூலம் நந் நபிகளார் (ஸல்-அம்) அவர்களிடமே பரிவட்டப் பரிசு பெற்று வாகை சூடிக் கொண்டார்.

## மாதிஹுர் ரசூல்

இத்தரையில் ஒலிக்கும் காவியங்களுள் பத்தரைமாத்துத் தங்கமென இன்றும் ஒளிர்ந்து கொண்டுள்ள வித்ரிய்யா எனும் ஐவரிப்பாக்களை - வியந்திட வைக்கும் இலக்கியச் சுவையோடு-யாத்தளித்த காரணத்தால் மாதிஹுர் ரசூல் (திருத்தூதர் புகழ்பாடி) எனும் மங்களப் புகழை தனக்கு

மட்டுமே சொந்தமாக்கிக் கொண்டார்; ஷெய்கு ஸதக் கத்துல்லா அப்பா (ரஹ்-அலைஹி) அவர்கள்.

## தமிழ் இலக்கிய தவராஜர்

பாவேந்தர் உமறுப் புலவர் (ரஹ்) அவர்கள் பாவினிற் சிறந்த பைந்தமிழ் மொழியில் முன்னாள் பாடிய 'முதுமொழி மாலை' யையும்' பின்னாள் பாடிய மாறாத மணம் கமழும் சீறாவையும் பாடிக்களித்த காரணத்தால் தமிழ் இலக்கியத்தின் தவ ராஜராக ஏற்றம் பெற்றார்.

## திருப்புகழ் பாடிய கவியரசர்

மண்ணகமும், விண்ணகமும் வியந்துரைக்க வந்துதித்த வள்ளல் நபிகளாரின் விண்ணேற்ற மகிமைகளை அழகு தமிழில் மிஃராஜ் மாலை'யாகக் கோத்தளித்த காரணத்தால் 'ஆலிப்புலவர்' அவர்கள் மதி யரசராகவும்;

பூமான் நபிகளார் புகழ் மாக்கடலில் மூழ்கி முத்தெடுத்து முக்கனியும் சக்கரையும் சேர்ந்த தேன் மதுரப் பாமாலை யாகத் திருப்புகழைப் படைத்த காரணத்தால் காசிம் புலவர் அவர்கள் கவி யரசாகவும்;

அகிலங்கள் அனைத்திற்கும் அருட்கொடையாக அல்லாஹ்வின் மகிமையால் வந்துதித்த வள்ளல் நபிகளார் அவர்களின் வாழ்க்கைப் பாதையை நெஞ்சையள்ளும்

சொற்களால் 'நெஞ்சில் நிறைந்த நபிமணியை, வார்த்து எடுத்த காரணத்தால் ஸிராஜ் பாக்கவி (ரஹ்-அலைஹி) அவர்கள் கவிமணியாகவும் ஏற்றம் பெற்றனர்.

## நாகூர் ஏரும்போற்றும் நபிதாசர்கள்

நீல முற்றக் கடல் முழுதும் மையால்
நேமி-வான்முழுதும் கடுதாசியாய்
தாலமுற்ற மரமுழுதும் 'கலம்'
தானுண்டாக்கி- மலக்கு மனிதரும்
சீலமுற்றிடும் ஜின்முதல் யாவுமே
சேர்ந்தே எழுதினும் அடங்காதோங்கும்
சாலவுற்ற புகழ்மஹ் மூதரே!
சல்லல் லாஹு அலைஹி வ சல்லமே!

என்று 'சலவாத்து சதக்கத்தில்' மீறான் நயினார்ப் புலவர் வியந்து பாடிய காரணத்தாலும்;

அட்டத்திக்கு யானைகளை ஒரு குடத்தில்
அடைத்து வைப்பேன்
அண்டங்கள் ஏழையும் அங்கைக்குள் அகப்படுத்துவேன்
ஆறேழு மலைகளைப் பெயர்தெடுத்து வருவேன்
தண் மதியையும் செங்கதிரையும் தாவிப்பிடிப்பேன்
விண் மீன்களையெடுத்து மாலையாகத் தொடுப்பேன்
இன்னும் பிற சித்திகளையெல்லாம்
இயற்றுவேன். ஆனால்;
மதீனமாநகர் ஞான போதகரின்
பாதப் புகழ் பாடவோ நானறியேன்

-என 'மதீனக் கலம்பகம்' பாடிய ஜீவரத்தினக் கவிராஜர் தவியாய்த் தவித்து ஏக்கப் பெருமூச் செய்திய காரணத்தாலும்

அறிவுக் கடலில் திக்கீர் கடலில்
அடங்கா(த) ஒளியில் பெருங்கடலில்
அழியா கடலில் நிஃமத் (து)
எனுமரிய கடலின் சபுருடைய
பொறுமைக் கடலில் நாணமிகப்
பொழியும் கடலின் இடங்களெல்லாம்
புகுந்து முழுகி உருவாகிப்
புவியினிற் பிறந்த புகழோரே
செறிவை யுடைய செழும்புயலே
சிந்தும் புயலே செகம்புகழும்
செல்வத்துரையே தனித்துரையே
செம்மற் கரசே எமக்கரசே
கவலல் அறுநா மனதுடைய
காசிம் நபியே தாலேலோ
கருணைக் கடலே முஹம்மதுவே
ஹபீபே ஹாஷிம் தாலேலோ!

-என நானிலம் போற்றும் நாயகத் திருமேனி (ஸல்) அவர்களைப் பிள்ளைக் கனியமுதாக ஆக்கித் தெள்ளு தமிழ் பாடல்களால் 'நபி நாயகம் பிள்ளைத் தமிழ்ப்' பனுவல் செய்துள்ள காரணத்தால் சையது அன்பியாப் புலவர் அவர்களும்;

ஒன்று தெய்வம் ஒன்று மதம் ஒன்று மக்கள் சாதியென
நன்றுபெற ஓதியவை நாட்டில்நவில்நன்மறையும்
குன்றுபெற தீபமெனக் கோத்தருளிக் காத்த உங்கள்

துன்றும் உயர் மாபெருமை சொல்லற் (கு) எளிதேயோ
சோதி நபிநாயகமே சொல்லற் (கு) எளிதேயோ!

-என பாமணக்க பயிலுவோர் தம் நாமணக்கப் பாடிய காரணத்தால் ஒருபெரும் அவதானம் ஒரு நூறு செய்து இந்தத் தமிழ் மண்ணில் தனித்தன்மை பெற்ற பண்டிதர் 'சீரிய செந்தமிழ் செல்வர்' ஷெய்குத் தம்பிப் பாவலர் அவர்களும்;

ஆரண விளக்கே! அமரர்கள் பரவும்
பூரண மதியே! பொற்பிணி லடங்கா
உருவே! நற்றவர் உபய
தருவே! ரட்சக! தயாளா! குணாளா!
கருணையங் கடலே கல்புறுங் கனியே!

எனப் புகழ்பாடிய காரணத்தால் சாட்சாத் பாட்சாப் புலவர் அவாகளும்;

தனியோன் தூதே! பெருவாழ்வே!
தரணி காக்கும் அறநிலையே
கனி அமுதே! பேரின்பக்
கருத்தே! செயலே கவலல்எனும்
பிணிகள் போக்கும் அருமருந்தே
தொலையா இன்பத் தொடர்நிலையே!
இணையில் லாதபெரும்பேறே!
எளியேற் கருள வாரீரோ!

எனவெண்பாப் பாடிய காரணத்தால் பனைக்குளம் அப்துல் மஜீது புலவர் அவர்களும்;

கண்ணிற்கருணை கொழித்த நபி
கனியும் அருளை பழுத்தநபி
மண்ணில் பகையை ஒழித்தநபி

மணத்தோ டிரவில் விழித்தநபி

'நாயகமே' -என பாடிய காரணத்தால் இறையருட் கவிமணி பேராசிரியர் கா. அப்துல் கபூர் அவர்களும்;

எல்லையில்லாக் கருணையுள ஆண்டவனின் தூதே
எங்களரும் முஹம்மதரே வாழியரோ வாழி!

-என 'நபி நாயகமே' எனும் கவிதைத் தொகுப்பில் நபிகளாரை நெஞ்சார நாவார வாழ்த்திய காரணத்தால் கலைமாமணி கவி கா. மு. ஷரீப் அவர்களும்;

அருளாக வந்த ஒரு வடிவே! மனுக்குலம்
அருள்பெற நின்ற சுடரே!
ஆனந்த வாரிதியின் முத்தே! இறைதந்த
அழியாத மாணிக்கமே!
இருளஞ்சி விலகிடும் ஜோதியே! ஏழைகள்
இன்புறத் தங்கு நிழலே!
இருமையுங் காத்திட வந்த திருமேனியே!
இறைவனே தந்த ஒளியே
இருளையேபோக்கியெம் நெஞ்சை விளக்கிட
என்றுமே துணை செய்குவீர்
இறையருள் கொண்ட ஒரு மறைதனைக் கண்ட நபி
ஏந்தலே யா ரசூலே!

—என அண்ணல் நபியுல்லாவின் பால் தமக்குள்ள அன்புப் பெருக்கைப் பாடிக்களித்த காரணத்தால் இலங்கை 'யாவன் பரிசு பெற்ற அருங்கவி அப்துல்காதிர் லெப்பை ஆலிம் அவர்களும்;

குறைஷியெனும் குலவிளக்காம்
குன்றுரையும் சுடர் விளக்காம்

அரசியற்றும் அறவிளக்காம்
அறிவூட்டும் அகல்விளக்காம்

—எனப் புகழ்பாடிய காரணத்தால் பேராசிரியர் பஜ்லு முஹ்யித்தீன் அவர்களும்;

வானின் சுடரே வளர்மதியே
வற்றாக் கருணைப் பெருங்கடலே
தேனின் சுவையே தெள்ளமுதே
தெவிட்டாக் கனியே மாநபியே!

என தித்திக்கும் தீந்தமிழில் தீனவர் கோனைப் பாடிய காரணத்தால் திருவைக் கவிஞர் அப்துர் ரஹ்மான் அவர்களும்:

எண்ணிறந்த இன்னபிற இறையருட் கவிஞர் பெருந் தகைகளும் நாயகத் திருமேனி (ஸல்-அம்) அவர்களைப் புறக்கண்களால் கண்டு மகிழ தவியாய் தவித்து-நயனங்கள் துடியாய் துடித்து - ஊனையும், உயிரையும் உருக்கிடும் வண்ணம் தத்தமது நெஞ்சக் குண்டங்களில் மூண்டெழுந்த 'நாயகக்காதலை' நானிலத்திற்கு வாய்மொழியாய் நவின்ற காரணத்தால் நாவலர்களாக - பாவலர்களாக - நாடும் ஏடும் போற்றும் நபிதாசர்களாக - ஏற்றம் பெற்றுக் கொண்டனர்.

---

## மாநபி புகழ் பாடும் காவியங்களின் பட்டியல் பத்துலட்சத்திற்கும் மேலாகும்

---

தத்துவக்கடல் மௌலானரூமி அவர்களும் ஷெய்கு ஸஃதி, அமீர்குஸ்ரு: ஹாலி, அக்பர் இலாஹாபாதி, மகாகவி

இக்பால் போன்ற மாபெரும் கவிஞர் பெருமக்களெல்லாம், பழமை வாய்ந்த மொழியாம் பார்ஸியிலும்-உணர்ச்சிப் பிரவாகமாம் உர்தூ மொழியிலும், உத்தமத் திருநபி (ஸல்-அம்) அவர்களைப் பாடிக் குவித்து நாயகக் காதலில் ஆடிக் களித்தமையால் காருள்ளவரை-இந்தப் பாருள்ள வரை நின்றிலங்கும் சீறுபெற்றனர்.

இப்படி சங்கிலித்தொடராக நீண்டு கொண்டே போகும் மாநபி புகழ்பாடும் காவியங்களின் பட்டியல் இது வரை பத்துலட்சத்திற்கும் மேல் தோன்றியுள்ளன எனும் போது;

இந்தச் சாதனை, நம் நபிகளாருக்குத் தவிர உலகினில் இதுவரை வேறு எவருக்குமே ஏற்பட்டிராத தனிப்பெரும் சாதனையன்றோ சுப்ஹானல்லாஹ்!

என்றாலும் அறிஞர்தம் நெஞ்சங்களில் இன்னமும் நிறைவு ஏற்பட்ட பாடில்லை. இஃது நீருள்ளவரை' நிலமுள்ளவரை தொடர்ந்து கொண்டேதான் இருக்கப் போகின்றது.

## கஸீதத்துல் புர்தா

மீக்கூறிக் காண்பிக்கப்பட்ட வகையிலான பாமாலைப் பட்டியல் வரிசையில் அமைந்தது தான் நமது இந்த புரவலர் போர்த்திய பொன்னாடை, தமிழ் விரிவுரைப் பேரிலக்கியத்தின் மூலக் கருவான 'கஸீதத்துல் புர்தா எனும் கவின்மிகு காவியமும்.

என்றாலும்,

அரசவையை அலங்கரிக்கும் அரியாசனம் போல
அரசனின் அவையை அலங்கரிக்கும் மணிகுடம்
போல
கோபுரத்தை அலங்கரிக்கும் மங்களக் கலசம் போல
மனிதனை அலங்கரிக்கும் ஒழுக்கம் போல
பெண்மையை அலங்கரிக்கும் நாணம் போல
காலையை அலங்கரிக்கும் கதிரவன் போல
மாலையை அலங்கரிக்கும் மாமதி போல
காவிய உலகின் கதிரவனாக
பாமாலை வானின் பரிதியாக
கவிக்குயில்களின் கனவுக் கன்னியாக

ஏற்றம் பெற்று, சென்றடைந்த எழுநூறு ஆண்டு களாக இனிமையூட்டி-எழில் கூட்டி வருவதோடு இன்றும் இளமை குன்றாமல் திகழ்ந்துவரும் ஒரே காவியம்-ஒப்பற்ற காவியம் அழகு மொழியாம் அரபுமொழியில் பாடப் பெற்றுள்ள அந்த 'கஸீதத்துல் புர்தா' எனும் இனிக்கும் எழிற் காவியமாகும்.

## இலக்கிய உலகில் விளைவித்த புதுமைகள்

பெருமான் நபிகளார் பால் துளிர்த்துவிட்ட பேரின்பக் காதலை (இஸ்கை) கோதறப் பழுத்த அரபுச் சொற் களால் கோர்க்கப் பெற்றுள்ள அந்தச் சொன்மாலை,

இலக்கிய உலகில் விளைவித்த புதுமைகள் அனந்த மனந்தம்.

''ஏறத்தாழ மூன்று நூற்றாண்டுகள் [1250-1517] வடஆப்பிரிக்காவிலும், மேற்காசியாவிலும் மிகப் பரந்த இஸ்லாமியப் பேரரசின் நல்லாட்சியாளர்களாகத் திகழ்ந்த 'மம்லூக் சுல்தான்களின்' காலத்தில் இலக்கியமும் கலை கலாச்சாரங்களும் போட்டி போட்டுக் கொண்டு வளர்ச்சி பெற்றன என்றாலும் கவிதைத் துறையில் இந்த கஸீதத் துல்புர்தாவை மிஞ்சிட எந்த முயற்சியாலும் முடிந்திட வில்லை' என பேராசிரியர் 'ஹிட்டி' கூறிக் காண்பிக் கின்றார்.

கவிதைத் துறையில் குறிப்பிடத்தக்க ஒரே நூல் ஷர்புத்தீன் முஹம்மதுல் பூசிரியின் கஸீதத்துல் புர்தா மட்டும் தான்......

நீடுயிர் எழுச்சிப் பாடல் இனத்தில் கஸீதத்துல் புர்தாவைப்போல மக்களின் மனம் கவர்ந்த கவிதை வேறெதுவுமே இல்லை. அரபி, பார்சி, துருக்கி, ஜெர்மன், பிரஞ்சு ஆங்கிலம், இத்தாலி போன்ற மொழிகளில் இஃது பெயர்க்கவும் செய்யப்பட்டு உள்ளது...'

என்ற விபரத்தை 'அரபு மக்களின் வரலாறு' பக்கம் 690-ல் பேராசிரியர் ஹிட்டி சுட்டுகின்றார்



## முந்நூறுக்கும் மேற்பட்ட விரிவுரைகள்

பேராசிரியர் ஹிட்டியின் 'அரபு மக்களின் வரலாறு' என்ற அந்த நூலின் முதற் பதிப்பு 1937ல் வெளிவந்தது இதற்குப் பின்னுள்ள இந்த 50 ஆண்டு காலத்தில் அந்த கஸீதத்துல் புர்தாவிற்கு மேலும் பல மொழி பெயர்ப்புகளும் விரிவுரைகளும் வெளி வந்துள்ளன. அஃதன்றி பேராசிரியர் ஹிட்டி உர்து, பங்காளி, தமிழ், மலையாளம் போன்ற இந்திய மொழிகள் பற்றியும்: கீழ்த்திசை நாடுகளில் வழங்கும் மலாய் போன்ற மொழிகளைப் பற்றியும் குறிப்பிடவில்லை. அம்மொழிகளிலும் பற்பல மொழிபெயர்ப்புகளும் விரிவுரைகளும் வெளிவந்துள்ளன.

இந்தக் கணிப்பின்படி பார்த்தால் இன்றளவும் அந்த கஸீதத்துல் புர்தாவிற்கு முந்நூறுக்கும் மேற்பட்ட மொழி பெயர்ப்புக்கள்-விரிவுரைகள் வெளிவந்திருக்க முடியும் எனத் துணிந்து கூறலாம்.

## ஆரம்ப நாட்களிலேலேயே மேல் மட்டங்களையும் கவர்ந்த அற்புதக் காவியம்

கஸீதத்துல் புர்தா எனும் இந்த கவின்மிகு காவியம் பாடப்பெற்ற ஆரம்ப நாட்களிலேயே மேல் மட்டங்களில் உள்ளவர்களையும் கவர்ந்திழுக்க ஆரம்பித்தது என்பது பல வரலாற்று நிகழ்ச்சிகளின் மூலம் நமக்குத் தெரிய வருகின்றது.

அன்றைய மிஸ்ரு (எகிப்து) நாட்டின் அதிபதியாகத் திகழ்ந்த 'மலிக் தாஹிர்' என்பாரின் முதல் அமைச்சர் 'பஹாவுத்தின்' அவர்கள் கஸீதத்துல் புர்தாவை-பயன்கருதி -அனுதினமும் ஓதி வருவதைப் பழக்கமாகக் கொண்டிருந்தாராம்.

அன்றைய காலகட்டத்தில் 'ஷெய்குல் இஸ்லாம்' எனக் கொண்டாடப்பட்டு வந்த அறிஞர் பெருந்தகை 'இப்றாஹீமுல் பாஜூரி' அவர்கள் கஸீதத்துல் புர்தாவிற்கு மிக விரிவானதொரு உரை இயற்றினார்கள். அந்த உரை நூலிலேயே 'அஷ்ஷெய்கு காலிதுல் அஸ்ஹரி' என்ற அறிஞர் போதிய இலக்கணக் குறிப்புகளோடு அதன் இலக்கிய நயங்களை விளக்கி ஓரக்குறிப்பு (ஹாஷியா) எழுதியுள்ளார்கள்.

(நமது இந்தத் தமிழ் விரிவுரையான 'புரவலர் போர்த்திய பொன்னாடையில்' மேற் கூறப்பட்ட இரண்டு அறிஞர்களின் தொகுப்பிலிருந்து பெரும்பாலான குறிப்புகள் எடுத்தாளப்பட்டு உள்ளன.)

J. W. ரெட்ஹவுஸ் எனும் இலக்கிய வல்லுனர் 1880 ஆண்டில் கஸீதத்துல் புர்தாவை ஆங்கிலத்தில் முதன் முதலாக மொழி பெயர்த்தார்.

(நமது இந்த விரிவுரையில் 130ஆம் கண்ணிக்கு மிஸ்டர் J. W. ரெட்ஹவுஸின் பெயர்ப்பிலிருந்து ஒரு குறிப்புரை எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

# பைந்தமிழில் விரிவுரைகள்

காலத்தை வென்றிலங்கும் கவர்ச்சிப் பாடலாம் அந்த கஸீதத்துல் புர்தாவிற்கு,

அஞ்சாத புலமையை அணியாகக் கொண்டு, வாழ் வாங்கு வாழ்ந்த கவியேறு - மதுரை ம. கா. மு. காதிறு முஹையத்தீன் மறைக்காயர் அவர்கள் அழகு தமிழில் செய் யுட்களாக ஆக்கித் தந்துள்ளார்கள்.

(நமது இந்த விரிவுரைப் பேரிலக்கியமான புரவலர் போர்த்திய பொன்னாடை நாடும் ஏடும் போற்றும் நல்லா டையாகத் துலங்குவதற்கு மதுரை மரைக்காயர் அவர்க ளின் அந்தத் தமிழ் செய்யுட்களும் முக்கியக் காரணமாக இருக்கின்றது என்றால் அஃது மிகையல்ல.

காரணம்

கஸீதத்துல் புர்தாவுடைய 155 கண்ணிகளுக்கு நாம் வசனம் அமைத்து அந்த வசனங்களுக்கும் மரைக்காயர் அவர்களின் தமிழ் செய்யுட்களை அணிகலன்களாக ஆக்கி 'புரவலர் போர்த்திய பொன்னாடை' எனும் இந்த விரி வுரை சமைக்கப்பட்டு உள்ளதால் சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது போன்ற இன்சுவை கூடுதல் குறை வின்றி கனகச்சிதமாக அதில் அமைந்து விட்டது)

அல்ஹம்து லில்லாஹ் ....

இஃதன்றி -

கூத்தாநல்லூர் 'ஈது மிலாதுந் நபவிய்யி' எனும் ஏற் புடைய சபையினர் ஏறத்தாழ 300 பக்கங்களில்-கஸீதத்துல் புர்தாவிற்கு-தமிழ் பெயர்ப்பும் விளக்கவுரையும் இணைந்த தொரு விரிவுரையை வெளியிட்டு வியத்தகு சாதனை புரிந்துள்ளார்கள்.

பேராசிரியர் பெருமகன் பஜ்லு முஹ்யித்தீன் (ஆம்பூர் இஸ்லாமியக் கல்லூரிப் பேராசிரியர்) அவர்கள் கஸீதத்துல் புர்தாவின் கருத்தமைந்த கவின்மிகு கவிதைத் தொகுப்பை 'நோயாறு பனுவல்' எனும் பொருத்த மான பெயரில் யாத்தளித்ததோடு சமீப காலத்தில் அதற்கு கொஞ்சு தமிழில் விரிவுரையும் செய்து நபிகளார் (ஸல்) அவர்களின் புகழ் பாக்கடலில் தமக்கும் ஒரு பாத்தியதையை ஏற்படுத்திக் கொண்டார்.

பிரபல இஸ்லாமியப் புத்தக வெளியீட்டு நிறுவனமான சென்னை ஹாஜி ஷாஹுல்ஹமீது கம்பெனியார் இதற்கு அரபுத்தமிழில் ஃபாயிதாக்கள் அடங்கியதொரு பெயர்ப்பை வெளியிட்டு தங்களின் நிறுவனத்திற்கு தங்கக் கிரீடம் சூட்டிக் கொண்டார்கள்.

இவைகளன்றி இன்னமும் இரண்டோ மூன்றோ விரிவு ரைகள் நம் தாய்மொழியாம் தங்கத் தமிழ் மொழியில் வெளி வந்துள்ளதற்கான அடிச்சுவடுகள் தென்படுகின்றன.

இப்படித் தமிழ்மொழியில் மட்டும் நான்கைந்து பெயர்ப் புகளும் விரிவிரைகளும் வெளி வந்தும் கூட இன்னமும் அந்த கஸீதத்துல் புர்தாவின் அருள்மிகு பொருள் முழுமை பெற்ற பாடில்லை.

அருள் அள்ளக் குறையாத அருள்வளத்தையும் பொருள் வளத்தையும், இலக்கண இலக்கியச் செறிவையும், தனதாகக் கொண்டுள்ள ஞானப் பிரவாகமான கஸீதத்துல் புர்தாவை படைத்தருளிய பாவலரின் வாழ்க்கைச் சுருக்கத்தைக் காணுவோம்.

## மெய்சிலிர்க்கும் மிஸ்ரு

ஸாயிதுப்னு ஹம்மாது.

இவர் வடமேற்கு ஆப்ரிக்காவில் உள்ள 'ஸன் ஹாஜத்' என்ற ஊரைப் பிறந்தகமாகக் கொண்டவர்.
கால வெள்ளத்தில் சிக்கி, கரடு முரடான காட்டாறுகளில் அடித்துச் செல்லப்பட்ட ஸயீதுப்னு ஹம்மாது மெய் சிலிர்க்கும் வரலாறு படைத்த மிஸ்ரு (எகிப்து) நாட்டிலுள்ள 'அல் பூஸரி' எனும் கிராமத்தில் கரை ஒதுங்கி ஆங்கேயே வேரூன்றி பூத்துக் காய்த்துக் கனியத் தொடங்கினார்.

ஆமாம்... அல் பூஸரி புரத்தில்தான் அவருக்கு அழகிய ஆண்மகவு ஒன்று பிறக்கின்றது.

அப்போது ஹிஜ்ரி ஆண்டு 608 ஆகும்.

தனக்கு ஊன்றுகோலாகப் பிறந்த மகனுக்கு 'ஷர்புத்தீன் முஹம்மது' என பெயரிட்டு கண்மணிபோல காத்து வளர்கின்றார்.

## அரசவையில் பதவி

அங்க அமைப்புகளில் அழகரான ஷர்ஃபுத்தீன் முஹம்மது அறிவுத்திறனிலும் அழகராக மிளிர்ந்தமையால் கோன்மறையாம் 'குர்ஆன் ஷரீஃப்?' முப்பது ஜுஸ்வுக் (பாகங்)களையும் மனனம் செய்து ஏழுவயதிலேயே 'ஹாஃபிளுள் குர்ஆனாக' ஏற்றம் பெற்றுச் சிறக்கின்றார்.

அகிலத்தில் ஆயிரம் ஆண்டு பாரம்பர்யத்தைக் கொண்டிலங்கும் அல் அஜ்ஹர் (மிஸ்ரு பல்கலைக்கழகத்தில் அந்த ஆண்டின் முதல் மாணவராகத் தேர்வும் பெறுகின்றார்

ஆதலால் அந் நாட்டின் அரசவையில் அவருக்கு உயர்பதவி கிடைக்கின்றது. சிலகாலம் அதில் நிலைத்திருந்து அந்தப் பதவிக்கே பவிசு கூட்டிக் காட்டுகின்றார்.

## முயன்றால் முடியும்

ஆனாலும் அரசவைப் பதவி அவருக்கு சிறைக்கூடமாகத் தெரிகின்றது. ஆகவே பதவியைத் தூக்கி எறிந்து விட்டு சுதந்ததிரப் பறவையாக ஆகி இலக்கிய வானில் சிறகடித்துப் பறக்கத் தொடங்குகின்றார்.

அவரின் உவமை நயமிக்க புகழாரங்களால் மிஸ்ரு நாட்டின் கோமான்களும் சீமான்களும் கோன் நிலையினை எய்தி புளகாங்கிதச் சோலையின் புதுப்புது மணங்களை நுகர்கின்றனர்.

அதுபோது ஒருநாள் ஷர்ஃபுத்தீன் முஹம்மது மகான் ஒருவரைச் சந்திக்க வேண்டிய சந்தர்ப்பம் கிடைக்கப் பெறுகின்றார்.

'எழிலார் முகமுடைய நீவிர் எம்மான் முஹம்மதுவைக் கண்டுள்ளீரா?' -மகான்.

'என்ன, முஹம்மது நபிகளார் (ஸல் - அம்) அவர்களையா? நானா? -இல்லையே...—? ஷர்ஃபுத்தீன் முஹம்மது.

'இல்லை' என அவர் மகானிடம் பதிலுரைத்தாலும் அதுமுதல் அவரின் உள்ளத்தில் இனம் தெரியாத உறுத்தல் உறுத்தத் தொடங்கியது.

அதற்கு நாம் அருகன் தானா,

முயன்றால் முடியாமலா போய்விடும்...?

உள்ளத்து உறுத்தல் இப்படி எண்ணக் குறுத்தாக வளர்ந்து வளர்ந்து ஏக்கமாக மலர்ந்து-தூக்கம் பிடிக்காமையாக காய்த்துக் கனிந்தது. ஆகவே தேக்கம் நீங்கி முயன்றால் நிச்சயம் முடியும் என்ற ஊக்கம் பிறந்தது.

## விந்தாரமும் மூந்தாரமும்

கவிஞர்களுக்கு ஊக்கம் பிறந்துவிட்டால் கேட்கவும் வேண்டுமா?

நபிகள் நாயகம் (ஸல்-அம்) அவர்களின் புகழ் கவி மழையாகப் பொழியத் தொடங்கிவிட்டது.

இந்த கானமழை விளைவித்த நறுமணச் சோலைகள் தான் 'ஹம்ஜிய்யா' என்ற வித்தாரமும், 'முள்ரியா' என்ற முத்தாரமும்.

## தேனுண்ட வண்டு

இன்றும் அன்றலர்ந்த மலர்களைப்போல அழகு நயத்தோடும், ஆழ்ந்த கருத்துச் செறிவோடும் திகழும் அவ்விரு பனுவல்களையும் பாடி முடித்தபின் - தேனுண்டு பழக்கப்பட்டு விட்ட-வண்டு தேன் மதுரப் பூக்களைச் சுற்றிச் சுற்றி வட்டமிடுவதைப்போல நபிகள்நாதர் முஹம்மது (ஸல் - அம்) அவர்களின் புகழுடம்பைச் சுற்றிச் சுற்றி வட்டமிடத் தொடங்கியது; கவிஞர் ஷர்ஃபுத்தீன் முஹம்மதுவின் ஆசை மனம்.

## காதல் கொள்ளி

'அவள் ஏற்பாளோ...? அல்லது ஏறெடுத்தும் பாரா திருப்பாளோ......?' என்ற ஏக்கத்தில் தொடங்கி; அவள் 'இன்முகம்' காட்டிய பின்னரோ, அலை அலையாக எதிர்படும் தடைக் கற்களைப் படிக்கற்களாக ஆக்கி முன்னேறிட வேண்டிய நிர்பந்தமும் சம்பவிக்கும்.

இஃது, காதல் காவியங்களின் கரு.

இந்தக் 'கரு' இல்லாது போனால் காதல் காவியங்கள் கனியவே கனியாது. அல்லவா?

சாதாரணமாக சிற்றின்பக் காதலின் நிலையே இது வென்றால், என்றும் நின்று நிலைத்து நீள்பயனைத் தந்திடவல்ல மெஞ்ஞானக் காதலுக்கு தடைக்கற்கள் எதிர்படாதிருக்க முடியுமோ?

ஆமாம்...'நாயகக் காதல்' நடுக்கட்டத்தை அடைந்த போது காதலின் கருவான அந்தத் தடைகல் 'பச்சை வாதம்' என்ற உருவில் கவிஞர் ஷர்ஃபுத்தீன் முஹம்மதுவிற்கும் எதிர்பட்டு அவரைத் திசைதிருப்ப முயலத்தான் செய்தது.

நோயாக இருக்கும் எனக்கருதி ஆரம்பத்தில் அதற்குரிய சிகிச்சைகள் செய்துபார்த்தார்.

கொஞ்சமும் அது அசைந்து கொடுக்கவில்லை.

ஆகவே, தனது உள்ளத்தைப் பற்றியுள்ள நாயகக் காதல் இன்பங்களை மாற்ற வந்த 'காதல் கொள்ளி' என அதனை இனம் கண்டு கொண்டவிட்டதால்;

மருந்தை மறந்து விட்டு, மனதைப் பற்றியுள்ள நாயகக் காதலில் முழுமூச்சாக லயித்து நிற்கின்றார்.

அந்த நேரத்தில்தான் அந்த விந்தை நிகழ்ச்சி நிகழ்கின்றது.

## அந்த விந்தை நிகழ்ச்சி!

நடுநிசி நேரம்

கம கமக்கும் கஸ்தூரி வாடை அறை முழுதும் வியாப்பிக்கின்றது.

முனுக் முனுக்கென தள்ளாடி தள்ளாடி எரிந்து கொண்டிருந்த விடிவிளக்கின் இருள் கப்பிய ஒளி திடீரென முழுநிலாவின் பேரொளி போல மாறி காயத் தொடங்குகிறது.

ஷர்ஃபுதீன் முஹம்மதுவிற்கு ஒன்றுமே புலப்பட வில்லை. ஏதோ கிடைக்கமுடியாத ஒன்று கிடைக்கப் போகின்ற கிளு கிளுப்பு மாத்திரம் அவரை நெருடுகின்றது,

அப்போது,

வெள்ளுடை பூண்ட வேந்தரும், அவரை புடைசூழ சீடகோடிகள் பலரும் ஆங்கே காட்சி தருகின்றனர்.

இதற்கு முன் அந்த அருளாளரையோ அவரைச் சூழவுள்ள சீடர்களில் எவரையுமோ பார்த்துக்கூட இல்லை. ஆனாலும் ஏதோ இனம் தெரியாத பிணைப்பு-பாசம்- மரியாதை - கவிஞரை ஆட்கொள்கின்றது. ஆகவே அவர் தன்னைப் பிடித்து முடக்கியுள்ள பச்சைவாதத்தை மறந்து எழுந்து நின்று அவர்களை வரவேற்கத் துடிக்கின்றார். இதனைக் கண்ட சீடர்களில் இருவர் அவரைப் பிடித்துத் தூக்கி அமர வைக்கின்றனர்.

''புலவர் பெருமானே! நீவீர் புனைந்துள்ள அந்த அருள்மிகு பாக்களை பாடிடக் கடவீர்''

- அருளாளர்.

'அந்தப்பாக்கள்' என்றால் எந்தப் பாக்கள்...?'

- கவிஞர் ஷர்ஃபுத்தீன் முஹம்மது.

''அதுதான் 'அமின்(த்)ததக்குரிஜ் ஜீரானிம்பி தீசலமீ' எனத் தொடங்குகிறதே அதனை''
- அருளாளர்.

''ஓ அதுவா...? - எனக்கேட்டு இனம் புரிந்து கொண்ட கவிஞர் மடைதிறந்த வெள்ளம் போல- உணர்ச்சிகள் பொங்க, பொங்க - கண்களில் செந்நீர் கொப்பளிக்கக் கொப்பளிக்கப் பாடத் தொடங்குகின்றார்.

சிந்தை குளிர கவிஞரின் அந்த பொருள் வளமிக்க அருள் பாக்களை அசைந்து அசைந்து ரசிக்கின்றார்கள் அந்த அருளாளர்.

15-ம் கண்ணியின் முதல் ஈற்றைப் பாடிய கவிஞர் அதன் இரண்டாம் ஈற்று நினைவுக்கு வராமையால் திக்கித் திணறுகின்றார். உடன் அந்த இரண்டாம் ஈற்றினை அந்த அருளாளர் எடுத்துக் கொடுக்கின்றார்கள்.

இப்படி அருள்மயமான சூழலில் அருளுக்கரசரின் முன்னிலையில் அரங்கேறிய இந்தக் கவியரங்கேற்றம் பக்தி பரவசத்தோடு முடிவடைகின்றது.

கவி நலத்திலும், காவிய அமைப்பிலும் கரைகாண முடியாத பேற்றினைப் பெற்றுத் திகழும் அந்த கவின்மிகு காவியத்தைப் புனைந்தமைக்கு புலவரைக் கௌரவிக்கும் முகமாக அந்த அருளாளர் தமது பொன்மேனியில் படர்ந்திருந்த பரிவட்டத்தை தங்களது தங்க நிகர் கரத்தால் எடுத்து கவிஞர் ஷர்ஃபுத்தீன் முஹம்மது விற்குப் பொன்னாடையாகப் போர்த்தியதோடு கவிஞரின் உச்சி தொடுத்து உள்ளங்கால் வரை தமது தாமரை கரங்களால் தடவி விட்டு மறைகின்றார்கள் வந்த அந்த அருளொளி நாதர்கள்.

# பொன்மேனிப் பொன்னாடை புண்மேனியில்

ஆழ்ந்த நித்திரையில் அயர்ந்துபோயிருந்த கவி ஷெர்ஃபுத்தீன் முஹம்மது திக்குமுக்காடி கண்விழித்துப் பார்க்கின்றார். தன் கண்களையே அவரால் நம்பமுடிய வில்லை-

சற்றுமுன் தான் கண்ட மாட்சிமிகு காட்சி, கனவா? அல்லது இப்போது காண்பதுதான், கனவா? என்பதை புரிந்து தெளிய வெகுநேரம் பிடித்தது அவருக்கு,

ஏனெனில்,

அப்போது கமழ்ந்த கஸ்தூரி வாடை இப்போதும் குறைந்தபாடில்லை,

அப்போது அருளாளரால் அவருக்குப் போர்த்தப்பட்ட அந்தப் பொன்னாடை இப்போதும் - விழிப்பு நிலையிலும்- கவிஞர் தம் புண்மேனியில் தவழ்ந்து கொண்டிருக்கின்றது.

எல்லாவற்றிற்கும் மேலாக; மருத்துவர்களால் கைவிடப் பட்டு 'இனி கட்டையோடுதான் முடியும்' எனக் கருதப் பட்ட பக்கவாத நோய்-அந்த அருளாளரின் திருக்கரங் களால் தடவி விடப்பட்ட மகிமையால்-அதன் அடிச்சுவடு கூட இல்லாமல் மறைந்து போய் முழுமையான உடல் நலம் கவிஞருக்கு ஏற்பட்டிருக்கின்றது. இப்போது சுயமாக எழுந்திருக்க, நடமாட, ஓடி ஆட முடிகின்றது என்றால் இதனைக் கனவென்பதா? அல்லது அதனைக் கன வென்பதா.......?

# XXXXXV

தனது புண்மேனியில் படர்ந்து கிடக்கும் அந்த அதிசயப் பொன்னாடையை கையில் எடுத்து தொட்டுப் பார்கின்றார்.

பச்சை வாதத்தால் செயல் இழந்துபோய்க் கிடந்த கையையும் காலையும் மறு கைகொண்டு நிமிண்டிப் பார்க்கின்றார். சுயமாக ஆட்டி அசைக்கச் செய்து பார்க்கின்றார். அப்போதும் அவருக்கு நம்பிக்கை வராது போகவே நித்திரையில் ஆழ்ந்து கிடக்கும் தனது குடும்பத்தினரை எழுப்பி விட்டு அதிசயமான இந்த அதிசயததைச் சொல்லிக் காட்டி இது கனவா அல்லது நனவா-எனக் கேட்டு அவர்கள், கனவல்ல நனவேதான், என இயம்பிய பின்னே முழு நம்பிக்கை வரப்பெறுகின்றார்.

அதன் பின்பே; சற்றுமுன் தன்னிடம் வருகை தந்து, தனது காவிய அரங்கேற்றத்திற்கு முன்னிலை வகித்து தனக்குப் பொன்னாடையும், நோய் நிவாரணமும் வழங்கிப் போந்த அந்த அருளாளர் வேறு யாருமல்லர்.

தான் எந்தக் காவிய நாயகரை - எந்தக் கதிதரும் வழித்துணையை - புறக் கண்களால் கண்டு களிக்க வேண்டும் என ஏங்கி ஏங்கித் தவியாய் தவித்துக் கொண்டிருந்தாரோ அதே கலைமறை முஹம்மது (ஸல் - அம்) அவர்கள்தான் என்ற பேருண்மை அவருக்குப் புரிகின்றது.

சுப்ஹானல்லாஹ்... அல்ஹம்து லில்லாஹ்.

மர்ஹபா...மர்ஹபா

## கவிக் குரிசில் பூஸிரி

இப்படி காவிய நாயகரே நேரில் தோன்றி காவிய அரங்கேற்றம் பெற்ற அந்தக் காவியம் எது தெரியுமா?

இன்று 'கஸீதத்துல் புர்தா' என்று பெயர் வழங்கி நம்மால் 'புரவலர் போர்த்திய பொன்னாடை' என்ற பெயரில் விரிவுரைக்கப்பட்டுள்ள அதே காவியம்தான்.

இத்தகு ஏற்புடைய காவியம் படைத்த அந்தக் கவிக் குரிசில் யார் தெரிகின்றதா?

'பூஸிரி' கிராமத்தில் பிறந்து வளர்ந்த காரணத்தால் 'பூஸிரி இமாம்' என்றும் 'புலவர் பூஸிரி' என்றும் அழைக்கப்பட்ட ஷர்புத்தீன் முஹம்மது அவர்களே.

கனவில் போர்த்தப்பட்ட பொன்னாடை நிஜ வாழ்க்கையிலும் கிடைக்கப் பெறுவதென்றால் அஃது சாதாரணக் காரியமா?

ஆகவே

உலகம் உள்ளளவும், உலகில் உயிரினம் உள்ளளவும் நிலைத்து-தனக்குக் கிடைக்கப் பெற்ற அந்த-மாட்சி-நிலை நிற்க வேண்டும் என்பதால் அவர்தம் அந்தக் காவியத்திற்கு 'கஸீதத்துல் புர்தா' அதாவது 'பொன்னாடைக் காவியம்' என்று பெயர் சூட்டிப் பெருமிதம் கொண்டார் அந்த பூஸிரி புரத்துப் புலவர் பெருமகனார்.

அவரின் அந்த ஆசை இன்றளவும் நிலைத்து நின்று விட்டது.

அல்ஹம்து லில்லாஹ்...

இப்படி

பாடப்பெற்ற நேரத்தில் பக்திப் பரவசம் பொங்கிடத் தக்க சூழலில் அமைந்து; முதிர்ந்த பக்குவமும், கலப்பற்ற மெஞ்ஞானமும் சேர்ந்த நிலையில் பாடி முடிக்கப்பட்ட காரணத்தால்தான் அக்காவியம், அள்ள அள்ளக் குறையாத அருள்வளத்தையும், இலக்கண இலக்கியச் சிறப்புக் களையும் பெற்று, சென்றடைந்த எழுநூறு ஆண்டுகளில் வேறு எதனாலும் மிஞ்ச முடியாத பேரிலக்கியப் பெட்டகமாக இந்த கஸீதத்துல் புர்தா திகழ்ந்து வருகிறதென்றால் அது மிகையல்ல.

இத்தரு நீடுயர் எழுச்சிப்பாடலை-
எழுநூறு ஆண்டுகளாக இனித்துக்
கொண்டிருக்கும் எழிற் காவியத்தை-
முக்திநிலை நின்று மோனநிலை பெற்றுய்ய
வழிகாட்டும் பக்திச் சுவைப் பெட்டகத்தை-

'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற பெரு நோக்கோடு ஞாலத்திற்குக் கோத்தளித்த ஞானக்கவி ஷர்புத்தீன் முஹம்மது னில் பூஸிரி (ரஹ்-அன்ஹு) அவர்கள் அந்த அருள் மயமான மாட்சிக்குப்பின் 88-ம் வயதில் ஹிஜ்ரீ 696ல் காண்பதற்கரிய தலம் கண்டு மகிழ ஞாலம் துறந்தார்கள்.

இன்னா லில்லாஹி...

இந்த கணக்கின்படி நடந்து கொண்டிருக்கும் ஹிஜ்ரீ 1410-ஆம் ஆண்டு புலவர் பெருமான் பூஸிரி அவர்களுக்கு 814-ஆம் ஆண்டு நினைவு விழாக் கொண்டாடப்பட வேண்டிய காலகட்ட மென்பதால்.

புரவலர் போர்த்திய பொன்னாடைப் பேரிலக்கியத்திற்கு புலவர் பெருமானின் 814 அம் ஆண்டு நினைவு மலராக ஒளிர்ந்திடக்கூடிய மாப்பெரும் பேறு கிட்டியுள்ளதை சுட்டிக் காண்பிக்காதிருக்க முடியவில்லை. அல்ஹம்துலில்லாஹ்.

வாழ்க புலவர் பூஸிரியின் திருநாமம்.
வளர்க அவர்தம் காவிய நயம்
மிளிர்க அவர்தம் இலக்கியச் சேவை.
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்.
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்
ஸல்லல்லாஹு அலா முஹம்மத்
யாறப்பி ஸல்லி அலைஹி வ சல்லிம்

---

## கவலல் போக்கும் அருள் மா மருந்து

புரவலர் போர்த்திய பொன்னாடையாகிய புர்தாஷரீப் கவலல் எனும் பிணிகள் போக்கும் அருள் மா மருந்தாகப் பரிணமித்து வருவதை பார் முழுவதுமே உய்த்துணர்ந்து வைத்துள்ளது.

'தீராது - மாறாது' - என புறநோய் மருத்துவர்களால் கைவிடப்பட்ட எத்தனை எத்தனையோ நோய் நொடி கள் புதுமை விளைவித்த புர்தாஷரீபின் பொருட்டால் முழுமையாக விலகி பூரணச்சுகம் கிடைக்கப்பெற்ற வரலாறு கள் அனந்தம் அனந்தம்.

நிறைவு பெறாமல் நின்றுபோயிருந்த நியாயமான நிய்யத்துகள் - இதயத்துள் அரும்பிநின்ற எண்ணக் குவி யல்கள் - நன்நாட்டங்களெல்லாம் - அந்த நோயறு பனு வலின் அநுகூலத்தால் குறைவின்றி நிறைவு பெற்றுத் திகழ்ந்த நிகழ்ச்சிகளோ ஏராளம்.

வியாபாரம், விவசாயம், தொழில் போன்ற ஹலா லான சம்பாத்தியங்களில் விருத்தியும் பரக்கத்தும் முன் னேற்றமும் ஏற்பட வேண்டும் என்பதற்காக அந்த பனு வலின் தயவை நாடி வெற்றி கண்டவர்களின் பட்டியல் கணக்கிலடங்காது.

பழிதீர்த்துக் கொள்ளும் கெட்ட எண்ணத்தால் உந்தப் பட்ட - பகைவர்களால் ஏவி விடப்படும் ஏவல், வஞ்சனை, பில்லி, சூனியம் போன்ற கொடுமைகளின் தீங்குகளிலிருந்து பாதுகாப்புப் பெற, அந்த புர்தா ஷரீபை அரணாகப் பயன் படுத்தி அதன் பயனாக பாதுகாப்படைந்த பக்த சிகா மணிகள் எத்தனை எத்தனையோ!

ஷைத்தான் ஜின் போன்ற காத்துக் கருப்புக்களின் அணுகுதலினால் ஏற்பட்ட கவலல்களைப் போக்க புர்தா வின் புனிதத்தை நாடி அதை முறையாகக் கையாண்ட பின் பீடித்த பீடைகள் நீங்கி சகஜ வாழ்வைத் திரும்பப் பெற்றோர் நிரம்ப உண்டு.

பைத்தியம், கண்ணேறு போன்ற இயற்கை கோளாறுகளால் விளைந்த தீவினைகளை புர்தாவின் தயவால் தவிர்த்துக்கொண்டோரும் நிரம்ப உண்டு.

நீதிமன்றங்களில் ஏற்றப்பட்டுள்ள வழக்குகளில் நியாயம் கிடைத்துச் சிறக்க வேண்டுமென்பதற்காக புர்தாவை பயன்படுத்தி வெற்றி கண்டோரும் இல்லாமலில்லை.

இப்படி எத்தனை எத்தனையோ கவலைகள் - அவலங்களுக்கெல்லாம் புதுமை விளைவித்த புர்தா ஷரீப் நிவாரணமாகவும் - பரிகாரமாகவும் - பரிந்துரையாகவும் - மா மருந்தாகவும் - திகழ்ந்துள்ளது. அத்தகு அற்புத நிகழ்ச்சிகளில் ஒன்றிரண்டை மட்டும் இங்கே காண்போம்.

## கண் நோய் தீர்ந்த அதிசயம்

'ஸஃதுல் ஃபாருக்' எனும் பெரியாருக்கு கடுமையான கண் நோய் ஏற்பட்டு - கடூரமான வேதனை - நமைச்சலால் மிகச் சிரமபட்டுக் கொண்டிருந்தார் அவர்.

பாராத மருத்துவரில்லை, போடாத மருந்துமில்லை. அந்த அளவு சிகிச்சை செய்தும் முற்றாக நீங்குவது ஒருபுறமிருக்க கொஞ்சம் கூட குறைவதாக இல்லை.

இந்நிலையில் அப்பெரியாரின் கனவில் தரிசனம் கொடுத்த நமது நபிகளார் (ஸல் - அம்) அவர்கள் இமாமுனா பூஸிரி (ரஹ் - அன்ஹு) அவர்களைச் சொல்லிக்

காட்டி 'அப்புலவர் பெருமகனிடம் இருக்கும் புர்தா பாமாலையை வாங்கி கண்ணில் வைத்து ஒத்தி எடு. உன் கண் நோய் விலகிவிடும்' எனக்கூறி மறைந்தார்கள்.

கண்விழித்த ஸஃதுல் ஃபாருக் உடனடியாக புலவர் பூஸிரீ அவர்களிடம் சென்று நோயறு பனுவலான புர்தா ஷரீபை வாங்கி அங்ஙனம் செய்ய, சுப்ஹானல்லாஹ்! என்ன ஆச்சரியம்! நீராமல் இருந்துவந்த அவரின் கண் நோய் கனநேரத்திற்குள் முழுமையாகத் தீர்ந்த அற்புதம் நிகழ்ந்து விட்டது.

ஆதார நூல்; காஸ்ஸியத்து - மஜ்மஅதுல் குப்றா

## கொள்ளை நோயிற் குருதி விலகிய அற்புதம்

கடந்த 1918-1919 ஆம் ஆண்டுகளில் நம் நாட்டில் கொள்ளைப் பெருநோய் நிலவி வந்ததை நம்மில் மிகப் பலர் கண்டும் கேட்டுமிருப்பர்.

அந்நோய் அணுகிவிட்டால் உயிரை கொள்ளை யடித்து விடுமென்பது உறுதியாதலால் அதற்கு, 'கொள்ளை நோய்' எனக் காரணப் பெயர் ஏற்பட்டது எனலாம். அந் நோய், ஒரு ஊரில் பரவி விட்டால் அதற்கு பயந்து ஊரை காலி செய்து விட்டு, கூட்டம் - கூட்டமாக மக்கள் வேற்றி டம் சென்று விடும் அவலமெல்லாம் கூட அப்போது நடந்ததாகச் சொல்லக் கேட்டிருக்கின்றோம்.

கொள்ளை நோயால் இறந்துபட்ட மனிதனது ஜனாசாவைத் தொட்டு குளிப்பாட்டினால், அந்த ஜனாசாவைச் சுமந்து சென்றால், ஜனாசா ஊர்வலத்தில் கலந்து கொண்டால், அந்நோய் தனக்கும் தொற்றிக் கொள்ளுமென பயந்து அந்த மனிதாபிமானக் கடமைகளை செய்ய மறுத்து விட்ட செய்திகளையெல்லாம் அனுபவசாலிகள் சொல்லக்கேட்டு 'இப்படியும் நடந்ததா?' என வியந்துள்ளோம் நாம்,

இத்தகு கோரமான கொள்ளை நோயால் பீடிக்கப் பட்டு மிக அவஸ்தைப்பட்ட பலருள் வேலூர் பாகிய்யாத்துஸ் ஸாலிஹாத் அரபி மதராஸாவின் பேராசிரியர் 'முஹத்திது' மவ்லானா அப்துர்ரஹீம் ஹளரத் கிப்லா அவர்களும் ஒருவர்.

அப்போது ஹளரத் கிப்லா அவர்களுக்குச் சரியான வாலிப பருவம். மதராஸாவின் மிகத் திறமையான பேராசிரியர். பானி அஃலா ஹளரத் கிப்லா அவர்களின் பேத்தியை மணந்தவரும் கூட.

ஆகவே, அஃலா ஹளரத் கிப்லா அவர்கள் அன்னாரின் அருகில் மிக வாடிய நிலையில் அமர்ந்திருந்தார்கள். அந்த நேரத்தில் மதராஸாவில் உயர் வகுப்பில் பயின்று கொண்டிருந்த மாணவர்களில் சிலர் அன்னாரைப் பார்ப்பதற்காக அங்கு வந்து 'வேதனை குறையும் பொருட்டு புர்தா ஓதுகின்றோமே' என அஃலா ஹளரத் அவர்களிடம் அனுமதி கேட்டார்கள்.

ஹளரத் அவர்களும் அதற்கிசைந்து

உளுச் செய்து கொண்டு, மொட்டைத் தலையுடன் (தலையை மறைக்காமல்) கிப்லாவை முன்னோக்கி அமர்ந்து புர்தா ஷரீபை ஓதுங்கள். 'இரண்டு மீம்' கொண்டு முடியும் பைத்துக்களை மும்முறை ஓதவேண்டும் - என, ஓதிட வேண்டிய ஒழுங்கு முறைகளையும் அஃலா ஹளரத் கிப்லா சொல்லிக் கொடுத்தார்கள்.

அதற்கிணங்க மாணவர்களும் ஓதத் தொடங்கினார்கள். அஃலா ஹளரத் கிப்லா அவர்களும் மாணவர்களும் சேர்ந்து ஓதினார்கள். அங்ஙனம் புர்தாவை இரண்டுமுறை முழுமையாக ஓதி முடித்து, மூன்றாம் முறையாக ஓதத் தொடங்கி முதல் பைத்தை ஓதிய போது அந்த அதியற்புதம் நிகழ்ந்தது.

அதாவது, அஃலா ஹளரத் கிப்லா அவர்கள்;

''ரசூலுல்லாஹ் வந்து விட்டார்கள்...! ஜன்னி முறிந்து விட்டது... ! சீக்குப் போய் விட்டது...!''

-என திடீரெனச் சப்தமிடத் தொடங்கி உடனடியாக தரிசனம் தந்த நபிகளார் அவர்களுக்கு மரியாதை செய்யும் பொருட்டு எழுந்து நின்று கொண்டார்கள்.

சுப்ஹானல்லாஹ்... அச்சமயம் ;

நினைவிழந்து பேச்சு மூச்சு ஏதுமின்றி சவம் போல கிடந்த நோயாளி அப்துர் ரஹீம் ஹளரத் அவர்கள் ''என்னப்பா! பெரும் சப்தம் போடுகின்றீர்கள் ...! ஏதை

அடைக்கின்றதே ...! ''என்று கூறியவாறே எழுந்து உட்கார்ந்து கொண்டார்கள். அங்ஙனம் அவர்களைப் பிடித்திருந்த கொள்ளை நோய் முற்றாக விலகி விட்டது.

அல்ஹம்து லில்லாஹ்...

ஆதார நூல்: அல் பாகியாத் நூற்றாண்டு மலர்.

---

**காமில் நபியுல்லா (ஸல்-அம்)**
**அவர்களைக் கனவில்**
**கண்டு களிக்க வேண்டுமா?**

---

பிரதி வெள்ளிக் கிழமை (வியாழன் மாலை விடிந்தால் வெள்ளி) மஃரிபிற்கும் இஷாவிற்கும் இடைப்பட்ட நேரத்தில், ஓதும் விதிமுறையைப் பேணி நிரந்தரமாக புர்தா ஷரீபை ஓதி வந்தால் சம்பூரணமான ஈமானோடு மவ்த்தாகக் கூடிய வாய்ப்புக் கிடைக்கும். அதுவன்றி;

நபிகளார் (ஸல்-அம்) அவர்களின் பால் நேசமும் பாசமும் கொண்டு - உருக்கத்தோடு - அனுதினமும் அதை ஓதுவதை பழக்கமாக்கிக் கொண்டால் நாடும் நியாயமான நாட்டங்களும், நியாயமான கோரிக்கைகளும் கைகூடும்.

புர்தா எனும் இந்தப் பனுவல் நபிகளார் (ஸல் - அம்) அவர்களிடம் நேருக்கு நேராக ஓதிக் காண்பிக்கப்பட்டு அப்பெருந்தகையின் அணிந்துரையை வாங்கப் பட்டுள்ள அருள்வளமிக்க காவியமாக இருப்பதால் இதற்கு 'தாஜுல் அவ்ராது' என்றொரு மாற்றுப் பெயர் உண்டு.

ஆகவே;

எந்த நியாயமான முராதுகளுக்கும் முறையீடுகளுக்கும், கோரிக்கைகளுக்கும் இத்தப் பனுவலை எவர் ஓதினாலும் அவர் முழுமையான பயனை இன்஫ா அல்லாஹ் நிச்சயம் அடைந்து ஆனந்தம் பெற்றுய்ய முடியும்.

தீராத எந்த நோய்க்கும், ஷைத்தான் பில்லி, சூனியம், வஞ்சனை, செய்வினை போன்ற பார தூரமான ஆபத்து களுக்கும் இந்த புர்தாவை மருந்தாகப் பயன்படுத்தினால் நிச்சயம் இன்ஷா அல்லாஹ் பூரணமான குணம் கிடைக்கும்.



மருந்தாகப் பயன்படுத்தும் முறையாவது;

இந்த புர்தா ஷரீபை ஓதும் முறையைப் பேணி முழுமையாக ஓதி நோயாளியின் மேனியில் ஊதவேண்டும் ஓதப்படும்போது நோயாளி ஓதும் இடத்தில் மரியாதை யாகவும் இதுவே நம்மின் நோயைப் போக்க வல்ல அரு மருந்து என்ற நம்பிக்கையோடும் அமர்ந்து, முடியாவிட் டால் படுக்க வைக்கப்பட்டிருக்க வேண்டும். அல்லது சாப்பாடு, குடிநீர், பால் போன்றவற்றில் ஓதி ஊதி, அதை நோயாளிக்கு உண்ணக் கொடுக்க வேண்டுப்.

பிரதி வெள்ளி இரவுதோறும் (அதாவது விடிந்தால் வெள்ளிக்கிழமை) நபிகளார் (ஸல்-அம்) அவர்கள் பால்உண்

மையான, முழுமையான நேசத்தோடும், தேட்டத்தோடும் அன்னாரை வாழ்நாளில் ஒருமுறையேனும் கண்டு களித்தே தீர வேண்டும் என்ற உறுதியோடும் - உருக்கமாக - ஒரே கவனமாக இஷாவிற்குப் பின் புர்தா ஷரீபை ஓதி அதன் பின் வேறு எவருடனும் பேசாமலும், வேறு காரியங்களில் ஈடுபாடு கொள்ளாமலும் படுத்துக் கொள்வதை பழக்கமாகக் கொண்டு வந்தால்-இன்ஷா அல்லாஹ்-நிச்சயம் வாழ்நாளில் ஒரே ஒரு முறையேனும் காணக் கிடைக்காத அந்த கதி தரும் நிழலை கனவில் கண்டு களித்திடத் தக்க பேறு கிடைக்கும்.

இவைகளன்றி;

புர்தா ஷரீபின் தனித்தனி பைத்துகளுக்கு சில குறிப்பிட்ட குணபாடுகள் உண்டு. ஆகவே அவைபற்றி ஆய்ந்து தெளிவோம்.

## சந்தேகம் எனும் பெருநோய்க்கு மருந்து

மனைவி, சகோதரி போன்றோரின் நடத்தையில் சந்தேகம் ஏற்பட்டால் புர்தா ஷரீபின் 3-ம் பைத்திலிருந்து 7-ம் பைத்து வரையுள்ள ஐந்து பைத்துகளையும் (உத்ருன்ஜ்) ஆரஞ்சு இலையில் எழுதி அதை சந்தேகத்திற்குரியவரின் (தூங்கும் போது) கையில் வைத்து அவரது

வாயை உற்று நோக்கினால் அவர் இரகசியங்களை உளறுவதைக் கேட்டு உண்மை நிலையை உணர்ந்து கொள்ளலாம். இன்ஷா அல்லாஹ்....

ஏதாவதொரு பொருள் களவு போய் விட்டது. இவர் தான் திருடியிருக்கக் கூடும் - என குறிப்பிட்ட எவரின் மீதாவது சந்தேகம் ஏற்படுகின்றது. ஆனால் அவரோ இல்லவே இல்லை எனச் சாதிக்கின்றார் - என்றால்;

மேற்கண்ட ஐந்து பைத்துகளையும் பதனிடப்பட்ட தவளைத் தோலில் எழுதி அத் தோலிற்குரிய தவளையின் நாக்கையும் அதனுடன் இணைத்து சந்தேகத்திற்குரியவரின் கழுத்தில் தொங்க விட்டால் (உண்மையில் அவர் திருடி இருந்தால்) உடனடியாகப் பயந்து நடு நடுங்கி களவை ஒப்புக் கொள்வார். இன்ஷா அல்லாஹ்....

## காமில் நபியுல்லா அவர்களை கனவில் கண்டு களிக்க மற்றுமோர் உபாயம்

புர்தா ஷரீபின் 8 - வது பைத்தை அனுதினமும் இஷா தொழுகைக்குப்பின் - படுக்கையில் - உலுவுடன் கிப்லாவை முன்னோக்கி அமர்ந்த நிலையில் - தூக்கம் மிகைக்கும் வரை மடக்கி மடக்கி ஓதிக் கொண்டிருந்தால் காணக் கிடைக்காத காமில் நபியுல்லா (ஸல் - அம்) அவர்களை கனவில் கண்டு களிக்கக் கூடிய நல் வாய்ப்பு நிச்சயம் கிடைக்கும். இன்ஷா அல்லாஹ் ...

## வணக்க வழிபாடுகளில் ஆர்வமும் தடுக்கப்பட்ட செயல் களில் வெறுப்பும் ஏற்பட ஏற்புடை மருந்து

மார்க்கத்தில் தடுக்கப்பட்டுள்ள குடி, கூத்து, கூத்தி வைப்பு, சூதாட்டம் போன்ற ஹராமான - மக்ரூஹான கெட்ட பழக்க வழக்கங்களுக்கு சந்தர்ப்பவசத்தால் அடிமைப்பட்டு அவைகளை விட்டும் முழுமையாக விலகிக் கொள்ள எண்ணமிருந்தும் தப்பிக்க முடியாமல் திணறிக் கொண்டிருக்கும் அபாக்கியவான்கள்;

புர்தா ஷரீபின் 8 - 9 ஆகிய இரு பைத்துகளையும் வட்ட வடிவக் காகிதத்தில் குங்குமம்-நயம் கஸ்த்தூரி-பன்னீரால் தயார் செய்யப்பட்ட மை கொண்டு எழுதி நெற்றியில் வைத்து (தலைப்பாகை அல்லது தொப்பி கொண்டு) மறைத்துக் கொண்டால் அடிமைப்பட்டுள்ள கெட்ட பழக்கங்களில் இருந்து முழுமையாக விடுதலைபெறுவர் - நிச்சயம். இன்ஷா அல்லாஹ்......

□ மேற்கண்ட இரு பைத்துகளையும் ஒவ்வொரு நேரத்துத் தொழுகைக்குப் பின்னும் தொடர்ந்து ஓதி வந்தால் நபில் தொழுகை நோன்பு போன்ற சிறப்பு வணக்கங்களை அதிகமாகச் செய்திட ஆவலுடன் ஆர்வமும் உண்டாகும்.



## தோழமை வளர நட்புக் கூடிறு

ஹலாலான (நியாயமான) நோக்குடன் குறிப்பிட்ட மனிதருடன் தோழமை (அல்லது வியாபார, தொழில் கூட்டு) கொள்ளுகின்றான். ஆனால் அம் மனிதரினால் ஏதாவது பாதகம் ஏற்பட்டு விடுமோ என ஐயம் ஏற்படுகின்றது. அந்தச் சந்தர்ப்பங்களில் (அல்லது மற்றவர்களினால் தன் நட்புக்கு பாதகம் விளையும் போது);

புர்தா ஷரீபின் 11 - 12 ஆகிய இரு பைத்துகளையும்-சுக்கிர (ஜுஹரா நட்சத்திரம் ஜொலிக்கும் போது) கிரஹத்தின் போது - செப்புத் தகட்டில் எழுதி, அதை மழை நீரால் கழுவிக் குடித்தால் தோழமை அல்லது கூட்டணி எவ்வித இடையூறுமின்றி தூய்மையோடு வலுப்பெறும் இன்ஷா அல்லாஹ்...

## தவ்பாச் செய்த பின்னும் பாவச் செயல்களில் மோகம் மேலிட்டால்

குடி, விபச்சாரம், (ஆண் ஆணை மோகித்தல், பெண் பெண்ணை மோகித்தல்) வட்டி வரவு செலவு போன்ற தகாத சம்பாத்தியம், லாகிரி வஸ்துக்களில் மோகம், குதிரை ரேஸ் போன்ற சூதாட்டம் ஆகிய கெட்ட பழக்க வழக்கங்களை விட்டொழித்து தவ்பாச் செய்து விட்டான் ஒருவன். ஆனாலும் பழக்க தோஷத்தின் காரணமாக அத்தகு பாவச் செய்கைகளில் சலனம் ஏற்பட்டு அதைச் செய்தே ஆகவேண்டும். இல்லாவிட்டால் ஜீரணிக்காது'

கை கால் வலிப்பு வந்துவிடும், தூக்கம் வர மறுக்கும் என்பன போன்ற நிர்பந்தம் மேலிட்டால்;

புர்தா ஷரீபின் 13, 14, 15 ஆகிய மூன்று பைத்துகளை பளிங்குப் பீங்கானில் எழுதி அதைப் பன்னீர் கொண்டு கழுவி ஜும்ஆ தொழுதவுடன் அதைக் குடித்துவிட்டு (பெண்களாக இருந்தால் வெள்ளிக்கிழமை ளுஹர் தொழுகையை முடித்தபின் குடிக்க வேண்டும்) அப்படியே அதே இடத்தில் வேறு எந்தக் கவனங்களிலும் ஈடுபடாமல் ஒரே வைராக்கிய உணர்வோடு கிப்லாவை முன்னோக்கிய நிலையில் அமர்ந்து திக்ரு ஃபிருக்களில் (தியானங்களில்) முழுமையாக ஈடுபட்டிருக்க வேண்டும். இடையிடையே அந்த புர்தா ஷரீபின் பைத்துக்களையும் ஓதிக் கொள்ள வேண்டும். மலம் ஜலம் போன்ற இயற்கை அவசியங்களைக் கழிக்க நேரிட்டால் திரும்பவும் உலுச்செய்து அமர்ந்து கொள்ளல் வேண்டும்.

இந்த நிலை அன்றைய மஃரிபுத் தொழுது முடிக்கும் வரை நீடிக்க வேண்டும்.

அங்ஙனம் செய்தால் தவ்பா செய்த பின்னும் ஏற்படக் கூடிய எச்சில் புத்தி, சலனங்கள், நிர்பந்தங்களிலுருந்து முழுமையான பாதுகாப்புக் கிடைக்கப் பெறுவது உறுதி. இன்ஷா அல்லாஹ்...



## பாவச் செயல்களிலேயே லயித்து இன்பம் காணும் போக்கிலிருந்து விடுதலை பெற

மார்க்கத்திற்கும், மனிதாபிமானத்திற்கும் களங்கம் கற்பித்திட வல்ல தகாத காரியங்களான குடி, சூதாட்டம் திருட்டு போன்ற பாவச் செயல்களில் சந்தர்ப்ப வசத்தால் ஈடுபட்டு நாளடைவில் அதிலேயே மனதைப் பறிகொடுத்து-லயித்து-இனிமேல் அவைகளைச் செய்யாமல் உயிர்வாழவே முடியாது என்ற கடைசி கட்டத்திற்கு வந்து விட்ட அபாக்கியவான்கள்;

புர்தா ஷரீபின் 16, - 18 ஆகிய மூன்று பைத்துக் களையும் அனுதினமும் அடிக்கடி ஓதி வந்தால் நிச்சயமாக அத்தகு போக்கிலிருந்து முழுமையாக நிவாரணம் பெற்றுய்ய முடியும். இன்ஷா அல்லாஹ்...

## மார்க்கக் கடமைகளில் உறுதியாக நிலைத்து நிற்க

சிலர் திடீரென உணர்ச்சி வசப்பட்டு ஐங்காலத் தொழுகை, நோன்பு போன்ற மார்க்கக் கடமைகளில் மிக அதிகப் பூணிப்போடு ஈடுபாடு கொள்வதும், கொஞ்ச நாட் களில் - உணர்ச்சியின் வேகம் குறைந்து, அல்லது குறைக் கப்பட்டு விடுவதால் - பள்ளிவாசல் பக்கம் கூட திரும்பிப் பார்க்காமல் இருந்து விடுவதும்; மீண்டும் எப்போதாவது உணர்ச்சி வசப்படும் போது 'சூபியாக' மாறுவதும் மீண் டும் காலியாகி விடுவதும் இப்படி எதிலும் உறுதிப்பாடில்

லாமல் 'ஆற்றிலொரு கால் சேற்றில் ஒரு கால்' என்ற நிலையில் வாழுபவர்கள்;

புர்தா ஷரீபின் 19 - 21 ஆகிய மூன்று பைத்துக்களையும் ஒவ்வொரு நேரத்துத் தொழுகைக்குப் பின்னும் இருபது இருபது முறை ஓதி வந்தால் நிச்சயம் உறுதிப்பாடு கிடைக்கும். இன்ஷா அல்லாஹ...

## வந் நெஞ்சர்கள் வாஞ்சை உள்ளவர்களாக மாறிட

இறுக்கமான இதயமும், அறுத்த கைக்கு சுண்ணாம்பு கூட கொடுக்க மனம் வராத கல்நெஞ்சமும், கஞ்சத்தனமும், கடின சுபாவமும் கொண்டுள்ளவர்கள்.

புர்தா ஷரீபின் 22 - 23 ஆகிய இரு பைத்துகளையும் அனுதினமும் அடிக்கடி ஓதி வந்தால் -

இரக்க சுபாவமும் வாஞ்சையும், அன்பும், அரவணைக்கும் பண்பும் உள்ள அன்பின் ஊற்றுக் கண்களாக மாறிட முடியும். இன்ஷா அல்லாஹ்......

## வணக்கத்தில் கர்வம் ஏற்படாமலிருக்க

சிறப்பு வணக்கங்களில் ஈடுபாடு கொண்டு நிற்கும் பக்திமான்கள், கற்றறிந்த அறிஞர் பெரு மக்கள் ஆகியோருக்கு கர்வமும் 'பிறர் புகழ வேண்டும்' என்ற

ஆசையும் ஏற்படுவது விரும்பத்தகாத ஒன்றாகும். இந்த விரும்பத்தகாத நிலை ஊடாடும் பக்திமான்களும் அறிஞர்களும் மேற்கண்ட 26 - 28 ஆகிய மூன்று கண்ணிகளை பொழுது உதயமாகும் நேரத்தில் தாயத்தாக எழுதி அதன்பின் அக் கண்ணிகளை 71 முறை உச்சாடனம் செய்து, இடது கெண்டைக்கையில் விலா எலும்புகளை பார்த்திருக்கும் அமைப்பில் அந்த - தாயத்தைக் கட்டிக் கொண்டால் கர்வம் ஏற்படாமலும் தற்புகழ்ச்சி ஏற்படாமலும் செய்யும் வணக்கங்களையும் கற்றறிந்த கலையினையும் தூய்மையாகப் பாதுகாக்க முடியும். இன்ஷா அல்லாஹ்......

## தூக்கத்தில் இன்பம் காணும் போக்கையும், சோம்பலையும் முறிக்க

சிலர் சமயம்கிடைக்கும் போதெல்லாம் படுக்கையை நாடுவர். இன்னும் சிலரோ சமயத்தை வலுக்கட்டாயமாக உண்டாக்கிக் கொண்டு இரவு பகல், முன்னேரம், பின்னேரம், எனக் கவனியாது எந்நேரமும் படுக்கைப்பிரியராகவே காணப்படுவர். மற்றும் சிலருக்கு தஹஜ்ஜத் போன்ற நடுநிசித் தொழுகையில் ஆர்வம் இருக்கும் என்றாலும் தூக்கத்தை முறித்து எழுந்திருக்க முடியாத காரணத்தால் அத்தகு பெறற்கரிய பேற்றினை நழுவ விட்டு கைசேதமடைவர். இன்னும் மிகப் பலர் எதைச் செய்தாலும் ஏனோ தானோ' என ஆர்வமில்லாமல், சுறுசுறுப்பு

இல்லாமல் வேறுவழி இல்லையே என்ற காரணத்தால் சோம்பலுடன் செயல் மேற்கொள்வர். இப்படிப் பட்டவர்கள்,

புர்தா ஷரீபின் 30, 31, 32, 33, 34 ஆகிய ஐந்து பைத்துகளையும் ஒரு பலகையில் எழுதி அதை தலைமாட்டில் வைத்துப் படுத்து வந்தால் தூக்கத்தை இன்பமாகக் கருதும் போக்கும், சோம்பலும் நிச்சயம் முறியும். சுறுசுறுப்பும் உத்வேகமும், உற்சாகமும் தேடாமலே ஓடி வரும். இன்ஷா அல்லாஹ்....

## கடன் தொல்லைகளில் இருந்து விடுபட

'கடன் பட்டார் நெஞ்சம் போல' எனக் கூறுவர். கடன் என்பது அவ்வளவு பெரிய பாரம். ஆனாலும் சிலருக்கு (அவர் பணவசதி படைத்தவராக இருந்தாலும் கூட) அடைக்க அடைக்க எப்படி எப்படியோ கடன் தொல்லை தொடர்ந்துகொண்டே இருக்கும்.

'இந்த ஆண்டில் இவ்வளவு வருமானம் வரும் அதை வைத்து இன்னின்ன கடன்களை அடைத்து ''அக்காடா'' என நிம்மதி பெற வேண்டும். எனத் திட்டம் போட்டிருப்பார். திட்டமிட்டபடி போதிய வருமானமும் கிடைத்து விடும். திட்டப்படி கடன் முழுவதையுமே அடைத்தும் விட்டு இனி 'கனவில் கூட கடன் படக்கூடாது' என்ற உறுதிப்பாட்டுடன் இருப்பார். ஆனால் அடுத்த சில மாதங்களில் இவரை அறியாமலே எப்படி எப்படியோ கடன் சுமை குதிரை ஏறிக் கொள்ளும் ஆகவே கடன் என்பது புரியாத புதிர். பரக்கத்தின்மை (அபிவிருத்தியின்மை)

என்று கூட அதைச் சொல்லாம். இத்தகு பரக்கத்தற்ற நிலையில் இருப்பவர்கள் ;

புர்தா ஷரீபுடைய 85, 86 ஆகிய இரு பைத்துக்களையும் அனுதினமும் இஷா தொழுத பின் - படுக்கைக்கு முன் மடக்கி மடக்கி ஓதி ''இறைவா ! எம்பின் நபிகளார் முஹம்மது (ஸல்-அம்) அவர்களின் பொருட்டால் என்னை கடன் தொல்லைகளிலிருந்து காப்பாற்றி அருள்பாலிப்பாயாக என ஓதி வந்தால் இன்ஷா அல்லாஹ் நிச்சயமாக முழுமையாக நிவாரணம் கிடைக்கும்.

## ஈமான் வலுப்பெற

அனுதினமும் ஒவ்வொரு நேரத்துத் தொழுகைக்குப் பின்னும், 'அல்லாஹும்ம ஸல்லி வ சல்லி அலா நபிய்யிக்கல் பஷீரித் தாச இலைக்க பி இத்னிகஸ் ஷிராஜில் முனீர்'

என்ற ஸலவாத்தை ஓதி அதன்பின் புர்தா ஷ்ரீபின் 87-வது பைத்தை பத்து பத்துமுறை ஓதி வந்தால் ஈமானில் உறுதியும் நிரப்பமும் அடைந்து வலுப்பெறும்.

## வீரத்தோடு வாழ்ந்திட

புர்தா ஷரீபின் 34-ம் பைத்திலிருந்து 46-பைத்து வரை உள்ள 13 பைத்துகளை பீங்கானில் எழுதி அதை (பர்ழுதா) வசந்த காலத்து மழை நீரால் கழுவிக் குடித்தால் கோழையும் வீரனாவான். படைக்கஞ்சான். போர்க்களத்தை

சிரித்த முகத்தோடு சந்திக்க வல்ல துணிவு வரப் பெறுவான்.

மேற்கண்ட பதிமூன்று பைத்துகளையும் குங்குமம் பன்னீரால் தயார் செய்யப்பட்ட மை கொண்டெழுதி குடித்தால் அவ்வாறும் குடித்து வருபவன் மவ்தானபின் கப்ரில் முன்கர்நகீருடைய கேள்விகளுக்கு உரிய பதில் கொடுக்கும் ஆற்றல் வரப்பெறுவான் இன்ஷா அல்லாஹ்....

## சிறைக் கைதி விடுதலை பெற

தண்டனை பெற்று சிறைப்பட்டுள்ள கைதிகள், அல்லது ரிமாண்டில் சிறைப்பட்டுள்ள கைதிகள், அல்லது மிசாவின் கீழ் சிறைப்பட்டுள்ள கைதிகள் அல்லது அரசால் 'குற்றவாளி' என அறிவிக்கப்பட்டு பிடிவாரண்டு மூலம் தேடப்பட்டு வரும் குற்றவாளிகள் அல்லது 'அரசின் உத்தரவால் பாதிக்கப்படுவோம்' என்ற பீதியடைந்தவர்கள்;

புர்தா ஷரீபின் 80, 81 ஆகிய இரு பைத்துகளையும் அனுதினமும் ஒவ்வொரு நேரத் தொழுகைக்குப் பின்னும் பதினேழு பதினேழு முறை ஓதி வந்தால் நிச்சயமாக பீதி நீங்கும். நிச்சயமாக அதிசயிக்கும் முறையில், அறியாப்புறமாக - விடுதலை கிடைக்கும். இன்ஷா அல்லாஹ் ...



## நோய் நொடி நீங்கிட

புர்தா ஷரீபின் 82-83 ஆகிய இரு பைத்துகளையும் சுத்தமான பிங்கானில் எழுதி அதை வெள்ளாட்டுக் கால் சூப்புத் தண்ணீரால் கரைத்து நோயாளிகளுக்குக் குடிக்கக் கொடுத்து வந்தால் தீராத மாறாத எந்தப் பெரிய நோயும் இன்ஷா அல்லாஹ் முற்றாக விலகி முழுச் சுகம் கிடைக்கும்.

## நாக்கா வலிப்பு நோய் தீர்ந்திட

புர்தா ஷரீபின் 84-85 ஆகிய இரு பைத்துகளையும் நோயாளியின் இரு கண்களுக்கிடையில் உள்ள (நெற்றியின் கீழ் இரு புருவங்கள் சந்திக்குமிடத்தில்) பகுதியில் எழுதி விடுவதோடு, (ஜர்கான் துண்டில்) நீல நிறத் துண்டுத் துணியில் அவ்விரு பைத்துக்களையும் எழுதி அத்துணியைத் திரித்து அத்திரியை நெருப்பிட்டுக் கொழுத்தி கரியச்செய்து அதிலிருந்து வெளிப்படும் புகையை நோயாளியின் மூக்கில் (புகை) பிடித்து நுகர்ந்து உறுஞ்சும்படி செய்தால் வலிப்பு நோய் முற்றாக அருந்து போகும். இன்ஷா அல்லாஹ்...

▢ தொட்டது துலங்குவதில்லை. எங்கு போனாலும் தோல்வி. எதை எடுத்தாலும் நஷ்டம். என்ற நிலையிலிருப் போர், தரித்திரியம் பிடித்தவன்' என்ற நிலையில் உள்

சிரித்த முகத்தோடு சந்திக்க வல்ல துணிவு வரப் பெறுவான்.

□ மேற்கண்ட பதிமூன்று பைத்துகளையும் குங்குமம் பன்னீரால் தயார் செய்யப்பட்ட மை கொண்டெழுதி குடித்தால் அங்ஙனம் குடித்து வருபவன் மய்தானபின்-கப்ரில் முன்கர்நகீருடைய கேள்விகளுக்கு உரிய பதில் கொடுக்கும் ஆற்றல் வரபெறுவான் இன்ஷா அல்லாஹ்....

## சிறைக் கைதி விடுதலை பெற

தண்டனை பெற்று சிறைப்பட்டுள்ள கைதிகள், அல்லது ரிமாண்டில் சிறைப்பட்டுள்ள கைதிள், அல்லது மிசாவின் கீழ் சிறைப்பட்டுள்ள கைதிகள் அல்லது அரசால் 'குற்றவாளி' என அறிவிக்கப்பட்டு பிடிவாரண்டு மூலம் தேடப்பட்டு வரும் குற்றவாளிகள் அல்லது 'அரசின் உத்தரவால் பாதிக்கப்படுவோம்' என்ற பீதியடைந்தவர்கள்;

புர்தா ஷரீபின் 80, 81 ஆகிய இரு பைத்துகளையும் அனுதினமும் ஒவ்வொரு நேரத் தொழுகைக்குப் பின்னும் பதினேழு பதினேழு முறை ஓதி வந்தால் நிச்சயமாக பீதி நீங்கும். நிச்சயமாக அதிசயிக்கும் முறையில், அறியாப்புரமாக - விடுதலை கிடைக்கும். இன்ஷா அல்லாஹ்...,



## நோய் நொடி நீங்கிட

புர்தா ஷரீபின் 82- 83 ஆகிய இரு பைத்துகளையும் சுத்தமான பீங்கானில் எழுதி அதை வெள்ளாட்டுக் கால் சூப்புத் தண்ணீரால் கரைத்து நோயாளிகளுக்குக் குடிக்கக் கொடுத்து வந்தால் தீராத மாறாத எந்தப் பெரிய நோயும் இன்ஷா அல்லாஹ் முற்றாக விலகி முழுச் சுகம் கிடைக்கும்.

## நாக்கா வலிப்பு நோய் தீர்ந்திட

புர்தா ஷரீபின் 84 - 85 ஆகிய இரு பைத்துகளையும் நோயாளியின் இரு கண்களுக்கிடையில் உள்ள (நெற்றியின் கீழ் இரு புருவங்கள் சந்திக்குமிடத்தில்) பகுதியில் எழுதி விடுவதோடு, (ஜர்கான் துண்டில்) நீல நிறத் துண்டுத் துணியில் அவ்விரு பைத்துக்களையும் எழுதி அத்துணியைத் திரித்து அத்திரியை நெருப்பிட்டுக் கொழுத்தி கரியச்செய்து அதிலிருந்து வெளிப்படும் புகையை நோயாளியின் மூக்கில் (புகை) பிடித்து நுகர்ந்து உறுஞ்சும்படி செய்தால் வலிப்பு நோய் முற்றாக அருந்து போகும். இன்ஷா அல்லாஹ்...

□ தொட்டது துலங்குவதில்லை. எங்கு போனாலும் தோல்வி. எதை எடுத்தாலும் நஷ்டம். என்ற நிலையிலிருப் போர், தரித்திரியம் பிடித்தவன்' என்ற நிலையில் உள்

ளோர் ஆகியவர்களுக்கு அவ்விரு பைத்துக்களையும் எழுதி தாயத்தாகப் போட்டால் புதுமை நிகழும். இன்ஷா அல்லாஹ்...

**திக்குவாயை சுத்தப்படுத்த....**

கொன்னல் வாயன்' திக்குவாயன். உளருவாயன் என்றெல்லாம் அழைக்கப்படும் குறைப் பேச்சுள்ளவர்களுக்கு;

புர்தா ஷரீபின் 90-ம் பைத்திலிருந்து 104-ம் பைத்து முடிய உள்ள பதினைந்து பைத்துகளையும் பன்னீர், குங்குமப்பூ ஆகியவற்றால் தயார் செய்யப்பட்ட மையால் சுத்தமான பீங்கானில் எழுதி அதைக் கரைத்து குடிக்கக் கொடுத்து வந்தால் இன்ஷா அல்லாஹ் நாளடைவில் முழுமையாக - சுத்தமாக-சரளமாக - பேசும் ஆற்றலைப் பெறுவான்.

அதிகார வர்க்கத்தின் அவதூறை தவிர்த்திட கணவன் மனைவிகளுக்கிடையில் நேசம் வளர;

காவல்துறை அல்லது கலெக்டர் போன்ற அதிகார வர்க்கத்தினரிடமிருந்து 'சம்மன்' போன்ற அழைப்பு வந்துள்ளது. ஆனால் சம்பந்தப்பட்டவர்களைச் சந்திக்க பீதியாக உள்ளது என்றால்:

புர்தா ஷரீபின் - 105 - ம் பைத்திலிருந்து 115 - ம் பைத்துவரையுள்ள 11 பைத்துக்களை ஒட்டகத்தோலில் எழுதி அதை சட்டை (பனியன்) யினுள் நெஞ்சில்

மறைத்து வைத்துக் கொண்டு 'அல்லாஹு அக்பர்' என மூன்று முறை தக்பீர் சொல்லிக் கொண்டு அங்ஙனம் அதிகார வர்க்கத்தில் உள்ளவர்களைச் சந்தித்தால் எவ்வகைத் தீங்கும் நிச்சயமாக ஏற்படாது. இன்ஷா அல்லாஹ்.

☐ கணவன் மனைவிகளுக்கிடையில் நேசம் இல்லாதிருந்தால், அல்லது பிணக்குண்டாகி விவாகரத்துச் செய்யுமளவு நிலைமை மோசமடைந்து விட்டால்;

இந்த 11 - பைத்துகளையும் புலித்தோலில் எழுதி தொப்பி அல்லது தலைப்பாகை அல்லது தலைச்சீலைக்குள் மறைத்து வைத்துக் கொண்டால் நாளடைவில் நேசம் வளரும். பிணக்கு தீரும். இன்ஷா அல்லாஹ்...

புர்தா ஷரீபின் 118 - ம் பைத்திலிருந்து 127 ம் பைத்து முடியவுள்ள பத்து பைத்துகளை காகிதத்தில் அல்லது அட்டையில் அல்லது செம்புத் தகட்டில் எழுதி கிடங்கு, கடை, வீடு, தோப்புத் துறவு, களங்களில் குவித்து வைக்கப்பட்டுள்ள தானியக் குவியல் போன்றவற்றின் - தலை வாசலில் - மாட்டி வைத்தால் அங்ஙனம் மாட்டப்பட்டுள்ள இடங்களில் கள்ளன் ஒருக்காலமும் நுழையமாட்டான். பாம்பு, தேள், போன்ற விஷ ஜந்துக்களும் அங்கே நுழையவே நுழையாது. இன்ஷா அல்லாஹ்...

ஒரு வீட்டு வாசலில் அங்ஙனம் இந்த பைத்துகள் எழுதித் தொங்க விடப்பட்டிருந்தன. அவ்வீட்டிற்கு ஒரு நாள் ஒரு கள்வன் வந்து களவாட முயன்று கொண்டிருக்கும் போது பல மனிதர்கள் பேசுவது போலும் வருவது போலும் அவனுக்குச் சப்தம் கேட்டது. ஆகவே களவாடும்

முயற்சியை விட்டு விட்டு தப்பி ஓடிவிட்டான். மறு நாள் தனது நண்பர்களிடம் தான் தப்பி ஓடிவந்த நிகழ்ச்சியை அக் கள்வன் கூறியபோது அவ்வீட்டில் சென்ற இரண்டு வாரங்களாக ஒருவருமே இல்லை எனத் தெரிய வந்தது ஆகவே மறுநாளும் அவ்வீட்டிற்குச் சென்று களவாட முயன்று கொண்டிருந்தான். அப்போது ஜல்...... ஜல்.. ... என்ற ஒருவகை பயங்கரச் சப்தம் ஏற்படவே அப்போதும் களவாளாமல் ஓடிவந்து விட்டான்.





# புர்தா ஷரீஃப்



## ஓதும் விதிமுறை



1 புர்தா ஷரீபை ஓதலாம்-ஓதக் கேட்கலாம். பொதுவான பயன் கிடைக்கவே செய்யும்.

ஆனால் குறிப்பிட்ட பலன் கருதி ஓதிட, அல்லது ஓதச் செய்து செவிமடுத்திட விழைவோர் கீழ்வரும் விதிமுறைகளைப் பேணி ஓதினால்தான் நாடிய பலன் முழுமையாக-கொஞ்சம் கூடச் சிந்தாமல் சிதராமல் கிடைக்கப் பெற முடியும்.

அவைகளாவன:

1) ஓதுபவர், புர்தாவைத் தனக்குக் கற்றுக் கொடுத்த உஸ்தாதி (ஆசிரியரி)டம்-பனுவலாக ஓதிப் பயன் பெற்றிடவென்று-விசேஷ அனுமதி (இஜாஜத்) பெற்றுக் கொள்ளவேண்டும்.

2) ஓதுபவர், அல்லது பயன் கருதி ஓதச் செய்பவர் ஹராமான (முறைகேடான) சம்பாத்தியம், உணவு, உடை இருப்பிடம் ஆகியவைகளை விட்டும் முழுமையாகத் தவிழ்ந்து கொள்ள வேண்டும்.

# B

3) உணவு, உடை, பொருள் ஆகியவைகளை ஏழை, அனாதை, ஏழை மாணவர் போன்றவர்களுக்கு தர்மம் (ஸதாகச்) செய்ய வேண்டும்.

4) ஓதும் முன்-ஒவ்வொரு நேரத்திலும்—குளித்துக் கொள்வது நன்று. முடியாவிட்டால் உலுச்செய்து, நறுமணம் பூசி ஊதுபத்தி போன்றவற்றால் சபையை மணம் கமழச் செய்துகொள்வதும், இருக்கும் ஆடைகளில் உயர்ந்த (மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்ட) உடைகளை அணிந்து கொள்வதும் ஏற்புடைய செயலாகும்.

5) இஸ்திகாரா நபில் (நலவைத் தேடி) இரண்டு ரகாஅத் தொழுது கொள்ளவேண்டும்.

6) ஓதும்போது கிப்லாவை முன்னோக்கி (அத்தஹிய்யாத் இருப்பைப்போன்று) மண்டியிட்டு அமர்ந்திருப்பது நன்று.

7) ''அஸ்தஃபிருல்லாஹ ரப்பீ மின்குல்லி
தன்பின் வ கதீஅதின்
வ அதூபு இலைஹி''

எனும் இஸ்திஃபாரை ஏழு விடுத்தம் ஓதவேண்டும்.

8) ''ஸல்லல்லாஹு அலாமுஹம்மதின்
ஸல்லல்லாஹு அலைஹி வ சல்லம்

என்ற ஸலவாத்தை ஏழு முறை ஓதி ஏழாவது தடவையில் 'யாரப்பி ஸல்லி அலைஹி வ சல்லிம்' என்று ஸலவாத்தை முடிக்க வேண்டும்.

9) அல்ஹம்துலில்லாஹ்' என்பதை ஏழுமுறை ஓத வேண்டும்.

10) ஆஊது...பிஸ்மி... ஓதி, அதன் பின்னர் 'அத் தௌபா' எனும் 9-வது அத்யாயத்தில் கடைசி 128-129 ஆகிய வசனங்களான—'லகQAத் ஜாஅக்கும்...என்று தொடங்கும் வசனங்களை ஒரு தடவை ஓதி, அதன் பின்னர்;

11) ''அல்லாஹும்மஸல்லி அலமுஹம்மதின்
ஃபில் அவ்வலீன வல்
ஆகிரீன வஃபில் மலயில் அஃலா இலா யவ்மித்தீன்''

என்ற கீழ்வரும் ஸலவாத்தை மூன்று முறை ஓத வேண்டும்.

٣ـ اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ فِى الْاَوَّلِيْنَ وَالْاٰخِرِيْنَ
وَفِى الْمَلَاءِ الْاَعْلٰى اِلٰى يَوْمِ الدِّيْنِ

12) பிஸ்மில்லாஹி தவக்கல்த்து அலல்லாஹி
லா ஹவ்ல வலா குவ்வ(த்)த இல்லா பில்லாஹி

என்று மூன்று முறை ஓத வேண்டும்

13) கைருன்(ல்)லனா வஷர்குன் லி அஃதாயினா
ரப்பீ யஸ்ஸிர் வலா து அஷ்ஷிர்
ரப்பீ தம்மிம் பில் கைரி
ஆமீன்
யாரப்பல் ஆல மீன்

D

١٣ بِسْمِ اللّٰهِ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ لَا حَوْلَ وَلَا قُوَّةَ اِلَّا بِاللّٰهِ ۝
عـ خَيْرٌ لَّنَا وَشَرٌّ لِاَعْدَآئِنَا رَبِّ يَسِّرْ وَلَا تُعَسِّرْ
رَبِّ تَمِّمْ بِالْخَيْرِ اٰمِيْنَ يَا رَبَّ الْعَالَمِيْنَ ۝

14) யா பFAத்தாஹ் வ மந்நஸ்ரு இல்லா மின் இந்தில்லாஹி

என்று மூன்று முறை ஓத வேண்டும்.

15) அல்லாஹு அக்பர் அல்லாஹு அக்பர்
அல்லாஹு அக்பர்
லாயிலாஹ இல்லல்லாஹு
வல்லாஹு அக்பர்
அல்லாஹு அக்பர் வலில்லாஹில் ஹம்து

١٦ اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ
لَا اِلٰهَ اِلَّا اللّٰهُ وَاللّٰهُ اَكْبَرُ اَللّٰهُ اَكْبَرُ وَلِلّٰهِ الْحَمْدُ ۝

என்று ஒரு முறை ஓத வேண்டும்.

16) அல்லாஹும்ம ஸல்லி அஃப்ழல

ஸலவா(த்)தின்

அலா அஸ்அத மக்லூ(க்) கா(த்)திக

ஷய்யிதினா முஹம்மதின்

வ அலா ஆலிஹி வ ஸஹ்பிஹி

அதத மஃலூமா(த்)திக

வ மிதாத கலிமா(த்)திக

குல்லமா தகரகத் தா(க்)கிருன

வ ஙபஃல அன் திக்ரிக்கல் ஙாஃபிலூன

اَللّٰهُمَّ صَلِّ أَفْضَلَ صَلَوَاتٍ عَلٰى أَسْعَدِ مَخْلُوقَاتِكَ
سَيِّدِنَا مُحَمَّدٍ وَعَلٰى اٰلِهِ وَصَحْبِهِ عَدَدَ مَعْلُومَاتِكَ وَمِدَادَ
كَلِمَاتِكَ كُلَّمَا ذَكَرَكَ الذَّاكِرُونَ وَغَفَلَ عَنْ
ذِكْرِكَ الْغَافِلُونَ ٥

என்று ஒன்று அல்லது மூன்று முறை ஓதவும்.

17) அதன் பின்னர் ‘மௌலாய’ பைத்தை கொண்டு தொடங்க வேண்டும்.

18) புர்தா ஷரீபின் பைத்துகளில் இரண்டு 'மீம்' கொண்டு முடியும் பைத்திற்கு 'மீமிய்யா' என்று பெயர். இந்த மீமிய்யா பைத்தை ஓதியவுடன் 'மௌலாய' பைத்தை மும்மூன்று முறை ஓதி அதன்பின்னர் அடுத்ததைத் தொடர வேண்டும்.

19) புர்தா ஷரீபை ஓதி முடித்த பின்னர்;

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى سَيِّدِنَا مُحَمَّدٍ وَّاٰلِهٖ وَصَحْبِهٖ وَبَارِكْ وَسَلِّمْ
عَلَيْهِ اَللّٰهُمَّ اِنِّيْ اَتَوَسَّلُ بِقِرَاْءَةِ الْقَصِيْدَةِ الْمُبَارَكَةِ اِلَيْكَ
اَنْ تُعْطِيَنِيْ خَيْرَ الدَّارَيْنِ عَاجِلًا وَّاٰجِلًا بِفَضْلِكَ وَ
كَرَمِكَ وَتَقْضِيَ حَاجَتِيْ بِحُرْمَةِ حَبِيْبِكَ وَنَبِيِّكَ وَ
صَفِيِّكَ مُحَمَّدٍ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ وَتَشْفِيَ اَمْرَاضِيْ
بِرَحْمَتِكَ يَا اَرْحَمَ الرَّاحِمِيْنَ ۝

என்ற துஆவை மனம் நெகிழ்ந்து-உருக்கமாக-ஓதி இறைஞ்சுதல் வேண்டும்.

20) வெள்ளிக் கிழமை :

'அமின்த்ததக்குருஜி என்ற 1-ம் பைத்து முதல் 'வஷ் தஃப்ரிஹிந்தம்அ' என்ற 23-ம் பைத்துவரை வெள்ளிக் கிழமையிலும்.

சனிக் கிழமை :

'வகாலிஃபிந் நஃப்ஸ' என்ற 24-ம் பைத்திலிருந்து 'ஃபஇன்ன ஃபழ்ழ' என்ற 45-ம் பைத்து வரையில் சனிக் கிழமையிலும்

ஞாயிற்றுக் கிழமை :

'லவ் நாஷபத்' என்ற 46-ம் பைத்திலிருந்து 'வ பவுத மாஆயனா' என்ற 68-ம் பைத்துவரை ஞாயிற்றுக்கிழமை யிலும்.

திங்கட் கிழமை :

'ஹத்தா ஹதா' என்ற 69-ம் பைத்திலிருந்து 'ஃபமா ததாவுலு' என்ற 90-ம் பைத்துவரை திங்கட்கிழமையிலும்.

செவ்வாய்க்கிழமை :

'ஆயாத்து ஹக்கின்' என்ற 91-ம் பைத்திலிருந்து 'ஃபகுஜ்த்த குல்ல' என்ற 114-ம் பைத்துவரை செவ்வாய்க் கிழமையிலும்;

புதன் கிழமை :

'வஜல்ல மிக்தாரு' என்ற 115 - ம் பைத்திலிருந்து 'அஹல்ல உம்மத்தது' என்ற 137-ம் பைத்து வரை புதன் கிழமையிலும்;

வியாழக்கிழமை :

'கம்ஜத்தலத்' என்ற 138-ம் பைத்திலிருந்து 'யாரப்பி பில் முஸ்தபா' என்ற 163-ம் பைத்துவரை வியாழக்கிழமை யிலுமாக - வஜீஃபா வாக (தின ஓதுதலாக) அனுதினமும் குறிப்பிட்ட ஒரே நேரத்தில் - இடைவிடாமல் - ஓதி வந்தால் இன்ஷா அல்லாஹ் அங்கனம் வஜீஃபா வாக ஓதி வருபவ ரின் வாழ்க்கையில் அற்புதமான அற்புதம் சித்திக்கும்.

குறிப்பு: வியாழன் சூரியன் அஸ்த்தமம் ஆனதிலிருந்து வெள்ளிக் கிழமை அரபி கணக்குப்படி ஆரம்பமாகி விடுகின்றது.

21) 'புர்தா ஷரீப் ஓதுவதால் நியாயமான நாட்டங்களும், தேட்டங்களும் நிச்சயம் நிறைவேறும் என்ற உறுதிப்பாடு வேண்டும்.

